# ELEMENTS

OF

# MATERIA MEDICA AND THERAPEUTICS

# IN TAMIL,

BY

**M. JAGANATHUM NAIDOO,**

*Madras Medical Department.*

LATE NATIVE ASSISTANT, MEDICAL COLLEGE, MADRAS.

# பதார்த்தகுண ரத்நாகரம்.

இஃது,

சென்னை வைத்திய உத்தியோக வகுப்பைச்சார்ந்த,

**ம. ஜகந்நாத நாயுடு**

அவர்களால் இயற்றப்பட்டது.

அக்ஷய ௵, தை மீ.



**Madras:**

MADRAS ADVERTISING AND PRINTING COMPANY (*Limited.*)

MOUNT ROAD BRANCH.

1867.

*Price Seven Rupees.*

இதன் விலை ரூபா, எ.

TO

# GEORGE SMITH Esq., M. D.

FELLOW OF THE MADRAS UNIVERSITY,

*Principal of the Medical College and Professor of*

OPHTHALMIC MEDICINE AND SURGERY,

THIS SMALL VOLUME,

IS RESPECTFULLY DEDICATED

AS A HUMBLE TRIBUTE OF RESPECT AND OF GRATITUDE

FOR MUCH KINDNESS RECEIVED FROM HIM BY

**THE AUTHOR.**

# PREFACE.

I have undertaken this work with the view of imparting some knowledge of English Medicines to my countrymen. They in general appreciate the value of European treatment; but there are some who still show a great reluctance to resort to it. This chiefly arises from entire ignorance, or from a want of knowledge of the nature of the medicines in question: when this work finds its way into their hands, I feel confident that their fear and distrust will be removed, and more faith in, and desire for English drugs and treatment, shown.

My selections for this work are mostly from Royle's Manual. The standard works of Drs. Pareira, Waring, Neligan, Beasely, &c., have also been consulted. When the British Pharmacopœia was introduced into this Presidency, the greater part of this book had gone through the press, and it was found too late to introduce the alterations in the pharmaceutical preparations, but this defect will be rectified when an opportunity occurs.

In the latter part of this work, I have introduced a few indigenous drugs, the knowledge of which, will no doubt be of great use to practioners, when European Medicines are not available for immediate administration.

My best thanks are due to Messieurs J. J. Wood of the Madras Medical College, Ayagreva Sastryar, Soobramanya Pundit, Poonnumbala Moodelly and Dorasawmy Cavirayer for the advice and help they have so kindly rendered to me during the progress of this work through the press.

In conclusion, I trust that the public will overlook any defects that may be found in the book.

MADRAS. *January*. 1867. M. J.

---

# முகவுரை.

இங்கிலீஷ் வைத்திய வாகடத்தின் பொருள் இன்னதென்று, நமது இந்துதிரவிடதேச ஜனங்களுக்கே தெரிவிக்கும்பொருட்டு, ம-ா-ஸ்ரீ, பு. அயக்கிரீவசாஸ்திரியார், சி. சுப்பிரமணிய பண்டிதர் முதலியவர்களுடைய உதவியால், அநேக இங்கிலீஷ் மொழிகளுக்கு, சற்றேறக்குறையத் தகுதியான சம்ஸ்கிருத திரவிட பிரதிபதங்கள் சேகரித்து, இந்தக் கிரந்தம் எழுதலாயிற்று. இங்கிலீஷ் மருந்து கொடியதென்றும், வைத்தியம் பயங்கரமானதென்றும், சிலர்கொண்டிருக்கிற எண்ணம், இதனால் நீங்கிவிடுமென்பதற்கு, யாதொருசந்தேகமில்லை. சஞ்சீவிக்கொப்பான அநேகதிவ்விய ஔஷதங்களும், சிறந்த நூல்களும், நம்மவர்களுக்குளுண்டு.

இராமநாதபுரம் ஜமீன்தாரி மானேஜர், மஹாகனம்பொருந்திய, ம - ா - ஸ்ரீ, பொன்னுச்சாமி தேவர் அவர்கள், ம - ா - ஸ்ரீ, ராமசந்திர ராயர், ஜெயராம செட்டியார், விஜயராகவலு செட்டியார், சோமசுந்தர செட்டியார், முருகேச முதலியார், ஐயாசாமி முதலியார், வாசுதேவ முதலியார், வெங்கடசாமி நாயுடு, ரங்கைய நாயுடு, நரசிங்கப்பிள்ளை, முதலிய சில கனவான்களது திரவிய சகாயம்கொண்டு, இந்நூலை நிறைவேற்றினேன்.

சென்னை வைத்திய பாடசாலைப்பண்டிதர், உட்துரை, சென்னை இராஜதானி சர்வகலாசாலைத் தமிழ்ப்பண்டிதர் புரசை பொன்னம்பல முதலியார், இவர்களைக்கொண்டு, இந்நூல் பரிசோதிப்பித்து அச்சிடுவிக்கப்பட்டது.

எனக்குண்டாயிருக்கின்ற வைத்தியசாஸ்திர சுல்பஞானமும், கல்வியினற்பஞானமுங்கொண்டு சகலஜன பிரயோஜனமாய், மொழிபெயர்க்கலாயிற்று. ஆதலால், இந்நூற்பொருளையுணர விரும்பும் அறிஞர்கள் யாவரும், இதிலுள்ள குற்றத்தைப்பாராமற், குணத்தையேபாராட்டுவார்களென்று, மிகப்பிரார்த்திக்கின்றனன்.

சென்னபட்டணம். ௲௮௬௭-௵, ஜனவரி ௴. ம. ஜ.

# REVIEWS OF THE WORK.

"These thoughts remind us of a work in Tamil by M. Jaganathum Naidoo, of the Madras Medical Department, entitled—*Elements of Materia Medica and Therapeutics.* At first, we thought the pamphlet was a treatise on Indian plants and minerals, and the treatment of diseases in the Indian mode. But on perusal, we find that it is a judicious selection from English medical books, translated into the Vernacular. *M. Jaganathum Naidoo* has done an invaluable service to native medical students. His arrangement is excellent, and the words used by him to express medical technicology are clear, simple, and precise. It is evident that the Author has had recourse to the Sanscrict language, and it is also evident that he has either studied native treatises, or has been helped by native doctors of no mean attainments in physiology and thereology. Jaganathum's *brochure* will be a valuable aid to the Principal of the Medical College. We have scanned it with a critical inspection, and have no hesitation in saying that the native students in College would learn more from the Naidoo's Vade Mecum, in one reading, than from any amount of lectures on the elements of Materia Medica and Therapeutics delivered in the English language by the Professor. We therefore recommend its immediate adoption into the Medical College, and His Excellency Sir William Denison, who has ever shown himself to be interested in the improvement of the Medical College, would encourage literary effort in a Hindu, by granting him the liberal patronage of the Madras Government."

"In a work of so much importance, where error in translation, or ambiguity in definition or prescription, might be detrimental to health and life, the author ought to be careful to avoid the danger by a literal and faithful adhesion to the original. This is positively the case in the translation we are noticing. It is written in a style of perspicacity and elegance, which makes the Medical Science agreeable to the reader. Unprofessional men will derive as much information from the " Elements" as professed student would if it were made a class-book. We feel that this obscure Dresser—Jaganathum Naidoo, deserves the favourable notice of Government for his unostentatious industry, and his valuable vernacular contribution to the medical literature and science of this Presidency."

"Having said thus much under a sense of justice to the author, we would suggest to the Naidoo, to take, after this, another direction. As a native, the intricate path of Indian pharmacy and acology invites his researches. He has the ability to do great service as a translator from the vernacular into the English language, of the works of such great *Vythears*, or doctors, as Agastyar, Thenmunheri, Chuttamuni, Muchamuni, and a host of other writers, whose works might be had at some expense. Jaganathum possesses the advantage of a sound medical education in English. He is therefore in a fair way to avail himself of native media in his researches of botany and mineral chemistry for a new book; and if we can prevail upon him to take the initiative in the investigation of Indian Medical Science, others will follow him, probably with greater ability and more effectual means. The Government of the Benighted should encourage the Naidoo in such a laudable undertaking."—*The Carnatic Telegraph and Madras Exchange Gazette.*

"We have received a copy of elements of *Materia Medica and Therapeutics in Tamil*, drawn up by M. Jaganathum Naidoo of the Madras Medical Serviee. It is arranged chiefly from the standard works of *Drs, Pareira, Royle, Waring, Montgomery*, &c., and is intended to be used as a guide to Native Vythians. It contains an elaborate explanation of the classification of the various drugs, together with an account of their effects and the modes in which they should be used. There are also given a number of rules for Pharmaceutical operations and preparations, and a classification of diseases from the French Statistical Nomenclature. This work will be found very useful by all Native practitioners throughout the Presidency; and we trust that the efforts of M. Jaganathum Naidoo to supply a want which has long been felt will meat with the success they merit. The pamphlet is capitally printed, and the general arrangement of its contents very clear."—*The Athenæum and Daily News.*

# CONTENTS.



BY THE SAME AUTHOR.

கடவுள்துணை.

# பதார்த்த குண ரத்நாகரம்.

## க - வது - அத்தியாயம்.

## முகவுரை.

Materia Medica—வியாதிகளைப் பரிகரிக்க உபயோகிக்கும் பதார்த்தங்களைக்குறித்து விவரிக்கும், இங்கிலீஷில் மெடீரியா மெடிகா என்னும் ஸாஸ்திரத்தை தமிழ்ப்படுத்தி பதார்த்த குண ரத்நாகரம் என்று பெயரிடப்பட்டது.

Therapeutics—வியாதிகளைத் தடுக்கிற அல்லது பரிகரிக்கிற அவுஷதங்களுக்குடைய குணங்களை விவரிக்கும் நூலுக்கு, இங்கிலீஷில் திர பியூ டிக்ஸ் என்றுபேர்.

பதார்த்த குண ரத்னாகரம் என்னும் இந்தநூலில் ஒவ்வொரு அவுஷதத்துக்குடைய குணம் Property)—பிரயோஜனம் Use)—தோஷம் Impurity)—அதைப்பிரயோகிக்கும் கிரமம், முதலியவைகள் விவரித்துச் சொல்லப்படும். ஜலத்தில்கரையாத ரஸபஸ்மமுதலிய அவுஷதங்களைத் தேனில் குழப்பிக் கொடுக்கவேண்டியது. சில அவுஷதங்கள் காற்றுப்பட்டால் நீராகிவிடும், அவைகளை மாத்திரை அல்லது சூரண ரூபமாய்க் கொடுக்க உதவாது ; ஆகையால் ஜலத்தில் கரைத்துக் கொடுக்கவேண்டியது. அவுஷதங்களுக்குச் சத்துருபதார்த்தங்களுண்டு, அவைகளும் நமக்குத்தெரிந்திருக்க வேண்டியது. இவை முதலியவைகள் இந்நூலில் விவகரித்துக் காட்டப்படும்.

அவுஷதங்களை வழங்குகிறவர்கள், இதனடியிற் கண்டிருக்குஞ் சிலசங்கதிகளைக் கண்டிப்பாய்க் கவனிக்க வேண்டியது.

க. பாஷாணம் முதலிய நஞ்சின்குணத்தை யுடைய பதார்த்தங்களை வைத்திருக்கும் ஏனங்களுக்குக் கடிதாசித் துண்டுகளில், நஞ்சு, என்றெழுதி ஒட்டவைத்து அவைகளைத் தனிப்படவைக்கவேண்டியது.

உ. சில மருந்துகள் வெளிச்சமாவது காற்றாவது பட்டால் கெட்டுப்போகும் ; அவைகளை கல்கார்க்கும் நீலநிறமும் உடைய புட்டிகளிற் போட்டு இருண்ட இடத்தில் வைக்கவேண்டியது. வெள்ளைச் சீசாவானால், அதின்மேல் நீலக் கடிதாசியைச் சுற்றி வைக்கலாம்.

ங. சில அவுஷதங்கள் நாள்பட்டால் கெட்டுப்போகும், அவைகளைச் சோதித்துப் பிறகு உபயோகிக்கவேண்டியது.

௨. நஞ்சின் குணமுடைய பதார்த்தங்களைக் கொடுக்கும் அளவு இவ்வள வென்று புஸ்தகத்தில் பார்வையிட்டு, பிறகு நோயாளிகளுக்குக் கொடுக்கவேண் டியது.

அவுஷதங்களைப் பிரயோகிக்கும்போது, கவனிக்கவேண்டிய விஷயங்கள் :—இந்நூலில்காட்டி இருக்கும் ஒவ்வொரு வேளைக்குக் கொடுக்கவேண்டிய அ வுஷதத்தின் அளவு யவ்வன பருவ முடைய புருஷாளுக்குத் தருந்த தாகையால், நோயாளியின் வயது Age)—வாத பித்த சிலேஷ்மங்களால் சரீரத்துக்குண்டாயி ருக்கும் குணம் Temperament)—தேகபலம் Strength)—அப்பியாசம் Habit)—தொழில் Profession)—நோயாளி யிருக்கும் பிரதேசத்தின் உஷ்ண சீதள ஸ்திதி Climate)—நோய் அனுசரித்துச் சென்ற காலம் Duration of disease)—தீபன ஸ்திதி Appetite)—மலபாதைக் கிரமம் State of bowels)—சரீர சுபாவம் Idiosyncrasy)—நாடி நடக்கும் கிரமம் Pulse)—ஸ்திரீகளுக்கிப்படி புருஷாளுக்கிப் படி என்னும் பேதம் Sex)—முதலியவைகளின் நுட்பங்களை ஆயுள்வேதியர்கள் யோசித்துப் பிறகு அந்த அளவை நிறுக்கிட்டுக் கொடுக்கவேண்டியது.

௧. **Age of patient**—வயதை யனுசரித்த விஷயங்கள்.—வயதுக் கேற்றப டி அவுஷதத்தின் குணம் பேதப்படுவதால், வயதையறிந்து அவுஷதத்தின் அள வை நிறுக்கிடவேண்டியது, அளவுக்கதிகப்பட்டால் அமிர்தமும் நஞ்சாகும். யவ் வன பருவமுடைய புருஷாள் வெப்பமாகிய மருந்துகளைக் கொஞ்சம் அதிக அள வில் கொடுத்தபோதிலும் சகிப்பார்கள், சிறுவர்களுக்கு அவைகள் விரோதிக்கும். ஆதலால் பிள்ளைகளுக்குக் குறைந்த அளவில்கொடுக்கவேண்டியது. இதையறியா மல் மருந்தை அதிகமாய்க் கொடுத்தால் சீக்கிரத்தில் வியாதி நீங்குமென்றெண்ணி, கஷாயம் எண்ணெய் முதலியவைகளை, நமது பெண்டுகள் அதிக அளவில் கொடு ப்பது வழக்கம் ; இப்படிக்கொடுப்பதினால், குழந்தைகளுக்கு அனேக அபாயங்க ள்சம்பவிக்கிறது. அபினி, டார்டார் மெடிக் Tartar Emetic) என்னும் வாந்திம ருந்து, நேர்வாளம் முதலிய கெட்ட அவுஷதங்களைக் குழந்தைகளுக்கு வெகுஜாக் கிரதையாய் உபயோகிக்கவேண்டியது. இங்கிலீஷ் வைத்தியாள் குழந்தைகளுக் கு நேர்வாளம் கொடுப்பது அரிது ; ஆனால் தமிழ் வைத்தியாள் வாளம் சேர்க்காம ல் பேதிக்குக் கொடுப்பது அரிது. குழந்தைகளுக்கும், வயது சென்றவர்களுக் கும் ரஸபஸ்பம் கொடுத்தால் வாய்ப்பிடிக்காது, இவர்களுக்கு ரத்தம் குத்திவாங்க வுங் கூடாது. குழந்தைகளுக்கு பிளிஸ்டர் Blister) போட்டுப் புண்ணாக்குதலு ம் கெட்டது.

ஆயுள்வேதத்தில் வயதைப்பற்றிக்கண்டிருக்கும் சிலமுக்கிய விஷயங்களா வன :—பால்யம் Childhood) யவ்வனம் Manhood) விருதாப்பியம் Decrepitude) என மூன்றுபருவங்களுண்டு. ௧௬-வயது வரையில் பால்யபருவம்.—௰௬-முதல் ௭௰ - வயது வரையில் யவ்வனபருவம்.—௭௰ - வயதுக்கு மேற்படில் விருதாப்பி யம்எனப்படும்.

பால்ய பருவம் மூன்று வகைப்படும்.—க்ஷீராது, ஒரு வருஷம் வரையில், தா

யின் முலைப்பாலுண்ணும்பருவம்.—உ-வது, இரண்டாம் வருஷம், பால்குடித்துச் சாதத்தை வழக்கப்படுத்தும் பருவம்.—௩-வது, மூன்று முதல், ௰௬ - வயதுவரையில் ஓர்பருவம். இந்தப்பருவத்தில் சிலேஷ்மம் அதிகப்பட்டிருக்கும்.

யவ்வனபருவம் - ௪ - வகைப்படும்.—க - வது, ௰௬ முதல் உ௰- வயதுவரையில் விருத்தி.—உ - வது, உ௰ முதல் ௩௰ - வயது வரையில் யவ்வனம்.—௩ - வது, ௩௰ முதல் ௪௰ - வயது வரையில் சம்பூர்ணம். இந்தப்பருவத்தில், எ - தாதுக்களும், ஐம்பொறிகளும், பலமும், பூர்ண ஸ்திதியிலிருக்கும்.—௪ - வது, ௪௰ முதல் எ௰ - வயது வரையில் ஹானி. இந்தப்பருவத்தில் கருவிகளின் பலம் படிப்படியாகக் குறையும், பித்தம் அதிகப்பட்டிருக்கும்.

விருதாப்பியம்.—இந்தப்பருவத்தில் தாதுக்களும், புலன்களுடைய பிரகிருதியும், தேகபலமும், மன உச்சாகமும், நாளுக்குநாள் குறையும் ; மாம்சதாதுக்கள் மெதுவாகித் தளரும் ; மயிர் வெளுத்து உதிரும் ; முதுகு வளைவுகாணும் ; இருமல், சுவாசகாசம், முதலிய நோய்கள் அணுகும் ; எதையுஞ் செய்யத்தள்ளாது. மழைக்காலத்தில் பழையவீடு முட்டுக்கோலை வேண்டுவதுபோல் சரீரம் ஊன்றுகோல் உதவியால் நிற்கும். இந்தப் பருவத்தில் வாதம் அதிகரித்து வலி, நடுக்கல், புத்தி மாறுட்டம், முதலிய் நோய்கள் சம்பவிக்கும்.

இருபத்தைந்து வயதில் ஆணும், பதினாறு வயதில் பெண்ணும், பருவகாலத்தை யடைவார்கள்.

பால்ய, விருதாப்பிய பருவங்களில் சூடுபோடல், க்ஷாரச்சீலை வைக்குதல், புண்ணுக்குதல், வெப்பமான பேதிக்குக்கொடுத்தல், இவைகளை நீக்கவேண்டியது. ஆனால், மேற்கண்டவைகளைச் சிலவேளை உபயோகிக்க வேண்டியதா யிருந்தால், லேசாகச் செய்யலாம்.

சரீரம் ஸ்தூலித்தும் மெலிந்தும் சமமாயு மிருப்பதால், ஸ்தூலித்த தேகத்தில், தாதுக்களின் பலத்தைக் குறைக்கவேண்டியது ; மெலிந்ததேகத்தில், தாதுக்களின் பலத்தை அதிகப்படுத்தவேண்டியது ; சமமானதேகத்தில் தாதுக்களின் பலத்தை அதிகரிக்கவும் குறைக்கவுங் கூடாது. மெலிந்த தேகத்தையுடைய சிலர், பலமுள்ளவர்களாயும், ஸ்தூலதேகத்தையுடைய சிலர், பலம் குறைந்த வர்களாயும் இருப்பதால், சிகிச்சை செய்யும்போது, நோயாளியின் பலத்தை முதலில் கண்டறிய வேண்டியது ; அதையறியாமல், மருந்து கொடுக்கவும், சத்திரஞ் செய்யவுந்தகாது.

உ. Sex—ஸ்திரீ புருஷ ஜாதி பேதங்களின், நுட்பங்கள்.—மருந்துகள் புருஷர்களுக்குக் கொடுக்கும் பரிமாணத்திற்குக்குறைத்து, ஸ்திரீகளுக்குக்கொடுக்கவேண்டியது. அவர்களுக்கு, மாதவிடாய் கிரமமாகக்காணுகிறதும் காணாததும், தெரிந்துகொள்ள வேண்டியது. கருப்பவதிகளுக்கும், பிள்ளைகளுக்குப்பாலூட்டும் மாதர்களுக்கும், மாதவிடாய் கண்டிருக்கும் பெண்களுக்கும், நேர்வாளம்முதலிய வெப்ப குணமுடைய பேதி மருந்துகளைக் கொடுக்கலாகாது. இரத்

தத்திற்கலந்து துற்குணங்களைச்செய்யும் அவுஷதங்களை பிள்ளைக்குப்பால் கொடுக்கிற பெண்களுக்கும், கருப்பவதிகளுக்கும், கொடுக்கலாகாது.

ரு. Temperament—சரீரகுணம்.—வாத பித்த சிலேஷ்மம் என்னுந் தோஷங்களால், சரீரகுணம் மாறும். அந்தந்தச்சரீர குணத்துக்குத் தக்கபடி, அவுஷதங்களின் குணமும் வித்தியாசப்படும். ஆகையால், அதையறிந்து மருந்துகளையுபயோகிக்கவேண்டியது. மேலும், அந்தந்த சரீரத்துக்குத் தக்கதாய், வெவ்வேறுன வியாதிகளுங்காணும். அதெப்படியெனில், விரேசனகாரிகளும் Purgatives,) உஷ்ட்ண காரிகளும் Stimulants,) பிளக்மாடிக் டெம்பர மென்ட் Phlegmatic Temperament,) என்னும் சிலேஷ்ம தேகத்தில் பொருந்துவதுபோல், ஸான்குவின் டெம்பரமென்ட் Sanguine Temperament,) என்னும் பித்த தேகத்தில் பொருந்தாது ; ஆகையால், பேதிக்காவது சூடானமருந்துகளாவது, பித்த தேகிக்கு மிதமாய் கொடுக்கவேண்டியது. இங்கிலீஷ் வைத்தியமுறையாய், சரீர குணம் நான்குவகைப்படும். அதாவது :—ஸான்குவின் Sanguine,) பிளக் மாடிக் Phlegmatic,) பில்லியஸ் Bilious,) நேர்வஸ் Nervous,) என்பனவாம். ஸான்குவின்டெம்பரமென்டென்னும் சரீரகுண முடையவனுக்கு, தேகத்தில் அதிக ரத்தமிருக்கும், Plethora,) தாபிதமும் Inflammation,) ரத்தபித்தரோகம், Hæmorrhage,) கடுஞ்சுரம் Inflammatory Fever,) முதலிய ரோகங்கள் அனுசரிக்கும்.—பிளக் மாடிக் டெம்பரமென்டென்னும் சரீர குணமுடையவனுக்கு, தீர்க்கரோகங்கள் Chronic Diseases,) கண்டமாலை சம்பந்தமான வியாதிகள், நீர்க்கோவை, பாண்டு முதலிய ரோகங்கள் Dropsical affections,) அனுசரிக்கும்.—பில்லியஸ் டெம்பரமென்டென்னும் சரீரகுணமுடையவனுக்கு, அக்கினிமந்தரோகம் Dyspepsia,) பித்ததோஷம் Functional derangement of the Liver,) முதலியவைகள் அனுசரிக்கும்.—நெர்வஸ் டெம்பரமென் டென்னும் சரீரகுணமுடையவனுக்கு, இசுவு சன்னிரோகம், பயித்தியரோகம் முதலியவைகள் அனுசரிக்கும்.

மேற்சொல்லிய நான்குவித சரீரகுணங்களின் குறிகள் இதனடியிற்காண்க.

ஸான்குவின் டெம்பரமென்டென்னும் சரீரகுணத்தின் குறிகளாவன :—நாடிவிரைவாக நடக்கும் ; எளிதில் கோபதாபங்களுண்டாகும் ; காமக்குரோதாதிகள் அதிகரித்திருக்கும்.

பிளக்மாடிக் டெம்பரமென்டென்னும் சரீரகுணத்தின் குறிகளாவன :—நாடி மெதுவாய் நடக்கும் ; தேகம் தளர்ச்சியுடன் அசதியுள்ளதாயும், புத்தி மந்தமாயுமிருக்கும்.

நெர்வஸ்டெம்பரமென்டென்னும் சரீரகுணத்தின் குறிகளாவன :—அதிக மிரக்ஷியும், துர்ப்பல நாடியும், சன்மார்க்கத்தில் இச்சையு மிருக்கும்.

பில்லியஸ் டெம்பரமென்டென்னும் சரீரகுணத்தின் குறிகளாவன :—திடத்துவமும், தீரமும், கஷ்டமான காரியங்களைச் சாதிக்குஞ் சக்தியுமிருக்கும்.

தேகங்களுக்குவெவ்வேறான குணங்களுண்டாவதற்குக்காரணம், ஆயுர்வே

தத்தில் சொல்லியிருப்பதாவது—சுரோணிதத்துடன் Menses,) சுக்கிலம் Semen,) சேரும்போது வாத பித்த சிலேஷ்மங்களில் எது அதிகரித்திருக்கின்றதோ அதின் குணம் சிசுவிற்குண்டாகுமாம்.

ஆயுள்வேதத்தில், எழுவித தேகங்க ளுண்டென்று கண்டிருக்கிறது. அதாவது—வாததேகம், பித்ததேகம், சிலேஷ்மதேகம், வாத பித்ததேகம், வாத சிலேஷ்மதேகம், பித்த சிலேஷ்மதேகம், வாத பித்த சிலேஷ்மதேகம் என்பனவாம்.

சரீரத்திற்கு ஆதாரமாகிய பிருதுவி மண், அப்பு ஜலம், தேயு அக்கினி, வாயு காற்று, ஆகாசம் வெளி, என்றுசொல்லும் பஞ்சபூதங்களிலிருந்து மேற்சொல்லிய வெவ்வேறான சரீரக்கட்டுகளுக்குரிய குணங்கள் பிறக்கிறதென்று சிலர் எண்ணியிருக்கிறார்கள். இத்தன்மையாகில் வாதம் வாயுவின் தன்மையை யொத்தும், பித்தம் தேயுவின் தன்மையை யொத்தும், சிலேஷ்மம் அப்புவின் தன்மையையொத்து மிருக்கும்.

பிருதுவி தன்மையையுடைய தேகம் பருத்திருக்கும், சிரமத்தைச்சகிக்கும்.

ஆகாச தன்மையான தேகமுடையவன் பரிசுத்தமாயும், தீர்க்காயுசுள்ளவனாயும், நவத்துவாரங்கள் பெருத்தும், சாத்மீக ராஜஸ தாமஸமென்னும் முக்குணங்களிலொன்று அதிகரித்தவனாயு மிருப்பான்.

மேற்சொல்லிய விஷயங்களை ஆயுள்வேதத்தில் விபரமாகக் காணலாம்.

அ. Strength and Profession—தேகபலம் தொழில் இவைகளைக்குறித்துத் தெரிந்துகொள்ளவேண்டிய விஷயங்களாவது.—கடினவேலைசெய்து மட்டி ஆகாரங்களைச் சாப்பிடுகிறவர்கள், காட்டான பேதிமருந்துகளைத்தாளுவார்கள். சரீரப்பிரயாசை யில்லாமல் ராஜாக்கானசாப்பாடு சாப்பிட்டுக்கொண்டு சவுக்கியத்திலிருப்பவர்களைப் பலவிதரோய்கள் அனுசரிக்கும் ; அவாள் காட்டான அவுஷதங்களைத் தாளமாட்டார்கள். ஆதலால் மருந்து அதிகமாய் ஏற்றாமல் அவர்களுக்குடைய வழக்கத்தை யனுசரித்தே நோயை நீக்கவேண்டும்.

கூ. Idiosyncrasy—இடியோஸின்க்ரெசி என்பது, சிலருக்கிருக்கும் ஒருவித விசேஷதேகக்கூறு. இவ்வித தேகக்கூறையுடையவர்களுக்கு அபினி மருந்து தூக்கத்தைக்கொடாது ; சிலருக்கு அது பேதியை யுண்டாக்கும். சிலருக்கு வாந்திமருந்து, பேதியாகும், பேதிமருந்து வாந்தியாகும். சிலருக்குச் சில நாற்றம்பட்டவுடன் வாந்தி காணும். சிலருக்கு இபிகாகுயன் Ipecacuan) என்னும் மருந்தின் வாசனை பட்டவுடன் மூச்சடைப்புக்காணும். சிலருக்கு இரசம் கலந்தமருந்து ஒருவிசைகொடுத்தால் வாய்புண்ணாகிவிடும் ; சிலருக்கு அம்மருந்தை நெடுநாள் கொடுத்தபோதிலும் வாய் புண்ணாகமாட்டாது. சிலருக்கு இரசம் வாந்தியையுண்டாக்கும். சிலருக்கு எரிவண்டு பிளாஸ்திரியைப்போட்டுப் புண்ணாக்கினால், நீர்ச்சுருக்கு Strangury) காணும். சிலருக்குப்பால் நஞ்சின் குணத்தைத்தரும். சிலருக்குப்பேதிகட்டத் துவர்ப்பு மருந்து கொடுத்தால் பேதியாகும் ; பேதிமருந்து கொடுத்தால் மலத்தைக்கட்டும். இவ்வித விசேஷ தேகக்கூறை நாம்தெரிந்து

கொள்ளக் குறிக ளொன்றுமில்லை. ஆகையால் பழக்கத்தின் பேரில் தெரிந்து கொள்ளவேண்டியது.

அவுஷதம் நோயாளிகளுக்குக் கொடுக்கும்பொழுது முதல்விசை கொடுத் த மருந்தின்வேகம் முழுமையும் நீங்காமுன் மறுபடியும் கொடுக்கவேண்டியது. இந்த முக்கிய விஷயத்தை நாம் யோசிக்காமல் மருந்தைக் காலக்கிரமமில்லாமல் தாறுமாறாகக் கொடுத்தால் வியாதி நீங்காது, வியாதியும் அதிகப்படும். இரசம், பாஷாணம், டிஜிடேலிஸ் Digitalis) முதலிய சில அவுஷதங்கள் சரீரத்தில் சிலநா ள்தங்கி பிறகு ஒரேவிசையாகக் கெட்டகுணத்தைக்காட்டி அபாயத்தை உண் டாக்கும். ஆகையால், அம்மருந்துகளைத் தாமசஞ்செய்து கொடுக்கவேண்டியது, அல்லது, நிறுத்தி நிறுத்தியாவது கொடுக்கலாம். அடிக்கடி பேதிக்குக் கொடுத் தால் கெட்டமருந்துகளைத் தேகத்தில் நிற்க ஒட்டாது.

௯. Habit—வழக்கம்.—ஒரு மருந்தை அடிக்கடி கொடுத்தாலும், அல்லது நெடுநாள் கொடுத்துக்கொண்டுவந்தாலும், அம்மருந்தின் குணம் குறையும் ; அ தெப்படியெனில் : கஞ்சா, அபினி முதலிய கயப்புள்ள பதார்த்தங்கள் துவக்கத் தில் கொஞ்சமாய்க்கொடுத்தால் குணத்தைக்காட்டும், பிறகு வழக்கப்படுத்தி வர வர அதிகமாக உட்கொண்டாலொழிய குணத்தைக்காட்டாது. அதைப்போல் மருந்துகளையும் படிப்படியாய் பரிமாணத்தை யதிகப்படுத்தினுலொழிய குணத் தைத்தரமாட்டாது. அபினி, கஞ்சா முதலிய கயப்புள்ளவைகளைச் சாப்பிட்டு வழக்கப்படுத்தினவர்களுக்கு, அவைகளை நாம் அவுஷதமாகக்கொடுக்கும்போது, அதிக அளவில் கொடுக்கவேண்டியது. ஆனல், இந்தக்கிரமம் சிலமருந்துகளில் வேறுபடும். இரசம், அயம், பாஷாணம் முதலிய மருந்துகள் சாப்பிட்டுக்கொண் டு வரவர அவைகளின் குணம் அதிகமாகும். ஆகையால் அவைகளின் அளவை குறைத்துக்கொண்டே வரவேண்டியது. ஓர் ஸ்திரீ மெத்தையின்பேரிலிருந்து விழுந்து மூத்திரதாரை காயம்பட்டு நீரிறங்கும்போது காணும் வேதனையைத் தணிக்கும்பொருட்டு அபினிமருந்து சாப்பிட்டுக்கொண்டுவந்தாள். சிலநாள் வழக்கப்படுத்தினபின்பு, நாளொன்றுக்கு, உ௱-கிரேன் வீதம் சாப்பிட்டு நிர்வகிக் கத்தக்கவளானுள் ! கள், சாராயம், அபினி, கஞ்சா முதலிய கயப்புள்ளவைக ளைச் சாப்பிட்டு வழக்கமானவர்களுக்கு, வாந்தி மருந்துகள் அதிகவெப்பகுணத் தைக்காட்டும். ஆகையால், அவைகளை ஜாக்கிரதையுடன் நாம்கொடுக்கவேண்டி யது. மேலும், மதுபானிகள், தாங்கள் அப்பியாசம் செய்ததை திடீலென்று விட் டுவிட்டால்,டிலிரியம் டிரிமென்ஸ் Delirium tremens) என்னும், ரோகங்காணும்.

எ. Of disease—நோய்களைக் குறித்துத் தெரிந்துகொள்ள வேண்டிய விஷ யங்களாவது :—அபினி, கஞ்சா, இரசம், அஞ்சனக்கல், பாஷாணம் முதலிய மருந்துகளைச் சிலநோய்களுக்கு அதிகமாய்க்கொடுத்தபோதிலும், நோயாளி தா ளுவான். அந்த அளவு சவுக்கியமுள்ளவனுக்குக் கொடுத்தால் கொல்லும்.

அ. Climates—தேசங்களுக்கிருக்குங்குணம் :—தேககுணமும், மூலிகைக ளின்குணமும், அந்தந்தத் தேசத்திற்குத் தக்கபடி வேறுபட்டிருக்கும். இந்த வி ஷயமும் நமக்குத்தெரிந்திருக்க வேண்டியது.

௩. Pulse—நாடியைக்குறித்துத் தெரிந்து கொள்ளவேண்டிய சங்கதிகளாவன :—நாடிப் பரிக்ஷையில் சில முக்கியசங்கதிகள் நமக்குத் தெரிந்திருக்க வேண்டியது. அஃதாவது, நாடி பார்க்கும் ஸ்தானங்கள், நாடியைப்பிடித்துப்பார்க்கும் விதம், சரீரத்தின்பேதாபேதங்கள், நாடிபார்க்கும் வேளையில் நோயாளி யிருக்க வேண்டியநிலை முதலியவையாம்.

நாடிஸ்தானங்கள்.—கைகளிலும், கண்டத்திலும், கன்னச்சுழிகளிலும், கால்பெருவிரல்களுக்கு மேலாகவும், கணைக்காலின் உட்புறத்திலும், நாடியைப்பிடித்துப்பரிக்ஷிக்கலாம். ஆனால் கையைப்பிடித்து நாடி நடையைத்தெரிந்துகொள்ளும் பரிக்ஷையே சகலத்திற்கும உத்தமம்.

நாடியைப் பிடித்துப் பரிக்ஷிக்கும் விதம்.—கையில் பெருவிரல் பக்கமாக இருக்கும் ஆரையெலும்பின்மேல் Radius) ஓடும் நாடியை, மணிக்கட்டுக்கு Wrist) ஒரு அங்குலம் மேலாக மூன்று விரல்களால் சமமாக மெதுவாய் அழுத்திப்பார்க்கில், நாடி நடை தட்டுப்படும. விரல்களை மெத்த அழுத்தினால், நாடி நரம்பில் ஓடும் இரத்தம் தடைபட்டு நாடிநடை அகப்படாது.

மேற்சொல்லிய கிரமத்துடன் விரல்களைச் சமமாக மெதுவாய் அழுத்தி நாடி நடையைப் பரிக்ஷித்தபின்பு, விரல்களை மாறிமாறி அழுத்தியும் தளர்த்தியும் பரிக்ஷிக்கவேண்டியது. இப்படி பரிக்ஷிப்பதில் நாடி நடையின் பலத்தை The degree of Resistance) அறிந்துகொள்ளலாம்.

சரீரத்தின் பேதாபேதங்கள் :—பயங்காளிகளிடத்திலும், முன்கோபிகளிடத்திலும் நாம் போனவுடன் நாடிபார்க்கலாகாது, ஏனெனில், அவர்களுடைய இருதயம் Heart) அதித்துரையில் பேதித்து நடக்கும், அப்போது நாடியும் படபடவென்றோடும் ; ஆகையால் அந்த குணங்களை யுடையவர்களிடத்திற்போய்ச் சில நேரம் பேசிக்கொண்டிருந்து, வைத்தியரைக் கண்டவுடன் காணுந் திகில் அடங்கினபின்பு, நாடியைப் பரிக்ஷிக்க வேண்டியது. இவ்வாறே நோயாளி நடந்துவந்தவுடனேயும், மனச்சஞ்சலமாகவிருக்கும்போதும் நாடியைப் பரிக்ஷிக்கலாகாது.

நாடி பார்க்கும் வேளையில் நோயாளி இருக்கவேண்டியநிலை :—நோயாளியைப் படுக்கவைத்தாவது உட்காரவைத்தாவது நாடியைப் பரிக்ஷிக்கவேண்டியது ; நின்றுகொண்டிருந்தால், நாடி அதிக துரிதமாக நடக்கும்.

இரண்டுகைகளிலும் நாடியைப் பரிக்ஷிக்கவேண்டியது :—வலதுகை நாடியையும், இடதுகை நாடியையும் பார்க்கவேண்டியது கிரமம் ; ஏனெனில் சாதாரணமாகப் பார்க்கும் வலது கைநாடி சிலதருணங்களில் பருத்தாவது சிறுத்தாவதிருக்கும் : ஆகையால் இரண்டு கைகளின் நாடியைப் பரிக்ஷிப்பது உத்தமம் மேலும், சிலரில் நாடி, சுவாபீகமாய் ஓடும் இடத்தை விட்டுப் புரண்டோடும், அப்போது நாடி இருக்கவேண்டிய ஸ்தானத்தில் நாடி நடை தட்டுப்படாது.

நாடி பார்க்கும் ஸ்தானத்துக்கு மேலாக, பிருவாய் யாதொரு கட்டும் இருக்கக்கூடாது ; பிருவுபட்டிருந்தால் நாடிநடையின் சுபாவம் குறைந்திருக்கும், அல்லது நாடி விரல்களுக்குத் தட்டுப்படாது.

நாடி நடையுண்டாவதற்குக் காரணம் :—நாடிநரம்பில் நடையுண்டாவதற்குக்காரணம் யாதெனில் இருதயத்தின் இடது சடரம் Left Ventricle) குவியும்போது இரத்தம் அதிலிருந்து கண்டனையின் Aorta) வழியாகச் சென்று சகல நாடி நரம்புகளுக்கும் பரவும், அப்போது நாடிநரம்புகள் விரியும் ; மறுபடியும் இடதுசடரம் விரியும்போது நாடி நரம்பிலிருக்கும் இரத்தம் குறைந்து நாடி சுருங்கும். இவ்விதமாக இருதயம் விரியவும் சுருங்கவுமாக இருப்பதால், அதனுடன் சேர்ந்த நாடி நரம்புகளும் விரியவும் சுருங்கவுமாக இருக்கும் இந்தச்செய்கையை நாம் நாடி நடை Pulsation of the Artery) என்று சொல்லுகின்றோம். ஆகையால் நாடி நடை இருதயத்தின் நடைக்கு Action of the heart) ஒத்திருக்கும்.

நாடியானது, இருதயம் எவ்விதமாய் நடக்கின்றதோ அதை, நமக்குத்தெரிவிக்கின்றது. தேகத்திலிருக்கும் கருவிகளுக்குள், இருதயம் ஓர்பிரதான கருவி, அதனுடைய நடை தேகஸ்திதிக்கு ஒத்திருக்கும். தேகத்தில் ரோகங்கண்டால் இருதயத்தினுடைய சுவாபீக நடைபோய்விடும். தேகத்திலிருக்கும் வியாதியை இருதயம் அறிந்துகொண்டு நாடிநரம்பின் வழியாக நமக்குத் தெரிவிக்கின்றது. ஆகையால் நாடிநரம்பு நடக்கிற பேதங்கள் நமக்கு நன்றாகத் தெரியாவிட்டால் தேகத்திலிருக்கும் வியாதி நமக்குச் செவ்வையாகத்தெரியமாட்டாது.

ஆரோக்கிய ஸ்திதியிலிருக்கும் சம்பூர்ண வயதையுடைய Adult) புருஷர்களுக்கு, நாடி வரிசைக்கிரமமாய் Regular) நடக்கும், ஏற்றக்குறைச்சலில்லாமல் Equal in force) ஒரே கிரமமாய் விரல்களில் தாக்கும், விரல்களால் அழுத்தினால் இரத்த ஓட்டம் தடைபடும் Compressible,) நாடிநரம்பில் ஓடும் இரத்தம் நிறைந்திராமல் மட்டாய்க் குறைந்தோடும் Moderately full.)

ஆரோக்கிய ஸ்திதியிலிருக்கும் பெண்களுக்கும், குழந்தைகளுக்கும், நாடி அதிகதீவிரமாக நடக்கும் Quick,) நாடிநரம்பு சன்னமாயு மிருக்கும் Small.)

விருதாப்பியத்தில், நாடிநரம்பின் புரைகள் Coats of the Artery) கொஞ்சம் உறுதியுள்ளதாதலால், நாடி நரம்பு வலியுள்ளதாய் விரல்களுக்குத் தட்டுப்படும்.

இதனடியிற்கண்ட அட்டவணையில் வயதுக்குத்தக்கபடி ஒரு மினிட் நேரத்தில்நாடிநடையின் பிரமாணம் இவ்வளவென்று காட்டியிருக்கிறதைக்காண்க :—

| | | | |
|---|---|---|---|
| அப்போது பிறந்த சிசுவுக்கு At birth) மினிட்டுக்கு- | | ௱௪௰ | தரம் அடிக்கும். |
| பால்லியத்தில் During Infancy). . . . | ,, | ௱௨௰ முதல் ௱௩௰ | ,, |
| குழந்தையில் In Childhood). . . . . . . | ,, | ௱ | ,, |
| யவ்வனபருவத்தில் Youth). . . . . . . . | ,, | ௯௰ | ,, |
| சம்பூர்ண பருவமுடைய புருஷனுக்கு Adult Male.) | ,, | ௭௰ முதல் ௭௰௫ | ,, |
| சம்பூர்ணபருவமுடைய ஸ்திரீக்கு Adult Female.) | ,, | ௭௰௫ முதல் ௮௰ | ,, |
| க்ஷீண பருவத்தில் Old age). . . . . . . . | ,, | ௭௰ | ,, |
| விருதாப்பியத்தில் Decrepitude)...... | ,, | ௭௰௫ முதல் ௮௰ | ,, |

வேறு விதங்களாலும் நாடிநடை பேதப்படும்.

| | | | |
|---|---|---|---|
| மனிதன் நிற்கும்போது .. .. ..... .. .. .. .. | மின்னிட்டுக்கு | ௭௰௯ | தரம் அடிக்கும் |
| உட்கார்ந்திருக்கும்போது.... | ,, | ௭௰ | ,, |
| படுத்திருக்கும்போது........ | ,, | ௬௰௭ | ,, |

ஆகையால், படுத்திருக்கும்போதும், உட்கார்ந்திருக்கும் போதும், நாடியைப் பரிக்ஷிக்கவேண்டியது.

நடந்து தேகம் அலண்டிருந்தால், நாடி நடை படபடத்திருக்கும் Frequent ;) நித்திரையில் நாடி நடை தணிந்திருக்கும் Slow ;) சாப்பாடு, சூடானபதார்த்தங்கள், சாராயம், இலாகிரி வஸ்துக்கள், புகையிலை, இவை முதலியவைகளால் நாடி நடை தீவிரப்படும் Quick ;) வெய்யில், ஜுரம், நித்திரைபங்கம், மனச்சஞ்சலம், அதிகதுர்ப்பலம், இரத்தப்பெருக்கு Loss of blood,) இவைமுதலியவைகளால் நாடிநடைக்கு படபடப்பு காணும்: இந்த எதுக்களால் மின்னிட்டுக்கு ௭௰௫ - ஆக இருக்கவேண்டிய நாடி - ௱ - ௱௨௰ சில தருணங்களில் - ௨௱ - மாக உயரும். குளிர், அதிக நித்திரை, பசி, விசனம், இவை முதலிய வைகளால், நாடி நடை மந்தப்படும்: இந்த எதுக்களால், ௬௰௬ - ௫௰௫ - ஆக குறையும்.

ஆரோக்கிய ஸ்திதியி லிருக்கும் சம்பூர்ண வயதுடைய புருஷனுக்கு, நாடி ஒரு மின்னிட்டுக்கு-௭௰ முதல் ௭௰௫-விசை அடித்துக்கொள்ளும். இதுகிரமநாடி Regular Pulse.) இந்தத் தொகைக்கு அதிகப்பட்டால் படபடத்த நாடி Frequent) என்றும், குறைந்தால், மந்த நாடி Slow) என்றும் பேர்.

நாடியின் ஒவ்வொரு அடி சுருக்காய் அடிப்பதாக விரல்களுக்கு தட்டுப்பட்டால் தீவிர நாடி Quick Pulse) என்று பேர்; இவ்விதமாய் நாடி அடித்துக்கொள்ளும்போது, அதின் நடையின் தொகை அதிகப்படாது, அடியானது வேகமாய் மாத்திரம் இருக்கும்.

நாடி நரம்பில் இரத்தம் நிறைந்து ஓடினால், நாடி நரம்பு பருத்து இருக்கும், இது பூரண நாடி Full Pulse;) இரத்தம் குறைந்து ஓடினுல் நாடி சிறுத்து இருக்கும், இது சுஷ்க்கித்த நாடி Small Pulse.)

விரல்களுக்கு நாடி அழுந்தாமல் இருந்தால் திட நாடி Hard Pulse) என்று பேர்; நாடி மிகவும் சிறுத்து திடமுள்ளதாய் விரல்களுக்குத்தட்டுபட்டால் தந்திரிகநாடி Wiry Pulse) என்று பேர்.

மும்மர வியாதிகளுடைய Acute diseases) துவக்கத்திலும், இரத்தபுஷ்டியுள்ளவனுக்கும் Plethoric,) நாடி பூரண நடையி லிருக்கும் Full Pulse.)

அதிகபெலஈனனுக்கும், பாண்டு ரோகத்திலும் Anæmia) அதிக ரத்தம் நஷ்டப்பட்ட பின்னும் Hæmorrhage) நாடி சுஷ்க்கித்து Small நூலிழை போலவும் Thread like) நடக்கும்.

ஜுரரோகிக்கு, நாடி உபய கதியாக Dicrotic or Rebounding) நடந்தால் வியாதி அசாத்தியமென்று எண்ணவேண்டியது. உபயகதி நாடி என்பது, நாடியின் ஓர் அடி இரண்டு அடியாக விரல்களுக்குத் தட்டுப்படுதல். இவ்விதமாக நாடி

நடக்கும் போது மூக்கில் இரத்தங்கண்டால், நோய் சாத்தியமாகும். நாடி நடைகளை ஒரு அட்டவணையாகச் செய்து, இதன் அடியில் கூறப்படும்.

| | | | |
|---|---|---|---|
| கிரமநாடி REGULAR<br>அக்கிரமநாடி IRREGULAR | *Regularity,* | பூரணநாடி FULL OR LARGE<br>சூக்ஷ்மித்த நாடி SMALL | *Volume or Size.* |
| தீவிரநாடி QUICK OR SHARP<br>மந்தநாடி SLOW–LABOURING | *Force.* | அழுந்தாத நாடி HARD<br>அழுந்தும் நாடி SOFT | *Tonicity or Contractility.* |
| படபடத்தநாடி FREQUENT<br>—— INFREQUENT | *Number of beats.* | விச்சின்னகதிநாடி INTERMITTENT.<br>உபயகதிநாடி DICROTIC OR REBOUND : | |

நாடி நடையின் வித்தியாசங்களைத் தெரிந்துக்கொள்ளுவது மெத்தகடினம், பழக்கத்தினால் கண்டறியவேண்டியது வாசிப்பதினால் தெரியமாட்டாது.

---

FORMS OF PRESCRIPTION.—பிரிஸ் கிருப் ஷன்.—அவுஷதப்பட்டி எழுதவேண்டிய கிரமம்.

நோயாளிகளுக்குக் கொடுக்கவேண்டிய அவுஷதத்தில் சேருஞ் சரக்குகளை, ஒருகடிதத்தில் வெவ்வேறாக எழுதவேண்டியது. எந்த அவுஷதத்தையாவது, ௫, சரக்குகளுக்கு அதிகமாய்ச் சேர்த்துச் செய்யலாகாது. அவுஷதப்பட்டியி லெழுத வேண்டியதாவது :—தலைப்பில், நோயாளியின் பேர் ; ௨-வது, வருஷம், மாதம், தேதி ; ௩-வது, சேர்க்குஞ் சரக்குகள் இன்னதென்று தெரிவிக்கும், ரெஸிபி Recipe) என்னும் இங்கிலீஷ் சொல்லுக்குக் குறிப்பாகிய இந்த R எழுத்து. அதன்கீழ் எழுதவேண்டிய தாவது :—

க - வது, அவுஷதத்தில் சேரும் பிரதானச்சரக்கு..............*Principal ingredient.*
௨ - வது, உதவிச்சரக்கு.... ........*Intended to promote the action of the former.*
௩ - வது, பிரதான மருந்தின் குணத்தைச் சாந்திப்படுத்தும் சரக்கின்பேர்...*That designed to correct or modify the operation of the basis.*
௪ - வது, அவுஷதத்துக்கு ரூபமுண்டாக்க வேண்டிய பதார்த்தம்....*Substance to give consistance and form.*
௫ - வது, அவுஷதத்தைச் செய்கிற, ரூபத்தின் பேர்.............................*Form.*
௬ - வது, அளவு, எடுத்துக்கொள்ள வேண்டியக் கிரமம். *Dose and the directions.*

உதாரணம் :—

________________________அவர்களுக்கு.

௲௮௱௬௰௩ - ௵ - டிசம்பர் ௴ - ௨௰௫௳.

R

| | | | |
|---|---|---|---|
| சிற்றாமணக்கெண்ணெய்.. | ஆழாக்கு. . . .௧ | இது, பிரதான சரக்கு. | *Base.* |
| கறி உப்பு. . . . . . . . . | விராகனிடை..௨ | இது, உதவிச்சரக்கு. | *Adjuvant.* |
| எலுமிச்சம் பழ ரசம். . . | தேவையானது. . | இது, சமனகாரி. | *Corrective.* |
| நீராகாரம். . . . . . . . | ஆழாக்கு. . . .௧ | இது, ரூபமாக்கும்பதார்த்தம் | *Vehicle.* |

இவைகளைச் சேர்த்து மத்தித்தபின், ஒருதடவைச் சாப்பிடவேண்டிய பேதிமருந்தாகும் இது மருந்தின் ரூபம். } *Form.*

இதை, காலையில் சாப்பிடவும். . . . . . . இது, காலம்—கிரமம். *Directions.*

இரண்டு நோயாளிகளுக்கு வேண்டிய அவுஷதங்களை, ஒரு அவுஷதப் பட்டியில் எழுதலாகாது : எழுதினால், அவுஷதங்கள் மாறிப் பிசகுநேரிடும். ஆகையால், ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு பட்டி எழுதவேண்டியது.

சிலருக்கு, மாத்திரை ரூபமான மருந்து சரிப்படாது ; சிலர், திரவ ரூபமான மருந்தை விரும்பார்கள். ஆகையால், நோயாளிக்கு இஷ்டமான ரூபமாய், அவுஷதத்தைக் கூட்டிக் கொடுக்கவேண்டியது.

சிலபோது திரவ ரூபமாகவும், மாத்திரை ரூபமாகவும், அவுஷதங்களைக் கொடுக்கவேண்டியது அவசியமாக இருக்கும், அப்போது நோயாளி இஷ்டப்படிக் கொடுக்க உதவாது. இவ்விதமாக இங்கிலீஷ் வைத்தியர்கள் அவுஷதப்பட்டி எழுதுகிற கிரமம்.

ஹிந்து வைத்தியர்களில் அவுஷதங்களை வாய்முறையாய்ச் சொல்லுகிற வழக்கம் உண்டு, அது சரியல்ல ; அவுஷதச் சரக்குகளின் பேர்களும், அவைகளைச் செய்ய வேண்டிய பக்குவமும், மறதியினால் பிசகும் ; பிசகினால், அபாயங்கள் நேரிடும் ; அதனால் அவுஷதத்தின் பெருமையும், வைத்தியனுடைய கீர்த்தியுங் கெடும். ஆகையால் அவுஷதங்களுக்கு வேண்டிய சரக்குகளும், அவைகளைப்பக்குவப்படுத்தி சாப்பிடவேண்டியக் கிரமமும், ஒரு நறுக்கிலெழுதி நோயாளி இடத்தில் கொடுக்கவேண்டியது வைத்தியருடைய கடமை.

அவுஷதங்களைக் கூட்டும்போது ஒன்றோடு ஒன்று பொருந்தாத சரக்குகளைச் சேர்க்கலாகாது : சேர்த்தால் குணம் கெடுவதும் அன்றி, அதைச் சாப்பிடுகிறவர்களுக்குக் கெடுதி நேரிடும்.

இங்கிலீஷ் வைத்தியர்கள், அவுஷதப்பட்டி எழுதும்போது சுருக்கி எழுதும் மொழிகளும், அவைகளால் தெரிந்து கொள்ளவேண்டிய அர்த்தமும், இதன் அடியில் விவரித்திருக்கின்றன.

Tinct. for Tinctura.... ... (Tincture டிங் சர்.) பாவனத்திரவம்.
Pil. for Pilula... ... ...(Pill Mass பில் மாஸ்.) மெழுகு.
Inf. for Infusio...... ...(Infusion இன் வ்யூ ஷன்.) வெந்நீர் கஷாயம்.
Aq. for Aqua.... ......(Water வாடர்.) தண்ணீர்.
Ung. for Uunguentum. (Ointment ஆய்ன்ட் மென்ட்.) இளகிய களிம்பு.
Ext. for Extractum......(Extract எகிஸ்ட் டிராக்ட்.) சத்து—திருதி.
Mist. for Mistura..........(Mixture மிக்ச் சர்.) அவுஷதங்கள் கலந்த ஜலம்.
Ol. for Oleum........ ...(Oil ஆயல்.) தயிலம்—எண்ணெய்.
Spir. for Spiritus..........(Spirits ஸ்பிரிட்ஸ்.) சாராயம்.
Syr. for Syrupus..... ...(Syrup ஸிரப்.) ரசாயனம்—பாகு.
Pulv. for Pulvis............(Powder பவுடர்.) தூள்—பஸ்மம்—சூரணம்.
Dec. for Decoctum... ...(Decoction டிகாக்ஷன்.) கஷாயம்.
Empl. for Emplastrum. ...(Plaster பிளாஸ்டர்.) பிளாஸ்திரி—கெட்டிக்களிம்பு.

Aq. font. for Aqua fontana. (Common Water) பச்சைத்தண்ணீர்.
Aq. tep. for Aqua tepida. (Lukewarm Water) கால்சூடு காய்ந்த வெந்நீர்.
Aq. ferv. for Aqua fervens. (Boiling Water ) கொதிக்கிற வெந்நீர்.
Ft. Collyr. (fiat Collyrium.) Make an eye lotion ஐ லோஷன்.) நேத்திரக் கிலேதமாகச் செய்யவும்.
—garg. (—gargarisma.)—a gargle கார்கில்.) கண்டூஷமாகச் செய்யவும்.
—inject. (—injectio.)—an injection இன் ஜெக் ஷன்.) பீச்சாங்குழலால் பிரயோகிக்குஞ் ஜலமாகச் செய்யவும்.
—Suppos. (—Suppositorium.)—Suppository ஸப் பா ஸி டொ ரி.) ஆஸன வழியாய் பிரயோகிக்குங் குளிகையாகச் செய்யவும்.
—lotio. (—lotion.) — a lotion லோ ஷன்.) கிலேதம் ஆகச் செய்யவும்.
—enema. (—enema.) — an enema இனிமா) or Clyster கிளிஸ்டர்.) ஆஸனவழியாய் பீச்சாங்குழலால் பிரயோகிக்கும் ஜலமாகச் செய்யவும்.

---

## உ - வது - அத்தியாயம்.

### OPERATIONS IN PHARMACY.—அவுஷித பாக முறைகள்.

இவைகள், கைபாக முறைகள், செய்பாகமுறைகள் என்று இரண்டு வகைப்படும்.

*Mechanical Operations in Pharmacy.*—கைபாக முறைகள்.

**Mechanical Division.**—சில அவுஷதங்களைச் செய்வதற்காக, முதல் வேர்களையுங், கட்டைகளையுந் துண்டிக்குதல் பிளக்குதல், கலைமான் கொம்பு முதலியவைகளைச் சீவுதல், லோகங்களை அரத்தால் ராவுதல் பொடிச்செய்தல், பட்டைகளை உரிக்குதல் நறுக்குதல், முதலிய கைமுயற்சியினுற் செய்கிற பாகத்துக்கு, இங்கிலீஷில்-மெகானிகல் டிவிஷன்-என்று பேர்.

**Pulverization.**—தூளாக்குதல்—சரக்குகளைச் சூரணம் தூள் பஸ்மம் ஆகச் செய்யும் பாகத்துக்கு, இங்கிலீஷில்-பல் விரிசேஷன்-என்று பேர். இந்த பாகம் செய்யும்போது கவனிக்கவேண்டிய விஷயங்களாவது : கெட்டியானபதார்த்தங்களில் சிலதை, வெண்கல உரலிலும், சிலதை இரும்பு உரலிலும், மிருதுவானபதார்த்தங்களை கலுவத்திலும் இட்டு தூள் செய்து கொள்ள வேண்டியது. மாசக்காயிலும், புளிப்புள்ள வேறுபதார்த்தங்களிலும், டானிக் ஆஸிட் Tannic acid) என்னும் ஓர்வித துவர்ப்பு சத்து இருப்பதால் இவைகளை இரும்பு உரலில் போட்டு இடித்தால் கறுத்துக் கெட்டுப்போகும். கற்பூரத்தைத் தூள் செய்யவேண்டியதானுல், அதனேடு கொஞ்சம் சாராயம் சேர்த்தரைக்கவும், சாராயத்தைச் சேர்க்காவிட்டால் கற்பூரம் தூளாகாது. கரிமுதலிய சில பதார்த்தங்களை அனலில் வெதுப்பி நொறுக்கினுல்தான், நன்ருய்த் தூளாகும். சரக்குகளை நிறுத்து தூள்செய்தபிறகு மறுபடியும் நிறுத்தால் இடை குறையும், குறைந்த அம்மாத்திரம் சரக்கைச் சேர்த்துக்கொண்டு, அவுஷதங்களைச் செய்து கொள்ள வேண்டியது. தூளாக்கும்போ

து அதற்கு வேண்டிய உரல், உலக்கை, கலுவம், கத்தி, முதலிய ஏனங்கள் சுத்தியாய் இருக்க வேண்டியது. அபினி, கஞ்சா முதலிய நஞ்சு குணமுள்ள வஸ்துக்களைப் பொடி செய்தபின், ஏனங்களை நன்றாய்ச் சுத்தி செய்யாமல் அவைகளால் வேறு வஸ்துக்களைத் தூள் செய்தால், சில வேளை ஏனங்களில் ஒட்டிக்கொண்டு இருக்கும் நஞ்சு, தூள்செய்யும் பதார்த்தங்களில் மிஸ்ரமமாகி, கெடுதி செய்யும். இவ்விதமாக ஷெ அவுஷதங்கள் கலந்து, குழந்தைகளுக்கு அபாயம் நேரிட்டதும் உண்டு.

Trituration.—மைபோல் அரைத்துக்கொள்ளல்—பதார்த்தங்களை மைபோல் தூளாக்கும் பாகத்துக்கு, இங்கிலீஷில்-டிரி டியு ரே ஷன்-என்று பேர். இதற்கு, கலுவத்தினுட்புறம் மழ மழ வென்று இருக்கவேண்டியது. சரக்கைக் கொஞ்சம் கொஞ்சமாய் போட்டு அரைக்கவேண்டியது.

Levigation.—பதார்த்தங்களை ஜலரூபமான வஸ்துக்களைச் சேர்த்து, மைபோல் அரைக்கும் பாகத்துக்கு, இங்கிலீஷில்-லெவி கே ஷன்-என்று பேர்.

Sifting.—சல்லிக்குதல்—சல்லாத்துணி, பித்தளைக்கம்பி, குதிரை மயிர், இவைகளால்செய்த சல்லடையில், அவுஷதங்களைப் போட்டுச் சல்லித்து வஸ்திரகாயம் செய்துகொள்ளும் பாகத்துக்கு, இங்கிலீஷில்-ஸிவ் டிங்-என்று பேர். இரண்டு மூன்று சூரணங்களை ஒன்றாய்ச் சேர்க்கவேண்டியதாக இருந்தால், அவைகளைக் கலந்தபின், இரண்டு, மூன்று விசை, வஸ்திரகாயஞ் செய்துகொண்டால், மருந்துகள் நன்றாய்க் கலந்துவிடும்.

Eleutriation.—ஜலத்தில் கரையாத பதார்த்தங்களைத் தூள் செய்து ஜலத்தில் போட்டால், மெத்த சன்னமான அணுக்கள் சற்றுநேரம் ஜலத்தின்மேலாக நின்றிருக்கும், பளுவானது அடியில் படிந்து விடும். அப்போது ஜலத்தை மேலாக இறுத்துக் கொண்டால், அதனோடு சன்னமான அணுக்களும் வந்துவிடும்; இறுத்துக்கொண்ட நீரைச் சற்றுநேரம் அசையாமல் வைத்தால், அணுக்கள் அடியில் படிந்துவிடும்; தெளிந்த ஜலத்தை இறுத்துவிட்டு, குழம்பி அடியில் நிற்கும் சரக்கை உலர்த்திக்கொண்டு தூளை எடுத்துக்கொள்ளும் பாகத்துக்கு, இங்கிலீஷில்-இலூடிரி ஏ ஷன்-என்று பேர். சாம்பலின்மேல் சன்ன துணியை விரித்துப்போட்டு அதன்மேல் ஷெ சரக்கை ஊற்றினால், அதிலிருக்கும் ஜலத்தைச் சாம்பல் கிரகித்துக்கொள்ளும். இவ்விதமாக பாகஞ்செய்தமருந்தை, வெய்யலிலாவது, அனலிலாவது, வைத்து உலர்த்திக்கொண்டால், மெத்த சன்னமான சூரணமாகும்.

Filtration.—வடிகட்டுதல்—ஸ்பஞ் Sponge) என்னும் பாச்சி, ஊருகிற கடிதாசி, துணி, மணல், கரித்தூள் இவைகளில் எதையாவதுக் கொண்டு அவுஷதங்களைவடிகட்டும் பாகத்துக்கு, இங்கிலீஷில்-பில் ட்டிரே ஷன்-என்று பேர். தாகத்துக்கெடுத்துக் கொள்ளும் நீரை, அசையாமல் சற்றுநேரம் வைத்து, பிறகு, துணியில் வடிகட்டிக்கொண்டால், அதிலிருக்கும் அசுசிபோகும்.

**Expression.**—பிழிந்து கொள்ளல்—பழவர்க்கங்களின் ரசத்தை, கையாலாவது, அதர்க்காசச் செய்திருக்குங் கருவியாலாவது, பிழிந்து கொள்ளும் பாகத்துக்கு, இங்கிலீஷில்-எகிஸ் பிரஷ் ஷன்-என்று பேர். ஆமணக்கு முத்து, முதலிய வித்துகளை செக்கில் ஆட்டி எண்ணெயை எடுக்கிறதும் இந்தமுறைதான்.

*Chemical Operations in Pharmacy.*—செய் பாகமுறைகள்.

**Solution.**—ஜெயநீர்—உப்பினங்களால் காரமேற்றிய ஜெயநீருக்கு இங்கிலீஷில்-ஸொலூஷன் என்று-பேர். ஜெயநீரில் ஏற்றியிருக்கும் காரம் என்கிற உப்புக்கு இங்கிலீஷில் ஸால்வெண்டு Solvend) என்றும், ஜலத்துக்கு, ஸால்வென்ட் Solvent) அல்லது மெனுஸ்ட்ருஅம் Menstruum) என்று, இங்கிலீஷில் பேர். ஜலத்துக்கு எவ்வளவு காரம் கிரகிக்கச் சக்தியுண்டோ, அவ்வளவு காரம் சம்பூர்ணமாய் ஏற்றிய ஜெயநீருக்கு, இங்கிலீஷில், ஸாட்டியுரேடெட் ஸொலூஷன் Saturated solution) என்று பேர். உப்பை அதிகமாகச் சேர்த்தால், கரைந்தது போக, மற்றது அடியில் படிந்துவிடும், பச்சைத்தண்ணீர். சில உப்பினங்களை அதிகமாகவும், வெந்நீர் சில உப்பினங்களை அதிகமாகவும் கிரகிக்கும். குளிர்ந்த ஜலம் எவ்வளவு பொட்டிலுப்பைக் கிரகிக்குமோ, அதர்க்கு இரண்டத்தனைப் பொட்டிலுப்பை, கொதிக்கிற வெந்நீர் கிரகிக்கும். சுண்ணாம்பு, வெந்நீரில் கொஞ்சமாகவும், சீத ஜலத்தில் அதிகமாகவும், கரையும். கஷாயங்களில் சேர்க்கும் பதார்த்தங்களின் சத்து, தண்ணீரின் சூட்டைக்கு ஏற்றபடி கொஞ்சமாயாவது, அதிகமாயாவது ஜலத்தில் கரையும், ஆகையால், சில கஷாயங்களை சூடாயிருக்கும்போதே வடிகட்டி எடுத்துக்கொள்ள வேண்டியதென்று, குறித்திருக்கும்.

**Evaporation.**—புகையாய்க் கிளம்பிப் போகுதல்—மருந்துகளில் இருக்கும் நீரை தீயிட்டெரித்து வற்றச்செய்தலுக்கு, இங்கிலீஷில்-இவாபொரேஷன்-என்று பேர். பூமியிலும், கடலிலும், வெய்யில் பட்டு நீர் தர்ச்செயலாய் ஆவியாகிக் காற்றில் பறந்து போகுதலுக்கு, இங்கிலீஷில்-ஸ்பான்டே னியஸ்-இவாபொரேஷன் Spontaneous evaporation) என்று பேர். ஜெயநீரை சுண்டக்காச்சினால், அதிலிருக்கும் நீர் ஆவியாய் பறந்து போய், உப்பு அடியில் நிர்க்கும். அக்கினிச்சூடுபட்டு கெட்டுப் போகிற உப்புகளை, வெய்யிலில் உலர்த்தி, நீரைப் போக்க வேண்டியது. மூலிகை ரசங்களை இறுகச்செய்து, மெழுகுப்பதமாக்கிக்கொள்ளவேண்டியிருந்தால், அவைகளிருக்கும் பாத்திரத்தை கொதிக்கிற ஜலத்தில்வைத்து, காந்திப் போகாமல் பாகப்படுத்திக் கொள்ளவேண்டியது. இந்த பாகத்துக்கு, ஜல யந்திரம் என்று பேர். இதர்க்கு, இங்கிலீஷில் வாடர்பாத் Water bath) என்று பேர். இங்கிலீஷில் எகிஸ்ட்டிராக்ட் Extract) என்னும், திருதிகளை, இந்தப் பாகமுறையாகச் செய்து கொள்ள வேண்டியது.

**Maceration.**—ஊறல்— மருந்துகளை சாராயத்திலாவது காடியிலாவது ஊறவைத்து வடிகட்டிக்கொள்ளும் பாகத்துக்கு, இங்கிலீஷில்-மாஸிரேஷன்-என்று பேர். சிலமருந்துகளை கஷாயம் காச்சுகிறதற்கு முன், கொஞ்சநேரம் ஜலத்தி

ல் ஊறவைத்துப் பிறகு நெருப்பின்மேல் வைத்துக் காய்ச்சிக்கொள்ளவேண்டியதாக இருக்கும்.

Digestion.—அனல்பட ஊறல்—கூ௦ முதல் கூ௦ - டிக்கிரி உஷ்ணம் இருக்கிற, நெருப்பு அனல் படும்படி ஊறவைத்துப் பக்குவப்படுத்திக் கொள்ளும்பாகத்துக்கு, இங்கிலீஷில்-டைஜெஸ் ஷன்-என்று பேர். அதிக அனல்பட்டால் கெட்டுப்போகிற அவுஷதங்களை, இந்த பாகமாய் செய்துகொள்ளவேண்டியதாயிருக்கும்.

Fusion.—உருக்குதல்.—ஈயம், வெள்ளி, தங்கம் முதலிய லோகங்களை, உருகச்செய்யும் பாகத்துக்கு, இங்கிலீஷில்-பியூ ஷன்-என்று பேர்.

Liquefaction.—மெழுகு, சொழுப்பு, முதலிய பதார்த்தங்களை, தண்ணீராய் உருகச்செய்யும் பாகத்துக்கு, இங்கிலீஷில்-லி குவி பாக் ஷன்-என்று பேர். லோகங்களும், மெழுகுவகைகளும் உருகும்போது கொஞ்சம் வித்தியாசப்படும். கட்டியாய் இருக்கும் லோகங்களை உருக்கினால், உடனே நீராகி ஆறவைத்தால், கட்டியாகிவிடும். மெழுகு வகைகளை உருக்கினால், இளகலாகி குழம்பாகிப் பிறகு நீராகிவிடும்; நீராயிருப்பதைக் குளிரவைத்தால், குழம்பாகி இளகலாகி, பிறகு கட்டியாகும்.

Metallic Oxidation.—செந்தூரித்தல் அல்லது செந்தூரவைப்பு. இதைச்சிந்தூரித்தல் என்றும் சொல்லப்படும்—ரசம், அயம், காந்தம், ஈயம் முதலிய லோகங்களை சிறு தியிட்டு வறுத்தால், அவைகள் காற்றிலிருக்கும்-ஆக் ஸி ஜென்-என்னும் வாயுவைக் கிரகித்துச் சிந்தூரமாகும். இப்படிச்செய்கிற பாகத்துக்கு, இங்கிலீஷில்-மெ டா லிக் ஆக்ஸி டே. ஷன்-என்று பேர். சிந்தூரங்களுக்கு இங்கிலீஷில் ஆக் ஸைட்ஸ் Oxides என்று பேர்.

Deflagration.—வெடி உப்புச்சேர்த்து லோகங்களை சிந்தூரமாக்குதலுக்கு, இங்கிலீஷில்-டி ப்ளோ கிரே ஷன்-என்று பேர்.

Calcination.—பஸ்மிக்குதல், சுண்ணமாக்குதல், நீற்றுதல்—பவழம், முத்து, கார் பொ னேட் ஆவ் மாக் நீஷியா Carbonate of magnesia) என்னும் சரக்கு, முதலியவைகளைப் புடம்போட்டால், அவைகளில் இருக்கும் ஆர் கா னிக் மாட்டர்ஸ் Organic matters) என்னும் சேர்க்கைப் பதார்த்தங்கள் நீங்கிப்போய், அர்தி மாட் டர்ஸ் Earthy matters) என்னும், இயற்கைப் பதார்த்தங்கள் மாத்திரம் நிற்கும். சரக்குகளை இப்படி எரியிட்டு நீற்றுகிற பாகத்துக்கு, இங்கிலீஷில் கால் ஸி நே ஷன்-என்று பேர்.

Drying or Exsiccation.—பொரித்தல்—படிகாரம், கார்பொ னேட் ஆவ் ஸோடா Carbonate of Soda) முதலிய பதார்த்தங்களை எரித்து, அவைகளில் இருக்கும் நீரைப் போக்கிக்கொள்ளும் பாகத்துக்கு, இங்கிலீஷில்-ட்ரை யிங்-அல்லது எக் சிக் கே ஷன்-என்றுபேர்.

**Distillation.**—வாலையிலிட்டிரக்குதல்—மருந்துகளை வாலையில்போட்டு எரித்துப் பட்டியில் இறக்கிக்கொள்ளும் பாகத்துக்கு, இங்கிலீஷில்-டிஸ் டில் லே ஷன்-என்று பேர். இந்த பாகத்தினால், ஜலம் ஆவி ரூபமாகி மறுபடியும் நீராகிவிடும். இவ்வித பாகத்தினால் வடித்துக்கொள்ளும் தீநீர்களுக்கு, இங்கிலீஷில் டிஸ் டில் ட் வா டர்ஸ் Distilled Waters) என்று பேர். இந்தபாகத்தில், அவுஷதத்தைப் போட்டு அடுப்பிலேற்றி எரிக்கும் பாலைக்கு, இங்கிலீஷில் ரி டார்ட் Retort) என்றும், ஆவி நீர் இறங்கும் குழலுக்கு ஒரம் Worm) என்றும், தீநீரை பிடித்துக் கொள்ளும் பட்டிக்கு, ரிஸீவர் Receiver) என்றும் பேர். ஜலம், காடி முதலியவைகளை இந்தப்பாகமாய்ச் சுத்திசெய்து கொள்ளப்படும். திராவகங்களையும் இறக்கிக்கொள்ளப்படும்.

**Rectification.**—சாராயங்களை இரட்டித்து வாலையில் இட்டு இறக்குதல்—சாராயங்களை இரண்டு மூன்று விசை வாலையிலிட்டு வடித்துக்கொள்ளும்பாகத்துக்கு, இங்கிலீஷில்-ரெக் டி பி கே ஷன்-என்று பேர். இவ்விதமாக இரட்டித்து வடித்துக் கொண்ட சாராயங்களுக்கு, இங்கிலீஷில் ரெக் டி பைட் ஸ்பிரிட்ஸ் Rectified spirits) என்று பேர்.

**Sublimation.**—பதங்கித்தல்—கற்பூரம், கந்தகம், ரஸகற்பூரம், சவ்வீரம் முதலிய சரக்குகளை பதங்கித்துக்கொள்ளும் பாகத்துக்கு, இங்கிலீஷில்-ஸப் ளி மே ஷன் என்று பேர். சரக்குகளைப் பதங்கித்தால் அவைகளிலிருக்கும் தோஷங்கள் நீங்கிச் சுத்தியாகும்.

**Precipitation.**—அடியில் படியவைக்குதல்—ஜலத்தில் கரைந்திருக்கும் பதார்த்தத்தை அடியில் படியும்படிச்செய்யும் பாகத்துக்கு, இங்கிலீஷில்-பிரி ஸி பி டே ஷன்-என்று பேர். ஜலத்தில் கலந்திருக்குஞ் சேற்றை, தேத்தாங்கொட்டையை இழைத்துத் தெளியவைப்பதினால், சேறு அடியில்படிதல்தான் பிரி ஸி பி டே ஷன் என்பது.

**Crystallization.**—உப்பு கட்டியாக பூற்குதல்—ஜலத்தில் கரைந்திருக்கும் உப்பு மறுபடியும் சுவாபீக ரூபமாய் கட்டியாகும் தன்மைக்கு, இங்கிலீஷில்-கிரிஸ் டால் லி ஸே ஷன்-என்று பேர். படிகாரம், பொட்டிலுப்பு, கறி உப்பு முதலியவைகளில் எதையாவது, இவ்விதமாக பூற்கவைத்துக் கொள்ளலாம். உப்பினங்களுக்கு அவைகளுடைய பூர்வரூபம் மறுபடியும் வருகிற குணம் சுவாபீகமாய் உண்டு. உப்புகளுடைய அணுக்களில் கலந்திருக்கும் ஜலத்துக்கு இங்கிலீஷில் வாடர் அவ் கிரிஸ் டா லி ஸே ஷன் Water of Crystallization) என்று பேர். உப்புகளை வறுத்தால் அணுக்களில் கலந்திருக்கும் ஜலம்போய் தூளாகும். சில உப்புகள் காற்றுபட்டால் அணுக்களிலிருக்கும் ஜலம் காற்றில் கலந்துபோய் தூளாகும். இவை களுக்கு. இங்கிலீஷில் எப்ளோ ரெஸ ஸெண்ட் ஸால்ட்ஸ் Efflorescent Salts) என்றுபேர். சில உப்புகள் காற்றுபட்டால் காற்றிலிருக்கும் ஜலத்தை கிரகித்து நீராகும். இவைகளுக்கு, இங்கிலீஷில் டெ லி குவெஸ் ஸெண்ட் ஸால்ட்ஸ் Deliquescent Salts) என்று பேர். உப்புகளை

ஜலத்தில் கரைத்து மறுபடியும் பூர்க்கும்படிச் செய்தால், உப்புகள் தோஷம் நீங்கிப் பரிசுத்தமாகும்.

PHARMACEUTICAL PREPARATIONS.—பிரயோகித்தலுக்கு யோக்கியமான அவுஷத ரூபங்களும், அவைகளைப் பாகப்படுத்துகிற கிரமங்களும்.

பிரயோகித்தலுக்குப் பாகப்படுத்திய அவுஷதங்களின் ரூபங்கள் அனேக முண்டு, அவைகளை இதன் அடியில் முறையே விவரித்திருக்கின்றன. ஜீவரக்ஷாமிர்தம், சிகிச்சா சார சங்கிரகம் என்னும் தமிழ் ஸாஸ்திரங்களில் ரோகமாகிய சத்துருவை ௬௰௨ - வித சிகிச்சையாகிய ஆயுதங்களைக் கொண்டு வெல்லவேண்டியதென்று சொல்லி இருப்பதில், ௬௰௨ - வித சிகிச்சை என்பதற்குப் பயன், அவுஷதங்களின் வேறு வேறான ரூபங்களும், ரோகங்களுக்குச் செய்யும் வேறு வேறான சிகிச்சைகளும் என்று எண்ணவேண்டியது.

FLUID FORMS OF MEDICINES.—ஜல ரூப அவுஷிதங்களின் விவரம்.

Mixtures.—அடிக்கடிச்சாப்பிடப் பலவித மருந்துகளைக் கூட்டி ஜலரூபமாகச் செய்துகொண்ட அவுஷதத்துக்கு, இங்கிலீஷில் - மிக்ஸ்சர் Mixture) என்று பேர். இந்தமருந்தை இரண்டு நாளைக்கு வேண்டிய அம்மாத்திரமே செய்து கொள்ள வேண்டியது; அதிகமாய் செய்துகொண்டால் கெட்டுப்போகும். ஒரு வேளைக்கு, ௨ - ஆழாக்கு வீதம், தினத்துக்கு ௩ - தடவை சாப்பிடவேண்டிய மருந்து, இரண்டு நாளைக்கு ௧௨ - ஆழாக்கு வேண்டியிருக்கும், அவ்வளவே செய்துகொள்ள வேண்டியது. ஜலத்தில் கரையாத சில மருந்துகளை ஜலத்தில் சேர்த்து மிக்ஸ்சர் செய்தால், அதைச்சாப்பிடும்போது குலுக்கிச் சாப்பிட வேண்டியது. ஜலத்தில் கரையாத பதார்த்தங்களை அரைக்கும்போது, கொஞ்சங் கொஞ்சமாய் ஜலம் விட்டு அரைத்துக்கொள்ள வேண்டியது.

Draughts.—ஒருவேளை சாப்பிட ஜலரூபமாகச்செய்த அவுஷதத்துக்கு, இங்கிலீஷில்-டிரா ஃப்ட்-என்று பேர். கூட்டிக் கொஞ்சநேரம் வைத்திருந்தால் கெட்டுப்போகிற அவுஷதங்களையும், ஜலத்தில் கரையாமல் அடியில்படிகிற அவுஷதங்களையும், அப்போதைக் கப்போது கூட்டிக் கொடுக்கவேண்டியது. ஒரு வேளைக்குச் சாப்பிடுகிற ஜலரூப மருந்தின் அளவு, ௧௨ - அவுன்ஸ்அல்லது சுமார், ௨ - ஆழாக்குக்கு அதிகமாய் இருக்கக்கூடாது.

Drops, *Guttæ.*—துளிகள்—திராவகங்கள், சாராயப்பாவனத் திரவங்கள் முதலியவைகளைத் துளிக்கணக்காய் ஜலத்தில் விட்டுச் சாப்பிடவேண்டியது.

Emulsions,—பாயசம்போல் குழம்பாயாவது, பாலைப் போலாவது, செய்து கொண்ட அவுஷதத்துக்கு, இங்கிலீஷில் - இமல்ஷன் - என்று பேர். எண்ணெய் ஜலத்துடன் சேராது, ஆல்கெலீஸ் Alkalies) என்னும் க்ஷார இனத்தில் கொஞ்சம் சேர்த்தால், எண்ணெய் உப்புடன் சேர்ந்து சவுக்காரமாகி, ஜலத்தில் கலந்துவிடும். மீன் எண்ணெய், ஆமணக்கு எண்ணெய், இவைகளோடு, விளா

ம்பிசின் பாகு, பால், முட்டையின் கரு, சருக்கரை இவைகளில் எதையாவது சேர்த்து, இமல்ஷனாகச்செய்து கொடுக்கலாம்.

Gargles.—வாய் கொப்புளிக்கத் துவர்ப்பு மருந்துகள் கலந்து செய்யும் ஜலத்துக்கு, இங்கிலீஷில்-கார் கில்-என்று பேர். சுமார், ஌ - ஆழாக்கு ஜலத்தை வாயில் விட்டுக்கொண்டு, தலையை பின்னுக்குச்சாய்த்து ஜலத்தை கொப்புளித்து, கொஞ்சநேரம் வாயில் வைத்திருந்து உமிழ்ந்து விடவேண்டியது. இதைக் கொஞ்சமாவது விழுங்கக் கூடாது. வெண்காரத்தைத் தேனில் மத்தித்து வாயில் தடவியும், படிக்காரத்தை ஜலத்தில் கரைத்தும், கடுக்காய் - மாசக்காய் - வேலம்பட்டை இவைகளில் எதையாவது கஷாயமாகச் செய்தும், உபயோகப்படுத்தப் படும். இதை, உ- மணி நேரத்துக்கு ஒருதரம் உப யோகிக்க வேண்டியது.

Injections.—பீச்சாங்குழலால் நீர்த்தாரை, குய்யம், விரணம், முதலிய வைகளில் பிரயோகிக்கும் ஜலரூப அவுஷதங்களுக்கு, இங்கிலீஷில்-இன் ஜெக் ஷன்ஸ் - என்று பேர். பீச்சாங்குழல், கண்ணாடியால் செய்ததாய் இருக்கவேண்டியது.

Clysters, *Enemata*.—பீச்சாங்குழலால் ஆஸனத்தில் பிரயோகிக்கும் ஜலரூப அவுஷதங்களுக்கு, இங்கிலீஷில்-இனி மெ டா-அல்லது -கிளிஸ் டர்ஸ்-என்று பேர். இப்படிப்பிரயோகித்த அவுஷதத்தை ஆஸனத்தில் சற்றுநேரம் நின்று இருக்கும்படி வைத்திருக்கவேண்டியது.

Lotions or Washes.—கிலேதங்கள்—நோவோடு கூடிய வீக்கம், ரணம்முதலியவைகளை ஸௌஸ்தப்படுத்தும் பொருட்டு, அவைகளின்மேல் துணியை மடித்துப்போட்டு அடிக்கடி நனைத்துக்கொண்டிருக்க, படிக்காரம், நவக்ஷாரம் முதலிய மருந்துகளைக் கூட்டிச்செய்யும் ஜலத்துக்கு இங்கிலீஷில்-லோ ஷன்-என்று பேர்.

Collyria, *Eye Lotions*.—நேத்திரரோகத்துக்கு உபயோகிக்கும் கிலேதத்துக்கு இங்கிலீஷில்-ஐ லோ ஷன்-என்று பேர்.

SOLID FORMS OF MEDICINES.—கெட்டி ரூப அவுஷதங்களின் விவரம்.

Powders.—சூரணங்கள்—வேர், பட்டை முதலியவைகளை இடித்து வஸ்திரகாயஞ்செய்த சன்னமான தூளுக்கு, இங்கிலீஷில்-பவு டர்-என்று பேர். பொன், வெள்ளி, தாம்பிரம், நாகம், முதலிய லோகங்களில் எதையாவது புடத்தில் வைத்து நீற்றி அது வெள்ளை நிற மாய் இருந்தால் பஸ்மம் என்றும், சிவந்த நிறமாயிருந்தால் சிந்தூரம் என்றும், சொல்லப்படும். கலவைச்சூரணம் செய்யும் போது, சரக்குகளைத் தனித்தனியாக இடித்துச் சூரணித்து, பிறகு அவைகளை ஒன்றாய்ச் சேர்த்து இரண்டு மூன்று விசை வஸ்திரகாயம் செய்தால் அதில்சேர்ந்து இருக்கும் சரக்குகள் ஒன்றோடொன்று நன்றாய்க்கலந்து போகும். எப்போதும், சூரணம், பஸ்மம், சிந்தூரம், முதலியவைகளைசன்னமாய் அரைத்துக்கொள்ள வேண்டியது. பருவில்லாத சரக்குகளை ஜலத்திலும், பருவுள்ள சரக்குகளைச் சருக்கரை, நெய், தேன், வெண்ணெய் இவைகளில்எதிலாவது, அனுபானஞ் செய்து கொடுக்கவேண்டியது. குழந்தைகளுக்கு, வெகுட்டலான சூரணங்களைக் கொடுக்கலாகாது.

**Pills.**—மாத்திரைகள்—பலசரக்குகளைச் சேர்த்துச் செய்யும் மாத்திரைகள் ஒவ்வொன்று ௫-கிறேன் இடைக்கு அதிகப்படாமல் ஒரோராசியாய் இருக்கவேண்டியது. பருமனில் ஒருமாத்திரை, பட்டாணிக்கு அதிகமாய் இருக்கலாகாது. மெத்தப் பெரிசாய் இருந்தால் விழுங்குவது வருத்தம். குனைன் Quinine,) மாக்னீஷியா Magnesia,) முதலிய பளுவில்லாத சரக்குகளை மாத்திரை செய்தால் பெரிதாகும்; ஆகையால் ஜலத்தில் கரைத்துக் கொடுக்கவேண்டியது. ரஸபஸ்மம் முதலிய பளுவுள்ள சரக்குகளை மாத்திரை செய்தால் சிறிதாய் இருக்கும், ஆகையால் சரியான மிதத்துக்கு வரும்படி சாதம், மாவு, ரொட்டி, அதிமதுரத்தூள், குல்கந்து இவைகளில் எதையாவது சேர்த்துமாத்திரை செய்துகொள்ள வேண்டியது. மாத்திரைகளுக்குமேல் தங்கரேக்கு, வெள்ளிரேக்கு, ஜிலடீன் என்னும் பசை, இவைகளில் எதையாவதைக்கொண்டுகவசம் செய்துகொள்ளலாம். மாத்திரையை எப்படிசெய்து கொண்டபோதிலும், குணம் மாருது.

**Pill Masses.**—மெழுகுகள்—பலசரக்குகளைச் சேர்த்து மெழுகுபதமாய்ச்செய்துகொள்ளும் அவுஷதத்துக்கு, இங்கிலீஷில்-பில் மாஸ்-என்று பேர். சாதாரணமாய், இங்கிலீஷ் முறையாய்ச் செய்த சிலமெழுகுகள், ௫-கிறேன் இடை, ஒருவேளைக்குக் கொடுக்கும் அளவுள்ளதாக இருக்கும். மெழுகுகள் கெட்டுப்போகாமல் நாள்பட இருக்கும். சிலமெழுகுகளின் பேர்கள் இதன் அடியில் கூறப்படும்:—

| | | |
|---|---|---|
| மூஷாம்பரக் கலவை மெழுகு | கம்பவுன் பில் ஆவ் ஆலோஸ் | Compound Pill of Aloes. |
| கலிங்காதிக் கலவை மெழுகு | கம் பவுன் பில் ஆவ் காலோஸின்த் | Compouud Pill of Colocynth. |
| அயக்கலவை மெழுகு | கம் பவுன் பில் ஆவ் ஐரன். | Compound Pill of Iron. |
| ரேவல் சின்னிக் கலவை மெழுகு | கம் பவுன் பில் ஆவ் ரூபார்ப் | Compound Pill of Rhubarb. |
| சூத மெழுகு | பில் ஆவ் மெர்க்கியுரி | Pill of Mercury. |

**Suppositories.**—ஆஸனத்தில் பிரயோகிக்க மாத்திரை ரூபமாகச்செய்து கொள்ளும் மருந்துக்கு இங்கிலீஷில்-ஸப் பாஸிடொ ரி-என்று பேர். இது சாப்பிடும் மாத்திரையைப் பார்க்கிலும் பெரிதாய் இருக்கும். சவுக்காரத்துடன் அபினி, கர்ப்பூரம், கோனியம் Conium) என்னும் சரக்கு, இவைகளில் எதையாவது சேர்த்துச் செய்வது வழக்கம். மூத்திரப்பை, ஆஸனம், நீர்த்தாரை, இவைகளில் எதிலாவது எரிச்சல், நோய் இருக்கில், இந்த சிகிச்சையால் தணியும்.

**Conserves.**—அபூபங்கள்—பழங்களும், காய்களும், கெடாமல் நாள்பட இருக்கும்படி தேனிலாவது, பாகிலாவது ஊறவைத்திருக்கும் அபூபங்களுக்கு, இங்கிலீஷில்-கன் ஸர் வ்ஸ்-என்று பேர். இவைகளைக் காற்றுப்படாமல் வைத்திருக்கவேண்டியது.

**Confections.**—லேகியங்கள்—சரக்குகளைச் சூரணித்து, சருக்கரைப் பாகு அல்லது தேன் விட்டு மிஸ்ரமித்துச்செய்த லேகியத்துக்கு இங்கிலீஷில்-கன் பெக்ஷன்-என்று பேர். நெய்விட்டுச் செய்தமருந்துக்கு கிருதம் என்று பேர்.

**Plasters.**—பிளாஸ்திரிகள், அல்லது செட்டிக் களிம்புகள்—ரணங்களையும், நோவுகளையும் சொஸ்தப்படுத்த, துணியிலாவது தோலிலாவது தடவி மேல் போடும் செட்டிக்களிம்புக்கு, இங்கிலீஷில்-பிளாஸ்டர்-என்று பேர். அபினி, வங்கம், ரசம், இவைகளுடைய களிம்பை, தேகத்தின் மேல் போட்டால், உள்ளுக்குச்சென்று, அந்தந்த மருந்துக்குடைய குணத்தைக்காட்டும். சில பிளாஸ்திரிகளின் பேர்கள் இதன் அடியில் கூறப்படும் :—

எரிவண்டு பிளாஸ்திரி..பிளாஸ்டர் ஆவ் கெந்தா ரி டிஸ் Plaster of Cantharides.
அயப் பிளாஸ்திரி.....பிளாஸ்டர் ஆவ் ஐரன் ... ...Plaster of Iron.
ரஸப் பிளாஸ்திரி.......பிளாஸ்டர் ஆவ் மெர்க்கியுரி......Plaster of Mercury.
அபினிப் பிளாஸ்திரி. .பிளாஸ்டர் ஆவ் ஒபியம் ... ...Plaster of Opium.
வங்கப் பிளாஸ்திரி.....பிளாஸ்டர் ஆவ் லெட் ... ...Plaster of Lead.
குங்கிலியப் பிளாஸ்திரி.பிளாஸ்டர் ஆவ் ரிஸின்......Resin or Sticking Plaster.

**Ointments.**—இளகியகளிம்புகள்—மெழுகு, ஆட்டுக்கொழுப்பு இவைகளில் எதையாவது சேர்த்துச்செய்யும் களிம்புக்கு, ஸிரோட் Cerate) என்றும், பன்றி நெய் சேர்த்துச் செய்யும் களிம்புக்கு-ஆன்ட் மென்ட்-என்றும் இங்கிலீஷில் பேர். இவ்விரண்டும், ரூபத்திலும் குணத்திலும் பேதப்படாது. ரணங்களை ஆற்ற இவைகளை மேலுக்குப் போடப்படும். ரசம், வங்கம், ஐயோடயின் இவைகளுடைய இளகியகளிம்பைச் சருமத்தின்மேல் தேய்த்தால், உள்ளுக்குச்சென்று அந்தந்தமருந்துக்கு உரிய குணத்தைக்காட்டும். இளகிய களிம்பை மேலுக்குத்தேய்க்குதலுக்கு (லேபனம்), இங்கிலீஷில் இனங்ஷன் Inunction) என்று பேர். சில இளகிய களிம்புகளின் பேர்கள், இதன் அடியில் கூறப்படும் :—

எரிவண்டு இளகியகளிம்பு..ஸிரோட் ஆவ் கெந் தா.ரி டெஸ்.Cerate of Cantharides.
மீன்கொழுப்பு இளகியகளிம்பு....ஸ்பர் மெ ஸி டி ஸிரோட்...Spermaceti Cerate.
ரசக்கலவை இளகியகளிம்பு. கம் பவுன் ஸி ரோட் ஆவ் மெர்க்கியுரி Compound Cerate of Mercury.
குங்கிலிய இளகியகளிம்பு...ஸிரோட் ஆவ் ரிஸின்............Cerate of Resin.
ரச இளகியகளிம்பு...ஆன்ட் மென்ட் ஆவ் மெர்க்கியு ரி...Ointment of Mercury.
அபினி இளகியகளிம்பு......ஆன்ட்மென்ட் ஆவ் ஒபியம்...Ointment of Opium.
கந்தக இளகியகளிம்பு......ஸல்பர் ஆன்ட் மென்ட்... ...Sulphur Ointment.

**Liniments.**—பூசுத்தயிலங்கள்—நோவு இருக்கும் இடத்தில் தேய்க்க அவுஷதங்களைச்சேர்த்து செய்த தயிலத்துக்கு இங்கிலீஷில்-லினிமென்ட்-என்று பேர். தயிலததில் சேரும் அவுஷதங்களின் குணமே, தயிலத்துக்கும் உண்டு. சில தயிலங்கள் உஷ்ணத்தை உண்டாக்கும் ; சிலது கொப்புளிக்கச்செய்யும் ; சிலது நோவைத் தணிக்கும். சவுக்காரம் சேர்ந்த பூசுத்தயிலத்துக்கு, சருமத்தை மெதுவாக்கி பூசும் இடத்தைத் தளர்ச்சிசெய்கிறகுணம் உண்டு. தயிலங்களைத் தடவி சூடு எழும்பும்படி தேய்க்கவேண்டியது. சிலதயிலங்களின் பேர்கள் இதன் அடியில் கூறப்படும் ;—

கர்ப்பூரப் பூசுத் தயிலம்...லினிமென்ட் ஆவ் காம்பர்.Liniment of Camphor.
அபினிப் பூசுத் தயிலம்.....லினிமென்ட் ஆவ் ஒபியம்.Liniment of Opium.
சவுக்காரப் பூசுத் தயிலம். .ஸோப் லினிமென்ட்.. ...Soap Liniment.

**Embrocations.**—லேபனங்கள்—மேற்சொல்லிய தயிலங்களுக்கும், இவைக ளுக்கும் பேதமில்லை.

**Blisters.**—துவக்ஸ்பொடகாரிகள்—கொப்புளிக்கச்செய்து புண்ணாக்குகிற மருந்துகளுக்கு, இங்கிலீஷில்-பிளிஸ் டர்ஸ்-என்று பேர். இந்தக் களிம்பை கடிதாசி மேலாவது, தோல் மேலாவது தடவி நோவு இருக்கிற இடத்தில் போட்டு, பரவ ஒட்டாமல் செய்யவேண்டியது.

**Fomentations.**—ஒற்றிடங்கள், காய்ப்பிடங்கள், பொட்டணங்கள்—ஒற்றிடம்போடப் பாகப்படுத்திய வெந்நீர் முதலிய வஸ்துக்களுக்கு இங்கிலீஷில்-போமென்டேஷன்-என்று பேர். நோவு இருக்கிற இடத்தில் ஜலம், சாணி, இலை, இவைகளைக்கொண்டு ஒற்றிடம் போட்டால், அவைகளின் சுடுகையும் ஈரமும் பட்டு, நோவு சமனமாகும். மணல், சாம்பல், தவிடு, இவைகளைவறுத்து ஒற்றிடம் போட்டால், சுடுகைமாத்திரம்படும்.

**Poultices or Cataplasmata.**—பதவாடைகள்—விரணச்சிகிச்சையில், மேலுக்குப்போட மாவு, சாதம், இவை முதலியதுகளில் எதையாவது பாகப்படுத்திய பதவாடைக்கு, இங்கிலீஷில்-போல் டீஸ்-என்று பேர். சிலபதவாடைகளின் பேர்கள் இதன் அடியில் கூறப்படும் :—

அடுப்புக்கரிப் பதவாடை...சார் கோல் போல்டீஸ்...Charcoal Poultice.
கள்ளுப் பதவாடை.........டா டி போல்டீஸ்.........Toddy Poultice.
அலிஸிவிரைப் பதவாடை. .லின் ஸீட் போல்டீஸ்....Linseed Poultice.
கடுகுப் பதவாடை.........மஸ் டர்ட் போல் டீஸ்...Mustard Poultice.

**Decoctions.**—கஷாயங்கள்—வேர், பட்டை, இலை, முதலியவைகளில் எதையாவது ஜலத்தில்போட்டு, சத்து ஜலத்தில் இறங்கும்படியாக முறையாய்க் காய்ச்சிக்கொள்ளும் கஷாயத்துக்கு இங்கிலீஷில்-டிகாக் ஷன்-என்று பேர். கஷாயங்களைப் பதமாய்க்காய்ச்சவேண்டியது, அதிகரூடுபடக்காய்ச்சினால் கெட்டுப்போகும். கஷாயங்களைக் காய்ச்சினபிறகு கொஞ்சம் சூடாயிருக்கும்போதே வடிகட்டிக்கொள்ள வேண்டியது ; குளிர்ந்து விட்டால், அதில் இருக்கும் சத்து அடியில் படிந்துவிடும். பக்குவப்படுத்திக்கொண்ட கஷாயங்களை எப்போதும் கலக்கிச்சாப்பிடவேண்டியது. பலசரக்குகளைச் சேர்த்துக் கஷாயம் செய்யும்போது, நேரப்பட வெந்து சத்து இறங்கும் சரக்குகளை முதல் ஜலத்தில் போட்டு போதுமான நேரம் காய்ந்தபிறகு, சீக்கிரத்தில் வெந்து சத்து இறங்கும் சரக்குகளைச் சேர்த்துப் பாகமாய்க் காய்ச்சி வடிகட்டிக்கொள்ள வேண்டியது. ரேவல்சின்னி, நில ஆவாரை, இவைகளைச் சூடு உறைக்கக் கஷாயமாகக் காய்ச்சினால் கெட்டுப் போகும். ரோஜாப்பூ, லவங்கம், சீமை சாமந்தில் பூ, சீரகம், ஓமம், சோம்பு முதலியவைகளில் வாலெடயில் பிரின் ஸி பில்ஸ் volatile principles) என்னும் பறந்து போகும் சத்து இருப்பதால் கஷாயமாகக் காய்ச்ச உதவாது. கஷாயம் சுண்டக் காய்ச்சினால், மருந்துகளில் இருக்கும் சத்து ஜலத்தில் அதிகமாய் இறங்கிக் கஷாயம் காட்டாய் இருக்குமென்று நினைக்கிறார்கள், அதுசரியல்ல ; அதனால் கஷாயம் கெட்டு மருந்துக்குடைய குணம் போய்விடும். கஷாயங்களை ஒருவேளை

க்கு - ௧ ℥ முதல் - ௨ ℥ அல்லது சுமார் ௬ - முதல் - ௮ - ஆழாக்கு வரையில் பெரியவர்களுக்குக் கொடுக்கலாம். குழந்தைகளுக்கு, இந்த அளவில் - ௮ - ல் அல்லது - ௰௬ - ல் ஒருபங்கு கொடுக்க வேண்டியது. இந்தக் கிரமம் தெரியாமல், கஷாயங்களைக் குழந்தைகளுக்குமெத்தக் கொடுத்துக்கொண்டுவரும் வழக்கம் கெட்டது. சிலகஷாயங்களின் பேர்கள் இதன் அடியில் கூறப்படும் :—

| | | |
|---|---|---|
| மூஷாம்பரக் கலவைக்கஷாயம். | கம் பவுன் டிகாக் ஷன் ஆவ் ஆலோஸ் | Compound Decoction of Aloes. |
| கஞ்சித்தண்ணீர்... ......... | டி காக் ஷன் ஆவ் ஸ்டார்ச்... | Decoction of Starch. |
| ஸிங்கோனு பார்க்கு கஷாயம்... | டி காக் ஷன் ஆவ் பார்கு... | Decoction of Bark. |
| மாசக்காய் கஷாயம்...... | டி காக் ஷன் ஆவ் கால்ஸ்... | Decoction of Galls. |
| மாதுளம் வேர் கஷாயம்.... | டி காக் ஷன் ஆவ் பம் கிருனேட் | Decoction of Pomegranate. |
| பார்லி அரிசி கஞ்சி.......... | டி காக் ஷன் ஆவ் பார்லி... | Decoction of Barley. |
| போஸ்தக்காய் கஷாயம்.... | டி காக் ஷன் ஆவ் பாப்பி... | Decoction of Poppy. |
| நன்னாரி வேர் கஷாயம். ... | டி காக் ஷன் ஆவ் சார்சபெரில்லா | Decoction of Sarsaparilla. |

**Infusions.**—வெந்நீர் கஷாயங்கள்—வேர், பட்டை, இலைமுதலியதுகளில் எதையாவது வெந்நீரில்போட்டு ஊறவைத்து வடிகட்டிக்கொள்ளும் வெந்நீர் கஷாயத்துக்கு, இங்கிலீஷில்-இன் வ்யூ ஷன்-என்றுபேர். சில சரக்குகளை வெந்நீர்கஷாயம் செய்தாலே குணந் தரும். சிலசரக்குகளின் சத்து குளிர்ந்தஜலத்தில் தாராளமாய் இறங்கும். குளிர்ந்தஜலத்தில் ஊறவைத்துச் செய்கிற கஷாயத்துக்கு, இங்கிலீஷில் கோல்ட் இன்வ்யூ ஷன் Cold Infusion) என்று பேர். புஷ்பங்களிலும் இலைகளிலும், இருக்கும் சத்து சீக்கிரமாயும், பட்டை, சக்கை, வேர், கொடி முதலியவைகளில் இருக்கும் சத்து நேரஞ்சென்றும், வெந்நீரில் இறங்கும். கஷாய இனங்களைத் தீநீரில் செய்துக்கொண்டால் நல்லது. கஷாய இனங்களில் இருக்கும் சத்து சீக்கிரத்தில் அழிகிக் கெட்டுப்போகும், அதுகளை அன்றன்றைக்குத் தேவையானதைச் செய்து கொள்ள வேண்டியது. ௧ - முதல் ௬ - மணிநேரம் வரையில் வெந்நீர் கஷாயமும், ௰ - மினிட் முதல் ௨ - மணி நேரம் வரையில் கஷாயமும் செய்யப் போதுமான காலம். வெந்நீர்க் கஷாயங்களை ௧-முதல் ௨ - ℥ வரையில் பெரியவர்களுக்குக் கொடுக்கலாம். சில வெந்நீர்க் கஷாயங்களின் பேர்களை இதன் அடியில் கூறப்படும் :—

| | | |
|---|---|---|
| ஆரஞ்சிப்பழத்தோல் வெந்நீர்க்கஷாயம் | கம்பவுன் இன்வ்யூ ஷன் ஆவ் ஆரன்ஜ்பீல் | Compound Infusion of Orange peel. |
| கிராம்பு வெந்நீர்க் கஷாயம் | இன் வ்யூ ஷன் ஆவ் குளாவஸ் | Infusion of Cloves. |
| நில வேம்பு வெந்நீர்க் கஷாயம் | இன் வ்யூ ஷன் ஆவ் கிரியேட்டா | Infusion of kreata. |
| நில ஆவாரை கலவை வெந்நீர்க் கஷாயம் | கம்பவுன் இன வ்யூ ஷன் ஆவ் ஸென்னு | Compound Infusion of Senna. |
| ரேவல் சின்னி வெந்நீர்க் கஷாயம் | இன் வ்யூ ஷன் ஆவ் ரூபார்ப் | Infusion of Rhubarb. |

Mixtures.—இங்கிலீஷில்-மிக்ஸ் சர்ஸ்-என்னும் சில மருந்துகளின் பேர்க ளைஇதன் அடியில் கூறப்படும். இவைகளை ௨ முதல் - க - ℥ - அல்லது - க முதல் க௨ ℥, அளவுக்குக் கொடுக்கலாம் :—

விளாம்பிசின் தண்ணீர்.... மிக்ஸ்சர் ஆவ் அக்கேஷியா.Mixture of Acacia.
வாதுமைப்பருப்புத்தண்ணீர்.மிக்ஸ்சர் ஆவ் ஆமண்ஸ்..Mixture of Almonds.
கர்ப்பூரத் தண்ணீர். ......மிக்ஸ்சர் ஆவ் காம்பர். . . .Mixture of Camphor.
சிமைச்சுண்ணாம்புத் தண்ணீர்.மிக்ஸ்சர் ஆவ் சாக்.......Mixture of Chalk.
————————— பிராந்தி மிக்ஸ் சர் ; . . . .Brandy Mixture.

Liquors—ஜெயநீர்கள்—படிக்காரம், சவ்வீரம், பாஷாணம், வங்கம், இவை முதலிய உப்பு இனங்களில் எதாவது கலந்திருக்கும் ஜலத்துக்கு, இங்கிலீஷில் லிகர்-என்றுபேர். இவைகள் தமிழ்வைத்தியர்கள் வழங்கும் ஜெயநீர் என்கிற பதார்த்தத்துக்கு சற்றேறக்குறைய ஒத்து இருப்பதால் இவைகளுக்கு அந்தப்பேர் இடலாச்சுது. சவ்வீரம், பாஷாணம் முதலிய மெத்தக் கொடிய குணமுள்ள பதா ர்த்தங்களின் அளவு மெத்தக்கொஞ்சமாகையால், பரிமாணத்தில், மெத்தக்குறைந் து இருக்கும். ஆகையால்அவைகளை ஜலத்தில் கரைத்துக்கொண்டால், எளிதில் அளவை நிறுக்கிடலாம். அது எப்படி எனில் : ஒருவேளைக்குக் கொடுக்கும் சவ் வீரத்தின் அளவு. ப௨ கிறேன், அந்த அளவை நிறுப்பது மெத்தக்கடினம், பரிமா ணத்தில் அவுஷதமோ அணுவைப்போல் இருக்கும், ஆகையால், க - கிறேன் சவ் வீரத்தை, க - அவுன்ஸ் ஜலத்தில்கரைத்து அதில் - ௩௰ - துளி எடுத்துக் கொண்டா ல் ப௨ - கிறேன் சவ்வீரம் இருக்கும் - இவ்விதமாய் அளவை எளிதில் நிறுக்கிட்டு க்கொள்ளலாம். சில ஜெயநீர்களின் பேர்கள் இதன் அடியில் கூறப்படும் :—

படிக்காரக் கலவை ஜெயநீர்...கம் பவுன் ஸொலூ ஷன் ஆவ் ஆலம்...Compound [Solution of Alum.
நவக்ஷாரவாயு ஜெயநீர் ... ஸொலூ ஷன் ஆவ் அம்மோனியா...Solution of Am- [monia.
காடிக்கார ஜெயநீர்...ஸொ லூ ஷன் ஆவ் நை ட்ரேட் ஆவ் ஸில் வர்...Solution of [Nitrate of Silver.
சுண்ணாம்பு ஜெயநீர்...லைம் வாடர்...Lime Water.
சவ்வீர ஜெயநீர்...ஸொ லூஷன் ஆவ் பைகுளோ ரைட் ஆவ் மெர்க்குயுரி...Solution [of Bichloride of Mercury.

Tinctures.—பாவனத்திரவங்கள்—சாராயத்தில் ஊறவைத்துப் பாகப்படுத்தி க்கொள்ளும் திரவரூப அவுஷதங்களுக்கு; இங்கிலீஷில்-டிங் சர்ஸ்-என்று பேர். பாவனத்திரவங்களில் லாகிரி இருப்பதால், குழந்தை களுக்கு குறைந்த அளவில் கொடுக்கவேண்டியது. குங்கிலியம் (ரோஜனம் Resin) இனத்தைச் சேர்ந்த பதா ர்த்தங்கள் சாராயத்தில் கரையும், ஜலத்தில் கரையாது. பிசின் (கம் Gum) இனத் தைச்சேர்ந்த பதார்த்தங்கள் ஜலத்தில் கரையும், சாராயத்தில் கரையாது. அதற்கு உதாரணம் : கர்ப்பூரக் கலவைப் பாவனத்திரவத்தை Tr. Camph. Co.) ஜலத்தில் சேர்த்தால் சாராயம் ஜலத்துடன் சேர்ந்துவிடும், கர்ப்பூரம் மிதக்கும் ; அத்துடன் கொஞ்சம் தேன் சேர்த்தால், கர்ப்பூரம் ஜலத்தில் கலந்துவிடும். புரூவ் ஸ்பிரிட் Proof Spirit) என்னும் சாராயத்தில் ஜலம் அதிகமாய் இருக்கும். ரெக்டிபைட்

ஸ்பிரிட் Rectified Spirit) என்னும் இரட்டித்து வடித்த சாராயத்தில் ஜலம் குறைந்திருப்பதால் அதிககாரமுள்ளதாய் இருக்கும். குங்கிலியச்சத்து அதிகமாய் இருக்கும் பதார்த்தங்களை, பாவனத் திரவங்களாகச் செய்யும்போது, இரட்டித்து வடித்த சாராயத்தில் செய்ய வேண்டியது. ஜலத்தில் கரையாத சத்துக்கள், சாராயத்தில் கரைந்துவிடும்.

**Spirits.**—பரிமளபதார்த்தங்களைச் சாராயத்தில்கலந்து செய்யும் மருந்துகளுக்கு, இங்கிலீஷில்-ஸ்பிரிட்ஸ்-என்றுபேர். சில பாவனத் திரவங்களின் பேர்களும், ஸ்பிரிட்ஸ் என்னும் அவுஷதங்களின் பேர்களும், இதன் அடியில் கூறப்படும் :—

கரியபோளப் பாவனத் திரவம்...டிங் சர் ஆவ் ஆலோஸ்...Tincture of Aloes.
ஆரஞ்சித் தோல் பாவனத்திரவம்...டிங் சர் ஆவ் ஆரஞ்சி பீல்...Tincture of Orange peel.
பெருங்காயப் பாவனத்திரவம் டிங் சர் ஆவ் ஆஸ்ஸெபெடிடா...Tincture of Assafœtida.
கஞ்சா பாவனத் திரவம் ...டிங் சர் ஆவ் இன்டியன் எம்ப் Tincture of Indian Hemp.
மிளகாய் பாவனத்திரவம்...டிங் சர் ஆவ் காப்பிசியம்...Tincture of Capsicum.
லவுங்கப் பட்டைப் பாவனத்திரவம் டிங் சர் ஆவ் ஸின்னேமன்...Tincture of Cinnamon.
வால் மிளகுப் பாவனத் திரவம் டிங் சர் ஆவ் கியுபெப்ஸ்... .Tincture of Cubebs.
அயப்பாவனத் திரவம்......ஸ்டீல் டிராப்ஸ்... ... ......Steel drops.
குரோசாணி ஓமப் பாவனத்திரவம்..டிங் சர் ஆவ் என்பேன்..Tincture of Henbane.
வெள்ளாத்தி போளப் பாவனத்திரவம் டிங் சர் ஆவ் மர்... .........Tincture of Myrrh.
அபினிப் பாவனத்திரவம் ...டிங் சர் ஆவ் ஒபியம்... ...Tincture of Opium.
சுக்குப் பாவனத்திரவம் ... டிங் சர் ஆவ் ஜின்ஜர்... ...Tincture of Ginger.
கர்ப்பூரக்கல்வைப் பாவனத்திரவம் காம் பவுன் டிங் சர் ஆவ் காம்பர் Compound Tincture of Camphor.
ஏலரிசிக்கலவைப பாவனத்திரவம் கம் பவுன் டிங் சர் ஆவ் கார்டெமம்ஸ் Compound Tincture of Cardamoms.
காசுக்கட்டிப் பாவனத்திரவம் கம் பவுன் டிங் சர் ஆவ் காடிகியு Compound Tincture of Catechu.
ஸிங்கோனா பாவனத் திரவம் கம் பவுன் டிங் சர் ஆவ் பேல் பார்க் Compound Tincture of Pale Bark.
நில ஆவாரைப் பாவனத்திரவம் கம் பவுன் டிங் சர் ஆவ் ஸென்னா Compound Tincture of Senna.
——— ஸ்பிரிட்ஸ் ஆவ் அனிஸீட்...Spirits of Aniseed.
——— ஸ்பிரிட்ஸ் ஆவ் காம்பர். ...Spirits of Camphor.
——— ஸ்பிரிட்ஸ் ஆவ் ஸின்னேமன் Spirits of Cinnamon.
——— ஸ்பிரிட்ஸ் ஆவ் பெப்பர்மின்ட் Spirits of Peppermint.
இரட்டித்து வடித்த சாராயம்.ரெக்டிபைட் ஸ்பிரிட்ஸ். ...Rectified Spirits.
——— புருவ் ஸ்பிரிட் ஆர் வீக் ஆல்கோஅல் Proof Spirits, or weak Alcohol.
——— பிராந்தி. ... ... ..........Brandy.

**Distilled Waters.**—தீநீர்கள்—ஓமம், சோம்பு, லவங்கப்பட்டை, பெப்பர் மின்ட், பன்னீர்ப்பூ, முதலிய பரிமளவாசனையை உடைய பதார்த்தங்களில் எதை யாவது வாலையில் இட்டு இறக்கிக்கொள்ளும் தீநீர்களுக்கு, இங்கிலீஷில்-டிஸ்டில்ட் வா டர்ஸ்-என்றுபேர். பதார்த்தங்களில் இருக்கும் தயிலம் தீநீரில்கலந்திருக்கும். தேவையானபோது, சுத்தஜலத்தில் கொஞ்சம் தயிலத்தை விட்டு நன்றாய்க்கலக்கிக் கொண்டால், தீநீருக்குச் சமானமாய் விடும். தீநீர்களை வேண்டியபோது செய்துகொள்ளக் கூடாமையாலும், செய்துவைத்துக்கொண்டால் சீக்கிரத்தில் கெட்டுப்போகிற படியாலும், தயிலத்தில்கொஞ்சம் வைத்துக் கொண்டிருந்தால் தேவையானபோது தீநீர், செய்து கொள்ளலாம். தீநீர்கள், தீபனத்தை உண்டாக்கும், வாயுவை கண்டிக்கும், குங்கிலியத்தயிலம் Copaiba), மீன் எண்ணெய், ஜாலப், சிற்றாமணக்கு எண்ணெய் முதலியவைகளுடைய வெகுட்டலை நீக்கும். தீநீர்களை - க - முதல் உ - 5 வீதம், பெரியவர்களுக்குக் கொடுக்கலாம். குழந்தைகளுக்கு, வயதுக்குத்தக்கபடி அளவைக்கிரமப்படுத்திக் கொடுக்கவேண்டியது. சில தீநீர்களின் பேர்கள் இதன் அடியில் கூறப்படும் :—

ஆரஞ்சிப்பூத் தீநீர்... ... ...ஆரஞ் ப்ளாவர் வாடர்... ...Orange Flower Water.
லவங்கப்பட்டைத் தீநீர் ...ஸின்னெமன் வாடர்... ...Cinnamon Water.
பெப்பர் மின்ட் தீநீர் ......பெப்பர் மின்ட் வாடர்......Peppermint Water.
பன்னீர்............ .........ரோஸ்வாடர்......... ......Rose Water.

**Syrups.**—பாகுகள், ரசாயனங்கள், ஷர்பத்கள்—சில வருஷங்களுக்கு முன், ரசாயனமாகச் செய்தமருந்துகளை உபயோகப் படுத்தினதுபோல் இப்போது அவைகளை மெத்த உபயோகப் படுத்துகிறதில்லை. நமது தேசம் அதிக உஷ்ணமாகையால், ரசாயனங்கள் சீக்கிரத்தில் புளித்துக் கெட்டுப்போகும். ஆகையால் அவைகளைச் செய்து நாள்பட வைத்திருக்க உதவாது. உஷ்ணம் - ருரு - டிக்கிரிக்கு அதிகமானால், ரசாயனங்கள் கெட்டுப் போகும். சிலபாகுகளுக்குநிறம்மாத்திரம் உண்டு ; சிலபாகுகளுக்கு அதில் சேர்ந்திருக்கும் அவுஷதத்தின்குணம் இருக்கும். குழந்தைகளுக்குக் கொடுக்கத் தகுதியான பாகுகளைச்செய்துகொள்ளுவதும் உண்டு. சில பாகுகளின் பேர்கள், இதன் அடியில் கூறப்படும் :—

ஆரஞ்சிப்பழத் தோல் பாகு...ஸிரப் ஆவ் ஆரஞ் பீல்......Syrup of Orange peel.
குங்குமப்பூ ரசாயனம்... ......,, ,, ஸாப்ரன்... ... ...,, ,, Saffron.
நன்னாரி வேர்ப் பாகு... .... ...,, ,, இண்டியன் ஸார்ஸ பெரில்லா ...,, ,, Indian Sarsaparilla.
போஸ்தக்காய்ப் பாகு... ... ...,, ,, பாபீ... ... ... ,, ,, Poppy.
ரோஜாப்பூப்பாகு...... .........,, ,, ரோஜ்... ... ...,, ,, Rose.
நில ஆவாரைப்பாகு... ... .... ,, ,, ஸென்னா... ... ,, ,, Senna.
சுக்குப் பாகு......... ... .......,, ,, ஜின்ஜர்... ......,, ,, Ginger.

**Treacle, Theriaca.**—வெல்லப்பாகு—இது மலத்தைக்கழிக்கும், இருமலை த்தணிக்கும். இதை லேகியங்களோடு சேர்க்கப்படும். இது எப்போதும் ஈரமாகவே இருப்பதால், லேகியங்கள் உலராமல் மெழுகுபதமாகவே இருக்கும். தமிழ் வைத்தியர்கள் பனைவெல்லத்தைச் சேர்ப்பது வழக்கம். ஜலத்தில் மிஸ்ரமிக்காமல் அடியில் படிந்து விடுகிற மருந்துகளோடு இதைச்சேர்த்தால், ஜலத்தில் கலந்துவிடும்.

Oils.—தயிலங்கள்—வித்துகளில் இருக்கும் எண்ணெயை வாலையிலிட்டாவது, செக்கில் ஆட்டியாவது எடுக்கப்படும். வேர், பட்டை, பூ, மொக்கு, விதை இவை முதலியவைகளில் இருந்து தயிலம் இறங்கும். காற்றில்பறந்து போகிற தயிலங்களுக்கு, வா லெ டைல் Volatile) அல்லது எஸ்ஸென் ஷல் ஆயில்ஸ் Essential Oils) என்றும், சிற்றுமணக்கு எண்ணெய் முதலியகாற்றில் பறந்துபோகாமல் இருக்கும் எண்ணெய்களுக்கு, பிக் ஸெட் ஆயில்ஸ் Fixed Oils) என்றும் இங்கிலீஷில் பேர். வாலெடையில் ஆயில்ஸ் என்றும் சில தயிலங்களின் பேர்களை, இதன் அடியில் கூறப்படும் :--

பெப்பர்மின்ட் தயிலம் ...ஆயில் ஆவ் பெப் பர் மின்ட் } Oil of Peppermint.
கிராம்புத்தயிலம்.......... ,, ,, குளோவ்ஸ்...... ,, Cloves.
லவங்கப்பட்டைத் தயிலம்.. ,, ,, ஸின்னெமன் ... ,, Cinnamon.
ஜாதிக்காய்த் தயிலம்....... ,, ,, நட்மெக்... ... ,, Nutmeg.
சோம்புத் தயிலம்........... ,, ,, அனிஸீட் ...... ,, Aniseed.
அத்தர்...... ......... ...... ரோஜ் ஆயில் ............Rose Oil.

Expressed Oils.—செக்கில் ஆட்டி எடுக்கும் எண்ணெய்களுக்கு இங்கிலீஷில்-எகிஸ் பிரஸ்ட் ஆயில்ஸ்-என்றுபேர். இந்த இனத்தில் சேர்ந்த சில எண்ணெய்களின் பேர்களை இதன் அடியில் கூறப்படும் :--

வாதுமைப்பருப்பு எண்ணெய்..ஆயில் ஆவ் ஆமண்ட்ஸ் ...Oil of Almonds.
குங்கிலியத் தயிலம்...............ஆயில் ஆவ் கொ பே பா...Oil of Copaiba.
ஆமணக்கெண்ணெய்..............காஸ்டர் ஆயில்......... ...Castor Oil.
நேர்வாளத் தயிலம்......... ......குரோ டன் ஆயில்.........Croton Oil.

தமிழ்முறையில் குடித்தயிலம், முழுக்குத்தயிலம், பூசுத்தயிலம், எனப் பலவிததயிலங்களுண்டு. அவைகளைச் செய்கிறவிதம், தமிழ் வாகடங்களில் காணலாம். சில தயிலங்களின் பேர்களை, இதன் அடியில் கூறப்படும் :--

| | |
|---|---|
| கலிங்காதிக் குடித்தயிலம். | அஸ்திசர்ணிகைக் குடித்தயிலம். |
| வச்சிரபீஜத் தயிலம். | கொம்பரக்குத் தயிலம். |
| அரக்குச்சந்தனாதித் தயிலம். | நாகராதித் தயிலம். |

Extracts.—சத்து, (திருதி ?)—தாவரபதார்த்தங்களின் சுரசத்தை, வெய்யிலில் ஆவது, அனலில் ஆவது வைத்து, மெழுகு பதமாகச் செய்துகொண்ட அவுஷதங்களுக்கு, இங்கிலீஷில்-எகிஸ் டிராக்ட்ஸ்-என்றுபேர். ஜலம், சாராயம் இவைகளில் ஊறவைத்தாவது, கஷாயஞ் செய்தாவது, மூலிகைகளில் இருக்கும் சத்தை எடுத்துக்கொள்ள வேண்டியது. குங்கிலிய இனத்தைச் சேர்ந்த பதார்த்தங்களைச்சாராயத்தில் ஊறவைத்து, சத்தை எடுத்துகொள்ள வேண்டியது. ஜலத்தில் ஊறவைத்து எடுக்கும் சத்துக்கு, வாட்ரி எகிஸ் டிராக்ட் Watery extract) என்றும், சாராயத்தில் ஊறவைத்து எடுக்கும் சத்துக்கு, ஸ்பிரிட் டியு அஸ் எகிஸ் டிராக்ட் Spirituous extract) என்றும், காடியில் ஊறவைத்து எடுக்கும் சத்துக்கு, ஆஸி டிக் எகிஸ் டிராக்ட் Acetic extract) என்றும், குழம்பாய் இருக்கும் சத்துக்கு, லி குவிட் எகிஸ்டிராக்ட் Liquid or Fluid extract) என்றும், இங்கிலீஷில் பேர். நன்னாரிவேர் சத்து குழம்பாய் இருக்கும். சத்தை, கஷாயத்துடன் சேர்த்தால், அந்தக்கஷாயத்தின் குணம் அதிகப்படும். சிலசத்துகளின் பேர்கள், இதன் அடியில் கூறப்படும் :—

| | | |
|---|---|---|
| முஷாம்பரச்சத்து... ... ... | எகிஸ் டிராக்ட் ஆவ் ஆலோஸ் | Extract of Aloes. |
| கஞ்சாச்சத்து... ... ... ... | ,, ,, இன்டியென் ஹெம்ப் | ,, ,, Indian Hemp. |
| ஸிங்கோனச் சத்து... ... ... | ,, ,, பார்க்... ... ... | ,, ,, Bark. |
| கலிங்காதிச்சத்து... ... ... | ,, ,, காலொஸின்த்... | ,, ,, Colocynth. |
| அதிமதுரச்சத்து... ... ... | ,, ,, லிகொரீஸ்... ... | ,, ,, Liquorice. |
| குரோசானி யோமச்சத்து... | ,, ,, அய்யாஸியாமஸ் | ,, ,, Hyoscyamus. |
| ஜாலப்சத்து... ... ... ... | ,, ,, ஜாலப்... ... ... | ,, ,, Jalap. |
| எட்டிக்கொட்டைச் சத்து.. | ,, ,, நக்ஸ் வாமிகா... | ,, ,, Nux Vomica. |
| அபினிச்சத்து... ... ... ... | ,, ,, ஓபியம்... ... ... | ,, ,, Opium, |
| சீமை நன்னாரிவேர்ச்சத்து.. | ,, ,, ஸார்ஸபெரில்லா. | ,, ,, Sarsaparilla. |
| ஊமத்தம் விதைச் சத்து.... | ,, ,, ஸ்டிரொமோனியம் | ,, ,, Stramonium. |

**Fresh Juice.**—ஸ்வரஸம்—வேர், பட்டை, இலை முதலியவைகளுடையதனி ரஸத்துக்கு, ஸ்வரஸம் என்றுபேர்.

அவுஷதங்களை, கண்ணாடி, பீங்கான், மண், இவைகளில் எதிலாவது செய்த பாத்திரங்களில் செய்ய வேண்டியது; செய்தபிறகு, அவைகளை ஷை பாத்திரங்களில் வைக்க வேண்டியது. செம்பு, பித்தளை, வெண்கலம், இவைகளில் செய்த பாத்திரங்களில் வைத்தால், மருந்துகள் கெட்டுப்போகும்.

திராவகங்கள், ஆல்கெலீஸ் Alkalies) என்னும் பதார்த்தங்கள், லோஹ சம்பந்தமான மருந்துகள், உப்பு இனங்கள், இவைகளை கல் கார்க்கு உடைய கண்ணாடி புட்டிகளில்போட்டு வைக்கவேண்டியது. சிலமருந்துகளை, கறுத்தபுட்டிகளிலாவது, பச்சைப்புட்டிகளிலாவது, வைக்கவேண்டியதாக இருக்கும்.

மருந்துகளுடைய தோஷங்களைப் பரிக்ஷிக்கும்போது, தீநீர், பரிசுத்தமான ஜலமாகையால், அதைச்சேர்த்துக் கொள்ளவேண்டியது.

பதார்த்தங்களுடைய உஷ்ண சீதளத்தை-பாரன் ஈட்ஸ் தெர் மா மிடர் FAHRENHEIT's thermometer—என்னும் கருவியால் பரிக்ஷித்து, தெரிந்துகொள்ள வேண்டியது. கொதிக்கக்காய்ந்த வெந்நீர் என்றால், இந்தக் கருவியில்-௨௱௰௨-டிக்கிரி உஷ்ணமாக இருக்கும். சிறுதீ என்றால், உஷ்ணம் ௯௰ - டிக்கிரி இ மேல்பட்டும்-௱ - டிக்கிரிஇ குறைந்தும் இருக்க வேண்டியது.

**Crucibles**—மூசைகள்—Hessian or Cornish என்கிற பேரையுடைய மூசைகள் சிரேஷ்டமானது.

**Water Bath.**—ஜலயந்திரம்-மருந்துகளைக் கொதிக்கிற வெந்நீரில் வைத்துப் பக்குவப்படுத்திக்கொள்ளும் பாகத்துக்கு, இங்கிலீஷில் வாடர்பாத்-என்று பேர்.

**Vapour Bath**—டோலா யந்திரம்—மருந்துகளை நீர் ஆவியின் சுடுகைப் படும்படிவைத்து, பக்குவப் படுத்திக் கொள்ளும் பாகத்துக்கு, இங்கிலீஷில் வேபர் பாத்-என்று பேர்.

**Sand Bath.**—வாலுகா யந்திரம்—சுடுகையாய் இருக்கும் மணலின்பேரில் அவுஷதங்களை வைத்து, பக்குவப்படுத்திக் கொள்ளும் பாகத்துக்கு, இங்கிலீஷில் ஸாண்ட் பாத்-என்று பேர்.

## POSOLOGY. *Regulation of Doses.*—அவுஷதங்களுடைய ஒருவேளைக்குக்கொடுக்கும் அளவைக்குறித்துச்சொல்லும் ஒழுங்கு.

அவுஷதங்களைப் பிரயோகிக்கும்போது கவனிக்கவேண்டிய விஷயங்களைக் குறித்து முன்னமே தெரிவித்திருக்கின்றது ; இப்போது இதன் அடியில், நோயாளியுடைய வயதுக்குத்தக்கபடி ஒருவேளைக்குக்கொடுக்கும் மருந்துகளின் அளவை, பாகித்துக் கொடுக்கவேண்டிய கிரமத்தைத் தெரிவிக்கப்படும். இங்கிலீஷ் வைத்தியர்கள் காபியஸ் டேபில் Gaubius' Table, என்னும் அட்டவணையின்படி மருந்துகளை உபயோகிப்பதுவழக்கம். அந்த அட்டவணையை இதன் அடியில் காட்டப்படும்.

வாலிபனுக்கு ஒருவேளைக்குக் கொடுக்கிறமருந்தின் அளவு
க - அல்லது - க - திராம் ஆகில்.

க. வருஷத்துக்கு உள்பட்டால்... ... ...$\frac{1}{12}$... ,, ...ரு - கிறேன் வேண்டியது.
உ. ... ... ... ,, ... ... ... ...ஞு ,, அ - ,,
ங.... ... ... ,, ... ... ...$\frac{1}{6}$ ,, ய - ,,
ச. ... ... ... ,, ... ... ... ...வ ,, யரு - ,,
எ.... ... ... ,, ... ... ... $\frac{1}{3}$ ,, உய - ,,
யச. ... ... ... ,, ... ... ... ...ஒ ,, ஙய - ,,
உய. ... ... ,, ... ... ... $\frac{2}{3}$ ,, சய - ,,
உக-ஷீஸ்-கூய-வயது வரையில் பூரண அளவு-க ,, க -திராம்.

*Guy's Hospital* என்னும் வைத்தியசாலையில் ஒருவேளைக்குக் கொடுக்கும் மருந்துகளின் அளவை ஒழுங்குப்படுத்தி இருக்கும் அட்டவணையை இதன் அடியில் தெரிவிக்கப்படும்.—Dr. Pereira.

| வயது. | அவுன்ஸ் க - ஆகில் | திராம் க-ஆகில். | கிறேன் உய - ஆகில். |
|---|---|---|---|
| மாதம். . . . . . . . . .க - இ | திராம் - ஒ. | கிறேன் ங | கிறேன் - க |
| ,, ங - இ | . . . . . — | . . ,, ச | . . . . . . — |
| ,, சா - இ | ஸ்குரூபில் - உ | . . ,, சா | ,, உ |
| ,, கூ - இ | . . . . . — | . . ,, எ | . . . . . . — |
| வருஷம். . . . . . . . .க - இ | திராம் - க | . . ,, அ | . . ,, ங |
| ,, உ - இ | . . ,, சஒ | . . ,, ய } | . . ,, ச |
| ,, ங - இ | . . ,, கஒ | . . ,, யஉ } | |
| ,, ச - இ | . . ,, உ | . . ,, யரு | . . ,, ரு |
| ,, ரு - இ | . . ,, உஒ | . . ,, யஅ | . . ,, சா |
| ,, சா - இ | . . ,, ங | . . ,, உய | . . ,, எ |
| ,, எ - இ | . . ,, ஙஒ | . . ,, உரு | . . ,, அ |
| ,, அ - இ | . . ,, ச | . . ,, ஙய | . . ,, ய |
| ,, கூ - இ | . . ,, சஒ | . . ,, ஙரு | . . ,, யஉ |
| ,, யஉ - இ | . . ,, ரு | . . ,, சய | . . ,, யச |
| ,, யங - இ | . . ,, ருஒ | . . . . . . — | . . ,, யரு |
| ,, யரு - இ | . . ,, சா | . . ,, சரு | . . ,, யசா |
| ,, யஅ - இ | . . ,, சாஒ | . . . . . . — | . . ,, யஎ |
| ,, உய - இ | . . ,, எ | . . ,, ருய | . . ,, யஅ |
| ,, உக ஷீஸ் - சரு - இ | அவுன்ஸ் - க | திராம் - க | . . ,, உய |
| ,, ருய - இ | திராம் - எ | கிறேன்-ருய | . . ,, யஅ |
| ,, சாய ஷீஸ் - எய - இ | . . ,, சா | . . ,, சரு | . . ,, யசா |
| ,, அய ஷீஸ் - கூய - இ | . . ,, ரு | . . ,, சாய | . . ,, யச |
| ,, [illegible] - இ | . . ,, [illegible] | . . ,, [illegible] | . . ,, [illegible] |

நாலு மாதத்துக்கு உள்பட்ட குழந்தைகளுக்கு, அபினிசேர்ந்த மருந்துகளைக்கொடுக்கலாகாது. ச - மாதத்துக்கு மேல்பட்ட குழந்தைகளுக்கு, அபினிமருந்துகளை வெகுஜாக்கிரதையாய்க் கொடுக்கவேண்டியது. ரசம் சேர்ந்த அவுஷதங்களை, குழந்தைகளுக்கு அதிகமாய்க் கொடுக்கலாம். குழந்தைகளுக்குச் சூரணங்கள், ம - கிறேன் இடைக்குக் குறைந்து இருக்க வேண்டியது. க - வருஷத்துக்கு உள்பட்ட குழந்தைகளுக்கு, ஜலரூப அவுஷதத்தை - க - தே இலைக்கரண்டி, அல்லது - கம - துளி திதானத்துக்குக் கொடுக்கவேண்டியது.

---

## ரு - வது - அத்தியாயம்.

### WEIGHTS AND MEASURES.—நிறைகள்—அளவுகள்.

பாதிகெரீஸ் வெயிட்ஸ் Apothecaries' or Troy Weight என்னும் இடைகளைக் கொண்டு, கெட்டிரூபமான அவுஷதங்களை நிறுக்கவேண்டியது. இவைகள், பவுன் - அவுன்ஸ் - திராம் - ஸ்குரூபில் - கிறேன், என - ஐந்து வகைப்படும். அவைகளுக்குரிய குறிகளை இதன்அடியில் காட்டப்படும்.

℔. பவுன் - Pound.
℥. அவுன்ஸ் - Ounce.
℥ss. ௳ அவுன்ஸ் - Half an Ounce.
ʒ. திராம் - Drachm,
ʒss. ௳ திராம் - Half a Drachm.
℈. ஸ்குரூபில் - Scruple.
℈ss. ௳ ஸ்குரூபில் - Half a Scruple.
*gr.* கிறேன் - Grain.

திரவரூப அவுஷதங்களை, பாதி கெரீஸ் மெழர்ஸ் Apothecaries' Measure என்னும் அளவுகளால், அளக்கவேண்டியது. இவைகள் - காலன்-பையின்ட்-அவுன்ஸ் - திராம்- மினிம், என ஐந்து வகைப்படும். இவைகளின் குறிகளை இதன் அடியில் காட்டப்படும்.

C. காலன் - Gallon.
O. பையின்ட் - Pint.
f. ℥. ப்ளுயிட் அவுன்ஸ்-Fluid Ounce.
f. ʒ. ப்ளுயிட் திராம் - Fluid Drachm.
f. ʒss. ௳ ப்ளுயிட் திராம் - Fluid Half a [Drachm.
♏. மினிம் - Minim.
gtt. துளி - Gutta.

### APOTHECARIES' OR TROY WEIGHTS—இடைகளின் விவரம்.

*Grain.*—கிறேன் என்பது சுமார்-௳ குன்றிமணி இடை அல்லது-உ நெல்லிடை.
*Drachm.*—க-திராம் - ருஉ-குன்றிமணி இடை.
,, க-திராம் - வ-ரூபாயும்-ம௫-கிறேன் இடை.
*Ounce.*—க-அவுன்ஸ் - ௬னு-பலம் இடை.
,, க-அவுன்ஸ் - சுமார் ௱உ-பை இடை.
,, க-அவுன்ஸ் - உ௳னு-ரூபாயும் -எ௳-கிறேன் இடை.

உம - கிறேன் கொண்டது - க - ஸ்குரூபில் (Scruple.)
௩ - ஸ்குரூபில் கொண்டது - க - திராம் (Drachm) சும - கிறேன்.
அ - திராம் கொண்டது - க - அவுன்ஸ் (Ounce) சாஅம - கிறேன்.
மஉ - அவுன்ஸ் கொண்டது - க - பவுன் (Pound) ௫தளாசும - கிறேன்.

| ℔. | ℥. | ʒ. | ℈. | gr. |
|---|---|---|---|---|
| பவுன் - | அவுன்ஸ் - | திராம் - | ஸ்குரூபில் - | கிறேன். |
| க = | மஉ = | கமசு = | உாஅமஅ = | ௫தளாசும. |
| | க = | அ = | உமச = | சாஅம. |
| | | க = | ௩ = | சும. |
| | | | க = | உம. |

## Imperial Measure.—அளவுகளின் விவரம்.

*Minim.*—மினிம் என்பது சற்றேறக்குறைய - கஒ - துளிக்குச்சரியானது.
*Ounce.*—க-அவுன்சுக்கு சுமார் - ஞு - அரை வீசம் ஆழாக்கு.

கூய - மினிம் கொண்டது - க - ப்ளுயிட் திராம் (Fluid Drachm.)
அ-திராம் கொண்டது-க-ப்ளுயிட். அவுன்ஸ் (Fluid Ounce) சாஅய மினிம்.
உய - அவுன்ஸ் கொண்டது - க - பையின்ட் (Pint) கூதுகூா - மினிம்.
அ - பையின்ட் கொண்டது - க - காலன் (Gallon,) எயகூதுஅா - மினிம்.

| C. | O. | f. ℥. | f. ʒ. | ♏. |
|---|---|---|---|---|
| காலன் - | பையின்ட் - | அவுன்ஸ் - | டிராம் - | மினிம். |
| க = | அ = | ாகூய = | துஉாஅய = | எயகூதுஅா. |
| | க = | உய = | ாகூய = | கூதுகூா. |
| | | க = | அ = | சாஅய. |
| | | | க = | கூய. |

ரசம், ஜலரூபமாய் இருந்தபோதிலும், நிறுத்து க்கொள்ளப்படும்.
Table spoon—டேபில் ஸ்பூன் - என்பது சுமார் - ஒ - அவுன்ஸ்.
Dessert spoon—டெஸர்ட் ஸ்பூன் - என்பது - உ - திராம்.
Tea spoon—டீ ஸ்பூன் - என்பது-க-திராம், அல்லது -கூய - மினிம் - அல்ல
[து - கூய - துளி.

க - ரூபாய் க்கு-ரூ-திராம்.
வ - ரூபாய் க்கு-சறு - கிறேன்.
ச-ரூபாய் இடைக்கு-கஒ - அவுன்ஸ்.
க - பவுன் இ (Avoirdupois) யரூ-பலம்.
க-பலத்துக்கு - ய - விராகனிடை.
க-பலத்துக்கு, கவ - அவுன்ஸ் Apothe-
[caries' Weight.
க-சேருக்கு-அ-பலம்.
க-சேருக்கு-அய-விராகனிடை.
க-சேருக்கு-உச - ரூ இடை.
க-பாரத்துக்கு-உ௰ - மணங்கு.
க-மணங்குக்கு-அ-வீசை.
க-வீசைக்கு-சய - பலம்.
க-படிக்கு-ா - பலம்.
க-படிக்கு-உஒ - வீசை.
க-படிக்கு-௰உ-சேர்.
க-படிக்கு-அ-ஆழாக்கு.

க-படிக்கு-சுமார்-உ-இங்கிலீஷ்புட்டி.
க-ஆழாக்கு-ரு-பலம்.
க-புட்டிக்கு சுமார்-உயச-அவுன்ஸ்.
க-புட்டிக்கு-ச-ஆழாக்கு.
க-ஆழாக்கு-கூ - அவுன்ஸ்.
ஞு-ஆழாக்கு-ஹ - அவுன்ஸ்.
க-மணிக்கு-உஒ-நாழிகை.
க-நாழிகைக்கு-கூய-விநாடி.
க-நாழிகைக்கு-உயச-மினிட்.
க-விநாடிக்கு-சுமார் - உயச- செகண்ஸ்
[Seconds.
க-விராகன் இடைக்கு-ரூஉ-குன்றிமணி.
ஞு-விராகன் இடைக்கு-ச-குன்றிமணி.
பஉ-விராகன் இடைக்கு-உ-குன்றிமணி.
க-குன்றிமணி அரை பஉ விராகனிடை.
க-பொன்பணத்துக்கு-யகூ-நெல்லிடை.
ாஅய-கிறேன் கொண்டது—க தொலா
[ம் அல்லது ரூபாய்.

இங்கிலீஷ் நிறைகள் அகப்படாத போது, அடியில் கண்ட பிரகாரம் செய்து கொண்டால் தேவையானபோது உபயோகித்துக்கொள்ளலாம்.

ஒருபுதிய - வ - ரூபாயை நீண்ட சன்னத்தகடாகச்செய்து கொண்டு, அதை ஏற்றக்குறைச்சல் இல்லாமல், மூன்று துண்டுகளாகச்செய்தால், ஒவ்வொரு துண்டு-௰ரு- கிறேன் இடை இருக்கும்-மறுபடியும் ஒருதுண்டை, மூன்று துண்டாக்கினால், ஒவ்வொருதுண்டு - ரு - கிறேன் இடை இருக்கும். பிறகு, இதில் ஒரு துண்டை, ரு - துண்டாக்கினால், ஒவ்வொருதுண்டு · ஒவ்வொரு கிறேன் இடை

இருக்கும். இவ்விதமாகச் செய்து கொண்ட பில்லைகளின் பேரில், ஒவ்வொன்றுக்குடைய நிறையின் இலக்கத்தைப் போட்டு வைத்துக்கொள்ள வேண்டியது. க - திராம் இடை வேண்டியபோது, ௮ - ரூபாயும், ௰௫ - கிறேன் பில்லையில் ஒன்றை எடுத்துக்கொண்டால் - ௬௰ - கிறேன் அல்லது - க - திராம் இடைக்குச் சரியாகும். க - ஸ்குரூபில், வேண்டியபோது, ௰௫ - கிறேன் பில்லையில் ஒன்றும், ௫-கிறேன்பில்லையில் ஒன்றும் எடுத்துகொண்டால். உ௰ -கிறேன், அல்லது ஒரு ஸ்குரூபில் இடைக்குச் சரியாகும். இவ்விதமாக உபயோகித்துக் கொள்ளலாம்.

---

## ச - வது - அத்தியாயம்.

## Classes of Medicine.—மருந்துகளின் வகுப்புகள்.

மேற்குறித்த கிரமத்துடன் செய்து முடித்த அவுஷதங்களை, அனுபோகத்தின் பேரில் தெரிந்துகொண்ட அவைகளுடைய குணங்களின் பிரகாரம், பலவகுப்புகளாகப் பிரித்து இருப்பதை இதன் அடியில் கூறப்படும்.

Alteratives - வியதாபேத காரிகள்—சப்ததாதுக்களுடைய ரோகங்களைப்படிப்படியாய்ப் போக்கி, சரீர சுகத்தை ஸ்தாபிக்கிற மருந்துகள்.
Anæsthetics- ஸ்மிருதிரோத காரிகள்—ஸ்பரிசத்தைக் குறைத்து கியானமில்லாமல் செய்து, நோவைத்தடுக்கிற மருந்துகள்.
Anodynes- வேதனசாந்தி காரிகள்—நோவை நீக்குகிற மருந்துகள்.
Antacids- ஆம்லனாஸ காரிகள்—வயிற்றில் இருக்கும் புளிப்பைக் கண்டிக்கிற மருந்துகள்.
Anthelmintics- கிருமினாஸ காரிகள்—வயிற்றில் இருக்கும், கிருமிகளை வெளிப்படுத்துகிற மருந்துகள்.
Antidotes- விஷனாஸ காரிகள்—நஞ்சை முறிக்கிற மருந்துகள்.
Antilithics- ஹஸ்மரீஹர காரிகள்—மூத்திரத்தில் உண்டாகும் கல்லைப் போக்குகிற மருந்துகள்.
Antiperiodics-முறைக்காச்சல், நோவு, முதலிய ரோகங்களைத் தடுக்கிற மருந்துகள்.
Antiphlogistics- உக்கிரரோக ஸமன காரிகள்—உக்கிரரோகங்களைத் தணிக்கிற மருந்துகள்.
Antiseptics- அழுகிப்போகுதலைத் தடுக்கிற மருந்துகள்.
Antispasmodics- அங்காகர்ஷணனாஸ காரிகள்—இசிவுரோகங்களைப் போக்குகிற மருந்துகள்.
Aperients- சாந்தியாய் பேதியாக்குகிற மருந்துகள்.
Aphrodisiacs - வீரியவர்த்தனகாரிகள்—காமத்தை அதிகப்படுத்துகிற மருந்துகள்.
Astringents - ஸங்கோசன காரிகள்—நரம்பு, சதை, முதலியதாதுக்களைச்சுருங்கச்செய்கிற மருந்துகள்.
Blisters- துவக்ஸ்போடகாரிகள்—கொப்புளம், எழும்பும்படிச் செய்கிற மருந்துகள்
Carminatives- உதரவாதஹர காரிகள்—வயிற்றிலிருக்கும் வாயுவைப்போக்குகிற மருந்துகள்.
Cathartics- விரேசன காரிகள்—பேதிமருந்துகள்.
Caustics - விரணகாரிகள்—புண்ணாக்குகிற காரங்கள்.
Cholagogues - பித்த காரிகள்—பித்ததிரவத்தை விர்த்திப்படுத்துகிற மருந்துகள்.
Cordials - ரத்தத்தைப் பரவப்பண்ணும் மருந்துகள்.
Demulcents - ஸ்னிக்த காரிகள்—தாதுக்களின் எரிச்சலைத்தணித்து, தளர்ச்சிசெய்கிற மருந்துகள்.

Deobstruents சோபாஹ்ன காரிகள்—வீக்கங்களைக் கரைக்கிற மருந்துகள்.
Depressants-அபகர்ஷண காரிகள்—தாதுக்களின் வலிமையைக் குறைக்கிற மருந்துகள்.
Detergents-விரணசுத்தி காரிகள்—புண்களைச்சிவப்பிக்கிற மருந்துகள்.
Diaphoretics-ஸ்வேத காரிகள்—வியர்வையை உண்டாக்குகிற மருந்துகள்.
Diluents-ஜலவர்த்தன காரிகள்—ரத்தத்திலிருக்கும் ஜலத்தை அதிகரிக்கிற மருந்துகள்.
Disinfectants-பூதிகந்த சாங்கிராமிகரோக நிவர்த்தன காரிகள்—நாற்றங்களையும், தொத்திக்கொள்ளும் வியாதிகளையும்நீக்குகிற மருந்துகள்.
Diuretics-மூத்திரவர்த்தன காரிகள்—மூத்திரத்தை அதிகப்படுத்துகிற மருந்துகள்.
Emetics-வமன காரிகள்—வாந்தி மருந்துகள்.
Emmenagogues-ருதுவர்த்தன காரிகள்—சூதகத்தைக்கிரமப்படுத்துகிற மருந்துகள்.
Emollients-ஸ்னிக்த காரிகள்—தாதுக்களின் எரிச்சலைத்தணித்து, தளர்ச்சிசெய்கிற மருந்துகள்.
Epispastics-துவக்ஸ்போட காரிகள்—கொப்புளம் எழும்பும்படிச் செய்கிற மருந்துகள்.
Errhines-நஸ்யங்கள்—தும்மலை உண்டாக்குகிற மருந்துகள்.
Escharotics-விரண காரிகள்—புண்ணுக்குகிற காரங்கள்.
Expectorants-கபஹர காரிகள்—கபத்தைப்போக்குகிற மருந்துகள்.
Febrifuges-ஜ்வரஹர காரிகள்—காய்ச்சலை நீக்குகிறமருந்துகள்.
Laxatives-மலகாரிகள்—சாந்தமாய் பேதியாக்குகிற மருந்துகள்.
Lithics or Lithontriptics அஸ்மரீஹர காரிகள் மூத்திரத்தில் உண்டாகும் கல்லைப்போக்குகிற மருந்துகள்.
Narcotics-நித்ரா காரிகள்—நித்திரை உண்டாக்குகிற மருந்துகள்.
Nauseants-வமனவியதா காரிகள்—வாய்க்குமட்டலையுண்டாக்குகிற மருந்துகள்.
Parturifacients-பிரசவ காரிகள்—பிரசவவேதனையை, அதிகப்படுத்தி சிசுவை கருப்பையிலிருந்து வெளிப்படுத்துகிற மருந்துகள்.
Purgatives விரேசன காரிகள்—பேதிமருந்துகள்.
Refrigerants - சீதள காரிகள்—தாகத்தைத்தணித்து, தேகஅழலையை நீக்குகிற மருந்துகள்.
Resolvents - கட்டிகளைக் கரைக்கிறமருந்துகள்.
Rubefacients - க்ஷோண காரிகள்—சருமத்தைச் சிவப்பிக்கிறமருந்துகள்.
Sedatives - சமன காரிகள்—தாதுக்களின், உஷ்ணத்தையும், நோவையுந் தணித்துநித்திரையை உண்டாக்குகிற மருந்துகள்
Sialogogues - திரவ காரிகள்—உமிநீரை அதிகப்படுத்துகிற மருந்துகள்.
Sternutatories - நஸ்யங்கள். தும்மலை உண்டாக்கிற மருந்துகள்.
Stimulants உச்சாக காரிகள்—உஷ்ண காரிகள்—உஷ்ணத்தைக் கொடுக்கிறமருந்துகள்.
Stomachics-ஜடாராக்கினிவர்த்தன காரிகள்—பசிதீபனத்தை உண்டாக்குகிறமருந்துகள்.
Styptics - ரக்தஸ்தம்பன காரிகள்—ரத்தப்பெருக்கை நிறுத்துகிறமருந்துகள்.
Sudorifics - ஸ்வேதகாரிகள்—அதிகவியர்வையைப் பிறப்பிக்கிறமருந்துகள்.
Suppuratives - பூயஜனக காரிகள்—சீக்கொப்புளங்களைப் பிறப்பிக்கிறமருந்துகள்.
Tonics - தார்ட்டிய காரிகள்—தேகத்துக்கு, பலத்தைக் கொடுக்கிற மருந்துகள்.
Vesicants - துவக்ஸ் போடகாரிகள்—கொப்புளம் எழும்பும் படிச்செய்கிறமருந்துகள்.

வியாதியைத் தடுக்க அல்லது சொஸ்த்தப்படுத்த உபயோகிக்கும் வஸ்துக்களை, அவுஷதங்களென்று சொல்லப்படும். அவுஷதங்களை தாதுவர்க்கங்களிலிருந்தும் Mineral kingdom,) தாவரவர்க்கங்களிலிருந்தும் Vegetable kingdom,) ஜீவவர்க்கங்களிலிருந்தும் Animal kingdom) சேகரிக்கப்படும்.

பொன், வெள்ளி, தாம்பிரம், ஈயம், இரும்பு, இரசம், தகரம், துத்தநாகம், பிமிளை Bismuth,) அஞ்சனக்கல், கந்தகம், வெண்காரம், படிக்காரம், பாஷாணம், பொட்டிலுப்பு முதலியவைகள், தாதுவர்க்க சம்பந்தமான மருந்துக்குதவும் வஸ்துக்கள்.

வேர், சக்கை, பட்டை, பிசின், இலை, புஷ்பம், விரை முதலியவைகள் தாவரவர்க்க சம்பந்தமான மருந்து வஸ்துக்கள்.

நன்னாரிவேர், சுக்கு, அதிமதுரம், வசம்பு, தும்பராஷ்டகம், சன்னராஷ்டகம், வெள்ளைப்பூண்டு, சிவதைவேர், மஞ்சள், தேசாவரம், வெங்காயம், நரிவெங்காயம், ஜாலப் Jalap,) எருக்கம்வேர், சடாமாஞ்சி, மாதுளம்வேர், முருங்கைவேர் முதலியவைகள், மருந்துக்குதவும் வேர்வகைகள்.

நிலவாவரை, புகையிலை, எருக்கிலை, மாசிப்பத்திரி, துத்தியிலை, ஊமத்தம் இலை, அருதா, பொடுதலை, துளசி, காமாக்ஷிப்புல்லு, பெப்பர்மின்ட் Peppermint) முதலியவைகள் மருந்துக்குதவும் இலைவர்க்கங்கள்.

லவங்கப்பட்டை, ஸிங்கோனாப்பட்டை, காஸ் கெரில் லாப்பட்டை முதலியவைகள், மருந்துக்குதவும் பட்டைவர்க்கங்கள்.

ரோஜாப்பூ, குங்குமப்பூ, சீமைசாமந்திப்பூ முதலியவைகள், மருந்துக்குதவும் புஷ்பவர்க்கங்கள்.

ஓமம், கொத்துமல்லி, ஏலரிசி, ஆளிவிரை, சப்ஜாவிரை, துளசிவிரை, சோம்பு, சதகுப்பை, கசகசா, கடுகு, சீரகம், வெந்தியம், நேர்வாளம் முதலியவைகள், மருந்துக்குதவும் வித்துவர்க்கங்கள்.

சந்தனக்கட்டை, செம்மரம், குவாஸியா Quassia) முதலியவைகள், மருந்துக்குதவும் சக்கைவர்க்கங்கள்.

விளாம்பிசின், குங்கிலியம், சாம்பிராணி, பெருங்காயம் அபினி முதலியவைகள், மருந்துக்குதவும் பிசின்வர்க்கங்கள்.

கஸ்தூரி, ஆட்டுக்கொழுப்பு, மெழுகு, தேன், அட்டை, முட்டை, பால், எரிவண்டு Cantharides) சிலம்பிக்கூடு, மீன் எண்ணெய், மீன்கொழுப்பு முதலியவைகள், ஜீவவர்க்க சம்பந்தமான மருந்துவஸ்துக்கள்.

---

வியதா பேத காரிகள்.—Alteratives *are medicines which gradually restore the healthy habit, functions, secretions &c.*

சர்வாங்கத்தை அனுசரித்தாவது, அல்லது ஓர் அவயவத்தைப்பற்றியாவது இருக்கும் வியாதியைப் படிப்படியாய்ப்போக்கி, சரீரத்தைச்சுகஸ்திதியில் கொண்டு வருகிறமருந்துகளுக்கு, வியதாபேதகாரிகள் என்று பேர். இந்த அவுஷதங்களைச் சாப்பிட்டால், வெளிக்கு ஒன்றையும் காட்டாமல், உள்ளேவ வியாபிக்கும். இந்தவகுப்பில் சேர்ந்த ரசம், பாஷாணம், அஞ்சனக்கல் Antimony,) தங்கம் இவைகள் தேகத்தைக்கெடுதிசெய்கிற மருந்துகளானபோதிலும், பரிமாணத்தைக்குறைத்து ஜாக்கிரதையுடன் நாள்படக் கொடுத்தால், அனேகரோகங்கள் நீங்கிவிடும். இந்த மருந்துகள், நாள்பட்ட வியாதிகளுக்குக் கொடுக்கத் தகுதியானதுகள். இந்த மருந்துகளைக் கொடுத்துக்கொண்டுவரும் போது, ரோயாளி, பத்தியத்திலும், ஸ்தா

னபான முதலியனவைகளிலும் கிரமமாய் இருக்கவேண்டியது. இந்த விஷயத்தைக் கவனிக்காவிட்டால், அவுஷதங்களைக் கொடுத்தும் பலன் இல்லாமல்போய்விடும். இந்தவகுப்பில் சேர்ந்த அவுஷதங்களை, இதன் அடியில் கூறப்படும் :—

சோரன பேதி திராவகம்...Nitro-Hydrochloric Acid...*Acidum Nitro-Hydrochloricum. Aqua Regia.*
நீலாஞ்ஜனசிந்தூரம். Oxysulphuret of Antimony. *Antimonii Oxysulphuretum.*
டெர்குளோரைட் ஆவ் கோல்ட். Terchloride of Gold... ...*Auri Terchloridum.*
ரஸபஸ்மம். ... ... ...Calomel... ... ... ...*Calomelas.*
ஐயோடைட் ஆவ் ஐரன்....Iodide of Iron.. ... ... *Ferri Iodidum.*
நன்னாரி வேர்... ... ...Indian Sarsaparilla... ...*Hemidesmus Indicus.*
சவ்வீரம். ... ... ......Bichloride of Mercury...*Hydrargyri Bichloridum.*
ரஸபஸ்மம். ... ... ...Calomel... ... ... ...*Hydrargyri Chloridum.*
ரஸபஸ்ம கலவை மெழுகு..Plummer's pill...*Pilula Hydrargyri Chloridi Composita.*
ரஸ சுண்ண பஸ்மம்... ...Grey powder... ... ...*Hydrargyrum c. Creta.*
ஐயோடைட் ஆவ் மெர்க்கியுரி.Iodide of Mercury... ...*Hydrargyri Iodidum.*
ஐயோடைன்... ... ...Iodine. ... ... ... ...*Iodinium.*
பவுலர்ஸ் ஸொலூஷன். Fowler's Solution. Ague Drop. *Liquor Potassæ Arsenitis.*
சுண்ணாம்புத்தண்ணீர்... ...Lime Water... ... ...*Liquor Calcis.*
ஸொலூஷன் ஆவ் பொட்டாஷ்....Solution of Potash... ...*Liquor Potassæ.*
மீன் எண்ணெய்...... ......Cod-Liver Oil... ... ...*Morrhuæ Oleum.*
ஐயோடைட் ஆவ் லெட்....Iodide of Lead.. ... ...*Plumbi Iodidum.*
அஸிடேட் ஆவ் பொட்டாஷ்.Acetate of Potash... ...*Potassæ Acetas.*
டர்ட்ரேட் ஆவ் பொட்டாஷ்..Tartrate of Potash... ...*Potassæ Tartras.*
பைகார்போனேட் ஆவ் பொட்டாஷ். Bicarbonate of Potash. *Potassæ Bicarbonas.*
புரோமைட் ஆவ் பொட்டாஸியம். Bromide of Potassium. *Potassii Bromidum.*
ஐயோடைட் ஆவ் பொட்டாஸியம். Iodide of Potassium. *Potassii Iodidum.*
சூத மெழுகு (ப்ளூ பில்)......Blue pill...... ... ...*Pilulæ Hydrargyri.*
சீமை நன்னாரி வேர். ......Sarsaparilla... ... ... *Sarza.*
கார்போனேட் ஆவ் ஸோடா. Carbonate of Soda... ...*Sodæ Carbonas.*
ஸொலூஷன் ஆவ் ஸோடா. Solution of Soda. ... *Liquor Sodæ.*
ஐயோடைட் ஆவ் ஸல்பர்...Iodide of Sulphur... ...*Sulphuris Iodidum.*
டிங்சர் ஆவ் ஐயோடைன்...Tincture of Iodine... .. *Tincturæ Iodinii.*
டெராக்ஸெகம்.... ... ...Dandelion... ... ...*Taraxacum.*

---

ஸ்மிரிதி ரோத காரிகள்—Anæsthetics *are those agents used to produce insensibility to pain during Surgical Operations and Labour.*

நோய்தெரிய வொட்டாமல் இருக்கும்படிச்செய்யும் மருந்துகளுக்கு, ஸ்மிரிதிரோதகாரிகள் என்று பேர். இவைகளில், சிலவற்றை உள்ளுக்கும், மேலுக்கும் உபயோகப்படுத்தப்படும். அதாவது, அபினி, ஆகொனைட் Aconite,) பெல்லடோனா Belladonna, முதலியனவைகளாம். சிலமருந்துகளின் ஆவியைமாத்திரம் ஆக்கிராணித்தால், ஸ்மாரகம் இல்லாமல்போய்விடும். சத்திரஞ்செய்யும்போது காணும் நோயைத்தவிக்கவும், பிரசவகாலத்தில் வேதனையை நீக்கவும், இந்தமருந்துகளை உபயோகப்படுத்தப்படும். இந்தமருந்துகளை உபயோகித்தால், முதலில் மட

ஜ நரம்புகளிலும் Nerves,) பிறகு, சுவாசம், ரத்த ஓட்டம் Circulation,) இருதயம் இவைகளிலும், குணத்தைக் காட்டும். இவைகள் முதலில் தெளிவை உண்டாக்கும். இவைகளைத்தடவின இடம் மறத்துப்போகும்; ஆகையால் தேள்கொட்டலுக்கு நோயைத்தணிக்கச்செய்ய, குளோரோபாரம் Chloroform, தடவுகிறது வழக்கம். இந்தமருந்துகளை அளவுக்கு அதிகமாய்க் கொடுத்துவிட்டால் செய்யவேண்டிய சிகிச்சையாவது: முகத்தில் குளிர்ந்தஜலத்தை அறைதல், கால்வனிஜம் Galvanism என்னும் எந்திரத்தைப் பிரயோகித்தல்-நோயாளியின் வாயோடு நமது வாயைவைத்து நுரையீரலில் காற்றுப்போகும்படி ஊதுதல் - பிராந்தி, அம்மோனியா முதலிய உற்சாககாரிகளைக் கொடுத்து தேகத்தில் காங்கை பிறக்கும்படிச் செய்தல் முதலியவைகளாம். இந்தவகுப்பில் சேர்ந்த மருந்துகளாவது :— அமிலீன் Amylene) ஸல்பியூரிக் ஈதர் Sulphuric Æther - *Æther Sulphuricus*) குளோரோபாரம் Chloroform,) ஆல்டிஹைட் Aldehyde,) க்லோரிக் ஈதர் Chloric Æther,) கோல்காஸ் Coal Gas,) டச் லிக்குவிட் Dutch Liquid,) ஹைட்ரோ புரோமிக் ஈதர் Hydrobromic Æther,) முதலியவைகளாம்.

---

வேதனு ஸாந்தி காரிகள்.—**Anodynes** *are medicines which relieve pain.*

நோவைத்தணிக்கும் மருந்துகளுக்கு வேதனுஸாந்தி காரிகள் என்று பேர். இவைகள் மூளையிலும் Brain, மஜ்ஜ நரம்புகளிலும் Nerves வியாபித்து, உறக்கம் நித்திரை - இவைகளை உண்டாக்கும். வெந்நீர்க்காய்ப்பிடம், போஸ்தக்காயைச் சேர்த்துக்காய்ச்சின வெந்நீர்க்காய்ப்பிடம், பனிக்கட்டியை மேலுக்குப்போடல், இவைகள் நோயைச் சவுக்கியப்படுத்துவதால், வேதனுஸாந்தி காரிகள் என்று சொல்லலாம். நோயை உடைய ரோகங்களுக்கெல்லாம், வேதனுஸாந்தி காரிகளை, உபயோகிக்கலாம். இந்தவகுப்பில் சேர்ந்த அவுஷதங்களாவது :—அபினி Opium) பெல்லடோனு Belladonna,) கோனியம் Conium,) குரோசானி யோமம் Henbane முதலியவைகளாம்.

---

ஆம்ல நாஸ காரிகள்.—**Antacids.** *A term Synonymous with Alkalies. Remedies which neutralize an excess of Acid in the stomach.*

வயிற்றில் இருக்கும் புளிப்பைப் போக்குகிற மருந்துகளுக்கு ஆம்லனுஸ காரிகள் என்றுபேர். இந்தவகுப்பில் உள்ளமருந்துகளை வெகுஜாக்கிரதையாய் கொடுக்கவேண்டியது; அதிகமாய் ஆவது, நாள்பட ஆவது கொடுத்தால், கெடுதி செய்யும். வயிற்றில் இருக்கும் புளிப்பை நீக்க, ஆல்கெலீஸ் என்னும் காரங்களைக் கொடுக்க விரும்பினுல், போஜனம் செய்தவுடன் அவைகளைக் கொடுக்கலாகாது; மூனு நாலுமணி நேரம் சென்றபிறகு கொடுத்தால் நல்லது. கசப்பான கஷாயங்களில் அவைகளைக் கலந்தால் முறிந்து போகும். சிலருக்கு இவைகள் ஏற்றுக்கொள்ளாது. வாதரோகங்களுக்கும், கண்டமாலைசம்பந்தமான ரோகங்களுக்கும், க்ஷயரோகத்துக்கும், கழுத்தில் காணும் புரைக்குழல் வியாதிக்கும், நியுமோனியா Pneumonia) ப்ராங்கைடிஸ் Bronchitis) முதலிய கபரோகங்களுக்கும், ஆல்கெலிஸ் என்னும் க்ஷாரங்களைக் கொடுத்தால், குணப்படுத்தும். விஷூசிகா (வாந்திபேதி) ரோகத்திலும், அதிக வியர்வை காணும் சில ரோகங்களிலும்,

இவைகளைக் கொடுத்தால், இரத்தத்தில் உப்பை அதிகமாக்கும். இவைகளுக்கு கொழுப்பைக் கரைக்கிற குணம் இருப்பதால் மிகவும் ஸ்தூலித்த சரீரம் உடையவர்களுக்குக் கொடுத்தால், தேகத்தை இளைக்கச்செய்யும். இந்தவகுப்பில் சேர்ந்தமருந்துகளை இதன் அடியில் தெரிவிக்கப்படும் :—

பைகார் போனேட் ஆவ் அம்மோனியா...Bicarbonate of Ammonia...*Ammoniæ Bicarbonas.*
ஸொலூஷன் ஆவ் அம்மோனியா...Solution of Ammonia...*Liquor Ammoniæ.*
நவக்ஷாரவுப்பு...Sesquicarbonate of Ammonia. Smelling Salts...*Ammoniæ [Sesquicarbonas.*
சுண்ணும்புத்தண்ணீர்...Solution of Lime (Lime Water)...*Liquor Calcis.*
சுத்திசெய்தசீமைச்சுண்ணம்...Prepared Chalk...*Creta Preparata.*
மாக்நீஷியா...Magnesia...*Magnesia.*
கார்பொனேட் ஆவ் மாக்னீஷியா..Carbonate of Magnesia..*Magnesiæ Carbonas.*
பைகார் பொனேட் ஆவ் பொடாஷ். Bicarbonate of Potash. *Potassæ Bicarbonas.*
கார்பொனேட் ஆவ் பொடாஷ்...Carbonate of Potash...*Potassæ Carbonas.*
ஸொலூஷன் ஆவ் பொடாஷ்...Solution of Potash...*Liquor Potassæ.*
பைகார் பொனேட் ஆவ் ஸோடா...Bicarbonate of Soda...*Sodæ Bicarbonas.*
கார் பொனேட் ஆவ் ஸோடா (உவர்மண் உப்பு,)...Carbonate of Soda...*Sodæ Carbonas.*

---

கிருமி நாஸ காரிகள்.—**Anthelmintics** or **Vermifuges.** *Remedies which expel intestinal worms.*

வயிற்றில் இருக்கும் கிருமிகளைப் போக்கும் மருந்துகளுக்கு, கிருமிநாஸகாரிகள் என்று பேர். இந்த இனத்தி லுள்ள மருந்துகள், ௪ - வகைப்படும் ; அதாவது : சிலது கிருமிகளைக் கொன்று வெளிப்படுத்தும்—சிலது கிருமிகளை உயிரோடு வெளிப்படுத்தும்—சிலது பேதிமூலமாய் கிருமிகளை வெளிப்படுத்தும்—சிலது வயிற்றில் கிருமிகள் உற்பத்தி ஆகாமல் இருக்கும்படிச் செய்விக்கும்.

௧ - வது. *Specific Anthelmintics.*—இதன் அடியில் வரும் மருந்துகள், கிருமிகளைக் கொல்லுகிற குணத்தையுடையதுகள். இந்தமருந்துகளைக் கொடுத்த பிறகு, வயிற்றில் செத்திருக்கும் பூச்சிகளை பேதிக்குக்கொடுத்து வெளிப்படுத்த வேண்டியது :—

கர்ப்பூரத் தயிலம். ... Turpentine. .... .... *Oleum Terebinthinæ.*
மாதுளம் வேர்... ... ...Pomegranate... ... ...*Punica Granatum.*
கோஸ்ஸூ. ... ... ....Kousso. .... ... ... *Kousso.*
மாசிப் பத்திரி? ... ... Worm Wood. ... ...*Absinthium.*
சான் டோனின் Santonine—புரசன் விரை—பப்பாய்.

௨ - வது. *Mechanical Anthelmintics.*— கிருமிகளை உயிரோடு வெளிப்படுத்தும் மருந்துகளாவது : இந்தமருந்துகளைக் கொடுத்தபிறகும் சுடும்பேதிக்குக் கொடுக்கவேண்டியது :—வெள்ளீயப்பொடி Tin, பூனைக்காலி காயின் பேரில் இருக்குஞ்சுணை Cowhage (*Mucuna,*) ஆடு தீண்டாப்பாளை.

௩ - வது. *Purgative Anthelmintics.*—பேதியாக்கி கிருமிகளை வெளிப்படுத்துகிற மருந்துகளாவது :—ரஸபஸ்மம் Calomel,) மக்கி Gamboge,) ஜாலப் Jalap,) ஸ்காமொனி Scammony முதலியவைகளாம். ரஸபஸ்மத்துக்குக்கிருமிகளை

க்கொல்லுகிறகுணம் உண்டு. பல்வஸ் ஸ்காமோனி காம்பவுன் Pulv. Scam. Co. என்னும் சூரணத்தை பிள்ளைகளுக்குக் கொடுத்தால், வயிற்றில் இருக்கும் பூச்சிகள் கூண்டோடே வெளிப்படும்.

௪ - வது. *Preventive Anthelmintics.*—வயிற்றில் கிருமிகளை உற்பத்தி ஆகாமல் இருக்கச் செய்யும் மருந்துகளாவன :—கசப்பான கஷாயங்கள்-அயம் சேர்ந்த மருந்துகள் - கறிஉப்பு - அன்னபேதி - கறி உப்பு - திராவகம் Hydrochloric Acid, முதலிய வைகளாம். உப்பில்லாத போஜனம் வயிற்றில் கிருமிகளை உண்டாக்கும். போஜனத்தில் சேரும் உப்பு அல்லாமல், தனிப்பட அவுஷதமாகச் சாப்பிட்டுக்கொண்டுவந்தால், கிருமிகள் வயிற்றில் சேராது.

மாதுளம்வேர்-கர்ப்பூரத்தயிலம் Turpentine) கொஸ்ஸ Kousso) புரசன்விரை முதலியவைகள் தட்டைக் கிருமிகளைப் போக்கும். ரஸபஸ்மம்-ஸ்காமொனி-ஜாலப் - கர்ப்பூரத்தயிலம்- வெள்ளீயப்பொடி-பூனைக்காஞ்சொறி முதலியவைகள் நாக்குப்பூச்சிகளை அதஞ்செய்யும். கர்ப்பூரத்தயிலம், அயப்பாவனத்திரவம் Steel drops) பேதேத்தான் Quassia) சிற்றுமணக்கு எண்ணெய் - பெருங்காயம்-கறிஉப்பு, முதலியமருந்துகளைப் பக்குவப்படுத்தி ஆசனத்தில் பிரயோகித்தால், ஆசனத்தில், தங்கி இருக்கும் திமிர்ப்பூச்சிகளை நாஸப்படுத்தும் : கிருமிநாஸகாரி மருந்துகளைத் தனியாய் கொடுக்கிறதைப்பார்க்கிலும் ஒன்றோடு ஒன்று, சேர்த்துக் கொடுத்தால் அவைகளுக்கு இருக்கும் குணம் அதிகப்படும்.

---

விஷ நாஸ காரிகள்.—Antidotes. *Remedies against the action of poison.*

விஷங்களை முறிக்கிற அவுஷதங்களுக்கு, விஷநாஸ காரிகள் என்று பேர். இவைகள் கெமிகல் Chemical, மெகானிகல் Mechanical, என இரண்டுவகைப்படும். முதல்வகுப்பைச்சேர்ந்த மருந்துகள் நஞ்சை முறித்து குணத்தைக்கெடுத்துவிடும். இரண்டாவது வகுப்பைச்சேர்ந்த மருந்துகள், நஞ்சு குடலைப்புண்ணுக்காமல் இருக்கும்படி குடல் உள்புறத்தை கவசம்செய்து, நஞ்சை ரஸதாதுக்களில் வர ஒட்டாமல் நஞ்சுடன் பிசரிக்கொள்ளும். குழகுழப்புள்ள பதார்த்தங்கள் தயிலங்கள்-சருக்கரை இனங்கள் முதலியவைகளுக்கு இந்தகுணம் உண்டு. திராவகங்களை Acids முறிக்க, க்ஷாரங்களைக் Alkalies கொடுக்கவேண்டியது ; க்ஷாரங்களை முறிக்க, திராவகங்களைக் கொடுக்கவேண்டியது.

முட்டையின்வெள்ளைக் கரு சவ்வீரத்தையும், துத்தத்தையும் முறிக்கும். நஞ்சைஉண்டோருக்குக் கொடுக்கும், பிராந்தி - பால் - விளாம்பிசின் - காப்பிக்கொட்டைக் கஷாயம் முதலிய உதவிபதார்த்தங்களையும், விஷநாஸ காரிகளென்றே சொல்லப்படும்.

---

ஹஸ்மரீ ஹர காரிகள்.—Antilithics or Lithontriptics. *Remedies which counteract the tendency to the deposition of calculus or urinary sediments.*

மூத்திரத்தில் உண்டாகும் கல்லுக்கு, அஸ்மரி என்றுபேர். மூத்திரக்கல்லைக்கரைக்கும்படி ஆவது, அல்லது, மூத்திரத்தில்கல்லு உற்பத்தி ஆகவொட்டாமல்

செய்கிறதற்காகத்தான், பிரயோகிக்கும் அவுஷதங்களுக்கு, க்ஷாரஸமரீஹரகாரிகள் என்று பேர். லைகர்பொடாஸ்ஸி Liquor Potassæ - கார்பொனேட் ஆவ் ஸோடா Carbonate of Soda-பொட்டிலுப்புத்திராவகம் Nitric Acid முதலிய மருந்துகளை இந்தரோகத்துக்கு உபயோகிக்கப்படும்.

---

முறைக்காய்ச்சல், முறையாய் வரும் ரோகங்கள், இவைகளைத்தடுக்கிற மருந்துகள். **Antiperiodics** *are medicines which possess the power of arresting the occurrence of periodical returns of fever, pain, &c.*

குவை னயின் Quinine,) பாஷாணம் Arsenic,) இவைகளுக்கு முறையாய் வரும் ரோகங்களைத் தடுக்கிறகுணம் உண்டு.

---

உத்கிர ரோக ஸமன காரிகள்.—**Antiphlogistics**. *Remedies against inflammation.*

உக்கிரரோகங்களைத்தணிக்கிற மருந்துகளுக்கு, உக்கிரரோக ஹரகாரிகள் என்றுபேர். ரத்தம் குத்திவாங்குதல் Bleeding,) ரஸபஸ்மம் Calomel,) அஞ்சனக்கல் Antimony,) டிஜிடேலிஸ் Digitalis,) கால்சிகம் Colchicum,) இவைகளுக்கு ஷெ குணம் உண்டு. இவைகள் இருதய நடையைக்குறைக்கும் ; ரத்தத்தில் இருக்கும் பைபிரின் Fibrine என்னும்பசையின் அளவைக்குறைக்கும் ; மல ஜலங்களை அதிகப்படுத்தும். மேற்சொல்லிய அவுஷதங்களைப் பிரயோகிக்கும்போது, இதன் அடியில் வரும் சங்கதிகளையும் கியாபகத்தில் வைக்கவேண்டியது : மது மாம்சத்தைச் சேர்க்காமல் பத்தியமாய் வைக்கவேண்டியது ; மனச்சஞ்சலம் இல்லாமலும் தேக அழலை இல்லாமலும் படுக்கவைக்கவேண்டியது ; கையில் ஆவது, காலில் ஆவது காணும் தாபன ரோகத்துக்கு, நோயாளியைப் படுக்க வைக்க வேண்டியது ; சிரசைப்பற்றிய வியாதிகளுக்கு, உட்காரவைக்க வேண்டியது ; நுரையீரலைப்பற்றிய ரோகத்துக்கு Lungs, பேசாமல் இருக்கும்படிச் செய்யவேண்டியது ; நேத்திர ரோகத்துக்கு, பிரகாசவெளிச்சத்தை நீக்கவேண்டியது ; காது ரோகங்களுக்கு, நிஸ்ஸப்தமாய் இருக்கவேண்டியது ; நோயாளி இருக்கும் இடத்தில் நல்லகாற்றுவரும்படி கதவையும் ஜன்னல்களையும் திறந்துவைக்க வேண்டியது ; உஷ்ணம் - ௬௨ - டிக்கிரி இருக்கும்படிச் செய்யவேண்டியது. மும்மரவியாதிகள், கடுஞ்சுரங்கள், அதிதூலரோகம் Plethora,) ரத்தபித்த ரோகம் Acute Hæmorrhage,) சிரசு, நேத்திரம், இவைகளைப்பற்றிய ரோகங்கள், இந்தவியாதிகளுக்கு ஷெ சிகிச்சையைச் செய்யவேண்டியது.

---

பூதி நாஸ காரிகள்.—**Antiseptics**. *are medicines which prevent putrefaction.*

சரீரத்தில் உள்ளதாதுக்கள் அழிகிப்போக வொட்டாமல் செய்கிற மருந்துகள் சிலது உண்டு, அவைகளை டைபஸ்பீவர் Typhus Fever என்னும் ஜுரத்துக்கும், ஸினன்கி மலிக்னெ Cynanche Maligna என்னும் வாய்ரணத்துக்கும், அழிப்புண்களுக்கும், கேரீஸ் Caries) நீக்குரோஸிஸ் Necrosis) என்னும் எலும்

யைப் பற்றிய ரோகங்களுக்கும், உபயோகப்படுத்தப்படும். இந்தவகுப்பில் சேர்ந்த மருந்துகளாவது :—

குளோரின். Chlorine.
கறியுப்பு....Common Salt or Chloride of Sodium.... *Sodii Chloridum.*
குளோரி னேட்டட் லைம்....Chlorinated Lime...*Calx Chlorinata.*
தாது சம்பந்தமான திராவகங்கள்....Mineral Acids.
வெள்ளைப்பாஷாணம்....White Arsenic.. *Arsenious Acid.*
சவ்வீரம்....Corrosive Sublimate....*Hydrargyri Bichloridum.*
பொட்டிலுப்பு....Nitre...*Potassæ Nitras.*
படிக்காரம்....Alum...*Alumen.*
அன்னபேதி....Green Vitriol or Sulphate of Iron...*Ferri Sulphas.*
ஆல்கோஹல்....Alcohol.
கிரியாஸோட்....Creasote.
டானிக்ஆஸிட்....Tannic Acid.
சருக்கரை...Sugar...*Saccharum.*

அதிசகுளிர்ச்சி, அதிகவரக்ஷி, காற்றுப்படாமல் பதனம்பண்ணுதல், இவைகளும் அழிகிப் போகுதலைத் தடுக்கும். அடுப்புக்கரி புண்களுடைய நாற்றத்தை நீக்கும், வாய்நாற்றத்தையும் போக்கும்.

பூதி கந்த சாங்கிராமிக ரோக நிவர்த்தன காரிகள்.—DISINFECTANTS *are medicines which destroy miasmata, both odorous and inodorous.*

நாற்றங்களையும், தொற்றிக்கொள்ளுகிற வியாதிகளையும் போக்கும் மருந்துகளுக்கு பூதிகந்த சாங்கிராமிக ரோகநிவர்த்தன காரிகள் என்று பேர். விசருதல்-அதிக உஷ்ணம்-குளோரின் காஸ் Chlorine Gas) என்னும் வாயுவைக்கொண்டு ப்புகைப்போடல், Liquor Sodæ Chlorinatæ, Calx Chlorinata, இந்த மருந்துகளை ஜலத்தில் கரைத்து தெளிக்குதல், கந்தகப்புகை, கறிவுப்புத் திராவகப்புகை, Fumes of Hydrochloric Acid and Nitrous Acid என்னும்புகை, சாம்பிராணி, சந்தனக்கட்டை இவை முதலியவைகள் இந்தவகுப்பைச் சேர்ந்த மருந்து இனங்கள்.

---

அங்கா கர்ஷண நாஸ காரிகள்.—Antispasmodics. *Remedies which relieve Spasm or Cramp.*

இசிவு ரோகத்தைத்தணிக்கும் மருந்துகளுக்கு, அங்கா கர்ஷண நாஸ காரிகள் என்று பேர். இந்தமருந்துகள் நாலு வகைப்படும் :—

௧-வது. *Narcotic Antispasmodics.*—மஜ்ஜதந்துகளின் Nerves உணர்வையும் Sensibility, எரிச்சலையும் ? Irritability குறைத்து, வலியைநீக்கும் மருந்துகளாவது :—

அபினி Opium—பெல்லெடோனு Belladonna.

௨-வது. *Specific Antispasmodics.*—விசேஷ அங்கா கர்ஷண நாஸ காரிகள்-வெளிக்கு ஒன்றும் காட்டாமல் தேகத்துக்குள்ளவே வியாபித்து வலியைநீக்கும் மருந்துகளாவது :—

பெருங்காயம் Assafœtida.
கஸ்தூரி (மஸ்க்) Musk.
வெலிரியன் (ஜடாமாஞ்சி?)- Valerian
காஸ்டர் - Castor - *Castoreum.*

௩-வது. *Tonic Antispasmodics.*—நரம்புகளுக்குப் பலத்தைக் கொடுத்து, வலியைநீக்கும் மருந்துகளாவது :—

காடிக்காரம்...Nitrate of Silver...*Argenti Nitras.*
ரசதபஸ்மம் (வெள்ளிபஸ்மம்)...Oxide of Silver.
அம்மொனியே டெட்காபர்.. Ammoniated Copper.
பால்துத்தம்...Sulphate of Zinc...*Zinci Sulphas.*
(நாகபஸ்மம்?) ஆக்ஸைட் ஆவ் ஸிங்...Oxide of Zinc.
வெலிரி எநேட் ஆவ் ஸிங்...Valerianate of Zinc.

மேல்கண்ட மருந்துகளை வலி கண்டிருக்கும்போது கொடுக்க உதவாது; ஆகையால் ரோகம் நின்று இருக்குங் காலத்தில் கொடுத்தால், வலியை வரவொட்டாமல் தடுக்கும். இந்த மருந்துகளை நாள்பட சாப்பிடவேண்டியது; சிலதை வாரக்கணக்கு, அல்லது மாதக்கணக்காக கொடுத்தாலொழிய குணத்தைத்தராது.

௪-வது. *Stomachic Antispasmodics.*—தாறுமாறாய் இருக்கும் இரைப்பையின்தொழிலையும், சீரண உருபுகளின் தொழிலையும் கிரமப்படுத்தி, அதன் மூலமாய் நரம்புகளை சுவாபீகஸ்திதியில் கொண்டுவந்து வலியைத்தடுக்கிற மருந்துகள். பித்த உருபுகளின் தொழில் தாறுமாறுபட்டுக் காணும் வலிக்கு, சாந்தியான ரஸ சம்பந்தமான மருந்துகளைக்கொடுத்து குணப்படுத்த வேண்டியது. வயிற்றில் புளிப்பு அதிகப்படுவதினால் உண்டாகும் வலிரோகத்துக்கு, க்ஷாரங்களை Alkalies) கொடுத்து குணப்படுத்தவேண்டியது. வயிற்றில் இருக்கும் கிருமிகளால் உண்டாகும் வலிக்கு, கிருமிநாஸகாரி மருந்துகளைக்கொடுத்து தடுக்கவேண்டியது. வலிரோகங்களுக்கெல்லாம், மலம், ஜலம், தீபனம் இவைகளை கிறமத்தில் வைக்கவேண்டியது.

தாபன ரோகத்துக்கும், Inflammation) வலிக்கும் Spasm) இருக்கும் பேதத்தைக்கண்டுகொள்ளுவது, சிலவேளை கடினமாய் இருக்கும்: வலி ரோகத்தில் நோவு சடுதியில்காணும், அதிக உக்கிரமாய் இருக்கும், மெத்த தொந்தரவுபடுத்தும். மெதுவாய் விடாமல் அழுத்தினால், சாந்திப்படும், (தாபனமானால் அதிகப்படும்,) நின்று நின்று வரும். நாடி நடை தீவிரப்படாது, ஷை மருந்துகளால் ரோகம் நீங்கும், தாபனம் ஆனால், ரோகம் அதிகப்படுவதும் உண்டு.

---

வீரிய வர்த்தன காரிகள்.—Aphrodisiacs *are medicines which excite sexual desires or venereal power.*

காமத்தையும், போக ஸக்தியையும் அதிகப்படுத்தும் மருந்துகளுக்கு வீரிய வர்த்தன காரிகள் என்று பேர். இவ்விதகுணத்தை உடைய மருந்துகள் இல்லையென்று சிலர் சாதிக்கிறார்கள். ஆனால், தேகத்துக்கு பெலனைத் தருகிற மருந்துகளில் சிலது ஷை குணத்தை உடையதென்று எல்லோரும் அங்கீகரிப்பது உண்டு. கஞ்சாவை வீரியவர்த்தனகாரி என்பதுபேரோ ஒழிய அதற்கு அந்தக்குணம் இல்லை என்று டாக்டர் ஒஷானஸி (Dr.O'Shaughnessy) சொல்லுகிறார்.

எட்டிக்கொட்டை...Nux Vomica.
ஸ்ட்ரிக்னையின்...Strychnine.
தீமுறுகல்பா ஷாணம்...Phosphorus.
எரிவண்டு...Cantharides.

இவைகளுக்கு லேபனத்தை உண்டாக்கும் சக்தியுண்டு. இந்தமருந்துகளை நபும்ஸக தன்மையை உடையவர்களுக்குக் கொடுக்கலாம்.

வீரிய நாஸ காரிகள்.—Anaphrodisiacs *are medicines which subdue and destroy sensual habits and feelings.*

விரகதாபத்தைக் குறைத்து, போக சக்தியில்லாமல் செய்கிற மருந்துகளுக்கு, வீரியநாஸ காரிகள் என்று பேர். இந்தக்குணத்தை உடைய மருந்துகள் இல்லை என்று சிலர் நம்புகிறார்கள். இதன் அடியில் வரும் மருந்துகளுக்கு இந்தக் குணம் உண்டோ இல்லையோ சந்தேகம். காமவெறி *Nymphomania*) கொண்ட. பெண்களுக்கும், அடிக்கடி தற்செயலாய் இந்திரிய ஸ்கலிதப்படுகிற Spermatorrhœa) ரோகிகளுக்கும், இந்தமருந்துகளைப் பிரயோகிக்கப்படும். கர்ப்பூரம் Camphor,) ஹெம்லாக் Hemlock-*Conium*,) டார்ட்டர்மெடிக் Tartar Emetic,) உப்பினத்தைச் சேர்ந்த விரேசனங்கள் Saline Purgatives,) முதலியவைகள், இந்த வகுப்பைச்சேர்ந்தமருந்துகளாகும்.

---

ஸங்கோச காரிகள்.—Astringents. *Remedies which contract the animal fibre, and arrest fluxes, hæmorrhages, diarrhœa, &c.*

சரீரத்திலிருந்து வெளிப்படுகிற ரத்தம், சீழ் முதலிய திரவங்களை நிறுத்தும் பொருட்டு, நரம்பு, சதை முதலிய தாதுக்களைச் சுருங்கச்செய்கிற மருந்துகளுக்கு, ஸங்கோச காரிகள் என்று பேர். இந்தமருந்துகளை தேகத்து வெளிப்புறத்தில் இருந்துவடிகிற ரத்தத்தை நிறுத்த உபயோகப்படுத்தும்போது, ரக்தஸ்தம்பன காரிகள் Styptics) என்று சொல்லப்படும். துவர்ப்பு பதார்த்தங்களில் சிலது, ரத்தத்தில் இருக்கும் ஆல் புயூமென் Albumen) என்னும் திரவத்தை உறையப்படுத்திக்குணத்தைக்காட்டும்.

*Indications for their use.*—துர்ப்பெலனில் காணும் ரத்தம் வடிதலுக்கும், தாபனம் அனுசரிக்காமல் காணுகிற அதிசாரத்துக்கும், மதுமூத்திரரோகத்துக்கும், நாள் பட்ட பிரமேகத்துக்கும் *Gonorrhœa*,) தந்திமேகத்துக்கும் Gleet,) ஸ்திரீகளுக்குடைய மேகரோகத்துக்கும் Leucorrhœa,) அதிக கபரோகத்துக்கும், மூத்திரத்தில் சீழ் காணுகிற ரோகத்துக்கும், சீழ் அதிகமாய் வடிகிற ரணங்களுக்கும், அதிகவியர்வைக்கும், இவைகளைக்கொடுக்கலாம்.

*Contra-indications.*—தாபனம் Inflammation,) தாபனம் தொடர்ந்து வரும் ரத்தப்பெருக்கு அதிசாரம் முதலிய ரோகங்களில், இவைகளை உபயோகப்படுத்தலாகாது. இந்தவகுப்பில் சேர்ந்த அவுஷதங்களாவது :—

காடி. ... ... ... ...Vinegar... ... ... ...*Acetum.*
காலிக் ஆஸிட். ... ... Gallic Acid... ... ... *Acidum Gallicum.*
கந்தகத் திராவகம். ... ...Sulphuric Acid. ... ...*Acidum Sulphuricum.*
டான்னிக் ஆஸிட்.... ... Tannic Acid. ... ... *Acidum Tannicum.*
வில்வப் பழம்... ... ...Indian Bael. ... ... ...*Ægle Marmelos.*
படிக்காரம்... ... ... Alum... ... ... ... *Alumen.*
காலமையின். ... ... ...Calamine. ... ... ...*Calamina.*
காசுக்கட்டி... ... ... Catechu. ... ... ... *Catechu.*
கிரியா ஸோட்... ... ...Creasote. . ... ... ...*Creasotum.*
சுண்ணம். ... ... ... Chalk... ... ... ... *Creta.*
மயில்துத்தம்.—Sulphate of Copper. (Blue Vitriol.)—*Cupri Sulphas.*

அர்ஜட். ... ... ... Ergot... ... ... ... *Ergota.*
அன்னபேதி—Sulphate of Iron. (Green Vitriol.)—*Ferri Sulphas.*
மாசக்காய்... ... ... Galls... ... ... ... *Gallæ.*
மாதுளன். .. ... ...Pomegranate... ... ...*Granatum.*
செம்மரம். ... ... ... Logwood. ... ... ... *Hæmatoxylon.*
கைனோ... ... ... ...Kino. ... ... ... ...*Kino.*
ராட்டென்னி. ... ... Rhatany. ... ... ... *Krameria.*
மெடிக்கோ. ... ... ...Matico... ... ... ...*Matico.*
அஸிடேட் ஆவ் லெட்—Acetate of Lead. (Sugar of Lead.)—*Plumbi Acetas.*
ஸொலூஷன் ஆவ் டைட் அஸிடேட் ஆவ் லெட்—Solution of Diacetate of Lead (Goulard's Extract; Extract of Saturn)—*Liquor Plumbi Diacetatis.*
முருதார்சிங்கி... ... ...Oxide of Lead; (Litharge)—*Plumbi Oxydum.*
ஓக்பார்க்... ... ... ...Oak Bark... ... ... *Quercus.*
ரோஜா... ... ... ... Cabbage rose... ... ...*Rosa.*
வெங்காரம்... ... ...Borax. ... ... ... ...*Sodæ Biboras.*
டார்மென்டில். ... ... Tormentil... ... ... *Tormentilla.*
யூவா அர்சை... ... ...Uva Ursi (Whortleberry.)—*Uva Ursi.*
நாகபஸ்மம் ?. ... ...Oxide of Zinc. ... ... *Zinci Oxydum.*
வெள்ளைத்துத்தம்—Sulphate of Zinc. (White Vitriol.)—*Zinci Sulphas.*

---

துவக்ஸ் போட காரிகள்.—**Blisters** or **Vesicants.** *Substances which, when applied to the skin, irritate it and occasion a serous secretion, raising the epidermis, and inducing a vesicle.*

வெந்நீர்ப்பட்டு எழும்புகிற கொப்புளத்தைப் போல், நீர் உள்ள கொப்புளத்தை உண்டாக்குகிற மருந்துகளுக்கு துவக்ஸ்போட காரிகள் என்று பேர். சித்திரமூலம், கடுகு, கள்ளி இவை முதலியவைகள் உபயோகப் பட்டுவருகின்றன. சீமையில், கெந்தாரிடிஸ் Cantharides) என்னும் எரிவண்டை உபயோகப்படுத்துகிறார்கள்; இந்தியாவில், மைலேபெரிஸ் ஸை கோரியை Mylabris Chicorii) என்னும் வண்டை உபயோகப் படுத்துவதுண்டு. கொதித்தண்ணீர் வெகுசீக்கிரத்தில் பெரிய கொப்புளத்தை உண்டாக்கும். இந்த கொப்புளத்தில் இருக்கும் நீருக்கு, இங்கிலீஷில் ஸீரம் Serum) என்று பேர்.

*The objects for which blisters are employed.*—தேகத்துக் குள்ளிருக்கும் தாபனத்தை வெளிக்கிக் கொண்டுவரவும் - நீர்க்கோத்திருப்பதற்கு நரம்புகளை உச்சாகப்படுத்தி, அந்தநீரை வறட்டும்படிச் செய்து வீக்கத்தைக்கரைக்கவும் - ஓரிடத்தில் சேர்ந்திருக்கும் கெட்டநீரை, வேறொரு ஸ்தானத்துக்குக் கொண்டுவரவும் - தேகத்துக்குச்சுறுசுறுப்பிக்கவும்-இந்த மருந்துகளை உபயோகப்படுத்தப்படும்.

*Observations on their use.*—(க) தாபன ரோகத்து ஆரம்பத்திலும்- (உ) அண்ட கோஸம் Scrotum) ஸ்தனம், முதலிய மிருதுவான சருமமுடைய இடங்களிலும், பிளிஸ்டர் போட்டுப் புண்ணாக்கலாகாது. (ங) அக்கினி பிளாஸ்திரியைப் போட்டு - ம்உ அல்லது- உம்ச - மணிநேரம் வைப்பது வழக்கம், அதுயுக்தமல்ல; ரு - கா - மணிநேரம் சென்றபிறகு, பிளிஸ்டரை எடுத்து விட்டு, சூடான பதவாடையைப் (போல்டீஸ்) போட்டால், உடனே கொப்புளம் எழும்பும். (ச) கரப்

ப ஸ்திரிகளுக்கு மார்பிலும், ஸ்தனங்களிலும், அக்கினி பிளாஸ்திரியைப் போட்டுப்புண்ணாக்கலாகாது.—

*To obviate the Strangury.*—எரிவண்டு பிளாஸ்திரியால் சிலவேளை மூத்திரக்கிரிச்சரம் Strangury) காணும். பிளிஸ்டரைப்போட்டு எரிச்சலுண்டான உடன் அதை எடுத்துவிட்டு, மெழுகு களிம்பைப் போட்டால் கொப்புளம் எழும்பும்; அல்லது, அக்கினி பிளாஸ்திரியின்மேல் சன்னகடிதத்தைப் போட்டு மூடியாவது போடலாம். இவ்விதமாய்ச் செய்தால், நீர்ச்சுருக்கு காணாது. அதிகமாய் ஜலம் சாப்பிட்டாலும் நீர் எரிச்சல் தணியும்.

குழந்தைகளுக்கு, பிளிஸ்டர் பிளாஸ்திரியை துணிமேல் தடவி அதன்மேல் எண்ணெயைப்பூசி, நோயிருக்கிற இடத்தில்போட்டு, தோல் சிவந்த நிறமாகிறவரையில் வைத்திருந்து பிறகு எடுத்துவிட்டு, சூடானபதவாடையை அந்தவிடத்தில் போட்டால், ௨-௩ மணி நேரத்தில் கொப்புளம் எழும்பும், அந்தக்கொப்புளத்தைக் கத்தரித்துவிட்டு, மீன் கொழுப்பு இளகியகளிம்பைப் போட்டுக்கொண்டுவந்தால், கெடுதி உண்டாகாமல் சீக்கிரத்தில் ரணம் உலர்ந்துபோகும்.

*Open or Perpetual Blisters.*—பிளிஸ்டர் போட்டு, புண்ணான இடத்தை ஆற்றாமல், சிலநாள் சீழ்வடியும்படிச் செய்ய வேண்டியதாக இருக்கும்; அதற்கு ஸெபைன் ஆன்ட்மெண்டு Sabine Ointment) என்னும் களிம்பைப் போடுவது வழக்கம்; சிலர் எரிவண்டு பிளாஸ்திரியை உபயோகப்படுத்துகிறார்கள்; சிலர் அந்தஇடத்தில் பிளிஸ்டரை அடிக்கடிப்போட்டு புண்ணை ஆற்றாமல்வைப்பதும் உண்டு.

உன்மாதரோகத்துக்கு Insanity) பிளிஸ்டரை, பிடரியிலும் Nape of the neck)-பாரிசவாதம் Paralysis,) அபஸ்மாரகம் Epilepsy) முதலிய நரம்பைப்பற்றியரோகங்களுக்கு, முள்ளந்தண்டின் பேரிலும் Spine)-சூதகசூலை Dysmenorrhœa,) ஸ்திரீகளுக்குடைய மேகரோகம் Leucorrhœa,) குழந்தைகளுக்குக் காணும் சொட்டுமூத்திரம் Incontinence of urine in children) இவைகளுக்கு, திரிகஸ்தானத்திலும் Sacrum)-வாந்திரோகத்துக்கு Vomiting,) அநாகத ஸ்தானத்திலும் Epigastrium)-நேத்திரரோகத்துக்கு Diseases of the eye,) கன்னப்பொறி Temple,) காது பின்பக்கம் Behind the ears,) பிடரி Nape of the neck,) புருவத்தின் மேல்புறம் Above the eyebrow,) இந்தஸ்தானங்களிலும்—சந்திகசிலேஷ்மரோகத்தில் Rheumatism,) மூட்டுக்கு மேல்புறத்திலும்—காதுநோவுக்கு Otitis,) காதுக்குப் பின்புறத்திலும் Behind the ears,) போட்டு சிகிச்சைசெய்தால், ஷ ரோகங்கள் குணமாகும்.

---

**உதர வாத ஹர காரிகள்.**—Carminatives *are medicines which, when taken into the stomach, cause a sensation of warmth, allay pain, and cause the expulsion of flatus.*

வயிற்றில் உஷ்ணத்தை யுண்டாக்கி, நோயைத்தணித்து, வாத உபத்திரவத்

தை நீக்குகிற மருந்துகளுக்கு உதரவாதஹர காரிகள் என்று பேர். இந்தவகுப்பில் உள்ள மருந்துகளாவன :—

சதகுப்பைத்தயிலம், Oil of Dill—*Oleum Anethi.*
சோம்புத்தயிலம், Oil of Aniseed—*Oleum Anisi.*
பெப்பர்மின்ட்தயிலம், Oil of Peppermint—*Oleum Menthæ Piperitæ.*
கிராம்பு, Cloves—*Caryophylli.*
லவங்கப்பட்டை, Cinnamon—*Cinnamomum.*
ஏலம், Cardamoms—*Cardamomi.*
ஓமம், Bishop's weed—*Sison Ammi,* முதலியவைகளாம்.

---

விரேசன காரிகள்.—Cathartics or Purgatives *are medicines which produce alvine evacuations.*

பேதிமருந்துகளுக்கு, விரேசன காரிகள் என்று பேர். இவைகள் மூன்று வகைப்படும் ; அதாவது :—

கடும்பேதி மருந்துகள்.—Drastic Purgatives. *Those which are violent in their operation.* வயிறுகடுத்து அதிகமாய்ப் பேதியாகச் செய்கிற மருந்துகளுக்கு, இங்கிலீஷில்-டிராஸ் டிக் பர் கெடிவ்ஸ்-என்று பேர்.

ஜலவிரேசன காரிகள்.—Hydragogues. *Those which produce copious watery stools.* தண்ணீர் தணீராய்ப் பேதியாகச்செய்கிற மருந்துகளுக்கு, இங்கிலீஷில்-ஹைட்ரோ காக்ஸ்-என்று பேர்.

மல காரிகள்.—Aperients or Laxatives. *Those which gently open the bowels.* சாந்தமாய் பேதியாகச்செய்கிற மருந்துகளுக்கு, இங்கிலீஷில்-லாக்ஸெ டிவ்ஸ்-என்று பேர்.

*The objects for which they are employed.*—பேதிக்குச்சாப்பிடுவதின் பிரயோஜனம்.—வயிற்றிலிருக்கும் துர்மலங்களை வெளிப்படுத்தும் ; இரத்தத்தில் இருக்கும் சீரம் Serum) என்கிற நீரைக்குறைக்கும் ; பித்த நீரை அதிகமாய்ச்சுரப்பிக்கும் ; சரீரமெங்கும் பரவி இருக்கும் ரஸதாதுக்களையும், ஸ்திரிகளுடைய கர்ப்ப கோசத்தையும் Uterus) தூண்டி அவைகளின் தொழில்களை சரியாய் வியாபரிக்கச்செய்யும்.

*Observations on their use.*—விரேசனங்களுக்கு இயல்பாயிருக்கும் குணங்களில் சிலது இதன் அடியில் விவரிக்கப்படும்.

க - வது. விரேசன மருந்துகளெல்லாம், பேதியானபின்பு மலபந்தத்தை யுண்டாக்கும் ; இந்த குணத்தை முக்கியமாய் ரேவல்சின்னியில் காணலாம். சிற்றாமணக்கு எண்ணெய், உப்பு, இவைகள் மலச்சிக்கலை அதிமாய் உண்டாக்காது.

உ - வது. ரஸபஸ்மம், ஜாலப், கோல்சிகம் Colchicum) முதலிய மருந்துகள், டியோடினம் Duodenum) என்னும் குடலைத்தூண்டி, பித்தநீரை அதிகப்படுத்தும் ; மூஷாம்பரம், ஸ்காமொனி Scammony,) முதலியபேதிமருந்துகள், பெருங்குடலிலும், ஆசனத்து மேற்புறத்திலும் வியாபிக்கும். உப்பு, எண்ணெய், இவைகள் குடல் முழுதும் வியாபிக்கும்.

௩-வது. மூஷாம்பரம், நேர்வாளத்தயிலம், ரேவல்சின்னி முதலியவைகளை தேகத்தின்மேல் தடவினபோதிலும் பேதியாகும்.

௪-வது. தேகஸ்திதியையும், வாத பித்த சிலேஷ்மங்களுடைய விகல்பத்தையும், இடியோஸிங்கிரஸி Idiosyncrasy என்னும் சரீர பாகத்தையும் கண்டறிந்து, அதற்குத்தக்கபடி பேதிமருந்துகளை உபயோகிக்கவேண்டியது. துர்ப்பெலத்தோடுதேகத்தில் ரத்தம் இல்லாமலிருக்கிறவர்களுக்கும், வயதுசென்றவர்களுக்கும், உப்பு பேதிகொடுக்கலாகாது. மூலவியாதியை யுடையவர்களுக்கு, மூஷாம்பர பேதி உதவாது. நேர்வாளம், இலெடீரியம் Elaterium முதலிய கடும்பேதிமருந்துகளை அவஸியமில்லாமல் கொடுக்கலாகாது.

௫-வது. மாதாந்த ருதுகண்டிருக்கிற பெண்களுக்கு நிமித்திய மில்லாமல் பேதிமருந்துகளைக் கொடுக்கலாகாது. கர்ப்பிணிகளுக்கு வெகுஜாக்கிரதையுடன் பேதிக்குக் கொடுக்கவேண்டியது ; அவர்களுக்கு மூஷாம்பரபேதி உதவாது ; சிற்றாமணக்கு எண்ணெய், நில ஆவாரை லேகியம் முதலிய சாந்தமான பேதிமருந்துகளைக் கொடுக்கலாம்.

௬-வது ; குழந்தைகளுக்கும், வயதுசென்றவர்களுக்கும், லவண பேதிமருந்துகள் கூடாது ; வரியாத்துக் கிழங்கு சூரணம் கொடுக்கலாம்.

௭-வது. அடிக்கடி பேதிக்குச் சாப்பிடுகிறவழக்கம் கெட்டது ; அதனால் அஜீரண முதலிய கெட்டவியாதிகள் சம்பவிக்கும்.

௮-வது. சிலருக்கு இரண்டு மூன்று நாளைக்கு ஒருதரம் மலசுத்தியாகும் ; அதுதேகத்தின் சுபாவம் ; அதனால் தேகசவுக்கியம் கெடாது ; அவாளுக்குபேதிக்கு அடிக்கடி கொடுப்பது சரி அல்ல.

௯-வது. உப்புபேதி மருந்துகள் ௩-அல்லது ௪-மணி நேரத்தில் பேதியாகச்செய்யும் ; அவைகளை ஜுரங்களுக்கும், வியாதிகளின் மும்மரஸ்திதியிலுங் கொடுக்கலாம். நேர்வாள எண்ணெய்-௧-அல்லது-௨-மணி நேரத்தில் பேதியாகச்செய்யும். ஜாலப், ஸ்காமொனி, மக்கி, நில ஆவாரை, முதலியவைகள், ௩-அல்லது ௪-மணி நேரத்தில் பேதியாகச்செய்யும். ரேவல் சின்னி சிற்றாமணக்கு எண்ணெய் முதலியவைகள், ௪-அல்லது, ௬-மணி நேரத்தில் பேதியாகச்செய்யும். மூஷாம்பரம் தாமஸமாய்ப் பேதியாகச்செய்யும்.

௰-வது. மூஷாம்பரத்துடன் கர்ப்பூரம் சேர்த்துக்கொடுத்தால், மூஷாம்பரத்தின் துர்க்குணம் மாறி சாந்தியாய் பேதியாகும். கலிங்காதியுடன் (ஆற்றுத்தும்மட்டி) Colocynth, கர்ப்பூரஞ் சேர்த்துக்கொடுத்தால் நன்றாய் பேதியாகும். வயிற்றுவலிரோகங்களுக்கு, பேதிமருந்துடன் அபினிசேர்த்துக் கொடுக்கவேண்டியது. நில ஆவாரையை உப்புடன் சேர்த்தும், ரஸபஸ்மத்தை கலிங்காதி முதலியமெழுகுகளுடன் சேர்த்தும் கொடுத்தால், செவ்வையாய் பேதியாகும். மூஷாம்பரத்துடன் குரோசானி யோமச்சத்துச் சேர்த்துக்கொடுத்தால், மூஷாம்பரத்துக்குடைய துர்க்குணம் நீங்கும்.

௰௧-வது. எதையும் விழுங்கக் கூடாத ஸ்திதியில், பேதிக்குக் கொடுக்க

வேண்டியபோது- க - உ - துளி, நேர்வாள எண்ணெயை நாக்கில் தடவினால் பேதியாகும்; அல்லது தகுந்த பேதிமருந்துகளைப் பக்குவப்படுத்தி ஆஸன வழியாய் ஆவது பிரயோகிக்கலாம்.

௰௨ - வது. சாப்பிட்ட உடனே, விரேசனங்களைக் கொடுக்கலாகாது.

இந்த வகுப்பில் சேர்ந்த மருந்துகளாவது.

LAXATIVES.—மலகாரிகள்.

- கந்தகம். Sulphur.
- மாக் நீஷியா. Magnesia.
- மேனு. Manna.
- சரக்கொன்றை. Cassia.
- புளி. Tamarind–*Tamarindus*.
- புருன்ஸ். Prunes–*Prunus*.
- ரோஜாப்பூ. Rose–*Rosa*.
- சீமை அத்திப்பழம். Fig–*Ficus*.
- வாதுமைக்கொட்டை எண்ணெய். Almond Oil–*Oleum Amygdalæ*.
- ஆலீவ் எண்ணெய். Olive Oil–*Oleum Olivæ*.
- அலிவலி எண்ணெய். Linseed Oil–*Oleum Lini*.
- தேன். Honey–*Mel*.

PURGATIVES —கடும்பேதிமருந்துகள்.

- நேர்வாளம். Croton.
- ஆமணக்கு எண்ணெய். Castor Oil *Oleum Ricini*.
- இலெடீரியம். Elaterium.
- ஆற்றுத்தும்மட்டி. Colocynth–*Colocynthis*.
- ஸ்காமொனி. Scammony–*Scammonium*.
- கரிய போளம். Aloes.
- ரஸபஸ்மம். Calomel.
- கோல்சிகம். Meadow Saffron–*Colchicum*.
- மக்கி. Gamboge–*Cambogia*.
- கடுகுரோகணி. Black Hellebore–*Helleborus Niger*.
- ரஸ சுண்ண பஸ்மம். Grey powder–*Hydrargyrum cum Creta*.
- சூதமெழுகு. Blue Pill–*Pilulæ Hydrargyri*.
- ஜாலப். Jalap–*Jalapa*.
- சிவதைவேர்–*Convolvulus Turpethum*.
- ரேவல் சின்னி. Rhubarb–*Rheum*.
- நிலவாவாரை. Senna–*Senna*.
- கர்ப்பூரத்தயிலம். Oil of Turpentine–*Oleum Terebinthinæ*.
- சதுரக்கள்ளி. Euphorbium.
- கறி உப்பு. Common Salt.

HYDRAGOGUES.—ஜலவிரேசனகாரிகள்.

- சீமை இந்துப்பு. Epsom Salts–*Magnesiæ Sulphas*.
- திராக்ஷ உப்பு. Cream of Tartar–*Potassæ Bitartras*.
- ஸல்பேட் ஆவ் பொடாஷ். Sulphate of Potash–*Potassæ Sulphas*.
- டார்ட்ரேட் ஆவ் பொடாஷ். Tartrate of Potash–*Potassæ Tartras*.
- பாஸ்பேட் ஆவ் ஸோடா. Phosphate of Soda–*Sodæ Phosphas*.
- ரோசல் ஸால்ட். Rochelle Salt–*Sodæ Potassio-tartras*.
- குளோபர்ஸ் ஸால்ட். Glauber's Salt–*Sodæ Sulphas*.

---

விரணகாரிகள்.—**Caustics** or **Escharotics**. *Substances which destroy the tissues, and produce Slough or Eschar.*

தேகதாதுக்களைக் கெடுத்துப் புண்ணுக்குகிற அவுஷதங்களுக்கு, விரணகாரிகள் என்று பேர். காரங்கள்போட்டு வேகவைத்த துர்மாம்சத்துக்கு இங்கிலீஷில் Slough or Eschar) என்று பேர். காடிக்காரம், சங்குத்திராவகம் Nitric Acid) முதலியகாரங்களுக்கு இங்கிலீஷில், பொடென் ஷல் காட்ரீஸ் Potential Cauteries என்று பேர். சூடுகோல், மஞ்சள் சுட்டுவைக்குதல் முதலியவைகளுக்கு இங்கிலீஷில், ஆக்சுயல் காட்ரீஸ் Actual Cauteries) என்று பேர். காரங்கள்வைத்தால் சிலவேளை ஜுரம் காணுவதும் உண்டு. துர்மாம்ஸத்தை நீக்கவும், ரணத்தில் அதிகமாய் வளர்ந்திருக்கும் சதையை அழிக்கவும், ரத்தப்பெருக்கை நிறுத்தவும், புண்ணுக்கிச் சீழ் வடியும்படிச்செய்யவும், வித்திருதிகட்டிகளை உடையும்

படிச் செய்யவும் காரங்கள் முக்கியமாய் பிரயோகிக்கப்படும். இந்தவகுப்பில் சேர்ந்தமருந்துகளாவது :—
காடித்திராவகம், Acetic Acid—*Acidum Aceticum.*
கறி உப்புத்திராவகம், Hydrochloric Acid; Muriatic Acid—*Acidum Hydrochloricum* or *Muriaticum.*
பொட்டி லுப்புத் திராவகம் (சங்குத்திராவகம்,) Nitric Acid—*Aqua Fortis.* [*Acidum Nitricum.*
கந்தகத்திராவகம், Sulphuric Acid; Oil of Vitriol—*Acidum Sulphuricum.*
வெள்ளைப்பாஷாணம், Arsenious Acid—*Acidum Arseniosum.*
நவக்ஷாரவாயு ஜெயந்ர், Stronger Solution of Ammonia—*Liquor Ammoniæ Fortior.*
காடிக்காரம், Nitrate of Silver—*Argenti Nitras.*
துருசி (துத்தம்), Blue Stone or Vitriol; Sulphate of Copper—*Cupri Sulphas.*
நைட்ரிக் ஆக்ஸைட் ஆவ் மெர்கியுரி, Nitric Oxide of Mercury; Red Precipitate—*Hydrargyri Nitrico-Oxidum.*
காஸ்டிக் பொடாஷ், Caustic Potash; Hydrate of Potash—*Potassæ Hydras.*
குளோரைட் ஆவ் ஷிங்க்—Chloride of Zinc—*Zinci Chloridum.*
சன்னாம்பு-பொறித்தப் படிக்காரம்-சூடுக்கோல், Red hot iron—மாக்ஸா Moxa.

---

பித்த காரிகள்.—**Cholagogues** *are medicines which promote the secretion or excretion of bile.*

பித்த நீரை அதிகப்படுத்துகிற மருந்துகளுக்கு பித்தகாரிகள் என்று பேர். இந்த மருந்துகளை, ஈகுர்திகண்டம் Liver,) பித்தப்பை Gallbladder,) இவைகளின் செய்கை மந்தப்பட்டிருக்கும் போதும், அக்கினிமந்த ரோகத்துக்கும் Dyspepsia,) கொடுக்கலாம். இந்தவகுப்பில் சேர்ந்த மருந்துகளாவது :—ரசம், கோல்சிகம் Colchicum,) டெராக்ஸிகம் Taraxacum,) இபிகாகியுஎனு Ipecacuanha,) ஸொர்ணபேதி திராவகம் Nitro-Hydrochloric Acid,) மூசாம்பரம் Aloes,) ரேவல் சின்னி Rhubarb,) முதலியவைகளாம்.

---

ஷிளிக்த காரிகள்.—**Demulcents** *are medicines which allay irritation by their soothing properties.*

உட்கொண்டால், தாதுக்கள் எரிச்சலைத்தணித்து, தாதுக்களைத் துவளச்செய்கிறமருந்துகளுக்கு, ஷிளிக்தகாரிகள் என்று பேர். இருமல், சீதபேதி, நீர்ச்சுருக்கு, பிரமேகம், முதலிய ரோகங்களுக்கும், நஞ்சுண்டோருக்கும், இந்தமருந்துகளைக்கொடுக்கலாம். இந்தவகுப்பிலுள்ள மருந்துகளாவது :—
கிளாம்பிசின், Gum Arabic—*Acacia Gummi*-மீன் கொழுப்பு, Cetaceum.
அந்தி இலை, Common Mallow-சப்பரிசி, Sago-தேன், Honey—*Mel.*
வாதுமைக்கொட்டை, Sweet Almond—*Amygdala Dulcis.*
அதிமதுரம், Liquorice—*Glycyrrhiza.*
பார்லி அரிசி, Barley—*Hordeum Distichon.*
அலிவிவிதை, Linseed—*Linum Usitatissimum.*
அரோருட், Arrowroot—*Maranta*-பால்—Milk—*Lac.*
அரிசி, Rice—*Ozyza Sativa*-மரவள்ளிக்கிழங்கு மாவு—Tapioca.
கஞ்சித்தண்ணீர், Conjee Water—*Aqua Oryza*-முட்டை—Egg—*Ovum.*
அத்திப்பழம், Fig-சருக்கரை, Sugar—*Saccharum.*
வெந்நீர், Warm Water—*Aqua Calidus* (62°—65° *F.*)
எண்ணெய் இனங்கள், Vegetable Oils.

EMOLLIENTS *are medicines which diminish the heat, pain, and swelling of the parts to which they are applied.*

சூடு, நோவு, வீக்கம், இவைகள் தணியும்படி மேலுக்கு உபயோகிக்கும் ஸினிக்த காரிகளுக்கு, இங்கிலீஷில்-இம்மாலி என்ட்ஸ்-என்று பேர். பதவாடைகள், வெந்நீர் ஒற்றிடங்கள், பூசுத்தயிலங்கள், மெழுகுக்களிம்புகள் Cerates) கொழுப்புக்களிம்புகள் Ointments,) முதலியவைகளுக்கு, ஷை குணம் உண்டு; இவைகளை, தாபனகுணம் உடைய ரோகங்களுக்கும் Inflammatory affections,) வலிகளுக்கும் Spasms,) காயங்களுக்கும், வித்திருதி கட்டிகளுக்கும், வாதநோய்களுக்கும் Neuralgic affections,) உபயோகிக்கத் தகுதியானவைகள். கிளிஸரீன் Glycerine) என்னும் பசை, மேல்கண்ட பதார்த்தங்களுக்கெல்லாம் சிரேஷ்டமானது. சூடும் ஈரமும் பட்டால், ஷை மருந்துகளுக்குடைய செய்கை அதிகப்படும்.

---

சோபா நாஸ காரிகள்.—**Deobstruents (Liquefacients, Resolvents)** *are medicines which cause the removal of indurations, enlargements, &c.*

வீக்கம், கட்டி, இவைகளைக் கரைக்கிற மருந்துகளுக்கு, சோபா நாஸ காரிகள் என்று பேர். ஆல்கெலீஸ் Alkalies) என்னும் காரங்கள், ரசம், ஐயொடைன் Iodine,) அஞ்சனக்கல் முதலியவைகள், இந்த இனத்தைச் சேர்ந்த மருந்துகள்.

---

ஸ்வேத காரிகள்.—**Diaphoretics (Sudorifics)** *are medicines which promote perspiration.*

வியர்வையுண்டாக்குகிற மருந்துகளுக்கு, ஸ்வேத காரிகள் என்று பேர். அதிகவியர்வை வடியும்படிச் செய்கிற மருந்துகளுக்கு, இங்கிலீஷில் Sudorifics என்று பேர். இந்தச்செய்கையையுடைய அவுஷதங்கள், சருமத்தைப்பற்றியாவது, ரத்தப்பாய்ச்சலை தீவிரப்படுத்தியாவது, அல்லது, ஷை இரண்டு செய்கைகளாலாவது, வியர்வையை பிறப்பிக்கும். உப்பினங்கள், ஜலம் அதிகமாய் உட்கொள்ளல், இவைகள் சருமத்தைப்பற்றி வியர்வையைப் பிறப்பிக்கும். உஷ்ண சுவேதகாரிகள் Stimulant Diaphoretics,) சாராய இனங்கள், கஷ்டமானவேலை, இவைகள், ரத்த ஓட்டத்தைத் தீவிரப்படுத்தி, வியர்வையை உண்டாக்கும். வெந்நீர் குடிக்குதல், உஷ்ணம் தேகத்தின்மேல் படுதல், வாந்தியாகுதல், குமட்டிக் கொண்டு இருக்குதல், இவைகளும், வியர்வையை உண்டுபண்ணும்.

*Their action is promoted.*—ரத்தங்குத்தியவாங்கினபிறகு, வியர்வை மருந்துகளைக்கொடுக்கல்—அதிகஜலம் சாப்பிடுதல்—கம்பளிச்சொக்காய் தரித்துக்கொள்ளல்—காங்கையான இடத்தில் இருக்குதல்—வியர்வை பிறந்தபிறகு குளிர்ந்த ஜலம் குடிக்காமல் இருக்குதல்—பாதங்களை வெந்நீரில் வைத்துக்கழுவுதல், இவைமுதலியவைகள், வியர்வையை அதிகப்படுத்தும்.

*Their action is retarded.*—மூத்திர வர்த்தகாரிகள்—விரேசனங்கள்—குளிர்க்காற்று, இவைகள் வியர்வையைக் குறைக்கும்.

*Remarks on their Use.*—(க) குளிர்ந்த ஜலம், வெந்நீர், இவைகளை மேலுக்கு ஊற்றிக்கொள்ளுதல், வேது பிடிக்குதல், தேய்க்குதல், இவைகள், மருந்து சகாயம் இல்லாமலே, வியர்வையை உண்டாக்கும்.

(உ) ராத்திரிபடுத்துக்கொள்ளும் போதாவது, அல்லது, நித்திரையிலிருந்து எழுந்த உடனேயாவது, சுவேதகாரிகளைக் கொடுக்கத்தகுதியானகாலமாம்.

(ஙு) வியர்வையை நிறுத்தவேண்டியபோது, சூடுள்ளதுணியால் தேகத்தைத் துடைத்துலர்த்தி, கம்பளி ஆடையைத்தரித்து, குளுங்காற்றுப்படாமல் இருந்து, பிறகு கைகளைமாத்திரம் காற்றுப்படவைத்து, கொஞ்சநேரம் சென்றபிறகு போர்வையைமெதுவாய் எடுத்து விடவேண்டியது. (Dr. A. T. THOMPSON.)

(ச) தாபனக் குணமுடைய ரோகங்களுக்கு உஷ்ண சுவேத காரிகளைக் கொடுக்கலாகாது.

(ரு) ஜலரூப சுவேத காரிகள், வெகு சீக்கிரத்தில் குணந்தரும். சூரணங்களானால் அதிகமாய் ஜலம் சாப்பிட வேண்டியது.

(சு) வியர்வைக்கு மருந்து சாப்பிட்ட பிறகு, காற்று தேகத்தில்படாமல் போர்த்திக்கொண்டு, சயனித்திருக்கவேண்டியது. சீதளக்காற்றுப் பட்டால் மூத்திரம் அதிகரித்து, வியர்வை மட்டாகும்; வியர்வை அதிகமானால், மூத்திரம் குறைந்துவிடும். இந்தவகுப்பிலுள்ள மருந்துகளாவன :—

சொலூஷன் ஆவ் அஸிடேட் ஆவ் அம்மோனியா, Solution of Acetate of Ammonia—*Liquor Ammoniæ Acetatis.*
நீலாஞ்ஜன சிந்தூரம், Oxysulphuret of Antimony.
கம்பவுன் ஆன்டிமோனியல் பவுடர், Compound Antimonial Powder—*Pulvis Antimonii Compositus.*
டார்டர் மெடிக், Tartar Emetic—*Antimonii Potassio Tartras.*
குவயாகம், Guaiacum - வல்லாரை, *Hydrocotyle Asiatica.*
டோவர்ஸ் பவுடர், Dover's powder—*Pulvis Ipecacuanhæ Compositus.*
மெஜீரியன், Mazereon - சீமைநன்னாரி, Sarsaparilla—*Sarza.*
ஸாஸ்ஸபராஸ், Sassafras - ஜேம்ஸ் பவுடர், James's powder - கந்தகம்—Sulphur.
ஸ்பிரிட்ஸ் ஆவ் நைடர், Spirits of Nitre - வெந்நீர் - தேத்தண்ணீர், Tea.

---

ஜல வர்த்தன காரிகள்.—**Diluents** *are medicines which increase the watery portion of the blood, and render several of the secretions and excretions less viscid.*

ரத்தநீரை அதிகரிக்கிற மருந்துகளுக்கு, ஜலவர்த்தன காரிகள் என்று பேர். இவைகளை அதிகமாய்ச் சாப்பிடவேண்டியது. வியர்வை மருந்துகள், மூத்திரபேதிகள், வாந்தி மருந்துகள், இவைகளுடைய செய்கையை இந்தமருந்துகள் விருத்திப்படுத்தும்.

சோகைரோகத்திலும் Anæmia,) அஜீரணரோகத்திலும் Dyspepsia,) பகுமூத்திரரோகத்திலும், அதிகஜலம் சாப்பிடலாகாது.

*Diluents are indicated.*—தாபனரோகங்கள், ஜ்வரங்கள், வாந்திபேதி, கல்லடைப்பு, மூத்திரகிரிச்சிரரோகம், வெள்ளைவிழுதல், இவை முதலியரோகங்களுக்கு, இந்த வகுப்பில் உள்ள மருந்துகளைக் கொடுக்கலாம்.

இந்தவகுப்பில்சேர்ந்த மருந்துகளாவன :—பார்லி அரிசிகஞ்சி, கஞ்சித்த ண்ணீர், மழைநீர், ஊற்று நீர், ஆவி நீர் Distilled Water,) தேத்தண்ணீர் Tea,) முதலிய வைகளாம்.

---

மூத்திர வர்த்தன காரிகள்—மூத்திர பேதிகள்.—**Diuretics**. *Remedies which cause an increased secretion of urine.*

மூத்திரம் அதிகமாய் உண்டாக்குகிற மருந்துகளுக்கு, மூத்திரவர்த்தன காரிகள் என்றுபேர்.

*The objects for which they are employed.*—(க) வியாதியால் அளவில் குறைந்த மூத்திரத்தை, சுவாபீக ஸ்திதியில் கொண்டுவரவும், (உ) விஷ பதார்த்தங்களை தேகத்திலிருந்து வெளிப்படுத்தவும், (ரு) தாபன குணத்தை யுடைய ரோகங்களைப் போக்கவும், (ச) தேகத்தில் எரிய நீரை, வற்றச்செய்யவும், (ரு) ஜுவரத்தில், விஷ நீரை வெளிப்படுத்தவும், மூத்திர பேதி மருந்துகளை உபயோகப் படுத்தப்படும்.

*Their operation is promoted.*—குத்தி ரத்தம் வாங்குதல், அதிகஜலம் உட்கொள்ளல், குளிர்ச்சியான இடத்தில் இருக்குதல், இவைகளால் மூத்திரபேதி மருந்துகளுடைய செய்கை அதிகப்படும்.

*Their action is impeded.*—அபினி, பேதிமருந்துகள், வியர்வைமருந்துகள், ஜலம் சாப்பிடாமல் இருக்குதல், இவைகள் மூத்திரபேதிகளுடைய குணத்தைக் கெடுக்கும்.

*Diuretics are indicated.*—நீர்க்கோர்வை, மகோதரம், இருதயரோகம், தாபனரோகம், இவைமுதலிய ரோகங்களுக்கு, மூத்திரபேதி மருந்துகள்கொடுக்கலாம்.

இந்தவகுப்பில் சேர்ந்த மருந்துகளாவன.

ஸ்பிரிட் ஆவ் நைட்ரிக்ஈதர், Spirits of Nitric Ether—*Spiritus Ætheris Nitrici.*
புகு, Buchu - நன்னாரி வேர், Indian Sarsaparilla.
மக்கி, Gamboge - எரிவண்டு, Blistering Fly.
டிஜிடேலிஸ், Digitalis - ஜூனிபர், Juniper.
பெரீரா, Pareira - கோல்சிகம், Colchicum.
அஸிடேட் ஆவ் போடாஷ், Acetate of Potash—*Potassæ Acetas.*
திராக்ஷ உப்பு, Cream of Tartar—*Potassæ Bitartras.*
பொட்டிலுப்பு, Nitre, Saltpetre—*Potassæ Nitras.*
சீமைநரி வெங்காயம், Squill—*Scilla* - கர்ப்பூரத் தயிலம், Turpentine.
வெங்காரம், Borax—*Sodæ Biboras* - குங்கிலியத் தயிலம், Copaiba.
வால்மிளகு, Cubebs—*Cubebæ* - யூவா ஆர்ஸை, *Uva Ursi.*
ஸொலூஷன் ஆவ் போடாஷ், Solution of Potash—*Liquor Potassæ.*
ஐயோடயின், Iodine - ஐயோடயிட் ஆவ் பொடாஸியம், Iodide of Potassium.
ரஸபஸ்மம், Calomel - முதலிய வைகளாம்.

---

வமன காரிகள்.—Emetics. *Remedies which occasion vomiting.*

வாந்தி உண்டாக்குகிற மருந்துகளுக்கு, வமனகாரிகள் என்று பேர். சிற்றாமணக்கெண்ணெய், குங்கிலியத்தயிலம், இவைகள் எடுத்துக்கொண்டால் சிலருக்

கு வாந்தியாகும்; வாந்தியானபோதிலும், இவைகள் வமனகாரிகள் அல்ல. பார்வைக்கு அசங்கியமான வஸ்துக்கள், துர்வாசனை, இவைகளாலும் வாந்தியாகும். எதையும் மிதத்துக்கு அதிகமாய்ச் சாப்பிட்டாலும் வாந்தியாகும்.

*The objects for which they are employed.*—சீரணிக்காமல் இரைப்பையிலிருக்கும் போஜனம், நஞ்சு, முதலிய கெட்டபதார்த்தங்களை வெளிப்படுத்தவும், ரத்த ஓட்டத்தைக்குறைத்து, மாம்ஸதாதுக்களின் பெலத்தை அடக்கவும், பித்த நீர் வியர்வை இவைகளை அதிகப்படுத்தவும், கபத்தைத்தாராளமாய் வெளிப்படுத்தவும், உள் அவயவங்களில் காணும் ரத்தப்பெருக்கை Internal Hæmorrhage) நிறுத்தவும், தொண்டையிலாவது, சுவாஸவழியிலாவது அடைபட்டிருப்பதை வெளிப்படுத்தவும், வாந்திக்குக் கொடுக்கப்படும்.

*Contra indicated.*—இருதயரோகம், ரத்தநரம்புகளைப் பற்றியரோகம், அசதிஜன்னிரோகம் Apoplexy,) அண்டவாதரோகம் Hernia,) குதப்பிரம்ஸரோகம் Prolapsus of the rectum,) கர்ப்ப பிரம்ஸரோகம் of the uterus,) பூரணகர்ப்பம், எந்தவஸ்துவும் வயிற்றில் தங்காமல் வாந்தியாகுதல், அதிகதுர்ப்பலம், ஆமாசய தாபனரோகம் Gastritis,) இவைமுதலியவைகளுக்கு, வாந்திக்குக்கொடுக்கலாகாது.

*Occasional ill effects.*—வாந்திக்குக்கொடுத்தால், சிலவேளை உண்டாகும் துர்க்குணங்களாவன.—அகாலப்பிரசவம், அண்டவாதரோகம், அசதி ஜன்னிரோகம், ரத்தகாச ரோகம், மூச்சடைப்பு, ஆஸனமாவது கர்ப்பமாவது வெளிப்படுதல், முதலியவைகளாம்.

வெந்நீர் அதிகமாய்ச்சாப்பிட்டாலும், இறகால் தொண்டையைத் தடவினும், வாந்தி தாராளமாய் ஆகும். அபினி வாந்தியை நிறுத்தும்.

குழந்தைகள், வமனகாரி மருந்துகளைச் சகிப்பார்கள்; அவர்களுக்குக் காணும் ரோகங்களுக்கு, ஷை மருந்துகள் கொடுக்கத் தகுதியானவைகள். டார்டர்மெடிக் என்னும் மருந்தைப் பார்க்கிலும், இபிகாக் என்னும் மருந்து குழந்தைகளுக்கு எடுத்ததென்று சொல்லுவது வழக்கம்.

பால்துத்தமும், துருசியும், கொடுத்தால் வெகுசீக்கிரத்தில் வாந்தியாகும்; ஆகையால், அவைகளை நஞ்சுண்டோருக்கு இரைப்பையிலிருக்கும் நஞ்சை வெளிப்படுத்தக் கொடுக்கவேண்டியது. டார்டர் மெடிக்-இபிகாக்குயு என, இவைகளைக்கொடுத்தால் ஆயாசத்தை உண்டாக்கும்.

டார்டர் மெடிக், இபிகாக்குயு என, இவைகள் அதிகவியர்வையை உண்டாக்கும்; துத்தமும், துருசியும், அவ்வளவு செய்யமாட்டாது.

வாந்திக்கு அடிக்கடி எடுத்துக்கொள்ளுகிற வழக்கம் கெட்டது; அதனால் தேக சவுக்கியம் கெடும்.

வாந்திக்குச் சாயங்காலத்தில் எடுத்துக்கொள்ளுவது நல்லது; வாந்தியான பிறகு, ஆரோக்கியமாய் நித்திரைவரும். ஆனால் இந்த நூல் விதியை எப்போதும் அனுசரிக்க உதவாது; ஆகையால் காலநிர்ணயம் இல்லாமல் தேவையான போது சாப்பிடலாம்.

வாந்தி பிரப்லமாய் ஆனாலும், அல்லது, நிற்காமல் எடுத்துக்கொண்டிருந்தாலும், Effervescing draught என்னும் பொங்குகிற ஜலத்தில் கொஞ்சம் அபினி பாவனதிரவத்தைச் சேர்த்துக் கொடுத்தால் நன்மைசெய்யும். கடுகு அரைத்து சுழற் குழிமேல் Pit of the stomach) போட்டாலும் வாந்தி நிற்கும்.

*Emetics are indicated.*—ஜுவரங்களுக்கும், உன்மாதரோகத்துக்கும், அபஸ்மாரக ரோகத்துக்கும் Epilepsy,) கப ரோகத்துக்கும், காச ரோகத்துக்கும், சக்குவாய் ரோகத்துக்கும், விஸூசிகா ரோகத்துக்கும், வாந்திக்கிக் கொடுக்கலாம்.

இந்த வகுப்பில் சேர்ந்த மருந்துகளாவன.—ஸஸ்குவி கார்போனேட் ஆவ் அம்மோனியா, Sesquicarbonate of Ammonia. கறிஉப்பு, துத்தம், துருசி, கடுகு, டார்டர் மெடிக், இபிகாகியுானு, ஸ்குவில்ஸ் முதலியவைகளாம்.

---

ருதுவர்த்தன காரிகள்.—Emmenagogues. *Remedies which promote the flow of the menses.*

ஸ்திரிகளுக்கு மாதாந்திரத்தில் காணுகிற சுரோணிதத்துக்கு (Menses) ருது என்று பேர். சுரோணிதத்தை தாராளமாய் வெளிப்படுத்தி, சுபாபீக ஸ்திதியில் கொண்டுவருகிற மருந்துகளுக்கு, ருதுவர்த்தன காரிகள் என்று பேர். மாதாந்திர ருதுகாலத்தில், சுரோணிதம், கருப்பையி லிருந்து - ௩ - ௫ - நாள் வரையில் சுரந்துக்கொண்டிருக்கும். கர்ப்பஸ்திரிகளுக்கும், பால்கொடுக்கிற மாதர்களுக்கும், மாதவிடாய்காணாது.

*Observations on their use.*—பெண்கள் சீக்கிரத்தில் பிரவிடையாக, இந்த மருந்துகளைக் கொடுக்கவிரும்பினால், வெகுஜாக்கிரதையாய்க் கொடுக்கவேண்டியது. கருப்பை பருவபக்குவமானா லொழிய சுரோணிதம் வெளிப்படாது; கருப்பைமலராமுன் சுரோணிதத்தை சீக்கிரத்தில் சுரக்கும்படிச்செய்விக்க, மருந்துகள்கொடுத்தால், மோசங்கள் நேரிடும். சரீர ஸ்திதியில் யாதொருகுறைவு இல்லாமல் இருக்கிறவரையில், சிகிச்சை வேண்டியிராது. ஸ்திரிகளுக்கு மாதாந்திரருது நிற்கிறகாலம் சமீபித்தால், சிலநோய்கள்காணும்; அவைகளைப்பரிகரிக்க வெகுஜாக்கிரதையாய் இந்த மருந்துகளைக்கொடுக்க வேண்டியது; இல்லாவிட்டால், அக்கினியில் நெய்விட்டது போல், வியாதி அதிகரிக்கும்.

கர்ப்பஸ்திரிகளுக்கும், கருப்பையில் காணுகிற ரணரோகத்திலும், இந்த மருந்துகள்கொடுக்கலாகாது.

ஒருமருந்து குணம் செய்யாமல் போனால், இந்தவகுப்பில் சேர்ந்த வேறொரு மருந்து குணத்தைத்தரும். இந்தமருந்துகளைத் தனிப்பட கொடுப்பதைப்பார்க்கிலும் ஒன்றோடொன்று சேர்த்துக்கொடுத்தால், குணம் இரட்டிக்கும்

ருதுவர்த்தன காரிகளை, தலை முழுக்குக்காணச்சமீபித்த நாள்களில் கொடுத்தால், நல்ல குணத்தைத்தரும்.

இந்தவகுப்பில் சேர்ந்த மருந்துகளில் :—

*Direct Emmenagogues.*—நேராய்க் கருப்பையைப்பற்றி, குணத்தைத்தருகிறமருந்துகளாவன.—மின்தாது எந்திரப்பிரயோகம் Electricity) அர்கட் ஆவ் ரை Ergot of Rye,) கருப்பையில் அட்டையை கடிப்பித்தலும், காடிக்காரம் கல

க்ஷாரவாயு ஜெயபீர் இலைகளைப் பூசுதலும், ஸேவையின் Savine,) வெங்காரம், லவங்கப்பட்டை, கினோபோடியம் Chenopodium,) அருதா, Common Rue—*Ruta Graveolens,* முதலியவைகளாம்.

*Indirect Emmenagogues.*—வக்கிரகதி ருதுவர்த்தன காரிகளாவது.—மூஷாம்பரம், பொட்டிலுப்பு.

*Constitutional Emmenagogues.*—தேகதாருட்டியத்தையும், ஆரோக்கியத்தையும் உண்டாக்கி, சுரோணிதவிகல்பத்தை நீக்குகிற மருந்துகளாவன :—அயம், ரசம், கிரிபித்ஸ் மிக்ஸ்சர் Griffith's Mixture, முதலியவைகளாம். அயம், பித்தப்பாண்டுவில் Anæmia) எடுத்த ருதுகக்கட்டுக்கும், ரசம், அதிதூல ரோகத்தில் Plethora) எடுத்த ருதுகக்கட்டுக்கும், கொடுக்கத்தகுதியான மருந்துகள்.

---

நஸ்யங்கள்.—**Errhines or Sternutatories.** *Medicines which when introduced into the nostrils, increase the discharge of nasal mucus.*

நாசியில் பிரயோகித்தால், அந்தஸ்தானத்திலிருந்து வருகிற நீரை அதிகப்படுத்துகிற மருந்துகளுக்கு நஸ்யங்கள் என்று பேர்.

*Errhines are indicated.*—நாள்பட்ட கண்ணோய், அமௌரோஸிஸ் Amaurosis,) நாள்பட்ட சிரசைப்பற்றிய ரோகங்கள், இவை முதலியவைகளுக்கு இந்த மருந்துகள் உபயோகப்படுகின்றன. *Contra-indicated.*—பீனசம், மூக்கில் ரத்தம் வடிதல், அசநி ஜன்னி, இவைகளுக்கு இந்தமருந்துகள் உதவாது. புகையிலை, ஸ்மெல்லிங்சால்ட்ஸ், காடித்திராவகம், முதலியவைகள், இந்தவகுப்பில்சேர்ந்த மருந்துகள். தும்மலை உண்டாக்குகிற மருந்துகளுக்கு, இங்கிலீஷில்-ஸ்டர் நு டே டோரீஸ்-என்று பேர். இவைகளை வழக்கப்படுத்தின வர்களுக்கு தும்மல்வராது, மருந்துகளின் குணமும் குறையும்.

---

கபஹர காரிகள்.—**Expectorants.** *Medicines which relieve cough by promoting the secretion of mucus from the Bronchial tubes.*

கபத்தைவிருத்தியாக்கி அதை வெளிப்படுத்தி, இருமலைத்தணிக்கிற மருந்துகளுக்கு, கபஹர காரிகள் என்று பேர்.

*Their action is promoted by.*—சரீரத்தை ஓர் மிதத்தில் உஷ்ணமாய் வைத்திருக்குதல், வமன காரிகள், அதிகஜலம் குடிக்குதல், மல ஜலத்தை விருத்திப்படுத்துகிற பதார்த்தங்களை நீக்கிவிடுதல், இவைகளால் ஷை மருந்துகளின் குணம் அதிகப்படும்.

*Their action is retarded by.*—அபினி சேர்ந்த மருந்துகள், மூத்திரவர்த்தன காரிகள், விரேசன காரிகள், சரீரத்தை குளிர்ச்சியாய் வைக்குதல், இவைகளால் ஷை மருந்துகளின் குணம் குறையும்.

*Observations on their use.*—இந்த மருந்துகளை, வியாதிகளுக்குத் தகுந்ததாய்ப்பிரயோகிக்க வேண்டியது ; தாபனகுணமுடைய ஸ்திதியில் இவைகள் விரோதஞ்செய்யும். குமட்டலையுடைய கபஹரகாரிகளை, தூர்ப்பெலனுடைய வர்களுக்குக்கொடுக்கலாகாது. எல்லாமருந்துகளைப் பார்க்கிலும், வெந்நீர் ஆவி சிரேஷ்டமானது, ஆனால் சிலருக்கு இது ஏற்றுக்கொள்ளாது.

இந்தவகுப்பில் சேர்ந்த மருந்துகளாவன.—*Topical Expec.* ஐயோடயின் Iodine)–சாம்பிராணி - காடித்திராவகம் Acetic Acid)–தார் - இவைகளுடைய ஆவியை ஆக்கிராணித்தால், சுவாசவழியிலுள்ள நரம்புகளை உஷ்ணப்படுத்தி, இருமலை ஸௌஸ்தப்படுத்தும். (Stimulants).—கோனியம் Conium)–குரோசானி யோமம் Henbane)–ஊமத்தன் Stramonium).–நீராவி Steam)–இவைகளை பக்குவப்படுத்தி ஆக்கிராணித்தால் நெஞ்சி விருக்கும் கரகரப்பைத் Irritation) தணித்து, நரம்புகளின் பிகுவைதளர்ச்சிசெய்து, கபத்தை வெளிப்படுத்தும். (Sedatives).

*General Expect.* உள்ளுக்கு எடுத்துக்கொண்டால், ரத்தத்தில் சென்று, சுவாசப்பையில் பரவி, குணத்தைக்காட்டுகிற மருந்துகளாவன.—இபிகாகியு ஏனு Ipecac.) டார்டர் மெடிக் Tartar Emetic)–அம்மொனியாகம் Ammoniacum)–பெருங்காயம் - அம்மோனியா ஸஸ்குவி கார்போனஸ் Ammonia Sesquicarbonas)–நரி வெங்காயம் Squill)–சாம்பிராணிப் பதங்கம் Benzoic Acid)–பால்ஸம் ஆவ் பிரு Balsam of Peru)- பால்ஸம் ஆவ் டொலு Balsam of Tolu முதலியவைகளாம்.

---

ஜ்வரஹர காரிகள்.—**Febrifuges.** *Medicines which remove fevers.*

காய்ச்சலை நீக்குகிற மருந்துகளுக்கு, ஜ்வரஹர காரிகள் என்றுபேர். கம்பவுன் ஆன்டி மோனியல் பவுடர் Compound Antimonial Powder)–சீதள காரிகள் - சுவேத காரிகள்-இவைகளை, ஜ்வரம்காயும்போது கொடுத்தால், ஜ்வரம் தணியும். குவைனேன் Quinine)–பார்க் Bark)–பாஷாணம் - அன்னபேதி - முதலியவைகளை ஜ்வரம் விட்டிருக்கும் போது கொடுத்தால், ஜ்வரத்தைவர ஒட்டாமல் தடுக்கும். இந்த அவுஷதங்களுக்கு இங்கிலீஷில் ஆன்டிபீரியாடிக்ஸ் Antiperiodics) என்று பேர்.

---

நித்திரா காரிகள்.—**Narcotics.** (**Soporifics** or **Hypnotics.**) *Medicines which ease pain and procure sleep.*

நோயைத்தணித்து, நித்திரை வரும்படிச்செய்கிற மருந்துகளுக்கு, நித்திரா காரிகள் என்று பேர்.

பிரயோஜனம்.—நித்திரை உண்டாக்கவும், நோய் வலி இவைகளைத்தணிக்கவும், அதிக நீர்ச்சுரப்பை அடக்கவும், நித்திராகாரி மருந்துகளை உபயோகப்படுத்தப்படும்.

இந்த மருந்துகளில் சிலது தவிர, மைத்தவைக ளெல்லாம் மூளையிலும், முள்ளந்தண்டு மஜ்ஜைதாதுவிலும் Spinal Marrow) சென்று குணத்தைக்காட்டும். இந்தமருந்துகளைக்காயத்தில் போட்டபோதிலும், அவைகள் நரம்புகளின் வழியாய்ச் சரீரத்தில்பரவி, அவைகளுக்குடைய குணத்தைக்காட்டும். பித்தம், மூத்திரம், இவைகளுடைய சுரப்பைக்குறைக்கும் ; ஜீரணத்தை மந்தப்படுத்தும் ; மலத்தை இறுகச்செய்யும் ; சிலது கண்மணியை (நேத்திரதாரையை Pupil of the Eye) சுருங்கச்செய்யும், சிலது அதை விரிவாக்கும் ; சில நித்திரா காரிகள், மலபந்தம் செய்யாது.

*Observations on their use.*—நித்திரா காரி மருந்துகளின் அளவை, குணத்துக்குத்தக்கபடி, கிரமப்படுத்த வேண்டியது ; நூலில் கண்டிருக்கிறபடி கொடுக்கச்சரிப்படாது.

சிறுகுழந்தைகள், நித்திராகாரிகளைச் சகிக்கமாட்டார்கள்.

நோயாளி இந்தமருந்துகளை வழக்கப்படுத்தி இருந்தால், அதிகமாய்க்கொடுக்கவேண்டியது.

ரத்தபுஷ்டியுடைய சரீரத்தில், இந்தமருந்துகள் சீக்கிரத்தில் குணந்தரும்.

ஆடவர்களைப்பார்க்கிலும் ஸ்திரீகளுக்கு, நித்திராகாரிகள் சீக்கிரத்தில் குணத்தைக்காட்டும். கர்ப்பஸ்திரீகளுக்கு இவைகளைக்கொடுத்து வழக்கப்படுத்தினுல், கருப்பையிலிருக்கும் பிண்டத்துக்குக் கெடுதி நேரிடும் என்று சொல்லுகிறுர்கள். தேவையானபோது தவிர, வழக்கமாய் இந்தமருந்துகளை, படுத்துக்கொள்ள - க - உ - மணி நேரத்துக்குமுன் கொடுக்கவேண்டியது.

மெலிந்த சரீரத்தை உடையவர்களுக்கு, இந்தமருந்துகளை முதலில் கொஞ்சமாயும், பிறகு படிப்படியாய் அளவை அதிகரித்துக் கொடுக்கவேண்டியது.

மூளையில் ரத்தம் கட்டிக்கொண்டிருக்கிறபோதும், நாள்பட்ட இருதய ரோகத்திலும், இந்தமருந்துகளை வெகுஜாக்கிரதையாய்க் கொடுக்கவேண்டியது.

இந்த மருந்துகளை அளவுக்கு அதிகமாய் எடுத்துக்கொண்டால் விஷமிக்கும்.

இருமல் ரோகத்தில், அதிக கபம் வெளிப்படுகிற போது, இந்தமருந்துகளை வெகுபத்திரமாய்க் கொடுக்கவேண்டியது ; இந்த விஷயத்தைக் கவனிக்காவிட்டால், வெளிப்படவேண்டிய கபம், அடைபட்டு, மூச்சடைப்பு காணும், அப்போது நுரை ஈரலில் ரத்தம் கட்டுண்டு, கெட்ட ரத்தம் நல்ல ரத்தமாகாமல் ஆடங்கப்படும்.

அனேகவியாதிகளுக்கு நித்திராகாரி மருந்துகளை உபயோகப்படுத்தப்படும்.

இந்தவகுப்பில் சேர்ந்த மருந்துகளாவன :—

பெல்லடோனு, Belladonna) - கஞ்சா, Indian hemp, Bang—*Cannabis Indica.*)
குரோசானி யோமம், Henbane—*Hyoscyamus*)-கர்ப்பூரம், Camphor-*Camphora.*)
அஸிடேட் ஆவ் மார்பியா, Acetate of Morphia—*Morphiæ Acetas.*
ஹைட் ரோ குளோ ரேட் ஆவ் மார்பியா, Hydrochlorate of Morphia—*Morphiæ Hydrochloras.*}
அபினி, Opium) - ஊமத்தன், Thorn Apple—*Stramonium*, முதலியவைகளாம்.

---

வமன வியதா காரிகள்.—**Nauseants.** *Medicines which induce a sensation of nausea or sickness.*

வாய்க்குமட்டலை உண்டாக்குகிற மருந்துகளுக்கு, வமன வியதா காரிகள் என்று பேர். இந்த மருந்துகள் சரீரத்தளர்ச்சியை உண்டாக்கும். ரத்தபேதி முதலிய தாபன குணமுடைய வியாதிகளுக்குச்சிகிச்சை செய்யும்போது, இவைகள் மெத்த உபயோகப்படும். டார்டர்மெடிக் Tartar Emetic, இபிகாகியு எனு Ipecacuanha, இவைகளைக் குறைந்த அளவில் கொடுத்தால், வாந்தி யாகாமல் குமட்

டிக்கொண் டிருக்கும்படிச்செய்யும். வெந்நீர் அதிகமாய்ச்சாப்பிட்டாலும் வெ-குணத்தை உண்டாக்கும்.

---

பிரசவ காரிகள்.—**Parturifacients (Oxytocics-)** *Medicines which excite uterine action, and thus expedite the expulsion of the fœtus in labours.*

பிரசவ காலத்தில் கருப்பையானது, பொறுத்துப் பொறுத்துச் சுருங்கி மலர்ந்து கொண்டிருக்கும்; அத்தருணத்தில் காண்கிற நோய்க்கு பிரசவ வேதனை என்று பேர். கருப்பை சுருங்கும்போது, அதன் முகமானது கொஞ்சங் கொஞ்சமாய் மலரும்; அப்போது சிசுவின் சிரசும் கொஞ்சங் கொஞ்சமாய் உதயமாகும். இத்தருணத்தில் பிரசோதவாயுவை Uterine contraction) அதிகரித்து, கருப்பையை செவ்வையாய்ச் சுருங்கச்செய்கிற மருந்துகளுக்கு, பிரசவ காரிகள் என்று பேர். இந்த மருந்துகளை பிரசவவாயு மந்தப்பட்டிருக்கும்போது, உபயோகப்படுத்தப்படும். இந்தவகுப்பில் சேர்ந்த மருந்துகளாவன:—

அர்கொட் ஆவ் ரை Ergot of Rye—*Secale Cornutum*) - கஞ்சா Bang.

மின்தாது எந்திரப்பிரயோகம் Galvanism,) வெங்காரம், முதலியவைகளாம்.

---

சீதள காரிகள்.—**Refrigerants.** *Remedies which abate thirst and unnatural heat.*

அதி உஷ்ணத்தைத்தணித்து, தாகத்தையடக்குகிற மருந்துகளுக்கு, சீதள காரிகள் என்று பேர். இந்த மருந்துகளை ஜுரங்கள், தாபரோகங்கள், ரத்தபித்தரோகங்கள், முதலிய அதி உஷ்ணப்படுத்துகிற ரோகங்களுக்கெல்லாம் உபயோகிக்கலாம்.

*Internal Refrigerants.*—புளிப்பினங்கள், புளிப்பேற்றிய ஜலங்கள், டார்டாரிக் ஆஸிட் Tartaric Acid,) ஸிட்ரிக் ஆஸிட் Citric Acid,) பொட்டிலுப்பு Nitre,) முதலியவைகள் உள்ளுக்குக்கொடுக்கிற சீதளகாரிகள். எலுமிச்சம்பழரசம், முதலிய புளிப்பு சேர்த்துச்செய்த பானகங்களும் உபயோகிக்கப்படும். இந்தமருந்துகளை குளிர்ந்த ஜலம் அதிகமாய்விட்டு விளாவி, அடிக்கடி சாப்பிடவேண்டியது.

*External Refrigerants.*—ஜுரரோகத்தில் குளிர்ந்த ஜலமாவது, அல்லது, காடியும் ஜலமும் கலந்தாவது, அல்லது, சாராயமும் ஜலமும் கலந்தாவது, சரீரத்தின்மேல் துவட்டினால், உஷ்ணம் தணியும்; இவைகளில் துணியை நனைத்து, தாபனம் கண்டிருக்கிற இடத்தில் போட்டால், அந்தரோகம் குணமாகும். வெதவெதென்று காய்ந்தஜலம் சிலருக்கு ஏற்றுக்கொள்ளும்.

---

ஷோண காரிகள்.—**Rubefacients.** *Medicines which produce redness of the skin.*

போட்ட இடத்தை சிவக்கச்செய்து, எரிச்சலையும், உஷ்ணத்தையும் உண்டுபண்ணுகிற மருந்துகளுக்கு, ஷோண காரிகள் என்று பேர். இவைகளைப்போட்டு நேரப்படவைத்தால் கொப்புளிக்கும். கறுத்த தேகத்தில் போட்டஇடம்,

அதிகமாய் சுறுக்கும், சிவப்புநிறம்உண்டாகாது. கையால் தேய்க்குதல், வெந்நீர், நீராவி, வறுத்தமணல், அனல்காற்று, காடித்திராவகம் Acetic Acid,) நவச்சாரவாயு ஜெயநீர் Liquor Ammoniæ,) வாலெண்டையில் லினிமெண்ட் Volatile Liniment,) நவச்சாரம், கறிஉப்பு, கடுகு, அக்கரகாரம் Pyrethrum,) முளகாய், மிளகு, வெங்காயம், வெள்ளைப்பூண்டு, சுக்கு, முருங்கைவேர், கர்ப்பூரத்தயிலம், இவைமுத லியவைகள் சருமத்தைச்சிவப்பிக்கும்.

---

சமன காரிகள்.—**Sedatives. (Contra-stimulants or Depressants.)** *Medicines which depress the vital powers without previous stimulation.*

உஷ்ணப்படுத்தாமல், ரத்த மஜ்ஜதாதுக்களின் கொதிப்பைக் குறைத்து,வேத னையைத்தணித்து, நித்திரை உண்டாக்குகிற மருந்துகளுக்கு, சமனகாரிகள் என்று பேர். இந்த மருந்துகளில் அனேகம், மூளை, மஜ்ஜதந்து இவைகளில் பிரவே சித்து குணத்தைக்காட்டும்; புகையிலை, டிஜிடேலிஸ், இவைகள் இருதயம், நாடி நரம்பு Artery,) இவைகளின்மேல் செய்கையைக்காட்டும்; கோனியம், கஞ்சா இவைகள் முள்ளந்தண்டு மஜ்ஜதாதுவின்மேல் செய்கையைக்காட்டும். இவை களை, சுரங்கள், தாபனரோகங்கள், விரணஜன்னி Tetanus,) வெறிநாய்க்கடி ஜன் னி Hydrophobia,) இருதயரோகம், முதலிய வியாதிகளுக்கு, உபயோகப்படுத் தப்படும். இந்த வகுப்பில் சேர்ந்த மருந்துகளாவன:—

டார்டர்மெடிக் Tartar Emetic,) புருஸிக் ஆஸிட் Prussic Acid—*Acidum Hydrocyanicum,)* டிஜிடேலிஸ் Digitalis,) குளோரோபாரம் Chloroform,) கோனியம் Conium,) புகையிலை Tobacco-*Tabacum,)* நாபி, கஞ்சா, முதலியவைகளாம்.

---

திரவ காரிகள்.—**Sialogogues.** *Medicines which increase the secretion of saliva.*

எச்சிலை அதிகப்படுத்துகிற மருந்துகளுக்கு, திரவகாரிகள் என்று பேர்.

*Topical Sialogogues.*—தாம்பூலம், சுக்கு, அக்கிரகாரம், மிளகு, முளகாய் Capsicum,) ரூமிமஸ்தகி Mastiche,) வசம்பு, புகையிலை, இவைகளை மெது வாய் மெல்லுதலால், உமிழ்நீர்சுரக்கும். இந்த மருந்துகள், நாக்கு, ஈறு, டான்ஸில்ஸ் Tonsils,) தலை, காது இவைகளுடைய ரோகங்களுக்கு உபயோ கப்படுத்தப்படும்.

*Remote Sialogogues.*— ரசம், ஐயோடைன், சொர்ணபஸ்மம், பொட்டி ஷப்புத்திராவகம், கறிஉப்புத்திராவகம், முதலியவைகளைக்கொடுத்தால், ரத்தத்தில் சென்று சரீரத்தில்பரவி, உமிழ்நீர் கோளங்களை Salivary glands) தூண்டி வா யைப்புண்ணாக்கி, எச்சிலை அதிகப்படுத்தும். இவைகளை திரவகாரிகள் என்று சொல்லத்தகாது; ஷை அவுஷதங்கள் சரீரத்தில் பற்றிப்பிடித்தபிறகு காணும் குறிகளாம். ரசம் முதலியவைகளைக் கொடுத்து வாய் ரணமானால், உடனே அவு ஷதத்தை நிறுத்திவிடவேண்டியது.

8

உச்சாககாரிகள். உஷ்ணகாரிகள். — Stimulants or Excitants. *Remedies which speedily increase the frequency of the pulse, and the heat of body.*

நாடியை அதிதீவிரத்தில் படபடத்தோடச்செய்து, சரீர உஷ்ணத்தை விர்த்திப்படுத்துகிற மருந்துகளுக்கு, உச்சாககாரிகள் என்று பேர். இந்த மருந்துகள் சாப்பிட்ட உடனே, மஜ்ஜதாதுவை Nervous system) உச்சாகப்படுத்தி, அதன்வழியாய் மாம்சதாது Muscular system) பெலத்தையும் அதிகப்படுத்தும்; அப்போது சரீரத்துக்கு எப்போதும் இல்லாத ஓர்வித பெலம் உண்டாகும்; இதுவுந்தவிர இருதயநடை தீவிரப்படுவதால், உசுவாச நிசுவாசங்களும் பூரணமாய் நடக்கும், அப்போது சரீரத்தின் உஷ்ணமும் அதிகப்படும். இந்த மருந்துகளின் சேஷ்டை நீங்கினபின்பு சரீரம் அசதியாய்விடும். இந்த வகுப்பில் முக்கிய பதார்த்தங்களாகிய கள்ளு, சாராயம், இவைகளை அப்பியசிக்கலாகாது; ஏனெனில், அவைகள் பானம்பண்ண உடனே மனதுக்கும் சரீரத்துக்கும் ஓர்வித களிப்பை உண்டாக்கும்; அந்த வெறி மட்டிட்டால், சரீரம் நறுக்கித்துவைத்த போல் துர்ப்பெலஞகிவிடும்; அப்போது, சாராய இனத்தில் அதிக வெறியுள்ளதை மறுபடியும் சாப்பிட இச்சைகொள்ளும். இவ்விதமாய் விடாத மதுபான பயித்தியம் சம்பவிக்கும். அம்மோனியா, பிராந்தி, இவைகளைக்கொடுத்தால் உடனே குணத்தைக்காட்டும்; இவைகளுக்கு இங்கிலீஷில், டிப் யூஸபில்ஸ்டிமியுலென்ட்ஸ் Diffusible Stimulants என்று பேர். எட்டிக்கொட்டை, குங்கிலியத் தயிலம், வால்மிளகு, ரசம், முதலிய சில மருந்துகளுக்கு, இங்கிலீஷில் ஸ்பிஷியல்ஸ்டிமியுலென்டஸ் Special Stimulants என்று பேர். இவைகள், சரீரத்தில் பிரதான ஸ்தானங்களில் சென்று குணத்தைக்காட்டும்.

*The Objects for which they are employed.*—பிராணதார உருபுகளுடைய திடம் குறைந்திருப்பதை அதிகப்படுத்தவும், சரீரத்தில் குறைந்திருக்கும் தாருட்டியத்தை அதிகப்படுத்தவும், ஜன்னிமுதலிய ரோகங்களைக்கண்டிக்கவும், பிரதான அவயவங்களுடைய சுரப்புநீரை Secretions) அதிகப்படுத்தவும், இந்தமருந்துகளைப் பிரயோகிக்கப்படும்.

*Contra-indications.*—சுரம், தாபனம், இவைகளுடைய தீக்ஷணஸ்திதியிலும், அதிதூலரோகத்திலும் Plethora,) சுரம் அனுசரித்த ரத்த பித்தரோகங்களிலும், உச்சாககாரிகளைக்கொடுக்கலாகாது.

மூர்ச்சை, ஜன்னி, வாந்திபேதி, முதலிய ஜாட்டியங்களுக்கு உச்சாககாரிகள்கொடுக்கப்படும். இந்தவகுப்பிலுள்ள மருந்துகளாவன :—

*General Stimulants.*—ஸல்ப்யூரிக்ஈதர் Sulphuric Æther -*Æther Sulphuricus,)* சாராயஇனங்கள், ஸொலூஷன் ஆவ்அம்மோனியா Solution of Ammonia,) ஸஸ்குயிகார்போனேட்ஆவ் அம்மோனியா Sesq. Carb. of Ammonia,) நவக்ஷாரம், ஸ்பிரிட்ஸ்ஆவ் அம்மோனியா Spirits of Ammonia,) சதகுப்பை Dill- *Anethum,)* வசம்பு, சோம்பு Aniseed - *Anisum,)* காஜ-புடி தயிலம் Cajuput Oil) கர்ப்பூரம், மூளகாய், ஏலரிசி Cardamoms,) காரவே Caraway,)

லவங்கம் Cloves-*Caryophyllus,*) கன்று, லவங்கப்பட்டை Cinnamon,) கொத்துமல்லி Coriander,) சீரகம் Cumin,) ருமிமஸ்தகி Mastiche,) பெப்பர்மின்ட் Peppermint,) சாதிக்காய் Nutmeg,) ஓமம், சுக்கு, மிளகு, திப்பிலி, கடுகு, சதி உப்பு, எரிவண்டு, கந்தகம், கர்ப்பூரத்தயிலம்,, தார் Tar,) சாம்பிராணி, வெஷரிஜயின், குங்குமப்பூ, முதலியவைகளாம்.

*Special Stimulants.*—டானேவன் சொலூஷன் Donovan's Solution,) குங்கிலியத்தயிலம் Copaiba,) வால்மிளகு, கசம், பூரம், வீரம், ரஸபஸ்மம், ஐயோடையின், மீன்எண்ணெய், எட்டி, முதலியவைகளாம்.

---

*ரக்தஸ்தம்பனகாரிகள்.*—**Styptics.** *Remedies which when applied locally, have the power of checking hæmorrhage or the loss of blood.* ரத்தப்பெருக்கை நிறுத்துகிறமருந்துகளுக்கு, ரக்தஸ்தம்பனகாரிகள் என்றுபேர். இந்தமருந்துகள் ரத்தநரம்புகளை சுருங்கச்செய்தாவது, அல்லது, ரத்தத்திலிருக்கும் ஆல்புயூமென்என்னும்பசையை உறையச்செய்தாவது, ரத்தத்தைநிறுத்தும். இந்த வகுப்பிலுள்ளமருந்துகளாவன:—

படிக்காரம், துருசி, காடிக்காரம், மெடிகோ, அயப்பாவனத்திரவம் Tinct. of iron,) பனிக்கட்டி, குளிர்ந்தகாற்று, முதலியவைகளாம்.

---

*தாருட்டியகாரிகள்.*—Tonics. *Remedies which increase the tone & vigour of the body, producing their effects more slowly than stimulants.*

சரீரத்துக்குப் பெலம்வரும்படிச் செய்கிறமருந்துகளுக்கு, தாருட்டியகாரிகள் என்றுபேர். இவைகள் மெதுவாய்குணத்தைக்காட்டும் ; சீரணசக்தியையும் அதிகமாக்கும். அயச்சம்பந்தமான மருந்துகள், ரத்தத்திலிருக்கிற அயத்தைவிருத்திசெய்து மாம்ஸதாதுவின் பெலத்தை அதிகப்படுத்தும்.

*They are indicated.*- துர்ப்பெலம், அஜீரணம், பாண்டு, இசிவுசன்னி, காய்ச்சல் முதலியவியாதிகளுக்கு, தாருட்டியகாரிமருந்துகளைக்கொடுக்கலாம்.

*Contra-indicated.*—அதிதூலரோகம், தாபனரோகம், இவைகளுக்கு இந்த மருந்துகள்உதவாது.

இந்தவகுப்பில் சேர்ந்தமருந்துகளாவன.—பார்ச்பவுடர், அயம், பிஸ்மத் Bismuth,) கறிஉப்புத்திராவகம், பொட்டிலுப்புத் திராவகம், சொர்னபேதி திராவகம், சிமைச்சாமந்திப்பூ, காடிக்காரம், ஆரஞ்சிப்பழத்தோல், கலம்பா Calumba,) காஸ்கெரில்லா Cascarilla,) நிலவேம்பு Kreata) துருசி, குவைனையின், அயச்சிந்தூரம், ஐயோடைட்ஆவ்அய்ரன் Iodide of Iron,) அயப்பாவனத்திரவம் Steel drops,) அன்னபேதி, ஸைட்ரேட்ஆவ்ஐரன் Citrate of Iron,) ஜென்ஷன் Gentian,) வாலேந்திர போளம் Myrrh,) குவாஷியா Quassia,) ஸிமருபா Simaruba,) நாகபஸ்மம் Oxide of Zinc,) பால்துத்தம் White Vitriol,) முதலியவைகளாம். நல்லபோஜனம், காற்றோட்டமாய்உலாவுதல், குளிர்ந்தஜலஸ்நானம், சமுத்திர ஸ்நானம், முதலியவைகளும், தேகத்துக்குப்பெலத்தை உண்டாக்கும்.

## ௫-வது-அத்தியாயம்.

ரோகங்களைக்குறித்து இவ்விடத்தில் தெரிவிக்கவேண்டிய நிமித்தம்இல்லாதபோதிலும், இனிஅவுஷதங்களை உபயோகிக்கிற மார்க்கத்தை விவரிக்கும்போது, வியாதிகளைக்குறித்துக்காட்டவேண்டியதாக இருப்பதால், ரோகங்களுடையபேர், நமக்குமுன்னதாய்த்தெரிந்திருந்தால் நன்மையென்றுயோசித்து, இங்கிலீஷ்வைத்தியசாலைகளில் இப்போது உபயோகப்பட்டுவருகிற, ரோகங்களுடைய அட்டவணையை இதன்அடியில் தெரிவிக்கப்படும்.

# Classified List of Diseases.

CLASS I. ZYMOTIC DISEASES. சாங்கிராமிக ரோகங்கள். தொத்து வியாதிகள்.

Order 1.—*Miasmatic Diseases.* அழுகின வஸ்துவுகளில் இருந்து ஜெனிக்கிற வாயுவால்உண்டாகிறரோகங்கள்.

1. Variola. Small-pox. பெரியம்மை.
   Varioloides. Modified ditto. இரண்டாமுறைக்காணும் பெரியம்மை.
   Varicella. Chicken-pox. சின்னம்மை ; கொத்தமல்லிஅம்மை.
   Miliaria. Miliary fever. ஒருசாதி பயறி.
5. Morbilli. Measles. தட்டம்மை.
   Scarlatina. Scarlet fever. ரத்த மசூரிகா ரோகம்

(Angina Maligna is included in Scarlatina.)

   Tonsillitis. Quinsy. நாக்குஅடிப்பக்கத்தில் இருக்கும் டான்ஸில் Tonsils என்னும்மாம்ஸகண்ட தாபனரோகம் ; இதைச் சயித்தியக்கட்டி என்பதுண்டு.
   Diphtheria. Diphtheria. குரல்வளையில்காணும் ஒருசாதி துத்திரோகம்.
   Parotitis. Mumps. புட்டாலம்மை ; பொன்னுக்குவீங்கி என்பதுண்டு.
10. Cynanche trachealis. Croup. குறு மாந்தரோகம். சுவாசக்குழல் தாபன ரோகம்.
   Pertussis. Hooping-cough. கக்கிருமல்ரோகம் ; கக்குவாய்.
   Febris Typhoides. Typhoid fever. சன்னிபாதசுரம்.
   „ Recurrens. Relapsing fever. மாறிமாறிவருகிற சுரம்.
   „ Typhus. Typhus fever. ஒருசாதி சன்னிபாத சுரம்.
15. „ Intermittens. Ague. ஆவிகசுரம் குளிர்க்காய்ச்சல்; முறைக்காய்ச்சல்; சீதசுரம்.
   „ Remittens. Remittent fever. தாபச்சுரம்?
   „ Icterodes. Yellow fever. பித்தச்சுரம்.
   „ Continua. Continued fever. விடாக்காய்ச்சல் ; ஸந்தத சுரம்
   Ophthalmia. Ophthalmia. கண்ணோய் அக்ஷிரோகம். நேத்திரரோகம்.
20. Erysipelas. Erysipelas. அக்கி
   Erythema. ரத்தசருமரோகம்; பித்தத்தழும்பு என்பதுண்டு.
   Pyæmia. Purulent infection. பூய ரக்தரோகம் ; சீழ் ரத்தத்தில் கலந்து சர்வாங்கம் வியாபிக்கிற ஒருசாதிரோகம்.
   Gangræna nosocomialis. Hospital gangrene. ஒருசாதிஅழிபுண்.
   Metria. Child-bed fever. பிரசவசன்னிபாத சுரம்.

25. Pestis. Plague. மஹாமாரி ரோகம்.
Anthrax. Carbuncle. ராசவிரணம் ; ராசபிளவை ; பக்கப்பிளவை.
Furunculus. Boil. பருவு ; கட்டி ; கொப்புளம்.
Influenza. Influenza. ஜலுப்பு.
Dysenteria. Dysentery. ஆம ரத்தபேதி ; சீதபேதி ; கிரகணி ரோகம்.
30. Diarrhœa. Diarrhœa. அதிசாரம் ; அசீரணபேதி ; உஷ்ணபேதி ; கழிச்சல்.
Cholera biliosa. Cholera. பித்த வாந்திபேதிரோகம்; பித்தவிஷ-ஒசிகாரோகம்
,, spasmodica. Asiatic Cholera. விஷக்காற்றால் காணுகிற விஷ-ஒசிகாரோகம்; விஷபேதி.
Rheumatismus. Rheumatism. கீல்வாதரோகம் ; முடக்குவாயு ; சந்திசிலேஷ்மரோகம்.

## Order 2.—*Enthetic Diseases.*

Syphilis primaria. Primary syphilis. கொருக்கை ; லிங்கப்புத்து ; உபதம்ஸரோகம் ; மேகவிரணம்.
35. ,, secundaria. Secondary ditto. மேகபடலரோகம்;
Iritis syphilitica. Inflammation of the Iris. நேத்திரதாரா மண்டலதாபனரோகம்; கருவிழியில் காணுகிற ஒருசாதி ரோகம்.
Gonorrhœa. Gonorrhœa. பிரமேகம்; வெள்ளை; மேககாங்கை; மேககாரகம் ,மேகவெட்டை
Phymosis et paraphymosis. Phymosis. லிங்கசர்ம புர ஸங்கோசரோகம் ; ஆண்குறியின் மேல்தோல் முசம்சுருங்கிப் பின்னுக்கு இழுக்கக்கூடாதஸ்திதி.—Paraphymosis. லிங்க சர்ம பஸ்யா ஸங்கோசரோகம் ; ஷை சர்மம் மேலுக்குப்போய் சுருங்கிக்கொண்டு கீழ்இறங்காதிருக்கும் ஸ்திதி.
Bubo. Bubo. அரையாப்புக் கட்டி
40. Orchitis. Swelled testicle. அண்டதாபனரோகம்; விரைவாதம் ; விரைநோவு ; விரைவீக்கம்.
Strictura Urethræ. Stricture. நீர்க்கட்டு ; தசையடைப்பு ரோகம்
Equinia. Glanders. ... ... ... ... ... ...
Rabies. Hydrophobia. ஜலபயரோகம் ; பேய்நாய்க்கடி 'சன்னிரோகம்.
Necusia. Infection by puncture in dissection. பிரேதத்தை அறுக்கும் போது, கத்திகாயம்பட்டு காணுகிற விஷரோகம்
45. Pustula Maligna. Malignant Pustule. குரூரகுணமுடைய வித்திருதிக் கட்டி
Lepra. Leprosy. குஷ்டரோகம். பெருவியாதி

## Order 3.—*Dietic Diseases.*

Febris á fame. Famine fever. க்ஷாமசுரம்; கருப்புக்காலத்தில் காணுகிற சுரம்.
Scorbutus. Scurvy. நாவிகரத்தபித்தரோகம்; கப்பல்காரருக்குக் காணுகிற, ஒருசாதி ரத்தபித்தமேகரோகம்
Purpura. Land Scurvy. பூவாசிகளுக்குக்காணுகிற ரத்தபித்த மேகரோகம.
50. Rachitis. Rickets. அஸ்திநமனரோகம்; எலும்புகள் மிருதுவாகி ஒடியாமல் வளைகிற ஒரு சாதிரோகம்.
Bronchocele. Bronchocele. கந்திரோகம்; கழுத்தில்காண்கிற புரைக்குழல்.
Cretinismus. Cretinism. ... ... ... ... ...
Ergotismus. Ergotism. ... ... ... ... ...
Ebriositas. Intemperance. அதிககுடியால்காணுகிறவெறி.

## Order 4.—*Parasitic Diseases.*

55. Aphthæ, Thrush. தத்திரோகம்.

Porrigo. Scaldhead. கரப்பான்
Scabies. Itch. சிரங்கு
Phthiriasis. Morbus pedicularis. பேன்பிடித்தல்.
Vermes. Worms. மலக்கிருமிரோகம்.
60. *a*. Acephalocystis, echinococcus, hominis. *a*. Hydatides.
*b*. Tænia Solium. Tape worm. தட்டையாய்நீண்ட கிருமிரோகம்.
*c*. Strongilus Gigas. ... ... ... ... ... ...
*d*. Ascaris Lumbricoides. Round worm. நாகப்பூச்சிரோகம்.
*e*. Ascaris Vermicularis. Thread worm. கிமிர்ப்பூச்சிரோகம்.
65. *f*. Dracunculus. Guinea worm. நரம்புச்சிலந்தி.

### Class II.—Constitutional Diseases.

#### Order 1.—*Diathetic Diseases.*

Podagra. Gout. கணுவாதரோகம்;
Anæmia. பாண்டுரோகம்; ரத்தக்ஷீணரோகம்.
Anasarca. Dropsy. நீர்க்கோவை; நீராம்பல்; நீரேற்றம்.
Carcinoma encephaloides. Cancer. (soft). மிருதுவானஒருசாதிப்புற்று, அல்லது கிரந்தி.
70. Carcinoma alveolare „ (colloid.). ... ... ...
„ (osteoides). „ (osteoid) ... ... ... ...
„ epitheliale. „ (epithelial)... ... ... ...
Scirrhoma. „ (scirrhus). ... ... ...
Melanosis. கணிதி.
75. Lupus. ஸாகணுயிரோகம்; முகத்தில்காணுகிற ஒருசாதி தின்றுக்கொண்டே போகிற விரணம்
Noma. Canker. .. ... ... ... ... ...
Gangræna senilis. Dry Gangrene. ... ... ... ...

#### Order 2.—*Tubercular Diseases,*

Scrofula. Scrofula. கண்டமாலைரோகம்.
Abscessus Psoanus. Psoas abscess. வயிற்றில்காணுகிற வித்திருதிக் கட்டி
80. Tuberculosis Mesenterica. Mesenteric disease. போர்மாந்தரோகம், மணிக்குடல்ரோகம்.
Peritonitis Tuberculosa. Tubercular Peritonitis. ... ... ...
Phthisis Pulmonalis. Consumption. க்ஷயரோகம்; ஈளைவியாதி; ராஜயக்ஷ்மரோகம்.
Hæmoptysis. Spitting of blood. ரத்தகாசரோகம்; ரத்தசிலேஷ்மரோகம்.
Meningitis tuberculosa. ... ... ... ... ... ...

### Class III.—Local Diseases.

#### Order 1.—*Diseases of the Nervous System.*

85. Meningitis. Inflammation of the membranes of the brain. ... ...
Encephalitis. Inflammation of the brain. மூளைத்தாபனரோகம்
(Including acute Hydrocephalus. ஜலமஸ்தகரோகம்.)
Myelitis. Inflammation of spinal chord. .. ... ... ...
Apoplexia. Apoplexy. அசதிசன்னிரோகம்; உபசிதரோகம்.
Paralysis. Palsy. ஸம்ஸ்தம்பரோகம்; விஷ்டம்ப ரோகம்; சர்வாங்கவாத ரோகம்.
90. Paralysis agitans. Shaking palsy. நடுக்கல்; கம்பவாதரோகம்
Chorea. St. Vitus's dance. ... ... ... ... ...

Delirium Tremens. Brain fever of drunkards. மதுபானிகளுக்குக் காணு கிற ஒருசாதி பித்தரோகம்

Mania. Madness. உன்மாதரோகம்; பயித்தியம்.

Monomania. Monomania. ஒரேவிஷயத்தில் புத்தியைச் செலுத்திய பயித்தியவியாதி.

95. Dementia. Mental imbecility. அல்பபுத்தி; மந்தபுத்தி?

Epilepsia. Epilepsy. காக்காய்வலி; அபஸ்மாரகரோகம்.

Hysteria. Hysteria ஸ்திரீகளுக்குக் காணுகிற ஒருசாதி மூர்ச்சை; ஹிதக்சன்னி என்பது வழக்கம்.

Tetanus. Lockjaw. விரணசன்னி; தனுர்வாதரோகம்; தனுர்வாயு.

Convulsio. Convulsions. மாந்தசன்னி; வலி.

100. Eclampsia. வாய், கண்ரெப்பை, விரல்கள், இவைகளுடைய வலி.

Laryngismus. பாலசுவாஸபந்தரோகம்; சின்னகுழந்தைகளுக்கு காணுகிற மூச்சடைப்பு.

Cephalæa. Chronic headache. தலைநோவு; தலைவலி; மண்டைக்குடைச்சல்.

Neuralgia. Neuralgia. மஜ்ஜதந்துவேதனை; குடைச்சல்.

Cæcitas. Blindness. குருடு;

105. Otitis. Inflammation of the Ear. காதுநோவு; கர்ணகுலைரோகம்.

Dysecœa. Deafness. செவிடு. சுரோத்திரஅடைப்பு

Order 2.—*Diseases of the Circulatory System.*

Carditis. Inflam. of heart. குலைநோவு; இருதயதாபன ரோகம்

Pericarditis. Inflammation of membrane covering heart. இருதயகவசதாபனரோகம்

Endocarditis. Inflammation of membrane lining heart. இருதயாந்தர சருமதாபனரோகம்.

110. Morbus Valvularum Cordis. Disease of valves of heart. இருதயகவாட ரோகம்.

Hypertrophia Cordis. Hypertrophy of heart. இருதய சோபரோகம்; குலைபருத்துப்போகுதல்.

Atrophia Cordis. Atrophy of heart, இருதயஸுஷ்கரோகம்; குலைசிறுத்துப்போகுதல்.

Degeneratio cordis. Fatty degeneration of heart. இருதயக்கொழுப்புரோகம்.

Aneurisma cordis. Aneurism of heart. இருதயரத்தக்கட்டி?

115. Aneurisma.—Aneurism of—நாடிநரம்பு ரத்தக்கட்டி?

The artery affected to be specified.

Angina Pectoris. Breast pang. மார்அடைப்பு; உருத்திரரோகம்; டமரகவாயு?

Syncope. Fainting. மூர்ச்சை; களை.

Arteritis. Inflammation of arteries. நாடிதாபனரோகம்.

Atheroma Arteriarum. ... ... ... ... ... ... ... ... ...

120. Phlebitis. Inflammation of veins. நாளதாபனரோகம்.

Varix. Varicose veins. பிரவிர்த்தநாளவர்தனரோகம்.

Order 3.—*Diseases of the Respiratory System.*

Epistaxis. Bleeding at nose. ரத்தபீனஸ ரோகம்.

Laryngitis. Inflammation of windpipe. கண்ட தாபனரோகம்.

Œdema Glottidis. மலத்தின்மேல் எச்சலை உமிழ்ந்தால் காணுகிறரோகம் என்று சொல்லுவதுவழக்கம். இதில் எதையும் விழுங்குவதுகஷ்டமாய் இருக்கும்.

125. Bronchitis. Bronchitis. மார்சளியென்பதுவழக்கம்; ஒருசாதி இருமல் ரோகம்.

Pleuritis. Pleurisy. ... ... ... ... ... ...

Hydrothorax. Water in the chest. உரோஜலரோகம்.

Empyema. உரோஜபூயரோகம்.

Pneumothorax. உரோஜவாதரோகம்

130. Apoplexia Pulmonalis. Congestion of lungs. சுவாசஈரலில் ரத்தங்கட்டிக்கொள்ளுகிற ரோகம்

Pneumonia. Inflammation of lungs. சுவாசஈரல்தாபன ரோகம்.

Asthma. Asthma. சுவாசகாசம்; இளைப்பு; உப்பசம்; மந்தாரகாசம்.

,, Tritorum. Grinder's asthma. ... ... ... ... ... ... ...

,, Metallicorum. Miner's ,, ... ... ... ... ... ... ...

135. Emphysema. ... ... ... ... ... ... ... ... ... ... ...

Order 4.—*Diseases of the Digestive System.*

Glossitis. Inflamm. of tongue. ஜிக்குவா தாபனரோகம்; நாக்குப்புண் என்பது வழக்கம்.

Stomatitis. ,, mouth. வாய்ரணம்.

Pharyngitis ,, pharynx.... ... ... ... ...

Œsophagitis. ,, gullet. குரல்வளை தாபனரோகம்.

140. Gastritis. Inflamm. of stomach. இரைப்பை தாபனரோகம்.

Enteritis. ,, bowels: குடல் தாபனரோகம்.

Peritonitis. Abdominal inflam. ... ... ... ... ...

Ileus. Iliac passion. ... ... ... ... ... ... ... ... ... ...

Obstipatio. Constipation. மலபந்தம்.

145. Intus-susceptio. Invagination of bowel. தண்டாலசரோகம்.

Hernia. Rupture. அண்டவாதரோகம்; ஓதம்; வளி; குடல் வாயு.

(Specify the particular kind of Hernia.)

Dyspepsia. Indigestion. அசீரணம்; மந்தாக்கினி.

Colica. Colic. அலசரோகம்; வயிற்றுவலி; உதரசூலைரோகம்.

Hæmatemesis. Vomiting of blood. ரத்தவமனரோகம்; ரத்தவாந்தி.

150. Melæna. ரத்தக்கழிச்சல்; ரத்தவிரேசனரோகம்.

Hæmorrhois. Piles. மூலம்; மூலவியாதி.

Fistula in Ano. Fistula. பவுத்திரரோகம்; பகந்தரவிரணம்.

Splenitis. Inflam. of spleen. காசக்கட்டி; பிலீகதாபனரோகம்.

Hepatitis. ,, liver. யகுர்திகண்டதாபனரோகம்; பக்கசூலை என்றுசொல்வதுண்டு.

155. Icterus. Jaundice. மஞ்சட்காமாலை; பித்தபாண்டுரோகம்.

Chololithus. Gallstones. பித்தாசயஜாசர்க்கிருரோகம்; பித்தப்பையில் உண்டாகிறகல்லுகள்.

Cirrhosis. ஒருசாதி யகுர்திகண்டரோகம்.

Ascites. Abdominal dropsy. மகோதரம்; பெருவயிறு; தந்திரோகம்; ஜலோதரரோகம்.

Order 5.—*Diseases of the Urinary System.*

Nephritis. Inflam. of kidneys. மூத்திரபிண்டதாபனரோகம்; கிட்னி தாபனரோகம்; மூத்திரகுண்டிக்காய் வியாதி.

160. Ischuria. Retention of urine. நீர்க்கட்டு; மூத்திரசங்கவாதவன்திரோகம்.

Diuresis. Excessive secretion of urine. நீரிழிவு; பகுமூத்திரரோகம்.

Enuresis. Incontinence of urine. சொட்டுமூத்திரம்; மூத்திர பிந்து வா தவஸ்திரோகம்.

Nephria. Bright's disease. கிட்னியில் காணுகிற ஒருசாதி வியாதி.

Diabetes. Diabetes. மதுமேகம்; மது மூத்திர ரோகம்.

165. Calculus vesicæ. Stone in the bladder. மூத்திரக்கல்லடைப்பு ரோகம்; ஹஸ்மரீரோகம்.

Lithiasis. Gravel. சர்க்ரா மூத்திரரோகம்.

Hæmaturia. Bloody urine. ரத்தப் பிரமேகம்; ரத்த மூத்திர ரோகம்.

Cystitis. Inflammation of bladder. மூத்திரப்பை தாபனரோகம்.

Morbus Prostaticus. Diseased prostate. ... ... ... ... ... ...

Order 6.—*Diseases of the Generative System.*

170. Varicocele. Varicose veins of chord. பீஜநரம்பு சுருட்டிக்கொள்ளல் என்பது வழக்கம்.

Orchitis. Inflammation of testicle. விரைவாதம்; விரைவீக்கம்; பீஜ தாபனரோகம்.

(When not the result of gonorrhœa.)

Hydrocele. Dropsy of testicle. நீர் அண்டம்.

Hysteritis. Inflammation of womb. கர்ப்ப தாபனரோகம்.

Hydrops Ovarii. Ovarian dropsy. ... ... ... ... ... ... ...

175 Tumor Ovarii. ,, tumour. ... ... ... ... ... ... ...

Tumor Uteri. Uterine ,, ... ... ... ... ... ... ...

Polypus Uteri. ,, polypus. ... ... ... ... ... ... ...

Order 7.—*Diseases of the Locomotive System.*

Arthritis. Inflammation of joints. சந்திக தாபனரோகம்.

Synovitis. ... ... ... ... ... ... ...

180. Hydrarthus. Dropsy of a joint. சந்திக ஜலரோகம்.

Contractura. Contraction. சுஷ்கித்துக்கொள்ளல்?

Ostitis (including periostitis.) Inflammation of bones. அஸ்திதாபன ரோகம்.

Exostosis. Osseous tumour. எலும்பின்மேல் வளருகிற கட்டி.

Caries. அஸ்தி விரணம்.

185. Necrosis. ... ... ... ... ... ...

Atrophia Musculorum. Muscular atrophy. மாம்ஸ க்ஷீணரோகம்; தேகம் உலர்ந்து போகுதல் என்பது வழக்கம்.

Order 8.—*Diseases of the Integumentary System.*

Roseola. ... ... ... ... ... ...

Urticaria. Nettlerash. ... ... ... ... ...

Eczema. ... ... ... ... ... ...

190. Herpes. படர் தாமரை.

Pemphigus. விஸ்போடகரோகம்.

Rupia. ... ... ... ... ... ... ...

Ecthyma. ... ... ... ... ... ... ...

Impetigo. ... ... ... ... ... ...

195. Acne. முகப்பரு.

Mentagra. ... ... ... ... ... ...

Lichen. ... ... ... ... ... ... ...

Prurigo. நமட்டுச்சிரங்கு.

Psoriasis. ... ... ... ... ... ...

200 Pityriasis. Dandriff. சுண்டு.
Ichthyosis. சொறி.
Phlegmon. தாபனரோகம்.
Paronychia. Whitlow. நகச்சுற்று.
Abscessus. Abscess. வித்திருதிக்கட்டி; சீழ்க்கட்டி.
205. Ulcus. Ulcer. விரணம்.
Pernio. Chilblains. ... ... ... ... ...

## Class IV.—Developmental Diseases.

### Order 1.—*Developmental Diseases of Children.*

Natus Mortuus. Still-born. சாப்பிள்ளை. வயிற்றில் மரித்துப்போன பிள்ளை.
Prematura Natus. Premature birth. அகாலப்பிரசவம்.
Atelectasis Pulmonum. ... ... ... ... ...
210. Cyanosis. ... ... ... ... ... ...
Spina bifida. ... ... ... ... ... ...
Anus imperforatus. ... ... ... ... ...
Fatuitas. Idiocy. பிறவிப் பயித்தியம்.
Mutitas. Congenital Deaf-Dumbness. பிறவிச்செவி ஊமை ரோகம்.
215. Dentitio. Teething. தசனோற்பவம்; பல்முளைதல்.

### Order 2.—*Developmental Diseases of Women.*

Chlorosis. Chlorosis. ஸ்திரீகள் பிரவிடையாகிற வயதில் காணுகிற ஒரு சாதி பாண்டுரோகம்.
Partus Abortus. Childbirth. பிரசவம்; (Miscarriage. அழிகர்ப்பம்;) (Abortion. அகாலப்பிரசவம்.)
Paramenia. ... ... ... ... ... ... ... ... ... ... ...
(Including amenorrhœa. சூதகக்கட்டு;) leucorrhœa. ஸ்திரீகளுக்கு காணுகிற வெள்ளை; எலும்புருக்கிரோகம என்பது வழக்கம்.
Climacteria. Turn of life. ... ... ... ... ... ...

### Order 3. *Developmental Diseases of Old people.*

220. Senectus. Old age. விருதாப்பியம்.

### Order 4.—*Diseases of Nutrition.*

Atrophia, Asthenia. Atrophy. சரீரம் இளைத்துப்போகுதல். Debility. தூர்ப்பலம். (includes premature old age.

## Class V.—Violent Deaths or Diseases.

### Order 1.—*Accident.*

Ambustio. (Burn. அக்கினிவிரணம்;நெருப்புப்பட்டுண்டானபுண்.)(Scald. வெந்நீர்விரணம்.)
Explosio. Explosion of gunpowder, &c. ... ... ... ...
Gelatio. Frostbite. ... ... ... ... ... ...
225 Ictus fulminis. Lightning. ... ... ... ... ...
Insolatio. Sun-stroke, or Heat Apoplexy. வெய்யில்பட்டுக்காணுகிற ஒருசாதி ஜன்னி,
Submersio. Drowning. ஜலத்தில் விழுந்து இறக்குதல்.
Suspensium. Hanging. கழுத்தில் உறிபோட்டுக்கொண்டிறக்குதல்.
Suffocatio. Suffocation. சுவாசம் கொள்ளவொட்டாமல் செய்தல்.
230. Luxatura. Dislocation. மூட்டு விலகிப்போகுதல்; உளுக்கு விலகுதல் என்பதுண்டு.

Subluxatio. Sprain. சுளுக்கு.
Fractura— Fracture of— எலும்புமுறிவு.
Contusio— Contusion of— அடிபட்டு நசுங்கலான காயம்.
Concussio—Concussion of— குலுங்கிப்போகுதல்.
235. Vulnus Sclopetarium. Gunshot wound. குண்டுகாயம்.
Vulnus incisum. (Cut வெட்டுகாயம்;) (Stab குத்துக்காயம்.) &c.
Morsus Serpentis. Snake bite. பாம்புக்கடி.
Venenatio. Poisoning. விஷமிடுதல்; நஞ்சிடுதல்.
Privatio. Privation. அன்னவஸ்திரலோபம்; வறுமை; தரித்திரம்.
240. Vesiculæ pedis. Footsore. ... ... ... ... ...
Order 2.—*Battle.* ... ... ... ... ...
Order 3.—*Homicide.* கூனி; நரஹத்தியை; கொலைசெய்தல்.
Order 4.—*Suicide.* பிராணத்தியாகம் செய்துகொள்ளல்.
Order 5.—*Execution.*—Mode of execution to be stated.
Order 6.
244. Punitus. Punished. சிக்ஷை; தண்டனை.

## INDEX TO CLASSIFIED LIST OF DISEASES.

---

மேல்குறித்த அட்டவணையில் கண்டிராத சில ரோகங்கள் இதன் அடியில் விவரித்துக் காட்டப்படும்.

Anæsthesia. Loss of the sensation of touch. திமிர்; திமிர்வாதரோகம்; திமிர்ப்புடை; பிரசுபதிரோகம்.
Anorexia. Diminished appetite. மந்தப்பசி; அன்னத்துவேஷம்; மந்தாக்கினி.
Aphonia. Loss of voice. கீச்சுக்குரல்; குரல்கம்மல்.
Bedsore. படுக்கையில் உளைபடுக்காணுகிற விரணம்.
Beriberi. கைகால்களில் திமிரோடுங் காணுகிற ஒருசாதி வாதரோகம்.
Cachexia. Bad habit of body. ஒருசாதி மேகரோகம்.
Cardialgia. Heart burn. குலையெரிச்சல்.
Catalepsis. Catalepsy. ... ... ... ... ... ...
Cataract. நேத்திர படலரோகம்.
Catarrhus. Cold. ஜலுப்பினால் காணுகிற இருமல்.
Clavus. Corn. காய்ப்புக் காச்சிப்போகுதல்.
Coma. Deep sleep. சுமாரகமில்லாமல் அசைந்து நித்திரைச் செய்வதுபோல இருக்கிற ஓர்வித ஜன்னி.
Congestion. Fulness of blood கண்ணிப்போகுதல்; ரத்தக்கோவை; ரத்தம் கட்டிக்கொண்டிருக்குதல்.
Corneitis. Inflammation of the Cornea. ... ... ... ...
Coryza. சலுப்பு; ஜலதோஷம்.
Delirium. Wandering. பித்தப்பினத்தல்; அலறுஸன்னி; விகாரம்; புத்திமாறாட்டம்.
Dysmenorrhœa. Difficult or painful menstruation. சூதகவயிற்றுவலி; தூர சூலைரோகம்.
Dysphoria. Restlessness. அரட்டல் புரட்டல்
Dyspnœa. Difficult respiration. கஷ்ட சுவாசம்.
Dysuria. Strangury. நீர்ச்சுருக்கு; மூத்திர கிரிச்சரரோகம்.
Elephantiasis. Cochin leg; Arabian leprosy. ஆனைக்கால்; ஆனைக்குஷ்டம்.
Elephantiasis scroti. தமை அண்டரோகம்; மாம்ச அண்டம்.
Epiphora. Flux of tears. கண்ணீர்ப்பெருக்கு.
Febricula. Dimunition of fever. அதிகஉஷ்ணம்.
Gastralgia. Pain in the stomach. குன்மம்
Gengivitis. Inflammation of the gums. பல்லரணை; ஈறுவீக்கம்.
Hæmatocele. ரத்த அண்டம்.
Hæmorrhage. Bleeding. ரத்த ஒழுக்கு; ரத்தம் வடிதல்.
Hemiplegia. Palsy of one side. பக்ஷகாதவாதரோகம்; ஏகாங்கவாதம்; அர்த்தாங்கவாதம்; பாரிசவாயு.
Hemicrania. ஒற்றைத்தலைநோய்.
Hernia Strangulata. இறுகிக்கொண்ட அண்டவாதரோகம்.
Hordeolum. Stye. கண்கட்டி; கண்ரெப்பைமேல் காணுகிற கட்டி.
Hypertrophy. Excessive nutrition.
Hypochondriasis. Low spirits. எந்நேரமும் வியாதி என்றே எண்ணிக்கொண்டிருக்கிறஸ்திதி.
Hysteralgia. Pain in the womb. கர்ப்பசூலைரோகம.
Lepra Albida. White leprosy. வெள்ளைகுஷ்டரோகம்.
Lethargy. சோம்பல்; திமிர்; மந்தம்.
Limosis Emesis. Sickness ... ... ... ... ...
Lumbago. Rheumatism in the loins. சகனாவர்த்தவாதரோகம்; இடுப்புவலி.
Menorrhagia. Immoderate flow of menses. பெரும்பாடு; மாதாந்திர ருதுகாலத்தில் அதிகமாய் ரத்தம்காணுதல்.
Morbus Veneris. Venereal disease. மேகவியாதி.
Nodes. Node. மேகத்தினால் எலும்பு தடித்துப்போகிறரோகம்.
Nyctalopia. Nightblindness. மாலைக்கண்.

Odontalgia. Tooth-ache. பல்நோய்.
Ophthalmia Purulenta. Purulent Ophthalmia. சீழ்வடியும் கண்ணோய்.
Otorrhœa. பூயகர்ணரோகம்; காதில் சீழ்வடிதல்.
Paraplegia. Palsy of the lower half of the body. அதோ அங்கவாதரோகம்; கால் விழுந்துபோகுதல என்பதுமடு.
Palpitatio. மார் அடித்துக்கொள்ளல்; இருதயத்துடிப்பு.
Phlegmasia dolens. Milk leg. தொடைவாழை.
Plethora. Fulness of the blood. ரத்தபுஷ்டி.
Pleurodynia. Pain in the side. பக்கச்சூலைரோகம்.
Polydipsia. Thirst. அதிதாகம்.
Polypus nasi. நாசாரசரோகம்; நாசியில் துர்மாமிசம் வளருகிறரோகம்.
Polysarcia. அதிதூலரோகம்.
Prolapsus ani. குதப்பிரம்ஸரோகம்; குதநெகிழ்ச்சி; ஆசனருடி; அடி.
Prolapsus uteri. Falling down of the womb. அடி; கர்ப்ப பிரம்ஸரோகம்.
Psora. Itch. சிரங்கு.
Pyrexia. Fever. ஜுரம்.
Pyrosis. Water brash. ... ... ... ... ... ... ...
Spermatorrhœa. Seminal flux. இந்திரியப்பெருக்கு.
Suppressio lochia. Suppression of lochial discharge. உதிரக்சட்டு.
Singultus. Hiccup. விக்கல்.
Tic doloreux. Neuralgia of the face. முகஜன்னி.
Tremor. Trembling. நடுக்கல்.
Trismus. Locked jaw. இசிவுமாந்தம்.
Tympanitis. Drum belly. வயிற்றுப்பொருமல்; வயிறு உப்பசம்.
Vaxcina. Cowpox. கோமாரி; கோமசூரிகை.
Verruca. Wart. மறு.
Vertigo. பித்தமயக்கம்; தலைத்திருப்பு.
Zymotic. Contagious, and infectious diseases. சாங்கிராமிகரோகங்கள். ஒட்டுவியாதிகள்; தொற்றுவியாதிகள்.

---

## ௯-வது-அத்தியாயம்

## SIGNS AND ABBREVIATIONS OCCURRING IN PRESCRIPTIONS.

அவுஷதப் பட்டிகளில் எழுதும் குறிப்புகளும், சங்கிரகமொழிகளும், இதனடியில் தெரிவிக்கப்படும்.

℞, *Recipe*, take. எடுத்துக்கொள்ளவேண்டிய சரக்குகளாவது.
*M.*, *Misce*, mix. மிஸ்ரமித்து.
*F.*, *Fac*, *Fiat*, make, let there be made. ஆகச்செய்து.
*Div.*, *Divide*, divide. பாகிக்கிறது.
*Solve*, dissolve. கரைக்கிறது.
*A.*, *ā ā.*, *ana*, of each. வகை ஒன்றுக்கு.
*Singulorum*, of each. வகை ஒன்றுக்கு.
*Q. S.*, *Quantum Sufficit*, as much as is sufficient. தேவையானது.
*Q. L.*, *Quantum lubet*, as much as you please. உமக்கு இஷ்டமானது.
*Cap.*, *Sum.*, *Capiat*, *Sumat*, let the patient take. நோயாளி எடுத்துக்கொள்ளட்டும்.
*Æg.*, *Æger*, *Ægra*, the patient, the sick man, or woman. ரோகி.

*Det., Detur*, let it be given. அதைக்கொடுக்கட்டும்,
*Semel, bis, ter in d.*, once, twice, thrice a-day. ஒருநாளைக்கு-௧-௨-௩-வேளை.
*H., Hora*, an hour. ஒருமணி.
*H. S., Horâ Somni*, at bed time. படுத்துக்கொள்ளும்போது.
*O. N., Omni Nocte*, every night. ராக்களில்.
*O. M., Omni mane*, every morning. காலைதோறும்.
*Cochl., Cochleare*, a spoonful. ஒருகரண்டி அளவு.
*Poc., Poculum*, a cup. ஒருகோப்பை.
*Cyath., Cyathus*, a wineglass. ஒரு ஒயின்கிளாஸ் என்னும் பாத்திர அளவு.
*Ad libitum*, at pleasure. இஷ்டமானபோது.
*Alternis horis*, every other hour. ஒருமணிவிட்டொருமணிக்கு.
*Amplus*, large. பெரிய.
*Bene*, well. செவ்வையாய்.
*Bis indies*, twice a day. ஒருநாளைக்கிரண்டுவேளை.
*Cras*, to-morrow. நாளைக்கு.
*Cras vespere*, to-morrow evening. நாளைசாயங்காலம்.
*Cras mane sumendus*, to be taken to-morrow morning. நாளைகாலையில் சாப்பிடவேண்டியது.
*Haustus*, a draught. ஓர்தரம் பானம் பண்ணுமளவு.
*Indies*, daily. நாள்தோறும்.
*Magnus*, large. பெரிய.
*Mane primo*, very early in the morning. உதயகாலத்தில்.
*Quâquâ horâ*, each hour. மணிமணிக்கு.
*Si opus sit*, if there be occasion. தேவையானால்.
*Statim*, immediately. உடனே.
*Subinde*, frequently. அடிக்கடி.
*Ter*, three times. மூன்று வேளை.
*Vesper, Vesperis*, the evening. சாயங்காலம்.
*M. F. P. Misce fiat pulvis.* mix to form a powder. சூரணமாகும்படி மிஸ்ரமித்து.
*M. F. mist. Misce fiat mistura.* mix to form a liquid mixture. கூட்டுஜலம் ஆகும்படி மிஸ்ரமித்து.
*M. F. Pil. Misce fiat pilulæ.* mix to form pills. மாத்திரைகளாகும்படி மிஸ்ரமித்து

---

Description. விவரணம்.
Properties.—Prop. குணம்; குணகுணங்கள்.
Preparation.—Prep. செய்முறை.
Impurities. தோஷங்கள்.
Officinal Preparations.—Off. Prep. உபயோகத்துக்குத்தகுதியான ரூபங்கள்.—உ--ரூபங்கள்.
Dose. ஒரு தரம் கொடுக்கும் அளவு அல்லது நிறை.—ஏ--அளவு.
Mode of administration. கொடுக்கிறவிதம்;
Action. செய்கை.
Use. உபயோகம்.
Adulteration. கலப்பு.
Incompatibles. பொருந்ாதவைகள்;
Antidote. மாற்று.

## ௭-வது-அத்தியாயம்.

## MINERAL AND CHEMICAL SUBSTANCES.

**காற்று, ஜலம் முதலியவைகளைக்குறித்தும், தாதுவர்க்க சம்பந்தமான பதார்த்தங்களைக்குறித்தும், இனி தெரிவிக்கப்படும்.**

### ATMOSPHERIC AIR.

### காற்று—வாயு

PHYSICAL PROPERTIES.—*நம்மையும், சூரியனைப் பிரதக்ஷணம்வருகிற பூமியையும், சூழ்ந்துகொண்டு கண்களுக்கு அகப்படாமல் இருக்கிறகாற்றுக்கு, கந்தமும், சுவையும், இல்லை ; காற்று, அடைத்து அழுத்தினால் சுருங்கும் ; அழுத்துதல் தளர்ந்தாலும், உஷ்ணம்பட்டாலும், விரிவாகும்.*

PRESSURE OF AIR.—*காற்றுக்கு பளுவுண்டு; கடல்மட்டத்தில், ஒவ்வொரு சதுர அங்குலப்பிரமாணத்துக்கு, ௰௫-பவுன், அல்லது சுமார் -௫- வீசை பளுவுள்ளதாய் இருக்கும், ஏர்பம்ப்* (Airpump) *என்னும் யந்திரத்தின்மேல். ரிசீவர்* (Receiver) *என்னும் பாத்திரத்தைவைத்து, அதனுள்ளிருக்கிறகாற்றை முற்றிலும் நீக்கிவிட்டால், வெளிப்புறம் இருக்கிறகாற்று, பாத்திரத்தை அழுத்திக்கொண்டு இருப்பதால், அது அசையாமல் கடித்துக்கொள்ளும். நமது சரீரம் எப்போதும் இடைவிடாமல், ௰௫ டன்* (Tons) *அல்லது சுமார் தூ௯ாள மணங்குள்ள பாரத்தைச் சுமந்துகொண்டு இருக்கின்றது! கடல்மட்டத்திலிருந்து நாம் மேலுக்குப்போகப் போக, காற்றின்பளுவு குறையும்; இந்த உண்மையை, பெருமிடர்* (Barometer) *என்னும் காற்றின்பளுவை நிர்ணயிக்கிற கருவியால் தெரிந்துக்கொள்ளலாம். காற்றின்பளுவு குறைந்தால், இந்தக் கருவியில் இருக்கிற ரசம், கீழ்க்கிறங்கும். இந்தக்கருவியைக்கொண்டு, பர்வதங்களுடைய உயரத்தை அளவிடலாம். புகைக்கூண்டின்சகாயத்தால், ஆகாசமார்க்கமாய்ப்போகிறவர்கள், இந்தக்கருவியைக்கொண்டே அவாள்போகிற உயரத்தை நிர்ணயிக்கிறார்கள். காற்றுமழை அடிக்கும்போது, காற்றுலேசாய் இருப்பதால், பெருமிடர் என்னும் யந்திரத்தில் இருக்கும் ரசம் கீழுக்கிறங்கும், அப்போது நோயாளிகளுக்கு சுவாசம்விடக்கொஞ்சம் வருத்தமாய் இருக்கும் ; மற்றவர்களுக்கு வித்தியாசம் அகப்படாது. ஆகாசமார்க்கமாய்ப் போகிறவர்களுக்கும், உயர்ந்தபர்வதங்களின்மேல் ஏறுகிறவர்களுக்கும், கஷ்டசுவாசம்காணும். காற்று அடித்து நின்றபிறகு, காற்றின்பளுவு அதிகப்படுவதால், ரசம் மறுபடியும் மேலுக்கு ஏறும். ௩௰-அடியுள்ள ஒரு நீண்ட கண்ணாடிக்குழலில், ரசத்தை ஊற்றிநிரப்பி, மற்றொரு பாத்திரத்தில் கொஞ்சம் ரசம்விட்டு, இதில் ஷை கண்ணாடிக்குழலைக் கவிழ்த்தால், குழலிலிருக்கும் ரசம், ௩-அங்குலம்பிரமாணம், கீழுக்கு இறங்கும். ஆகையால் சுமார் ௩௰-அங்குலப்பிரமாணமுடைய ரசதாரையைக் காற்றுதாங்குகிறதென்றுதெரிந்துகொள்ளவேண்டியது. கண்ணாடிக்குழல் மேல்முனையில், ரசமும் காற்றும் இல்லாமல்வெளியாய் இருக்கிறஇடத்துக்கு இங்கிலீஷில் வாக்கியும்* (Torricellian vacuum) *என்று பேர். ௧-சதுர அங்குலத்துக்குள் அடங்கியகாற்று, சுமார் ௱௪-இறே*

ன்இடை இருக்கும். அடிக்காற்று தளமாயும், மேல்காற்று லேசாயும் இருக்கும் ; மே லுக்குப்போகப் போகக் காற்று, குளிர்ச்சியாய் இருக்கும்.

EXTENT OF THE ATMOSPHERE.—காற்று பூமியிலிருந்து சுமார்-சடு - மயில் தூரம், மேலுக்கு அளாவி இருக்கின்றது.

COMPOSITION OF THE ATMOSPHERE.—ஆக்ஸிஜென் (Oxygen,) நைட்ரோ ஜென் (Nitrogen,) என்னும் இரண்டுவித வாயுகள்சேர்ந்து, நமதுபிராணனுக்கு ஆ தாரமாகிய காற்று உண்டாயின ; ௱-பங்கு காற்றில், உ௰-பங்கு ஆக்ஸிஜென் என்னும் வாயுவும், அ௰-பங்கு, நைட்ரோஜென் என்னும் வாயுவும், இருக்கின்றன. காற்றை எந்த இடத்தில் போய்ப்பரிசோதித்தபோதிலும், காற்றிலிருக்கிறவாயுகளுடைய பிரமாணமாறாது.

IMPURITIES.—காற்றில் வேறுசிலவாயுகள்கலந்திருக்கும், அதாவது, கார்போ னிக்ஆஸிட் (Carbonic Acid,) ஜலம்முதலியவைகளாம். சன்னகாரை ஆடின சுவ ரின்மேலும், கண்ணாடிகளின்மேலும், குளிர்ச்சியான பாண்டங்களின்மேலும், ஜலம் படிவதே, காற்றில் ஜலம் இருப்பதற்குத் திருஷ்டாந்தம். காற்றின் உஷ்ணசீதளத்துக் குத் தக்கபடி, அதில்இருக்கிற ஜலம் அதிகமாயாவது, குறைந்தாவது இருக்கும். க டற்காற்றில், கறிஉப்புத் திராவகமும் (Muriatic Acid,) மின்னலோடு பெய்கிற ம ழைநீரில், பொட்டிலுப்புத்திராவகமும் (Nitric Acid) கலந்திருக்கும். பட்டணவா சத்துக்காற்றில், பலவிதவாசனைகளுடைய வாயுகளும் கலந்திருக்கும் ; பூமியில் இரு ந்தும், ஜீவராசிகளில் இருந்தும், பூண்டுவர்க்கங்களில் இருந்தும், ஜெனிக்கிறதுவிக ளும், காற்றில் மிஸ்ரமித்து இருக்கும் ; இவைகளை நிறுக்கிட்டுச் சொல்லுவது மெத் தக்கடினம் ; ஆனபோதிலும், காற்றில்இருக்கிற தோஷங்கள் வெகு சீக்கிரத்தில் போய்விடும். காற்றோட்டம் இல்லாமல் இருக்கிற இடத்தில் கும்பல்சேர்ந்துஇருந் தால் அவடத்தில் கார்போனிக் ஆசிட்என்னும்வாயு, அதிகரித்து இருக்கும் ; இந்த வாயுமெத்தக்கெட்டது ; சுவாசம்விடும்போதும், அழிகிப்போகிற பதார்த்தங்களில் இருந்தும், சாக்கடைகளில் இருந்தும், எரிகிற விளக்குகளில் இருந்தும், இன்னம் வே றுவேறுனகாரணத்தாலும், ஷெ வாயுஜெனித்து, காற்றில் மிஸ்ரமித்து இருக்கும் ; இதை ஆக்கிராணித்தால், இறந்துவிடுவார்கள். எரிகிறவிளக்கை, கார்போனிக் ஆஸிட் காஸ்என்னும் வாயு இருக்கிற இடத்தில்வைத்தால்,அந்தவிளக்கு அணைந்துவிடும். பாழ் அடைந்த கிணறுகளிலும், நாள்பட மூடிவைத்த வீடுகளிலும், இந்த வாயு அதிகமாய்ச் சேர்ந்திருக்கும் ; ஆகையால் ஷெ இடங்களில் சென்றால், அபாயம் நேரிடும்; இதைத் தெரியாதவர்கள், பேய், அல்லது பிசாசு அறைந்துவிட்டது என்று சொல்வதுவழக் கம். ஆகையால் இவ்விடங்களில், எரிகிற விளக்கைவிட்டுப் பரிக்ஷைசெய்து பிறகு பிரவேசிக்கவேண்டியது ; விளக்கு அவியாமல் எரிந்தால் பிராணனுக்குப் பயம் இல்லை.

சுவாசம் உட்கொள்ளும்போது, அனாசுரலில் போகிறகாற்றிலிருக்கும் ஆக்ஸி ஜென் என்னும் வாயு, ரத்தத்தைப் பரிசுத்தப்படுத்துகின்றது. சுவாசவழியாய் வெ ளிப்படுகிறகாற்றில், கார்போனிக் ஆஸிட்காஸ் என்னும் வாயு கலந்திருக்கும். காற் றுவாடையில்லாமல், அடைப்பட்டிருக்கிற இடத்தில், நாம் சற்றுநேரம் இருந்தால், அவ்விடத்திலிருக்கும் காற்றெல்லாம் கெட்டுப்போகும், சுவாசத்துக்கு உதவாது.

இதற்கு திருஷ்டாந்தம்:—௲௭௱௫௰௬-ஸ்ல், ஜூன் மீ, ௨௰௨ ராத்திரி ௮-மணிக்கு, Black Hole of Calcutta என்னும், ௰௮-சதுர அடியுள்ள ஒரு சிறைச்சாலையில், ௱௪௰௬-பேரைக் குற்றித்தள்ளி அடைத்துவைத்தபோது, கொஞ்ச நேரம் சென்றபிறகு, அவர்களுக்கு அதிக வியர்வை கண்டு, உடனே தாகமும் கஷ்ட சுவாசமும் தொடர்ந்து, பிறகு விகாரம்கண்டது; ராத்திரி ௰௧-மணிக்குள் ௱௨௰௩-பேர் இறந்துபோனார்கள்; மறு நாள்காலையில் ௨௩-பேர் மாத்திரம் சிறைச்சாலையில் இருந்து வெளிப்பட்டனர். இவர்களில் சிலருக்கு விஷச்சுரம் கண்டு இருந்ததாம்.

சில சுதேசிகள், பிரசவித்த பெண்களையும், நோயாளிகளையும், காற்றுக்கு மறைவிடமாய் ஒரு சின்ன அறையில் அடைத்துவைப்பது வழக்கம். இவ்வித கஷ்டத்தைக் கொடுப்பதும் அன்றியில், அந்த இடத்தில் மூட்டம்போடுகிறதும், வெகுபேர் கூட்டங்கூடுகிறதும், அவாள் அவாள் மனதுக்குத்தோன்றியபடி பேசுகிறதும் உண்டு; இது மெத்தக் கெட்ட வழக்கம்; எப்போதும் நோயாளியைக் காற்றுள்ள இடத்தில் வைப்பதே நல்லது. ஒருவன் நெருங்கிக் கும்பல்கூடி இருக்கிற இடத்தில் இருந்து வெளிக்குவந்தால், காற்றுப்பட்டவுடன் அவனுக்கு சவுக்கியம் உண்டாகும், மார்பு அடைப்பாய் இருப்பதும், மயக்கமாய் இருப்பதும் நீங்கிவிடும். கும்பல்கூடி இருக்கிற இடத்தில் இருந்தால் திக்குமுக்காடுமென்று அனேகருக்குத் தெரிந்தபோதிலும், இன்னகாரணத்தால் காணுகிறதென்று தெரியமாட்டாது.

அனந்தங்கோடி ஜிவராசிகள் சுவாசம் விடுவதால் காற்றிலிருக்கும் ஆக்ஸிஜென் என்னும் வாயு, நாளுக்குநாள் குறைந்துவிடும்; அப்படிக்குறையாமல், சமரசமாய் இருக்கும்படி, சர்வவல்லமையுள்ள கடவுள் செய்துவைத்திருக்கிற தந்திரமாவது:—தாவரங்களுக்கும், சீவராசிகளைப்போலவே சுவாசம்விடுகிற தொழில் உண்டு; செடிகள் பகற்காலத்தில், காற்றில் இருக்கிற கார்போனிக் அஸிட் என்னும் வாயுவை உட்கொண்டு, ஆக்ஸிஜென் என்னும் வாயுவை வெளிப்படுத்திவிடும்; இராக்காலத்தில் ஆக்ஸிஜென் என்னும் வாயுவை நிறுத்திக்கொண்டு, கார்போனிக் ஆஸிட் என்னும் வாயுவை வெளிப்படுத்தும். செடிகளுக்கிருக்கும் இந்தச்செய்கையால், காற்றில் இருக்கிற தோஷம் நீங்கிக் காற்று பரிசுத்தப்படுகின்றது. செடிகள் அதிக செழிச்சியாய் இருக்கிற இடத்தில் இராக்காலத்தில் இருந்தால், தேகசவுக்கியங் கெடும். இராக்காலத்தில் படுக்கை வீட்டில் புஷ்பங்களை வைத்துகொண்டு நித்திரைசெய்வதும் தகுதியல்ல.

USES OF THE AIR.—செடி, பூண்டு, புல்முதலியவைகளுடைய விளைச்சலுக்கும், சீவராசிகளுடைய சுவாசத்துக்கும், அக்கினி பற்றுதலுக்கும், காற்று இருக்கவேண்டியது. காற்றில்லாவிட்டால், சகலமும் நாசமடையும். காற்றில் இருக்கிற ஆக்ஸிஜென் என்னும் வாயுவால்தான், நமது பிராணன் நிலைபெற்றிருக்கின்றது. மச்சங்கள், ஜலத்தில் இருக்கிற காற்றின் உதவியால் சீவித்து இருக்கின்றன. காற்றினுடைய வித்தியாசத்தால் சரீரசவுக்கியமும், சில மருந்துகளுடைய குணமும் கெடும்.

## OXYGEN.—Vital Air. (O=8)

## ஆக்ஸிஜென்.

DESCRIP. & PROP. விவரணம், குறைகுணங்கள்.—இது, வாயுருபமான ஓர் பதார்த்தம்; இந்த வாயுவுக்குநிறமும், வாசனையும், ருசியும் இல்லை; இது காற்றில் ௱-ல்-௨௰௩-பங்காகவும், ஜலத்தில் ௯-தில் ௮-பங்காகவும், இருக்கின்றது. சுவாசம் உள்

டங்கும்போது, காற்றிலிருக்கும் ஆக்ஸிஜென் வாயு, அசோசுரலில்இருக்கும் கெட்ட ரத்தமாகிய கறுப்பு ரத்தத்தில் கலந்து சிவப்பு ரத்த மாக்கிவிடும். இதைத்தனியாய் ஆக்கிராணித்தால் கொன்றுவிடும். ஆக்ஸிஜென் சேர்ந்த பதார்த்தங்களுக்கு, ஆக்ஸைட்ஸ் (Oxides) என்று பெயர். தமிழில், பஸ்மம், நீறு, சுண்ணம், சிந்தூரம் எனப்பல நாமங்களுண்டு.

PREP.—Heat powdered and dried *black oxide of manganese* in an iron gas bottle, till it is red hot; Collect the gas. Or mix *black ox. Mangan. and Sulphuric acid*, to the consistence of cream, and distil in a glass retort. Or the *red oxide of mercury* or *Nitre* may be heated to dull redness to obtain this gas. *Chlorate of Potash*, heated in a retort, yields pure oxygen.

செய்முறை.—தூள்செய்து உலர்ந்த, பிளாக் ஆக்ஸைட் ஆவ்மாங்கனீஸ் என்னும் பஸ்மத்தை, இரும்புப் புட்டியில்போட்டு, கனியும்படி எரித்து, வாயுவை சேகரித்துக்கொள்ளவும். அல்லது பிளாக் ஆக்ஸைட் ஆவ்மாங்கனீஸ் என்னும் பஸ்மத்தையும், கந்தகத்திராவகத்தையும் சேர்த்து, கண்ணாடிவாலையிலிட்டு எரித்து, வாயுவைச்சேகரித்துக் கொள்ளவும். அல்லது ரஸசிந்தூரத்தையாவது (Red oxide of mercury,) அல்லது பொட்டிலுப்பையாவது எரித்து, இந்த வாயுவைச்சேகரித்துக் கொள்ளலாம். குளோரேட்ஆவ் போடாஷ் என்னும் உப்பை, வாலையிலிட்டு எரித்தால், பரிசுத்தமான ஆக்ஸிஜென்வாயு, அகப்படும்.

ACTION.—Stimulant. செய்கை.—உஷ்ணகாரி.

USE.—The inhalation of oxygen gas has been recommended in *Asphyxia, Spasmodic Asthma, Indolent Ulcers, Boils, Carbuncles &c.* உபயோகம்.—சுவாசபந்தரோகம், சுவாசகாஸரோகம், விரணங்கள், வித்திருதிக்கட்டிகள், ராஜப்பிளவைமுதலிய ரோகங்களுக்கு, இந்த வாயுவை ஆக்கிராணிக்கச்செய்வதுண்டு.

DOSE.—Dose must be regulated by its effects. இ-அளவு.—இந்தவாயுவை ஆக்கிராணித்த பிறகு உண்டாகும்குணத்தின்பேரில் அளவை நிறுக்கிடவேண்டியது. அதிக இருமலும், மூச்சடைப்புங்கண்டால், ஆக்கிராணிப்பதை நிறுத்திவிடவேண்டியது.

## NITROGEN.—Azote. (N=14)

## நைட்ரோஜென். அஸோட். உப்புவாயு.

DESCRIP., AND PROP. விவரணம், குணங்கள்.—நைட்ரோஜென் என்பது வாயுரூபமான ஓர் பதார்த்தம்; இது எங்கும்பரவியிருக்கின்றது. நைட்ரோஜென் வாயுவில், தீபத்தைவிட்டால், அது அணைந்துப்போகும்; சீவனுள்ள பரவையானால், அது சாகும். காற்றில், ௫-ல் ௪-பங்காக இருக்கின்றது. காற்றிலிருக்கிற, ஆக்ஸிஜென் வாயுவின் வேகத்தை, நைட்ரோஜென் வாயு குறைத்து, சுவாஸத்துக்கு பக்குவப்படுத்துகின்றது. சீவராசி தாதுக்களில், நைட்ரோஜென் வாயு சேர்ந்திருக்கின்றது. நைட்ரோஜென் வாயுவுக்கு, நிறம், சுவை, கந்தம், இவைகளில்லை.

PREP. Nitrogen may be obtained by burning *Phosphorus* carefully in a jar of common air, when, the whole of the Oxygen being abstracted,

Nitrogen is left comparatively pure. Or a mixture of *Sulphur* and *Iron-filings* made into a paste with water and similarly enclosed, will slowly absorb the Oxygen. It may then be further purified, by passing it through Sulphuric Acid to separate the water and Ammonia of the atmosphere, and then through Lime water to abstract Carbonic Acid.

செய்முறை.—ஒரு தட்டில் கொஞ்சம் ஜலம்வார்த்து, ஒரு சிறிய பீங்கான் சோப்பையை அதில் விட்டால், மிதக்கும்; அதில் கொஞ்சம் தீமுருகல் பாஷாணத்தை (Phosphorus) வைத்துக்கொளுத்தி அது எரியும்போது, வாய் அகலமுள்ள கண்ணாடிஜாடியால் மூடினால், ஜாடிக்குள்ளிருக்கிற காற்றிலிருக்கும் ஆக்ஸிஜென் வாயுவை, தீமுருகல் பாஷாணம், கிரகித்துக்கொண்டு, நைட்ரோஜென் வாயுவைமாத்திரம் விட்டுவிடும். அல்லது, கந்தகத்துடன், அரப்பொடிச்சேர்த்து கொஞ்சம் ஜலம்விட்டுப் பசைபோல்ச்செய்து, மேல்குறித்தபடிச்செய்தால், அது மெதுவாய் ஆக்ஸிஜென் வாயுவை, கிரகித்துக்கொள்ளும். பிறகு ஜாடியிலிருக்கிற நைட்ரோஜென் வாயுவை கந்தகத்திராவகத்தில் பிரவேசிக்கச் செய்தால் அதிலிருக்கிற ஜலம், அம்மோனியா என்னும் வாயு, இவைகள் நீங்கிப்போகும்; பிறகு சுண்ணாம்பு ஜலத்தில் பாயவைத்தால், அதிலிருக்கிற கார்போனிட் ஆஸிட் வாயுவை அந்தநீர் கிரகித்துக்கொள்ளும்.

USE. உபயோகம்.—நைட்ரோஜென் வாயு அதிகமாய் இருக்கிற பதார்த்தங்கள் சாப்பிட்டால் தேகத்தைப்போஷித்து, அதற்குப் பலத்தைக் கொடுக்கும். சில ரோகங்களுக்கு இவைகள் எடுத்ததாய் இருக்கின்றன. முட்டை, மாம்ஸம், பால் இவைகள் இதற்குத் திருஷ்டாந்தமாகச் சொல்லலாம்.

## HYDROGEN. (H=1)

## ஹைட்ரோஜென். ஜலஜோவாயு,

DESCRIP., AND PROP. இந்த வாயு தனிப்பட்டிராது; ஜலம் முதலிய பதார்த்தங்களில் கலந்திருக்கும். காற்றைப்பார்க்கிலும் இந்த வாயு லேசானது, ஆகையால் புகைக்கூடில் (Balloon) அடைக்க உபயோகப்படுகின்றது. எரிகிற வர்த்தியை விட்டால், இந்த வாயு பத்திக்கொண்டு, கம்மலாய் எரியும். இந்த வாயு அவுஷதமாய் உபயோகப்படாதபோதிலும், சில பதார்த்தங்களில் சேர்ந்திருப்பதால், இந்த வாயுவைக்குறித்து நமக்குத் தெரிந்திருக்க வேண்டிய தவசியமென்று, இவ்விடத்தில் குறிக்கலாயிற்று.

## WATER.—Aqua. Aq. (or HO=9)

## ஜலம். தண்ணீர். நீர். உதகம். புனல்.

PROPERTIES. AND COMPOSITION. குணம், சேர்க்கை.—ஆதியில் ஹிந்து சாஸ்திரத்திலும், இங்கிலீஷ் சாஸ்திரத்திலும், ஜலம், ஏக பூத சுபாவபதார்த்தமென்று, சொல்லப்பட்டிருந்தது; சாஸ்திர அபிவிருத்தியால், தளாக-ஹூ, யூரோப்கண்டத்தில், ஜலம் ஆக்ஸிஜென் (Oxygen,) ஹைட்ரோஜென் (Hydrogen) என்கிற, இரண்டு வாயுகள் சேர்ந்து உண்டானதென்று, கண்டறியப்பட்டது. சகல பதார்த்தங்களிலும், ஜலம் இருக்கின்றது. ஆகாயத்தில் ஜலம் வாயு ரூபமாயும், மேக ரூபமாயும் இருக்கும், காற்றைப்போலவே, ஜலம் கண்களுக்குத் தோற்றாது; அது தவமாகிக்கண்களுக்குத் தோற்றுவதை "பனிபெய்கிறதென்று" சொல்லுகின்றோம். சன்னகாலையாடின சுவரின்மேல் படிகிற ஈரமும், புல் முதலியவைகளின்மேல் படிகிற

ஜலமும், காற்றில் இருக்கிற நீர் குளிர்ச்சியால், தளமாகி அவைகளின்மேல்படிகிற தென்று தெரிந்துகொள்ளவேண்டியது. அதிக சீதளப் பிரதேசங்களில், ஜலம் உறைந்து கட்டியாய் இருக்கும். அதைப்பனிக்கட்டி என்பது வழக்கம்.

பரிசுத்தமான ஜலத்துக்கு வாசனை, நிறம், ருசி இல்லை. பாரன்ஹிட்ஸ் தெர்மாமிடர் (Fahrenheit's Thermometer) என்னும் கருவியில் ௩௨-டிக்கிரி அளவுக்கு ரசம் கீழுக்கு இறங்கிவிட்டால் ஜலம் கட்டிப்போகும். ௨௱௰௨-டிக்கிரிக்கு ரசம் ஏறினால் ஜலம் கொதித்து ஆவியாகிவிடும். சாதாரணமாய் ஜலம், வாயு ரூபமாகி, காற்றில் கலந்துவிடுகின்றது. காற்றில் ஜலம் அதிகமாயிருந்தால், சீதளமாயும், குறைந்திருந்தால், உஷ்ணமாயும் இருக்கும். பலவித உப்புகளில் இருக்கும் ஜலத்துக்கு வாட்டர் ஆவ் கிரிஸ்டாலிசேஷன் (Water of crystallization) என்று பெயர்.

PREP. செய்முறை:—ஆக்ஸிஜென் (Oxygen)ஹைட்ரோஜென் (Hydrogen) என்னும் வாயுகளைச்சேர்த்து, Electric spark என்னும் மின்தாதுவின் உஷ்ணம்படும்படிச் செய்தால், அவ்விரண்டு வாயுகளும், வெடிச்சத்தத்துடன் சேர்ந்து, ஜலமாகிவிடும்.

IMPURITIES. தோஷங்கள்.—ஜலத்தில் அனேக தோஷங்கள் இருக்கின்றன; அதாவது: கிருமிகள், சேறு, சுண்ணும்பு, பாசி காரசாரங்கள் முதலியவைகளாம். பூதக்கண்ணுடியால் (Microscope) பார்வையிட்டால், ஜலத்தில் இருக்கிற தோஷங்கள் கண்களுக்கு அகப்படும்.

PURIFICATION. பரிசுத்தப்படுத்துதல்.—ஜலத்தைஅனேகவிதங்களாய்ப் பரிசுத்தப்படுத்தலாம்:—௧-வது. *Subsidence*, ஜலம் இருக்கிற பாத்திரத்தை அசையாமல் வைத்துத் தெளியவைத்தும்;—௨-வது. *Filtration*, கடுதாசி, பிளானெல், நீர்ப்பஞ்சு, கரி, மணல், இவைகளில் எதையாவதைக் கொண்டு வடிகட்டியும்;—௩-வது. *Boiling*, கொதிக்கக்காய்ச்சியும்;—௪-வது. *Distillation*, வாலையிலிட்டிறக்கியும்;—௫-வது. *Alum, Clearing-nut, Dhol*, படிக்காரம், தேற்றாங்கொட்டை துவரம்பருப்பு, இவைகளில் எதையாவது உரைத்துத்தெளியவைத்தும் சுத்தஉதகமாக்கிக் கொள்ளலாம். ஜலத்தைக் காய்ச்சினால், அதிலிருக்கிற கிருமிகள் சாகும். வாயு, ஓர்வித சத்தத்தோடு வெளிப்படும். குளிரவைத்தால், சுண்ணும்பு முதலிய தோஷங்கள் அடியில் படிந்துவிடும்.

வேறொரு விதமாயும் ஜலத்தைப்பரிசுத்தப்படுத்தலாம்; அதாவது: இரண்டு புது மண்பாண்டங்களுக்கு அடியில் சிறிய துவாரங்கள் செய்து, ஒன்றில் கரித்தூளை அரைத்தூரத்துக்குப்போட்டு, மற்றொருபாண்டத்தில், நன்றாய்க்கழுவிப் பரிசுத்தப்படுத்திய மணலை ஷை மிதத்துக்குக் கொட்டி, இவ்விரண்டையும் ஒரு புது பாண்டத்தின்மேல்வைத்து, மேல்பாண்டத்தில் பக்குவமாய் ஜலம் விட்டு நிரப்பினால், அந்த ஜலம், கரித்தூளில் ஊறித் துளித்துளியாய் கீழிருக்கிற மண்பாண்டத்தில் இறங்கும், பிறகு அந்த ஜலம் மணலில் ஊறி, அதற்கடியில் இருக்கிற வெற்றுக்குடத்தில் சேரும். இவ்விதமாய்ச் செய்தால், ஜலம் மெத்த பரிசுத்தமாய்விடும். கரித்தூளில் ஊறி இறங்கும்போது, ஜலத்திலிருக்கும் நாற்றம்போய்விடும்; மணலில் ஊறி இறங்கும்போது, ஜலத்திலிருக்கிற கிருமிமுதலிய தோஷங்கள் மணலில் படிந்து நின்றுவிடும்.

TESTS. பரீக்ஷை.—திராவகம் (Acid) இருக்கிற ஜலத்தில், லிட்மஸ்பேபர் (Litmus paper) என்னும் நீலக்கடுதாசியைத் நனைத்தால், அது சிவந்துபோகும். காரம் (Alkali) இருக்கிற ஜலத்தில், டர்மரிக் பேபர் (Turmeric paper) என்னும் மஞ்சள் கடுதாசியைத் நனைத்தால், அது சிவந்துபோகும். கறியுப்பு (Common salt) இருக்கிற ஜலத்தில் உ-துளி, காடிக்கார நீர்விட்டால், அந்த ஜலம் வெளுத்துப்போகும். அயம் (Iron) இருக்கிற ஜலத்தில், மாசக்காய் பாவனத்திரவத்தை (Tincture of Galls.) சேர்த்தால், கறுத்துப்போகும். இவ்விதமாக, ஜலத்திலிருக்கிற தோஷங்களைத் தெரிந்துகொள்ளவேண்டியது. நிர்மலநீர் பரிசுத்தமானது; அதில் தோஷங்கள் இராது.

## IMPURE WATERS.

## தோஷமுள்ள ஜலங்கள்.

நாம் உபயோகப்படுத்துகிற ஜலத்தை, கிணறு, ஊற்று, ஆறு, ஏரி, குளம், குட்டை, முதலியவைகளில் இருந்து சேகரித்துக்கொள்ளுகிற போதிலும், அந்த ஜலம் மருந்துகலக்க உதவாது.

**Rain water.** மழைநீர்.—எல்லா நீர்களைப்பார்க்கிலும், மழைநீர், பரிசுத்தமானது; அதிலுஞ் சிலவேளை உப்பு முதலிய தோஷங்கள் கலந்திருக்கும். அவுஷதக்கலப்புக்கு மழைநீர்வேண்டியதாயிருந்தால்,நல்ல மழைபெய்து, காற்றிலிருக்கிற தூசி, முதலிய தோஷங்கள் அடங்கினபிறகு,வெளியில் வெள்ளைச்சல்லாத்துணியை விரித்துக்கட்டி அதில்வடிகிற மழை நீரை சேகரித்துக்கொள்ளவேண்டியது; வீடுகளின்மேல் விழுந்து வடிகிற மழைநீரில் தோஷங்கள் மேத்த இருக்கின்றன.

**Spring water.** ஊற்று ஜலம்.—ஊற்று ஜலத்தில், சுண்ணம், கறிஉப்பு, கார்போனிக் ஆஸிட் முதலிய தோஷங்களிருக்கின்றன. இதற்கு இங்கிலீஷில், ஹார்ட் வாடர் (Hard water,) என்று பெயர். இதில் சவுக்காரத்தைக் கலந்தால், வெள்ளை நிற மாகிவிடும்.

**River water.** ஆற்றுஜலம்.—ஆற்று ஜலமானது ஊற்றிலிருந்து உற்பத்தியாகி, பூமிமேல் ஓடிக்கொண்டு இருக்கிறபடியால், பூமியில் என்னென்ன பதார்த்தங்கள் இருக்கின்றதோ அதெல்லாம், ஜலத்தில் கலந்திருக்கும். ஆகையால் ஆற்று நீரில் தோஷங்கள் அதிகமாக இருக்கும். இதைச்சற்றுநேரம் அசையாமல் வைத்து, வடிகட்டிக்கொண்டால், பரிசுத்தமாகிவிடும்.

**Well water.** கிணற்று ஜலம்.—கிணற்று ஜலத்தில், முக்கியமாய் அழுகிப்போன பூண்டுமுதலிய பதார்த்தங்களுடைய தோஷங்கள் கலந்திருக்கின்றன.

**Lake water.** ஏரி, குளம், குட்டை இவைகளின் ஜலம்.—இந்த ஜலத்தைவிட விசேஷதோஷங்கள் இருக்கிற ஜலம் இல்லை. இந்த ஜலத்தைக் குடிக்கலாகாது. குளங்களில் சாதாரணமாய் நானாவித ரோகிகள் குளிப்பதாலும், தேகத்திலிருக்கிற அழுக்கு,குஷ்டம், சிரங்கு முதலிய சருமரோகங்களிலிருக்கிற சகலவித அழுக்குகளும் கலந்திருக்கும். குளத்துஜலம் குடிப்பதால் நரம்புச்சிலந்திரோகம் காணுகிறதென்று சிலருக்கு நம்பிக்கையுண்டு.

**Sea water.** சமுத்திரஜலம்.—இதில், மாக்னீஷியா, ஸோடா, பொட்டாஷ், லைம், இவைகள் கலந்த உப்புகளும், ஐயோடயின், புரோமின் (Bromine) என்கிற பதார்த்தங்களும், இருக்கின்றன. இது குடிக்க உதவாது.

**Distilled Water.** தீ நீர்.

USE. உபயோகம்.—தீநீரை தீபனமந்தத்துக்கும் (Dyspepsia,) லிதிக் ஆஸிட் (Lithic acid) என்னும் ஒருசாதி மூத்திரரோகத்துக்கும், முன்பு உபயோகப்படுத்தப்பட்டது. உப்புகளைத் தீநீரில் கரைக்கவேண்டியது; மற்ற ஜலத்தில் கரைத்தால் கெட்டுப்போகும்.

**Cold Water.** குளிர்ந்த ஜலம். சீத உதகம். குளிர் நீர்.

USE. உபயோகம்.—As a drink in *Fevers & Inflammations.* ஜுரம், தாபித ரோகங்கள் இவைகளில் அதிகமாய்க் குளிர்ந்த ஜலம் சாப்பிடலாம். பார்லி அரிசி கஞ்சியைச் சாப்பிடுவது மெத்த உத்தமம். தேவையானால் எலுமிச்சம்பழரசம் கொஞ்சம் விட்டுக்கொள்ளலாம். இந்த சிகிச்சை தேகத்தைக் குளிர்ச்சிசெய்யும்.

Taken in moderate quantities, Cold water quenches thirst, allays inordinate heat of the body, promotes the process of digestion, & by being absorbed into the system, repairs the loss of the fluid portion of the blood, occasioned by the cutaneous and other exhalants. If taken in too large quantities, or immediately before a meal, it dilutes the gastric juice to such an extent as to incapacitate it for performing, in the normal manner, the digestive process; but if taken during a meal & in moderate quantities, it acts partially as a solvent for the food, and thus proves highly advantageous. (DR. WARING.)

குளிர்ந்த ஜலம் மிதமாகச் சாப்பிட்டால், தாகத்தை யடக்கும், தேகத்தில் அதிகரித்திருக்கிற உஷ்ணத்தைத் தணிக்கும், சீரணமாக்கி பக்குவப்படுத்துகிற, ஜடராக்கினியை அதிகப்படுத்தும்; வியர்வை முதலியவைகளால் குறைந்துபோகிற ரத்தநீரை, சமரசப்படுத்தும். அதிகமாயாவது, அல்லது, போஜனம் செய்கிறதற்கு முன்னதாயாவது, ஜலம் சாப்பிட்டால், ஜீரணநீரின் (Gastric juice) பலத்தைக் குறைத்து, மந்தாக்கினி ரோகத்தை யுண்டுபண்ணும்; ஆனால் போஜனம் செய்யும் போது ஜலம் மிதமாய் சாப்பிட்டால், அது சாப்பிடுகிற பதார்த்தங்களை அன்னப்பையில் கரையும்படிச் செய்வித்து மெத்த பிறயோஜனத்தை உண்டாக்கும்.

Sponging the body with cold water, or vinegar and water in *fevers,* to reduce the heat of the surface. சுரங்களில், குளிர்ந்த ஜலத்திலாவது, அல்லது காடியும் ஜலமும் கலந்த நீரிலாவது, நீர்ப்பஞ்சை நனைத்து சரீரத்தின்மேல் துவட்டினால் உஷ்ணத்தைத் தணிக்கும்.

Cold affusion in *Delirium Tremens.* மதுபானி பயித்திய ரோகத்துக்கு, குளிர்ந்த ஜல மஞ்சனச் சிகிச்சையை அநேகர்செய்யச்சொல்லுகிறார்கள். தாருட்டியம் குறைந்திருக்கும்போது இதை உபயோகிக்கலாகாது.

The application of cold fluids to the head in *Delirium,* from fever &c. ஜுரம் முதலியவைகளில் காணும் விகாரத்தில் குளிர்ச்சிசெய்த ஜலத்தை சிரசின்மேல் போட்டு சிகிச்சைசெய்வது இங்கிலீஷ் வயித்தியர் வழக்கம். ஆனால் ஹிந்துக்கள் இந்த சிகிச்சைக்கு பயப்படுகிறார்கள். சிரசின்மேல் ஜலம் விட்டால்,

சிதளஞ்செய்யுமென்று எண்ணம். ஜலத்துக்குப்பதிலாய் சல்லாத்துணியை முலைப் பாலில்துவைத்து நெற்றிமேல் போடுவது வழக்கம்.

Enema of iced water, vaginal injection of cold water, with cold to the abdomen, in *Uterine Hæmorrhage.* ரத்தப்பெருக்குக்கு, பனிக்கட்டியைப் போட்டுக் குளிரவைத்த ஜலத்தை பீச்சாங்குழலால் ஆசனத்தில் அடித்தால், சுகுணத்தைத் தரும்; குளிர்ந்த ஜலம் அல்குலிலும் அடித்து அடிவயிற்றின்மேலும் போடலாம்.

The free internal use of cold water in *Cholera.* (DR. SHUTE.) விஷபேதி ரோகத்தில் அதிகமாய் குளிர்ந்த ஜலங் கொள்ளுவது நல்லது. குளிர்ந்த ஜலச் சிகிச்சையால் அனேகருக்கு லகுபட்டிருக்கிறதை, சாஸ்திரங்கள் மூலமாய்க் காணலாம்.

காயங்கள் பட்டு ரத்தம்வடிகிறதை நிறுத்தக் கரித்தூள்போடுகிற வழக்கம் கெட்டது, அதனால் சீழ்பிடித்து மெத்த உபத்திரவத்தைத் தரும். காயம்பட்டவுடன் மெல்லியதுணியை குளிர்ந்த ஜலத்தில் நனைத்துப்போட்டு அந்தத்துணி உலராமல், ஜலம்விட்டு நனைத்துக்கொண்டு இருந்தால் மெத்தச் சவுக்கியத்தைத் தரும். ஜலம் பட்டால் சீழ்க்கொள்ளுமென்று சொல்வதுதப்பிதம்.

Throwing cold water on the face and chest in *Syncope.* மூர்ச்சைகண்டவர்களுக்குக் குளிர்ந்த ஜலம் முகத்திலும் மார்பிலும் அறைந்தால் மூர்ச்சை தெளியும்.

**Hot Water. Warm Water.**—வெந்நீர். சுடுத்தண்ணீர். உஷ்ணோதகம். இது மெத்த உபயோகமான பதார்த்தம். குடிக்கிற வெந்நீரின் உஷ்ணம் ௱-டிக்கிரி இருக்கவேண்டியது. இந்தச்சுடுகையில் சாப்பிட்டால், அன்னப்பை நரம்புகள் தளரும், குமட்டல் உண்டாகும், அதிகமாய்ச்சாப்பிட்டால் வாந்தியாகும்; இதற்கு வியர்வையைப் பிறப்பித்து ரத்தத்தை இளக்குகிற குணமுண்டு. மிதமான சூடுள்ள வெந்நீர் ஒற்றிடம்போட்டால் நோய், எரிச்சல் தணியும். ௨௱௨-டிக்கிரி உஷ்ணமுள்ள வெந்நீர் தேகத்தில் பட்டால், கொப்புளிக்கும்; வெந்நீரை உக்காவில்போட்டுப் பிடித்தால் ஆவி நுரையீரலில் சென்று கபத்தை தாராளமாய் வெளிப்படுத்தும்; ஆசனத்தில் பீச்சாங்குழலால் அடித்தால், கட்டியிருக்கும் மலத்தை இளகலாக்கி வெளிப்படுத்தும்; தொண்டையிலிருக்கும் ரணத்துக்கு, வெந்நீர் ஆவியை ஆக்கிராணித்தால், மெத்த சவுக்கியத்தைத்தரும்.

Fomentation to the chest in *Asthma.* (DR. GRAVES.) சுவாசகாசத்துக்கு, மார்பில் வெந்நீர் ஒற்றிடம்போட்டால் சுகுணத்தைக்காட்டும்.

Application of hot water to the temples, forehead, occiput, and nape of the neck to relieve headache &c. in Fever. (DR. GRAVES.) சுரத்தலைவலிக்கு, வெந்நீரில் துணியை நனைத்து கன்னப்பொறி, நெற்றி, பின்தலை, பிடரி இவைகளில் சூடுபொறுக்கும்படித் தடவினால் மெத்தச் சுகுணத்தைக் கொடுக்குமென்று கண்டிருக்கின்றது.

Hot foot-bath in *congestive Headaches.* (DR. GRAVES.) தலைநோய் ரோகத்துக்கு கால்களை முழந்தாள்வரையில் வெந்நீரில் சற்றுநேரம் வைத்திருந்தால் தலைநோய் சமனமாகும்.

Sitting over the steam of hot water for 15 or 20 minutes, and immediately applying a warm bread and milk poultice in *Piles* attended with great irritation and pain. (DR. GRAVES.) மூலவியாதியில் எரிச்சலுடன் நோயிருந்தால், வெந்நீரின் ஆவி பதினைந்து இருபது நிமிஷம் உட்கார்ந்து, பிறகு ரொட்டியும் பாலுஞ் சேர்த்து போல்டிஸ் செய்து போட்டால் சுகுணத்தைத் தரும்.

Bathing the parts with hot water and soap in *Prurigo.* நமட்டுச்சிரங்குக்கு, சவுக்காரம் அல்லது அதைப்பு தேய்த்து, வெந்நீர்விட்டுக் கழுவ குணமாகும்.

Enema of warm water in *Rigid Os Uteri* during labour. (DR. TYLER SMITH.) பிரசவகாலத்தில், கருப்பையின் முகம் பிகுவாய் இருந்து, சிசு உதயமாகாமல் வருத்தப்படும்போது, வெந்நீரை பீச்சாங்குழலால் ஆசனத்தில் அடித்தால், அந்தப்பையின் முகம் மலர்ந்து சிசு வெளிப்படும்.

Application of tepid water dressing to *Abscesses, Ulcers, Wounds, Inflamed surfaces* &c. (DR. MACARTNEY.) சீழ்க்கட்டி, விரணங்கள், காயங்கள், தாபிதங்கண்டிருக்கிற இடங்கள், இவைகளுக்கு துணியை மடித்து வெந்நீரில் நனைத்து அவைகளின்மேல் போட்டு வாழையிலையால் மூடிக் கட்டிவைக்கவும். போல்டிஸ்போடுவதில், அது புளித்து துர்வித நாற்றம் உண்டாகும்; போட்ட இடத்தில் அழுக்குப்படியும். ஆகையால், மேற்சொல்லிய வெந்நீர்ச்சிகிச்சை மெத்த உத்தமமென்று இங்கிலீஷ் வைத்தியர் உபயோகப்படுத்தி வருகிறார்கள்.

In *Dyspepsia* attended with a sensation of coldness at the stomach and with cold extremities, a cupful of water taken as hot as it can be drunk, affords very considerable relief. (Dr. A. T. THOMPSON.) வயிற்றில் குளிர்ச்சியாய் தோணுகிற ஓர்வித அக்கினிமந்த ரோகத்துக்கு, குடிக்கிறபதமாய் இருக்கிற வெந்நீர் சாப்பிட்டால் சுகுணத்தைக் கொடுக்கும்.

## BATHS. ஸ்நானங்கள்.—ஜலகங்கள்.

குளிக்கிற ஜலத்தின் உஷ்ண சீதளத்துக்குத்தக்க படி, ஸ்நானங்களுக்கு வேறு வேறான பெயர்களுண்டு; அவைகளை இதன் அடியில் கூறப்படும்.

| | | |
|---|---|---|
| 1. The Cold Bath | from | 33° to 60° F. |
| 2. The Cool Bath | ,, | 60° ,, 75° |
| 3. The Temperate Bath | ,, | 75° ,, 85° |
| 4. The Tepid Bath | ,, | 85° ,, 92° |
| 5. The Warm Bath | ,, | 92° ,, 98° |
| 6. The Hot Bath | ,, | 98° ,, 112° |

THE COLD BATH. சீதஉதகஸ்நானம். *Observations on its use.*—க. The morning is the most proper period for the Cold Bath; காலையில் குளிர்ந்த ஜலஸ்நானஞ்செய்வது உத்தமம்.—உ. It should not be taken whilst the body is in a state of profuse perspiration; சரீரம் அதிகமாய் வேர்த்துக்கொண்டு இருக்கிறபோது, குளிர்ந்த ஜலத்தில் முழுகலாகாது.—ரு. It is objectionable immediately after a full meal; திருப்தியாய், சாப்பிட்டபிறகு குளிர்ந்த ஜலத்தில் முழுகுவது விரோதம்.—ச. It should never be continued so long as to cause shivering, blueness of the nails, &c.; 15 or 20 minutes is a

sufficient time for one bath; நடுக்கல், நகம் நீலநிறமுண்டாகிற வரையும், ஜலத்திலிருக்கலாகாது; ஒவ்வொரு தடவைக்கு மிகு அல்லது ௩ம் மினிட்டுநேரம் இருப்பது போதுமான காலம்.—௫. After coming out of the bath, the body should be rapidly dried, and gentle exercise taken; ஸ்நானஞ்செய்தவுடன் தாமதமில்லாமல் தேகத்தைத் துடைத்து உலர்த்தி, மெதுவாய் திரிந்துகொண்டு இருக்க வேண்டியது. (DR. WARING.)

*Cautions and contra-indications.* The cold bath is inadmissible under the following circumstances:—௧. During the menstrual period, and only with great caution during pregnancy; மாதாந்திர ருதுகாலத்தில், குளிர்ந்த ஜல ஸ்நானம் செய்யலாகாது; கருப்பமாய் இருக்கும்போது, வெகு ஜாக்கிரதையாய் முழுகவேண்டியது.—௨. In great plethora; அதிக ரத்த புஷ்டியிலும்.—௩. In diseases of the heart; இருதயரோகங்களிலும்.—௪. In diseases of the internal organs; தேகத்துக்குள்ளிருக்கிற அவயவங்களுடைய ரோகங்களிலும்.—௫. In loaded states of the bowels; மலபந்தத்திலும்.—௬. In cutaneous diseases; சருமரோகங்களிலும்.—௭. In great general debility; தேகம் அதிகமாய் மெலிந்திருக்கும்போதும்.—௮. In Scrofulous diseases; கண்டமாலை சம்பந்தமான ரோகங்களிலும்.—௯. In infancy and old age; குழந்தைகளுக்கும், வயதுசென்றவர்களுக்கும், குளிர்ந்த ஜலஸ்நானம் உதவாது. (DR. WARING.)

தேகம் சோர்ந்து, நாடி க்ஷணசுரமாய், அதிக வியர்வையோடு கூடிய ஸ்திதியிலும், அதிக வாசிப்பால் நரம்புகளுடைய செய்கை தாறுமாறுபட்டிருக்கிற ஸ்திதியிலும், குளிர்ந்த ஜல ஸ்நானஞ் செய்தால், சவுக்கியம் உண்டாகும்.

SALT WATER BATH OR SEA-BATHING in *Scrofula.* கண்டமாலை ரோகிகள் சமுத்திர ஸ்நானம், அல்லது, உப்புஜலஸ்நானம் செய்தால், அந்த ரோகம் நீங்கும்.

COLD HIP BATH in *Spermatorrhœa.* இந்திரியப்பெருக்கில், இடுப்புமாத்திரம் நனையும்படி, குளிர்ந்த ஜலத்தில் தினத்துக் கிரண்டுதரம் உளுக்கார்ந்துக்கொண்டுவந்தால் மெத்தச் சவுக்கியம் உண்டாகும்.

THE SHOWER BATH. சஹஸ்திரதாராமஞ்சனம்.— இங்கிலீஷ் வைத்தியர்கள் ஓர்வித கருவியைக்கொண்டு இந்த ஸ்நானத்தை செய்விக்கிறார்கள். அது அகப்படாதபோது ஒரு தோண்டிக்கடியில் சிறியதுவாரங்கள்செய்து உயரக்கட்டி, அதில் ஜலத்தை ஊற்றிக்கொண்டிருந்தால், மழைத்தாரைகள்போல் ஜலஜலவென்று புரோக்ஷிக்கும்; அதற்கடியில் நோயாளியை உளுக்காரவைத்து ஸ்நானம் செய்விக்க வேண்டியது. குளிர்ந்த ஜலத்துக்குச் சொன்ன செய்கையும், உபயோகமும், இந்த ஸ்நானத்துக்கும் உண்டு.

The cold shower or douche bath in *Maniacal cases.* பயித்திய ரோகிகளுக்கு குளிர்ந்தஜல சஹஸ்திரதாராமஞ்சனம் செய்வித்தால், அந்த வியாதி சவுக்கியப்படும்.

THE DOUCHE BATH consists of a small stream of water, directed with considerable force, by means of a tube, on some particular part of the body. ஒரு குழலைக்கொண்டு ஜலத்தைச் சிறியதாரையாய், கொஞ்சம் விசையுடன் ஒரே ஸ்தானத்தில் விழும்படிச் செய்வதற்கு, இங்கிலீஷில் டூஷ்பாத் என்று பெயர். சுதேசிகள் சாதாரணமாய், பயித்திய ரோகிகளையும், கஞ்சா, ஊமத்தங்காய் முத

வியவைகளைத் தின்று வெறிகொண்டவர்களையும், கிணற்றுக்கருகில் உளுக்காரவைத்து ஜலத்தைமொண்டு உயரவிருந்து சிரசின்மேல் ஊற்றுகிற வழக்கமும், மேற் சொன்ன டூஷ்பாத் என்னும் முழுக்குக்குச் சமானம்.

The Hot and the Warm Baths. வெந்நீர் ஸ்நானங்கள்.

*The objects for which they are employed.*—க. To establish a sedative action on the nervous system; நரம்புகளுடையகொதிப்பைத் தணிக்கவும்.—உ. To equalize the temperature of the whole body; சரீர உஷ்ணத்தைச் சமரசப் படுத்தவும்.—ங. To modify the action of the skin; சருமரந்திரங்களைச் சுத்திப் படுத்தி, அவைகளின் வழியாய் வருகிற வியர்வை முதலியவைகளைத் தாராளப்படுத் தவும்.—ச. To equalize the distribution of blood throughout the system; ஓரிடத்தில் சேர்ந்திருக்கிற ரத்தத்தைப் பரவச்செய்து சரீரத்தில் ரத்த ஓட்டத்தைச் சமரசப்படுத்தவும்.—ரு. To relax the muscular system; மாம்சதாதுக்களைத் தளர்ச்சிசெய்யவும், வெந்நீர் ஸ்நானம் செய்விக்கப்படும். (Dr. Waring.)

*Contra-indicated.* தேகம்பருத்து, ரத்தம் அதிகப்பட்டு, தேகத்தில் கொழுப் பு அதிகரித்திருக்கிறவர்களும், அஸதிஜன்னி ரோகம், ரத்தகாசரோகம், இருதய ரோகம் இந்தச் சாட்டியங்களை உடையவர்களும், தேகம் அதிக தளர்ச்சியை உடைய வர்களும், ஜ்வரரோகிகளும், மாதாந்தர ருதுகண்டிருக்கிற பெண்களும், பிரசவகாலம் சமீபித்த பெண்களும், அதிக சூடான ஜலத்தில் ஸ்நானம் செய்யலாகாது; காற்கூ று காய்ந்த வெந்நீரில் ஸ்நானம்செய்யலாம். இங்கிலீஷ்காரர் ஜலத்தொட்டியில் உளுக்கார்ந்து, ஸ்நானஞ்செய்வது வழக்கம்; நாம் செய்கிற ஸ்நானத்துக்கும் அ வர்கள் செய்கிற ஸ்நானத்துக்கும் பேதமுண்டு; குணத்திலும் வித்தியாசமிருக்கும். ஸ்நானமெனறால், ஜலத்தொட்டியில் உளுக்கார்ந்து ஸ்நானஞ்செய்வதேயாம்.

நோயுற்றெழுந்தோர்களுக்கும், துர்ப்பலமுடைய ரோகிகளுக்கும், குளிர்ந்த ஜலம் அல்லது அதிக சூடான வெந்நீர் ஸ்நானம் உதவாதாகையால், வெதவெதென் று காய்ந்த வெந்நீரில் ஸ்நானஞ்செய்தால், தேகத்திலிருக்கிற அழுக்குநீங்கும், நல்ல வியர்வை பிறக்கும், சரீரசவுக்கியம் உண்டாகும்.

Hot and Warm Baths are used in *Hernia, Dislocation, Tetanus, Convulsions, Spasmodic stricture of the urethra,* &c. அண்டவாதரோகம், மூட்டு விலகிப்போகுதல், விரணசன்னி, வலி, நீர்க்கட்டு, முதலிய ரோகங்களுக்கு மெத்தச் சூடான வெந்நீரில் ஸ்நானம் செய்விக்கப்படும்.

## SULPHUR. Brimstone. (S=16.)
## கந்தகம். கந்தி. கெந்தகம்.

Description and Prop. விவரணம், குணங்கள்.—இந்த பதார்த்தம் நெடுநாளாய் உபயோகப்பட்டு வருகின்றது. முட்டையின் வெள்ளை அம்புலி, வெள் ளுள்ளி முதலிய பதார்த்தங்களில், கந்தகம் அமிக்கியப்பட்டிருக்கின்றது. சாதாரண மாய்க் கந்தகம், இரும்பு, செம்பு, ஈயம், முதலிய லோகங்களோடு சேர்ந்திருக்கும். கந்தகம் கலந்திருக்கிற லோகங்களுக்கு, இங்கிலீஷில் பைரைட்ஸ் (Pyrites or Sulphurets) அக்கினிசிலை அல்லது சொர்னமாக்ஷிகை என்று பெயர். இவைகளை வறுத் து கந்தகத்தை எடுத்துகொள்ளப்படும். பரிசுத்தமாயிருக்கும் பிறவிச்சரக்குக்கு, நேடிவ் (Native,) அல்லது வர்ஜின் ஸல்பர் (Virgin Sulphur) என்று பெயர். இது

அக்கினிமலைப் படிவாரங்களிலும், அனேக இடங்களில் பூமியிலும் அகப்படும். கடைச்சரக்கு முக்கியமாய், இடலி (Italy) ஸிஸிலி (Sicily) என்னும் தேசங்களிலிருந்து வருகின்றது; பிறகு இதை உருக்கியாவது, வாலையிலிட்டிறக்கியாவது, பதங்கித்தாவது சுத்திசெய்து கொள்ளப்படும். உருக்கி அச்சில்வார்த்த கந்தகத்துக்கு குழாக்கந்தகம் (Stick or Roll Sulphur) என்று பெயர்.

தோஷமில்லாமல் கட்டியாயிருக்கிற கந்தகம், மங்கலான மஞ்சள் நிறமாயிருக்கும்; ஆனால் எரித்திட்டெடுக்கும்போது படுகிற உஷ்ணத்துக்குத் தக்கபடி, நிறம் வேறுபடும். இதற்கு, ருசியும் வாசனையும் இல்லை; ஆனால் தேய்த்தால் ஓர்வித கந்தம் பிறக்கும்; கைக்கு நறநறவென்று தோற்றும்; ஜலத்தில் கரையாது; ஆல்கோஹல் சாராயம் (Alcohol), கர்ப்பூரத்தயிலம் Turpentine,) கொழுப்பு, மண்ணெண்ணெய் இவைகளில் கொஞ்சமாய்க்கரையும்; கந்தகச்சுடர் மங்கலான நீலநிறமாயிருக்கும். கந்தகம் ஏகபூதசுபாவ பதார்த்தம்; இது காற்றிலிருக்கிற ஆக்ஸிஜென் வாயுவோடு சேர்ந்து கந்தகத்திராவகம் Sulphuric Acid,) ஸல்பியுரஸ் ஆஸிட் Sulphurous Acid,) இவ்விரண்டு திராவகங்கள் உண்டாகின்றன. மத்தாப்பு எரியும்போது உண்டாகிற புகைக்கு, ஸல்பியுரஸ் ஆஸிட் என்று பெயர்; இந்த புகையின் வாடைபட்டால், இருமல் மூச்சடைப்பு முதலிய உபத்திரவங்கள் உண்டாகும். கந்தி, ஹைட்ரோஜென் (Hydrogen) என்னும் வாயுவோடுசேர்ந்து, ஸல்பியூரெடெட் ஹைட்ரோஜென் (Sulphuretted Hydrogen) என்னும் வாயு உண்டாகின்றது; இந்த வாயு அழுகின முட்டைக்குடைய வாசனை யுடையதாய் இருக்கும். அபானவாயு, சாக்கடை, பிரேதங்கள், இவை முதலியவைகளில் இந்த வாயுவைக் கண்டுகொள்ளலாம். கடையில் விற்கிற கந்தியில், நாகம், அயம், பாஷாணம், சுண்ணாம்பு, முதலிய தோஷங்கள் இருக்கின்றன.

அமரசிலை கந்தகம், நெல்லிக்காய் கந்தகம், வாணகந்தகம், என்னும் பல நாமங்களையுடைய கந்தகத்தை ஹிந்துக்கள் உபயோகப்படுத்தி வருகின்றார்கள். அவைகளிலிருக்கிற தோஷங்களை நீக்காமல் உள்ளுக்கு கொடுக்கலாகாது.

**Sulphur Præcipitatum.** *Precipitated Sulphur or Milk of Sulphur.*

க்ஷீரகந்தகம்.

Prep. (Boil one part of sublimed sulphur with two parts of slaked lime in 8 parts of water. To the solution add Hydrochloric Acid ; Chloride of Calcium is formed, and Sulphur is precipitated.)

செய்முறை.—௮-பங்கு ஜலத்தில், ௧-பங்கு பதங்கித்த கந்தகமும், ௨-பங்கு தாளித்த சுண்ணாம்பும் போட்டுக் காய்ச்சி; அந்தநீரில் சுத்த உப்புத் திராவகம் விட்டால், கந்தகம் அடியில் படிந்துவிடும்.

க்ஷீரகந்தகம், மழமழவென்று வெள்ளையாய் இருக்கும். குணங்களில், பதங்கித்த கந்தகத்துக்கு ஒத்திருக்கும். இதில் தோஷங்கள் மெத்த இருப்பதால் உள்ளுக்கு உபயோகப்படுத்துகிறதில்லை.

**Sulphur Sublimatum.** *Sublimed Sulphur or Flowers of Sulphur.*

பூக்கந்தகம். கந்தகப்புஷ்பம். புடமிட்டகந்தகம். பதங்கித்த கந்தகம். கந்தகப்பதங்கம்.

செய்முறை.—கந்தகத்தை நொறுக்கி, ஒரு பெரிய இரும்புசாலில்போட்டு எரித்தால், கந்தகம் புகையும்; அந்த புகையை ஒரு அறையில் பிரவேசிக்கும்படிச் செய்தால், புகை அடங்கி சுவற்றின்மேல் அடையாய் படிந்துவிடும்.

ஜலத்தில் கழுவிக்கொண்ட கந்தகப்பதங்கத்துக்கு, இங்லீஷில் வாஷ்ட் ஸல்பர் (Washed Sulphur) அல்லது ஸல்பர்லோடம் Sulphur Lotum. என்று பெயர்.

ACTION. Alterative, Diaphoretic, Mild Cathartic.

செய்கை. வியதாபேதகாரி, சுவேதகாரி, மலகாரி.

USE. In piles; skin diseases, particularly the itch; chronic rheumatism; scrofula; nervous headaches from cessation of the menses.

உபயோகம்.—கந்தகம் கொடுத்தால் பேதியாகாது; கெட்டவாசனையோடு மலத்தை இளகலாக்கும். சருமரோகங்களுக்குக் கொடுத்தால் நன்மை செய்யும். குறைந்த அளவில் கொடுத்தால் சருமத்தை உஷ்ணிக்கும்; அதிகமாயக் கொடுத்தால் மலத்தை இளகலாக்கும். கெந்தகத்தை நெடுநாள் சாப்பிட்டால், மலம், வியர்வை இவைகளில் கெட்டவாசனை உண்டாகும். வெள்ளி ஆபரணம் தரித்திருந்தால், அது கறுத்துப்போகும். ஹிந்து வைத்தியர்கள் இதை முக்கியமாய், குஷ்டம், மேகப் புடை முதலியவைகளுக்கு உபயோகப்படுத்துகிறார்கள்.

The Sulphur vapour bath. கந்தகப்புகைச்சல் கொடுக்கிறவிதம்.—மூங்கிற்பத்தைகளால் சோழிக்கூடுவடிவமாய் ஒருகூடுசெய்து, சிரசு நுழையும்படி மேற்புறத்தில் ஒரு துவாரம்வைத்து, மெழுகுதுணியால் மூடிப்பக்குவப்படுத்திக்கொண்டு, அதில் நோயாளியை, சிரசுவெளியில் இருக்கும்படி உளுக்காரவைத்து, புகை வெளிப்படாமல் கழுத்துஇருக்கிறஇடத்தில் துணியாலடைத்து, கந்தகத்தை ஓர்தட்டில்போட்டு நெருப்புமேல்வைத்து கூண்டுக்குள்வைத்துவிட்டால், கந்தகம் புகைந்துசரீரமெங்கும்படும். -௰௫ நிமிஷம் வரையில்நோயாளியை வைத்திருந்து, பிறகு வெளிப்படுத்திவிடவேண்டியது. இந்தச்சிகிச்சை, சருமரோகங்கள், கீல்வாதரோகம், இவைகளுக்குச்செய்தால் சவுக்கியப்படும்.

DOSE. gr. 5—20, two or three times a day as an alterative; ʒiss to ʒij, as a laxative; ʒiij to ℥ss, or more as a purgative.

ஒ. அளவு. ௫—௨௰, கிரேன், தினத்துக்கு -௨- அல்லது -௩- வேளைக்கொடுத்தால், வியதாபேதகாரியாகும்; ௧½—௨-திராம் கொடுத்தால், மலகாரியாகும்; ௩—௪-திராம் அல்லது இன்னம் அதிகமாய்க்கொடுத்தால் பேதியாகும்.

℞. Flor. Sulphur. ℥ij., Potassæ Bitart. ℥j., Pulv Guaiaci, ʒj., Pulv. Rhei, ʒij., Spirit. Nucis Myrist. ʒij., Mellis. q. s. ft. electuarium. Dose ʒj.—ʒij. every morning and evening. "The Chelsea Pensioner" *In Chronic Rheumatism.*

℞ கந்தகப்பதங்கம் ℥ ௨., கிரீம்டார்டர்உப்பு ℥ ௧., கோயாக்கம் சூரணம் ʒ ௧., ரேவல்சினி சூரணம் ʒ ௨., ஜாதிக்காய்ப் பாவனத்திரவம் ʒ ௨., தேன், தேவையானது, இவைகளைச்சேர்த்து லேகியமாகச்செய்து கொள்ளவும். ௧—௨ ʒ அளவுக்கு அந்திசந்தி இரண்டுவேளை கொடுக்கவும். இதை நாள்பட்ட கீல்வாதரோகத்துக்குக் கொடுத்தால் குணமாகும்.

℞ Sulphuris Sublimati, ʒiss., Sacchari non purif., Potassæ Bitartratis, ana, ʒij., Misce fiat pulvis, bis in die sumendus. *In Scabies, the Itch,* &c. (Dr. W. AINSLIE.)

℞ கந்தகப்புஷ்பம் ʒ கஉ., சருக்கரை, கிராணை உப்பு, வகை-க-க்கு, ʒ உ., மிஸ்ரமித்து, சூரணமாக்கி, தினத்துக்கு - உ - வேளை சிரங்கு முதலிய சருமரோகங்களுக்குக் கொடுக்கலாம்.

℞. Sulphuris sublimati, ℥ss., Potassæ Bitartratis, ʒiss., Confect. Sennæ, ℥i., Syrupi, q. s. Misce ut fiat electuarium; of this a tea-spoonful may be taken at bed time. *In Piles.* (DR. W. AINSLIE.)

℞. கந்தகப்புஷ்பம் ʒ ௧., கிராணை உப்பு ʒ கஉ., நிலாவிரை லேகியம் ℥க., சருக்கரைப்பாகு, தேவையானது. இவைகளைமிஸ்ர - லேகியமாகச் செய்துகொள்ளவும். இதில் ஒரு தேக்கரண்டி அளவு, படுக்கிறநேரத்தில் மூலரோகத்துக்குக் கொடுத்தால் குணப்படுத்தும்.

**Unguentum Sulphuris.** *Sulphur or Brimstone Ointment.*

கந்தகக்களிம்பு.

PREP. (Mix throughly *Sulphur* ℔ ss with Hog's Lard ℔ j.)

செய்முறை.—௧-பவுன் -கந்தகத்தை, க-பவுன் -பன்றி நெய்யுடன் சேர்த்து, செவ்வையாய் மிஸ்ரமித்துக் கொள்ளவும்.

ACTION. Alterative. செய்கை.—வியதாபேதகாரி.

USE. Chiefly applied in scabies, and other skin diseases.

உபயோகம். சிரங்குமுதலிய சருமரோகங்களுக்குத் தேய்க்கப்படும்.

**Unguentum Sulphuris Compositum.** *Compound Sulphur Ointment.*

கலவை கந்தகக்களிம்பு.

PREP. (Mix Sulphur, ℥iv., Bruised veratrum, ʒx., Nitrate of Potash, ℈ij., Soft soap, ℥iv., Lard, ℔j.)

செய்முறை.—கந்தகம் ℥ ச., பொடித்த விரேட்ரம் (White Hellebore), ʒ ௰, வெடிஉப்பு gr. ச௰., இளகிய சவுக்காரம் ℥ ச., பன்றிநெய் ℔ க. இவைகளை மிஸ்ரமித்துக் கொள்ளவும்.

ACTION. Irritating, stimulant. செய்கை.—உஷ்ணகாரி.

USE. Applied in obstinate scabies.

உபயோகம்.—இதை ஆராத சிரங்குகளுக்குப் போடப்படும்.

௬-பலம் கந்தகத்தை, மைபோல் அரைத்து, ௧ - புட்டி தேங்கா எண்ணெயில் கலந்துகொண்டு, இராக்காலத்தில் மேலுக்குப் பூசி, சிரங்கு கொப்புளங்கள் உடையும்படி ௰ - மினிட்டு நேரம் அழுத்தித் தேய்த்து, பிறகு அனலில் இருப்பது நல்லது; காலையில், சீக்கிராந்தூள், சிகைக்காய், இலுப்பைக்கட்டி, புங்கங்கொட்டை, இவைகளில்எதையாவது தேய்த்து, வெந்நீர்விட்டு கழுவிவிடவேண்டியது; இவ்விதமாய், சிரங்கு ஆருகிற வரையில், நாள்தோறும் செய்துகொண்டுவரவேண்டியது. கந்தகம், சிரங்கிலிருக்கிற (Acarus scabiei or itch insect,) கிருமிகளைக் கொன்றுவிடும். இந்தச் சிகிச்சையோடு உள்ளுக்கு, கந்தகத்தை கிராணை உப்புடன் சேர்த்துக் கொடுத்துக்கொண்டு வந்தால் நல்லது. நோயாளி தரித்து

கொண்டிருக்கிற ஆடைகளில், சிரங்குக் கிருமிகள் ஒட்டிக்கொண் டிருக்கும்; ஆகையால், அவைகளை வேகவைத்து செவ்வையாகத் துவைத்துக்கொள்ளா விட்டால், மறுபடியும், சிரங்குஒட்டிக்கொள்ளும்.

℞. Sulphur Sublim. T. Opii āā ʒss., Zinci, Oxid. ʒi., Ol. Amygd. ℥i., Adipis, ℥iij., M. ft. Unguentum. *In Prurigo senilis.*—ALIBERT.

℞. கந்தகப்பதங்கம், லாடனம், வகை-க-க்கு திரா. ௨—நாகபஸ்மம், திரா. க. வாதுமைநெய், அவு. க—பன்றிநெய், அவு. ௩. இவைகளை மிஸ். களிம்பாகச் செய்து கொள்ளவும். இதை வயது சென்றவர்களுக்குக் காணுகிற சொறிசிரங்குக்குப் போடலாம்.

எச்சிற்றழும்புக்கு, கலவைக் கந்தகக்களிம்பைத் தேய்க்கக் குணமாகும்.

℞. கந்தகம், அவு. ௩.—வேப்பெண்ணெய், புட்டி ௨ இவைகளை மிஸ்ரமித். இதை நாள்பட்ட இல்லாத ரோகத்துக்கு, அந்திசந்தி இரண்டுவேளையும், நோயிருக்கிற இடத்தில் பூசித் தேய்த்தால் நோய் நீங்கிப்போகும்.

**Confectio Sulphuris.** *Confection of* கந்தகலேகியம்.

PREP. (Take of Sublimed sulphur, ℥ij., Bitartrate of Potash, ℥j., Clarified Honey, fʒj., Syrups of Ginger and Saffron, āā f℥ss. Triturate all in a mortar, until they are intimately mixed.)

செய்முறை.—பதங்கித்த கந்தகம், அவு. ௨.—திராக்ஷை உப்பு, அவு. க.—தெளியவைத்த தேன், அவு. க.—சுக்குப்பாணிதம், குங்குமப்பூ ரசாயனம், வகை, க-க்கு அவு. ௨—இவைகளை கலுவத்திலிட்டு சரக்குகளெல்லாம் செவ்வையாய் மிஸ்ரமிக்கிறவரையில் மைபோல் அரைத்துக்கொள்ளவும்.

ACTION. Laxative, Cathartic; செய்கை.—மலகாரி.

DOSE. ʒij., to ʒiv. to be taken early in the morning.
ஒ. அளவு. ௨-௪-திராம். காலையில் சாப்பிடவும்.

**Acidum Sulphuricum.** *Sulphuric Acid, Oil of Vitriol.* ($SO_3$-$HO$=49)

**கந்தகத்திராவகம்.**

DESCRIPTION and PROPERTIES.—விவரணம். குணம்.—இதை ஆதியில் அன்னபேதியிலிருந்து எடுக்கப்பட்டது. Nordhausen in Saxony என்னும் தேசத்தில் இன்னம் அந்தவழக்கந்தான். அன்னபேதியிலிருக்கும் ஜலம் நீங்கும்படி வறுத்து, மண்வாலையிற்போட்டு, சிவக்கஎரித்தால், புகை எழும்பிப் பட்டியில் அடைந்து திரவரூபமாகும். இந்தத்திராவகம் கறுத்து எண்ணெயைப் போல் தளமாயிருக்கும்; காற்றுப்பட்டால் புகையும். இதற்கு Nordhausen, Fuming, or Glacial Sulphuric Acid என்று பெயர்கள். இதைஎரித்தால்புகையும், அந்தப்புகையை, குளிரவைத்திருக்கிற ஒரு புட்டியில் அடையும்படிச்செய்தால், வெளுத்துக் கல்நார் (Asbestos) என்னும் சரக்கைப்போல் கட்டிரூபமாகிவிடும். இது மஞ்சள்கடிதத்தைச் சிவந்தநிறமாக்கமாட்டாது; காற்றுப்பட்டால் புகையும்; ஜலத்தைச்சேர்த்தால் வெடிசப்தமுண்டாகும்.

கந்தகத்திராவகம் தயிலத்தைப்போல் தளமாயிருக்கும்; வாசனையிராது; அதிகப் புளிப்பாயிருக்கும்; தேகத்திற்பட்டால் கறுத்தநிறமானபுண் உண்டாகும்; ஜலத்

துடன்சேர்த்தால், அந்த ஜலம் சூடாகிவிடும்; வெளியிலே காற்றுப்படவைத்தால், காற்றிலிருக்கும் ஜலத்தை திராவகம் கிரகித்து காரம் குறைந்துவிடும்.

PREP. (Sulphuric Acid is prepared by burning Sulphur in leaden chambers with the addition of Nitrate of Potash, this increases the oxidation of the Sulphur & Sulphuric Acid results.)

செய்முறை.—கந்தகத்துடன், பொட்டிலுப்பைச்சேர்த்து, ஈயத்தகட்டால் செய்த அறைகளில் (Leaden chambers) வைத்து எரித்தால், கந்தகத்திராவகம் உண்டாகும்.

IMPURITIES. தோஷிங்கள்.—கந்தகத்திராவகத்தில் ஈயம், பாஷாணம், சுறி உப்புத்திராவகம், இவைகள் கலந்திருப்பதுண்டு; கடைச்சரக்கின் நிறம் மாறியிருக்கும், ஆனால் குணத்தில் பேதமிராது.

ACTION. Caustic, Rubefacient, Corrosive poison.

செய்கை.—விரணகாரி, க்ஷோணகாரி, காரமுள்ளநஞ்சு, ஸங்கோசகாரி, இதை உள்ளுக்குக்கொடுக்கஉதவாது. பட்டவிடம் வெளுத்துப் பிறகு கறுத்துப்போகும்.

ANTIDOTES. Magnesia, Soap, Dilution, Demulcents.

**Acidum Sulphuricum Dilutum.** *Diluted Sulphuric Acid.* விளாவின கந்தகத்திராவகம்.

PREP. (Mix gradually Acid. Sulph. f ʒxv. with Water f ℥xx.; as much only of the water is to be added as will make one pint of the whole.)

செய்முறை.—௧ரு திரா-கந்தகத்திராவகத்தை, உ௰-அவு. ஜலத்துடன், கொஞ்சங் கொஞ்சமாய்விட்டு மிஸ்ரமித்துக்கொள்ளவும். அதிக சூடுண்டாகும். க-திரா. விளா-கந்த-திராவகம்-உ௭-கிறே Crystallized Carbonate of Soda என்னும் உப்பைக் கரைக்கும்.

ACTION. Refrigerant, Astringent, Tonic.

செய்கை.—சீதளகாரி, ஸங்கோசகாரி, பலகாரி.

USE. "As an antiseptic & refrigerant in typhoid fevers; as a tonic in general debility, and in weakness of the digestive organs; as an astringent in hæmorrhages and colliquative sweats; it has been used in diarrhœa, cholera, chronic skin affections, hiccup, chronic catarrhal diseases, &c."

உபயோகம்.—விளாவின கந்தகத்திராவகத்தை, விஷச்சுரம், துர்ப்பலம், செரியாக்குணம், ரத்தவமனரோகம், பெரும்பாடு, அதிக வியர்வை, அதிசாரம், விஷபேதி, நாள்பட்ட சருமரோகங்கள், விக்கல், நாள்பட்ட காசரோகங்கள், ரத்தகாசம் முதலியவைகளுக்குக் கொடுக்கலாம்

DOSE. ♏iv. to xxx. diluted with water, or some bitter infusion.

ஓ. அளவு.—ச-முதல்-௩௰-மினம் ஜலத்திலாவது, நிலவேம்பு வெந்நீர் கஷாயத்திலாவது, கொடுக்கலாம். இதை நாள்படச்சாப்பிட்டால், விரோதிக்கும்; பற்களைக் கெடுதிசெய்வதால், பேனாவிலாவது; அல்லது கண்ணாடிக்குழாயினாலாவது உறிஞ்சிப்பற்களுக்குப்படாமல் சாப்பிட்டு, பிறகு Alkaline solution என்னும் சவட்டு உப்பு கலந்த ஜலத்தால் வாயைக் கொப்புளித்து விடவேண்டியது.

R. Acidi Sulphurici, ℥iss., Olei Terebinthinæ, ℥ss., Olei Olivæ, ℥iss. Misce: fiat linimentum. *As a counter-irritant.*—Mr. Pearson.

R. கந்தகத்திராவகம், திரா. கஉ—கர்ப்பூரத்தயிலம், அவு. ௧—ஆலீவ் எண்ணெய் அவு. கஉ—இவைகளை மிஸ்ரமித்துத் தயிலமாக்கிக்கொண்டு, நோயிருக்கிற இடங்களில் தேய்க்கலாம்.

R. Sulphuric Acid, ℨss., Lard, ℥j., Misce. *In Scabies.*

R. கந்தகத்திராவகம், திரா. ௧—பன்றிநெய், அவு. க. இவைகளை மிஸ்ரமித்து, சிரங்கு, கரப்பான் இவைகளுக்குத் தடவலாம்.

R. Sacchari albi, ℨiv., Acidi Sulphurici diluti, ℨij., Tinct. Cardamomi comp. fℨiv., Aquæ Menthæ Pip. ad f℥vj. Sumat partem quartam 4ta quaque hora. *In Epidemic Diarrhœa.*—Mr. E. Shepherd.

R. வெள்ளைச் சருக்கரை, திரா. ச.—விளா. கந்த. திராவகம். திரா உ.—கலவை ஏலரிசி பாவனத் திரவம், திரா. ச.—பெப்பர்மெண்டு ஜலம், அவு சா. மிஸ்ரமித்து, இதில் காலில் ஒரு பங்கு, ச-மணிக்கொருதரம் கொடுத்தால் அதிசாரபேதி நிற்கும்.

R. Infusi Rosæ comp. fℨx., Acidi Sulphurici diluti, ♏xxx., Syrupi, fℨj. Misce, fiat haustus, quaque hora sumendus. *In Hæmoptysis.* Dr. Gregory.

R. கலவை ரோஜாப்பூவெந்நீர்க்கஷாயம், திரா. ய. — விளா கந்த. திராவகம், மினிம், கூய.—சருக்கரைப்பாகு, திரா. க. மிஸ்ரமித்து, மணிக்கொருதரம் கொடுத்துக்கொண்டுவந்தால், ரத்தவமனம் குணமாகும்.

R. Acidi Sulphurici diluti, ♏v.—xv., Infusi Kreatæ, fℨx., Syrupi Aurantii, fℨi. Fiat haustus ter die sumendus. *Tonic.*

R. விளா. கந்த. திராவகம், ரு—யரு-துளி.—நிலவேம்பு வெந்நீர்க்கஷாயம், திரா. ய.—ஆரஞ்சிப்பழப் பாணிதம், திரா. க. மிஸ்ரமித்து, தினத்துக்கு, கூ-வேளை கொடுத்துக்கொண்டுவந்தால் தேகத்துக்குப் பலம்வரும்.

R. Decocti Cinchonæ, f℥vj., Acidi Sulphurici diluti, fℨiss. Fiat Mistura: dosis, pars sexta. *Tonic.*—Dr. Hooper.

R. சிங்கோனு பார்க்கஷாயம், அவு. சா.—விளா. கந்த. திராவகம், திரா. கஉ. கலந்து, க-அவு. வீதம் கொடுத்துக்கொண்டுவந்தால் தேகத்துக்குப் பலம்வரும்.

R. விளா. கந்த. திராவகம், ஙஉய-துளி, க-புட்டி ஜலத்திற்சேர்த்து சொறிசிரங்குக்குப் பூசினால் சொஸ்தமாகும்.

**Acidum Sulphuricum Aromaticum.** *Aromatic Sulphuric Acid*

பரிமள கந்தகத் திராவகம். அரோமாடிக் சல்ப்யூரிக் ஆஸிட்.

Prep. (Add gradually *Sulphuric acid* f℥iijss. to *Rectified Spirit*, Ojss. Let the mixture digest at a very gentle heat for three days in a close vessel. Add *Cinnamon* bruised ℥jss. *Ginger* do. ℥j. moistened with a little of the acid spirit, and after twelve hours the powders may be exhausted by percolation with the rest of the spirit. Or the mixed powders may be digested for six days in the spirit, then straining the liquor.)

செய்முறை.—கஉ-பையிண்ட். இரட்டித்துவடித்த சாராயத்தில், கூஉ, அவு. கந்தகத்திராவகம் கொஞ்சங்கொஞ்சமாகச் சேர்த்து மூடி, சிறுதீ அனலில் கூ-நாள் ஊறவைத்து, பிறகு கஉ-அவு. கறுவாப்பட்டை—க-அவு. சுக்கு, இவைகளை நொறுக்கி, அதி திராவகத்தைக் கொஞ்சம்விட்டு நனைத்து. யஉ-மணிநேரம் ஊறினபிறகு,

மற்ற திராவகத்தை ஊற்றி Percolation என்னும் பாசமுறையாய்ச் செய்துகொள்ளவேண்டியது. அல்லது சாக்குசலை, ௬-நாள் திராவகத்தில் ஊறவைத்து, பிறகு வடிகட்டிகொள்ளவேண்டியது.

ACTION. USE. செய்கை உபயோகம்.—மேற்சொன்ன திராவகத்துக்கு இருக்கும் குணங்களே, இந்தத் திராவகத்துக்கும் உண்டு.

DOSE. ஒ. அளவு.—உ0-துளி வீதம் தினத்துக்கு, ௩-வேளைக்கொடுக்கலாம்.

## PHOSPHORUS. (P=32)

## திமுறுகல பாஷாணம்.—பாஸ்பரஸ்.

DESCRIP, AND PROP. குணம். விவரணம்.—திமுறுகல் பாஷாணமானது, கம்பிபோல் நீண்டு, மெழுகுபோல் மிருதுவாய் இருக்கும்; வளைத்தால் வளையும், கத்தியால் எளிதில் துண்டாக்கலாம்; இது வெள்ளை நிறமாயாவது, மஞ்சள் நிறமாயாவது இருக்கும்; இதற்குச் சுவையும், வாசனையும் இல்லை; ஆனால் காற்றுப்பட்டால் வெள்ளுள்ளி வாசனையைத் தரும்; இருளில் ஜொலிக்கும்; காற்றுப்படவைத்தால், தானாய் பற்றிக்கொள்ளும், ஆகையால் ஜலத்தில் வைத்துவைக்கவேண்டியது; கொஞ்சமாய் உரைப்பட்டாலும் பற்றிக்கொள்ளும். ஸ்மசானம் முதலிய இடங்களில் இந்த பதார்த்தம், ஜலத்தில் இருக்கிற ஹைட்ரோஜென் வாயுவோடு சேர்ந்து பற்றி எரிந்துக்கொண்டு காற்றுவாட்டமாய்ப் போகும்; இராக்காலத்தில் நமது கண்களுக்கு, இது பயங்கரமாய்த் தோற்றும். இதைக்கொள்ளிவாய்ப் பசாசு என்று சாதாரணமாய்ச் சொல்வதுண்டு; இதற்கு இங்கிலீஷில், Jack with a lantren என்று பெயர்.

PREP. செய்முறை.—எலும்புகளைச் சுட்டு சாம்பலாக்கி, அத்துடன் கந்தகத்திராவகத்தைச் சேர்த்துச் செய்யப்படும்.

ACTION. Stimulant; Aphrodisiac. செய்கை.—உஷ்ணகாரி; வீரியவர்த்தகாரி.

USE. "In typhoid fever, in the latter stages of phthisis, and in exhaustion from any chronic diseases. It has been recommended in gout, rheumatism and senile impotence."

உபயோகம்.—விஷச்சுரம், க்ஷயம், அதிகதுர்ப்பலம், கணுவாதரோகம், சந்திக சிலேஷ்மரோகம் இவைமுதலிய ரோகங்களுக்குக் கொடுக்கலாம். இதன் புகைச்சல் இருமலை உண்டாக்கும், கண்களில் பட்டால் கண்கள் அரிக்கும். திமுறுகல் பாஷாணம் செய்கிறவர்களுக்கு அதன் வாடைபட்டு, கீழ்வாய் எலும்புக்கு Caries என்னும் ரோகஞ்சாணும். இதைக் குஷ்டம், சொறிசிரங்கு, கரப்பான் முதலிய சரும ரோகங்களுக்கு உபயோகப்படுத்திச் சவுக்கியப்பட்டதாய்க் கண்டிருக்கின்றது. வீரிவிர்த்திக்கு இதைக் கொடுக்கலாம், ஆனால் நாள்படச் சாப்பிடலாகாது.

DOSE. One tenth to twentieth part of a grain, but it must never be given in substance.

ஒ. அளவு.—ஒரு கிறேனில், ௰-ல், அல்லது உ௰-ல் ௧-பங்கு கொடுக்கலாம், ஆனால் இதைத்தனிப்படக் கொடுக்கலாகாது. அதிகமாய்ச் சாப்பிட்டால், இரைப்பையையும், குடலையும் புண்ணாக்கிவிடும். ௩-கிறேன் இடை சாப்பிட்டு இறந்துபோனதும் உண்டு.

ANTIDOTES. Dilution. Demulcents. Magnesia.

R. ய - கிறே. திமுறுகல் பாஷாணத்தை, க. அவு. வாதுமை செய்யில் கரைத்து, அதில், ரு-முதல் ய-துளி வீதம் கொடுக்கலாம்.

R. Phosphori, gr. iij. Olei Caryophylli, ♏ xij., Pulv. Glycyrrh. q. s. ut fiat massa in pil xij. div. quar. j. bis die sumatur. In Lupus, obstinate Scaly diseases, and Syphilitic Tubercles.—Dr. HOOPER.

R. திமுறுகல் பாஷாணம், கிறே - ங—கிராம்புதயிலம், மினிம், யஉ—அதிமதுரத்தூள், தேவையானது, இவைகளை மிஸ்ரமித்து, யஉ-மாத்திரைகளாக்கி, க மாத்திரைவீதம், தினத்துக்கு, உ-வேளைக்கொடுத்துக்கொண்டுவந்தால், சருமரோகங்கள் குணமாகும்.

## Acidum Phosphoricum Dilutum. *Dilute Phosphoric Acid.*

விளாவின திமுறுகல் பாஷாணத்தின் திராவகம்.

PREP. (Mix *Nitric Acid.* f℥iv. with dist. water f℥viij. in a retort, placed in a sand-bath, & add Phosphorus ʒvj., then apply heat until f℥vj. have distilled over. Return these into the retort, and again distil over f℥vi which are to be rejected. Evaporate the remaining liquid in a platinum capsule until f℥ij., only remain. Add to this acid when cool, as much distilled water as will accurately fill up a pint.)

செய்முறை—திமுறுகல் பாஷாணத்தை, விளாவின பொட்டிலுப்புத் திராவகத்தில் போட்டு, வாலுகா எந்திரத்தில் வைத்து, திராவகத்தை இறக்கிக்கொள்ள வேண்டியது. இங்கிலீஷில் விவரமாகத் தெரிவித்திருக்கின்றது.

ACTION. Refrigerant. Tonic. செய்கை.—சீதளகாரி, பலகாரி.

USE. In diabetes to quench thirst, exostosis, caries &c.

உபயோகம்.—மதுமூத்திரரோகத்தில் தாகத்தை அடக்கவும், ஹஸ்திவிரணம் முதலிய ரோகங்களுக்கு உபயோகப்பட்டு வருகின்றது.

DOSE. ♏x.—f℥j., diluted with sugar & water.

ஒ. அளவு.— ய-மினிம், முதல், க - திரா - வரையில் ஜலத்தில் கலந்து, சருக்கரையைச் சேர்த்துக் கொடுக்கலாம்.

R. விளாவின திமுறுகல் பாஷாணத் திராவகம், திரா. க.—வடிகஞ்சி, அல்லது பார்லிஅரிசிக்கஞ்சி. பைம்.—உ. இவைகளைச்சேர்த்துக் குடிநீராகச்செய்து கொடுத்தால், மதுமூத்திரரோகத்தில் காணுகிற, அதிகதாகத்தைநிறுத்தும்.

## ACIDUM NITRICUM. (NO5 = 54)

*Nitric Acid. Aqua fortis.*

வெடிஉப்புத்திராவகம். இதுவே கம்பிஉப்புத்திராவகம், பொட்டிலுப்புத் திராவகம், யவக்ஷாரதிராவகம்.

DESCRIP. AND PROP. விவரணம். குணம்.—வெடிஉப்புத்திராவகத்துக்கு அதிகசாரமும், புண்ணுக்குகிற குணமும் உண்டு; காற்றுப்பட்டால், புகையும். தோஷமற்றவெடிஉப்புத் திராவகத்துக்கு, நிறமில்லை; ஆக்கிராணித்தால் மூச்சுத்திணறும்; காற்றிலிருக்கிற ஜலத்தைக் கிரகிக்கும்; மார்பியா (Morphia) என்னும் அபினிச்சத்துடன் சேர்த்தால் சிவந்தபோகும்; தேகத்தின்மேல் பட்டால், சருமம் மஞ்சள்நிறமாகிவிடும்; இந்த திராவகத்தில், கந்தகத்திராவகம், சரிஉப்புத்திராவகம், நைட்ரோஸ்ஆஸிட் (Nitrous Acid) என்னும் திராவகம் இவைகள் கலந்திருப்பதும் உண்டு; அவைகளை கிமிகல்டெஸ்ட் (Chemical test) என்னும்பரீக்ஷையால் தெரிந்து கொள்ளவேண்டியது.

PREP. (Nitrate of Potash dried, Sulphuric Acid each ℔.ij. Mix in a glass retort then let the Acid distil in a sand-bath.)

செய்முறை.— உலர்ந்த பொட்டிலுப்பு, கந்தகத்திராவகம், வகை - க - இ பவு உ - இவைகளைக் கண்ணாடிவாலையில் (glass retort) போட்டு, வாலுகா யந்திரத்தில்வைத்து எரித்தால், திராவகம் இறங்கும்.

ACTION. Caustic, Corrosive Poison. செய்கை.—விரணகாரி, காரமுள்ள நஞ்சு.

USE. "Used to destroy sloughing ulcers, and to remove parts bitten by rabid animals."

உபயோகம்.— பொட்டிலுப்புத்திராவகம், புண்களில் இருக்கிற துர்மாம்சத்தைப் போக்கவும், விஷக்கடிகளைப் புண்ணாக்கவும், உபயோகப்பட்டு வருகின்றது.

ச. திரா. பொட்டிலுப்பில், ச - திரா. கந்தகத்திராவகத்தைச் சேர்த்து, ஒரு பீங்கான் பாத்திரத்தில் வைத்து, காய்ந்த மணலின்மேல் வைத்தால் புகையும். நாற்றம் உள்ள இடத்தில் இதைச் செய்தால், அந்தப்புகை நாற்றத்தைப் போக்கிவிடும். இதற்கு Fumigation என்று பெயர்.

*Bleeding Piles.* ரத்தமூலரோகத்துக்கு, ஈரமில்லாமல் மூலத்தைத் துடைத்து, கத்திபோல் சிறிய ஒரு கொம்பை திராவகத்தில் நனைத்துக்கொண்டு, மூலத்தின்மேல் தடவி, மூலத்தை உள்ளுக்குத்தள்ளி, நோயாளியைப் படுக்கவைக்கவேண்டியது; நோய் அதிகமாய் இருந்தாலும், உ - ௩ - மணிநேரத்தில் நோய்ச்சமனமாகும்.

*Warts.* மறுவை மேலாகச்சுரண்டி, பொட்டிலுப்புத்திராவகத்தை, நாள்தோறும் தடவிக்கொண்டு வந்தால், சொஸ்தமாகும்.

*Porrigo. Scabies.* சொறிசிரங்கு முதலிய சரும ரோகங்களுக்கு, பொட்டிலுப்புத்திராவகத்துடன், தேங்காய் எண்ணையையாவது, அல்லது எள்ளெண்ணையையாவது சேர்த்து, பூசுத்திரவியமாக்கி, மேலுக்குத் தேய்த்தால் சொஸ்தமாகும்.

ANTIDOTES. Chalk; Whiting; Bicarbonates of Alkalies; Soap.

மாற்று மருந்து.— வெடிஉப்புத்திராவகத்தை விஷமிக்கும்படி சாப்பிட்டவர்களுக்குச், சீமைச் சுண்ணாம்பு, சவுட்டுப்பு மரஉப்பு சம்பந்தமான உப்புகள், சவுக்காரம், மாக்னீஷியா இவைகளைக்கொடுத்தால் மருந்தை முறித்துவிடும். சுவரின்சுண்ணாம்பைச் சுரண்டி, சமையத்தில் கொடுக்கலாம்.

**Acidum Nitricum Dilutum.** *Dilute Nitric Acid.*

விளாவின வெடிஉப்புத் திராவகம்.

PREP. (Mix Nitric Acid f℥iij., with Dist. Water f℥xvij.)

செய்முறை.—௩ - அவு - பொட்டிலுப்புத்திராவகத்தை, ௰௭ - அவு. நீரில் விட்டு மிஸ்ரமித்துக்கொள்ளவேண்டியது. க - அவு. திராவகம், ௱௬௪ - கிறே. Crystallized Carbonate of Soda, என்னும் உப்பைக் கரைத்துவிடும்.

ACTION. Refrigerant; Tonic; Alterative.

செய்கை.— சீதளகாரி, பலகாரி, வியதர்பேதகாரி.

USE. உபயோகம்.— இந்தத்திராவகத்தை அதிக ஜலம் விட்டு விளாவி பீச்சாங்குழலால், மூத்திரதுவாரத்தில் அடித்தால், மூத்திரப்பையில் இருக்கிற கல்களையும். இதை நாள்பட சாப்பிட்டால், உமிழ்நீர் அதிகமாயச் சுரக்கும்; மற்ற திராவகங்களைப்போலவே, பற்களைக் கெடுதிசெய்வதால், இதை இறகு அல்லது கிளாஸ் குழலால் உறிஞ்சி சாப்பிட்டு, சவுட்டுப்புக் கலந்த ஜலம் Alkaline solution,) வாயில்

விட்டு, கொப்புளிக்துவிடவேண்டியது. இந்த அவுஷதம், Alkaline and Phosphatic Diathesis என்னும், மூத்திரரோகங்களுக்கும், கொருக்கை வியாதிக்கும் Syphilis), மேஹவாதரோகத்துக்கும் Syphilitic Rheumatism), மேகப்புடைகளுக்கும் Syphilitic Eruptions), நாள்பட்ட பக்கசூலைக்கும் Chronic Hepatitis), நாள்பட்ட பிளீகரோகங்களுக்கும் Chronic affections of the spleen), நீர்க்கோவை ரோகங்களுக்கும் Dropsical affections), அதிமூத்திரரோகத்துக்கும் Diabetes), குலைஎரிச்சலுக்கும், Heartburn), கொடுத்து ஷை ரோகங்கள் சவுக்கியப்பட்டதாய், கண்டிருக்கின்றது.

Dose. ♏x.—♏xxx diluted with water, &c. Should be drunk through a quill, like the other strong Acids.

ஏ. அளவு.—ய - முதல் - கூய மினிம், ஜலத்தில்விட்டுக் கொடுக்கலாம்.

R. Acidi Nitrici diluti, ʒij., Infusi Kreatæ, ℥viiss., Misce: Dosis f℥iss. ter die. *As a tonic, when the bowels are irritable.*—Dr. Druitt.

R. விளா. வெடி உப்புத்திராவகம், திரா. உ.—நிலவேம்பு கஷாயம், அவு. எ½—மிஸ்ரமித்து, க½ - அவு. வீதம் தினத்துக்கு, கூ - வேளை கொடுத்தால் பேதியைநிறுத்தி, தேகத்துக்கு பலம் உண்டாகும்.

R. Acidi Nitrici rubri, fʒj., Aquæ Menthæ Piperitæ (vel Misturæ Camphoræ), f℥j., Tincturæ Opii, ♏xx. Misce. A fourth part to be taken in a cupful of gruel every three or four hours. *In Asiatic Cholera.*—Mr. Hope.

R. சிவந்த வெடி உப்புத்திராவகம், ʒக.—பெப்பர்மெண்டு ஜலம், அல்லது கர்ப்பூரஜலம், அவு. க.—அபினிப்பாவனத்திரவம், மினிம், உய.—மிஸ்ரமித்து, இதில் நாலில், க-பங்கு ஒரு கிண்ணம் கஞ்சியில் விட்டுக் கலந்து, கூ அல்லது, ச - மணிக்கொருதரம் கொடுத்துக்கொண்டு வந்தால், வாந்திபேதிநோய் குணமாகும்.

இதன்அடியில், ஹிந்து வைத்தியர்கள், பொட்டிலுப்புத் திராவகம் செய்கிற முறை ஒன்றைத் தெரிவிக்கப்படும். இது சரியான பொட்டிலுப்புத்திராவகம் அல்ல; இங்கிலீஷில் நைட்ரோஸ் ஆஸிட் (Nitrous Acid) என்னும் திராவகத்துக்கு ஒப்பானது:—

பொட்டிலுப்பு, பலம், உய.—படிக்காரம், பலம், யரு.—கடலைப்புளிப்பு நீர், பலம், யஅ.—இவைகளை மிஸ்ரமித்து வாலையிலிட்டுத் தீயைப் படிப்படியாய் அதிகமாய் எரித்தால், திராவகம் குப்பியில் இறங்கும்.

## IODINIUM.—*Iodine.* (I=126)

## ஐயோடின்.

Descrip. and Prop. விவரணம். குணம்.—ஐயோடின் என்னும் பதார்த்தத்தை, கெல்ப் (Kelp or Ashes of Sea Weed) எனனும் கடற்பாசி சாம்பலில் இருந்து எடுக்கப்படும். இது கறுப்பும் நீலமும் கலந்த நிறமுள்ளதாயும், பளுவாயும், காரமாயும், குமட்டலுடைய வாசனையுடையதாயும் இருக்கும். நெருப்புமேல் வைத்தால், உருகும்; இதன் புகை ஊதாநிறமாய் இருக்கும். ஜலத்தில் மெத்தக் கொஞ்சமாயும், ஈதர், ஆல்கோஹல் சாராயம், இவைகளில் முழுமையும் கரைந்துவிடும். நீர்ப்பஞ்சில் (sponge) ஐயோடின் இருக்கின்றது. இந்த சரக்கை கண்டுகொள்ளாததற்குமுன், நீர்ப்பஞ்சை உபயோகப்படுத்தப்பட்டது. அரிசிமாவு கஞ்

றிபி இதைக்கலந்தால், நீலநிறமுண்டாகும்; இந்தப்பரீக்ஷையால் ஐயோடின் இருக்கும் பதார்த்தங்களைக் கண்டுகொள்ளவேண்டியது.

ACTION. Stimulant of the Absorbents. Alterative.
குணம்.—கட்டிகளைக்கரைக்கும். வியாதபேதகாரி.

USE. "In simple hypertrophy of any of the organs, nonmalignant swellings and tumours, scrofulous disorders, secondary syphilis, goitre, phthisis, skin diseases, &c."

உபயோகம்.—ஐயோடின் கொடுத்தால் வெகு சீக்கிரத்தில் மூத்திரமுதலிய சுரப்புநீர்களின் வழியாய் வெளிப்படும். நெடுநாள் சாப்பிட்டால், தலைநோவு, இளைப்பு, குலையெருவு, மயக்கம் முதலிய துர்க்குணங்கள் காணும்; சிலவேளை ஜுரம், தாகம், அதிக துர்ப்பலம், இவைகள் காணுகிறதும் உண்டு; இந்த ஸ்திதிக்கு இங்கிலீஷில் ஐயோடிசம் (Iodism) என்றுபெயர். சிலவேளை ஸ்திரீகளுக்கு ஸ்தன்னியமும், புருஷர்களுக்கு பீஜமும் சிறுத்துப்போவதும் உண்டு. சிலருக்கு தேகம்பருக்கும், சிலருக்கு இளைக்கும்; மேலுக்குத்தடவினால் எரிச்சல் உண்டாகும்; சருமத்தை மஞ்சள் நிறமாக்கும். அதிகமாய்ச் சாப்பிட்டால் குடலைப் புண்ணாக்கிவிடும்.

இந்த அவுஷதத்தைக் கழுத்தில் காணுகிற புளைக்குழல், கண்டமாலை, கட்டிகள், மேஹரோகம், க்ஷயம், சருமரோகங்கள் முதலிய சாட்டியங்களுக்கு உபயோகப்படுத்தி வருகின்றது. பிரவிடையாகாத பெண்களுக்குக் கொடுத்தால், சீக்கிரத்தில் மாதவிடாய் காணும்படிச்செய்யும். கிரந்திப் புண்களுக்குத் தடவினால், பக்குகட்டி சீக்கிரத்தில் விரணத்தையாற்றும்.

DOSE. One-eighth of a grain to one grain.
ஓ. நிறை.—வரை - முதல் - க - கிறேன்வரையில் கொடுக்கலாம்.

ANTIDOTES. Large draughts of solution of Starch, both before and after evacuating the stomach; also obviate inflammation.

R. Iodinii, ℈j., Olei Olivæ, ℥i., Tere simul. To be rubbed on the abdomen. *In Diarrhœa and other Affections of the Bowels.* MR. M. DIAMOND.
R. ஐயோடின், கிறே. உ௰.—சீமை எண்ணெய், அவு. க. இவ்விரண்டையும் சேர்த்து அரைத்துக்கொள்ளவேண்டியது. இதை வயிற்றின்மேல் தேய்த்தால், அதிசாரபேதி முதலிய குடலைப்பற்றிய வியாதிகள் சொஸ்தப்படும்.

R. Liniment. Sapon. C. ℥j., Iodinii, gr.viij. vel. x. Misce. *To Scrofulous Tumours, &c.*—DR. COPLAND.
R. கலவை சவுக்காரத்தயிலம், அவு. க.—ஐயோடின், கிறே, அ - அல்லது ௰ - மிஸ்ரமித்துக்கொள்ளவேண்டியது. இதைக் கண்டமாலைசம்பந்தமான கட்டிகளுக்குத் தடவினால், கரையும்.

**Tincturа Iodinii Composita.** *Compound Tincture of Iodine.*

காம்பவுன் டிங்சர் ஆவ் ஐயோடின்.

PREP. (Macerate Iodine ℥j., Iodide of Potassium ℥ij. in Rectified Spirit Oij. until dissolved; strain. It contains Iodine gr.j. and Iodide of Potassium gr. ij, in ♏40.)
செய்முறை — ஐயோடின், அவு. க. — ஐயோடைட் ஆவ்பொட்டாஷியம், அவு. உ — இரட்டித்துவடித்தசாராயம், பைன்ட். உ — இவை சரக்குகள் சாராயத்தில் கரைந்துபோகிறவரையில், ஊறவைத்து வடிகட்டிக்கொள்ளவேண்டியது. ச௰ - மி

னம் டிங்சரில், க - கிறே. ஐயோடினும், உ - கிறே. ஐயோடைட் ஆவ்பொடாவிய இருக்கின்றன.

USE. In Scrofula, Bronchocele, &c.

உபயோகம்.—கண்டமாலே, புரைக்குழல் முதலிய ரோகங்களுக்குக் கொடுக்கப்படுகின்றது.

DOSE. From ♏x. to ʒi. in sherry or syrup and water.

ஔஷதவளவு.—ய - மினிம் முதல், க - கிரா. வரையில் படிப்படியாய் அதிகரித்து ஜலத்தில் கலந்து சருக்கரைச் சேர்த்தாவது, அல்லது ஷெரிஒயின் சாராயத்திலாவது கொடுக்கலாம்.

Injection of diluted tincture of Iodine in *Hydrocele*. நீரண்டத்தில், குற்றிநீரை எடுத்துவிட்டபிறகு, க - பங்கு டிஷ டிங்சரை, ங - பங்கு ஜலம்விட்டுச் கலந்து அண்டத்துக்குள் அடித்தால், அண்டத்தில் நீர்க்கோக்காது.

**Tinctura Iodinii Caustica.** *Caustic Tincture of Iodine.*

காஸ்டிக்டிங்சர் ஆவ் ஐயோடின்.

PREP. (Dissolve gr. xlviij. of Iodine and ʒi. of Iodide of Potassium in fʒj. of Rectified Spirits.)

செய்முறை.—சஅ - கிறேன் ஐயோடின், க - கிரா - ஐயோடைட் ஆவ் பொடாவியம், இவைகளை, க - அவு - இரட்டித்து வடித்த சாராயத்தில் கரைத்துக்கொள்ள வேண்டியது. க - கிரா - திராவகத்தில், சுமார், சு கிறே. ஐயோடினும், அ - கிறே. ஐயோடைட் ஆவ் பொடாவியமும், இருக்கின்றன.

இதை மேலுக்குத் தடவமாத்திரம் உபயோகப்படும்.

**Unguentum Iodinii Composita.** *Compound Iodine Ointment.*

கலவை ஐயோடின்களிம்பு.

PREP. (Rub Iodine ʒss., Iodide of Potassium ʒi., and Rectified Spirit fʒi. together, then rup up with Lard ℥ij.)

செய்முறை.—௨ - கிரா. ஐயோடின், க - கிரா. ஐயோடைட் ஆவ் பொடாவியம், இவைகளை, க - கிரா. இரட்டித்து வடித்த சாராயம்விட்டு அரைத்து, பிறகு உ - அவு. பன்றிநெய் சேர்த்து மிஸ்ரமித்துக்கொள்ளவும்.

USE. "Employed as an external application in Bronchocele, and scrofulous tumours."

உபயோகம்.—இந்தக்களிம்பை, புரைக்குழல், கண்டமாலேயினத்தைச் சேர்ந்த கட்டிகள், இவைகளின்மேல் தடவ உபயோகமாகின்றது

**CHLORINIUM.—Chlorine. (Cl=36)**

குளோரின்.

குளோரின் என்பது, பச்சையும் மஞ்சளும் கலந்த நிறமுடைய வாயுரூபமான ஒரு பதார்த்தம்; இந்த வாயு ஜலத்தில் கலந்துவிடும், இதன் வாசனைபட்டால், மூச்சுத்திணரும்; இலே, புஷ்பம் இவைகளுடைய நிறத்தைக் கெடுக்கும்; துர்வாசனையை எடுத்துவிடும்.

Liquor Chlorinii. Aqua Chlorinii. *Chlorine water.*

குளோரின் கலந்த ஜலம். குளோரின் ஜெய்நீர்.

PREP. (Mix Hydrochloric Acid f℥i. with powdered Binoxide of Manganese ʒij. in a retort, and allow the gas, so long as it continues to escape, to pass through half a pint of dist. water.)

செய்முறை —க - அவு - கறிஉப்புத்திராவகம், உ - திரா - தூள்செய்த பின் ஆக்ஸைட் ஆவ் மாங்கனீஸ், இவைகளை வாலையிலிட்டு எரித்தால், குளோரின் வாயு உண்டாகும், அதை ஐ - பைமின்ட் நீரில் பிரவேசிக்கச் செய்யவும். வாயு ஜெனிப்பு அடங்குங்கிறவரையில் எரித்திடவேண்டியது.

ACTION. Stimulant; Disinfectant.

செய்கை.— உஷ்ணகாரி; பூதிகந்த சாங்கிராமிகரோக நிவர்த்தனகாரி.

USE. "Administered as a stimulant in typus fever, epidemic dysentery, chronic diseases of the liver. *Externally*, largely diluted, applied as lotions to foul and indolent ulcers, and in some cutaneous diseases; also as gargles in putrid sore throat; as mouth washes in fetid breath from decayed teeth or ulcerated mouth; and in local bath, in hepatitis, &c."

உபயோகம்.— விஷச்சுரம், ரத்தபேதி, நாள்பட்ட பக்கரூலை ரோகங்கள், இவைகளுக்கு, உள்ளுக்குக் கொடுக்கப்படும். அதிகமாய் ஜலம்விட்டு விளாவி, ஆறாத விரணங்களுக்கும், சில சருமரோகங்களுக்கும் மேலுக்குப்போடப்படும். நாற்றமுடைய தொண்டை விரணத்துக்கு, வாய் கொப்புளிக்க உபயோகப்படுகின்றது. சொத்தைப்பல், வாய்விரணம், இந்த வியாதிகளில் காணுகிற வாய் நாற்றத்துக்கு, வாயில் தடவலாம். யகுர்திகண்டதாபனரோகத்துக்கு, வலதுபக்கத்தில் பூசுவதும் உண்டு.

DOSE. ♏xx. to ʒij. freely diluted.

ஔ. அளவு.— உ0 - மினிம், முதல் - உ - திராம் வரையில் அதிக ஜலம்விட்டு விளாவிக்கொடுக்கலாம்.

இந்த ஜலத்துடன் காடிக்காரம், வங்க உப்பு இவைகளைச் சேர்த்துக்கொடுக்கலாகாது.

ANTIDOTES. Magnesia; Chalk; Soap; Albumen; White of Eggs; Milk; Dilution.

℞. Liq. Chlorinii fʒss., Aquæ puræ, f℥iss., Syrupi Papaveris, fʒss. Fiat haustus, sexta quaque hora sumendus.—DR. COPLAND.

℞. குளோரின் ஜலம், ஐ - திரா—சுத்தஜலம், கஐ-அவு—போஸ்தக்காய் பாணிதம், ஐ - திரா. சேர்த்து, சு - மணிக்கொருதரம் கொடுத்துகொண்டு வரவும்.

Acidum Hydrochloricum. Acidum Muriaticum. (HCl = 37) *Hydrochloric Acid. Muriatic Acid.*

கறிஉப்புத்திராவகம். லவணத்திராவகம்.

DESCRIP. AND PROP. விவரணம். குணம்.—நிர்த்தோஷமுடைய லவணத்திராவகம், நிறமற்றதாய் இருக்கும்; ஆனால் சாதாரணமாய் இது மங்கலான மஞ்சள் நிறமுடையது. காற்றுப்பட புட்டியைத் திறந்துவைத்தால் புகையும், அந்தப்புகை வெண்மையாய் இருக்கும். இந்தத் திராவகத்தின் வாசனைபட்டால் மூச்சடைப்புகாணும்.

... - [illegible] திராமம், ௱௬௨ - கிறேன் Crystallized Carbonate of soda என்னும் உப்பைக்கரைத்துவிடும்.

PREP. (Chloride of Sodium lbij., Sulphuric Acid f℥xx., Distilled Water f℥xxiv; Add the acid, first mixed with 12 fluid ounces of the water, to the Chloride of sodium put into a glass retort. Pour what remains of the water into a receiver; then, the retort being fitted to it, let the Acid, distilled in a sand-bath, pass over into this water, the heat being gradually increased.)

செய்முறை.—கறிஉப்பு, பவு. உ—கந்தகத்திராவகம், அவு. உ௰—நீர், அவு. உ௪. திராவகத்தை, ௰உ - அவு - ஜலம்விட்டு முதல் விளாவிக்கொண்டு, கறிஉப்பு டன் சேர்த்து, கண்ணாடிவாலையிலிட்டு, வாலுகா யந்திரத்தில் வைத்து மற்ற ஜலத்தைக் குப்பியிலிட்டு, குப்பியை வாலையுடன் சேர்த்துத் திட்டப்படுத்திக்கொண்டு தீயைப் படிப்படியாய் அதிகரிக்க எரித்தால், வாலையிலிருந்து திராவகம் வெளிவந்து, குப்பியி லிருக்கிற ஜலத்தில் கலந்துவிடும்.

IMPURITIES. அசுத்திகள்.—இந்தத்திராவகத்துடன், கந்தகத்திராவகம் குளோரின் வாயு, இவைகள் கலந்து சேர்ந்திருக்கும்; அவைகளைத் திமிகல்டெ ட், என்னும் பரீக்ஷையால் கண்டறியவேண்டியது.

ACTION. Corrosive poison; Escharotic.

செய்கை.—காரமுள்ளநஞ்சு; விரணகாரி,

USE. "As a disinfectant and fumigant."

உபயோகம்.—நாற்றமிருக்கிற இடங்களில் புகைபோட இந்த திராவகம், உபயோகமாகின்றது:—(௰௩ - பங்கு கறிஉப்பு, ௰உ - பங்கு கந்தகத்திராவகம்.) உப் பை ஒரு பீங்கான் பாத்திரத்தில் கொட்டிக் காய்ந்தமணலின்மேல் வைத்து திராவ கத்தைவிட்டால், புகையும்; அந்த புகைச்சல் நாற்றத்தை எடுத்து விடும்; அதன் வாசனைப்பட்டால் இருமல், மூச்சடைப்பு முதலிய குணங்கள் காணும். வா சஞ் செய்கிற வீடுகளில், இந்த புகைச்சல் போடவேண்டியதிருந்தால், உப்பை மண லின்மேல் வைக்காமல், திராவகத்தைமாத்திரம், கொஞ்சங்கொஞ்சமாய் உப்பில்விட வேண்டியது.

*Cancrum Oris.* கன்னப்புற்றுக்கு லவணத்திராவகத்தைத் தடவலாம்.

ߠ - முதல், உ - திராம் கறிஉப்புத்திராவகம், ௬ - அவு - ஜலம்; இவைகளைக் க லந்து, வாய்க் கொப்புளிக்கவாவது, ரணங்களைக்கழுவவாவது உபயோகிக்கலாம்.

ANTIDOTES. Magnesia; Solution of Soap; the Bicarbonates of Soda and Potash; Milk; Demulcents; Chalk to be avoided.

**Acidum Hydrochloricum Dilutum. Acidum Muriaticum dilutum.** *Diluted Hydrochloric or Muriatic Acid.*

விளாவின கறி உப்புத்திராவகம்.

PREP. (Acidi Hydrochlorici f℥v. Aq. Dist. f℥xv. Misce.)

செய்முறை.—௫ - அவு. கறிஉப்புத்திராவகத்துடன், ௰௫ - அவு. நீர்விட்டு மிஸ்ரமித்துக்கொள்ளவேண்டியது. க - அவு. திராவகம், ௱௬௨ - கிறேன் Cryst. Sod. Carb. என்னும் உப்பைக் கரைத்துவிடும்.

ACTION. Refrigerant; Tonic; Antiseptic; Vermifuge.

செய்கை.—சீதளகாரி; பலகாரி; பூதிகந்தநாசகாரி; கிருமிநாசகாரி.

USE. "In malignant typhus and scarlet fever; in phosphatic urinary deposits; in syphilis; as a gargle in malignant sore throat."

உபயோகம்.—விஷச்சுரம், ரக்தமருரிகாரோகம், மூத்திரவியாதி, கொறுக்கை முதலிய சாட்டியங்களுக்கு உள்ளுக்கும்; வாய்ரணத்துக்கு கொப்புளிக்கவும், உபயோகப்பட்டுவருகின்றது. இந்த திராவகத்துக்கு, ஜீரண உறுப்புகளின் பலத்தை அதிகரிக்கச்செய்கிறகுணம் உண்டு. கிருமிகளை வயிற்றில் உற்பத்தியாகாமல் செய்யும். நாள்படச் சாப்பிட்டால் விரோதிக்கும். இது பற்களைக் கெடுதிசெய்வதால், சவுட்டு மண்ணுப்பின ஜலத்தால் வாயைக் கொப்புளித்துவிடவேண்டியது. மேலுக்கு கிலேதமாகவும் உபயோகப்படுத்தப்படும்.

DOSE. ♏x.—xx. in some bland or sweetened fluid or bitter infusion.

ஒ. அளவு.—ம.—உம - மினிம், ஜலத்திலாவது, ஜலமும் சருக்கரையும் கலந்தாவது, அல்லது நிலவேம்புமுதலிய கசப்புள்ள கஷாயத்திலாவது, கொடுக்கலாம்.

R. Acidi Hydrochlorici, ℨi., Aquæ Distillatæ, f℥xiv., Syrupi. f℥ij. Misce: sumantur fℨij. subinde. *In Typhus, Scarlatina, and Angina.*—DR GREGORY.

R. கறிஉப்புத்திராவகம், க - திரா—தீநீர், ௰௪ - அவு—ஷர்பத், உ-அவு—இ - மி. உ - அவு. வீதம் அடிக்கடி எடுத்துக்கொண்டால் விஷச்சுரம் முதலிய வியாதிகள் நீங்கிப்போகும்.

R. Acidi Muriatici, fℨi., Decocti Hordei, Oj., Sacchari Albi, ℨss. Fiat mistura. Sumat f℥ij.—iv bis terve die. *In Typhoid Fever, and white deposits from urine.*—DR. COPLAND.

R. கறிஉப்புத்திராவகம், க - திரா.—பார்லி அரிசிக்கஞ்சி, க - பைமி—வெள்ளைச்சருக்கரை, ௨ - அவு. இ - மி. உ - ச - அவு - வீதம், தினத்துக்கு, உ - ௩ - வேளை சாப்பிடவும். இது விஷச்சுரம், மூத்திரத்தில் வெள்ளைமாவுபோல் படிகிற ரோகம். இவைகளுக்குக் கொடுக்கக் குணமாகும்.

R. Acidi Hydrochlorici diluti, fℨij., Infusi Quassiæ, f℥viiss., Syr. Aurantii, f℥ss. Fiat mistura, sumat partem quartam bis die. *To prevent the generation of worms after purgatives.*—Dr. PARIS.

R. விளா. கறிஉப் - திராவகம், உ - திரா.— குவாஸியா வெந்நீர் கஷாயம், ௭௦-அவு.—ஆரஞ்சிப்பழத்தோல் பாணிதம், ௦ - அவு.—இவைகளைச்சேர்த்து நாலில் ஒருபங்கு தினத்துக்கு இரண்டுவேளை சாப்பிட்டுக்கொண்டுவந்தால், வயிற்றில் கிருமிசேராது. இதைப் பேதிக்குக்கொடுத்துப் பிறகு கொடுக்கவேண்டியது.

R. Acidi Hydrochlorici, fℨi., Mellis, Aquæ Rosæ, ana f℥i. Misce; fiat linctus, ter vel quater die gingivis applicandus. *In scorbutic ulceration of the gums.*—MR. BRANDE.

R. கறிஉப்புத்திராவகம், க - திரா—தேன், பந்நீர் - வகை. க - க்கு அவு. க- இ - மி தினத்துக்கு ௩ - ச - தடவை, ஈறின்மேல் தடவிக்கொண்டுவந்தால், ஈறு விரணத்தை ஆற்றும்.

ஹிந்துவைத்தியர்கள் கறிஉப்புத்திராவகம் செய்கிறமுறை.

கறிஉப்பு, பலம் - அ— படிக்காரம், பலம் - ௬ — கடலைப்புளிப்புநீர், பலம் - ௯. உப்பையும், படிக்காரத்தையும் செவ்வையாய் உலர்த்திப் பொடிசெய்து, பிறகு

உடலைப் புளிப்படைச்சேர்ந்து வாலையிலிட்டு எரித்து திராவகத்தை முற்றிலும் குப்பியில் இறக்கிக்கொள்ளவேண்டியது.

Acidum Nitro-muriaticum. Acidum Nitro-hydrochloricum. *Nitro-muriatic Acid. Nitro-hydrochloric Acid. Aqua Regia.*

சொர்ணபேதிதிராவகம்.

DESCRIP. AND PROP. சொர்ணபேதி திராவகமானது, பசுமையான பொன்னிறமுடையதாயிருக்கும்; பொன்னையும், பிளாட்டினம் (Platinum) என்னும் லோகத்தையும் கரைத்துவிடும்; இதன் வாசனைப்பட்டால், மூச்சடைப்புகாணும்; மற்ற திராவகங்களைப்போலவே இந்த திராவகத்துக்கும், காரமுள்ள நஞ்சின் குணம் உண்டு.

PREP. (Nitric Acid, f℥i., Muriatic Acid, f℥ij.,) Mix.

செய்முறை.—பொட்டிலுப்புத்திராவகம், க - அவு.—கறிஉப்புத்திராவகம், உ - அவு.—இ - மி. இதை கல்கார்க்குடைய பச்சை புட்டியில் ஊற்றி,குளிர்ச்சியான இடத்தில் வைக்கவேண்டியது.

ACTION. Corrosive poison. When diluted, possesses alterative, tonic, stimulant, and astringent properties.

செய்கை.—காரமுள்ள நஞ்சு. விளாவிக்கொடுத்தால், வியாதியை நீக்கி தேகத்துக்குப் பலத்தைக்கொடுக்கும்; இதற்கு துவர்ப்புக்குணமும் உண்டு.

USE. In hepatic affections, phosphatic deposits in urine, secondary syphilis, jaundice, cholera, cutaneous diseases, &c.

உபயோகம்.—யகுர்திகண்ட ரோகங்கள், மூத்திரரோகங்கள், மேஹரோகம், பித்தபாண்டுரோகம், விஷபேதி, சருமரோகங்கள் முதலியவைகளுக்கு, உபயோகப்படுகின்றது.

DOSE. From ♏viij., to ♏xx., largely diluted.

ஒ. அளவு.—அ - முதல், உ௰ - மினிம் வரையில் கொடுக்கலாம்.

*Nitro-muriatic Acid bath.* ஒரு மரத்தொட்டியில், க - காலன் ஜலம்விட்டு, அதில், கஉ - அவு. சொர்ணபேதி திராவகம் கலந்துகொண்டாவது, அல்லது ஜலத்தை அளந்துவிடப் பக்குவப்படாவிட்டால், ஜலம் புளிப்புதட்டுகிறவரையில், ஷை திராவகத்தில் கொஞ்சம் விட்டுக்கலந்து அதில் பாதங்களை, ௰ - அல்லது, ௰ரு - மினிட்டுநேரம் வைத்திருந்து எடுத்துவிடவேண்டியது; இவ்விதமாய் அந்திசந்தி இரண்டுவேளைச் செய்துகொண்டு வந்தால் பக்கசூலைரோசம்,பித்தபாண்டுரோகம் இவைகள் சவுக்கியப்படும். இந்த திராவகத்தை ஜலம்விட்டு விளாவி யகுர்திகண்டஸ்தானத்தின் மேல் (Over the region of the liver) தடவவும் வேண்டியது.

R. சொர்ணபேதி திராவகம், ங - துளி.—லாடனம், ௰ - துளி.—ஜலம், கஉ - அவு. இ - மி. ங - உ - மணிநேரத்துக்கொருதரம் விஷபேதி காரருக்குக் கொடுத்து அநேகர் சவுக்கியமடைந்ததாய்க்கண்டிருக்கின்றது. *In Cholera.*—(ROGERS.)

மேசப்புடைகளுக்கு ஷை திராவகத்தில், ௰ - துளி. நன்னாரிவேர் கஷாயத்துடன் சேர்த்துக்கொடுக்கலாம்.

Nitro-muriatic Acid gargle in *Syphilitic Sore Throat.* சொர்ணபேதி திரா

வகத்துடன், கொஞ்சம் தேன் சேர்த்து, ஜலம்விட்டு விளாவிக் கொப்புளிப்பதால் வாயில் காணுகிற மேஹவிரணம் சொஸ்தமாகும்.

## CARBON. (C=6)

கரிக்கரி.

இந்தப் பதார்த்தம் பூமியில் விஸ்தரித்து இருக்கின்றது. கல்லுக்கரி Coal, ஆன்திரேஸைட் Anthracite, கிரேபைட் Graphite, இவைகளும் கரி இனத்தைச் சேர்ந்தவைகள்தான். நிறமற்று, கட்டியாய் இருக்கிற கரி, தான் வைரக்கல்லாகும்; இது மெத்த உறுதியானது. நாம் எழுதுகிற பென்ஸிலில் இருக்கிற பதார்த்தம் பரிசுத்தமான ஒருஜாதிக்கரி தான்; இதற்கு இங்கிலீஷில் Graphite, Plumbago, Black Lead எனப்பல நாமங்களுண்டு. தீபம், குங்கிலியம், முதலியவைகளை எரிவிட்டு, அவைகளில் உண்டாகும் புகையிலிருந்து எடுக்கும் மைக்கு (கருப்புக்கு), லாம்பிளாக் Lamp-black என்று பெயர்.

### Carbo Ligni. *Wood Charcoal. Vegetable Charcoal.*

கட்டைக்கரி.

PREP. (Wood Charcoal is obtained by burning wood in covered-up heaps or in close vessels.)

செய்முறை.—கட்டைகளை அடுக்கி மண்ணால் மூடியாவது, அல்லது ஒரு பாண்டத்தில் போட்டு மூடியாவது எரித்து, கரியை எடுக்கப்படும். கொஞ்சமாய் காற்றுப்படும்படி எரிவிடுவதே இதற்குப் பிரதானம்.

ACTION. Antiseptic and Disinfectant.

செய்கை.—புதிசுத்தநாசகாரி.

USE. "It is used in flatulent dyspepsia, and to correct fetid eructations and discharges. Externally, charcoal is added to poultices, to correct the fetor of foul ulcers. It is also dusted on the skin in porrigo, or used in the form of an ointment."

உபயோகம்.—அஜீரணத்துக்கும், துர்வாசனையோடு ஏப்பம் காணுகிறதற்கும், ரத்தபேதி, அதிசாரம் இவைகளில் மலத்திலிருக்கிற நாற்றத்தை அடக்கவும், கரி உள்ளுக்குக் கொடுக்கப்படும். விரணத்திலிருக்கிற துர்வாசனையை நீக்கக்கரியை ப்பதவாடைகளோடு சேர்த்து, விரண த்துக்குப்போடப்படும். கரப்பானுக்குக்கரித் தூளை மேலே தூவுகிறதும் உண்டு; அல்லது களிம்பாகச்செய்தும் உபயோகப்படுத்துவதுண்டு. குன்மரோகத்துக்குக் (Gastrodynia) கரித்தூள் கொடுத்து சவுக்கியம் உண்டானதாயும், கரித்தூளும்-ரேசல் சிவிருரணமும் சேர்த்து முறைதவறாய் சுரத்துக்குக்கொடுத்திருப்பதாயும் கண்டிருக்கிறது.

DOSE. gr. x.—ʒj.

ஔ. அளவு.—௰-கிரேன் முதல், ௧-டிராம் வரையில்கொடுக்கலாம்.

In Dyspepsia attended with obstinate *Constipation* and *Gastrodynia*.

கரித்தூளை ஒரு கரண்டிப்பிரமாணம், சாப்பிட்டபின்பு கொடுத்துக்கொண்டுவந்தால், மலச்சிக்கல், குன்மம் இவைகள் தீரும்.

℞. Carbonis ligni, Sodæ Bicarbonatis, ana ʒj., Confect. Sennæ, ℥ij. Fiat electuarium. A teaspoonful three or four times a day. *In obstinate Constipation.*—MITCHELL.

R. கரித்தூள், கார்பொனேட் ஆவ் சோடா இவைகள், வகை க ஐ க-கிரா. கில ஆவாரை வெல்லம், உ-அவு. இவைகளைச் சேர்த்து பேஸ்ட் இதில் ஒரு தேசிலைக் கரண்டி அளவு தினந்தோறும், ௩-௪-வேளை மலச்சிக்கலுக்குக் கொடுக்கலாம்.

R. Carbouis pulv. ʒiij., Adipis, ℥j. Fiat Unguentum. *In Tinea Capitis.*—ALIBERT.

R. கரித்தூள், ௩-கிரா. பன்றிநெய், க-அவு. இவைகளைச் சேர்த்துக் களிம்பு செய்து, கரப்பானுக்குப் பூசச் சொஸ்தமாகும்.

## Cataplasma Carbonis. *Charcoal Poultice.*

## கரிப் பதவாடை.—கரித்தூள்பேஸ்டிஸ்.

PREP. (Boiling water, f℥x., bread ℥ij., powdered linseed, ʒx., powdered charcoal, ʒiij. Mix the water, bread and linseed; then add two drachms of the charcoal, and sprinkle the remainder on the surface.)

செய்முறை.—உ-அவு. கோதுமைரொட்டியை, ௰-அவு. வெந்நீரில் போட்டு ஊறவைத்து, பிறகு-௰-கிரா. அலிஷிவிரை மாவுகலந்துக் கிளறி, உ-கிரா. கரித்தூள்சேர்த்து மிஸ்ரமித்து, துணிமேல் தடவி அதன்மேல், க-கிரா. கரித்தூளைத் தூவிக்கொள்ளவேண்டியது.

USE. Apply it warm to foul ulcers, to destroy the fœtor.

உபயோகம்.—இந்த பதவாடையை சடச்சடரணங்களுக்குப் போட்டால், விரணத்திலிருக்கிற நாற்றம் போய்விடும்.

## Carbo Animalis. *Animal Charcoal.*

## அனிமல் சார்க்கோல்.

PREP. செய்முறை.—எலும்புகள், கொம்புகள், மாம்சம், ரத்தம், இவைகளை ஒரு பாண்டத்திற் போட்டு, காற்றுப்படாமல் எரித்தால், கரியாய்விடும். இந்தக் கரித்தூளுக்கு போன்பிளாக் (Bone-black) ஐவோரி பிளாக் (Ivory-black) என்று இங்கிலீஷில் பெயர்.

USE. உபயோகம்.—மருந்துகளுடைய நிறத்தை நீக்க இந்த கரி உபயோகமாகின்றது. அபினிச்சத்து Morphia, எட்டிக்கொட்டைச்சத்து Strychnia, முதலியவைகளை விஷமிக்கும்படிச் சாப்பிட்டவர்களுக்கு, இந்தக்கரியைக்கொடுத்தால் ஷெ மருந்துகளை முறித்துவிடுமென்று கண்டிருக்கின்றது.

## Acidum Carbonicum. *Carbonic Acid. Choke-Damp.*

## கார்போனிக் ஆஸிட்.

DESCRIP. AND PROP. கார்போனிக் ஆஸிட் என்பது, வாயுருபமான ஓர் பதார்த்தம்; இந்த வாயு காற்றிலும் கலந்திருக்கிறது. அநேக இடங்களில் இது பூமியிலிருந்து உற்பத்தியாகின்றது; கட்டை முதலியவைகள் எரியும்போது உண்டாகிற புகையில், கார்போனிக் ஆஸிட் என்னும் வாயு இருப்பதால் பகிலைகிட்டில் புகைபோட்டால் தேகசவுக்கியம் கெடும். கள்ளில் இருக்கிற கார்போனிக் ஆஸிட் வாயு வெளிப்படுகிறபோது கள்ளில் நுரை உண்டாகும்.

PREP. "It may be obtained from coarsely powdered Marble, or any other carbonate, by the action of the diluted hydrochloric, or any other acid."

செய்முறை.—வெள்ளைக்கல் தூளுடன் (சலவைக்கல்) கிளோரின் சத்திட்டபுத்தி ராவகத்தைச் சேர்த்தால், கார்போனிக் ஆஸிட் வாயு ஜெனிக்கும்.

**Aqua Soda Effervescens.** *Effervescing Soda Water.*

**சோடாவாடர்.**—சவட்டுமண்ணுப்பு கலந்த ஜலம்.

Prep. (Bicarbonate of Soda, ℥i., Water, Oj. dissolve the Bicarbonate in the water and saturate it with the Carbonic Acid under strong pressure.)

*செய்முறை.*—பைகார் பொனேட்ஆவ்ஸோடா, ௧ - திரா. ஜலம் - ௧ - பையி. ஷெ உப்பை ஜலத்தில் கரைத்துகொண்டு, அதில் கார்போனிக் ஆஸிட்வாயுவை பிறவேசிக்கச்செய்து, பக்குவப்படுத்திக்கொள்ளவேண்டியது.

Action. Refrigerant and Antiseptic. The gas is stimulant.

செய்கை.—சீதளகாரி, பூதிகந்தநாசகாரி. கார்போனிக் ஆஸிட் வாயுவுக்கு உஷ்ணிக்கிறகுணமுண்டு.

Use. Carbonic acid introduced into the stomach (in the form of simple aërated water, soda water, effervescing draughts &c.) checks vomiting, and allays thirst and gastric irritation. The gas is applied topically to the skin, to ulcers, to promote suppuration & diminish fœtor; it has been injected into the rectum in cancerous ulcers & dysentery; and into the uterus in a painful condition of that organ. Inhaled, it is a powerful poison.

உபயோகம்.—சோடாவாடர் சாப்பிட்டால் வாந்திநிற்கும், தாகம்அடங்கும், குமட்டல்நீங்கும். சருமத்தைஉஷ்ணிக்கவும், விரணங்களை ஆற்றவும், கட்டிகளைப்பழுக்கவைக்கவும், நாற்றத்தைக்குறைக்கவும், இந்தவாயுவை தூபமாகக்கொடுக்கப்படும். ரத்தபேதி, ஆசனப்புற்று, இவைகளுக்கு ஆசனத்திலும், கர்ப்பகுலே ரோகத்துக்குக்கு அல்குலிலும் பிரயோகப்படுத்தப்படும். இந்த வாயுவை ஆக்கிராணித்தால் இறந்துவிடுவார்கள்.

## AMMONIA.—*Volatile Alkali.* ($NH_3 = 17$)

**நவக்ஷாரவாயு.—அம்மோனியா.**

அம்மோனியாஎன்பது, வாயுரூபமான ஒருபதார்த்தம்; இதற்குநிறமில்லை; அதிகநெடியுடையதாய் இருக்கும்; மாம்சாதிகள் கெட்டுப்போகும்போது, இந்தவாயு பிறக்கின்றது.

**Liquor Ammoniæ Fortior, Aqua Ammoniæ Fortior.**—*Strong Solution of Ammonia.* காரமுள்ள நவக்ஷாரஜெயநீர்.

Prep. (Slake 8 ounces of lime with 4 of water, and triturate it, when cooled, with 8 ounces of finely powdered sal ammoniac. Introduce the mixture into a glass matrass, or iron bottle, and having closed this with a cork perforated with a suitable tube, apply a gentle sand-heat gradually augmented, and cause the gas evolved to pass through a small Wolff's bottle furnished with a safety syphon tube containing mercury, and thence to the bottom of a pint bottle containing 16 ounces of distilled water, the bottle being surrounded by cold water, frequently renewed. The specific gravity should be ·950.)

செய்முறை.—௮ - அவுன்ஸ்சுண்ணாம்பை, ௪ - அவுன்ஸ்ஜலம்விட்டு தாளித்து அதுகுளிர்ந்தபிறகு, ௮ - அவுன்ஸ் நவக்ஷாரத்தூள்சேர்த்து அரைத்து இதைவாய்

குவித்திருக்கிற ஒருமண்பாண்டத்திற்போட்டு கார்க்கால் அடைத்து, அந்தக் கார்க்கில் அவாரஞ்செய்து, கிளாஸ்குழல்வைத்து காற்றுப்புகாமற்செய்து, வாலுகாயந்திரத்தில்வைத்து எரித்தால், நவக்ஷாரவாயு ஜெனிக்கும், அதை Wolff's bottle என்னும் ஓர்விதகுப்பியில் பிரவேசிக்கச்செய்து, பிறகு அந்தக் காற்றை ம௲ - அவு. ஆவிநீர் அடங்கிய ஒருபுட்டியில், அடையும்படிச் செய்யவேண்டியது. இந்த புட்டிமேல் ஜலம்விட்டு குளிர்ச்சியாய்வைத்திருக்கவேண்டியது.

Action. Irritant, Vesicant, and Caustic.

செய்கை.— எரிச்சலுண்டாக்கும், துவக்ஸ்போடகாரி, விரணகாரி,

**Liquor Ammoniæ. Aqua Ammoniæ.** *Solution of Ammonia.*

நவக்ஷாரஜெயநீர்.

இதில் மேற்சொன்ன ஜெயநீரைப்பார்க்கிலும், காரம்மட்டாயிருக்கும்.

Prep. (Add to every f℥i of strong solution of Ammonia, f℥ij of water; or by distilling Lime and Hydrochlorate of Ammonia (about equal parts) with water sufficient to slake the Lime, and passing the gas into water in a cooled receiver,)

செய்முறை.— க - அவுன்ஸ் காரமுள்ள நவக்ஷார ஜெயநீருடன், உ - அவுன்ஸ் ஜலம்விட்டு, மிஸ்ரமித்துக்கொள்ளவேண்டியது; அல்லது சுண்ணாம்பும், நவக்ஷாரமும், சுமார் சமனுகச் சேர்த்து, சுண்ணாம்புப் பூர்க்க எவ்வளவு வேண்டியதோ அவ்வளவு ஜலம்விட்டு பக்குவப்படுத்திக்கொண்டு, சரக்குகளை வாலையிலிட்டெரித்தால் நவக்ஷாரவாயு ஜெனிக்கும், அந்த வாயுவை, குளிரவைத்திருக்கிற ஜலத்தில் பிரவேசிக்கச் செய்யவேண்டியது.

௱ - பங்கு காரமுள்ள நவக்ஷார ஜெயநீரில், ௬௰ - பங்கு நவக்ஷார வாயு, எ௰ - பங்கு ஜலம் இருக்கின்றன. மற்றொன்றில், ௰ - பங்கு வாயு, ௬௰ - பங்கு ஜலம் இருக்கின்றன.

Action. Antacid, Rubefacient, Stimulant, Antispasmodic, Diaphoretic.

செய்கை.— ஆம்லநாசகாரி, ஷோணகாரி, உஷ்ணகாரி, அங்காகர்ஷண நாசகாரி, சுவேதகாரி.

Use. "The vapour of Ammonia is applied to the nostrils as a stimulant in faintness, nervous headache, vertigo, suspended animation, &c. It should not be used in a too concentrated form, especially when the patient is in an insensible state; as the after effects have sometimes proved serious. It is given internally in sinking of the vital powers from hæmorrhages; in poisoning by prussic acid and other sedatives; in some cases of scarlet and typhus fever, and delirium tremens; and as an antidote to the bites and stings of venomous reptiles and insects."

உபயோகம்.— மூர்ச்சை, தலைவலி, பித்தமயக்கம், சுமார்கம் இல்லாமல் போகுதல், இவைகளுக்கு, நவக்ஷார வாயு ஜெயநீரின் ஆவியை ஆக்கிராணிக்கச் செய்தால், உஷ்ணித்து சவுக்கியப்படுத்தும். நோயாளி சுமாரகமில்லாமலிருக்கிற ஸ்திதியில் அதிககாரமுள்ள நவக்ஷார ஜெயநீரை, உபயோகப்படுத்தலாகாது, பின்னிட்டுக் கெடுதிசெய்யும். இந்தச் செயநீரை குட்டையில் தெளித்து முகாரவைக்கலாம். சுதகஜன்னி, வாந்திபேதி, குளிர்மை, தாப்பலம் இவைகளுக்கு, நவக்ஷார ஜெயநீரை, ஜலத்தில்விட்டுக் கொடுத்தால் சவுக்கியத்தைத்தரும். ஹைட்ரோஸையா

ஓ. அளவு.—ம - முதல் ௬௰ - கிரே. அல்லது க - கிரா. வரையில் அதிகரித்துக் கொடுக்கலாம்.

℞ Inf. Calumbæ, f℥v., Potassæ. Bicarb. ʒj., Tinct. Gentianæ Co. ʒiij., Fiat misturæ, cujus capiat cochl. iij magna meridie. *In Indigestion with Acidity.*—Dr. BABINGTON.

கலம்பா வென்னீர்கஷாயம், ௫ - அவு. பொட்டாஸ்ஸி பைகார் பொனஸ், க - கிரா. ஜென்ஷன்கலவை பாவனத்திரவம், ௩ - கிரா. இ. மி. மிகிஸ்சர்செய்து, ௩ - பெரியகரண்டியீதம் அஜீரணரோகத்திற்கு, மத்தியானத்தில் நோயாளியை எடுத்துக் கொள்ளும்படி டாக்டர், பாபிங்டன் என்பவர் சொல்லுகிறார்.

**POTASSII SULPHURETUM.** *Sulphuret of Potassium. Liver of Sulphur.*

PREP. (Rub together Sulphur ℥i., Carb. Potash ℥iv., heat them in a covered crucible till they melt. The air is to be excluded during and after the process of solidification.

செய்முறை.— கந்தகம், க - அவு. கார். போடாஷ். ச - அவு. இவைகளை அரைத்துப் பிறகு மூசையில்வைத்து மூடி, உருகுகிறவரையில் எரிக்கவேண்டியது. கட்டியாகிறபோதும், அதன்பிறகும் காற்றுப்படாமல் வைக்கவேண்டியது.

ACTION. Stimulant, Diaphoretic, Detergent.

செய்கை — உஷ்ணகாரி, சுவேதகாரி, கட்டிகளைக்கரைக்கும்.

USE. " Owing to the rapid decomposition of the salt on exposure, and to the poisonous nature of the medicine, it is in little use " " Its chief use is as an external application, in solution, or in the form of ointment. (ʒss., ad Ung. ℥i.)

உபயோகம்,—காற்றுப்பட்டால் கெட்டுப்போகிற படியாலும், விஷகுணம் இருப்பதாலும், இந்தமருந்தை மெத்தஉபயோகப் படுத்துகிறதில்லை. ஜலத்திற்கரைத்தும், களிம்பாகச்செய்தும் மேலுக்குமுக்கியமாய் உபயோகப்படுத்தப்படும்.

DOSE. gr. iij., to x. or xv. with honey, or with soap made into pills.

ஓ. அளவு.— ௩ - முதல் ம - அல்லது ௰௫ - கிரே. தேனிலாவது, அல்லது சவுக்காரத்தைச்சேர்த்து மாத்திரைகளாய் ஆவது செய்து கொடுக்கவேண்டியது.

**POTASSÆ SULPHAS.** *Sulphate of Potash.* (KO, $SO_3 = 88$)

பொட்டாஸ்ஸிஸல்பஸ். ஸல்பேட் ஆவ் போடாஷ்.

DESCRIP. AND PROP. விவரணம். குணம்.—இந்தஉப்பு வெள்ளையாய் வாசனையில்லாமல் இருக்கும்; கசப்பும் உப்பும் கரிக்கிற சுவையை யுடையது; சிறிய கற்கண்டுப்பொடியைப்போலிருக்கும் ; காற்றில் ரூபம்மாறாது; சாராயத்தில் கரையாது, ஜலத்தில் கொஞ்சமாய்க்கரையும்.

PREP. Take of the salt remaning after the preparation of pure Nitric Acid ℔ij. Dissolve in boiling water C ij. ; add White Marble powdered q. s. till effervescence ceases. Filterand evaporate till a pellicle forms ; set aside to crystallize ; pour off the liquor, and dry the crystals.

செய்முறை.—பொட்டிலுப்புத்திராவகத்தைச் செய்யும்போது, அடியில் நிற்கிற உப்பில், உ - பவு. எடுத்துக்கொண்டு, உ - காலன் கொதிக்கக்காய்ந்த வென்னீரில்கரைத்து, வெள்ளைக்கல்மாவு தேவையானதை பொங்கி நுரைஎழும்புதல் நிற்க

எவ்வளவு தேவையோ அவ்வளவு சேர்த்து, வடிகட்டி மேலாகஎடுகட்டுகிற வளா யில் சுண்டக்காய்ச்சி உப்புஅடியில் கட்டும்படி அசையாமல் வைக்கவேண்டியது, பிறகு ஜலத்தை இறுத்துவிட்டு உப்பைஉலர்த்திக் கொள்ளவேண்டியது.

ACTION. Mild Cathartic, Alterative, Deobstruent.

செய்கை.—அல்ப விரேசனகாரி, வியதாபேதகாரி, கட்டிகளைக்கரைக்கும்.

USE. It is seldom used alone ; it is frequently combined with rhubarb ; it is also used as an alterative in liver obstructions.

உபயோகம்.—இதைத்தனியாய் உபயோகிக்கிறதில்லை ; ரேவல்சின்னியுடன் சேர்த்துச்கொடுக்கலாம் ; பித்தத்துச்குரியவியாபகம் தடைபட்டு இருக்கும்போதும் உபயோகிக்கலாம். டோவர்ஸ்பவுடர் (Dover's powder) என்னும் சூரணத்தில் சேரும் சரக்குகள் நன்ருய்ச் சூரணமாகிறநிமித்தம், இந்தஉப்பை அதில்சேர்க்கிறது.

DOSE. As an alterative, 10 to 20 grains; as a purgative, 1 to 4 drachms.

ஒ. அளவு.—௰ - முதல் ௨௰ - கிறே. கொடுத்தால் வியாதிகளை ஹரிக்கும். ௧ முதல் ௪ - திரா. கொடுத்தால் பேதியாகும்.

**POTASSÆ BISULPHAS.** *Bisulphate of Potash.* ($KO,2SO_3+2HO=146$)

**பொடாஸ்ஸி பைஸல்பஸ். பைஸல்பேட்ஆவ் போடாஷ்.**

இந்த உப்பு வெள்ளை ; புளிப்பும் கசப்பும் உள்ளது ; இதற்கு வாசனையில்லை ; ஜலத்தில் சீக்கிரத்தில் கரையும், சாராயத்தில் கரையாது ; காற்றில் ரூபம் மாருது.

PREP. (Dissolve of the salt remaining after the distillation of pure Nitric Acid ℔ ij. in boiling Aq. O vj. Add sulphuric Acid f℥vij. and fʒj., concentrate the solution, cool, and crystallize.)

ACTION. Purgative, Antiphlogistic.

செய்கை.—விரேசனகாரி, திரிதோஷஹரகாரி.

USE. "Effervescing Purgative with an equal weight of cryst. Carb. of Soda."

உபயோகம்·—கார்பொனேட் ஆவ் ஸோடா என்னும் உப்புடன் சேர்த்து பொங்கி நுரை எழும்பச்செய்து கொடுக்கிறது.

DOSE. ℈j.—ʒij. diluted with water, &c.

ஒ. அளவு.—௨௰ - கிறே. முதல் ௨ - திரா. அளவுக்கு ஜலம் சேர்த்துக் கொடுக்கலாம்.

℞ Potassæ Bisulphatis, Sodæ Carbonatis, ana ʒj. Dissolve separately in two ounces of water, mix, and take while effervescing. *Refrigerant; Laxative.*—DR. BARKER.

பைஸல் பேட்ஆவ்போடாஷ், ௧ - திரா. கார்பொனேட்ஆவ்போடாஷ், ௧ -திரா. வெவ்வேருக ௨ - அவு. ஜலத்தில் கரைத்து ஒன்ருய்க் கலந்தால் பொங்கும், அப்போது குடிக்கவேண்டியது.

**Pulvis Salinus Compositus.** *Compound Saline Powder.*

**கம்பவுன் ஸெலைன் பவுடர்.**

PREP. (Take Sulphate Potash ℥iij., Sulph. Magnesia and pure Mu-

riate of Soda, āā ℥iv. Dry the salts separately with a gentle heat; pulverise and triturate them well together. Preserve the compound in well-stopped vessels.)

செய்முறை — ஸல்பேட்ஆவ்பொடாஷ், ௬ - அவு. இந்துப்பு, ௪ - அவு. கறி உப்பு, ௪ - அவு. இவைகளை வெவ்வேறாய் வெதுப்பி யுலர்த்தி, தூள்செய்து ஒன்றாய்க் கலந்து நன்றாய் அரைத்து, காற்றுப்புகாத கல்சார்க்கு உடைய புட்டிகளில் போட்டு பத்திரப்படுத்திக்கொள்ளவேண்டியது.

ACTION. Use. "This is an useful combination of several salts, in which some degree of stimulant is combined with the cathartic properties. It may be beneficially taken in costive habits."

செயகை. உபயோகம்.—இந்தக் கலவை உப்பு, வெப்ப குணத்தோடு பேதியாகச்செய்யும் மலபந்தக்காரர்கள் இதைச் சாப்பிட்டால் நன்மைசெய்யும்.

**POTASSÆ NITRAS.** *Nitrate of Potash. Nitre. Saltpetre.* ($KO, NO_5 = 102$)

**வெடி உப்பு. இதுவே பொட்டிலுப்பு. கம்பி உப்பு. யவக்ஷாரம்.**

DESCRIP. AND PROP. **விவரணம். குணங்கள்.**—வெடி உப்பு பிறவிச் சரக்கு; இந்தியாதேசத்தில், இது பூமியில் விளைகிறது. சுத்திசெய்யாத வெடி உப்புக்கு rough or crude saltpetre என்றும், சுத்திசெய்ததற்கு East India refined saltpetre என்றும் பெயர். யூரப்தேசத்தில் இதைச்செய்கிறார்கள்:—வியர்த்தமாய் போகிற பூண்டுகள், சீவராசி வகைப் பதார்த்தங்கள், சுண்ணும்பு உள்ள வஸ்துக்கள், பலவகை மண்ணுகள், இவைகளைப் பள்ளத்திலபோட்டு, மூத்திரம் ஊற்றிக் கலந்து, காற்றுப்படவைத்தால், பலவகை உப்புகள் உண்டாகின்றன; இதுகளில் இருந்து வெடி உப்பைச் சேகரிக்கிறார்கள். சுத்தியான வெடி உப்பு வெள்ளை; பளிங்கு; குளிர்ச்சி, கசப்பு, விறுவிறுப்பு உள்ள சுவையை உடையது; எளிதில்பொடியாகும்; இதற்கு வாசனையில்லை; ரூபம் காற்றில் மாறாது; ஜலத்தில் கரையும். வெடிமருந்தில் இந்த உப்பு சேருகின்றது.

**Potassæ Nitras Purum. வெடி உப்புச்சுத்தி.**—௪ - பவு. கடையில் விற்கிற பொட்டிலுப்பை, ௨ - பைன்ட். கொதிக்கக் காய்ந்த நீரில் கரைத்து, குளிரவைத்துத் துழாவினால் உப்பு அணுக்களாகக்கட்டும். பிறகு ஜலத்தைவடித்துவிட்டு, ௬ - பைன்ட். குளிர்ந்த ஆவிநீர் ஊற்றி உப்பைக்கழுவி, போன் அடுப்பில் (oven) வைத்து உலர்த்திக்கொள்ளவேண்டியது.

ACTION. Refrigerant, Diuretic. In large doses an irritant poison. *Ext.* Refrigerant and Detergent.

செய்கை.—சீதளகாரி, மூத்திரவர்த்தகாரி. அதிகமாய்ச்சாப்பிட்டால் விஷமிக்கும். ஜலத்தில்கரைத்து மேலுக்குப்போட்டால், உஷ்ணம் தணியும், விரணங்களைச்சிவப்பிக்கும்.

USE. In acute rheumatism, dropsies, fevers, hæmoptysis, dyspnœa, gonorrhœa, scurvy.

உபயோகம்.—சந்திகசிலேஷ்மம், நீர்க்கோவை, ஜுரங்கள், ரத்தகாசம், மூச்சடைப்பு, பிரமேஹம், ஸ்கர்வி முதலிய ரோகங்களுக்கு பொட்டிலுப்பை உபயோகப்படுத்தலாம். க - அவு. வெடிஉப்பை, தனிப்படவாவது, கொஞ்சம் ஜலத்தில்

கரைத்தாவது உட்கொண்டால், வயிற்றறைப்புண்ணுக்கும்; சிலவேளை பிராணஅபாயம் நேரிடுவதும்உண்டு. மேற்கண்டஅளவை, க - அல்லது உ - பைமி. ஜலத்தில் கரைத்துக்கொடுத்தால், மூத்திரம் அதிகப்படும், தேஹம் குளிர்ச்சியாகும், வியர்வைப்பிறக்கும்; ஆகையால் பொட்டிலுப்பை எவ்விதமாய் உபயோகப்படுத்துகிறோமோ அவ்விதமாய் குணத்தைக்காட்டும். இந்தஉப்பைச் சாப்பிடுகிறகாலங்களில் ஜலம் அதிகமாய்க்குடித்தால் மூத்திரம் அதிகப்படும்; டார்டர் மெடிக் (Tartar Emetic) என்னும் வாந்திஉப்பைச்சேர்த்துக்கொடுத்தால், வியர்வையைப்பிறப்பிக்கும். நவக்ஷாரம் சேர்த்து ஜலத்தில்கரைத்து கிலேதமாகச்செய்து (Cold lotion) வீக்கங்களுக்குப் போடலாம். வெடிஉப்புகரைத்த ஜலம் வாய்கொப்பளிக்க உதவும்.

Dose. and mode of administration. "gr. v.—gr. xv. with sugar, in cold water, in mucilaginous drinks, in jam or in honey; as a diaphoretic and sedative, in doses of from ℈i. to ʒi. dissolved in some warm fluid, as whey, congee water, &c.; but in acute gonorrhœa or rheumatic fever, 1 drachm to 1 ounce is given, much diluted with water."

ஔ. அளவு. அனுபானம்.—ரு - முதல் ௰ரு - கிறே. அளவுக்கு சருக்கரை, குளிர்ந்தஜலம், தேன், இவைகளில் எதிலாவதுச் சேர்த்துக்கொடுக்கலாம். உ௰ - முதல் ௬௰ - கிறே. அளவுக்கு முறிந்தபால் தண்ணீரிலாவது, சுடுகஞ்சியிலாவது கொடுத்தால் வியர்வை உண்டாகும். பிரமேகம், கீல்வாதசுரம், இவைகளுக்கு க - திரா. முதல், க - அவு. அளவுக்கு அதிகஜலம்விட்டு வேகத்தைக்குறைத்து கொடுப்பதுண்டு.

Antidotes. Remove poison from stomach, allay irritation, and subdue inflammation. விஷமிக்கும்படி பொட்டிலுப்பைத் தின்றுவிட்டால் வாந்திக்குக்கொடுத்து அதை வெளிப்படுத்தவேண்டியது; எரிச்சலைச் சமனப்படுத்தவேண்டியது; வயிற்றுப்புண்ணை ஆற்ற வேண்டியது.

℞ Pot. Nit. ʒi., Pot. Carb., Mag. Carb. āā ʒss., Sacch. Lactis, ʒvj., M. Dose, a teaspoonful largely diluted every two hours, *In Acute Rheumatism.*—Dr. Greiner.

சந்திகவிலேஷ்ம ரோகத்துக்கு:—பொட்டிலுப்பு, க - திரா. பொடாஸ்ஸிகார்பொனஸ், ൧ - திரா. மாக்னீஷியகார்பொனஸ். ൧ - திரா. வெள்ளைச்சருக்கரை, ௬ - திரா. இ. மி. ஒருதேயிலைக்கரண்டியளவு ஜலம் மெத்தவிட்டு விளாவி, உ - மணிநேரத்துக்கு ஒருதரம் கொடுக்கும்படி, டாக்டர் கிரீனர் என்பவர் சொல்லுகிறார்.

℞ Potassæ Nitratis, gr. x., Sacchari, ℈i. Misce :—fiat Pulvis sumendus e cyathus vevario Aq. Menthæ. *An agreeabl drink in Fevers.*—Dr. Druitt.

ஜுரத்தில் தாகத்தை அடக்க:—வெடிஉப்பு - ௰ - கிறே. சருக்கரை - உ௰ - கிறே. இ. மி. ஒரு ஒயின்கிளாஸ் பெப்பர்மெண்டு ஜலத்தில் கரைத்து கொடுக்கும்படி, டாக்டர் ட்ரூயிட் என்பவர் சொல்லுகிறார்.

℞ Potassæ Nitratis, ʒss.—ʒi., Decocti Hordei, Oiss., Sacchari, q. s. ad gustum conciliandum. The whole to be taken in the day, in divided doses. *In Acute Rheumatism.*—Gendrin.

சந்திக சிலேஷ்மரோகத்துக்கு:—வெடிஉப்பு ൧—௧. அவு. பார்லிஅரிசிகஞ்சித் [illegible] தண்ணீர், ௩൧ - [illegible]. சருக்கரை இனிப்புக்கு எவ்வளவு தேவையோ அவ்வளவு. இ. மி. இதைக் கொஞ்சங்கொஞ்சமாய் பகலில் [illegible] டாக்டர் ஜென்டிரின் சொல்லுகிறார்.

℞ Nitre ʒiss., Honey ℥ij., Rose water ℥vj., Mix, and make a gargle, to be used frequently. *In inflammatory sore throats.*
கண்டதாபன ரோகத்துக்கு:—பொட்டிலுப்பு, கஐ - திரா. தேன், உ - அவு. பந்நீர், சு - அவு. இ. மி. அடிக்கடி வாயைக் கொப்புளித்தால் சொஸ்தமாகும்.

℞ Nitre 1 dr., Almond emulsion. 6 oz., Compound spirit of Juniper 1½ oz., Vinegar of Squills, 6 dr., Mix. Dose, a table spoonful occasionally.—*Diuretic Mixture.*
வெடிஉப்பு, க - திரா. வாதுமைப்பருப்புப்பாகு, சு - அவு. காம்பவுன் ஸ்பிரிட் ஆவ் ஜூனிபர், கஐ - அவு. நரிவெங்காயப்பாவணக்காடி, சு - திரா. இ. மி. ஒரு கரண்டிவீதம் பொருத்துப்பொருத்துச்சாப்பிட்டால், மூத்திரம் அதிகப்படும்.

℞ Nitre, 10 gr., Carb. of Potash, 20 gr., Fresh lemon-juice ½ oz., Camphor Mixture 1 oz., Syrup of orange peel 1 dr. Mix and make a draught.
வெடிஉப்பு ய - கிறே. கார்பொனேட்ஆவ் போடாஷ், உய - கிறே. அப்போது பிழிந்த எலுமிச்சம்பழரசம், ஐ - அவு. கர்ப்பூரஜலம், க - அவு. ஆரஞ்சிப்பழத்தோல் பாணிதம், க - திரா. இ. மி. ஒரே தடவையாய் குடித்துவிடவேண்டியது.

℞ Potassæ Nitratis, ʒj., Camphoræ, Confect. Rosæ, ana ʒss. Misce. Divide in pil. gr. iv. (2 to 10 a day.) *In Gonorrhœa.*—GUIBOURT
பொட்டிலுப்பு, க - திரா., கர்ப்பூரம், ஐ - திரா. குல்கந், ஐ - திரா. இ. மி. ச - கிறே. இடை உள்ளமாத்திரைகளாகச் செய்து, பிரமேகத்துக்கு உ - ய - வீதம் ஒரு தினத்துக்குக்கொடுக்கும்படி, கைபர்ட் துரை சொல்லுகிறார்.

℞ Potassæ Nitratis, ℈j., Ammon. Hydrochlor. gr. xij. Misce: fiat pulvis, bis, quaterve in die ex aquæ ℥iij. sum. *As a Diaphoretic in Inflammatory Fever.*—DR. THOMAS.
வெடிஉப்பு, உய - கிறே. நவச்சாரம், யஉ - கிறே. இ. மி. பொடியாக்கி ங - அவு. ஜலத்தில், தாபிதச்சுரத்தில் வியர்வைபிறக்கத் தினத்துக்கு உ - ங - ச - வேளைக்கொடுக்கும்படி, டாக்டர் தாமஸ் என்பவர் சொல்லுகிறார்.

℞ Potassæ Nitratis, ʒiss., Antim. Potassio Tart. gr. j. Hydrarg. Chloridi, gr. iv. Misce, et divide in pulv. viij. sumat j. Secundis horis. *Diaphoretic in Fevers.*—DR. DEWEES. (U. S.)
பொட்டிலுப்பு, கஐ - திரா. ஆன்டிமொனி பொடாஸ் டார்ட், க - கிறே. ரஸபஸ்மம், ச - கிறே. இ. மி. அ. பங்காக்கி, க - பங்கை, சுரத்தில் வியர்வைபிறக்க உ - மணிக்கொருதரம் கொடுக்கும்படி, டாக்டர் டிவீஸ் என்பவர் சொல்லுகிறார்-

Inhalation of the fumes of burning nitre in *Spasmodic Asthma.*—DR. WARING. சுவாஸகாசரோகத்துக்கு:—பொட்டிலுப்பை அதிகமாய் ஜலத்தில் கரைத்துக்கொண்டு அதில் ஒரு தளமான கடுதாசியைத்துவைத்து சற்றுநேரம் ஊறவைத்து, பிறகு காற்றில் உலர்த்திவைத்துக்கொண்டு, இரைப்புவரும்போது, கடுதாசியை ஒரு சுங்கானில்வைத்துக்கொளுத்திப் புகையை உட்கொண்டால் உடனே ரோகம் சமனப்படும்.

℞ Mist. Amyg. ℥xij., Potass. Nit. ʒij., Ant. Pot. Tart. gr. j., T. Camph. Co. ℥ss., M. Dose, a table spoonful every hour. *In Acute Bronchitis.*—DR. GRAVES.
வாதுமைப்பருப்புப்பாகு, யஉ - அவு. வெடி உப்பு, உ - திரா. ஆன்டிமொனிடார்ட், க - கிறே. கலவை கர்ப்பூரப்பாவனத்திரவம் ஐ - அவு. இ. மி. ஒரு டேபில்ஸ்பூன் என்னும் கரண்டிவீதம் மார்புச்சளி ரோகத்துக்கு மணிமணிக்குக் கொடுக்கும்படி, டாக்டர் கிரேவ்ஸ் என்பவர் சொல்லுகிறார்.

℞ Potas. Nit. gr. x., Alum. gr. v. M. ft. pulv. ter in die sumend. *In Leucorrhœa.*—Dr. Dewees.

பொட்டிலுப்பு, ௰-கிறே. படிக்காரம், ரு-கிறே. இ. மி. பொடிசெய்து தினத்திற்கு ௩-வேளை ஸ்திரீகளுக்குக் காணுகிற எலும்புருக்கி ரோகத்துக்குக் கொடுக்கும்படி, டாக்டர் டுவீஸ் என்பவர் சொல்லுகிறார்.

அஷ்டகுன்மம், சூதகக்கட்டி, கல்லடைப்பு, நீர்க்கட்டு, நீர்ச்சுருக்கு, வாதவலி, மகோதரம், கபம், முதலியரோகங்கள் வெடியுப்புக்கொடுத்தால் தீருமென்று பதார்த்தகுணசிந்தாமணியில் கண்டிருக்கிறது.

**POTASSÆ CHLORAS.** *Chlorate of Potash.* (KO, $ClO_5$=124)

பொடாஸ்ஸி குளோரஸ். குளோரேட்ஆவ்பொடாஷ்.

Descrip. and Prop. விவரணம். குணங்கள்.—குளோரேட்ஆவ்பொடாஷ் என்கிற உப்பு, வெள்ளையாய் தகடுகளைப்போலிருக்கும்; வாயில்போட்டால் பொட்டிலுப்பைப்போல் குளிர்ச்சியாய் சிலசிலவென்று இருக்கும்; காற்றுப்பட்டால் கெட்டுப்போகாது; ஜலத்தில் கொஞ்சமாய்க்கரையும்; இருட்டில்தேய்த்தால் பிரகாசிக்கும்; நெருப்பில்போட்டால் வெடிஉப்பைப்போல் சிடசிடவென்று பொரியும்; ஆனால் கந்தகம், கரி, திமுருகல்பாஷாணம் இவைகளில் எதையாவதுசேர்த்து இரும்புக்கலுவத்திலிட்டு அரைத்தால், அதிகசத்தத்தோடு வெடிக்கும். நெருப்புக்குச்சிகளும் (lucifer matches), வெடியல்மருந்துகளும் (detonating compounds செய்ய இந்தஉப்பு தேவையானதால் விஸ்தாரமாய்ச்செய்யப்படுகிறது.

Prep. (Chlorate of Potash is prepared by passing, to saturation, a current of *chlorine* through a solution of 15 parts of *Carbonate of Potash* in 38 of cold *water*. The solution is then exposed to the air for a few days, agitating occasionally to allow of the escape af any free chlorine. Scales and crystals of Chlorate of Potash are deposited. If these are separated, more may be obtained by evaporating the mother liquor. All may be purified, if washed with cold, dissolved in twice their weight of hot water, and re-crystallized.)

செய்முறை.—௧௫-பங்கு கார்பொனேட்ஆவ்பொடாஷ் என்னும் உப்பை, ௩௮-பங்கு குளிர்ந்த ஜலத்தில் கரைத்து, அந்தஜலம் சம்பூரணமாகும்படி, குளோரின்வாயுவைப் பிரவேசிக்கச்செய்து, பிறகு ஜலத்திற்கலவாமல் இருக்கிற அதி வாயு போய்விடும்படி அடிக்கடிகலக்கி, சிலநாள் காற்றோரவைத்தால், உப்பு அடியிற்படியும். உப்பை எடுத்துக்கொண்டு, ஜலத்தைச்சண்டக்காய்ச்சினால் உப்பு அதிகமாய் அகப்படும். சேகரித்த உப்பை எல்லாம் குளிர்ந்தஜலத்திற்கழுவி, உப்பு இருக்கிற இடைக்கு இரண்டத்தனை வெந்நீர்விட்டுக்கரைத்து, மறுபடியும் உப்பு கட்டும்படிச்செய்தால் உப்பு சுத்தியாகும்.

Action. Refrigerant, Diaphoretic, Diuretic, Supplier of Oxygen.

செய்கை. சீதளகாரி, சுவேதகாரி, மூத்திரவர்த்தனகாரி.

Use. It resembles the nitre in its action; in colds, fevers, cancrum oris, chronic syphilis, phthisis, scrofula, typhoid and eruptive fevers. It is supposed to exert a special power in purifying the blood.

உபயோகம்.—வெடிஉப்புக்கு இருக்கிற குணங்களே இதற்கும் உண்டு. ஜநுப்பு, ஜுரங்கள், கன்னப்புற்று, நாள்பட்ட குய்யரோகம், க்ஷயம், கண்டமாலை, சந்நிபாதசுரம், விஸ்போடகசுரங்கள் முதலிய ரோகங்களுக்கு இந்த உப்பைக்கொடுக்கலாம். ரத்தத்திலிருக்கிற தோஷங்களை இந்த உப்பு, நீக்கிவிடுகிறதென்று சிலர் எண்ணியிருக்கிறார்கள்.

Dose. gr. x.—gr. xv.
ஒ. நிறை.—௰. முதல், ௰௫-கிறேன்.

℞ Potassæ Chloratis, gr. viii., Sodii Chloridi, gr. xx., Sodæ Bicarb. gr. xxx. Misce : ft. pulvis. Sumat talem 2dis vel tertiis horis. *In low Febrile Cases, & in Cholera.*—Dr. Stevens.

குளோரேட்ஆவ்போடாஷ், அ-கிறே. கறிஉப்பு, உ௰-கிறே. பைகார்பொனேட்ஆவ்ஸோடா, ௩௰-கிறே. இ. மி. பொடிசெய்து, சந்நிபாதசுரம், வாந்திபேதி இந்த வியாதிகளுக்கு உ-௩-மணிக்கொருதரம்கொடுக்கும்படி, டாக்டர் ஸ்டீவின்ஸ் என்பவர் சொல்லுகிறார்.

℞ Chlorate of Potash as a daily drink, in *Continued and typhoid fever.*—Dr. Watson.

விடாக்காய்ச்சல், சந்நிபாதசுரம் இவைகளில் காணுகிறதாகந்தணிய:—க திரா. குளோரேட்ஆவ்போடாஷ் என்னும் உப்பை, க-பைமி. ஜலத்தில்கரைத்து, தாகத்துக்குக் கொடுக்கும்படி, டாக்டர் வாட்சன் என்பவர் சொல்லுகிறார்.

℞ Potas. Chlor. ℈i., Infus. Gentianæ, f℥iss., M. ft. haust. ter in die sum. *In Phagedenic Ulcerations, and those of Secondary Syphilis.*—Mr. Sayle.

பரவியியாபிக்கிற விரணங்கள், மேஹரோகம் இவைகளுக்கு:—குளோரேட்ஆவ்போடாஷ், உ௰-கிறே. ஜென்ஷன் வெந்நீர்க்கஷாயம், கஉ-அவு. இ. மி. திராவட்செய்து, தினத்துக்கு ௩-வேளை கொடுக்கும்படி, ஸேலீதுரை சொல்லுகிறார்.

**POTASSÆ TARTRAS.** *Tartrate of Potash.* (2 KO, T.=228)

பொடாஸ்ஸிடார்ட்ரஸ். டார்ட்ரேட்ஆவ்போடாஷ்.

Prep. (Dissolve *Carb. Pot.* ℥xvj. or q. s. in *boiling Aq.* Ovj., add *Bitartrate of Potash* powdered ℔iij. till neutralized. Boil, filter, and boil, till a pellicle floats. Set aside to cool and crystallize. The remaining liquor will yield more crystals by further concentration and cooling.)

செய்முறை.—சு-பைமி. கொதிக்கக்காய்ந்த வெந்நீரில், ௰சு-அவு. அல்லது தேவையான கார்பொனேட்ஆவ்போடாஷ் என்னும் உப்பைக்கரைத்து, ௩-பவு. பொடிசெய்த திராக்ஷஉப்பை, சத்து நூட்ரலைஜ்ஆகிறவரையில் சேர்த்து, கொதிக்கவைத்து, வடிகட்டி, ஏடுபோல் ஜலத்தின்மேல்படிகிறவரையில் மறுபடியும் காய்ச்சி, பிறகு அசையாமல் குளிரவைத்தால் உப்புகட்டும். ஜலத்தை இறுத்துக்கொண்டு மறுபடியும் சுண்டக்காய்ச்சி குளிரவைத்தால், அதிகமாய் உப்பை எடுக்கலாம்.

Action. Cathartic.
செய்கை.—விரேசனகாரி.

Use. "It acts on the whole intestinal canal, operates rapidly without much griping, is mild and efficient, and lessons the griping qaulity of senna and scammony. It is chiefly used as a mild purgative

in *dyspectic and hepatic affections, attended with some slight increased or febrile action*, and as a certain means of rendering *acid urine alkaline*."

உபயோகம்.—இந்த உப்பு குடல்முழுதும் வியாபித்து, வயிற்றில் மெத்த வேதனையை உண்டாக்காமல் சாடித்து பேதியாகச்செய்யும். நிலஆவாரை, ஸ்காமொனி, இந்த மருந்துகளுக்கு வயிற்றில் கடுப்புண்டாக்கிற துர்க்குணம், இதைச்சேர்த்துக்கொடுத்தால் நீங்கிவிடும். அஜீரணம், யகுர்திகண்டரோகங்கள், இந்த வியாதிகளில், சாந்தமாய் பேதியாகவும், மூத்திரத்தில் அதிகப்பட்டு இருக்கிற புளிப்பைமாற்றி, அதில் உப்பை அதிகப்படுத்தவும், இதை உபயோகப்படுத்தப்படும்.

Dose. In doses of ʒij.—℥i. it is purgative; in smaller doses (ʒi—ʒij) diuretic.

ஔ. அளவு.—௨-டிராம் முதல் ௧-அவுன்ஸ் கொடுத்தால் பேதியாகும்; கொஞ்சமாய், ௧-முதல், ௨-டிராம் கொடுத்தால் மூத்திரத்தை அதிகப்படுத்தும்.

℞ Pulv. Rhei, ℈ss., Potassæ Tartratis, ʒi., Confect. Aromat. ℈i., Aquæ Menthæ, f℥ij. Misce: fiat haustus, octavis horis sumendus. *In Jaundice.*—Dr. E. J. Clark,

மஞ்சட்காமாலைரோகத்துக்கு:—ரேவல்சின்னி, ௰ கிறே. பொடாஸ்ஸிடார்ட்டிரேடிஸ், ௧-கிரா. பரிமளவற்கலேகியம், ௨௰-கிறே. பெப்பர்மென்டு ஜலம், ௨-அவு. இ. மி. கிராவட்செய்து, ௮-மணிநேரத்துக்கு ஒருதரம் கொடுக்கும்படி டாக்டர் கிளார்க் சொல்லுகிறார்.

## POTASSÆ CITRAS. *Citrate of Potash.*

## பொடாஸீஸிட்ரஸ். ஸைட்ரேட்ஆவ்பொடாஷ்.

இந்த உப்பு வெகுசீக்கிரத்தில் நீராகிவிடும். தேவையானபோது, ௨௫-கிறே. பைகார்பொனேட்ஆவ்பொடாஷ் என்னும் உப்பை கொஞ்சம்ஜலத்தில் கரைத்துக்கொண்டு பிறகுஅத்துடன் ௰௭-கிறே. ஸிட்ரிக்ஆஸிட் உப்பை ஜலத்தில் கரைத்துக்கொண்டாவது, அல்லது ௧ - அவு. எலுமிச்சம்பழரசமாவது சேர்த்துச்செய்து கொள்ளவும். இதுபொங்கி நுரைஎழும்புகிறபோது குடித்துவிடவேண்டியது.

Action. Uses. "It is an excellent refrigerant, soothing or sedative, diaphoretic; *in fevers*, and is less apt to act upon the bowels than the Acetate or Tartrate. It is particularly valuable when the stomach is irritable; and when there is a tendency to diarrhœa, it may be advantageously combined with an opiate, unless otherwise contra-indicated."

உபயோகம்.—இதை ஜுரங்களில் கொடுத்தால்,குளிர்ச்சிசெய்து அழலையைத்தணிக்கும்; பேதியாகாது; குமட்டல், வாந்தி, பேதி, இவைகள் இருக்கும்போது இதைக்கொடுத்தால் மெத்த நன்மைசெய்யும், அபினியைச்சேர்த்துங் கொடுக்கலாம்.

## POTASSÆ BITARTRAS. *Bitartrate of Potash; the Acid Tartrate of Potash; Supertartrate of Potash; Cream of Tartar.* (KO, T, HO = 189)

## கிராக்ஷ உப்பு. கிரீம் ஆவ் டார்டர்.

Descrip. and Prop. விவரணம். குணங்கள்.—இந்த உப்பு கிராக்ஷப்பழத்தில் இருக்கிறது; ஒயின்சாராயம் புளிப்பேறினால், அதில் இருக்கிற சருக்கரைமாறி, சாராயமாகும்; அப்போது அதில் இருக்கிற கிராக்ஷஉப்பு சாராயத்தில் கரையாததலால், பீப்பாய் உட்சுற்றில் படிந்துவிடும்; இதற்கு ஆர்கால் (Argol) என்று பெயர். இதைச் சுத்திசெய்துக்கொண்டால் கிராக்ஷ உப்பா

கும். திராக்ஷஉப்பு வெள்ளையாயும், பொடியாயும், புளிப்பாயும் இருக்கும் ; குளிர்ந்தஜலத்தில் கொஞ்சமாயும், வெந்நீரில் அதிகமாயும் கரையும்.

ACTION. Refrigerant, Diuretic, Laxative.
செய்கை.—சீதளகாரி, மூத்திரவர்த்தனகாரி, மலகாரி.

USE. In Ascites, Beriberi, Fevers, Piles, &c.
உபயோகம்.—நீர்க்கோவைரோகங்கள், ஜுரங்கள், மூலவியாதி முதலிய ரோகங்களுக்கு உபயோகப்படுத்தப்படும். ஜாலப் சூரணத்தைச் சேர்த்துக்கொடுத்தால்,பேதியாகும். ஜலத்திற்கரைத்து தித்திப்புச்சேர்த்து, சுரங்களில் தாகத்துக்குக்கொடுக்கலாம். ௯-திரா. திராக்ஷஉப்பு, ௨-திரா. கார்பொனேட்ஆவ்ஸோடா, இவைகளை வெவ்வேறாக ஜலத்திற்கரைத்து, பிறகு மிஸ்ரமித்தால் பொங்கும், அப்போதுசாப்பிடவேண்டியது. இது மலத்தைப்போக்கும்.

DOSE. In doses of ℈i.—ʒi., frequently repeated and largely diluted, it acts as a diuretic. In doses of ʒi.—ʒij., acts as a mild aperient; and in larger doses as a hydragogue cathartic.

ஒ. அளவு.—உ௦-முதல் ௬௦-கிறே. அளவுக்கு மெத்த ஜலம்விட்டுவிளாவி அடிக்கடிகொடுத்தால், மூத்திரம் அதிகமாகும். க.—உ-திரா. கொடுத்தால் மலத்தைக்கழிக்கும். அதிக அளவில் கொடுத்தால், தண்ணி தண்ணியாய்ப் பேதியாகும்.

℞ Potassæ Supertart. Pulv. ℥ij., Potassæ Nitratis, ʒiij. Misce, et divide in partes xij. æquales. *Refrigerant.*—DR. COPLAND.
திராக்ஷஉப்பு, உ-அவு. பொட்டிலுப்பு, ௯-திரா. இ. மி. ௰உ-சரிபாகமாக்கிக் கொள்ளவேண்டியது. இதைச்சாப்பிட்டால் தேகத்தைக்குளிர்ச்சியாக்கும்.

℞ Potassæ Bitartratis, ʒss., Pulv. Scillæ, gr. ij., Pulv. Zingiberis, gr. iv. Misce: fiat pulv. octavis horis sumendus. *In Ascites.*—DR. A. T. THOMSON.
திராக்ஷஉப்பு, ൦-திரா., நரிவெங்காயப்பொடி, உ-கிறே., சுக்குத்தூள், ௪-கிறே., இ. மி. மகோதரத்தில் அ-மணிக்கொருதரம் கொடுக்கச்சொல்லி டாக்டர் தாம்ஸன் சொல்லுகிறார்.

"Take of.— Cream of tartar, ½ an ounce., White Sugar, 4 ounces., Fresh lemon peel, ½ an ounce., Boiling water, 3 pints. Mix and strain. —*Imperial drink.*"
திராக்ஷஉப்பு, ൦-அவு.,வெள்ளைச்சருக்கரை, ௪-அவு. எலுமிச்சம்பழரசம், ൦-அவு. வெந்நீர், ௯-பையிண். இ. மி. வடிகட்டிக்கொண்டு சுரத்தில் தாகத்துக்குக்கொடுக்கலாம்.

"Take of Sublimed sulphur ½ ounce., Cream of tartar, 1 ½ drachm., Confection of Senna 1 Ounce., Syrup, sufficient quantity to form an electuary. A tea-spoonful may be taken at bedtime.—*Electuary for piles.*"
கந்தகப்பதங்கம், ൦-அவு.; திராக்ஷஉப்பு, க൦-திரா., நிலாவரைலேகியம், க-அவு. சருக்கரைப்பாகு வேண்டியளவு. இ. மி. இந்தலேகியத்தை ஒரு தேயிலைக்கரண்டியளவு, மூலரோகத்தில் சாப்பிடலாம்.

"A cream of tartar whey may be made by adding to a pint of milk (when it begins to boil) two drachms of cream of tartar; the pan must then be removed from the fire, the whole suffered to cool, and the whey separated from the curd by straining: this whey, diluted with warm water, is an excellent drink in dropsy."

௧. பையி. பால் காய்ந்துகொதிக்கும்போது, உ-கிரா. கிராக்ஷஉப்பைச்சேர்த்து, பிறகு பால்பானையை, அடுப்பைவிட்டிறக்கி குளிரவைத்து, வடிகட்டி, ஜலத்தை மாத்திரம் எடுத்துக்கொண்டு, வெந்நீர்விட்டுவிளாவி நீர்க்கோவைரோகத்தில் தாகத்துக்குக்கொடுக்கலாம்,

Laxative lozenges for children.—௭-அவு. கிராக்ஷஉப்பு, ௪ அவு. மேஞு, ௰-அவு. ஜலம். இவைகளை காய்ச்சி பதத்தில் வரும்போது, ௰-அல்லது ௰௨-கிறே. எடைக்கு பில்லைகள் செய்துகொண்டு குழந்தைகளுக்குக்கொடுத்தால், வயிறுகழியும்.

℞ Cambog. gr. i.—ij., Potas. Bitart. ℥i., Aq. Menth. P. f℥ij., M. ft. haust. bis terve die sumend. *In dropsical affections.*—Dr. Watson.

மக்கி ௧-முதல் உ-கிறே. கிராக்ஷஉப்பு, ௧-கிரா. பெப்பர்மெண்டுஜலம், உ-அவு. இ. மி. கிரவட்செய்து, தினத்தில் உ-௩-வேளை, நீர்க்கோவைரோகத்துக்குக் கொடுக்கும்படி, டாக்டர் வாட்சன்துரை சொல்லுகிறார்.

The Cream of tartar with Digitalis, Squills, &c. in *dropsical affections.* கிராக்ஷஉப்புடன், டிஜிடேலிஸ், நரிவெங்காயம், முதலியவைகள் சேர்த்து நீர்க் கோவைரோகங்களுக்குக் கொடுக்கலாம்.

## POTASSÆ ACETAS. *Acetate of Potash.* (KO, A = 99.)

## பொட்டாஸ்ஸி அஸிடஸ். அஸிடேட்ஆப்பொடாஷ்.

Descrip. and Prop. விவரணம். குணங்கள்.—இந்த உப்பு காற்றுப் பட்டால் நீராகிவிடும். வெள்ளையாய் கம்பிகளைப்போல்இருக்கும்; வாசனையில்லை; வாயில்போட்டால் கிருவிரொன்று உவர்ப்பாய் இருக்கும். ஜலத்திலும், சாராயத்திலும் கரைந்துவிடும். ஈரம்பட்டால், காடிவாசனையைத்தரும்.

Prep. (Acetic Acid f℥xxvj., Carb. of Potash ℔j., or q. s. Distilled water f℥xij.; to the Acid mixed with the water, gradually add the carbonate to saturation, then strain. Evaporate the solution in a sand-bath, the heat being cautiously applied, until the salt is dried.)

செய்முறை.—உகு-அவு. அஸிடிக்ஆஸிட் என்னும் காடியில், ௰உ-அவு. தீநீர் விட்டுக்கலந்து, ௧-பவு. அல்லது தேவையான கார்பொனேட்ஆப்பொடாஷ் என்னும் உப்பை சம்பூரணமாகும்படி, கொஞ்சங்கொஞ்சமாகச் சேர்த்து பிறகு வடிகட்டி வாலுகாயந்திரத்தில்வைத்து, தண்ணீர்சுண்டி உப்புஉலரும்படி பத்திரமாய் எரிக்கவேண்டியது.

Action. Diuretic; in large doses acts as a purgative.
செய்கை.—மூத்திரவர்த்தனகாரி ; அதிகஅளவில்கொடுத்தால் பேதியாகும்.

Use. In dropsy, lepra, diseases of the liver, gonorrhœa, &c. Its principal use in medicine is to induce alkalinity of the urine, and to act as a diuretic.

உபயோகம்.—இந்த உப்பு வயிற்றைக்கடுக்கும், வாயுசெய்யும் ; ஜலத்தை அதிகமாய்ச்சேர்த்துக்கொடுத்தால், மூத்திரத்தை அதிகப்படுத்தும், நீர்க்கோவை,பெருவியாதி, யகுர்திகண்டரோகம், பிரமேகம், முதலிய ரோகங்களுக்கு உபயோகப் படுத்தப்படும். முக்கியமாய் இதை மூத்திரத்திலிருக்கிற புளிப்பைமாற்றி, உப்பாக்கவும், மூத்திரத்தை அதிகப்படுத்தவும், கொடுக்கப்படுகிறது.

DOSE. ℈ss.—ʒj. as a diuretic. ʒi.—ʒiij. as a cathartic.

ஒ. அளவு.—௰-முதல் ௬௰-கிறே. கொடுத்தால், மூத்திரம் அதிகமாகும். ௧-முதல் ௩-திரா. கொடுத்தால், பேதியாகும்.

℞ Potassæ Acetatis, ʒss.—ʒi., T. Digitalis, ♏v., T. Canthar. ♏x., Spir. Æth. Nit. fʒss., Aquæ ad f℥iss., Misce: fiat haustus, ter in die sumendus. *Diuretic in Dropsy.*—DR. BUDD.

பொட்டாஸ்ஸி அஸிடஸ் ௨.—௧-திரா. டிங்சர்டிஜிடேலிஸ், ௫-மினிம். எசிவண்டு பாவனத்திரவம், ௰-மினிம். ஸ்பிரிட் ஈதர் னைட்டர், ௨-திரா. ஜலம், ௧௨-அவு. இ. மி திராக்ட்செய்து, தினத்துக்கு ௩-வேளை நீர்க்கோவை ரோகத்தில் கொடுக்கும்படி, டாக்டர் பட் என்பவர் சொல்லுகிறார்

## SODIUM or NATRIUM. ($Na=2.4$)

பூநீர்ச்சத்து. சவட்டுமணௌப்புச்சத்து. காரச்சத்து. ஸோடியம். நேட்ரியம்.

DESCRIP. AND PROP. விவரணம் குணங்கள்.—இந்தபதார்த்தம் மெழுகுபோல் மெதுவாயும், வெள்ளியைப்போல் பிரகாசமாயும் இருக்கும்; ஜலத்தில் போட்டால் ஹிஸ்சென்ற ஓசையுடன் பத்திஎரியும்; ஜலத்திலிருக்கிற ஆக்ஸிஜென் வாயுவோடுசேர்ந்து, சோடாஎன்னும் பதார்த்தமாகிவிடும். காற்றுப்பட்டால் மங்கல்நிறமாகும். இதை நாப்தா, (Naphtha) என்னும் பதார்த்தத்திற்போட்டுப் பத்திரப்படுத்திவைக்கவேண்டியது.

## SODA. ($NaO=32.$)

(Soda is obtained by adding Caustic Lime to a solution of Carbonate of Soda; a precipitate takes place of Carb. of Lime. The Soda being left in solution, may, by evaporation, be obtained as Hydrate of Soda.) ($NaO, HO=41.$)

ஸோடா (காரம்) என்னும் பதார்த்தத்தை எடுப்பது எவ்விதமெனில், கார்பொனேட்ஆவ்ஸோடா என்னும் உப்பை ஜலத்தில் கரைத்துகொண்டு அதில் சுண்ணும்பைச்சேர்த்தால், கார்பொனேட் ஆவ் லைம் என்னும் சுண்ணும்பு அடியில்படிந்து, ஸோடாஎன்னும்உப்பு ஜலத்தில் கரைந்திருக்கும்; அந்த ஜலத்தை சுண்டக்காய்ச்சினால், ஹைட்ரேட் ஆவ் ஸோடா என்னும் உப்பு உண்டாகும்.

DESCRIP. AND PROP. விவரணம். குணங்கள்.—இந்த உப்பின்நிறம், ஊதா; உவர்ப்பும், விறுவிறுப்பும், காரமும்உள்ளதாய்இருக்கும்; இது ஜலத்திலும், சாராயத்திலும் கரையும்; காற்றுப்பட்டால் தூளாகிவிடும். போடாஷ்என்கிற பதார்த்தத்துக்கு உடையகுணங்கள், ஸோடாவுக்கும்உண்டு. கண்ணாடி, சவுக்காரம், இவைகள் செய்வதில், ஸோடாஉப்பைச் சேர்ப்பதுண்டு. சோடாஉப்பைச் சேர்த்துச் செய்யும் கண்ணாடி, போடாஷ்உப்புச்சேர்த்துச்செய்த கண்ணாடியைப்பார்க்கிலும், மெத்தஉறுதியானது. ஸோடாஉப்புகள், போடாஷ்உப்புகளைப்பார்க்கிலும், ஜலத்தில் அதிதீவிரத்தில் கரைந்துவிடும்.

ACTION AND USE. Similar to those of Potash.

செய்கை. உபயோகம்.—பொடாஷ்என்னும் பதார்த்தத்துக்குடைய குணங்களே, ஸோடாவுக்கும்உண்டு.

**Liquor Sodæ.** *Solution of Soda.* உழவுத்தண்ணீர்.

Prep. (Take of crystallized *Carb Soda*, ℥xxxi., Lime, ℥ix., and boiling *Dist. Water*, C. j. Prepare as Liq. Potassæ.)

செய்முறை.—கார்பொனேட் ஆவ்ஸோடா, ௩௧-அவு. சுண்ணாம்பு, ௯-அவு. கொதிக்கக்காய்ந்த நீர், ௧-காலன். லைகர்பொடாஸ்ஸி என்னும் மருந்தைச் செய்வதைப்போல், இதைச் செய்துகொள்ளவேண்டியது.

Use. உபயோகம்.— இதைமுக்கியமாய் அவுஷதங்கள்செய்வதற்கு உபயோகிக்கப்படும்.

## SODÆ CARBONAS. *Carbonate of Soda.*

## ஸோடிகார்போனஸ். கார்பொனேட் ஆவ் ஸோடா.

**Sodæ Carbonas Impura.** *Impure Carbonate of Soda*, or *Barilla* உழமண் இதுவே உழமண், உவர்மண், சவட்டுமண், காரம், பூநீர், சர்ஜிக். கார்பொனேட்ஆவ்ஸோடாஎன்னும் காரமும், மண்ணும்கலந்திருப்பதற்கு, உழமண்என்றுபெயர். இந்த உழமண்ணிலிருந்து எடுக்கிறஉப்புக்கு, கார்பொனேட் ஆவ் ஸோடாஎன்று பெயர். இதில் தோஷங்கள் மெத்த இருக்கும். பூநீர் என்னும் சரக்குலேசாயும்; வெள்ளைநிறமாயும் இருக்கும். இதில் கார்பொனேட்ஆவ்ஸோடா அதிகமாய்இருக்கிறது. ஹிந்து வைத்தியர்கள், உவர்மண்ணிலும், பூநீரிலும்இருந்து கார்பொனேட் ஆவ்ஸோடாவை எடுக்கிறார்கள். வளையல்உப்பு என்பதும் கார்பொனேட்ஆவ் ஸோடாதான்; வளையல்செய்வதில், இந்தஉப்பை உபயோகிப்பதினால், வளையல் உப்பு என்றுபெயர்பெற்றது. கடைச்சரக்கு, வெள்ளையாயும், தளமாயும், கட்டியாயும், இருக்கும். இதில் கறிஉப்பு விசேஷமாய்கலந்து இருப்பதாய் அகப்படுகிறது.

கார்பொனேட்ஆவ்ஸோடாவை, வழக்கமாய் ஸோடாஎன்று சொல்வதுண்டு. இதிலிருக்கிறதோஷங்களைநீக்கி உபயோகப்படுத்தவேண்டியது.

**Barilla.** யூரோப்தேசத்தில் கடல்ஓரங்களில் விளைகிற ஆல்ஜி (Algæ) என்னும்பூண்டுகளைசுட்டுச் சாம்பலாக்கி எடுக்கிறஉப்புக்கு, பெரில்லா என்றுபெயர். இதில் கார்பொனேட்ஆவ் போடாஷ்இருக்கிறது.

**Kelp.** கடல்பாசிகளைச் சுட்டெடுக்கிற சாம்பலுக்கு, கெல்ப் என்று பெயர். இதிலும் கார்பொனேட்ஆவ் ஸோடாமுதலிய உப்புகள் இருக்கிறது.

மலையாளதேசத்தில் கடல்பூண்டைச்சுட்டு எடுக்கிற உமலிக்ஷாரம்என்னும் உப்பை, வஸ்திரசுத்திக்கும், சாயம்போடுகிறதற்கும், அவாள் உபயோகப்படுத்துகிறார்கள். இப்போது அநேகதிரவ்விய சிலவுஇல்லாமல், கறிஉப்பிலிருந்து, கார்பொனேட்ஆவ் ஸோடாவை சீமையில் எடுப்பதுவழக்கம். கறிஉப்பில், முதல் கந்தகத்திராவகம் சேர்த்தால், ஸல்பேட்ஆவ்ஸோடாவாகும்; பிறகு இதில் சீமைச்சுண்ணாம்பு, சீமைக்கறி இவைகளைச்சேர்த்து எரித்தால், உப்பிலிருக்கிற திராவகம் முதலியவைகள்போய் கார்பொனேட்ஆவ் ஸோடாஎன்னும் உப்பு ஆகின்றது.

**Sodæ Carbonas.** *Carbonate of Soda.* (NaO, $CO_2 + 10\ HO = 144$)

கார்பொனேட் ஆவ்ஸோடா.—சுத்தியான உழமண்உப்பு; சுத்தியான சவட்டுப்பு; பூநீறு?

DESCRIP. AND PROP. விவரணம். குணங்கள்.—கார்பொனேட்ஆவ் ஸோடா என்னும் உப்பானது, வெள்ளைக்கட்டிகளாய் இருக்கும்; இதற்கு வாசனையில்லை; உவர்ப்பாய் இருக்கும்; காற்றுப்பட்டால் நீராகிவிடும்; குளிர்ந்த ஜலத்தில் அல்பமாயும், வெந்நீரில் அதிசமாயும் கரையும்; சாராயத்தில் கரையாது. எண்ணெய், கொழுப்பு இவைகளுடன் சேர்த்தால் சவுக்காரமாகும்.

PREP. Carbonate of Soda is manufactured in large quantities from common salt.

செய்முறை.—கறிஉப்புடன் கந்தகத்திராவகத்தைச்சேர்த்துப் பிறகு சிமைச் சுண்ணும்பு, சிமைக்கரித்தூள் இவைகளைச்சேர்த்து எரித்து கார்பொனேட்ஆவ் ஸோடாஎன்னும் உப்பைச் செய்யப்படும்.

ACTION. Antacid; in large doses, irritant poison, Diuretic, Antilithic, Deobstruent.

செய்கை.—ஆம்லநாஸகாரி, அதிகமாய்ச் சாப்பிட்டால் விஷமிக்கும், மூத்திர வர்த்தனகாரி, ஹஸ்மரீஹரகாரி, சோபாநாஸகாரி.

USE. "In dyspepsia, heartburn, flatulence, gouty and rheumatic affections, and cases of lithic deposit in the urine. It is given as an antiphlogistic in coughs and mild inflammations."

உபயோகம்.—அசீரணம்,வயிற்றில் புளிப்புத்தட்டிக்காணும் குலைஎரிவு, வயிற்று இரைச்சல், சந்திசிலேஷ்மரோகங்கள், சர்க்கரா மூத்திரரோகம், காசரோகம், அல்பதாபனரோகங்கள் இவைமுதலிய ரோகங்களுக்கு உபயோகப்பட்டு வருகின்றன. ௰-கிறேன் கார்பொனேட்ஆவ்ஸோடாவை, இராத்திரியில் படுத்துக்கொள்ளும்போது எடுத்துக்கொண்டால், வயிற்றிலிருக்கும் புளிப்பைக்கண்டித்து நித்திரையை உண்டாக்கும்.

DOSE. gr. x.—ʒss. or ʒi. ℈i. of the salt saturates gr. ixss. of Citric Acid, gr. xss. of Tartaric Acid, or ʒiiss. of Lemon-juice.

ஔ. அளவு.—௰-முதல் ௩௰ அல்லது ௬௰-கிறேன்வரையில் அதிகரித்துக்கொடுக்கலாம். ௨௰-கிறே. சோடாவுக்கு, ௯௨-கிறே. ஸிட்ரிக்ஆஸிட், அல்லது ௰௨-கிறே. டார்டாரிக்ஆஸிட், அல்லது ௨௨-திராம். எலுமிச்சம்பழரசம் தேவையாய் இருக்கும்.

ANTIDOTES. Fixed Oil, Vinegar, Lemon-juice, Cream of Tartar.

பிரதிவிஷங்கள்.—எண்ணெய், காடி, எலுமிச்சம்பழரசம், திராக்ஷஉப்பு.

℞ Pulv. Cinchonæ, Sodæ Subcarbonatis, ana partes æquales. Misce. Dosis a gr. v. ad ℈ss. bis terve in die.—DR. COPLAND.

ஸிங்கோனாதூள், கார்பொனேட்ஆவ்ஸோடா, இவைகளை சமனிடையாய்ச் சேர்த்து, இதில் ரு-முதல் ௰-கிறே. அளவுக்கு தினத்துக்கு ௨-௩ தடவை கொடுக்கும்படி டாக்டர் கொப்லாண்டு என்பவர் சொல்லுகிறார்.

℞ Pulv. Rhei, gr. vj. Sodæ Carbonatis, gr. xv., Pulv. Calumbæ, gr. iv. Misce: fiat pulvis, ante prand. sumendus. *In the Gouty Diathesis.*—DR. DAY.

ரேவல்சின்னிசூரணம், ௬-கிறே. கார்பொனேட்ஆவ்ஸோடா, ௰ரு-கிறே. கலம்பாசூரணம், ௪-கிறே. இ. மி. அரைத்து பகல்போஜனம் எடுத்துக்கொள்ளுமுன், சந்துவாதரோகத்தேகிக்குக் கொடுக்கும்படி, டாக்டர் டே என்பவர் சொல்லுகிறார்.

**Sodæ Carbonas Exsiccata.** *Dried Carbonate of Soda.* ($NaO, CO_2 = 54$)

டிரைபிட் கார்பொனேட்ஆவ்ஸோடா. வறுத்துச் சுத்திசெய்த உழமண்ணுப்பு, அல்லது சவட்டுப்பு.

PREP. (Apply heat to *Carb. Soda* ℔j. until the crystals crumble down; then burn to redness; lastly, rub to powder.)

செய்முறை.—க-பவு. கார்பொனேட்ஆவ் ஸோடாவை எடுத்துகொண்டு, கட்டிகள்தாளாகிறவரையில் நெருப்பின்மேல்வைத்து வறுத்து, பிறகு சிவக்கும்படி எரித்து முடிவில் சூரணமாய் அரைத்துக்கொள்ளவேண்டியது.

DOSE. gr. v. to xx. in powder or in pills.

ஓ. நிறை.—ரு-முதல், உ௰-கிறேன்வரையில், சூரணமாயாவது, மாத்திரை செய்தாவது கொடுக்கலாம்.

℞ Sodæ Subcarb. Exsic. ℈iiss., Pulv. Rhei, ʒj., Ext. Hyoscyami, ℈ij. Misce. Divide in pil. xxxvi. quarum, ter quotidie, binæ sumantur. *In Acid Dyspepsia.*—DR. COPLAND.

வறுத்துச் சுத்திசெய்த கார்பொனேட்ஆவ்ஸோடா, ருய-கிறே. ரேவல்சீனிசூரணம், க-திரா. குரோசாணி ஓமச்சத்து. சய-கிறே. இ. மி. ௩௬-மாத்திரைகளாக்கி, இவைகளில் உ-மாத்திரைகள் ஒரு தினத்துக்கு மூன்றுவேளை, புளிப்புச்சேர்ந்து காணுகிற அஜீரணத்துக்கு எடுத்துக்கொள்ளவும். இது டாக்டர் கோப்லாண்டு என்பவருடையமுறை.

**SODÆ BICARBONAS.** *Bicarbonate of Soda. Sesquicarbonate of Soda.* ($NaO, 2CO_2, HO = 85.$)

பைகார்பொனேட்ஆவ்ஸோடா-ஸஸ்குவிகார்பொனேட் ஆவ்ஸோடா.

PREP. (Sodæ Carbonatis, ℔vij., Aq. distill. Cong. j. Dissolve the Carbonate of Soda in the water and strain. Then pass Carbonic Acid into the Liquor to saturation, that the salt may subside. Dry this with a gentle heat wrapped and pressed in cloth.)

செய்முறை.—க-காலன் நீரில், எ-பவு. கார்பொனேட்ஆவ் ஸோடாவைச் சேர்த்துக்கரைத்து, வடிகட்டிக்கொண்டு, இந்தஉப்புஜலத்தில், கார்போனிக்ஆஸிட் என்கிறவாயுவை பிரவேசிக்கச்செய்தால் உப்பு அடியில்படியும், அதைத்துணியில் சுற்றிப்பிழிந்துவிட்டு, சிறுதீயிட்டெரித்து உலர்த்திக்கொள்ளவேண்டியது.

ACTION. Antacid, Antilithic, Diuretic.

செய்கை.—ஆம்லநாஸகாரி. ஊஸ்மரீஹரகாரி. மூத்திரவர்த்தனகாரி.

USE. The same as that of the Carbonate.

உபயோகம்.— கார்பொனேட்ஆவ்ஸோடா என்னும் உப்பை, உபயோகிப்பதுபோல் இதையும் உபயோகிக்கப்படும்.

*In Acidity of the Primæ viæ.*—வயிற்றில் புளிப்புசேர்ந்து இருப்பதற்கு—இந்தஉப்பில் ௰-முதல் ௰ரு-கிறே. வாசனைத்திரவங்களைச்சேர்த்த ஜலத்தில் கரைத்து, போஜனஞ்செய்த -௨-ரு-மணிநேரத்துக்குப்பிறகு கொடுத்தால் சுகுணத்தைத்தரும்.

DOSE. gr. x. to ʒss. or ʒj. For making effervescing draughts, ℈j, =17 grs. Cit. or 18 grs. Tart. acid or ʒiv. of Lemon-juice.

ஓ. நிறை.—௰-கிறே. முதல் ௨-அல்லது ௧-கிராம்கொடுக்கலாம்.

℞ Sodæ Bicarbonatis, gr. iij., Pulv. Cinchonæ, ℈j., Misce fiat pulvis, ter die sumendus. *Tonic and Antacid.*—DR. DRUITT.

தேகத்துக்கு பெலம்உண்டாகவும், வயிற்றில் இருக்கிற புளிப்பை நீக்கவும்.—பைகார்போனேட்ஆவ்ஸோடா, ௩-கிறே. ஸிங்கோனாசூரணம், ௨௰-கிறே. இ. மி. சூரணமாகச்செய்து, தினத்துக்கு ௩-தடவை கொடுக்கும்படி, டாக்டர் ட்ரூயிட் என்பவர் சொல்லுகிறார்.

℞ Sodæ Bicarbonatis, gr. iij., Ferri Sesquioxidi, ℈j., Pulv. Rhei, gr. iij. Misce fiat pulvis, ter die sumendus. *Tonic and Antacid.*—DR. DRUITT.

சரீரத்துக்குப் பெலம்உண்டாகவும், வயிற்றிலிருக்கிற புளிப்பைக் கண்டிக்கவும்.—பைகார்போனேட்ஆவ்ஸோடா௩-கிறே. அயச்சிந்தூரம், ௨௰-கிறே. ரேவல்சீனிசூரணம், ௩-கிறே. இ. மி. சூரணமாக்கி, தினத்துக்கு ௩-தடவைக்கொடுக்கவும். இது டாக்டர் ட்ரூயிட் என்பவருடையமுறை.

**Pulveres Effervescentes.** *Soda Powders.*

ஸோடாபவ்டர்ஸ்.

PREP. (Take of *Tartaric Acid* ℥j., *Bicarb. Soda* ℥j., and gr. 54, or *Bicarb. Potash* ℥j. and gr. 160. Powder the acid, and either Bicarbonate finely; divide each into **16** powders. Preserve the acid and alkali powders in different coloured papers.)

செய்முறை.—டார்டாரிக்ஆஸிட், ௧-அவு. பைகார்பொனேட்ஆவ் ஸோடா, ௧-அவு. ம். ௫௰௪-கிறே. அல்லது, பைகார்பொனேட்ஆவ்பொடாஷ், ௧-அவு. ம். ௱௬௰-கிறே. உப்புகளை வெவ்வேறாகச் சன்னமாய் அரைத்துப் பொடியானபிறகு, ஒவ்வொன்றை, ௰௬-பங்காக்கிக்கொள்ளவும். புளிப்புஉப்பை ஒருநிறமுள்ள கடிதத்திலும், மற்றதை ஒருநிறமுள்ள கடிதத்திலும் போட்டு, மடித்துப்பத்திரஞ்செய்துகொள்ள வேண்டியது.

தேவையானபோது, இதை ஒருவேளைக்குமாத்திரம் ஆகும்படி செய்துகொள்ளலாம். முறை.—ஒரு டம்ளரில், ௧௰-௩-அவு. ஜலம்விட்டு அதில், ௨௰-கிறே. பைகார்பொனேட்ஆவ்ஸோடா என்னும் உப்பையாவது, அல்லது பொடாஷ் என்னும் உப்பையாவது போட்டுக்கரைத்துக்கொண்டு, பிறகு அதில், ௨-அவு. எலுமிச்சம்பழரசம்சேர்த்தால் பொங்கும், அப்போதே குடித்துவிடவேண்டியது. ௰௮-கிறே. டார்டாரிக்ஆஸிட் என்னும் உப்பையாவது, அல்லது ஸிட்ரிக்ஆஸிட் என்னும் உப்பையாவது, கொஞ்சம் ஜலத்தில் கரைத்து சேர்த்துக்கொள்ளலாம். ௧-௨ கிராம். ரோசல் ஸால்ட் (Rochelle Salt) என்னும் உப்பையாவது, சீமை இந்துப்பையாவது, (Epsom Salts) சேர்த்தால் மலத்தை உதைக்கும்,

**Aqua Sodæ Effervescens.** *Soda Water.* (Vide p. 102.)

இதைச்செய்கிறமுறை ௱௨-வது சைட்டில் காணலாம்.

**SODII CHLORIDUM.** *Chloride of Sodium. Muriate of Soda. Common Salt. Sea salt..* ($Na\ Cl = 60.$)

கறியுப்பு. இதுவே சோற்று உப்பு-கட்லுப்பு-சமுத்திர உப்பு-லவணம்.

Descrip. and prop. விவரணம் குணங்கள்.—கறியுப்பு போஜனத்துக்குவேண்டிய முக்கியபதார்த்தங்களில் ஒன்று. இந்தஉப்பை, சில செடிகள், கல்லுப்பு (Rock salt), சமுத்திரஜலம், இவைகளில் இருந்து சேகரிக்கப்படும். கடல் நீரைச்சுண்டவைத்து எடுப்பது வழக்கம். இந்த உப்பில் தோஷங்கள் உண்டு, ஆகையால் சுத்திசெய்துகொள்ளவேண்டியது. கறியுப்பில் ஸோடியம் (Sodium) என்னும் சவட்டுப்புச்சத்தும், குளோரின் (Chlorine) என்னும் வாயுருபமான ஒரு பதார்த்தமும் இருக்கின்றன. இந்த உப்பை ஜலத்தில்கரைத்து, பிறகு உப்பு கட்டியாகும்படி செய்துகொண்டால், சுத்தியாகிவிடும். ரத்தத்திலும், மூத்திரத்திலும் இந்த உப்பு கலந்திருக்கும்; உப்பில்லாவிட்டால் பிராணிகள் இளைத்துச்சாகும். உப்பில்லாத போஜனம், வயிற்றில் கிருமிகளை உண்டாக்குமென்று கண்டிருக்கிறது. இந்த உப்புக்கு வாசனையில்லை, உவர்க்கும், ஜலத்தில் கரையும், காற்றுப்பட்டால் கெடாது, அனல்பட்டால் பொரியும்.

Action. Stimulant, irritant externally, Emetic, Cathartic.

செய்கை.—உஷ்ணகாரி, தேகத்தின்மேல் பட்டால் எரிச்சலையுண்டாக்கும், வமனகாரி, விரேசனகாரி.

Use. In some cases of dyspepsia, cholera, worms and hæmoptysis; as an ingredient in clysters; a fomentation to bruises; and it is given in baths, to imitate sea water.

உபயோகம்.—அக்னிமந்தரோகம், வாந்திபேதி, மலக்கிருமிரோகம், ரத்தகாசரோகம், இந்த வியாதிகளில் கறிஉப்பை உபயோகப்படுத்தப்படும்; ஆசனத்தில் அடிக்கிற அவுஷதங்களுடன் உப்பைச் சேர்ப்பதுண்டு; காயங்களுக்கு ஒற்றிடம் போடலாம்; சமுத்திரஜலத்துக்குப்பதிலாய், உப்பை ஜலத்தில்கரைத்து ஸ்நானமாகவும் கிலேதமாகவும் உபயோகப்படுத்துவதும் உண்டு. உப்பு, சாப்பிடுகிற பதார்த்தங்களை ஜீரணிக்கச்செய்யும்; அதிகமாய்ச் சாப்பிட்டால் தாகமெடுக்கும்; அளவுக்கு அதிகமாய்ச்சாப்பிட்டால் நஞ்சாகும்: தீனிப்பை, குடல் இவைகளைப்புண்ணாக்கிவிடும். விசூசிகா ரோகத்தில், தேகத்திலிருக்கிற உப்பு குறையும், ஆகையால் கறிஉப்புக்கொடுப்பது உத்தமம். காடிக்காரத்தை விஷமிக்கும்படிச் சாப்பிட்டவர்களுக்கு, கறிஉப்புக்கொடுத்தால் அதை முறித்துவிடும். உப்புஜலம் சருமத்தைச் சிவப்பிக்கும். கண்டமாலை சந்திகசிலேஷ்மம், இந்தரோகங்கள், உப்புஜலம், அல்லது சமுத்திர ஸ்நானம் செய்துக்கொண்டுவந்தால் சவுக்கியப்படும். இரப்பையிலாவது, அல்லது ஆசனத்திலாவது அட்டை அகஸ்மார்த்தாய்ச்சென்றுவிட்டால், உப்புஜலத்தைஉபயோகப்படுத்தினல், அட்டை மரணமடைந்து வெளிப்படும். குழந்தைகளுக்குஉப்பைக்கொடுத்தால், வயிற்றிலிருக்கிற கிருமிகளை நாசப்படுத்தும்.

Dose. gr. x.—ʒj., as a Stimulant. ʒiv.—℥j., Cathartic. ℥jss.—℥ij., with warm water as an Emetic. ℔ j. of salt to every 3 gallons of water, will make a bath of the strength of sea water.

ஒ. அளவு.—௰-முதல், ௬௰-கிறே. கொடுத்தால், ஜாடராக்கினியை விருத்திப்படுத்தி பசியையுண்டாக்கும். ௪-முதல், ௧-அவு. கொடுத்தால் பேதியாகும். ௧௨-முதல், ௨-அவு. வெந்நீரில்கரைத்துக்கொடுத்தால் வாந்தியாகும். ௩-காலன்

ஜலத்தில், ௧-பவுன் உப்பைக்கரைத்துகொண்டால், சமுத்திரஜலத்துக் கொப்பாகும்; அது ஸ்நானத்துக்குதவும். கொஞ்சங் கறியுப்பைத் தனியாய் நாள்தோறும் சாப்பிட்டுக் கொண்டுவந்தால், வாந்திபேதிரோகத்தைத் தடுக்குமென்று கண்டிருக்கிறது.

*The saline treatment of Cholera.*—வாந்திபேதிரோகத்துக்கு உப்புச்சிகிச்சை.—கார்பொனேட் ஆவ் ஸோடா (Carb. of Soda.) ௪௰-கி. கறியுப்பு, ௨-திரா. குளோரேட் ஆவ் பொடாஷ் (Chlo. of Pot.) ௮-கிறே. ஜலம்தேவையானதைச் சேர்த்து, ஒருவேளைக்குக்கொடுக்கவும்; அடிக்கடி குளிர்ந்தஜலம் கொடுக்கவேண்டியது.

℞ Salis Communis, ℥ij., Aquæ puræ, ℥vj., Aceti, Spir. Vini Gallici, ana ℥iij., Misce: fiat fotus. To *Bruises.*—Vogt.

காயங்களுக்கு:—கறியுப்பு, ௨-அவு. சுத்தஜலம், ௬-அவு. காடி, ௩-அவு. பிராந்தி, ௩-அவு. இ. மி. ஒற்றிடங்கொடுக்கவும்.

பொருமல், மந்தம், வாயுவும்போம் என்றும்; அக்கினிபுஷ்டி, ஐயம், தீபனம், நீரிறங்கலும் உண்டாமென்று, பதார்த்தகுணசிந்தாமணியில் சொல்லியிருக்கின்றது.

**LIQUOR SODÆ CHLORINATÆ.** *Solution of Chlorinated Soda.* லைகர்ஸோடிகுளோரினேடி. ஸொலூஷன் ஆவ் குளோரினேடெட்ஸோடா.

Prep. (Dissolve *Carb. Soda* ℔ j in *Dist: Water* f℥xlviij.; then put *Chlor. Sodium* ℥iv., and *Binoxyd. Manganese* ℥iij., both rubbed to powder into a retort, and add to them *Acid. Sulph.* f℥iiss., (diluted with f℥iij. of *Water*, and cooled, heat the Mixture and pass the chlorine gas first through f℥v. of *Water*, and then through the solution of the Carbonate.)

செய்முறை.—௪௮-அவு. நீரில், ௧-பவு. கார்பொனேட் ஆவ் ஸோடாஎன்னும் உப்பைக்கரைத்துக்கொள்ளவும்; பிறகு கறியுப்பு, ௪-அவு. பின்ஆக்ஸைட் ஆவ்மாங்கனீஸ், ௩-அவு. இவைகளைஒன்றாகச்சேர்த்து அரைத்து, ஒருவாலையில்போட்டு அதில், ௨½-அவு. கந்தகத்திராவகம்விட்டு (திராவகத்தில், ௩-அவு. ஜலம்விட்டு விளாவி, குளிர்ந்தபிறகு சேர்க்கவேண்டியது.) எரித்து அதிலிருந்து ஜெனிக்கிற குளோரின்காஸ்என்னும் வாயுவை, ௫-அவு. ஜலத்தில் முதல்பிரவேசிக்கச்செய்து பிறகு அதிலிருந்து உப்புகரைத்திருக்கிற ஜலத்தில் பிரவேசிக்கச்செய்யவேண்டியது

Action. Disinfectant, and Antiseptic, Stimulant.

செய்கை.— நாற்றங்களையும், தொற்றிக்கொள்ளுகிற வியாதிகளையும் நீக்கும்; அழுகிப்போகுதலைத்தடுக்கும்; உஷ்ணகாரி.

Use. In cases of low typhoid fevers.

உபயோகம்.—சன்னிபாதசுரங்களுக்குக் கொடுக்கலாம்.

Dose. ʒss. and upwards in ℥i. or morewater; as a gargle ℥ss. to ℥i., in Oj. to Oij. of water.

ஒ. அளவு.—௨-திரா. அல்லது அதற்கு அதிகமாகவும், ௧-அவு. அல்லது இன்னங்கொஞ்சம் அதிக ஜலத்திலாவது கொடுக்கலாம். இந்த மருந்தில், ௨-அல்லது

௧-அவு. அளவுக்கு, ௧-அல்லது, ௨-பைமி. ஜலத்திற்சேர்த்து, வாய்கொப்புளித்தால் ரசத்தால்காணும் வாய்ரணம், அல்லது ரசத்தாலாவது, அல்லது கருப்பிணியிலாவது காணுகிற அதிக உமிழ்நீரைக்கண்டிக்கும்.

**SODÆ BIBORAS.** *Borax. Biborate of Soda.* ($NaO,2BO_3+10\ Aq=192.$)

ஸோடிபைபோரஸ். போராக்ஸ். வெங்காரம். வெலிகாரம்.

DESCRIP. AND PROP. விவரணம். குணம்.—வெங்காரம் திபெட் (Thibet) என்னும் தேசத்தில் விளைகிறது, அவடத்திலிருந்து இந்தியாவுக்குக் கொண்டுவருகிறார்கள். இந்த உப்பை நீற்றிக்கொண்டால் அதிலிருக்கிற தோஷங்கள் நீங்கிவிடும்; அல்லது காரஜலத்தில் (Alkaline ley) கழுவி பிறகு ஜலத்தில் கரைத்து மறுபடியும் உப்பு கட்டும்படிச் செய்துகொண்டாலும் அதிலிருக்கிற தோஷங்கள் நீங்கிவிடும். இந்த உப்புக்கு வாசனையில்லை; வெள்ளையாய், தெளிவாய், கொஞ்சம் மினிமினிப்பாய் இருக்கும்; தித்திப்பு, துவர்ப்பு குளிர்ச்சியோடுங்கூடிய ருசியையுடையது. காற்றுப்பட்டால் உப்பின்மேல் கொஞ்சந் தூளாய்ப்படியும். வெங்காரத்தைப்பொரித்தால், அதிலிருக்கிற நீர்ச்சுண்டிப் பொரிந்து, அதில் சிறிய துவாரங்கள் தோற்றும். இந்த உப்புடன் படிக்காரம் கலந்து விற்பதும் உண்டு.

ACTION. Sub-Astringent, Detergent, Diuretic, Emmenagogue.

செய்கை.—அல்பஸங்கோசனகாரி, விரணசுத்திகாரி, மூத்திரவர்த்தனகாரி, ருதுவர்த்தனகாரியும் ஆனது.

USE. As a gargle in Aphthæ, and in salivation; it requires to be used with caution during pregnancy.

உபயோகம்.—இந்த உப்புக்கு துவர்ப்புகுணம் இருப்பதால், வாயிலும், தொண்டையிலும் காணுகிற விரணத்துக்கு முக்கியமாய் உபயோகப்படுத்தப்படும். கருப்பவதிகளுக்கு வெகு ஜாக்கிரதையாய் கொடுக்கவேண்டியது, இல்லாவிட்டால் கருவை வெளிப்படுத்திவிட்டாலும்விடும். மூத்திரத்தை அதிகப்படுத்துகிறகுணம் இதற்கு இருந்தபோதிலும், இதைப்பார்க்கிலும் மெத்த நல்ல அவுஷதங்கள் இருப்பதால், இங்கிலீஷ் வைத்தியர்கள் இதை உபயோகப்படுத்துவது அரிது; ஆனால் ஆயுள்வேதியர்கள் இதை மூத்திரக்கிரிச்சரம், மகோதரம் இவைகளுக்குக் கொடுப்பது தவறுது.

DOSE. gr. v.—ʒss. ʒij. in water f℥vi. as a lotion.

ஒ. அளவு.—௫-முதல் ௩௰-கிறே. கொடுக்கலாம். ௬-அவு. ஜலத்தில், ௨-திரா. வெங்காரத்தைக்கரைத்து, கிலேதமாகச்செய்துகொள்ளலாம்.

℞ Ergotæ, ℈i.—℈ij., Sodæ Bibor. gr. x., Aq. Cinnam. f℥iss. M. ft. haust. In tedious Labours, where there is deficiency of uterine contractions.—DR. RIGBY.

பிரசூதிகாவாயு மந்தப்பட்டிருப்பதற்கு:—எர்கொட், ௨௰-௪௰-கிறே. வெங்காரம், ௰-கிறே. லவங்கப்பட்டைஜலம், ௧௨-அவு. இ. மி. ஒருவேளைக்குக்கொடுக்கிற அளவாகச் செய்துகொள்ளவும்.—இது டாக்டர் ரிக்பி என்பவருடைய முறை.

℞ Antim. Pot. Tart. gr. j., Potass. Bitart. ʒiss., Sodæ Bibor. ʒss., Infus. Juniperi, f℥xiiss., Spt. Æther. Nit. fʒiij., T. Camph. Co. ♏xxv—l., M. Cap. coch. amp. j. 2da quaque horo. *In dropsy*—DR. COPLAND.

நீரேற்றத்துக்கு:—டார்டர் மெடிக், க-இறே. திராக்ஷஉப்பு, ௪௫-கிரா. வெங்காரம். ௫-கிரா. இன்பியுஷன் ஆவ் ஜ-நிபர், ௰௨௫-அவு. ஸ்பிரிட் ஈதர் நைட்ரோஸி, ௩-கிரா. டிஞ்சர் காம்பர் கம்பவுண்டு, ௨௫-௫௰-மினிம். இ. மி. ஒரு பெரிய சரண்டி வீதம், ௨-மணி நேரத்துக்கொருதரம் கொடுக்கவும்.—இது டாக்டர் கோப்லாண்டு என்பவருடைய முறை.

℞ Potass. Bitart. ℥j., Potas. Nit., Sodæ Bibor. ā ā ʒij. Pulv. fol. Digitalis, ℈j.; Mix well, and divide into xij. powders; one to be taken twice or thrice daily. *In dropsy.*—Dr. Copland.

நீரேற்றத்துக்கு:—திராக்ஷஉப்பு, க-அவு. கம்பியுப்பு, ௨-திரா. வெங்காரம், ௨-திரா. டிஜிடேலிஸ் என்னும் இலையின் சூரணம், ௨௰-இறே. இ. செ. மி. ௰௨-பாகமாக்கி, க பாகம் வீதம் தினத்துக்கு, ௨-௩-தடவைக் கொடுக்கவும்.—இது டாக்டர் கோப்லாண்டு என்பவருடைய முறை.

℞ Sodæ Bibor. ʒj., Spir. Vin. Rect. f℥ss., Aquæ, f℥iijss., M. This, applied to *Sore Nipples* thrice daily, has been found very serviceable,—Sir Astly Cooper.

முலைக்காம்பு விரணத்துக்கு:—வெங்காரம், க-திரா. சாராயம், ௫-அவு. ஜலம், ௩௫-அவு. இ. மி. தினத்துக்கு ௩-தடவை ரணத்தின்மேல்போட மெத்த சவுக்கியத்தைக்கொடுக்கிறதாய்க் காணப்படுகிறது. இது சர்ஆஸ்லி கூபர் என்பவருடைய முறை.

*In Mercurial salivation.*—ரசவாய்ப்பிடிப்புக்கு:—வெங்காரம் ஜலத்தில் கரைத்து, தேன்கலந்து, வாய்க்கொப்புளித்தால் சவுக்கியப்படுத்தும்.

சொறிசிரங்கு முதலிய சருமரோகங்களுக்கு, வெங்காரம் ஜலத்திற்கரைத்து சிரங்கின்மேல்தடவ குணமாகும்.

℞ Boracis pulv. gr.xv. Myrrhæ pulv. gr.xij., Croci pulv. gr.iij., Ol. Caryophylli, gutt. j. Fiat pulvis, semel vel bis die sumendus. *Emmenagogue.*—Dr. T. Fuller.

வெங்காரத்தூள், ௰௫-இறே. வெள்ளைபோளத்தூள், ௰௨-இறே. குங்குமப்பூத்தூள், ௩-இறே. இராம்புத்தயிலம், க-துளி. இ. மி. தினத்துக்கு, க-௨-வேளை கொடுத்தால், சூதகத்தைக் கிரமப்படுத்தும்.—இது டாக்டர் புல்லர் என்பவர் முறை.

**Mel Boracis.** *Honey of Borax*

வெங்கார மது.

Prep. (Mix Borax powdered, ʒj. with Honey clarified, ℥j.)

செய்முறை.—க-திரா. வெங்காரத்தூளை, க-அவு. சுத்திசெய்த தேனில்போட்டு மிஸ்ரமித்துக்கொள்ளவேண்டியது.

Use. Applied to Aphthæ, and to ulcers of the inside of the mouth.

உபயோகம்.—வாயில்காணுகிற துத்திமுதலிய விரணங்களுக்குத் தடவலாம்.

**SODÆ SULPHAS.** *Sulphate of Soda or Glauber's Salt.* ($NaO, SO_3 + 10\ Aq. = 162.$)

ஸோடிஸல்பஸ். ஸல்பேட் ஆவ்ஸோடா . குளோபர்ஸ்ஸால்ட்.

Descrip. and Prop. விவரணம். குணம்.—சில இடங்களில் இந்த உப்பு பூமியின்மேல் பூத்து இருக்கும். கடல்நீரிலும், சில பூண்டுகளின் சுட்டசாம்பலிலும் இந்த உப்பு அகப்படும். நூதனமாய் செய்த உப்பு, வெள்ளையாய் இருக்கும்;

கசப்பு வெகுட்டலோடுங்கூடிய ருசியையுடையது; ஜலத்தில் கரையும்; சாராயத்தில் அல்பமாய் கரையும்; காற்றுப்படவைத்தால் பொடியாகிவிடும்; எரித்தால் முதல் உருகிப் பிறகு வெள்ளைத்தூளாய் விடும்.

Prep. (Dissolve of the salt remaining after the distillation of *Muriatic acid* lb. ij. in boiling *Aq.* Oiij. Add powdered *White marble*, q. s. till effervescence ceases. Filter, wash the insoluble matter, returning the water to the original liquid. Evaporate till a pellicle begins to form, then let the liquor cool and crystallize.)

செய்முறை.—கறியுப்புத்திராவகம் செய்கிறபோது அடியில் நிற்கிற உப்பில் உ-பவு. எடுத்துக்கொண்டு, ௩-பையி. கொதிஜலத்தில் கரைத்துக்கொள்ளவும். இதில் பொங்கி எழும்புதல் நிற்க எவ்வளவு தேவையோ அவ்வளவு வெள்ளைக் கல்தூளைச் சேர்க்கவேண்டியது. பிறகு வடிகட்டி, ஜலத்தில்கரையாததைக் கழுவி, அந்த ஜலத்தையும் முதல்வடிகட்டி யெடுத்துக்கொண்ட நீருடன்சேர்த்து சுண்டக்காய்ச்சினால், ஜலத்தின்மேல் ஏடுபடியும், அப்போது, இறக்கிக்குளிரவைத்து, உப்பு பூக்கும்படி செய்துகொள்ளவேண்டியது.

Action. Purgative.

செய்கை.—விரேசனகாரி.

Use. In Costiveness.

உபயோகம்.—மலச்சிக்கலுக்குக்கொடுக்கலாம். இந்த உப்பு வாய்க்கினிப்பாய் இராததால் எலுமிச்சம் பழரசத்தைக் கூடச்சேர்த்துக்கொள்ளலாம். இது வயிற்றைக் கடுத்து அதிகபேதியையுண்டாக்கும்; ஆகையால் மெத்த உபயோகப்படுத்துகிறதில்லை.

Dose. ʒiv.—℥j. or ℥ij. ʒiij.—ʒiv of the effloresced or anhydras Salt.

ஔ. அளவு.—ஒ-க-அல்லது, உ-அவுன்ஸ்-கொடுக்கலாம். உலர்ந்து தூளாய் இருப்பதை ௩-முதல்-ச-திராம் கொடுக்கலாம்.

**SODÆ PHOSPHAS.** *Phosphate of Soda. Tasteless Purging Salt.* $2NaO, PO_5, HO = 145 \times 24$ Aq. $= 361$).

ஸோடிபாஸ்பஸ். பாஸ்பேட் ஆவ்ஸோடா.

Descrip. and Prop. விவரணம். குணம்.— பாஸ்பேட் ஆவ்ஸோடா என்கிற உப்புவெள்ளையாயும், உவர்ப்பாயும் இருக்கும்; ஜலத்தில்கரையும், சாராயத்தில்கரையாது; காற்றுப்படவைத்தால் தூளாகிவிடும்; எரித்தால் உப்பிலிருக்கிற நீர்ச்சுண்டிப்போகும்.

Prep. (It is obtained chiefly from bone ashes.)

செய்முறை.—இந்தஉப்பை எலும்புச்சாம்பலிலிருந்து எடுக்கப்படும்.

Action. Mild Saline Cathartic; Alterative.

செய்கை.—சுகபேதியாகும்; வியதாபேதகாரி.

USE. "Having very little taste, it is well adapted for children, and is best administered in gruel, or broth, to which it gives a flavour, as if seasoned with salt."

உபயோகம்.—இந்த உப்புக்கு வெகுட்டலில்லாததால், குழந்தைகளுக்குக் கொடுக்கத்தகுதியானது; கஞ்சி, சூப்பு இவைகளில் எதிலாவது கலந்துகொடுக்கலாம்; இதைச்சேர்த்தால் கறியுப்புப்போட்டுப் பக்குவப்படுத்தினதுபோல் வாய்க்கினிப்பாய் இருக்கும்.

DOSE. ℨiv.—℥jss.

ஔ. அளவு. ௪-முதல் க௨-அவு. கொடுக்கலாம். குழந்தைகளுக்கு, க-௪-திராம் கொடுக்கலாம்.

**SODÆ POTASSIO TARTRAS.** *Sodæ et Potassæ Tartras. Potassio Tartrate of Soda. Tartrate of Potash and Soda. Soda Tartarizata. Tartarized Soda. Rochelle Salts.* (KO, NaO, $C_8 H_4 O_{10} + 8$ Aq. = 284.)

ஸோடி பொடாஷியோ டார்ட்டிரஸ். ரோசல்ஸால்ட்ஸ்.

DESCRIP. AND PROP. விவரணம். குணம்.—இந்தஉப்பு வெள்ளையாயும், வாசனையற்றதாயும், கொஞ்சம் உவர்ப்பாயும், சிறுகசப்பாயும் இருக்கும்; காற்றுப்பட்டால் தூளாகிவிடும்; ஜலத்தில்கரையும்.

PREP. (Take of *Bitartrate* of *Potash* ℥xvj., and of *Carbonate* of *Soda* ℥xij., with *Water* Oiv. Dissolve, neutralize, and evaporate to crystals, in the same way as for Tartrate of Potash.)

செய்முறை.—திராக்ஷஉப்பு, ௧௬-அவு. கார்பொனேட் ஆவ் ஸோடா ௧௨-அவு. ஜலம், ௪-பையிு. உப்புகளை ஜலத்தில்கரைத்து, நூட்ரலைஜ்செய்துகொண்டு, டார்ட்ரேட்ஆவ்போடாஷ் என்கிறஉப்பைச் செய்கிறதுபோல், உப்புகட்டும்படி இறுத்தச்சுண்டவைத்து இறக்கிக்கொள்ளவேண்டியது.

ACTION. Cathartic, Diuretic.

செய்கை.—விரேசனகாரி, மூத்திரவர்த்தனகாரி.

USE. In Costiveness; well suited to cases of jaundice, calculus, and puerperal fevers. It may be given as a Seidlitz Powder—*i. e.* in effervescence, with some tartaric acid and bicarbonate of soda.

உபயோகம்.—பித்தபாண்டுரோகம், ஹஸ்மரிரோகம், பிரசவித்தபிறகு காணுகிறசுரம், இவைகளுக்குக்கொடுக்கலாம். இந்த உப்பைக்கொடுத்தால் குளிர்ச்சியாய்ப்பேதியாகும்; கொஞ்சமாய்க்கொடுத்தால் மூத்திரத்தை அதிகப்படுத்தும்; தனிப்படக்கொடுத்தால், வயிற்றில்சங்கடத்தையுண்டாக்கும்; ஆகையால் நிலஆவாரை வெந்நீர்க்கஷாயத்தில் அனுபானஞ் செய்யவேண்டியது. இந்த உப்புடன் டார்டாரிக் ஆஸிட், ஸோடா இவைகளைச்சேர்த்து, நுரைத்தெழும்பச் செய்துக்கொடுக்கலாம். இதற்கு ஸெட்லிஜ்பவுடர்ஸ் (Seidlitz Powders) என்று இங்லீஷில் பெயர். செய்முறை.—ஸோடிபொடாஷி சூபர்டார்ட்ரஸ், ௨-திரா. ஸோடிபைகார்போனஸ் ௨-ஸ்குருபில். இவைகளை ஒருகடிதத்தில் மடித்துக்கொள்ளவும்; டார்டாரிக்ஆஸிட், ௯-திரா. இதை வேறொரு கடிதத்தில்மடித்துக்கொள்ளவும். ஸோடாவை, ௯-பையிு,

ஜலத்தில் கரைத்துக்கொண்டு புளிப்புப்பைச்சேர்த்தால், பொங்கிநுரையெழும்பும், அப்போதேகுடித்துவிடவேண்டியது. ஸோடாஸல்பஸ், மாக்னீஷியா ஸல்பஸ்என்னும் உப்புகளைப்போல் அவ்வளவு வயிற்றைக்கடுக்கமாட்டாது ; குழந்தைகளுக்கும், ராஜஸுக்கானதேகமுடையவர்களுக்கும் கொடுக்கத்தகுதியானது. மூத்திரத்திலிருக்கும் புளிப்பைபக்கண்டிக்கும்.

Dose. As a diuretic, ʒj.—ʒij.; as a Cathartic, ʒvj.—℥j.

ஒ. அளவு.— க - முதல், உ - திரா. கொடுத்தால் நீரைஅதிகமாக்கும் ; ௬ - திரா. முதல், க - அவு. கொடுத்தால் பேதியைஉண்டாக்கும்.

℞ Sodæ Tartarizatæ, gr. x.; Pulv. Rhei, gr. iij—vij., Misce: fiat pulvis. (To be taken every morning for two weeks.) *In Enlargements of the Mesentery in Children.*—Dr. Fordyce.

குழந்தைகளுக்குக்காணுகிற மாந்தரோகத்துக்கு.— ஸோடிடார்டாரிஜேடி, ௰-கிறே. ரேவல்சினிசூரணம், ௩ - எ - கிறே. இ. மி. இதைநாள்தோறும் காலையில் இரண்டுவாரம் கொடுத்துக்கொண்டுவரவேண்டியது.—இது டாக்டர் போர்டையிஸ் என்பவருடைய முறை.

**SODÆ ACETAS.** *Acetate of Soda.* (NaO, $C_4$ $H_3$ $O_3 \times 6$ Aq.=137).

ஸோடிஅஸிடஸ். அஸிடேட்ஆவ்ஸோடா.

Descrip. and Prop. விவரணம். குணம்.—இந்த உப்பு வெள்ளையாய் இருக்கும். இதற்கு விறுவிறுப்பும், கொஞ்சங் கசப்பும் உண்டு ; ஜலத்தில் கரையும்; உஷ்ணம்பட்டால் தூளாகும், ஆனால் காற்றில் அவ்வளவு ஆகமாட்டாது ; தீ அதிகமானால் உருகும் ; சாராயத்தில் கொஞ்சமாய்க் கரையும்.

Action. Diuretic, Cathartic.

செய்கை.—மூத்திரவர்த்தனகாரி, விரேசனகாரி.

Use. In dropsies.

உபயோகம்.—நீர்க்கோவை ரோகங்களுக்கு உபயோகப்படும்.

Dose. Diuretic, ℈j.—ʒij. Purgative, ʒj.—ʒiv.

ஒ. அளவு.—க-ஸ்குருபில் முதல், உ-திராம் கொடுத்தால் நீரை அதிகமாக்கும் ; க-முதல்,௪ திராம் கொடுத்தால் பேதியாகும்.

## ALKALINE-EARTHY METALS.

### BARIUM (Ba=69).

பேரியம்.

பேரியம் என்கிற பதார்த்தம் பளிங்காய் வெள்ளிநிறமாய் இருக்கும் ; இது தாதுக்களில் ஒன்று ; பளுவாய் இருக்கும். இந்தச்சரக்கு ஆக்ஸிஜென், கார்போனிக் ஆஸிட், கந்தகத்திராவகம், முதலிய பதார்த்தங்களுடனே சேர்ந்து சில உப்புகள் ஆகின்றன ; அவைகளை உள்ளுக்கு உபயோகப்படுத்துகிறதில்லை ; ஆனால் வேறே மருந்துகள் செய்வதிலும், மருந்துப்பரிக்ஷைகளிலும் உபயோகப்படும். பேரியம் என்கிற பதார்த்தத்தின் உப்புகளை இதனடியில் கூறப்படும்:—

**Baryta or Barytes.** ($BaO = 77$). பெரைடா.

**Barytæ Carbonas.** *Carbonate of Baryta.* ($BaO, CO_2 = 99$). பெரைடிகார்பேரனஸ். கார்பொனேட்ஆவ்பெரைடா.

**Barytæ Sulphas.** *Sulphate of Baryta or Heavy Spar.* ($BaO, SO_3 = 117$). பெரைடிஸல்பஸ். ஸல்பேட்ஆவ்பெரைடா.

**Barii Chloridum.** *Chloride of Barium.* ($BaCl \times 2HO = 123$.) பேரிகுளோரிடம். குளோரைட்ஆவ்பேரியம்.

**Barytæ Nitras.** *Nitrate of Baryta.* ($BaO, NO_5 = 131$.) பேரிநைட்டிரஸ். நைட்ரேட்ஆவ்பெரைடா.

## CALCIUM. ($Ca = 20$).

கால்ஷியம். சுண்ணும்புச்சத்து.

சுண்ணும்பிலிருக்கிற பிரதானசத்துக்குக் கால்ஷியம் என்று பெயர். இந்தப் பதார்த்தம் வெள்ளை ; மினுக்கும் ; நீரை முறித்துவிடும் ; கொஞ்சமாய் அனல்பட எரித்தால், பத்திக்கொண்டெரிந்து காற்றிலிருக்கிற ஆக்ஸிஜென் என்னும் வாயுவோடுசேர்ந்து, லைம் (lime) என்னும் சுண்ணும்பு ஆகின்றது.

**CALX.** *Oxide of Calcium. Quicklime. Caustic or pure lime.* ($CaO = 28$).

சுண்ணும்பு. (நீரில்லாதசுண்ணும்பு. தாளிக்காதசுண்ணும்பு.)

DESCRIP. AND PROP. விவரணம். குணம்.—தோஷம்இல்லாதசுண்ணும்பு,மங்கலான வெள்ளையாய் மண்ணைப்போல் கட்டியாய் இருக்கும். காரமாய்,க்ஷாரத்தைப்போல் ருசியையுடையது; இதற்குச்சருமத்தை வேகவைக்கிற குணம் உண்டு; நூதனமாய்ச் சுட்டசுண்ணும்பு, காற்றில் இருக்கிற, ஜலத்தையும் கார்போனிக்ஆஸிட் என்னும் வாயுவையும் கிரகிக்கும் ; இதற்கு, பதார்த்தங்களில் இருக்கிற நீரை இழுத்துக்கொள்ளுகிற குணம்இருப்பதால் மருந்துகளில் இருக்கிற, நீரைப்போக்க இதைச்சேர்த்து மருந்துகள் உலர்த்தப்படும். நூதனமாய்ச் சுட்டசுண்ணும்பும், ஜலத்தைத்தெளித்தசுண்ணும்பும், லேசாய் அகப்பட்டபோதிலும், உள்ளுக்கு உபயோகப் படுத்தும்படியான யோக்கியதையில்லை. வெள்ளைக்கல், (மாவுக்கல்-சலவைக்கல்) சுண்ணும்புக்கல், சிமைச்சுண்ணும்பு, கிளிஞ்சல்ஓடு, இவைகளில் இருந்து சுண்ணும்பு எடுக்கப்படும். இவைகளை எரித்தால் அவைகளில் இருக்கிற கார்போனிக்ஆஸிட் என்கிறவாயு நீங்கி காரமுள்ளதாய் நிற்கும் ; இதைக்காற்றுப்புகரவொட்டாமல், புட்டியில்அடைத்துக்கொள்ளவேண்டியது.

கற்சுண்ணும்பு (stone lime) ,கிளிஞ்சில்ச்சுண்ணும்பு (lime of small shells), சங்குச் சுண்ணும்பு (lime of large shells), சிப்பிச்சுண்ணும்பு (lime of Pearl Oyster shells), நத்தைச்சுண்ணும்பு (lime of snail shells), முத்துச்சுண்ணும்பு (lime from pearls) என்று சுண்ணும்புக்கு அனேகவிதங்களுண்டு. எந்தச்சுண்ணும்பாலுஞ்சரி, குணத்திலும் செய்கையிலும் ஒன்றுய் இருக்குமேயொழிய, வித்

ப்ரசமிராது. சுண்ணாம்புக்குப்பதிலாய், அயிஸ்வரியமுடையவர்கள், முத்துச்சுண்ணாம்பை வெற்றிலையோடுசேர்த்துப் போட்டுக்கொள்ளுகிறார்கள்.

**Calcis Hydras,** *Hydrate of Lime, or Slaked Lime.* ($CaO \times HO = 37$).

குழைச்சுண்ணாம்பு. நீர்தெளித்தசுண்ணாம்பு - நீறு - நீற்றசுண்ணாம்பு.
சுண்ணாம்புநீறு.

காரச்சுண்ணாம்பின்மேல் (Caustic Lime) ஜலத்தைத்தெளித்தால், ஹிஸ் என்று சத்தத்துடன் நீர்ச்சுண்டி சுண்ணம் உடைந்து, மலர்ந்துவிடும்; அப்போது சுண்ணாம்பிலிருந்து அதிக உஷ்ணம்பிறக்கும்; இந்தச்சுண்ணாம்பு வெள்ளையாயும், உலர்ந்திருக்கும்; மஞ்சள் நிறத்தைச் சிவக்கச்செய்யும்.

Action. Caustic, Disinfectant.

செய்கை.—விரணகாரி, நாற்றங்களைப்போக்கும்.

உபயோகம்.—தாம்பூலத்துடன் சேர்த்துப்போட்டுக்கொள்வது வழக்கம் சுண்ணாம்புடன், முட்டச்சாம்பல்சேர்த்து விளக்கெண்ணெய்விட்டுக் குழப்பி, சிறங்குக்குத்தடவுகிறது வீட்டுவழக்கம்.

**Liquor Calcis.** *Aqua Calcis. Lime Water.*

லைகர்கால்ஹிஸ்-லைம்வாடர். சுண்ணாம்புஜலம்-சுண்ணாம்புத்தண்ணீர்.

இந்தஜலத்தில்சுண்ணாம்பு கலந்திருக்கும்; கல்கார்க்குடைய புட்டியில் வைக்கவேண்டியது; புட்டிக்குள் காற்றுப்புகாமல் எப்போதும் புட்டி நிறைந்திருக்கவேண்டியது; காற்றிலிருக்கிற கார்போனிக்ஆஸிட் சேர்ந்து, ஜலத்தின்மேல் ஏடுபோலப்படியும்; சுண்ணாம்புஜலம் தெளிவாய் வாசனையில்லாமல், ஒருவித க்ஷார ருசியையுடையதாய் இருக்கும்; நீலத்தைப் பச்சையாக்கும்; எண்ணெய்களுடன் சேர்ந்து, சவுக்காரரூபமாய் ஆகும். கண்ணாடிக்குழலால் ஊதினால், வெளுத்துப்போகும்.

Prep. (Take of *Lime* (fresh burnt) ℔ ss., *Aq. dest.* Oxij. The Lime being slaked, is put into a bottle with the rest of the water, and then well shaken together. Close the vessel and set aside, that the undissolved Lime may subside; pour off the clear liquor, when it is required. It may be replaced with fresh water agitating briskly as before, that a fresh supply may be ready.)

செய்முறை.—சுட்டபுதுச்சுண்ணாம்பு, ௮-பலம், ஆவிநீர், ௰௨-பைண்டு. சுண்ணாம்பை கொஞ்சம் ஜலம்விட்டுத்தெளித்து ஒரு சீசாவில்போட்டு, மிகுந்த ஜலத்தை விட்டு, நன்றாகக்குலுக்கிக்கொள்ளவும். புட்டியை காற்றுப்புகாமல் மூடி அசையாமல் தெளியவைத்தால், ஜலத்தில் கரையாதசுண்ணாம்பு அடியில்படியும்; தேவையானபோது ஜலத்தை மேலாக இறுத்துக்கொள்ளவேண்டியது; எவ்வளவு ஜலம் எடுத்துக்கொள்ளுகிறோமோ அவ்வளவு ஜலம் மறுபடியும்விட்டு நன்றாகக் குலுக்கிக்கொண்டால், உபயோகத்துக்கு உதவும்.

Action. Astringent, Antacid, Antilithic, Resolvent in glandular affections.

செய்கை.—ஸங்கோசனகாரி, ஆம்லநாசகாரி, ஷஸ்மரீஷநகாரி, கட்டிகளைக் கரைக்கும், விஷநாபேதகாரி.

Use. In diarrhœa, diabetes, vomiting, heartburn, and other irritations of the stomach and bowels from acidity. From its solvent power upon the mucus of the intestines, it is used to dislodge worms. Milk is also added to lime water to render it less unpalatable. *Externally*, lime water is applied to ring-worm of the scalp and other cutaneous affections, and as a lotion to foul ulcers. It has also been used as an injection in leucorrhœa, and ulceration of the bladder. Lime is sometimes used in the form of Ointment.

உபயோகம்.—அஜீரணபேதி, அதிமூத்திரரோகம், வமனரோகம், குலெரிவு,முதலிய வயிற்றில் புளிப்புத்தட்டிக்காணுகிறரோகங்களுக்குக்கொடுக்கலாம். குடலில் இருக்கிற ஆமத்தை நீராக்கிவிடுகிற குணம் இதற்கு இருப்பதால், கிருமிகளை வெளிப்படுத்த இதுகொடுக்கப்படும். வாய்க்குஇனிப்பாயிருக்கச் சுண்ணும்புஜலத்துடன், பாலைச்சேர்ப்பதுண்டு. தலையில் காணுகிற கரப்பான் முதலிய சருமரோகங்களுக்கு, இது மேலுக்குப்போடப்படும். துஷ்ட விரணங்களுக்கு, இதைக்கழுவதாக உபயோகப்படுத்தலாம். ஸ்திரீகளுக்குக்காணுகிற வெள்ளைக்கு அல்குலிலும், மூத்திரப்பையில் காணுகிற விரணத்துக்கு மூத்திரப்பையிலும், பீச்சாங்குழலால் பிரயோகப்படுத்தலாம். சுண்ணும்பைக் களிம்பாகச்செய்து, உபயோகப்படுத்துவதும் உண்டு.

Dose. f℥ij.—f℥viij. three or four times aday.

ஒ. அளவு.—உ-முதல்—அ-அவு. விதம் தினத்துக்கு, ௩-௪-தடவை பாலில் கலந்துகொடுக்கலாம்.

℞ Liquoris Calcis; Lactis recentis, ana ℥iv. Give a tablespoonful at intervals of half an hour, an hour, or two hours. *To allay Nausea and vomiting.*—Dr. Wood.

குமட்டல், வாந்தி இவைகள்நிற்க. — சுண்ணும்புத்தண்ணீர், ச - அவு. அப்போது கரந்த பால், ச—அவு. இ. மி. ஒருடேபில் ஸ்பூன்என்னும் கரண்டிவிதம், ½-௧-உ-மணிக்கொருதரம் கொடுக்கவும்.—இது டாக்டர் உட் என்பவருடையமுறை.

### Linimentum Calcis. *Liniment of lime. Carron Oil*

லினிமெண்டம் கால்ஸிஸ்—லினிமென்ட் ஆவ் லைம் - கரான்ஆயல் - சுண்ணும்புஜலத்தயிலம்.

Prep. Agitate briskly together equal parts of *Lime Water*, and *Olive Oil.*

செய்முறை.—சுண்ணும்புத்தண்ணீர், ஆலிவ் ஆயல் என்னும் சீமைஎண்ணெய், இவைகளைச் சமனிடையாகச்சேர்த்து, குலுக்கிக்கொள்ளவும். அலிஸிவிரைஎண்ணெய்யைச்சேர்த்து (Linseed Oil) செய்வதும்உண்டு. தேங்காய்எண்ணெய், எள்ளெண்ணெய் இவைகளில் எதையாவதுசேர்த்தும் செய்துகொள்ளலாம்.

Use. In Burns, and Scalds.

உபயோகம்.—நெருப்பாவது,வெந்நீராவதுபட்டுப் புண்ணானதற்கு, இந்தத் தயிலத்தைப்பூசுவது வழக்கம். கர்ப்பூரத்தயிலத்தை (Turpentine), இத்துடன்சேர்ப்பதும் உண்டு.

**CALCIS CARBONAS.** *Carbonate of Lime.* ($CaO$, $CO_2$ — 50).

கால்ஸிஸ் கார்போனஸ். கார்பொனேட் ஆவ் லைம். சுண்ணும்பு.

DESCRIP. AND PROP. இந்தபதார்த்தம் விஸ்தாரமாக எங்கும் வியாபித்து இருக்கின்றது. அனேகசெடிகளைச்சுட்டு, அந்த சாம்பலில் இருந்து எடுக்கப்படும்; எலும்பிலும்இந்தச்சுண்ணும்பு இருக்கின்றது; பலவிதசிப்பிசில், பலகறை, பவளம் முத்து, இவைகளைச்சுட்டு இந்த சுண்ணும்பு எடுக்கப்படும்; தமிழ் வைத்திய ஸாஸ்திரங்களில் சொல்லிஇருக்கிற பவளச்சுண்ணம், முத்துச்சுண்ணம், அண்டச் சுண்ணம் முதலியவைகள், கார்பொனேட் ஆவ் லைம் என்னும் சுண்ணும்பேயொழிய வேறல்ல. எதிலிருந்து இந்தச்சுண்ணும்பைச் சேகரித்தபோதிலும், அதின் குணம் வித்தியாசப்படாது. இது ஹிந்துவைத்தியருக்குள் இருக்கிற அவுஷதங்களில், ஒரு முக்கியமானமருந்து. சுவரில் பூசியிருக்கிற சுண்ணும்பு நாள்பட்டால், காற்றில் இருக்கிற கார்போனிக்ஆஸிட் என்கிறவாயுசேர்ந்து, பூத்து உதிர்ந்துவிடும்; இது வும் கார்பொனேட் ஆவ் லைம் என்னும் சுண்ணும்புதான்.

**Calcis Carbonas Dura.** *Marble.* வெள்ளைக்கல்-சலவைக்கல்.

வெள்ளைக்கல் ஓர்வித கார்பொனேட் ஆவ் லைம் என்னும் சுண்ணும்பு. வெள்ளைக்க ல்லுடன் திராவகங்களைச்சேர்த்தால், அதிலிருக்கிற கார்போனிக் ஆஸிட் காஸ் என் னும் வாயு வெளிப்படும்.

**Calcis Carbonas friabilis.** *Creta. Chalk.*

கிரிடா - சாக் - சீமைச்சுண்ணும்பு.

DESCRIP. AND PROP. இது எல்லோருக்குந் தெரிந்தபதார்த்தம்; வெள்ளை யாய் மண்போலிருக்கும்; ருசியில்லை; நாக்கில்ஒட்டிக்கொள்ளும்; எளிதில்தூளாகு ம்; சிலவேளைஉறுதியாய் இருப்பதும்உண்டு; இவ்விரண்டில் எதையாவது உப யோகப்படுத்திக் கொள்ளலாம்; ஆனால் மிருதுவாய் இருப்பதை அவுஷதங்களுக்கு உபயோகப்படுத்தப்படும். இதற்கும், வெள்ளைக்கல்லுக்கும் பேதமில்லை. இதைச் சுத்திசெய்து அவுஷதங்களுக்கு உபயோகப்படுத்தலாம்.

**Creta Præparata.** *Prepared Chalk.*

பிரிபேரெட் சாக். சுத்திசெய்த சீமைச்சுண்ணும்பு.

PREP. (Friable Carbonate of lime, rubbed into the finest powder, and washed.)

செய்முறை.— தேவையானசுண்ணும்பை எடுத்துக்கொண்டு, கலுவத்திலி ட்டு ஜலம்விட்டு செவ்வையாகஅரைத்து, பிறகு ஜலம்நிறைந்து இருக்கிறகுடத்தில் ஊற்றி தீவிரமாய்க்கலக்கி கொஞ்சநேரம்அசையாமல் தெளியவைத்து பால்போ லிருக்கிறஜலத்தை வேறொருபாத்திரத்தில் ஊற்றி, மிதந்துகொண்டிருக்கிற சன்ன மானபொடிகளைமெதுவில் அடியில் படியும்படிச்செய்துகொள்ளவும். முன்புபாத்திர த்துக்கடியில் தீவிரமாய் படிந்துவிட்டதையும், இவ்விதமாய்ச்செய்துகொண்டு, வடி கட்டிச்சன்னமானபொடியைசேகரித்துக்கொண்டு உலர்த்திக்கொள்ளவேண்டியது.

ACTION. Antacid, Absorbent, Desiccant; from allaying irritation, apparently Astringent.

செய்கை.—ஆம்லநாஸகாரி, ஈணங்களிலிருக்கிற சீழை வறட்டும்; ஸங்கோசனகாரி.

USE. In diarrhœa, heartburn, acidtiy of the stomach & bowels. *Externally*, it is used to absorb acrid discharge from ulcers, burns, &c.

உபயோகம்.—அதிசாரம், குலெளிவு, வயிற்றில் புளிப்புத்தட்டியிருக்குதல் இந்தரோகங்களுக்குக் கொடுக்கலாம். விரணம், அக்கினிவிரணம், வெந்நீர்விரணம் இவைகளில்வடிகிற விஷசலத்தை இழுத்துக்கொள்ள, அவைகளின்மேல் தூவி போல்டீஸ் போடப்படும். சீமைச்சுண்ணும்பை நாள்படச்சாப்பிட்டால், குடலிற்சேர்ந்து கெடுதிச்செய்யும்; ஆகையால், அடிக்கடி மலம் கழியும்படிச் செய்யவேண்டியது.

DOSE. gr. x.—ʒj.; but usually given in some of the following preparations.

ஒ. அளவு.—ய-கிரே. முதல், க-திரா. கொடுக்கலாம்; ஆனால் அடியில் வருகிற சில ரூபங்களாகச்செய்து, வழக்கமாய் உபயோகப்பட்டு வருகிறது.

**Mistura Cretæ.** *Chalk Mixture.*

சாக்மிக்ஸ்சர். சீமைச்சுண்ணும்புக்குழம்பு.

PREP. (Take Prepared Chalk ℥ss., Sugar ʒiij., Mixture of Acacia f℥iss., Cinnamon water f℥xviij., Mix.)

செய்முறை.—சுத்திசெய்த சீமைச்சுண்ணும்பு, ௨-அவு. சருக்கரை, ௩-திரா விளாம்பிசின்பாகு, க௨-அவு. லவங்கப்பட்டை ஜலம், யஅ-அவு. இ. மி.

ACTION. Antacid, Demulcent.

செய்கை.—ஆம்லநாஸகாரி, ஸினிக்தகாரி.

USE. Much employed in Diarrhœas arising from acidity.

உபயோகம்.—வயிற்றில் புளிப்புத்தட்டிக்காணுகிறபேதிகளுக்கு, சீமைச்சுண்ணும்புக்குழம்பு வழக்கமாய் உபயோகப்பட்டு வருகிறது. இந்தக்குழம்புடன் பரிமளாதிரவியலேகியம் (Aromatic Confection) காசுக்கட்டி, அபினி இவைகளைச் சேர்த்துக்கொடுத்தால் அதிக பிரயோஜனத்தைத்தரும்.

DOSE. f℥ss.—f℥ij. every three or four hours.

ஒ. அளவு.—௨-முதல், உ-அவு. அளவுக்கு, ௩-அல்லது, ச-மணி நேரத்துக்கு ஒருதரம் கொடுக்கலாம்.

℞ Misturæ Cretæ, f℥viss., Vini Ipecacuanhæ, fʒiss., Tinct. Camphoræ comp. fʒvj., Syrupi Tolut. fʒiij. Misce: Capiat Cochle duo larga ter quaterve in die. In advanced stage of Bronchitis, with Diarrhœa.—DR. COPLAND.

அதிசாரபேதியோடுங்கூடிய காசரோகத்துக்கு.—சீமைச்சுண்ணும்புக் குழம்பு, சுஉ-அவு. வைனம் இபிகாக், க௨-திரா. கலவை கர்ப்பூரப்பாவனைத்திரவம், சு-திரா. ஸிரப்ஆவ்டொலு, ௩-திரா. இ. மி. உ-பெரியகரண்டிவீதம் ௩-ச-மணி நேரத்துக்கொருதரம் கொடுத்துக்கொண்டுவரவும்.—இது, டாக்டர் கோப்லாண்டு என்பவர்முறை.

**Pulvis Cretæ Compositus.** *Compound powder of Chalk.*

கம்பவுன் பவுடர்ஆவ் சாக். சீமைச்சுண்ணும்புக் கலவைச்சூரணம்.

PREP. (Reduce separately to finepowder Prepared chalk ℔ss., Cinnamon, ℥iv., Tormentil root and Gum Arabic ā ā ℥iij., and Long Pepper ℥ss. Mix well.)

செய்முறை.—சுத்திசெய்த சீமைச்சுண்ணும்பு, ௮-பலம். கருவாப்பட்டை, ச-அவு. டார்மென்டில் ரூட், ௩-அவு. விளாம்பிசின், ௩-அவு. திப்பிலி, ௧-அவு. இவைகளை வெவ்வேறாக சன்னத்தூளாய்ச் செய்துகொண்டு, பிறகு ஒன்றாய் மிஸ்ரமித்துக்கொள்ளவேண்டியது.

ACTION. Antacid, Stimulant, and Astringent.

செய்கை.—ஆம்லநாஸகாரி, உஷ்ணகாரி, ஸங்கோசனகாரி.

USE. In diarrhœas of low states of the constitution.

உபயோகம். இந்தச்சூரணம், மெலிந்த தேசமுடையவர்களுக்குக் காணுகிற அதிசாரபேதிக்கு, உபயோகப்பட்டுவருகின்றது.

DOSE. gr. v.—℈j.

ஒ. அளவு.—௫-முதல், ௨௰-கிறேன். அளவுக்குக்கொடுக்கலாம்.

*In Diarrhœa of Children.* குழந்தைகளுக்குக் காணுகிற பேதிக்கு:—சீமைச்சுண்ணும்புக் கலவைச்சூரணம், ௰அ-கிறேன். வறுத்த கார்பொனேட்ஆவ்ஸோடா, ௬-கிறேன். விளாம்பிசின், ௰௨-கிறேன். இ. மி. ௬-பாகமாக்கி, ௨-அல்லது, ௩-மணிநேரத்துக்கொருதரம், ஒருபாகம் கொடுத்துக்கொண்டுவரவும்.

**Pulvis Cretæ Compositus Cum Opio.** *Compound powder of Chalk with Opium.*

கம்பவுன் பவுடர்ஆவ் சாக்உத் ஓபியம். அபினிகலந்த சீமைச்சுண்ணும்புக் கலவைச்சூரணம்.

இந்தச்சூரணஞ் செய்கிற முறையும், இதன் குணமும், பிரயோஜனமும், அபினியைக்குறித்துச் சொல்லுகிற இடத்தில் விவரிக்கப்படும்.—சவு-கிறேன். சூரணத்தில், ௧-கிறேன். அபினி இருக்கின்றது.

**Confectio Aromatica.** *Aromatic Confection.*

ஆரோமாடிக் கன்பெக்ஷன். பரிமளதிரவியலேகியம்.

PREP. (Rub into a very fine powder Cinnamon and Nutmegs ā ā ℥ij., Cloves ℥j., Cardamoms ℥ss., Saffron ℥ij., Prepared chalk ℥xvj., Sugar ℔ ij. Keep in a close vessel & whenever the Confection is to be used, add f℥ij. of water to each ounce; & mix all well together.)

செய்முறை.—கருவாப்பட்டை, ௨-அவு. ஜாதிக்காய், ௨-அவு. லவங்கம், ௧-அவு. ஏலம், ௧-அவு. குங்குமப்பூ, ௨-அவு. சுத்திசெய்த சீமைச்சுண்ணும்பு, ௰௬-அவு. சருக்கரை, ௨-பலம். இவைகளைச்சன்னமாய்த்தூள்செய்து, காற்றுப்போகாமல் புட்டியிலடைத்து, உபயோகிக்கிறபோது, ௧-அவு. சூரணத்துக்கு, ௨-டிராம். வீதம் ஜலம்விட்டு, எல்லாம் செவ்வையாய் மிஸ்ரமிக்கும்படி அரைத்துக்கொள்ளவேண்டியது.

ACTION. Antacid, and Cordial.

செய்கை.—ஆம்லநாஸகாரி, சாடராக்கினிவர்த்தனகாரி.

Use. Useful in Diarrhœa and an excellent addition to Rhubarb and Magnesia and such powders for children.

உபயோகம்.—குழந்தைகளுக்குக்காணுகிற பேதிக்குக்கொடுத்தால் மெத்த நன்மைசெய்யும். ரேவல்சீனி, மாக்னீஷியா முதலியவைகளுடன் சேர்த்துக்கொடுக்க உதவும்.

Dose. gr. v. or gr. x.—ʒj.

ஔ அளவு.—௫ - கிறே. அல்லது, ௰ - கிறே. முதல், ௧- திராம்கொடுக்கலாம்.

*In Diarrhœa of Children.*—குழந்தைகளுக்குக் காணுகிற அதிசாரபேதிக்கு.— லவங்கப்பட்டைஜலம், ௬௰ - அவு. சீமைச்சுண்ணும்புக்குழம்பு (Chalk mixture) ௪ - திரா. பரிமளதிரவியலேகியம், ௧ - திரா. லைகர்ஒபைஸிடேடைவஸ் (Liq. Opii Sedat.) ௰௫ - மினம். இ. மி. ௧ - தேக்கரண்டியீதம் மணிமணிக்குக் கொடுக்கவும்.

**CALX CHLORINATA.** *Chlorinated Lime. Hypochlorite of Lime. Chloride of lime. Oxymuriate* of *Lime. Bleaching Powder.*

கால்க்ஸ் குளோரினேடா. குளோரினேடெட்லைம். குளோரைட்ஆவ் லைம். பிளீசிங்பவுடர்.

Action. Irritant, Stimulant, Disinfectant, Antiseptic.

செய்கை.—எரிச்சலைத்தரும், உஷ்ணகாரி, நாற்றங்களைப்போக்கும், அழிப்போகுதலைத்தடுக்கும்.

Use. In solution as a lotion and gargle.

உபயோகம்.—ஜலத்தில்கரைத்து லேதமாகவும், வாய்கொப்புளிக்கவும் உபயோகப்படுத்தப்படும். தரையிலும், சுவர்களின்மேலும் தெளித்தால், நாற்றத்தைப்போக்கும்.

**Calcii Chloridum.** *Calcis Murias. Chloride of Calcium.* (Ca Cl=56).

கால்ஸிகுளோரிடம். குளோரைட்ஆவ்கால்ஸியம்.

இந்தஉப்பு அதிகவிரைவில் நீராகிவிடும். உள்ளுக்குக்கொடுத்தால் கட்டிகளைக் கரைக்கும். ஆனால் இதைவிசேஷித்து உபயோகப்படுத்துகிறதில்லை.

**Calcis Phosphas Præcipitatum,** *Precipitated Phosphate* of *Lime. Bone Phosphate of Lime.* (3 CaO, $PO_5$=156).

கால்ஸிஸ் பாஸ்பஸ் பிரிஸிபிடேடம். பிரிஸிபிடேடெட் பாஸ்பேட் ஆவ் லைம். அஸ்திச்சுண்ணம்.

Descrip and Prop. விவரணம். குணங்கள்.— இந்தச்சுண்ணும்பு வெள்ளையாயும், தூளாயும் இருக்கும்; ருசியில்லை; ஜலத்தில் கரையாது.

Prep. செய்முறை.—எலும்பைக் கறியுப்புத்திராவகத்திற்போட்டு, நவாக்ஷார ஜெயநீரைச்சேர்த்தால், அடியில் வண்டல்படியும்; அதையெடுத்துக்கொண்டு,கழுவி உலர்த்தி, சன்னத்தூளாய் செய்துக்கொள்ளவேண்டியது.

Action. Operation uncertain.

செய்கை.—இந்த உப்பினுடையசெய்கையை நிச்சயித்துச்சொல்லக்கூடாது.

USE. "In rickets, scrofula, diarrhœa, ulceration, and excoriations of the skin & bowels, and general wasting of children; it also promotes the cicatrization of ulcers, & the union of fractures, where there is a deficient secretion of phosphate of lime." It is a constituent of James's Powder, & of Pulv. Antim. Comp.

உபயோகம்.—குழந்தைகளுக்குக்காணுகிற அஸ்திமனரோகம், கண்டமாலை ரோகம், பேதி, விரணங்கள், தோலுரிவு, இளைத்துப்போகுதல், இந்தரோகங்களுக்குக்கொடுக்கலாம். விரணங்கள் ஆறும்போது பக்கு கட்டுதலைத் தீவிரப்படுத்தும்; பாஸ்பேட்ஆவ்லைம் என்னும் சுண்ணும்புகுறைந்து, முறிந்த எலும்புக்கூடாமல் இருப்பதற்கு, இதைக்கொடுத்தால் ஜலதியில் கூடவைக்கும். ஜேம்ஸஸ்பவுடர், கம்பவுண்டு ஆண்டிமோனியல் பவுடர் இவைகள், இதைக்கூட்டிச்செய்யப்படும்.

DOSE. gr. x.—ʒss.

ஒ. அளவு.—௰ - கிறே. முதல், ½ - திராம்வரையில்கொடுக்கலாம்.

## EARTHY METALS.

### MAGNESIUM. (Mg = 12).

மாக்நீஷியம். காந்தமண்சத்து.

DESCRIP. AND PROP. விவரணம். குணம்.—இந்தபதார்த்தம் இரும்புநிறமாயும், மினிமினிப்பாயும், உறுதியாயும் இருக்கும்; காற்றுப்பட்டாலும், ஜலம்பட்டாலும் கெட்டுப்போகாது; சிலஊற்றுஜலத்திலும், அப்பிரகத்திலும், பூண்டுகளிலும், பிராணிகளின்தேகத்திலும், முக்கியமாய் மூத்திரத்திலும் இந்தப்பதார்த்தம் இருக்கிறது.

### MAGNESIA. (Mg O=20).

மாக்நீஷியா.

DESCRIP. AND PROP. விவரணம். குணம்.—மாக்நீஷியா என்கிற பதார்த்தம், வெள்ளையாயும், லேசாயும், சன்னத்தூளாயும் இருக்கும்; இதற்கு வாசனையில்லை; மணலைப்போல் ருசியையுடையது; ஜலத்தில் கரையாது; சாராயத்தில் அல்பமாய்க் கரையும்; காற்றிலிருக்கிற ஜலத்தையும், கார்போனிக் ஆஸிட் என்கிற வாயுவையும் கிரகிக்கும்; இத்துடன் திராவகங்கள் அதித்துரையில்சேர்ந்து உப்பாகும். ஆதியில் இந்தச்சரக்குக்கும், கார்பொனேட்ஆவ் லைம் என்னும் சுண்ணும்புக்கும் பேதமில்லை யென்று எண்ணப்பட்டிருந்தது.

PREP. (Take Carb. Magnesia ℔ j.; burn it for two hours in a very strong fire.)

செய்முறை.—௧-பவுன் கார்பொர்னேட்ஆவ்மாக்நீஷியா என்னும் சரக்கை எடுத்துகொண்டு, ௨-மணி நேரம் காட்டாக்கினியிட்டெரித்தால், அதிலிருக்கிற கார்போனிக்ஆஸிட் என்கிற வாயு நீங்கிப்போய், மாக்நீஷியாமாத்திரம் நிற்கும்.

ACTION. Antacid, Laxative.

செய்கை.—ஆம்லநாஸகாரி, மலகாரி.

USE. "In acidity of the Stomach, when it forms soluble Magnesian Salts."

உபயோகம்.—வயிற்றில் புளிப்புசேர்ந்து இருப்பதற்குக் கொடுத்தால், அந்தப்புளிப்போடுசேர்ந்து, உப்பாகி, மலத்தைக் கழிக்கும்.

DOSE. Antacid, gr. x.—xxx.; as a laxative, ℈j.—ʒj.; for infants, gr. ij.—gr. x.

ஓ. அளவு.—௰-முதல், ௩௰-கிறே. கொடுத்தால் புளிப்பைக் கண்டிக்கும்; ௨௰-கிறே. முதல், ௪-கிரா. கொடுத்தால், மலத்தைக்கழிக்கும்; குழந்தைகளுக்கு, ௨-முதல், ௰-கிறே. கொடுக்கலாம்.

**MAGNESIÆ CARBONAS.** *Carbonate of Magnesia.* (Mg O, $CO_2$=42).

மாக்நீஷியா கார்பொனஸ். கார்பொனேட்ஆவ்மாக்நீஷியா. காந்தமண்பஸ்மம்.

DESCRIP. AND PROP. விவரணம் குணம்.—காந்தமண் பஸ்மமானது வெள்ளையாயும், இலேசாயும், தொட்டால் மிருதுவாயும், வாசனையற்றதாயும், மண்ணுக்குடைய ருசியையுடையதாயும் இருக்கும்; காற்றுப்பட்டால் கெட்டுப்போகாது; ஜலத்தில்கரையாது; அக்கினியாலும், திராவகத்தாலும் அதிலிருக்கிற வாயு நீங்கிவிடும்.

PREP. (Dissolve Sulph. Magnesia ℔iv., Carb. Soda ℔iv., ℥ix., each, separately in boiling Aq. dest. Cii. and strain. Then mix the solutions and boil for two hours, constantly stirring with a spatula; dist. water being frequently added that it may fill the same measure; lastly, the solution being poured off, wash the precipitated powder with boiling dist. water, and dry it.)

செய்முறை.—௪-பவுன் சீமை இந்துப்பு, ௪-பவு. ௯-அவுன்ஸ் கார்பொநேட் ஆவ் ஸோடா, இவைகளை வெவ்வேருக, ௨-காலன் சுத்தஜலத்தில்கரைத்து, வடிகட்டிக்கொண்டு, பிறகு இரண்டையும் ஒன்ருகச்சேர்த்து. ௨-மணி நேரம் அடிக்கடிகத்தியால்துழவி எரித்து ஜலம் குறையாமல் இருக்கும்படி, அடிக்கடித் திநீரை விட்டுக்கொண்டு இருக்கவேண்டியது; முடிவில் ஜலத்தையிறுத்துவிட்டு அடியில் படிந்திருக்கிற வண்டலை கொதிக்கிற ஆவிநீர்விட்டுக்கழுவி உலர்த்திக் கொள்ளவேண்டியது.

ACTION. Antacid, Laxative.

செய்கை.—ஆம்லநாஸகாரி, மலகாரி.

USE. As an antacid, Magnesia is given in dyspepsia, heartburn, pyrosis, gouty and lithic disorders. As a laxative, it is very safe in the various affections of children. Combined with rhubarb it is given in diarrhœa, and as an ordinary purge.

உபயோகம்.—மாந்தம், குலேயெரிவு, தினிப்பையில் எரிச்சல், கணுவாதரோகம், ஹஸ்மரீரோகங்கள் இவைகளில் புளிப்பைக்கண்டிக்கும்படியாய், காந்தமண்பஸ்மத்தைக் கொடுக்கலாம். குழந்தைகளுக்குக்காணுகிற ரோகங்களுக்கு இந்த பஸ்மத்தைக்கொடுத்தால், உபத்திரவஞ்செய்யாமல் மலத்தைப்போக்கும். இந்த பஸ்மத்தை ரேவல்சீனியுடன் சேர்த்து அஜீரணபேதிக்கும், வழக்கமாய் கொடுக்கிற பேதிக்கும் கொடுக்கலாம்.

DOSE. gr. v.—ʒj. as an Antacid; gr. xv.—ʒj. as a Laxative, with water, milk, &c. 14 gr.=ʒj. Citric acid in effervescence.

ஒ. அளவு. — ரு-முதல், உ௰-கிறே. கொடுத்தால் புளிப்பைக்கண்டிக்கும். ௰ரு-கிறே. முதல் க-திரா. கொடுத்தால், மலத்தைக்கழிக்கும். இதை ஜலம், பால் முதலியவைகளில் கொடுக்கலாம். ௧௪-கிறே. கார்பொனேட்ஆவ் மாக்னீஷியாவுடன் உ௰-கிறே. ஸிட்ரிக் ஆஸிட் சேர்த்தால் பொங்கும், அப்போது குடித்துவிடவேண்டியது. இந்த பஸ்மத்தை நாள்பட்ட சாப்பிட்டால் வயிற்றில்சேர்ந்து கல்லாய்க் கட்டுவதும் உண்டு.

R Magnesia, ʒij., Rhubarb, gr. xv., Ginger, gr. v. Mix. To be taken occasionally in *Habitual Constipation*.

சுவாபீகமான மலபந்தத்துக்கு:—மாக்னீஷியா, உ-ஸ்குருபில். ரேவல்சீனிசூரணம், ௰ரு-கிறே. சுக்குத்தூள், ரு-கிறே. இ. மி. தேவையானபோது எடுத்துக்கொள்ளவேண்டியது.

**MAGNESIÆ SULPHAS.** *Sulphate of Magnesia. Epsom Salts.* ($MgO,SO_3+7$ Aq.=123).

மாக்நிஸியி ஸல்பஸ். ஸல்பேட்ஆவ் மாக்நீஷியா. எப்ஸம்ஸால்ட்ஸ்.

சீமை இந்துப்பு.

DESCRIP. AND PROP. விவரணம். குணம்.—இந்த உப்பை ஆதியில் எப்ஸம் என்கிற தேசத்தில் தெரிந்துக்கொண்டதால், இதற்கு எப்ஸம்ஸால்ட்ஸ்என்று பெயரிடலாச்சுது. இந்த உப்பு அநேக இடங்களில் பூமிமேல் பூத்திருக்கும்; கந்தகஞ்சேர்ந்த கல்லுகளின்மேல் படிவதும் உண்டு; அனேக ஊற்று ஜலத்திலும், சமுத்திர ஜலத்திலும் இது இருக்கின்றது. இந்த உப்பு ஊசியைப்போல் நீண்டு வெள்ளையாயும், பிரகாசமாயும், உவர்ப்பும் கசப்பும் உள்ளதாயும் இருக்கும்; உப்பில்தோஷமிருந்தால், அது நீராகிவிடும்; பரிசுத்தமான உப்பு, காற்றுப்பட்டால் தூளாகிவிடும். இந்த உப்பு ஜலத்தில் கரையும். சாராயத்தில்கரையாது.

PREP. (The bittern of sea-water, which is left after the crystallization of Common Salt, contains Sulph. Magnesia and Chlor. Magnesium. By simple evaporation the Sulph. Magnesia my be separated by crystallization.

செய்முறை.—சமுத்திரஜலத்திலிருந்து கறியுப்பை எடுத்துக்கொண்டபிறகு, நிற்கிற ஜலத்தில் ஸல்பேட்ஆவ் மாக்னீஷியா என்கிற உப்பும், குளோரைட்ஆவ் மாக்னீஷியம் என்கிற பதார்த்தமும் கலந்திருக்கும்; அந்த நீரைச்சுண்டக்காய்ச்சி, உப்பு கட்டும்படிச்செய்து, சீமை இந்துப்பை யெடுக்கப்படும். ஸல்பேட்ஆவ்ஜிங்க் (Sulphate of zinc) என்கிற உப்பும், அக்ஜாலிக் ஆஸிட் (Oxalic acid) என்கிற உப்பும், இதைப்போலவேயிருக்கும், ஆகையால் ஜாக்கிரதையாய் வித்தியாசத்தைத்தெரிந்து கொள்ளவேண்டியது.

ACTION. Hydragogue Cathartic, Diuretic.

செய்கை.—ஜலவிரேசனகாரி, மூத்திரவர்த்தனகாரி.

USE. "Being cooling in its operation, it is particularly adapted for use in inflammatory disorders of all kinds. It is one of the most frequent-

ly used of all purgative medicines. It is very often conjoined with senna in the prescription of a cathartic dose."

உபயோகம்.—சீமை இந்துப்பு வயிற்றைக்கடுக்காமல் பேதியாக்குவதால், தாபனரோகங்க ளெல்லாவற்றுக்கும் உபயோகப்படுத்தத் தகுதியானது. எல்லா பேதி மருந்துகளைப்பார்க்கிலும் இதை அடிக்கடி உபயோகப்படுத்தப்படும். நிலே ஆவாரை கஷாயத்துடன் சாதாரணமாய்ச்சேர்த்து பேதிக்குக்கொடுக்கப்படுகின்றது. எதுவும் வயிற்றில்தங்காமல் வாந்தியாகிறபோது; இந்த உப்புடன் ரோஜாபூ வெந்நீர்க்கஷாயஞ் சேர்த்து, கொஞ்சங் கந்தகத்திராவகம்விட்டுக் கலந்துக்கொடுத்தால், வயிற்றில்தங்கி பேதியாகும். இந்த உப்புடன் எவ்வளவு ஜலம்விட்டுக் கொடுக்கிறமோ அவ்வளவுக்கும் நன்றாயும், சுலபமாயும் பேதியாகும். ஆஸனத்தில் பிரயோகிக்கிற மருந்துகளுடன் இதைச்சேர்க்கப்படுகின்றது. டார்டர்மெடிக் (Tartar Emetic) என்னும் வாந்திமருந்தைச் சேர்த்துக்கொடுத்தால், பேதியாக்கிறகுணம் அதிகமாகும். கர்ப்பணிகளுக்கும்,குதகசூலேரோகமுடையவர்களுக்கும்,சீமைஇந்துப்பை சாக்கிறதையாய் கொடுக்கவேண்டியது. சிலவேளை இது வாயுவையுண்டாக்கிறதும் உண்டு, ஆகையால் வாயுவை கண்டிக்கிற மருந்துகளோடு சேர்த்துக்கொடுத்தால் நல்லது. இதை பேதிக்குச் சாப்பிட்டபிறகு, காற்றில் உலாத்திக்கொண்டிருந்தால், பேதிமட்டாகி, மூத்திரத்தை அதிகப்படுத்தும். வாந்திபேதிகாலங்களில், இதைக்கொடுக்கலாகாது.

Dose. ʒij.—℥j. or ℥ij. In Enemata, ℥j—ʒij in some demulcent mixture.

ஔ. அளவு.—உ-திரா. முதல், க-அல்லது உ-அவுன்ஸ் வரையில் கொடுக்கலாம். க-முதல், உ-அவு. வரையில், குழகுழப்பான எந்தஜலத்திலாவது சேர்த்து ஆஸனத்தில் பிரயோகிக்கலாம்.

℞ Inf. rosæ, ℥vss., Magnes. Sulph. ʒvi. Syr. limonis, ℥ss. Mix, and make a mixture. One or two table spoonfuls for a dose.

ரோஜாப்பூ வெந்நீர்க்கஷாயம், ருஉ-அவு. சீமை இந்துப்பு, சு-திரா. எலுமிச்சம்பழப்பாணிதம், ௧-அவு. இ. மி. மிகிஸ்சர்செய்து, இதில் க-அல்லது உ-கரண்டியீதம் ஒரு வேளைக்குக் கொடுக்கலாம்.

*In Fever.* ஜுரத்துக்கு:—சீமையிந்துப்பு கஉ-அவு. டார்டர்மெடிக், (Tartar Emetic) உ-கிறே. ஜலம், யஉ-அவு. இ. மி. இதில், உ-ச-அவு. அளவுக்கு, க-உ-மணி நேரத்துக்கொருதரம் கொடுக்கவும்.

சீமை இந்துப்பு, சு-வராகனிடை; மேனு, உ-வராகனிடை; வ-ஆழாக்கு சுத்தஜலத்தில் கரைத்துக்குடித்தால், செவ்வையாய் பேதியாகும்.

சீமை இந்துப்பு, க-அவு. டார்டர்மெடிக், க-கிறே. ஸ்பிரிட் ஈதர் நைட்ரொஸி, உ-திரா. பெப்பர்மெண்டு ஜலம், யீ-அவு. இ. மி. க-பெரிய கரண்டி அளவுக்கு, ங-ச-மணி நேரத்துக்கொருதரம், ஸ்தூல சரீரமுடையவர்களுக்குக் கொடுத்தால், குமட்டலோடு பேதியாகும்.

## ALUMINIUM AND ALUMINA. (Al = 14) ($Al_2O_3$ = 52).

அலுமினம்-அலுமினியா. படிக்காரச்சத்து-சினக்காரச்சத்து.

இந்தப்பதார்த்தம், ஸிலிகா (Silica) என்கிற பதார்த்தத்துடன் சேர்ந்திருக்கும். களிமண்ணிலும் அனேக கல்லுகளிலும் இந்த வஸ்துவைக் கண்டெடுக்கலாம்.

அலுமினியா என்னும் பதார்த்தத்துக்கு சாயங்களைக் கிரகிக்கிறகுணம் இருப்பதால், துணியில் சாயம் பிடிக்க படிக்காரத்தை உபயோகப்படுத்துகிறார்கள்.

**ALUMEN.** *Alum. Sulphate of Alumina and Potash.* ($KO$, $SO_3$, $Al_2O_3$, $3SO_3 + 24$ Aq. = 476).

அலுமன். ஆலம். படிக்காரம். சீனக்காரம்.

DESCRIP. AND PROP. விவரணம். குணம்—படிக்காரம் அக்கினி மலைப் படிவாரங்களில் அகப்படும். அனேகஇடங்களில், இதைச் செய்வதும் உண்டு. பரிசுத்தமாயிருக்கிற படிக்காரத்துக்கு வாசனையிராது; அது வெள்ளையாயும், தெளிவானதாயும், கட்டியாயும், தித்திப்பு புளிப்பு துவர்ப்போடுங்கூடிய ருசியுள்ளதாயும், இருக்கும்; ஜலத்தில் கரைந்துவிடும்; காற்றுப்படவைத்தால், உப்பிலிருக்கிற ஜலம் போய் தூளாகிவிடும்; படிக்காரத்தைப்பொரித்தால், பொங்கி அதிலிருக்கிற ஜலம் வரண்டு இடைகுறையும்.

ACTION. Astringent, Styptic.
செய்கை.—ஸங்கோசனகாரி, ரக்தஸ்தம்பன்காரி.

USE. "Alum is prescribed in hæmorrhages, chronic diarrhœa, and dysentery, and in atonic discharges generally; also in hooping cough and lead colic. *Locally*, its saturated solution is used as a styptic, and a weaker solution as a lotion, to ulcers and chilblains; as a gargle, in relaxed sore throat, excessive salivation, &c; as a collyrium in chronic ophthalmia, as an injection in gleet, &c. The powder is blown into the throat in diphtherite, &c. Burnt alum is chiefly used as a mild caustic to repress proud flesh.

உபயோகம்.—ரத்தபித்த ரோகங்களுக்கும், நாள்பட்ட அதிசாரபேதிக்கும் சீதபேதிக்கும், கக்குவாய்இருமலுக்கும், வயிற்றுவலிக்கும், படிக்காரத்தைக்கொடுக்கலாம். படிக்காரத்தில் கொஞ்சமாக ஜலம்விட்டுக்கரைத்து மேலுக்குப்போட்டால் ரத்தம்நிற்கும்; அதிகமாய் ஜலம்விட்டுக்கரைத்து ரணங்களுக்குப்போடலாம்; வாய் ரணம், அதிகஉமிழ்நீர்வடிதல் இவ்வைகளுக்கு வாயைக்கொப்புளிக்கலாம்; நாள்பட்டநேத்திரரோகத்துக்கு கண்மேல் கிலேதமாகச்செய்துப்போடலாம்; தந்திமேகத்துக்கு, பீச்சாங்குழலால் நீர்த்தாரையில் அடிக்கலாம். பொரித்த படிக்காரத்தை துர்மாமிசத்தைப்போக்க, காரமாய் உபயோகப்படுத்தப்படும்; இதற்கு நீரைவறட்டுகிறகுணம் இருப்பதால், வாயும், நெஞ்சும் உலர்ந்து, கொஞ்சந்தாகமெடுக்கும்; மலம் இறுகிப்போகும். மிதத்துக்கதிகமாய்ச் சாப்பிட்டால், குமட்டல், வாந்தி, வயிறுகடுப்பு, பேதி இந்ததுர்க்குணங்கள் சம்பவித்து, வயிறுபுண்ணாகிவிடும்.

DOSE. gr.x.—∋i.

ஒ. அளவு.—௰-முதல், ௨௰-கிறே. அளவுக்கு பெரியவர்களுக்குக் கொடுக்கலாம். குழந்தைகளுக்கு, ௧-முதல், ௫-கிறே. கொடுக்கலாம். குறுமாந்தரோகத்துக்கு (Croup) சிலவைத்தியர்கள், தேயிலைக்கரண்டிஅளவுக்கு -௨-வயது குழந்தைகளுக்கு, வாந்திக்குக்கொடுக்கிறார்கள்.

℞ Aluminis, ʒi. Acidi Sulphurici dil. fʒiss., Syrupi simpl. f℥ss., Infusi Rosæ Comp. f℥vij. Misce: sit dosis pars sexta 4 ta quaque hora. *In passive* hæmorrhages.—DR. DRUITT.

ரத்தபித்த ரோகத்துக்கு:—படிக்காரம், ௧-திரா. விளாவின கந்தகத்திராவகம், ௧௦-திரா. சருக்கரைப்பாகு, ஹ-அவு. ரோஜாப்பூ கலவை வெந்நீர்க்கஷாயம், எ-அவு. இ. மி. ௬-ல் ௧-பங்கு, ௪-மணிக்கொருதரம் கொடுக்கவும். இது டாக்டர் ட்ருயிட் என்பவருடைய முறை.

℞ Pulv. Aluminis, ℈j. Pulv. Cubebæ, ℈v. Fiat pulvis ter die sumendus. *In Gonorrhœa.*—M. RICORD.

வெள்ளைவிழுதலுக்கு:—சினக்காரத்தூள், க-ஸ்குரு. வால்மிளகுத்தூள், ரு-ஸ்குரு. இ. மி. சூரணமாக்கி தினத்துக்கு ஙூ-தடவைக்கொடுக்கவும். இது ரைக்கார்ட் என்னுந் துரையின் முறை.

*In Ophthalmia.* — குழந்தைகளுக்குக்காணுகிற கண்ணோவுக்கு:—கூ-கிறே. படிக்காரத்தை, க-அவு. ஜலத்திற்கரைத்து, இந்த ஜலத்தால் கண்ணை, தினத்துக்கு; ச-ரு-தடவை கழுவினால் குணமாகும். அல்லது, சன்னத்துணியை இந்த ஜலத்தில் நனைத்து; கண்ணின்மேல்போட்டு, அந்தத்துணி காயாமல் படிக்கார ஜலத்தைவிட்டு நனைத்துக்கொண்டு இருக்கவேண்டியது. பெரியவர்களுக்கு உபயோகப்படுத்த வேண்டியிருந்தால், சினக்காரத்தை அதிகமாய்ச் சேர்த்துக்கொள்ளவேண்டியது. கண் ரெப்பைகள் அதிகமாய் வீங்கியிருந்தால், காய்ந்து சுடிகையாய் இருக்கிறபாலில், கண்களை, வ-மணி நேரம் கழுவி, பிறகு கண் ரெப்பைகளைநீக்கிப் படிக்கார ஜலத்தைவிட, குணமாகும். ௦-விராகனிடை படிக்காரம், பொடிசெய்து முட்டையின் வெள்ளைக்கருவுடன் கலந்து, அது உறைந்துபோனபிறகு, துணியிற்போட்டு வேறொரு துணியால் அதை மூடி, நோயிருக்கிற கண்ணுக்குப்போட்டு, கொஞ்சநேரம் வைத்து பிறகு எடுத்துவிடவேண்டியது.

*In Bleeding from the nose.*—ரத்தபீனச ரோகத்துக்கு:—உ-விராகனிடை படிக்காரத்தை, க-ஆழாக்கு ஜலத்திற்கரைத்து; அந்த ஜலத்தை மூக்கால் உறியவும்; அல்லது துணியை நனைத்து நாசித்துவாரத்தில்வைத்தால், ரத்தம் நிற்கும். அட்டைக் கடித்தவாயில் வைத்தால் ரத்தம் நிற்கும்.

*In Bleeding piles.*—ரத்தமூலத்துக்கு:—ஜுரமில்லாதபோது, படிக்கார ஜலத்தில் துணியை நனைத்து, மூலத்தின்மேல்போட்டால் ரத்தம்நிற்கும்.

*In Prolapsus ani.*—குதப்பிரம்சரோகத்துக்கு.—படிக்காரத்தை மாசக்காய்வெந்நீர்கஷாயத்திற்கரைத்து, ஙூ-ச-தடவை மேலுக்குப்போட, குணமாகும்.

*In Spitting of blood, and Vomiting of blood.*—ரத்தகாசரோகம், ரத்தவாந்தி இவைகளுக்கு.—உ-விராகனிடை படிக்காரத்தை, ஙூ-ஆழாக்குப்பாலிற் போட்டு, ௰-நிமிஷம்காய்ச்சி வடிகட்டி, குளிர்ந்தபிறகு வ-ஆழாக்குவீதம், ஒரு நாளைக்கு, ஙூ-தடவைக்கொடுத்தால் மெத்தகுணமுண்டாகும். இதைப்பெரும்பாடுக்கும், ரத்தமூலத்துக்கும் கொடுக்கலாம்.

*In Sore throat.*—நெஞ்சிரணத்துக்கு.—உ-விராகனிடைபடிக்காரத்தை, ஙூ-ஆழாக்குமாசக்காய் வெந்நீர்கஷாயத்திற்கரைத்து, கொஞ்சந்தேன்சேர்த்துக் கொப்புளித்தால், நன்மைசெய்யும். குழந்தைகளுக்குக்காணுகிற தத்தியென்கிற வாய்ரணத்துக்கு, உ௰-கிறே. படிக்காரத்தை, க-அவு. தேனிற்கலந்து, அந்தவிரலில் எடுத்து காலையிலும், மாலையிலும், ரணத்தின்மேல் தடவக்குணமாகும்.

**Alumen Exsiccatum.** *Dried Alum.*

அலுமன் எக்ஸிக்கேடம். டிரைட் ஆலம். பொரித்த சினக்காரம்.

படிக்காரத்தை நெருப்பின்மேல்வைத்தால், அதிலிருக்கிற நீர்சுண்டி பொரிந்து இலேசாகிவிடும்; ஆனால் அதிலிருக்கிற குணம் மாறாது.

ACTION. Escharotic.
செய்கை.—விரணகாரி.

DOSE. gr. v.—gr. xv.
ஓ. அளவு.—௫-முதல், ௰௫-கிறேன். கொடுக்கலாம்.

**Pulvis Aluminis Compositus.** *Compound Alum Powder.*

கம்பவுன் ஆலம்பவுடர். படிக்கார கலவைச்சூரணம்.

PREP. (Mix Alum ℥iv. Kino ℥i. and reduce them to fine powder).
செய்முறை.—படிக்காரம், ௪-அவு. கைநோ, ௧-அவு. இவைகளைச்செவ்வையாகச் சூரணித்து மிஸ்ரமித்துக்கொள்ளவேண்டியது.

USE. "This is a useful Astringent in Passive Hæmorrhages and in Chronic Diarrhœas"
உபயோகம்.— ரத்தபித்தரோகங்கள், நீடித்தஅதிசாரரோகங்கள், இவைகளுக்கு துவர்ப்பான மருந்துகொடுக்கவேண்டியதிருந்தால் இதைக்கொடுக்கலாம்.

DOSE. gr. x—ʒss.
ஓ. அளவு.—௰ - முதல், ௩௰-கிறேன் கொடுக்கலாம்.

**Liquor Aluminis Compositus.** *Compound Solution of Alum.*

கம்பவுன் ஸொலூஷன் ஆவ் ஆலம். கலவை படிக்காரஜலம்.

PREP. (Dissolve Alum & Sulphate of zinc, ā ā ℥j. in boiling Aq. Oiij. strain).
செய்முறை.—௩-பைம்டு. கொதிக்கக்காய்ந்த ஜலத்தில், ௧-அவு. படிக்காரம், ௧-அவு. ஸல்பேட் ஆவ்ஸிங்க் இவைகளைப்போட்டுக் கரைத்துக்கொண்டு வடிகட்டிக் கொள்ளவும்.

ACTION. USE. Astringent, styptic lotion. Diluted with Rosewater, used as a collyrium and injection.

செய்கை. உபயோகம்.—ஸங்கோசனகாரி, ரக்தஸ்தம்பனகாரி. இதில் பநிநீர்விட்டுவிளாவி, நேத்திரத்திற்கும்,வெள்ளைவிழுதலுக்கு நீர்த்தாரையிலும், உபயோகப்படுத்தலாம்.

சினைக்காரத்துக்கு, பல்லரணை, ஆனைக்கால், கண்ணோய், துர்மாமிஸம், வாயு, உள்அழலை, குன்மம் இவைமுதலியவைகள் போகுமென்று பதார்த்தகுண சிந்தாமணியில் செப்பி இருக்கின்றது.

## METALS PROPER.

### FERRUM. *Iron.* (Fe=28).

பெர்ரம். ஐரன். அயம். இரும்பு. லோஹம்

DESCRIP. AND PROP. விவரணம். குணம்.—இரும்பானதுபிறவிச்சரக்கு. ஆக்ஸிஜென் (Oxygen) என்னும் வாயுவோடும், கந்தகத்தோடும் கலந்திருப்பது வழக்கம். திராவகங்களோடுசேர்ந்து அன்னபேதிமுதலிய உப்புகளாய் ஆகின்றது. இரும்போடு கரியைச்சேர்த்து ஊதினால், அதிலிருக்கிறதோஷங்கள் நீங்கி, பரிசுத்தமாய் உருகும். சில செடிகளிலும், ரத்தத்திலும், அயம் இருக்கின்றது. ஐரன் ஓர்ஸ்

(Iron ores) என்னும் இரும்புமண்ணிலிருந்து இரும்பையெடுக்கப்படும். இந்தியா தேசத்தில் கருமணலிலிருந்தும், சில இடங்களில், கல்லுகளில் இருந்தும் இரும்பையெடுக்கப்படும். இரும்பு பரிசுத்தமாய் அகப்படுகிறது கடினம்; பரிசுத்தமான இரும்பு, நீலங்கலந்த வெளுமைச்சாயலாய் இருக்கும். துலக்கினால் பளபளப்பு உண்டாகும். தேய்த்தால் ஒருவிதவாசனைபிறக்கும்; நாக்குக்குத் துவர்ப்பாய்இருக்கும்; அடித்துத்தகடாய் தட்டலாம். (Malleable), கம்பியாய் இழுக்கலாம். (Ductile); ஈரக்காற்றுப்பட்டால், துப்புபிடிக்கும். காந்தம் இரும்பை இழுத்துக்கொள்ளும். இரும்பை எரித்தாலாவது, ஈரம்படவைத்தாலாவது காற்றிலிருக்கிற ஆக்ஸிஜென் என்னும் வாயுசேர்ந்து, பஸ்மமாயாவது, சிந்தூரமாயாவது ஆகிவிடும். இரும்புசேர்ந்திருப்பதில், மாசக்காய் வெந்நீர்க்கஷாயஞ் சேர்த்தால், கறுத்தவண்டல் அடியில் படியும். அயஞ்சேர்ந்திருக்கிற அவுஷதங்களைக்குறித்து, தெரிந்துகொள்ளவேண்டிய முக்கியவிஷயங்களாவது:—

தோஷமற்ற இரும்பைச்சாப்பிட்டால் ஒன்றுஞ்செய்யாது; ஆனால் அது வயிற்றில் போனஉடன் குணம்மாறி அவுஷதத்தன்மையைக்காட்டும். அயம்சேர்ந்த மருந்துகளெல்லாம், ரத்தத்தில்கலந்து, அதிலிருக்கிற அணுக்களை (Blood Corpuscles)அதிகப்படுத்தி, நிறத்தையும் அதிகமாய் சிவப்பிக்கும். அதெப்படியெனில்: பாண்டுரோகத்தையுடைய ஒரு ஸ்திரியின் ரத்தத்தை பரீக்ஷித்து அதில் அணுக்கள் சகூ-பங்காக இருந்தபோது, சிலநாள் அயத்தைக்கொடுத்து, மறுபடியும் ரத்தத்தை பரீக்ஷித்தபோது, அணுக்கள கூ0-பங்காக தொகையில் அதிகப்பட்டு, வெளுத்திருந்த தேகமும், உதடுகளும், கன்னங்களும் நிறம்மாறி, முகத்தில் வசீகரத்தை உண்டாக்கினதாய் கண்டிக்கின்றது. அயத்தைச் சாப்பிட்டுக்கொண்டு இருக்கிறவர்களில், அவாள்மூத்திரத்திலும், முலைப்பாலிலும் அயத்தைக்காணலாம். அயம் சாப்பிட்டால் மலம்கறுக்கும், ஜீரணசக்தியை விருத்திப்படுத்தும், பசியை அதிகமாக்கும், நாடியைத் தீவிரப்படுத்தும், சரீரசவுக்கியத்தையுண்டாக்கும். சிலருக்கு இரும்பு சம்பந்தமான அவுஷதங்கள், வயிற்றில் எரிச்சலையுண்டாக்கும். அயத்தை அதிகமாய்ச்சாப்பிட்டால், நஞ்சின்குணத்தைக்காட்டும்.

க - சரீரத்திலிருந்து அதிக ரத்தம் வடிந்தாவது, அல்லது வேறுகாரணத்தினாலாவது உண்டாகிற பாண்டுரோகத்துக்கு (Anæmia), அயச்சிந்தூரத்தையாவது, அல்லது அன்னபேதியையாவது கொடுக்கலாம். சாதாரணமாய் காணுகிற துர்ப்பலனுக்கு, அயஞ்சேர்ந்த, சாந்தமான அவுஷதங்களை, உபயோகிக்கவேண்டியது.

கண்டமாலை சம்பந்தமுடைய் மேகரோகத்துக்கு, (Scrofulous affections) ஐயோடயின்கலந்திருக்கிற அயத்தைக்கொடுத்தால், மெத்தச் சவுக்கியத்தைத்தரும்.

உ-அயஞ்சேர்ந்தமருந்துகள், வயிற்றில்துர்க்குணத்தையுண்டாக்கினால், குராசாணி ஓமச்சத்தையாவது, அல்லது கோனியம் (Conium) என்னும் மருந்தையாவது சேர்த்துக்கொடுத்தால், துர்க்குணத்தைநீக்கிவிடும். ஒருவித அயச்சரக்கு ஒத்துக்கொள்ளாமல்போனால், சாந்தமாயிருக்கிற வேறொருமருந்தைக்கொடுக்கலாம்.

௩-அயம்சாப்பிடும்போது, புளிப்பையும், புளிப்புள்ளபழங்களையும், நீக்கவேண்டியது.

௪ - அயம்சாப்பிட்டால், மலங்கறுத்து கெட்டவாசனையாய் இருக்கும். திரவரூப அயமருந்துகளைச்சாப்பிட்டால் நாக்கு கறுத்துவிடும்.

ரு-அயத்தைக்கொடுநாள் சாப்பிடும்போது, ம - அல்லது மரு- நாளைக்கொருதரம் விட்டு, விட்டு சாப்பிடுவது நல்லது.

சு-பேதிக்குக்கொடுத்தால் அயத்தின்நல்லகுணத்தை அதிகப்படுத்தும்.

எ - பாண்டுரோகத்துக்கு, ரத்தத்தில் தேவையான அயம்சேருகிறவரையில் கொடுக்கலாம். இரத்தத்தில் அயம்அதிகப்பட்டால், அதிதூலரோகம் (Plethora) காணும்; ஜீரணம்மந்தப்படும்; சரீரஸ்திதி தாறுமாறாகிவிடும்.

*Contra - indications.* — தாபனரோகங்களிலும் (Inflammatory affections), ரத்தங்கட்டியிருக்கும்போதும், அதிதூலரோகத்திலும் (Plethora), சுவாபீகமாய் ரத்தபுஷ்டியுள்ள தேகிகளுக்கும், அயத்தைக்கொடுக்கலாகாது.

**Ferrum in Fila Tractum.** *Iron Wire. Ferri Limatura, Iron Filings.* அய்ரன்ஒயர். அயரன்பைலிங்க்ஸ். இரும்புதந்தி, இரும்புகம்பி, அரப்பொடி.

அரப்பொடியை கிருமிரோகத்துச்குக்கொடுக்கலாம்.

DOSE. gr. v. to ℈j.

ஓ. அளவு.—ரு - முதல், உம - கிறே. வெல்லப்பாகோடுசேர்த்தாவது, தேனில் குழப்பியாவது கொடுக்கலாம்.

**Ferri Pulvis.** *Powder of Iron.* பெர்ரைபுல்வஸ். பவுடர்ஆவ்ஐரன். இரும்புசூரணம். இதுமெத்தசன்னமாய்இருக்கும் ; எழுகுநிறமுள்ளது ; காற்றுப்படவைத்தால், ஆக்ஸிஜென்வாயுவை கிரகித்து ஆக்ஸைட்ஆகிவிடுகின்றது.

செய்முறை.—துபாக்கி குழலில் ஆக்ஸையிட் ஆவ்ஐரன்என்னும் அயபஸ்மத்தைப்போட்டு,அடுப்பில்வைத்து எரித்து ஹைட்ரோஜென்வாயுவை பாயவைத்தால், இரும்பிலிருக்கிற ஆக்ஸிஜென்வாயுநீங்கி இரும்பு சூரணமாகிவிடும்.

ஓ. அளவு.—க-முதல், சு-கிறே. வரையில் கொடுக்கலாம்.

**Protoxide of Iron.** *Oxide of Iron.* (Fe O = 36)

ஆக்ஸைட்ஆவ்ஐரன். அயபஸ்மம். லோகபஸ்மம்.

செய்முறை.—அன்னபேதியை ஜலத்தில்கரைத்து, காஷ்டிக்பொட்டாஷ் அல்லது ஸோடா (Caustic Potash or Soda) என்னும் பதார்த்தத்தைச் சேர்த்தால், வெள்ளையானவண்டல் அடியில்படியும்; பிறகு அதின்நிறம் ஊதாவாகி, பிறகு நீலமும் பச்சையுங் கலந்தநிறமாகி கடைசியில் காற்றிலிருக்கிற ஆக்ஸிஜென்வாயு வைக் கிரகித்துச் சிவந்துபோகும்.

**Ferri Sesquioxidum.** *Sesquioxide or Peroxide of Iron. Red Oxide of Iron.* ($Fe_2 O_3 = 80$).

பெர்ரைஸெஸ்குவிஆக்ஸிடம். ஸெஸ்குவிஆக்ஸைட்ஆவ் ஐயரன்

பெர்ஆக்ஸைட்ஆவ் ஐரன். ரெட்ஆக்ஸைட்ஆவ் ஐரன். அயச்சிந்தூரம்

DESCRIP. AND PROP. விவரணம்.குணம்.— அயச்சிந்தூரம்தற்செயலாய் உண்டாகின்றது ; செம்மண்முதலியவைகளில் காணலாம். வெலிகாரத்தோடு சேர்த்தால், பச்சை, அல்லது மஞ்சள்நிற கண்ணாடி ஆகும். வைப்புச்சரக்கானது சிவந்ததாளாய் இருக்கும் ; அதற்கு வாசனையிராது ; இரும்பைப்போல் நாவுக்கு தட்டுப்

படும்; ஜலத்தில்கரையாது; காந்தத்தை இழுக்காது; கறியுப்புத்திராவகத்தில் கரைந்து போய்விடவேண்டியது; இதில் கார்போனிக்ஆஸிட் (Carbonic Acid) என்னும் வாயு சாதாரணமாய்ச் சேர்ந்திருப்பதால், சிலகாலத்துக்குமுன் இதை கார்பொனேட் (Carbonate), ஸப்கார்பொனேட் (Subcarbonate) என்று பெயரிடப்பட்டது. இந்த பஸ்மத்துடன் கறியுப்புத்திராவகஞ்சேர்த்து, மாசக்காய் பாவனத்திரவத்தையாவது, அல்லது அதின் வெந்நீர்கஷாயத்தையாவது சேர்த்தால், கறுப்புவண்டல் அடியில்படியும்; பெர்ரோஸையெனேட்ஆவ்பொடாஸியம் (Ferrocyanide of Potassium) சேர்த்தால், நீலநிறமுண்டாகும். இதைச் செய்கிற முறை அனேகம்; எப்படிச்செய்தபோதிலும்,இதற்குக்காற்றிலிருக்கிற ஆக்ஸிஜென் வாயுவை கிரகிக்கிறகுணம் இருப்பதால் சிவந்தநிறம் எப்படியும் வந்துவிடும்.

Prep. (Take boiling *Aq.* Cvj. Dissolve *Sulph. Iron* ℔iv. in boiling *Aq.* Ciij., then dissolve *Carb. Soda* ℔iv. ℥ij. in boiling *Aq.* Ciij. Mix the solutions; and let the precipitate subside. Wash the precipitate well with water, and dry it.)

செய்முறை.—௪-பவு. அன்னபேதியை, ௩-காலன் கொதிக்கக்காய்ந்த ஜலத்தில்கரைத்துக்கொள்ளவும். பிறகு, ௪-பவு. ௨-அவு. கார்பொனேட்ஆவ் ஸோடாவை ௩-காலன் கொதிக்கக்காய்ந்த ஜலத்தில் கரைத்துக்கொள்ளவும். இவ்விரண்டையுங் கலந்தால்,வண்டல் அடியில்படியும்; அந்தத்தெளிஜலத்தைவிட்டுச் செவ்வையாய்க் கழுவி உலர்த்திக்கொள்ளவேண்டியது.

Action. Tonic.
செய்கை.—பலகாரி.

Use. It is employed in tic douloureux, dyspepsia, chlorosis, chorea, amenorrhœa, diabetes, infantile convulsions, hooping-cough, paralysis agitans, cancer, gout, palpitations, worms, &c.

உபயோகம்.—அயச்சிந்தூரத்தை முகஜன்னி, அக்கினிமந்தரோகம், ஸ்திரிகள் பிரவிடையாகிறவயதில் காணுகிற ஒருசாதி பாண்டுரோகம், நடுக்கல், சூதகக்கட்டு, மதுமூத்திரரோகம், குழந்தைகளுக்கு காணுகிற இசிவு, கக்கிருமல்ரோகம், கிரந்தி, கணுவாதரோகம், இருதயத்துடிப்பு, மலக்கிருமிரோகம், முதலிய வியாதிகளுக்கு உபயோகப்படுத்திவருகின்றது. இதற்கு வெகுட்டல் குணம் இருப்பதாலும், ஒரு வேளைக்குக்கொடுக்கிற அளவு மெத்த இருப்பதாலும், நாள்பட சாப்பிடவேண்டியதாய் இருப்பதாலும், இதை மெத்த உபயோகப்படுத்துகிறதில்லை. சிலவேளை வயிற்றில் கெடுதியை யுண்டாக்குகிறதும் உண்டு. இதைக் கொடுத்துக்கொண்டு வரும்போது பேதிக்கு அடிக்கடிகொடுத்தால்,தேகத்தில் மருந்து தங்கும்படிச் செய்யாது. பாஷாணத்தை விஷமிக்கும்படி தின்னபோது இதைக்கொடுக்கலாம்.

Dose. gr. v.—ʒss. In Neuralgia, ʒss.—ʒij. or even ʒiv. two or three times a day.

ஒ. அளவு.—௫-முதல், ௩௰-கிரே. வரையில் கொடுக்கலாம். வாதரோகத்துக்கு ௫-முதல், ௨-திராம்வரையில் தினத்துக்கு ௨-அல்லது ௩-தடவை கொடுக்கலாம். ௪-திராம் அளவுக்குக் கொடுப்பதும் உண்டு.

℞ Ferri Sesquioxidi, Rhei pulveris, ana ʒj. Pulv. rad. Calumbæ, ℈iv.

Pulv. Zingiberis, ℈ij., Misce, et divide in pulv. xij. Sumat j., ter die. —*In Tic Douloureux.*—Dr. Joy.

*முகஜன்னிக்கு.—அயச்சிந்தூரம், ௧ - கிரா. சேவக்சின்னிசூரணம், ௧ - கிரா. கலம்பாசூரணம், ௪-ஸ்குருபில், சுக்குத்தூள், ௨-ஸ்குருபில், இ. மி. யிஉ-பாகமாக்கி, வேளைக்கு ஒன்றை தினத்துக்குமூன்றுவேளைக்கொடுக்கவும். இது டாக்டர் ஜாய்என்பவருடையமுறை.*

**Emplastrum Ferri.** *Iron or Strengthennig Plaster.*

*இம்பிளாஸ்டிரம் பெர்ரை. ஐரன்பிளாஸ்டர். அயக்கெட்டிக்களிம்பு.*

Prep. (Melt together Plaster of Lead ℥viij., and prepared Frankincense ℥ij. over a slow fire. Sprinkle into them Sesquioxide of Iron ℥j. and mix).

*செய்முறை.—வங்கக்களிம்பு, அ - அவு. சுத்திசெய்தகுங்கிலியம், உ - அவு. இவைகளைச்சேர்த்து சிறுதீயிட்டு உருக்கி, இதில் ௧-அவு. அயச்சிந்தூரத்தை தெளித்து மிஸ்ரமித்துக்கொள்ள வேண்டியது.*

*உபயோகம்.—இதைமேலுக்குப்போட்டால் தளர்ந்தசதைகள் இறுகும்.*

**Ferri Oxydum Nigrum.** *Black Oxide of Iron. Ferri Oxydum Magneticum. Magnetic Oxide.* ($Fe_3 O_4 = 116$).

*பெர்ரைஆக்ஸிடம்நைகிரம். பிளாக்ஆக்ஸைட்ஆவ்ஐரன் காந்தச்சிந்தூரம்.*

Descrip. and Prop. *விவரணம். குணங்கள்.— இந்தச்சரக்கு வெகுநாளாய் உபயோகப்பட்டு வருகின்றது. இது கறுப்பும் ஊதாவும் கலந்தநிறமாய் இருக்கும்; காந்தம் இதை இழுத்துக்கொள்ளும்.*

*செய்முறை.—௧0 - பை- கொதிக்கக்காய்ந்த ஜலத்தில், ௩-அவு. அன்னபேதியைக்கரைத்து, உ - கிரா. உ - ஸ்குருபில் கந்தகத்திராவகத்தை* (Sulph. Acid) *சேர்த்து, காய்ச்சி, ௪0-கிரா. தோஷமற்றபொட்டிலுப்பு திராவகத்தை*(Nit. Acid) *கொஞ்சங் கொஞ்சமாகச்சேர்த்து, சேர்க்கிறபோதெல்லாம் கொஞ்சம் சீக்கிரமாக எரித்து, பிறகு ௩ - அவு. அன்னபேதியை ௧0 - பை -கொதிவெந்நீரில் கரைத்து ஷி ஜலத்தோடு இதைச்சேர்த்து, உடனே ௪0 - அவு. காரமான நவாக்ஷாரஜெயநீரை* (Strong Aqua Ammoniæ) *தாரையாய் விழும்படி ஊற்றிச்சீக்கிரமாக துழாவவேண்டியது. ஜலத்தை துணியில் வடிகட்டினால், கறுத்தபொடி மேல்நிற்கும், அதை எடுத்துக்கொண்டு அதில் திராவகம் இல்லாமல் கழுவிக்கொள்ளவேண்டியது. பெரைடா என்னும் மருந்தை விட்டுப்பார்த்தால் வெள்ளை நிறம் காண்கலாகாது. ௱அ௰-டிக்கிரி என்னும் அளவுக்கு அதிகப்படாமல் தீ இட்டு எரித்து உலர்த்திக்கொள்ளவேண்டியது.*

Action. Tonic.

*செய்கை.—பலகாரி.*

Dose. gr. v.—℈j. two or three times a day.

*ஔ. அளவு. ரு-முதல், உ௰-கிறே. அளவுக்கு தினத்துக்கு உ-௩-தடவை கொடுக்கலாம்.*

**FERRI IODIDUM.** *Iodide of Iron.* (Fe I + 5 Aq. = 199).

*பெர்ரைஐயோடிடம். ஐயோடைடிட் ஆவ் ஐரன்.*

DESCRIP. AND PROP. விவரணம். குணங்கள். இந்தகட்டி, கறுப்பும், ஊதாவுங்கலந்தசாயலாய் இருக்கும்; வெகுசீக்கிரத்தில் தண்ணீராகிவிடும்; விறவி றுப்பும் துவர்ப்பும் உள்ளதாய் இருக்கும்; ஜலத்திலும், சாராயத்திலும் கரையும். இதுசீக்கிரத்தில் கெட்டுப்போகும்; ஆகையால் பாணிதமாகச்செய்து (Syrup) வைக்கப்படும்.

ACTION. Tonic, Deobstruent, Emmenagogue.

செய்கை.—பலகாரி, ஸோபாருஸகாரி, ருதுவர்த்தனகாரி.

USE. In all cases of debility, in scrofula, amenorrhœa, secondary syphilis, mesenteric obstruction, &c.

உபயோகம்.—துற்பலம், கண்டமாலை, சூதகக்கட்டு, மேகரோகம், மாந்தரோகம், இவை முதலியவைகளுக்குக் கொடுக்கலாம்.

DOSE. gr. j.—gr.v. or gr.x.

ஒ. அளவு.—க-முதல், ரு-அல்லது, ௰-கிரேன்வரையில் கொடுக்கலாம்.

**Syrupus Ferri Iodidi.** *Syrup of Iodide of Iron.*

ஸிரபஸ்பெர்ரை ஐயோடிடை. ஸிரப்ஆவ் ஐயோடைட் ஆவ்ஐரன்.

PREP. (Mix Iodine ℥j. and Iron wire ʒiij. with Water ℥vij., and heat until the solution assumes a greenish colour. Strain. Evaporate to about f℥iv., and add sugar ℥x. When the syrup has cooled, add water enough to fill up the measure of ʒxv., and keep it in a well-stoppered black glass vessel.)

செய்முறை.—எ-அவு. ஜலத்தில், க-அவு. ஐயோடைனும், ங-திரா. இரும்பு கம்பியும் சேர்த்து, ஜலம் பச்சைநிறமாகிற வரையில்காய்ச்சி, வடிகட்டிக்கொண்டு, ச-அவு. ஆகிறவரையில் சுண்டவைத்து, ௰-அவு. சருக்கரையைச்சேர்த்து கொள்ள வேண்டியது. பாணிதம் குளிர்ந்தபிறகு, ௰ரு-திராம் இருக்கும்படி ஜலம்விட்டு, காற்றுப்புகாத கல்கார்க்கு உடைய கறுப்புககண்ணுடிபுட்டியில் ஊற்றி, பத்திரப்படுத்திக்கொள்ள வேண்டியது. க-திராம் பாணிதத்தில், ரு-கிரே. ஐயோடைட் ஆவ் ஐரன் இருக்கின்றது.

DOSE. f ʒss.—ʒj.

ஒ. அளவு.—உ-முதல், க-திராம்வரையில் கொடுக்கலாம்.

**TINCTURA FERRI SESQUICHLORIDI.** *Tinctura Ferri Muriatis. Tincture of the Sesquichloride or Muriate of Iron. Steel Drops.*

($Fe_2\ Cl_3 = 164$).

டிஞ்சர்பெர்ரை ஸஸ்குவிகுளோரிடை. ஸ்டீல்டிராப்ஸ்

அயப்பாவனத்திரவம். அயத்திராவகம். இரும்புதிராவகம்.

DESCRIP. AND PROP. விவரணம். குணங்கள். அயம்சேர்ந்த அவுஷதங் களுக்குள், அயத்திராவகம் மெத்த சிரேஷ்டமானது, இதற்குப்பலமும் அதிகம்; புளிப்பும் துவர்ப்பும் உள்ளதாய்இருக்கும்; சிவப்பும் மஞ்சளும்கலந்த நிறமுள்ளது; துவர்ப்புகுணமுடைய கற்கவகைகளைச் சேர்த்தால், சமுத்தைப்போகும், இந்தவிஷ

யத்தை ஞாபகத்தில் வைக்கவேண்டியது ; இதனோடு விளாம்பிசினியைச்சேர்த்தால், கெட்டுப்போகும்.

Prep. (Pour upon Sesquioxide of Iron ℥vj., Hydrochloric Acid Oj. in a glass vessel, digest for 3 days, frequently shaking. Add Rectified Spirit Oiij. Filter.)

செய்முறை.— ௬-அவு. அயச்சிந்தூரத்தோடு, ௧-பை. கறியுப்புத்திராவகத்தைச் சேர்த்து ஒருகண்ணாடிபாத்திரத்தில் போட்டு, ௩-நாள் வாலுகாயந்திரத்தில் அடிக்கடி குலுக்கிவைத்து அவித்து, ௩-பையி. ரெக்டிபையிட் ஸ்பிரிட்என்னும் சாராயத்தைச்சேர்த்து, குளிர்ந்தபிறகு வடிகட்டிக் கொள்ளவேண்டியது.

Action. Tonic, astringent, diuretic, caustic.

செய்கை.—பலகாரி, ஸங்கோசனகாரி, மூத்திரவர்த்தனகாரி, விரணகாரி.

Use. (This tincture is prescribed for passive hæmorrhages, spasmodic stricture of the urethra, incontinence of urine in children, atonic hæmorrhage from the kidneys, uterus and bladder, albuminaria, diabetes, erysipelas, &c.)

உபயோகம்.—இந்தத்திரவத்தை ரெத்தப்பெருக்கு, நீர்க்கட்டு, குழந்தைகளுக்குக்காணுகிற சொட்டுமூத்திரம், மூத்திரக்குண்டிக்காய், கருப்பை மூத்திரப்பை இவைகளிருந்து மெதுவாய்வடிகிற ரத்தம், ஆல்புயுமினேரியா என்னும் மூத்திரரோகம், மதுமூத்திரரோகம், அக்கி இவைமுதலிய ரோகங்களுக்கு உபயோகப்பட்டுவருகின்றது. மூத்திரதாரை சுருங்கிக்காணுகிற நீரடைப்புக்கு,இதை குறைந்த அளவில், ௰௫-நிமிஷத்துக்கு ஒருதரம், குமட்டல்உண்டாகிறவரையில் கொடுத்தால் நன்மை செய்யும். ரணங்களில் வடிகிறரத்தம், அட்டைக்கடித்து வடிகிறரத்தம், இவைகளுக்கு இதைப்போட்டால் ரத்தம் நிற்கும்.

Dose. ♏x.—♏xxx. even ʒj.—ʒij., in some suitable diluent.

ஒ. அளவு.—௰-முதல், ௩௰-மினிம் வரையில் கொடுக்கலாம். ௧-திராம் முதல், ௨-திரா. வரையிலும் கொடுக்கப்படும். துவர்ப்புக்குணமுடைய பதார்த்தங்களோடு சேர்த்து கொடுக்கலாகாது.

℞ Tincturæ Ferri Sesquichlor. ♏v., Infusi Quassiæ, Aquæ Cinnam. ana f℥vj. Tinct. Calumbæ, fʒj. Misce: fiat haustus mane et meridie sumendus. *In Atonic Dyspepsia.*—Mr. Brande.

துர்ப்பெலத்தில் காணுகிற அக்கினிமந்த ரோகத்துக்கு.—அயத் திராவகம், ௫-மினி. குவாஷியா வெந்நீர்க்கஷாயம், ௬-திரா. லவங்கப்பட்டை ஜலம், ௬-திரா. கலம்பாபாவனைத்திரவம், ௧-திரா. இ. மி. ஒரு வேளைக்குக் குடிக்கும்படியாகச் செய்துகொண்டு காலையிலும், மத்தியானத்திலும் எடுத்துகொள்ளவும். இது பிராண்டிஎன்னும் துரை என்பவருடைய முறை.

**FERRI AMMONIO-CHLORIDUM.** *Ammonio-Chloride of Iron.*

பெர்ரை அம்மோனியொ குளோரிடம். அம்மோனியொ குளோரைடு ஆவ் ஐரன்.

Prep. (Digest Sesquioxide of Iron ℥iij., in Hydrochloric Acid Oss., in a proper vessel, in a sand-bath for 2 hours; add Hydrochlorate of Ammonia ℔ ijss. first dissolve in Aq. dest. Oiij. Strain and evaporate to dryness. Rub the residue to powder).

DESCRIP. AND PROP. விவரணம். குணங்கள்.—இது ஆரஞ்சிப்பழமேனி யாயும், களிம்பைப்போல் ருசியாயும் இருக்கும். ஜலத்திற்கரையாது.

PREP. (Mix powdered Tersulphuret of Antimony ℥vij., with Liquor Sodæ Oiv., and Dist. Water Oxvj.; boil for 2 hours over a slow fire, continually stirring, and adding dist. water that it may fill up the same measure. Strain the solution, and pour in gradually Dil. Sulph. Acid, q. s., to precipitate the Oxysulphuret. Wash away the Sulphate of Soda, and dry the powder with a gentle heat.)

செய்முறை.— எ - அவு. அஞ்சனக்கல்தூளை, ச - பைபி. உழவுத்தண்ணீர், ௰சு-பைபி. ஆவிநீர், இவைகளுடன்சேர்த்து, துழவிக்கொண்டே உ-மணிநேரம், சிறு தீயிட்டெரித்துக் காய்ச்சவும், ஜலம் அளவுக்குக்குறையாமல் இருக்க விட்டுக்கொண் டேயிருக்கவும். ஜலத்தை வடிகட்டி, இதில் விளாவின கந்தகத்திராவகம் தேவையா னதைச் சேர்த்தால் சிந்தூரம் அடியில்படியும். ஸல்பேட்ஆவ் ஸோடா என்னும் உப் பை ஜலம்விட்டுக்கழுவி, தூளைச்சிறுதீயிட்டெரித்து, உலர்த்திக்கொள்ளவேண்டியது.

ACTION. Alterative, but uncertain ; in large doses, Emetic.

செய்கை.—பிரமாணத்துக்குத்தக்கனபிரகாரம், குணத்தைக்காட்டும். வியதா பேதகாரி, வமனகாரி, ஆனால் நம்பிக்கையோடுகொடுக்கவிடமில்லை. பிளமர்ஸ்பில்ஸ் (Plummer's Pills) என்னும் ரசபஸ்மமாத்திரைச்செய்வதில் கூட்டப்படும்.

DOSE. gr. j.—gr. v.

ஔ. அளவு.—க-முதல், ரு-கிறே. மாத்திரைசெய்து, தினத்துக்கு உ-௩-தடவை கொடுக்கலாம்.

**Antimonii Potassio-Tartras.** *Antimonium Tartarizatum. Tartrate of Antimony and Potash. Potassio-Tartrate of Antimony. Tartarized Antimony. Tartar Emetic.*

ஆன்டிமொனி பொடாஸியோ டார்டிராஸ். டார்டெரைஜ்ட் ஆன்டிமொனி. டார்டர்மெடிக். வாந்தி உப்பு.

DESCRIP. AND PROP. விவரணம். குணங்கள்.—இந்த உப்பு வெள்ளையாய் வாசனையில்லாமல் இருக்கும்; குமட்டல், துவர்ப்பு, கொஞ்சம் புளிப்போடுகூடிய சுவையுள்ளது ; காற்றுப்படவைத்தால் மங்கலாகும; ஆல்கோஹல் (Alcohol) என் னும் சாராயத்தில் கரையாது, ஆனால் புரூவ்ஸ்பிரிட் (Proof Spirit), ஒயின் (Wine) என்னும் சாராயங்களில் கரையும் ; குளிர்ந்த தீர்த்தத்தில் கொஞ்சமாயும், வெந்நீரில் அதிகமாயும் கரையும்.

PREP. (Mix Tersulph. Antimony, rubbed to the finest powder, ℔ j., with Sulph. Acid f℥xv. in an iron vessel ; to these apply a slow fire beneath a chimney, stirring frequently with an iron spatula ; then increase the fire, until, the flame of the ignited sulphur being extinguished, nothing remains but a whitish pulverulent mass. Wash this with

water till free from acid reaction, and dry. Mix carefully ʒix. with Bitart. Potash ʒx. and boil for half an hour in Dist. Water lOv. Strain while hot ; set aside that crystals may form. The solution being poured off, again evaporate and crystallize it. Dry the crystals.)

செய்முறை.—க-பல. நன்றாய்த்தூள்செய்த அஞ்சனக்கல், ய௫-அவு. கந்தகத் திராவகம், இவைகளைச் சேர்த்து ஒரு இரும்பு பாத்திரத்தில்போட்டு, புகைத்துவாரத் தின் கீழ்வைத்து சிறுதீயிட்டெரித்து, அடிக்கடி இரும்பு கத்தியால் கிளரிக்கொண் டேயிருந்து, பிறகு கந்தகச்சுடர் அவிந்துப்போகிற பதத்துக்கு வருகிறவரையில், தீயை அதிகரித்து எரித்தால் வெள்ளைத்தூள் கட்டிதவிர, மற்றொன்றும் இல்லா மல் போகும். இதை ஜலம்விட்டுப் புளிப்பு இல்லாமல் கழுவி உலர்த்திக்கொ ள்ளவும். இதில் கூ-அவு. சர்க்கை, ய-அவு. திராக்ஷ உப்புடன்சேர்த்து, ரு-பையி. நீரில்போட்டு, ஒ - மணிநேரம் கொதிக்கவைத்து, சுடுகையாய் இருக்கும்போதே வடிகட்டி அசையாமல் ஓரிடத்தில் வைத்தால் உப்பு கட்டும். ஜலத்தை இறுத்துக் கொண்டு, மறுபடியும் சுண்டக்காய்ச்சி, உப்பு கட்டும்படிச்செய்துகொள்ளவும். உப் பை உலர்த்திக்கொள்ளவேண்டியது.

*Incomp.* சத்துருபதார்த்தங்கள்.— திராவகங்கள், உப்புகள், சுண்ணாம் புத்தண்ணீர், வங்கஉப்பு, விங்கோனு (Cinchona), காசுக்கட்டி இவை முதலியவை கள் வாந்திமருந்தை முறித்துவிடும்.

ACTION. Irritant poison, Alterative, diaphoretic, Expectorant, Nauseating Sudorific, Emetic, Contra-Stimulant. *Ext.* Counter-Irritant, Rubefacient.

செய்கை.—உபத்திரவத்தைத் தருகிற நஞ்சு. வியதாபேதகாரி, சுவேதகாரி, கபஹரகாரி, குமட்டலோடு அதிக வியர்வையை யுண்டாக்கும், வமனகாரி, உஷ் ணத்தைத் தணிக்கும், சிலவேளை பேதியை யுண்டாக்கும். சரீரத்தின்மேல் தடவி னால் எரிச்சலையுண்டாக்கும், தோலைச் சிவப்பிக்கும்.

USE. In fevers, Acute inflammation of the heart, lungs, pleura, peritoneum, brain and bronchial tubes, Croup, Erysipelas, Acute Rheumatism, Insanity, Delirium Tremens, Puerperal Convulsions, Tetanus, Hooping-Cough, Plethora, Parturition, Dislocations, &c.

உபயோகம்.—வாந்திமருந்தை சுரங்கள், இருதயம், நுரையீரல், புளூரா என் னும் சவ்வு, பெரிடோனியம் என்னும் சவ்வு, மூளை, சுவாசக்குழல்கள் இவைகளில் கா ணுகிற கடுநோய்கள், குறுமாந்தரோகம், அக்கி, கை கால் பிடிப்பு, பயித்தியம், மது பானிகளுக்குக் காணுகிற பித்தரோகம், பிரசவகாலசந்நி, விரணசந்நி, கக்குவாய், ரத்தபுஷ்டி, மந்தபிரஸவம், மூட்டு விலகிப்போகுதல் என்னும் இவைமுதலிய ரோ கங்களுக்குக் கொடுக்கலாம்.

DOSE. Alterative, gr. 1-16th to 1-8th. Diaphoretic and Expectorant, gr. 1-8th to 1-6th. Nauseating Sudorific, gr. $\frac{1}{4}$ to $\frac{1}{2}$. Emetic, gr. j.—gr. ij. diluted. Contra-Stimulant, gr. j.—gr. iij. every 2 or 3 hours.

ஒ. அளவு.—வீசம் - முதல், ஹ-இறேன் கொடுத்தால்நாள்பட்டவியாதிகளை நீக்கும். ஹ - முதல் சுமார் மூணுவீசம் - இறேன்கொடுத்தால், வியர்வையையுண்

டாக்கும், கபத்தை வெளிப்படுத்தும். வ-முதல், ௬-கிறேன் கொடுத்தால், வாய்குமட்டலோடு வியர்வைகாணும். ௧-முதல், ௨-கிறேன் கொடுத்து மெத்தஜலத்தைக் குடிக்கும்படிச்செய்தால் வாந்தியாகும். ௧ - முதல், ௩-கிறேன் அளவுக்கு ௨- அல்லது, ௩-மணிநேரத்துக்கொருதரம் கொடுத்தால் அழலையின்சேஷ்டையைத் தணிக்கும்.

ANTIDOTES. பிரதிவிஷங்கள்.—வாந்திமருந்தை விஷமிக்கும்படித் தின்றுவிட்டால், வாயில்விரலைக்கொடுத்தாவது, அல்லது வெந்நீரைக்குடித்தாவது, வாந்தியை அதிகப்படுத்தவேண்டியது ; அல்லது ஸ்டமக்பம்ப் (Stomach pump) என்னும் கருவியைப்பிரயோகித்து வயிற்றிலிருப்பதை வெளிப்படுத்திவிட்டு, பிறகு மாசக்காய், வில்வோறு, என்னும்மருந்துகளில் எதையாவது கஷாயஞ்செய்துக் கொடுத்தால், வாந்திமருந்தை முறித்துவிடும்.

℞ Antimonii Potassio-tart, gr. j., Ipecacuanhæ pulv. ℈j. Fiat pulvis emeticus.—DR. HOOPER.

வாந்தி உப்பு, க-கிறே. இபிகாச்சூரணம், ௨௰ - கிறே. இவைகளைச்சேர்த்து ஏமனசூரணமாகச் செய்துகொள்ளவேண்டியது. இது. டாக்டர் "ஹூபர்" என்பவருடையமுறை

℞ Antim. Potassio-tart. granam, Potassæ Nitratis, ʒij., Misturæ Amygdalæ f℥xij., Tinct, Camphoræ Comp. f℥ss. Fiat mist. pectoralis. Cujus sumat cochl. unum amplum omni hora. *In Bronchitis, &c.*—DR. GRAVES.

மார்ச்சளிரோகத்துக்கு.— வாந்திஉப்பு, க-கிறே. வெடியுப்பு, ௨ - திரா. வாதுமைப்பருப்புப்பாகு, ௰௨ - அவு. கர்ப்பூரப்பாவனத்திரவம், ௬-அவு. இவைகளைச் சேர்த்து, இதில் ஒருபெரிய கரண்டிவீதம், மணிக்கொருதரம் கொடுக்கவும். இது டாக்டர். "கிரேவ்ஸ்" என்பவருடைய முறை.

**Vinum Antimonii Potassio-Tartratis.** *Liquor Antimonii Tartarizati. Antimonial Wine.*

வைனம் ஆன்டிமொனி பொடாஷியோ டார்ட்ரேடிஸ். ஆன்டிமோனியல்ஒயின். வாந்திஉப்பு கலந்த சாராயம்.

PREP. (Take Potassio-Tartrate of Antimony ℈ij., dissolve it in Sherry Wine Oj.)

செய்முறை.—வாந்திஉப்பு, ௨- ஸ்குரூபில், ஷெரிஒயின்என்னும் சாராயம் ௧-பயி. இ. மி. கொள்ளவும். ஒருஅவுன்ஸில், ௨-கிறே. வாந்திஉப்புஇருக்கின்றது.

ACTION. Alterative, Diaphoretic, and Emetic.

செய்கை.—வியதாபேதகாரி, சுவேதகாரி, வமனகாரி.

USE. To produce vomiting in children, and as a diaphoretic in febrile and inflammatory attacks.

உபயோகம்.—குழந்தைகளுக்கு வாந்தியையுண்டாக்கவும், சுரம், தாபனரோகங்கள் இவைகளில் வியர்வையையுண்டாக்கவும், இதை உபயோகிக்கப்படும்.

DOSE. ♏x.—f ʒij., every 3 hours. ʒj. gradually increased to ℥i., as an emetic.

ஓ. அளவு.—௰.—௩௰ - மினிம் அளவுக்கு அடிக்கடி கொடுத்துக்கொண்டுவந்தால் வியர்வைகாணும், கபத்தைக் கண்டிக்கும். ௧.—௨. திராம் கொடுத்தால் குமட்

டாலையுண்டாக்கும். ¼ - அவுன்ஸ், அல்லது ௨ - திராம் அளவுக்கு, ௰ - நிமிஷத்துக் கொருதரம் கொடுத்துக்கொண்டுவந்தால், வாந்தியாகும். வாந்திகண்டவுடன் மருந்தை நிறுத்திவிடவேண்டியது. ௫௰ - துளிமுதல், ௧ - திராம் அளவுக்குக் குழந்தைகளுக்குக் கொடுத்தால் வாந்தியாகும்.

℞ Vini Antimon. p. tart. ♏xxx., Vini Ipecacuanhæ, ♏x., Tinct. Camphoræ Comp. ♏xx., Mucilag. Acaciæ, f℥vij. Misce. Give two teaspoonfuls every four hours, for a child of four years. *In Hooping Cough.*—DR. WEST.

கக்கிருமல் ரோகத்துக்கு.—வாந்திஉப்புகலந்தசாராயம், ௩௰ - மினிம், வைனம் இபிகாக், ௰ - மினிம், கர்ப்பூரப்பாவனத்திரவம், ௨௰-மினிம், விளாம்பிசினிப்பாகு, ௭ - திராம், கூ. மி. இதில் ௨ - தேயிலைக்கரண்டியளவு, ௪ - மணிநேரத்துக்கொருதரம், ௪-வயதுப்பிள்ளைக்குக் கொடுக்கவும். இது டாக்டர் "வெஸ்ட்" என்பவருடையமுறை.

**Unguentum Antimonii Potassio-Tartratis.** *Unguentum Antimonii Tarturizati. Tartar Emetic Ointment.*

அன்குவென்டம் ஆன்டிமொனி பொடாஷியோ டார்டிரேடிஸ். டார்டர்மெடிக் ஆயின்ட்மென்ட்.

PREP. (Take Potassio-Tartrate of Antimony rubbed to very fine powder ℥i., Lard ℥iv. Mix.)

செய்முறை.—மெத்த சன்னமாய்ப் பொடிசெய்த வாந்தி உப்பு, ௧-அவு. பன்றிநெய், ௪-அவு. இ. மி.

ACTION. Counter-Irritant.

செய்கை.—பிரதி எரிச்சலைத்தரும். தினத்துக்கு இரண்டுதடவை உடம்பின் மேல் ¼-திராம் அளவுக்குத் தேய்த்தால், சீழ்கொப்பிளங்கள் உண்டாகும்.

USE. In internal inflammations, and rheumatism of the joints.

உபயோகம்.—இருமல், க்ஷயம், காசம், கக்கிருமல், இவைகளுக்கு மார்பிலும், சில்வாத ரோகங்களுக்கு மூட்டுகளிலும் தேய்க்கக் குணமாகும்.

## HYDRARGYRUM. *Mercury. Quicksilver.* (Hg=200).

ஹைட்ராஜிரம். மெர்க்குயுரி. குவிக்ஸில்வர். பாதரஸம். சூதம். ஈசுரவிந்து. ரசம்.

DESCRIP. AND PROP. விவரணம். குணங்கள். — லோகங்களைப்போல் கெட்டியாய் இராமல், ரசமானது, திரவ ரூபமாயும், வெள்ளியைப்போல் வெண்மையாயும், பிரகாசமாயும் இருக்கும் ; இதற்கு வாசனையும் ருசியும் இல்லை ; சாதாரணமாய் கந்தகத்தோடு கலந்திருக்கும், இதற்கு லிங்கம் என்று பெயர். ரசம் வெள்ளியோடு கலந்திருப்பதும் உண்டு; ரசம் அதிக குளிர்ச்சியால் உறைந்து கட்டியாய்ப் போகும் ; அதிக உஷ்ணம்பட்டால் புகைந்து பறந்துவிடும் ; காற்றுப்பட எரித்தால், காற்றிலிருக்கிற ஆக்ஸிஜென் (Oxygen) வாயு ரசத்தோடு கலந்து சிந்தூரமாகும் (Red or Binoxide of Mercury); இதை அதிகமாய்த் தீப்பட எரித்தால்

அதிலிருக்கிற ஆக்ஸிஜென்வாயு நீங்கிவிடும், ரசம் மாத்திரம் நிற்கும். பொன் வெள்ளி, தயம், நாகம், இவைகளோடு ரசஞ்சேர்ந்து ஓர்விதகளிம்பாகும்; அதற்கு எமால்கம் (Amalgum) என்று பெயர்.

Preparation. ரசத்தை எடுக்கிறவிதம்.—சாதிலிங்கத்துடன் சுண்ணும்பு, அல்லது அயம் சேர்த்து வாலையிலிட்டு எரித்தால், தனிரசம் இறங்கும். இது இங்கிலீஷ்முறை.

பூரண சூஸ்திரத்தின்முறை.—தேவையான சாதிலிங்கத்தை ஒருகுடுவையில் போட்டு, நல்லுரிவோர் தூளைச்சேர்த்து, வேறொரு குடுவையால் மூடி, எ-தரம் சீலைமண் செய்து, வாலுகாயந்திரத்தில் (Sand bath) வைத்து, க-ஜாமம் எரித்தால், ரசம் மேல் குடுவையில் போய்ப்படிந்திருக்கும்; குளிர்ந்தபிறகு, பன்றிமயிரால் தடைத்து எடுத்துக்கொள்ளவேண்டியது. இதற்கு வாலைரசம் என்றுபெயர்.

Hydrargyrum Purum. ரசத்தை சுத்திசெய்கிறமுறை.—ரு - பவுன் ரசத்தை வாலையிலிட்டு கொஞ்சம் நிற்படும்படி எரித்து, உ - பவுனுக்கு இறக்கிக்கொள்ளவும். ௧ - அவு. கறிபுப்பு திராவகத்தில், உ - அவு. நீ நீரைச்சேர்த்து விளாவி, இதை ஷை ரசத்துடன்சேர்த்துக் கொதிக்கவைத்து, நன்றாய்க்கழுவி உலர்த்திக்கொள்ளவேண்டியது.

Action. செய்கை.—தனிரசமானது உடம்பில்பிடிக்காது; வயிற்றில்போய் புளிப்புகளுடன் சேர்ந்து கரேஞ் செய்யும்.

Use. It has been exhibited in constriction of the bowels and intussusception, but from a mistaken notion that it would pass through the bowels by its gravity.

உபயோகம்.—குடல்துவாரம் சுருங்கிப்போகிற ரோகத்துக்கும், குடலுக்குள் குடல்போய் நுழைந்துக்கொள்ளுகிற ரோகத்துக்கும், பளுவானதைக்கொடுத்தால் குடலைத்தள்ளிவிடுமென்று எண்ணி, முன்பு ரசத்தைக்கொடுத்துக்கொண்டு வந்தார்கள், ஆனால் இப்போது அந்தவழக்கமில்லை.

*Physical Effects of the Salts of Mercury on the system.*—ரசமருந்தை மிதமாய்ச்சாப்பிட்டால் உமிழ்நீர், பித்தநீர் ஆகிய இவைகள் அதிகப்படும். நாள்படக்கொடுத்தால் அதிகமாய் எச்சில் வடியும்; இதற்கு இங்கிலீஷில் ஸாலிவேஷன் (Salivation or Ptyalism) (வாய்ப்பிடித்தல்) என்றுபெயர்; இந்த குணங்கண்டால், ரசந்தேகத்தில் பிடித்ததற்கு அடையாளமாம். பித்தம் அதிகப்பட்டு மலத்தில் பித்தச்சாயல்காணும்; ரத்தம் கெடும்; தேகம் இளைத்து வெளிறோடும்; மூத்திரம் அதிகப்படும்; அபினி, இபிகாக் (Ipecac) இவைகளை ரச மருந்துகளுடன் சேர்த்துக் கொடுத்தால, வியர்வையை அதிகப்படுத்தும்; பேதிமருந்துகளோடு, சேர்த்துக்கொடுத்தால், பித்தத்தை அதிகப்படுத்தும்; ஸ்குவில்ஸ் (Squills) (நரிவெங்காயம்?) டிஜிடேலிஸ் (Digitalis) இவைகளுடன் சேர்த்துக்கொடுத்தால், மூத்திரத்தை அதிகப்படுத்தும்.

*The occasional ill Effects of Mercury.* ரசமருந்துகளினால் காணுகிற துர்க்குணங்களாவன:—வயிறு கடுக்கலோடுபேதி - தொண்டைவிரணம்-முகம் வீக்கம்- அதிக உமிழ்நீர் வடிதல் - வாயில் அதிக எரிச்சல் - நாக்கின்மேல் மாவுபடிந்திருக்குதல் -

நாக்குரணம் - வாய்திறக்கக்கூடாமை - ஈறு, கன்னம், இவைகளில் அழிரணங் காணு தல்-பற்கள் விழுந்துப்போகுதல் - வாய்நாற்றம் - மெர்க்கியுரியல் இரிதிசம்(Mercurial erethism) என்னும் ஓர்விதபலக்குறைவு - கால்கை பிடிப்பு - எலும்பு வீக்கம்-புடை - ஸர்வாங்கவாதரோகம் - நடுக்கல் - இவை முதலியவைகளாம்.

*Remarks on the use of Mercurial Salts.*—க. இடியோ ஸிங்கிரஸி (Idiosyncrasy) என்னும் ஓர்விதசரீரபாகத்தையுடையவர்களுக்கு ரசஞ்சேர்ந்த மருந்துகளைக்கொஞ்சமாய் கொடுத்தபோதிலும் மெத்தக்கெடுதிசெய்யும்; ஆகையால் நோயாளியின்தேகக்கூறு செவ்வையாய்த்தெரிந்துகொண்டு வைத்தியர் ரசத்தை உபயோகிக்கவேண்டியது.

உ. ரத்தம் குற்றிவாங்குதல், வாந்திக்கிக்கொடுக்குதல், பத்தியபோஜனம், இவைகளால் ரசமருந்துகளின் குணம் அதிகப்படும்.

ங. சைகுழந்தைகளுக்கும், வயது சென்றவர்களுக்கும் வாய்ப்பிடிப்பது மெத்தகடினம்.

ச. வாததேகிகளுக்கு, அதிசீக்கிரத்தில் வாய்பிடிக்கும்.

ரு. மூளைதாபிதம் (Inflammation of the brain) கொண்டு இருக்கும்போதும், கல்லீரலில் சீழ்பிடித்திருக்கும்போதும் (Abscess of the liver) ரசம் வாயைப்பிடிக்காது.

சு. மாமிஸபோஜனம், ரசத்தின்குணத்தைத் தடுக்கும்.

எ. ரசமருந்துகளை சாப்பிடுகிறவர்கள், காற்றில் திரியாமலிருந்தால், சீக்கிரத்தில் வாயைப்பிடிக்கும்.

*Contra-Indications.*—ரசம் கொடுக்கக்கூடாத ரோகங்களாவன.—கண்டமாலை, க்ஷயம், மேஹவிரணம், கணுவாதரோகம் (Gout), ஸ்கர்வி, (Scurvy) என்னும் ஓர்விதமேகம், நீரேற்றம், மூத்திரப்பையில்காணும் திரிதோஷரோகம், நீரிழிவு, காசக்கட்டிரோகம், பாண்டுரோகம் (Anæmia) இவை முதலியவைகளாம்.

*Modes of Administration.*—அதி தீக்ஷணரோகங்களுக்கு, ரஸபஸ்மம் (Calomel) கொடுக்கவேண்டியது; அல்பரோகங்களுக்கு சாந்தியான ரசமருந்துகளைக்கொடுக்க வேண்டியது. சிலவைத்தியர்கள் வாயைப்புண்ணுக்க, ரசத்தை அதிகமாயும், சிலர் கொஞ்சமாயும் கொடுக்கிறார்கள். க - கிறே. ரசபஸ்மத்தை, ௰உ - மாத்திரைகளாக்கி, க - மாத்திரை ஒருமணிநேரத்துக்குஒருதரம் கொடுத்துக்கொண்டு வந்தால், ஒருநாளில், அல்லது இரண்டு நாளில் வாய்புண்ணுகும். குதமெழுக்கையும், இப்படியே குறைந்த அளவில் கொடுக்கலாம்.

*Fumigation.*—ரசப்புகைகொடுக்க வேண்டியதாயிருந்தால், கோழிக்கூடுவடிவமாய்ச்செய்த ஒருகூடில், நோயாளித்தலை வெளியிலிருக்கும்படிஉட்காரவைத்து, க-அல்லது - உ - திராம் பிளாக் ஆக்ஸைட் ஆவ்மெர்க்கியுரி (Black Oxide of Mercury) என்னும் ரஸபஸ்மத்தை இரும்புதட்டின்மேல்வைத்துச் சுடவைத்தால், அதிலிருந்து புகை எழும்பி தேகமெங்கும்படும்; அந்தப்புகையை ஆக்கிராணித்தால் அதிகவிரைவில் வாயைப்பிடிக்கும். விரணமுதலியவைகளுக்கு, ரசப்புகை போட்டால் வெகு நன்மைசெய்யும்.

**Hydrargyrum cum Creta.** *Mercury with Chalk. Grey-powder.*

ஹைட்ராஜிரம் கம் கிரிடா. கிரேபவுடர். சிமைச்சுண்ணும்புகலந்த ரஸபஸ்மம்.

Descrip. and Prop. விவரணம். குணங்கள்.—இந்தபஸ்மம் பருவாயும், சாம்பல் நிறமாயும், வாசனையில்லாமலும், களிம்புஞ் சுண்ணாம்பும் கலந்த ருசியையுடையதாயும் இருக்கும்; ஜலத்தில் கரையாது.

Prep. (Rub together Mercury ℥iij. and Prepared Chalk ℥v. until globules are no longer visible.)

செய்முறை.—௩. அவு. ரசத்தை, ௫ - அவு. சுத்திசெய்த சீமைச்சுண்ணாம்புடன்சேர்த்து, ரசம்கண்ணுக்குத் தோற்றுமல் போகிறவரையில் அரைத்துக்கொள்ளவும்.—௮ - கிறே. பஸ்மத்தில், ௩ - கிறே. ரசமும், ௫ - கிறே. சீமைச்சுண்ணாம்பும் இருக்கின்றன.

இதை அதிகத்திப்பட எரித்தால், ரசம்பறந்துவிடும், சுண்ணாம்புமாத்திரம் நிற்கும்.

Inc. சத்துருபதார்த்தங்கள்.—திராவகங்கள், உப்புகள், வங்கஉப்பு, இவைகளைச் சேர்த்தால், மருந்துகெட்டுப்போகும்.

Action. Mild Alterative and Cathartic, also Antacid.

செய்கை.—சர்ந்தமாய் வியாதிகளைப்போக்கும்; மலத்தைக்கழிக்கும்; புளிப்பைக் கண்டிக்கும்.

Use. This is much employed in diseases of children attended with deficient biliary secretion.

உபயோகம்.—இந்தமருந்தை குழந்தைகளுக்குக் காணுகிற மந்த பேதிகளுக்கு மெத்தஉபயோகப்படுகின்றது. இதை ரேவல்சின்னி, லவங்கப்பட்டை, மாக்நீஷிய, ஜேம்ஸ்பவுடர் இவைகளில் எதையாவதுசேர்த்து, தேனுவது, சருக்கரையாவது, ஷர்பத்தாவது கலந்துகொடுக்கலாம்.

Dose. gr. v.—ʒss. for adults; gr. ij.—gr. v. for children.

ஒ - அளவு.—௫ - முதல் - ௩௰ - கிறேன் அளவுக்கு பெரியவர்களுக்கும், ௨ - முதல் - ௫ - கிறேன் அளவுக்கு குழந்தைகளுக்கும் கொடுக்கலாம்.

*In the Diarrhœa and Dysentery of Children.* குழந்தைகளுக்குக் காணுகிறஉஷ்ணபேதி, அல்லது சீதமும் ரத்தமுங் கலந்த பேதிகளுக்கு.—கிரேபவுடர் (Grey powder), ௨ - ௩ - கிறே. கருவாப்பட்டைச் சூரணம், அல்லது மிஸ்ரம சீமைச்சுண்ணாம்பு, (P. Cretæ Co.) ௩ - கிறே. இ. மி. தினத்துக்கு ௨ - ௩ - தரங் கொடுக்கவும்.

℞ Hyd. C. Cret. ʒss., Pulv Cretæ Co., Sodæ Carb. Exsic. ā ā ʒi., M. Dose, gr. iij—v. thrice daily. Dr.—Watson.

கிரேபவுடர், ஒ - திரா. மிஸ்ரம சீமைச்சுண்ணாம்பு, வறுத்த கார்பொனேட் ஆப்சோடா, வகை க - க்கு - க - திரா. இ. மி. இதில், ௩ - அல்லது ௫ - கிறே. விதம், தினத்துக்கு ௩ - தடவைகொடுக்கவும். இது டாக்டர் "வாட்ஸன்" என்பவருடையமுறை.

**Pilula Hydrargyri,** *Pills of mercury. Blue Pill.*

பிலுலஹைறட்ராஜிரி. பிளுபில், ரசமெழுக்கு.

PREP. (Rub together Mercury ℥ss. and Confection of Roses ʒvj., till globules can no longer be seen. Then add Liquorice in powder ʒij. Beat the whole till incorporated.)

செய்முறை.—½ - அவு. ரசத்துடன், ௬ - திராம் குல்கந்துசேர்த்து, ரசம் கண்ணுக்குத்தெரியாமல் போகிறவரையில் அரைத்து, பிறகு - உ - திரா. அதிமதுரத் தூள்சேர்த்து, சரக்குகள்செவ்வையாய் மிஸ்ரமிக்கும்படி இடித்துக்கொள்ள வேண்டியது. இதைக்கடுதாசியின்மேல் தேய்த்தால் ரசம் கண்களுக்கு அகப்படாமல் இருக்கவேண்டியது. ௩ - கிரே. மெழுக்கில், க - கிரே. ரசம் இருக்கின்றது.

ACTION. Alterative, Cathartic.
செய்கை.—வியதாபேதகாரி, விரேசனகாரி.

USE. In syphilis, and many inflammations.
உபயோகம்.—கொருக்கை, திரிதோஷரோகங்கள் இவைகளுக்குங் கொடுக்கலாம். ரசமருந்துகளில் இதுதான் உள்ளுக்குக்கொடுக்க மெத்தத்தகுதியானது.

DOSE. gr. iij.—v., or even gr. xv. to act as a purgative.

ஒ. அளவு.—உ - முதல், ௩ - கிரே. கொடுத்தால் நாள்பட்டவியாதிகளை நீக்கும்; ௫-முதல், ௰௫ - கிரே. கொடுத்தால் பேதியாகும். வாய்பிடிக்க ரசம் கொடுக்கவேண்டியதாயிருந்தால், ௫ - கிரே. சூதமெழுக்கில் பேதியாகாமலிருக்கக்கொஞ்சம் அபினியைச்சேர்த்து, தினத்துக்கு உ - வேளை கொடுத்துக்கொண்டுவந்தால், மெதுவில் வாயைப்பிடிக்கும். ரஸபஸ்மத்தைச் சேர்த்துக்கொடுத்தால், சூதமெழுக்கின் குணம் அதிகப்படுமென்று கண்டிருக்கின்றது.

௫-கிரே. சூதமெழுக்கை, இரவில் கொடுத்து, காலையில் நில ஆவாரைக்கஷாயத்தைபேதிக்குக் கொடுத்தால், பித்தநீர் வெளிப்பட்டு, செவ்வையாய் பேதியாகும்.

சூதமெழுக்குடன், இபிகாக் (Ipecac.) என்னும் மருந்தைச்சேர்த்துக் கொடுத்துக்கொண்டுவந்தால், அஜீரணம் நீங்கும்.

**Unguentum Hydrargyri.** *Mercurial* or *Blue Ointment.*

அன்குவன்டம் ஹைட்ராஜீரி. மெர்க்கியூரியல் ஆயின்ட்மென்ட். பிளூ ஆயின்ட்மென்ட். இளகியரசக்களிம்பு.

PREP. (Take Mercury ℔ j., Lard ℥xiss., Suet ℥ss. Rub the Mercury with the suet and a little of the Lard, until globules can no longer be seen. Add the rest of the Lard and mix.)

செய்முறை.—ரசம், க - பவுன். பன்றிநெய், ௰க½ - அவு. ஆட்டுக்கொழுப்பு, ½ - அவு. ரசத்தை, ஆட்டுக்கொழுப்பு கொஞ்சம் பன்றிநெய் இவைகளுடன் சேர் [illegible] ரஸத்தின் அணுக்கள் கண்களுக்ககப்படாமல் போகிறவரையில் அரைத்து, பிற [illegible] பன்றிநெய்யையுஞ்சேர்த்து மிஸ்ரமித்துக்கொள்ள வேண்டியது.

ACTION. Antisyphilitic, discutient.
செய்கை.—மேகவிரணங்களை நீக்கும்; கட்டிகளைக்கரைக்கும்.

USE. In syphilis, induration and enlargements of the Testicles, &c.

உபயோகம்.—இதைச் சருமத்தின்மேல் தேய்த்தால், ரசம் உடம்பில்பற்றி வாயைப்பிடிக்கும். மேகவிரணம் முதலியவைகளுக்குப்போட உபயோகப்படும். இந்தக்களிம்பில் ௨ - ௪ - கிராம் அளவுக்கு உள்தொடைகளிலும், அக்குள்களுக்குக் கீழாகவும் அந்திசந்தி இரண்டுவேளையுந் தேய்த்தால், சீக்கிரத்தில் வாய்ப்பிடிக்கும்; நோயாளியை உஷ்ணமாயிருக்கிறவிடத்தில் வைக்கவேண்டியது. இந்தக்களிம்பைத்தேய்க்கிறவர்கள், விரல்களை தோலால் சுற்றிக்கொண்டுத் தேய்க்கவேண்டியது. விளைவாதம், விளைபருத்து கெட்டியாய் இருக்குதல், இவைகளுக்கு இதைத்தேய்த்தால் ரோகம் நீங்கிவிடும்.

**Unguentum Hydrargyri Mitius.** *Milder Mercurial Ointment.*

அன்குவன்டம் ஹைட்ராஜிரி மிஷியஸ். காரங்குறைந்த இளகிய ரசக்களிம்பு.

Prep. (Ung. Hydrarg. Fort. ℔ j., Adipis ℔ ij.) ℨvj. contains ℨj. of Mercury.)

செய்முறை.—இளகியரசக்களிம்பு, ௧. பவு. பன்றிநெய், ௨. பவு. இ - மி.—௬ - கிராம் களிம்பில் ௧ - கிராம் ரசம் இருக்கின்றது.

**Ceratum Hydrargyri Compositum** *Compound Cerate of Mercury.*

கம்பவுன்ஸிரொட் ஆவ்மெர்க்கியுரி.

Prep. (Rub together Ointment of Mercury, Compound Soap Cerate, ā ā ℥vj., Camphor ℥iss.)

செய்முறை.—ரஸக்களிம்பு, ௬. அவு. சவுக்காரக்களிம்பு. ௬. அவு. கர்ப்பூரம், ௧௨. அவு. இவைகளை மிஸ்ரமித்துக்கொள்ளவும்.

Action. Resolvent.

செய்கை.—கட்டிகளைக் கரைக்கும்.

Use. Applied to chronic enlargement of the joints, and to disperse indolent tumours.

உபயோகம்.—நாள்பட்ட மூட்டுவீக்கங்களுக்கும், கட்டிகளைக் கரைக்கவும் உபயோகிக்கப்படும்.

**Linimentum Hydrargyri.** *Compound Liniment of Mercury.*

கம்பவுன்லினிமேன்ட் ஆவ்மெர்க்கியுரி. ரசப்பூசுத்தயிலம்.

Perp. (Rub Camphor ℥i. with Rectified Spirit fℨj., then add Lard and the stronger Ointment of Mercury ā ā ℥iv., still rubbing. Gradually pour in solution of Ammonia f℥iv. Mix the whole.)

செய்முறை.—௧. அவு. கர்ப்பூரத்துடன், ௧ - கிராம் ரெக்டிபையிட் ஸ்பிரிட் என்னும் சாராயத்தை விட்டு அரைத்து, பிறகு ௪, அவு. பன்றிநெய்யும், ௪, அவு. இளகிய ரசக்களிம்பும் சேர்த்து அரைத்துக்கொண்டிருக்கும்போதே, ௪ - அவு. நவசாரஜெய நீரை, கொஞ்சங் கொஞ்சமாய் விட்டு, எல்லாவற்றையும் மிஸ்ரமித்துக் கொள்ளவேண்டியது.

ACTION. Stimulant, discutient.
செய்கை,—உஷ்ணகாரி, கட்டிகளைக்கரைக்கும்.

USE. To parts affected with chronic venereal pains, nodes; to indolent swellings, and to discuss collections of fluids. 3j. rubbed on the affected parts night and morning.

உபயோகம்.—மேகந்திலெடுத்த நோவுகளுக்கும், எலும்புதடிப்புகளுக்கும், நாள்பட்டவீக்கங்களுக்கும், நீர்கோத்துக்கொண்டிருப்பதைக் கரைக்கவும் உபயோகிக்கப்படும். ௧. திராம் தயிலத்தை அந்தி சந்தி இரண்டுவேளைகளிலும் நோய்கொண்ட இடங்களில் தேய்க்கவேண்டியது.

**Emplastrum Hydrargyri.** *Mercurial Plaster.*

எம்பிளாஸ்டிரம் ஹைறட்ராஜிரி. மெர்க்கியுரியல் பிளாஸ்டா. ரசப் பிளாஸ்திரி. கெட்டிரசக்களிம்பு.

PREP. (Add Sulphur gr. viij to Olive Oil f3j., stirring till they unite. Triturate with these Mercury ℥iij till the globules disappear. Add gradually plaster of Lead ℥xij., melted with a gentle heat, and mix them all.)

செய்முறை.—௮. கிறே. கந்தகத்தை, ௧ - திரா. ஆலிவ் எண்ணெயோடு சேர்த்து, இரண்டும் கலக்குமளவும் கிளறி, இவைகளோடு, ௩ - அவு. ரசத்தைச்சேர்த்து, ரச அணுக்கள் கண்களுக்குத் தெரியாமல் போகிறவரையில் அரைத்துக்கொண்டு, ௰௨ - அவு. ஈயப்பிளாஸ்திரியை சிறுதியிட்டு உருக்கி இதை ஷெ சரக்குகளுடன் கொஞ்சம் கொஞ்சமாய்ச் சேர்த்து, மிஸ்ரமித்துக்கொள்ள வேண்டியது.

ACTION. Stimulant, discutient.
செய்கை.—உஷ்ணகாரி, கட்டிகளைக்கரைக்கும்.

USE. To buboes, venereal tumours, nodes, indurations, joints affected with syphilitic pains.

உபயோகம்—இதைத்தோலின்மேல் தடவி, அரையாப்புக்கட்டிகள், மேகக்கட்டிகள் எலும்புதடிப்புகள், தேகத்தில்காணுகிற தடிப்புகள், மூட்டில் மேகத்திலுல் காணுகிற குடைச்சல்கள், மாமிஸகண்டங்களின் வீக்கங்கள், கல்லீரல் மண்ணீரல்களின்வீக்கங்கள் இவைமுதலியவைகளுக்குப் போடப்படும்.

**Emplastrum Ammoniaci cum Hydrargyro.** *Plaster of Ammoniacum with mercury.*

அம்மோனியாகம் பிளாஸ்டர் உத்மெர்க்கியுரி.

PREP. செய்முறை.—ரஸப்பிளாஸ்திரியைப்போலவே இதையுஞ் செய்யப்படும் ஆனால், ௰௨ - அவுன்ஸ் ஈயப்பிளாஸ்திரிக்குப்பதிலாய், ௧ - பவு. சுத்திசெய்த அம்மோனியாகம். (Prepared Ammoniacum) என்னும் சரக்கை உருக்கிச் சேர்த்துகொள்ளவேண்டியது.

USE. உபயோகம்.—இந்தப்பிளாஸ்திரியும், மேற்சொன்ன ரோகங்களுக்கே உபயோகிக்கப்படும்; ஆனால்முக்கியமாய் அரையாப்புக்கட்டிகளுக்குப் போடுவதுண்டு.

**Hydrargyri Protoxidum.** *Protoxide of Mercury.* ($HgO=208$.)
புரொட்டாக்ஸைடு ஆவ்மெர்க்கியுரி.

DESCRIP. AND PROP. விவரணம். குணங்கள்.—இந்தபஸ்மம் கறுத்து வாசனையும் ருசியுமில்லாமல், பளுவாயிருக்கும்; ஜலத்தில் கரையாது.

PREP. செய்முறை.—ரஸபஸ்மத்தை (Calomel) சுண்ணாம்புத் தண்ணீருடன் கலந்தால், கறுந்தூள் அடியில்படியும்; இதற்குபிளாக் ஆக்ஸைட் ஆவ்மெர்க்கியுரி (Black oxide of mercury) என்று பெயர்பெறும்; இதையெடுத்து பிபியுலஸ்பேபர் (Bibulous paper) என்னும் கடுதாசியில் சுற்றி, காற்றில் உலர்த்திக்கொண்டு வெளிச்சம்படாமல் வைத்துக்கொள்ளவேண்டியது.

ACTION. Stimulant, Antisyphilitic.
செய்கை.—உஷ்ணகாரி, மேகங்களைத்தடுக்கும்.

USE. உபயோகம்.—இந்தமருந்து வயிற்றில்போய் கெடுதிசெய்யாது; ஆகையால் மேகரோகச்சிகிச்சையில் இதைக்கொடுப்பதுண்டு. இந்தமருந்தை இப்போது கையாடுகிறதில்லை; புகைபோடவும், களிம்பாகச்செய்தும், பிளாக்வாஷ் (Black wash) என்னும் ஜலமாகச்செய்தும், உபயோகிக்கப்படுகின்றது.

DOSE. gr. j.—v.
ஓ. அளவு.—க - முதல், ரு - கிறேன், மாத்திரைசெய்து கொடுக்கலாம்.

**Lotio Nigra.** *Black wash.*
லோஷியோநைகிரா. பிளாக்வாஷ்.

PREP. செய்முறை.—இதைப்பலவிதமாகச் செய்கிறார்கள். வழக்கமாய்ச் செய்கிற விதமாவது.—க - திரா. ரஸபஸ்மத்துடன், க - பையி. சுண்ணாம்புத்தண்ணீர் விட்டுக் கலந்துகொள்ளவும்.

USE. உபயோகம்.—இதைச்செவ்வையாய்க் குலுக்கி, துணியில் நனைத்து, ஆண்குறியின்மேல் காணுகிற மேகரணத்துக்குப் போட்டுக்கொண்டுவந்தால் ரணம் சொஸ்தமாகும்.

**Hydrargyri Binoxidum.** *Binoxide of Mercury. Red and Peroxide of Mercury.* ($HgO_2=216$).
ரெட் ஆக்ஸைட் ஆவ் மெர்க்கியுரி. ரசசிந்தூரம்.

DESCRIP. AND PROP.—விவரணம். குணங்கள்.—ரசசிந்தூரம் ஆரஞ்சிப்பழச்சாயலாயும், தூளாயும், வாசனையில்லாமலும், இனிப்பில்லாததாயும் இருக்கும்; ஜலத்தில் கரையாது; காற்றுவது, சூடாவதுபட்டால் கெட்டுப்போய் நிறம் மாறிவிடும். அதிக அனல்பட்டால் அதிலிருக்கிற ஆக்ஸிஜென் (Oxygen) என்கிற வாயு நீங்கிப்போய், ரசமாத்திரம் நிற்கும்; இது வெடியுப்புத்திராவகம் (Nitric Acid) கறியுப்புத்திராவகம் (Hydrochloric Acid) முதலிய திராவகங்களில் உடனே கரைந்துவிடும்.

PREP. செய்முறை.—வாய்குவிந்து நீண்டிருக்கிற ஒருபாத்திரத்தில் சரத்தை ஊற்றி, சூா-டிக்கிரியாய் இருக்கிற தீயில் கொஞ்சநேரம்வைத்து எரித்தால், காற்

றிலிருக்கிற ஆக்ஸிஜென் என்கிறவாயுவை ரசம்கிரகித்துக்கொண்டு, சிவந்து படைப் படையாய் ஆகிவிடும்:—அல்லது விரத்தை (Bichloride of Mercury) ஜலத்தில் கரை த்து, லைகர்பொடாஸி (Liquor Potassæ) என்னும் மருந்தைவிட்டுக்கலந்தால், சிந் தூரம் அடியில் படியும்; அதையெடுத்து சிறுதிபிட்டெரிந்து உலர்த்திக்கொள்ளவும்.

USE. உபயோகம்.—ரசசிந்தூரத்தை இப்போது உபயோகிப்பது அரிது; இது காரம் வைக்க உபயோகப்பட்டுவருகின்றது.

DOSE. gr.$\frac{1}{4}$.—j.

ஒ. அளவு.—வ - முதல், க - கிரேன் அளவுக்கு மாத்திரைச்செய்து கொடு க்கலாம்.

## Lotio Flava. *Yellow wash.*

எல்லொவாஷ்.

PREP. செய்முறை.—பலவிதம். ௬௰-கிறே. சவ்வீரத்தை (Corrosive sublimate), ௰௬ - அவு - சுண்ணும்பு நீருடன்கலந்து செய்துக்கொள்வது வழக்கம். இது குஹுக்கி லிண்ட் (Lint) என்னும் சீமைச்சீலையை இதில் நனைத்து, மேஹரணம், கண் டமாலைச் சம்பந்தப்பட்டரணம் இவைகளுக்குப் போடப்படுகின்றது.

## Hydrargyri Nitrico-Oxidum; *Nitric Oxide of Mercury; Red Precipitate.*

நைட்டிரிக் ஆக்ஸைட் ஆவ் மெர்க்கியுரி. ரெட் பிரிஸிபிடேட். ரசக் காரச்சிந்தூரம்.

PREP. (Mix Mercury ℔iij. with Nitric Acid f℥xviij., and Dist. Water Oij., and apply a gentle heat until the mercury is dissolved. Boil down the liquor, and rub what remains to powder. Put this into another very shallow vessel, apply then a slow fire, gradually increased until fumes cease to be given off.)

செய்முறை.—௩ - பவுன், ரசத்தை, ௰அ-அவு. வெடியுப்புத்திராவகம், உ - பை ன்ட். நீர் இவைகளில்சேர்த்து சிறுதீயிட்டு ரசம் கரைந்துபோகிற வரையில் எரித்து சுண்டக்காய்ச்சி, அடியில் நிற்கிறவண்டலை தூளாக்கிக்கொண்டு, ஆழமில்லாம லிருக் கிற ஒருபாத்திரத்தில்போட்டு, சிறுதியிட்டெரித்து, புகைக்கிளம்புதல் நிற்கிறவரை யில் தீயை அதிகப்படுத்தி எரிக்கவும்.

ACTION. Irritant, Stimulant.

செய்கை.—எரிச்சலைத்தரும், உஷ்ணகாரி.

USE. To remove specks on the cornea, to chancres and foul ulcers, either sprinkled on the part in fine powder, or united with lard into an ointment.

உபயோகம்.—ந - கிரே. சிந்தூரத்தை, ச - கிறே. வெள்ளைச்சருக்கரையுடன் சேர்த்துச் சன்னத்தூளாய் அரைத்து, கண்ணில் பூப்பட்டிருப்பதற்கு தூவலாம். கொ ருக்கை, துர்மாமிசம் வளர்ந்திருக்கிற விரணம், இவைகளுக்கு நன்றாய் அரைத்துச்

சுன்னத்தூள்செய்துகொண்டு, மேலே தூவலாம்; அல்லது பன்றிநெய்யுடன் கலந்து, களிம்பாகச்செய்தும் உபயோகிக்கலாம். இதை - ஹ, முதல், ௧ - கிறே. வரையில் உள்ளுக்கு மாத்திரையாகச்செய்து கொடுக்கிறதுண்டு; ஆனால் அப்படிக் கொடுக்கக்கூடாது.

**Unguentum Hydrargyri Nitrico-oxydi.** *Red Precipitate Ointment.*

*ரெட்பிரிஸிபிடேட் ஆயின்ட்மென்ட். ரசக்காரச் சிந்தூரத்தின் இளகிய களிம்பு.*

PREP. (Take Nitric-Oxide of Mercury ℥i., Lard ℥vj., White Wax ℥ij. Melt the Lard in the Wax, add the Oxide in very fine powder. Mix.)

செய்முறை.—ரசக்காரச் சிந்தூரம், ௧- அவு. பன்றிநெய், ௬ - அவு. வெள்ளைமெழுகு, ௨ - அவு. மெழுக்கை பன்றிநெய்யுடன் சேர்த்துருக்கி, சிந்தூரத்தை மெத்தச்சன்னமாய்ப் பொடிசெய்து, அத்துடன்சேர்த்து மிஸ்ரமித்துக்கொள்ளவும்.

இதுபுதிதாய்ச்செய்தபோது, மெத்தச்சிவந்திருக்கும்; நாள்பட்டால் மங்கல்வன்னமாகி, பிறகு மேகநிறமாகிவிடும்.

ACTION. Stimulant.

செய்கை.—உஷ்ணகாரி.

USE. Applied to indolent sores, and to the eye-lids, in Chronic Ophthalmia.

உபயோகம்.—ஆறாத விரணங்களுக்கும், நாள்பட்டகண்ணோவுக்கு இமைகளுக்குத்தடவவும், உபயோகிக்கப்படுகின்றது.

**Hydrargyri Iodidum.** *Iodide of Mercury.* (Hg I=326).

*ஐயொடைட் ஆவ் மெர்க்கியுரி.*

PREP. செய்முறை.—௧ - அவு. ரசத்துடன், ௫ - திரா. ஐயொடயின் (Iodine) என்னும் சரக்கைச்சேர்த்து, ஆல்கோஹல் (Alcohol) என்னும் சாராயத்தைத்தேவையானதைக் கொஞ்சங்கொஞ்சமாய்ச் சேர்த்து, ரச அணுக்கள் மறைந்துபோகிறவரையில் அரைத்து, வெளிச்சம்படாமல் சிறுதியிட்டு தூளை உலர்த்திக்கொண்டு, கறுத்த புட்டியில்போட்டு, காற்றுப்புகுதாமல் பத்திரப்படுத்திக் கொள்ளவும்.

ACTION. Irritant Poison. Excitant, Alterative.

செய்கை.—உபத்திரவத்தைத் தருகிற நஞ்சு. உஷ்ணகாரி, வியதாபேதகாரி.

USE. In strumous affections and lepra.

உபயோகம்.—மேகரோகங்கள், குஷ்டம் இவைகளுக்குக் கொடுக்கலாம். இது ரசத்திற்குடைய குணங்களைக்காட்டும்.

DOSE. gr. j.—gr. iij.

ஒ. அளவு.—௧.—௩ - கிறேன் கொடுக்கலாம்.

**Unguentum Hydrargyri Iodidi.** *Ointment of Iodide of Mercury.*

அன்குவன்டம் ஹைடிரார்ஜிரி ஐயொடிடை. ஆயின்ட்மென்ட் ஆவ் ஐயொடைட் ஆவ் மெர்க்கியுரி.

Prep. (Melt White Wax ℥ij. and Lard ℥vj., add finely powdered Iodide of Mercury ℥j. Mix.)

செய்முறை.—வெள்ளைமெழுகு, உ - அவு. பன்றிநெய், ௬ - அவு. இவை களைஉருக்கி, சன்னமாய் அரைத்துப் பொடிசெய்த ஐயொடைட் ஆவ் மெர்க்குயுரி என்னும் சரக்கைச்சேர்த்து, மிஸ்ரமித்துக்கொள்ளவும்.

Use. To scrofulous sores.

உபயோகம்.—இந்தக்களிம்பு மேகவிரணங்களுக்கு சில மேல்தடவிப் போடப்படும்.

**Hydrargyri Biniodidum.** *Biniodide of Mercury. Red Iodide of Mercury.* ($Hg\ I_2=452$).

ஐடிரார்ஜிரி பின் ஐயொடிடம். பின் ஐயொடைட் ஆவ் மெர்க்கியுரி. ரெட் ஐயொடைட் ஆவ் மெர்க்கியுரி.

Descrip. and Prop. விவரணம். குணங்கள்.—இந்தச்சரக்கு மிகுந்த சிவப்புள்ளதாயும் (இந்திரவன்னம்), ஜலத்தில்கரைகிற குணம் இல்லாமலும் இருக்கும்; பதங்கித்தால் தகடுகளாய்ப்படியும் ; ஆல்கோஹல் சாராயத்தில் கரையும்.

Action. Irritant Poison.

செய்கை.—உபத்திரவத்தைத் தருகிற நஞ்சு. மேகரோகங்களுக்குக் கொடுக்கலாம். இதைஉபயோகிப்பது அரிது. மேலேதடவினால் புண்ணாகும்.

Dose. gr.$\frac{1}{16}$ to$\frac{1}{8}$ in pill, or in Alcoholic solution.

ஒ. அளவு.—ப ⅙ முதல், ⅛ - கிறேன் இடைக்கு, மாத்திரைச் செய்தாவது, அல்லது சாராயத்தில் கலந்தாவது கொடுக்கலாம்.

**Unguentum Hydrargyri Iodidi Rubri.** *Ointment of Biniodide of Mercury.*

அன்குவன்டம் ஐடிரார்ஜிரி ஐயொடிடை ருபிரை. ஆன்ட்மென்ட் ஆவ் பின் ஐயொடைட் ஆவ் மெர்க்கியுரி.

Prep. (Triturate carefully red iodide of mercury ʒi, with ointment of white wax ʒvij.)

செய்முறை.—க- திராம். ரெட் ஆக்ஸைட் ஆவ் மெர்க்கியுரி என்னும் சரக்கை, எ - திராம் வெள்ளை மெழுகுக்களிம்போடு சேர்த்து மிஸ்ரமித்துக் கொள்ளவும்.

Use. A stimulant application to ulcers.

உபயோகம்.—ஆறுதவிரணங்களுக்குப் போட்டால், சிவந்து சீக்கிரத்தில் ஆறிவிடும்.

**Hydrargyri Chloridum.** *Chloride of Mercury. Hydrargyri Submurias. Calomel.* ($Hg\ Cl=236$.)

ஐடிரார்ஜிரி குளொரிடம். குளொரைட் ஆவ்மெர்க்கியுரி. காலொமெல், ரஸபஸ்மம்.

Descrip. and Prop. விவரணம். குணங்கள்.—இது,ஸ்பெயின் (Spain) முதலிய தேசங்களில் தற்செயலாய் உற்பத்தியாகி அகப்படுகின்றது. நமதுதேசத்தில் வெகுகாலமாய் வைப்புவைத்து, சேகரித்துக்கொள்ளுகிறார்கள். பிறவிச்சரக்கும், வைப்புச்சரக்கும், கட்டியாயும், கம்பி கம்பிகளாயும் ஸ்படிகம்போல் மினிமினிப்புள்ளதாயும் இருக்கும். இதற்கு "ரஸகர்ப்பூரம்" என்றும், "பூரம்" என்றும், "ரஸபதங்கம்" என்றும், தமிழ்ஸாஸ்திரங்களில் சொல்லி யிருக்கின்றது. இதை வைத்தியர், முலைப்பாலில் சுத்திசெய்து (சுருக்குக்கொடுத்து), கட்டியாகவைத்துக்கொண்டு, தேன்முதலிய அநுபானத்தில் இழைத்துக்கொடுக்கிறார்கள். ஆனால், இங்கிலீஷ்வைத்தியர், பூரத்தை மெத்தச்சன்னத் தூளாய்செய்து வைத்துக்கொண்டு, உபயோகிக்கிறார்கள். பூரத்துக்கும், ரஸபஸ்மத்துக்கும் ரூபபேதமேயொழிய, குணத்தில் வித்தியாஸமில்லை. கட்டியாயிருக்கிற சரக்கில்,கொஞ்சம் வீரம் கலந்து இருப்பதும் உண்டு; ஆகையால் பூரத்தை அரைத்துத் தூள்செய்து, ஜலத்தில் கழுவி உலரவைத்துக்கொண்டு உபயோகிக்கிற இங்கிலீஷ்முறையில், தோஷங்களில்லை. ரஸபஸ்மமானது, தூளாயும் பொடியாயும் உருசியில்லாமலும் இருக்கும்; தந்தத்தைப்போல கொஞ்சம் மஞ்சள்கலந்த வெண்மை வன்னமுள்ளது. அதிகத்தீயிட்டெரித்தால், பதங்கிக்கும். ஜலத்திலும், சாராயத்திலும் கரையாது. ஆல்கெலீஸ் (Alkalis) என்னும் காரங்களுடனும், சுண்ணாம்புத்தண்ணீருடனும் கலந்தால், கறுத்துவிடும்.

Prep. (Boil Mercury ℔ ij. with Sulph. Acid f℥xxiss, until dry Bipersulphate of Mercury remains. Rub this again, when cool, with Mercury ℔ ij. in a wedgewood mortar, until they are intimately mixed, then add Chloride of Sodium ℔ jss., and triturate again until globules of Mercury are no longer visible. Then sublime. Reduce the sublimate to the finest powder, wash it repeatedly with boiling Dist. Water, and dry it.)

செய்முறை.—உ- பவுன் ரசத்தை, உ௰௧ஞ - அவுன்ஸ் கந்தகத்திராவகத்துடன்கலந்து, சுண்டக்காய்ச்சினால் "பைபர்ஸல்பேட்" என்னும் உப்பு அடியில் நிற்கும்; குளிர்ந்தபிறகு, இந்தஉப்புடன், உ - பவுன்ரஸத்தைச்சேர்த்து "வெட்ஜ்உட்மார்டர்" என்னும் கலுவத்திலிட்டு செவ்வையாப் மிஸ்ரமிக்கிறவரையில் அரைத்து, பிறகு கஞ-பவுன், கறியுப்பைச்சேர்த்து, ரஸ அணுக்கள் கண்களுக்கு அகப்படாமல் மறைந்து போகும்படி மறுபடியும் அரைத்துப் பதங்கிக்கவும்; பதங்கித்த பூரத்தை மைபோல் அரைத்து, காய்ந்துக்கொதிக்கிற நீரில் மாறிமாறிக்கழுவி உலர்த்திக்கொள்ளவேண்டியது.

ரஸபஸ்மம். தமிழ்முறை. அகஸ்தியர் வைத்தியம் ௬௱.

செய்முறை.—ஒருமண்பாண்டத்தில், ௰உ-விராகனிடை கந்தகத்தைவைத்து மெதுவாய் காடாக்கினியிட்டெரித்து, கந்தகம் உருகும்போது, அ௰ - விராகனிடை ரசத்தை அத்துடன்சேர்த்து, சரக்குகள் மிஸ்ரமிக்கும்படி துழவிக்கொண்டிருந்தால், ரசம் கந்தகத்துடன் கலந்து, கறுத்து தூளாகிவிடும்; பிறகு வேறொருபாண்டத்தில் பாதிக்குச்செங்கற்பொடியைப்போட்டு, அதின்பேரில், ௪- படி - கறியுப்பைக்கொட்டி இந்த உப்பின்பேரில், ஷெ ரசகெந்தியையைவைத்து,வேறொரு பாண்டத்தால் மூடி, பொ

ருந்து வாய்க்கு களிமண்தடவி, ௫ - சுற்றிலும் சீலைமண்செய்து, இதைக்காடாக்கினி யில் ௰௨ - மணிநேரம் எரித்தபிறகு, எடுத்து குளிரவைத்து, உடைத்துப்பார்த்தால், மேல்பாண்டத்தில் ரசபஸ்மம் பதங்கித்திருக்கும்.

இதைக்கொடுக்கிற விதம்.—௪ - விராகனிடை ஓமத்தை வறுத்துத் தூள்செய்து கொண்டு, ௪ - விராகனிடை பனவெல்லத்தைச்சேர்த்து செவ்வையாய் அரைத்து, பிறகு, அ - பணவிடை ரசபஸ்மம் சேர்த்து அரைத்து, ௰௬ - மாத்திரைகளாக்கி, ஒருமாத்திரை காலையிலும், ஒருமாத்திரை மாலையிலுமாக, அ - நாள்கொடுத்தால், வாய்பிடிக்கும். ரசபஸ்மத்துக்கு அனேகரோகங்கள் தீருமென்று கண்டிருக்கிறது. (Dr. AINSLIE.)

ரசபஸ்மத்தை இவ்விதமாய்க் கொடுக்கக்கூடாது, மெத்தக்கெடுதிசெய்யும்; எப் போதும் அளவை நிறுக்கிட்டுக்கொடுக்கவேண்டியது.

ரசகர்ப்பூரம்.—இதுவும் ரசபஸ்மந்தான், ஆனால் கட்டியாயிருக்கும்; இதற்கு ப்பூரம் என்றும்பேர்.

பூரணசுஸ்திரமுறை.—ஒருபாண்டத்தில், ௰௬ - விராகனிடை கந்தகம்போ ட்டுருக்கி, அ௰ - விராகனிடை ரசஞ்சேர்த்து, குழவிக்கொண்டிருந்தால் கறுத்துப்போ கும்; பிறகு வேறொரு பாண்டத்தில் பாதிக்கு செங்கல்பொடியைப்போட்டு, அதின் பேரில் ௧ - படி கறியுப்பைவைத்து, இந்த உப்பின்பேரில், ஷை கறுத்த சரக்கைவை த்து, வேறொருபாண்டத்தால் மூடி, பொருத்து வாய்க்கு களிமண்தடவி, எ - சுற்றிலும் சீ லைமண்செய்து காடாக்கினியில், ௰௨ - மணிநேரம் எரித்து, பிறகு எடுத்துக்குளிரவைத்து, மேல்பாண்டத்தை சாக்கிரதையாய் நீக்கிப்பார்த்தால், வெளுத்துக்கட்டியாய் "பூரம்" பதங்கித்திருக்கும். இதைக்களிமண்தடவிய ஒருகுப்பியில் பாதிக்குப்பொடித்துப்போ ட்டு, அகன்று பள்ளமாயிருக்கிற ஒருசட்டியில், வ - சட்டிக்கு ஆற்றுமணல்போட்டு ஷைகுப்பியை அடிமணலில் பதியும்படிவைத்து, குப்பியின் கழுத்தளவுக்கு மணல் கொட்டி, சட்டியை அடுப்பிலேற்றி, காலையில் ௬ - மணிமுதல் மத்தியானம் ௰௨ - மணி வரையில் எரித்து, நெருப்பை தணித்துவிட்டு, சாயரக்ஷை ௬ - மணிவரையில் குளிர வைத்து, மறுபடியும் தீயிட்டு ராத்திரி ௰௨ - மணிவரையில் எரித்து, நெருப்பைத்த ணித்துவிடவும். இவ்விதமாய் ௩ - நாள் விடாமல் எரித்துச் சுத்திசெய்துகொண்டு பார் த்தால், ரஸகர்ப்பூரம் குப்பியின்மேற்புறத்தில் பதங்கித்திருக்கும்.

இதை பனவெல்லத்துடன் மிஸ்ரமித்து, மேகமுதலிய ரோகங்களுக்கு வாய்பிடிக் கக்கொடுக்கிறார்கள்; மேலும் இதை முலைப்பாலில் ஊறவைத்து எடுத்துக்கொண்டு, சுரம் முதலியரோகங்களுக்கு, தேன், இஞ்சிச்சுரஸம் முதலிய அனுபானத்தில் கொடு க்கிறார்கள். எவ்விதமாய்க் கொடுத்தபோதிலும் அந்தந்தவியாதிகளுக்குத் தக்கபடி அளவை நிறுக்கிட்டு கொடுக்கவேண்டியது. பூரத்தை உரைத்துக்கொடுப்பதில், அள வில் ஏற்றக்குறைச்சலாகும், ஆகையால் ரசபஸ்மமே தகுதியானது. சிலவேளை பூரத் துடன் வீரங்கலந்திருப்பதும்உண்டு; இது மெத்தக்கெடுதிசெய்யும்; ஆகையால் பூரத் தைச்செவ்வையாய்ப் பரீக்ஷித்துக்கொடுக்கவேண்டியது. ரசகர்ப்பூரத்தைச் சுண்ணாம் புஜலத்துடன் கலந்தால், மஞ்சள்நிறமான வண்டலுண்டாகி அடியில் படியுமாகில், சவ் வீரம் இருக்கிறதென்றும், கறுத்தநிறமான வண்டலுண்டாகி அடியில்படிந்தால், ரச பஸ்மமாத்திரம் இருக்குதென்றும், மஞ்சளும் கறுப்புங்கலந்திருந்தால், பூரமும், வீர மும் இருக்கிறதென்று எண்ணவேண்டியது. காடிக்காரநீரை, ரசபஸ்மம் ரசகர்ப்பூ

ரம் இவைகளுடன்சேர்த்துப் பரிக்ஷிப்பதும் உண்டு. சுவ்விரமிருந்தால், தயிலைப் போல் வெளுத்த வண்டலுண்டாகி, அடியில் படிந்து நிற்கும்.

INCOMP. சத்துருபதார்த்தங்கள்.—ஆல்கெலீஸ் (Alkalis) என்னும் உப்புகள், சுண்ணும்புத்தண்ணீர், நவக்ஷாரம், லோகத்திராவகங்கள், அயம், தாம்ரம் நாகம், முதலிய சரக்குகளின் உப்புகள், இவைமுதலியவைகள், ரசபஸ்மத்தை முறித்துவிடும்.

ACTION. Alterative, Stimulant, Sialogogue, Cathartic, &.; Antiphlogistic, Sedative.

செய்கை.—வியதாபேதகாரி, உஷ்ணகாரி, திரவகாரி, விரேசனகாரி; தாபன ரோகங்களைச் சமனப்படுத்தும், ஸமனகாரி, பித்தநீரை அதிகமாக்கும், மேகத்தைப் போக்கும்.

USE. In Fevers, Croup, Encephalitis, Acute inflammation of serous membranes, Diseases of the Heart, Diseases of the Lungs, Insanity, Apoplexy, Diseases of the Eye, Acute Hepatitis, Dysentery, Diarrhœa of Infants, Dyspepsia, Jaundice, Cholera, Tabes Mesenterica, Worms, Acute Rheumatism, Lumbago, Phlegmasia Dolens, Psoriasis, Lepra, Headaches,&c.

உபயோகம்.—சுரங்கள், குறமாந்தரோகம், மூளைத்தாபனரோகம், சீரஸ்மெம்பிரேன் என்னும் சவ்வுகளில் காணுகிறதாபன ரோகங்கள், இருதயரோகங்கள், காசரோகங்கள், உன்மாதம், அசதிசந்நிரோகம், நேத்திரரோகங்கள், யகிர்திகண்டதாபனரோகம், சீதபேதி, குழந்தைகளுக்குக்காணுகிற அதிசாரம், அஜீரணம், மஞ்சட்காமாலை, வாந்திபேதி, குழந்தைகளுக்குக்காணுகிற மாந்தம், கிருமிரோகம், கீல்வாதரோகம், இடுப்புவலி, தொடைவாழை, சொறிசிரங்கு, குஷ்டம், தலைவலி முதலியரோகங்களுக்கு, ரசபஸ்மத்தைக் கிரமத்துடன் தெரிந்துகொடுத்தால், நன்மைசெய்யாமற்போகாது. சகல அவுஷதங்களுக்குள், ரசபஸ்மம் மெத்தச்சிரேஷ்டமானது. பலமான நோய்களுக்கு, வாய்பிடிக்கும்படி ரசத்தைக் கொடுக்கவேண்டியதாய் இருந்தால், ரசபஸ்மத்தைக் கொடுக்கவேண்டியது ; குறைந்த அளவில் கொடுத்தால், பித்த உறுப்புகளை உஷ்ணித்து, பித்தத்தை விருத்திசெய்யும். சில தேகத்துக்கு, ரஸம் ஏற்றுக்கொள்ளாமல், மெத்தக்கெடுதி செய்கின்றது.

DOSE. gr. j. Alterative ; gr. iij.—gr. v. Cathartic ; gr. iij. with a little Opium, 2 or 3 times a day, will rapidly produce ptyalism ; gr. x.—xx. acts as a sedative in particular cases.

ஔ. அளவு.—௧- கிறேன் கொடுத்தால், வியதாபேதகாரியாகும் ; ௩- முதல் ௫- கிறேன் கொடுத்தால், பேதியாகும் ; ௩ - கிறேன் ரசபஸ்மத்துடன் கொஞ்சம் அபினியைச்சேர்த்துத் தினத்துக்கு ௨ - ௩ - தடவைகொடுத்துக்கொண்டுவந்தால், சீக்கிரத்தில் வாய்பிடிக்கும் ; ௰ - முதல் ௨௰ - கிறேன்கொடுத்தால் சமனகாரியாகும்.

**Pilula Hydrargyri Chloridi Composita.** *Pilula Calomelanos Compositæ. Compound Calomel Pills. Pilulæ Plummeri. Plummer's Pill.*

பிலுல ஐ'ட்ராார்ஜிரி குளொரிடை கம்பாஸிட. கம்பவுன் காலொமெல் பில்ஸ். பிளமர்ஸ்பில். ரசபஸ்மமெழுகு.

PREP. (Rub Chlor. Mercury and Oxysulph. Antimony ā ā ℨij. together; then with Powdered Guaiacum ℥ss. and Treacle f℥ss., that a mass may be formed.)

செய்முறை.—ரசபஸ்மம், உ - திராம், அஞ்சனக்கல் சிந்தூரம், உ-திராம். இவைகளைச்சேர்த்து அரைத்து, ௬ - அவுன்ஸ் குவையாகம் என்னும் பிசினியின் சூரணம், ௬- அவுன்ஸ் சருக்கரைப்பாகு, இவைகளையுஞ்சேர்த்து இடித்து, மெழுகுபதமாய்ச் செய்துகொள்ளவும்.

கூ—கிறேன் மெழுகில், க - கிறேன் ரசபஸ்மம் இருக்கின்றது. இந்தமெழுகு, நாள்பட்டால் கெட்டுப்போகும்.

ACTION. Alterative, Diaphoretic.

செய்கை.—வியதாபேதகாரி, சுவேதகாரி.

USE. உபயோகம்.—ரசபஸ்மம், குதமெழுகு, இவைகளுக்குப் பதிலாக, ரசபஸ்மமெழுகை உபயோகிக்கலாம்.

DOSE. gr, v.—gr. xx.

ஒ. அளவு.—ரு-கிறேன் அளவுக்குக் கொடுத்தால், நீடித்திருக்கிற ரோகங்கள் குணமாகும், வியர்வைபிறக்கும். உ௰ - கிறேன் அளவுக்குக் கொடுத்தால் பேதியாகும்.

**Hydrargyri Bichloridum**. *Bichloride of Mercury, Corrosive Sublimate. Oxymuriate of Mercury.* ($Hg\ Cl_2 = 272$).

ஐடிரார்ஜிரி பைகுளோரிடம். பைகுளோரைட் ஆவ் மெர்க்கியுரி. கரோஸிவ் ஸப்பிளிமேட். சவ்வீரம். வீரம். சரக்குச்சுண்ணம். பறங்கிப் பாஷாணம்.

DESCRIP. AND PROP. விவரணம். குணங்கள்.—சவ்வீரமானது வெள்ளையாயும்,ஓர்விதமான காரமுள்ளதாயும், வாசனையற்றதாயும் இருக்கும். சிறியபளிங்குக் கல்லுகளைப்போலாவது, அல்லது பெரிய ஸ்படிகக்கல்லுபோலாவது இருக்கும்; எரித்தால் முதல் உருகிப் பிறகு, புகையாய்ப் பறந்துவிடும்; ஜலத்திலும், சாராயத்திலும் கரையும்; கறியுப்பு, நவச்சாரம் இவைகளில் எதையாவது சேர்த்தால், சீக்கிரத்தில் கரையும். சுண்ணாம்புத்தண்ணீருடன் கலந்தால், மஞ்சள்நிறமான வண்டல் அடியில் படிந்து, பிறகு அது சிவந்துபோகும். ஐயொடைட் ஆவ் பொட்டாஸியம் (Iod. Potassium) என்னும் உப்பைக்கலந்தால், மஞ்சள்நிறமான வண்டல் உண்டாகி, பிறகு அது அதிக சிவந்த நிறமாகிவிடும்.

PREP. (Boil Mercury lb ij. with Sulph. Acid f℥xxiss., until dry Bipersulphate of Mercury remains; rub this, when cool, with Chlor. Sodium lbjss. in a porcelain mortar, then sublime with a gradually increasing heat.)

செய்முறை.—உ-பவுன் ரசத்தை, உ௰௧௨ அவுன்ஸ் கந்தகத்திராவகத்துடன் சேர்த்து, பைபர்ஸல்பேட் ஆவ்மெர்க்கியுரி என்னும் உப்பு உலர்ந்து அடியில்

றிற்கிற வரையில் காய்ந்து, குளிர்ந்தபிறகு, இந்த உப்புடன், கஉ-பவுன் கறியுப்பைச் சேர்த்து, பீங்கான் கலுவத்திலிட்டு அரைத்து, பிறகு நியை படிப்படியாய் அதிகப் படுத்திப் பதங்கித்துக்கொள்ளவும்.

*தமிழ்முறை.*—முதல், யசு - விராகனிடை கந்தகம், அய - விராகனிடை ரசம், ஒ-படி உப்பு இவைகளைச்சேர்த்து ரசபஸ்மத்தை மேற்சொன்ன முறையாய்ச் செய்துகொண்டு, பிறகு, இந்த ரசபஸ்மத்தில் அய - விராகனிடை எடுத்துகொண்டு, இதனோடு, அய - விராகனிடை வறுத்த கறியுப்பு, சய - விராகனிடை வறுத்ததுரிசு, உய-விராகனிடை படிக்காரம், உய - விராகனிடை பொட்டிலுப்பு, உய- விராகனிடை பூநீறு, ய - விராகனிடை அன்னபேதி, ரு - விராகனிடை நவக்ஷாரம், இவைகளைச் செவ்வையாய் மிஸ்ரமிக்கும்படி அரைத்து, இவையெல்லாம் பாதிக்குவரும்படியான அவ்வளவு பெரிதாய் இருக்கிற ஒரு குப்பியில்போட்டு, பிறகு சுற்றிலும் களிமண்தடவி, அடுப்பிலேற்றி, சாதிலிங்கத்துக்குச் செய்கிறமுறையாய், ஙசு - மணிநேரம் சாக்கிரதையாய்ப் பெருந்தீயிட்டு மெதுவாய் எரித்து, பிறகு குப்பியை உடைத்துப் பார்த்தால், சவ்வீரம் வாயில் அடையாய்ப் படிந்திருக்கும்.

*சவ்வீரத்தைக் கொடுக்கிறவிதம்.*—ஒரு நெல்லிடை சவ்வீரத்தைக் கொஞ்சம் இஞ்சிரஸத்திலாவது, அல்லது, ஒ - விராகனிடை வெல்லத்திலாவது, அந்தி சந்தி இரண்டுவேளையும், ங - நாள்கொடுக்க வாய்பிடிக்கும், யங - சந்நிரோகங்கள், சிலேஷ்மரோகங்கள், மேகரோகங்கள், சுவாஸகாஸ ரோகங்கள், கண்டமாலை ரோகங்கள் ஆகிய இவைகள் தீருமென்று கண்டிருக்கிறது. "பூரண சூஸ்திரம்". (Dr. Ainslie.)

Incomp. *சத்துரு பதார்த்தங்கள்.*—ஆல்கெலீஸ் (Alkalis) என்னும் காரங்கள், சுண்ணாம்புத்தண்ணீர், சவுக்காரம், வாந்தி உப்பு (Tartar Emetic), காடிக்காரம் வங்கவுப்பு, ஐயொடைட் ஆவ்பொட்டாஸியம் (Iodide of Potassium), கசப்புந்துவர்ப்புமுடைய கஷாயங்கள் முதலிய வைகள் வீரத்தை முறித்துவிடும்.

Action. Alterative.

*செய்கை.*—வியதாபேதகாரி. அதிக அளவில் கொடுத்தால், சோர்வையும் ஆயாசத்தையும் உண்டுபண்ணி, அதிகமாய்ப் வாயைபுண்ணாக்கிவிடும். மிதத்துக்கதிகமானால், விஷமித்துக் கொல்லும்.

Use. In syphilis, secondary syphilis, Chronic cutaneous diseases, &c.

*உபயோகம்.*—கொருக்கு, மேகரோகம், நீடித்திருக்கிற சருமரோகங்கள், குஷ்டம் முதலிய ரோகங்களுக்குக் கொடுக்கலாம்.

Dose. gr. $\frac{1}{16}$ to $\frac{1}{6}$.

*ஒ. அளவு.*—பஉ- முதல், வ - கிறேன்வீதம், மாத்திரைசெய்து கொடுக்கலாம். ஆனால் அடியில் வருகிற ஜெய நீராகச்செய்துகொடுப்பது வழக்கம்.

**Liquor Hydrargyri Bichloridi.** *Solution of Bichloride of Mercury.*

லிகர் ஹைடிரார்ஜிரி பைகுளோரிடை. ஸொலூஷன் ஆவ் பைகுளோரைட் ஆவ் மெர்க்கியுரி. சவ்வீரஜெயநீர்.

Prep. (Dissolve Bichlor. Mercury and Hydrochlor. Ammonia ā ā gr. x. in Aq. dest. Oj.)

செய்முறை.—ம- கிறேன் சவ்வீரம், ம - கிறேன் நவக்ஷாரம்; இவைகளை, க-பையின்ட் நீரில் கரைத்துக்கொள்ளவும்.—க - அவுன்ஸ் ஜெயநீரில், ௧ - கிறேன் சவ்வீரம் இருக்கின்றது.

Dose. f ʒss—f ʒij.

ஒ. அளவு.—௧- முதல் ௨ - திராம் வரையில், ஜலத்திலாவது, நன்னாரிவேர் கஷாயத்திலாவது கொடுக்கலாம்.

Antidotes. பிரதிவிஷங்கள்.—விரத்தை விஷயிக்கும்படி சாப்பிட்டவர்களுக்கு, முட்டையின் வெள்ளைக்கருவைக்கொடுத்து, உடனே மாசக்காயையாவது, காசுக்கட்டியையாவது, கஷாயஞ்செய்துக் கொடுக்கவும். பால், கோதுமை மாவு, இவைகளையுங் கொடுக்கலாம்.

சவ்வீரம், க - கிறே. சுத்தஜலம், அ - அவுன்ஸ். இ - மி-இதை மூத்திரத்துவாரத்தில் பீச்சாங்குழலால் அடித்துக்கொண்டு வந்தால்,வெள்ளைவிழுதல்குணமாகும். இதை துணியில் நனைத்து, கண்ணுக்கும் போடலாம்.

**Hydrargyri Ammonio Chloridum.** *Ammonio-Chloride of Mercury. White Precipitate.* (Hg, Cl, N $H_2$=252).

ஐடிராா்ஜிரி அம் மோனியொகுளோரிடம். அம் மோனியொகுளோரைட் ஆவ் மெர்க்கியுரி, ஒயிட்பிரிஸிபிடேட்.

Descrip. and Prop. விவரணம். குணங்கள்.—இது வெள்ளைக்கட்டியாவாவது, தூளாயாவது, இருக்கும்; வாசனையில்லை, வாயில்போட்டால் களிம்பைப் போலிருக்கும்; ஜலத்திலும், சாராயத்திலும் கரையாது.

Prep. (Dissolve Bichlor. Mercury ℥vj. in Dist. Water Ovj. with the aid of heat; when cool, add Liq. Ammoniæ f℥viij. frequently shaking; wash the precipitate until it be free from taste, and dry it.)

செய்முறை.—சு - அவு. சவ்வீரத்தை, சு - பையி. நீரில்போட்டுக் காய்த்துக்கரைத்து, குளிர்ந்தபிறகு, அ - அவு. லைகர் அம்மோனிய என்னும்நவக்ஷார ஜெயநீர் விட்டுக்கலந்து அடிக்கடி குலுக்கிவைத்தால், அடியில் வண்டல்படியும்; அதை வாயுக்குருசி தட்டுப்படாமல் போகிறவரையில் கழுவி உலர்த்திக்கொள்ளவும்.

Action. Use. செய்கை. உபயோகம்.—சவ்வீரமுதலிய ரசமருந்துகளுக்கிருக்கிற குணங்கள், இதற்கும் உண்டென்று எண்ணப்பட்டிருக்கின்றது; ஆனால் இதை மேலுக்குமாத்திரம் உபயோகிக்கப்படும்.

**Unguentum Hydrargyri Ammonio-Chloridi.** *Ointment of Ammonio Chloride of Mercury.*

அன்குவன்டம் ஐடிராா்ஜிரி அம் மோனியொ குளொரிடை. ஆயின்ட்மென்ட் ஆவ் அம் மோனியொகுளோரைட் ஆவ் மெர்க்கியுரி.

Prep. (Add Ammonio-Chloride Mercury ʒij. to Lard ℥iij., and rub well together.)

செய்முறை.—உ - திராம் அம் மோனியோகுளோரைட் ஆவ் மெர்க்கியூரி என்னும் பஸ்மத்தை, ௩ - அவு. பன்றிநெய்யுடன் சேர்த்து, செவ்வையாய் மிஸ்ரமிக்கும்படி அரைத்துக் கொள்ளவும்.

ACTION. Stimulant.

செய்கை.—உஷ்ணகாரி.

USE. In obstinate cutaneous eruptions.

உபயோகம்.—ஆறாத சொறிசிரங்குகளுக்கும், ரணங்களுக்கும் உபயோகிக்கலாம்.

**Hydrargyri Bisulphuretum.** *Bisulphuret and Red Sulphuret of Mercury. Cinnabar.* ($Hg\ S_2=232$),

ஐடிரார்ஜீரி பைஸல் பியூரிட்டம். பைஸல்பியூரெட் ஆவ்மெர்க்கியூரி. ஸின்னபார். சாதிலிங்கம். லிங்கம்.

DESCRIP. AND PROP. விவரணம். குணங்கள்.—சாதிலிங்கமானது பிறவிச்சரக்கு; வைப்புவைத்துச் செய்வதுண்டு; வைப்புச்சரக்கானது, சிவந்து பளுவாய் ஊசிக்கம்பிகளைப்போல் இருக்கும்; ருசியும், வாசனையும் இராது; ஜலத்தில் கரையாது; இதைத்தூள்செய்தால் அதிக சிவந்தநிறமாயிருக்கும்; இந்தத்தூளுக்கு இங்கிலீஷில் "வெர்மிலியன்" (Vermilion) என்று பேர். லிங்கம் நீலவன்னச் சுடராய் எரியும்.

PREP. (Melt Sulphur ℥v. with Mercury ℔ij. Continue the heat till the mixture begings to swell up. Remove the vessel, cover it closely to prevent the mass taking fire; then pulverise, and sublime.)

செய்முறை.—௫ - அவு. கந்தகத்தை, உ - பவு. ரஸத்துடன்சேர்த்து உருக்கவும்; சரக்குகள் பொங்கி எழும்புகிறவரையில் தீயிட்டெரித்து, பாத்திரத்தை அடுப்பைவிட்டிறக்கி, சரக்குகள் தீபிடிக்காமல் பத்திரமாய்மூடி, பிறகுசூரணித்து, பதங்கித்துக்கொள்ளவும்.

இவ்விரண்டு சரக்குகளைத் தீயிட்டெரிப்பதில், ஒன்றோடொன்று கலந்துபோகும், இதைமூடி நெருப்பிலிருந்து எடுக்காவிட்டால், வெடிக்கும், கருத்துவிடும். இதைப்பதங்கிப்பதில், சிவந்து கட்டியாய்ப்போய்விடும்.

ACTION. Alterative.

செய்கை.—வியதாபேதகாரி.

USE. உபயோகம்.—இதை உள்ளுக்குக்கொடுப்பதுஅரிது. ஆனால்தமிழ் வைத்தியர்கள், இதைசுரம் முதலியரோகங்களுக்கு, தேனில் இழைத்துக்கொடுப்பது வழக்கம். தமிழ்வைத்தியர் உபயோகிக்கிறமருந்துகளில், இதுபிரதானமானது; இதனுடையசெய்கையை நன்றாய்த் தெரிந்துகொள்ளாததனால், இதில் அவாள் மெத்த நம்பிக்கையை வைத்திருக்கிறார்கள். இதுஅப்பிரயோஜனமானமருந்து.

DOSE. gr. x.—ʒss.

ஒ. அளவு.—௰ - முதல், ௩௰ - கிரே. அளவுக்குக்கொடுக்கலாம். நாட்டுவைத்தியர், இழைப்புக்கணக்காய் கொடுக்கிறார்கள். இதைமுக்கியமாய் புகைபோட உப

யோகமாகின்றது. ஒருவேளைக்கு. ௧ - கிராம்விதம் புகைபோட உடயோகிக்கலாம். கந்தகப் புகையால், இருமல் உண்டாகும்.

℞ Hydrarg. Bisulph., T. Opii ā ā ʒij., Sulph. Sublim. ℥ss., Adipis ℥v., M. *In obstinate Prurigo of the Hands.* (E. WILSON).

உள்ளங்கையில்காணுகிற சொறிசிரங்குக்கு.—லிங்கம் - உ கிரா. அபினிபாவனத்திநீர் உ - கிரா. பதங்கித்தகந்தகம், ௧ - அவு. பன்றிநெய், ரு - அவு, இவைகளையிலே ரமித்துப்பூசவும். இது. "உல்ஸன்" என்பவருடையமுறை.

**Unguentum Hydrargyri Nitratis.** *Ointment of Nitrate of Mercury. Citrine Ointment.*

அன்குவன்டம் ஐடிரார்ஜிரி நைட்ரேடிஸ். ஆயின்ட்மென்ட் ஆவ் நைட்ரெட் ஆவ் மெர்க்கியுரி. ஸிட்ரன் ஆயின்ட்மென்ட்.

PREP. (Dissolve Mercury ℥ij. in Nitric Acid f℥iv. then mix the liquor while hot with Lard ℔j., and Olive Oil f℥viij., first melted together.)

செய்முறை.—உ - அவு. ரசத்தை, ச - அவு. வெடியுப்பு திராவகத்தில்கரைத்து, பிறகு திராவகம் சூடாயிருக்கும்போதே, ௧ - பவு. பன்றிநெய், அ - அவு. ஆலில் ஆயல்என்னும் எண்ணெய், இவைகளைச்சேர்த்து உருக்கி, இத்துடன் மிஸ்ரமித்துக்கொள்ளவும்.

ACTION. Stimulant, Alterative.

செய்கை.—உஷ்ணகாரி, வியதாபேதகாரி.

USE. In chronic ophthalmia, several cutaneous eruptions, indolent ulcers, &c.

உபயோகம்.—நாள்பட்ட கண்ணோவுக்கு, கண்ரெப்பைகளுக்கும், சருமத்தின் மேல்காணுகிற பலவிதச்சிரங்குகளுக்கும், ஆராதவிரணங்களுக்கும் உபயோகிக்கலாம். நாள்பட உபயோகித்தால், ரசம்தேகத்தில் பரவிக்காட்டுகிற குணங்களைக் காட்டும்; கெட்டுப்போன களிம்பை உபயோகித்தால் கெடுதிசெய்யும்; ஆகையால் அதைஉபயோகிக்கலாகாது.

**Unguentum Hydrargyri Nitratis Mitius.** *Milder Ointment of Nitrate of Mercury.*

அன்குவன்டம் ஐடிரார்ஜிரி நைட்ரேடிஸ் மிஷியஸ்.

PREP. (Rub together Ointment of Nit. Mercury ℥j. and Lard ℥vij.)

செய்முறை.—௧ - அவு. ஸிட்ரன் ஆயின்ட்மென்ட், எ - அவு. பன்றிநெய்; இவைகளைச்சேர்த்து ஒன்றுப்அரைத்துக்கொள்ளவும். புதிதாய்செய்ததை உபயோகிக்கவேண்டியது.

USE. உபயோகம்.—கண்ணோவுக்கு, கண்ரெப்பைகளில் தடவலாம்.

## ARSENICUM. *Arsenic.* (As=75).

ஆர்ஸினிகம். ஆர்ஸினிக். பாஷாணம்.

Descrip. and Prop. விவரணம் குணங்கள். பாஷாணம் என்றால், கல்லென்று அருத்தம். நஞ்சின்குணமும், தனிபதார்த்தமுமாகிய ஒருலோஹத்துக்கு, பாஷாணம் என்று பேர். பாஷாணம் பூமியில் உற்பத்தியாகின்றது ; சிலவேளை பாஷாணம் தோஷமில்லாமல் அகப்படும் ; ஆனால் சாதாரணமாய் கந்தகம், அயம், தாம்ரம், இவைமுதலிய லோஹங்களோடு கலந்திருக்கும் ; இப்படிக் கலந்திருக்கிற சரக்கைவறுத்தால், பாஷாணம் பதங்கிக்கும் ; இதுவே வெள்ளைப்பாஷாணமாம் ; இந்த வெள்ளைப்பாஷாணத்துடன், அடுப்புக்கரித்தூளைச்சேர்த்து எரித்துப் பதங்கித்தால் சுயம்புபாஷாணம் (Metallic arsenic) ஆகும்.

*Metallic arsenic.* சுயம்புபாஷாணத்தின் குறிகள்.—சுயம்புபாஷாணத்துக்கு மினிமினிப்பு, ஊதாவன்னம், எளிதில் நுறுங்கத்தக்கதன்மை, இக்குணங்களிருக்கின்றன. இதைக்காற்றுப் புகாமல், கவசஞ்செய்து சிறுதீயிட்டு எரித்தால், பதங்கிக்கும். பாஷாணப்புகைக்கு வெள்ளைப்பூண்டுவாசனையுண்டு. பாஷாணத்தை, காற்றுப்பட எரித்துப் பதங்கித்தால், காற்றிலிருக்கிற ஆக்ஸிஜென் என்னும் வாயுகலந்து, வெள்ளைப்பாஷாணமாகும்.

தமிழ்சாஸ்திரத்தில் கண்டிருக்கிற பலவிதபாஷாணங்களாவன:—வெள்ளைப்பாஷாணம், மனோசிலை, தாளகம், தொட்டிபாஷாணம், மடல் அரிதாரக்கரடு, மடல் அரிதாரம், பொன்னரிதாரம், கௌரிபாஷாணம், நீலாஞ்சனபாஷாணம், பஞ்சபாஷாணம், நவபாஷாணம், குதிரைப்பல்பாஷாணம், முதலியவைகளாம்.

மடல் அரிதாரக்கரடு ; இதுவேகரட்டுத்தாளகம்.

மடல் அரிதாரம் ; இதுவேதகட்டரிதாரம்.

பொன் அரிதாரம். (Golden coloured Orpiment. King's yellow).

மேற்சொல்லிய பாஷாணங்களில், அநேகம் ரூபபேதமே யொழிய குணத்தில் வேறுபடாது. அரிதளம், இதுவே வன்ன அரிதாரம் ; இது ஓர்விதமஞ்சள் மண்ணு. இதில் பாஷாணமில்லை ; சிலர் அரிதளத்தில் பாஷாணங்கலந்திருக்கிறதென்று சொல்லுகிறார்கள்.

பாஷாணங்களில், ௬௪ - சாதிகளென்றும், இவைகளில், ௩௨ - பிறவிப்பாஷாணங்களென்றும், ௩௨ - வைப்புப்பாஷாணங்களென்றும், தமிழ்ஸாஸ்திரத்தில் கண்டிருக்கின்றது.

*Native Arsenic.* ௩௨, பிறவிப்பாஷாணங்களாவன.—1 அஞ்சனபாஷாணம், 2 அப்பிரகபாஷாணம், 3 அவுபலபாஷாணம், 4 இலிங்கபாஷாணம், 5 கந்தகபாஷாணம், 6 கரட்டுத்தாளகம், 7 கற்கடகபாஷாணம், 8 கற்பரிபாஷாணம், 9 கற்பாஷாணம், 10 காய்ச்சற்பாஷாணம், 11 காந்தபாஷாணம், 12 கார்முகில் பாஷாணம், 13 குதிரைப்பல்பாஷாணம் அசுவம் அல்லது கத்துருபம், 14 கந்தகம், 15 கௌரிபாஷாணம் அல்லது அங்கரமாதி, 16 கோளகபாஷாணம் அல்லது அங்கம், 17 சங்கபாஷாணம், 18 சவ்வீரம் அல்லது பறங்கிப்பாஷாணம் (Corrosive Sublimate). 19 சரகாண்டம் அல்லது அங்குசன், 20 சாலாங்கபாஷாணம் அல்லது கும்பகம், 21 சிலாமதம், 22 சிதாங்கபாஷாணம் அல்லது அகளங்கம், 23 சிரபந்தம் அல்லதுகபாலன், 24 சூதபாஷாணம், 25 தகட்டுத்தாளகம் அரிதாரம், 26 தாலம்பம், 27 துத்தபாஷாணம், 28 தொட்டிபாஷாணம், 29 பலண்டுறுகபாஷாணம், 30 மனோசிலை, 31 மிருதம் அல்லது அங்கணன், 32 வெள்ளைப்பாஷாணம் இதுவே எலிப்பாஷாணம், (White Arsenic, Ratbane).

*Prepared Arsenic.* ௩௨ - வைப்புப்பாஷாணங்களாவன.—1 அமரசிலைக் கந்தகம், 2 அயத்தொட்டி, 3 இந்திரபாஷாணம், 4 இரசிதம், 5 இரத்தபாஷாணம், 6 இலவணபாஷாணம், 7 எருமைநாதொட்டி, 8 கருமுகில், 9 காகம், 10 குங்குமம் அஞ்சற்குளச்சு அல்லது கமலி, 11 கோடாசொரி, 12 கோழித்தலைக்கந்தகம், 13 கௌரி, 14 சவ்வீரம், 15 சாதிலிங்கம், 16 சூதம், 17 செப்புத்தொட்டி, 18 சோரம், 19 தீமுறுகல், 20 துத்தம், 21 துருசி, 22 தொட்டி (Orpiment) 23 நாகபாஷாணம், 24 நீலம் அல்லது ஈயக்குழலி அல்லது ஈயத்தின்பிள்ளை, 25 பஞ்சபட்சி, 26 பவழப்புற்று, 27 பூரம், 28 பொற்றொட்டி, 29 மிருதார்சிங்கி அல்லது சிங்கி, 30 வாணகந்தகம், 31 வெள்ளை, 32 வைப்பரிதாரம்.

மேல்விவரித்த, ௬௪ - பாஷாண வகைகளில், பாஷாணத்தின் குணமில்லாத கல்லுகளையும், லோகங்களையுங்கூடச் சேர்த்திருக்கின்றன; இவைகளைத் தெரிந்துகொள்வது மிகவுங்கடினம்.

தமிழ்வைத்தியர்கள், தாளகத்தையும், மனோசிலையையும், பஸ்மமாக்கி இருமல், சுரம், முதலியரோகங்களுக்கு உபயோகிக்கிறார்கள். இங்கிலீஷ் வைத்தியஸாஸ்திரத்தின்படி, ௪ - சாதி பாஷாணங்களுண்டு; அவைகளாவன.—சுத்தபாஷாணம், வெள்ளைப்பாஷாணம், மனோசிலை, தாளகம், ஆம்.

## Arsenic. சுத்தபாஷாணம்.

இதரலோகங்களோடு சேராமல், தனிப்பட இருக்கிறபாஷாணத்துக்கு, சுத்தபாஷாணம் என்றுபேர். இதைஅவுஷதமாக உபயோகப்படுத்துகிறதில்லை.

**Acidum Arseniosum.** *Arsenious Acid. White Oxide of Arsenic. White Arsenic.* ($As\,O_3$=99.) வெள்ளைப்பாஷாணம். சங்குபாஷாணம்.

இதில் க - பங்கு சுத்தபாஷாணமும், ௩ - பங்கு ஆக்ஸிஜென் என்னும் வாயுவும், இருக்கின்றன; இது பிறவிச்சரக்கு; ஆனால்எப்போதும் வைப்புவைத்துச்செய்கிறார்கள். இந்தபாஷாணந்தான் இங்கிலீஷ்வைத்தியத்தில் உபயோகமாகின்றது. செய்முறை.—சுத்தபாஷாணத்தை விளாவின பொட்டிலுப்பு திராவகத்தில் (Dilluted Nitric Acid) போட்டு, சுடவைத்தால் வெள்ளைபாஷாணமாகும்.

Action. Irritant Poison, Antiperiodic, Alterative. *Externally* Caustic.

செய்கை.—எரிச்சலைத் தருகிறநஞ்சு, முறையாய்வருகிற ரோகங்களைத் தடுக்கும்; வியதாபேதகாரி. மேலேதடவினால் புண்ணாகும்.

Use. In obstinate chronic diseases of the skin, intermittent fevers, and other periodic diseases.

உபயோகம்.—ஆறாத சருமரோகங்கள், முறைக்காச்சல், முறையாய்வருகிற ரோகங்கள், இவைமுதலியவைகளுக்கு உபயோகிக்கலாம். இங்லீஷ்வைத்தியர்கள், பாஷாணத்தை திரவரூபமாகவும், ஹிந்துவைத்தியர்கள் மிளகைச்சேர்த்து மாத்திரை செய்தும், உபயோகப் படுத்துகிறார்கள். புற்றுமுதலிய விரணங்களுக்கு, காரமாகப் போடுவதுண்டு.

Dose. gr. 1-16th or 1-12th to 1-8th.

ஒ - அளவு.—வீசம்முதல் படிப்படியாய் ஹ - கிரேன்வரையில் அதிகரித்துக்

கொடுக்கலாம். க - கிறேன் வெள்ளைப்பாஷாணத்தை. ௰ - கிறேன் சருக்கரையும், கொஞ்சம் ரொட்டிச்சதையுஞ்சேர்த்து, ௰௬ - மாத்திரைகளாக்கிக்கொள்ளவும்.

ANTIDOTES. முறிவுகள். பாஷாணத்தை விஷமிக்கும்படித் தின்றுவிட்டால், வாந்திக்குக்கொடுத்து வயிற்றிலிருப்பதை வெளிப்படுத்தவேண்டியது; வாயில்கையைக்கொடுத்து வாந்தியை அதிகப்படுத்தலாம்; வாந்திக்குக்கொடுப்பதற்கு முன்னும், வாந்தியெடுத்தபிறகும் கொஞ்சமாய்ப் பாலையாவது, அல்லது கஞ்சித்தண்ணீரையாவது கொடுக்கலாம்; கரித்தூளும் காந்தமண்பஸ்மமும் (Magnesia) தாராளமாய்க்கொடுக்கப்பட்டிருக்கிறது. வயிற்றிலிருந்து பாஷாணத்தை வெளிப்படுத்தினபிறகு, தாபனகுணத்தைச் சமனப்படுத்தவும்; மூத்திரத்தை அதிகப்படுத்த மூத்திரபேதிமருந்துகளைக்கொடுக்கவும். பலமிருக்கும்படி அபினியைக்கொடுத்து, சிற்றுமணக்கெண்ணெயை அடிக்கடி கொடுக்கவும்.

வெள்ளைப்பாஷாணம், க - கிறேன், மிளகு ௬௰ - கிறேன். இவைகளையரைத்து, தேன்விட்டுக்கலந்து, ௰- மாத்திரைகளாக்கி, வேளைக்கு ஒருமாத்திரைவீதம், தினத்துக்கு மூன்றுமாத்திரை கொடுத்துக்கொண்டுவந்தால் சுரம், யானைக்கால் சம்பந்தப்பட்ட சுரம், குஷ்டம், முதலியரோகங்கள் தீரும்.

யானைக்கால் ரோகத்துக்கும், பாம்புக்கடிக்கும்.—க - துலாம் வெள்ளைபாஷாணம், ௫ - அல்லது, ௬- துலாம் மிளகு ; இவைகளைச்சேர்த்து அரைத்து, பச்சைப்பயறு பரிமாணம் மாத்திரைகள் செய்துகொள்ளவும்.—அல்லது வெள்ளைபாஷணம், ௫௫ - கிறேன், மிளகுதூள், ௯ - திராம், விளாம்பிசின்பாகு தேவையானது சேர்த்து, அ௱ - மாத்திரைகளாய் செய்துகொள்ளவும். க- மாத்திரையில் வீசம் கிறேன் வெள்ளைப்பாஷாணமிருக்கிறது—க-மாத்திரைவீதம், தினத்துக்கு, உ - வேளைகொடுக்கவும். இதற்கு "தஞ்சாவூர் மாத்திரைகள்" என்றுபேர். *Tanjore Pills.*

**Liquor Potassæ Arsenitis.** *Solution of Arsenite of Potash. Fowler's Solution. Ague Drop.*

லைகர் பொடாஸி ஆர்ஸினைடிஸ். ஸொலூஷன் ஆவ் ஆர்ஸினைட் ஆவ் போடாஷ். பவுலாஸ் ஸொலூஷன். வெள்ளைப்பாஷண ஜெயநீர்.

PREP. (Boil Arsenious Acid broken in small pieces, and Carbonate of Potash, ā ā gr. lxxx. in Aq. Dest. Oss. till they are dissolved. When cold, add Compound Tincture of Lavender, f℥v. and then add Aq. Dest. q. s. to fill accurately a pint measure.)

செய்முறை.—ஒ - பையின்ட் ஆவிநீரில் அ௰ - கிறேன், சிறுசாய்பொடித்த வெள்ளைபாஷணம், அ௰ - கிறேன் கார்பொனேட் ஆவ் போடாஷ் என்னும் உப்பு; இவைகளைப்போட்டு, ஜலத்தில் ஷெ மருந்துகள் கரைகிறவரையில் காய்ச்சு, குளிர்ந்தபிறகு, ௫- திராம் கம்பவுன்டிங்சர் ஆவ் லாவென்டர் என்னும் பாவனத்திரவத்தைச் சேர்த்துப் பிறகு, க- பையின்ட் அளவுக்கு எவ்வளவு ஜலம்தேவையோ அவ்வளவுங்குத்தகுதியாய் ஜலம்விட்டுக் கொள்ளவும்—க-அவு. ஜெயநீரில், ச - கிறேன் வெள்ளைப்பாஷாணம் இருக்கின்றது. ௯௰ - மினிம் ஜெயநீரில், ஒ - கிறேன் பாஷாணமிருக்கின்றது.

ACTION. செய்கை.—வெள்ளைப்பாஷாணத்துக்குடைய குணங்களே இதற்கும் உண்டு.

Dose. ♏iij.—v. increased to ♏xx. two or three times a day.

௯ - அளவு.—௩ - முதல், ௫ - மினிம் கொடுக்கலாம். படிப்படியாய், ௨௰ - மினிம் வரையில் அதிகரித்து தினத்துக்கு, ௨- அல்லது, ௩- தடவைகொடுக்கலாம்.

*In Hemicrania.* ஒற்றைத்தலைநோய் ரோகத்துக்கு.— வெள்ளைப்பாஷாண ஜெயநீரில், ௪ - ௬ - துளிவீதம் தினத்துக்கு ௩ - ௪ - தடவை கொடுத்துக்கொண்டுவர, குணமாகும்.

**Realgar.** *Red Arsenic. Red Sulphuret of Arsenic.* ($As\,S_2=107$).

மனோசிலை.

இதில் ௧ - பங்கு சுத்தபாஷாணமும், ௨ - பங்குகந்தகமும் கலந்திருக்கின்றன. இதுபிறவிச்சரக்கு; வைப்புவைத்துஞ் செய்வதுண்டு. கடையில் விற்பது, வைப்புச்சரக்கு. செய்முறை.—௧ - பங்குகந்தகம், ௨ - பங்குவெள்ளைபாஷாணம்; இவைகளைச் சேர்த்துஎரித்தால் மனோசிலையாகும். இதுஒருமுறை. இதைகிரீக்தேசத்தாரும்.(Greeks) ரோமன்தேசத்தாரும் (Romans) பூர்வத்தில் உபயோகித்ததுபோல், ஹிந்துக்கள் இப் போதும் உபயோகப்படுத்தி வருகிறார்கள். இங்கிலீஷ்வைத்தியருக்கு இதுஉபயோகமே இல்லை.

**Orpiment.** *Yellow Arsenic. Yellow Sulphuret of Arsenic.* ($As\,S_3=123$).

தாளகம்.

இதில் ௧ - பங்கு சுத்தபாஷாணமும், ௩ - பங்குகந்தகமும் கலந்திருக்கின்றன. இது பிறவிச்சரக்கு, வைப்புவைத்துஞ் செய்வதுண்டு. செய்முறை.—கந்தகம், சுத்த பாஷாணம், இவைகளைசரி எடைச்சேர்த்து உருக்கினால், தாளகமாகும். இதுஒருமுறை. இதைஇங்கிலீஷ்வைத்தியர்கள் உபயோகிக்கிறதில்லை. தாளகத்தில்பொன் இருக்குதென்று முன்னோர்கள் எண்ணியிருந்தார்கள்.

**Liquor Arsenici et Hydrargyri Hydriodatis.** *Solution of Hydriodate (Iodide) of Arsenic and Mercury. Donovan's Solution.*

டனோவன்ஸ் ஷொலூஷன்.

Prep. (Rub together Arsenic in fine powder gr. vj., pure Mercury gr.xvj., pure Iodine ℈ij. gr. xss., Alcohol fʒss., until a dry mass is obtained; and having triturated f℥viij of water with this in successive portions, let the whole be transferred to a flask, and heated until it begins to boil. When cool add Dist. Water q. s. to fill up to f℥viij. and fʒvj.)

செய்முறை.—௬ - கிறேன் சன்னமாய் பொடிசெய்த சுத்தபாஷாணம், ௰௬- கிறேன் சுத்திசெய்த ரசம், ௫௰௨ - கிறேன் சுத்திசெய்த ஐயோடயின், ௭- திராம் ஆல்கோஹல் என்னும் சாராயம், இவைகளைச்சேர்த்து, ஈரம்வற்றி உலர்ந்துபோகிறவரையில் அரைத்து இத்துடன், ௮- அவுன்ஸ் ஜலத்தைக்கொஞ்சங் கொஞ்சமாகவிட்டு அரைத்து, இவைகளை ஒரு குப்பியில்போட்டு கொதிக்கிறவரையில் சுடவைத்து, குளிர்ந்தபிறகு, ௮ - அவுன்ஸ், ௬ - திராம் இருக்க எவ்வளவு ஜலம் தேவையோ அவ்வளவு ஆவிநீர்விட்டுக்கொள்ளவும்.—௧-அவு. மருந்தில், ௧- கிறேன் வெள்ளைபாஷாணமும், ௨- கிறேன் பின் ஆக்சைட் ஆவ் மெர்க்கியுரி (Binoxide of Mercury) என்னும் ரசமும், ௬- கிறேன் ஐயொடைனும் இருக்கின்றன.

Action. It has the combined effects of Arsenic, Mercury and Iodine.

செய்கை.—பாஷாணம், ரசம், ஐயொடைன் என்னும் இம்மருந்துகளுக்குடைய குணங்களே இதற்கும் உண்டு.

Use. In syphilis, lepra, skin diseases, &c.

உபயோகம்.—மேகரோகம், குஷ்டம், சருமரோகங்கள் இவைமுதலியவைகளுக்கு உபயோகிக்கலாம்.

Dose. ♏x.—ʒss.

ஒ. அளவு.—ய - முதல் ௩ய - மினம்வரையில் கொடுக்கலாம் மைத்தபாஷாணவர்க்கங்களைக்கொடுப்பதுபோல், இதையும் பத்திரமாய் கொடுக்கவேண்டியது.

*Rules for the Administration of Arsenic.* பாஷாணத்தைக்கொடுக்கும்போது, அநுசரிக்கவேண்டிய விதிகளாவன:—

க. பேதிக்குக்கொடுத்து வயிற்றிலிருக்கிற துர்மலத்தைப்போக்கிப்பிறகு, பாஷாணத்தை பிரயோகிக்கவேண்டியது.

உ. வெறும்வயிற்றில், பாஷாணத்தை சாப்பிடலாகாது; போஜனம் செய்து - க -உ - மணிநேரம் சென்றபிறகு இதைச்சாப்பிடவேண்டியது.

௩. முதலில், பாஷாணத்தைக் குறைந்த அளவில் கொடுக்கவேண்டியது.

ச. பாஷாணம் சாப்பிடுகிற நோயாளியுடையகண்களை, நாள்தோறும் பார்வையிட்டுக்கொண்டு வரவேண்டியது; கண்சிவந்து தினவுஎடுத்தாலும்சரி, அல்லது றெப்பைகள் தடித்து பிதுவாய் இருந்தாலும்சரி, அவுஷதத்தை நிறுத்திவிடவேண்டியது.

ரு. பாஷாணத்தைக் கொடுத்துக்கொண்டு வருகிறபோது, மூத்திரம் குறைந்து சிவந்திருக்குமாகில், அவுஷதத்தை நிறுத்திவிடவேண்டியது.

சு. இருமல்கண்டால், பாஷாணத்தைக்கொடுக்கலாகாது.

எ. கண்றெப்பைகள் தடித்திருப்பதுபோல் இருக்குதல், அவைகளில் சூடு, தினவு, அல்லது வாய்ரணம், இக்குறிகள்கண்டால், இந்த மருந்து உடம்பில் பற்றினதற்குக் குறிகளாகும்.

அ. பாஷாணத்தைக் கொடுத்துக்கொண்டு வருகிறபோது, உ - அல்லது, ௩ - வாரத்துக்கொருதரம், உ - நாள் மருந்தைநிறுத்தி, பேதிக்கிக்கொடுப்பது உத்தமம். இப்படிச்செய்வதில் இந்த அவுஷதம் உடம்பில் தங்காது.

கூ. இந்தமருந்து குமட்டலையாவது, வாந்தியையாவது உண்டுபண்ணால், அபினிப்பாவனத் திரவத்தைச் (Laudanum) சேர்த்துக்கொடுத்தால், ஷெ துர்க்குணங்கள் நிற்கும்.

ய. பெரிதாய் அகண்டிருக்கிற ரணங்களுக்கு, பாஷாணத்தைப்போடலாகாது.

யக. குழந்தைகளுக்கு பாஷாணத்தைக் கொடுக்கலாகாது.

## ARGENTUM. *Silver.* (Ag=108).

## அர்ஜென்டம். ஸில்வர். வெள்ளி. ரஜதம்.

Descrip. and Prop. விவரணம். குணங்கள்.—வெள்ளி வெகுகாலமாய்த் தெரிந்திருக்கிற ஓர் பதார்த்தம்; இது பிறவிச்சரக்கு; கந்தகம், ஈயம், பொன், செம்பு, பாஷாணம் முதலியவைகளோடு சேர்ந்திருக்கும்; இந்தக்கலப்பான லோகங்களிலிருந்து வெள்ளியைப்பிரித்துஎடுக்கப்படும். வெள்ளியின் நிறம்வெண்மை; பளபளப்

புள்ளது; தகடாய்த் தட்டலாம்; காற்றுப்பட்டால் கெடாது; அனல்கொஞ்சங்கழுக்கும் பொட்டிஅப்பு திராவகத்தில் முழுமையுங்கரைந்துவிடும்.

**Argenti Oxidum.** *Oxide of Silver.* (Ag O=116).

அர்ஜென்டை ஆக்ஸிடம். ஆக்ஸைட் ஆவ்ஸில்வர். ரஜதபஸ்மம். வெள்ளிபஸ்மம்.

DESCRIP. AND PROP. விவரணம். குணங்கள்.—ரஜதபஸ்மம் ஊதா நிறமாயும், வாசனையற்றதாயும், ருசியில்லாமலும் இருக்கும்.

PREP. (Dissolve Nit. Silver. ℥ss. in Dist. Water f℥iv.; pour the solution into a bottle containing Limewater, Oiv., shake well, and set by until the sediment subsides. Separate by filtration; wash with distilled water, and dry it at a heat not exceeding 212°, Preserve in a stoppered bottle.)

செய்முறை.—ஒ - அவு. காடிக்காரத்தை, ச - அவு. ஆவிநீரில் கரைத்துக் கொண்டு, ச - பையின்ட் சுண்ணும்பு ஜலம் இருக்கிற ஒரு புட்டியில்ஊற்றி, செவ்வையாய்க்குலுக்கி, வண்டல் அடியில்படிகிறவரையில் அசையாமல்வைத்து, வடிதாளில் வடிகட்டி, பஸ்மத்தை எடுத்துக்கொண்டு ஆவிநீர்விட்டுக்கழுவி, உாஉ - டிக்கிரிக்கு அதிகப்படாத தீயிட்டெரித்து, உலர்த்திக்கொண்டு, கல்கார்க்குடைய புட்டியில்போட்டுப் பத்திரப்படுத்திக்கொள்ளவும்.

வெள்ளிபஸ்பம். தமிழ்முறை.—வெள்ளியைத் தகடுதட்டி, ரசபஸ்மம், வங்கபஸ்மம், நாகபஸ்மம், இம்மூன்றையுங்கூட்டி உமிழ்நீர்விட்டு மையஅரைத்து வெள்ளிக்குசமனெடைச்சேர்த்து, வெய்யிலில் உலர்த்தி சீலமண்செய்து, சுண்ணும்புக்குள்ளே வைத்து முழுப்புடத்திலிட்டெரித்து எடுத்துக்கொள்ளவும். இதில், க- பணவிடைவீதம் தேனில் கொண்டால், கல்லடைப்பு, சதையடைப்பு, கிரிச்சிரம், காசம், இரைப்பு, விங்கப்புற்று, யோனிப்புற்று, கிரந்தி, மேகம், இவைகள்தீரும். "வைத்தியரத்தினச்சுருக்கம்".

ACTION. Tonic, Sedative, Antispasmodic.

செய்கை.—பலகாரி, சமனகாரி, அங்காகர்ஷண நாஸகாரி.

USE. In dyspepsia, gastrodynia, pyrosis, menorrhagia, hæmoptysis, chronic diarrhœa of children, &c.

உபயோகம்.—அக்கினிமந்தரோகம், குன்மம், குலைஎரிவு, பெரும்பாடு, ரத்தக்கக்கல், குழந்தைகளுக்கு காணுகிற நாள்பட்டபேதி, இவைமுதலியரோகங்களுக்குக்கொடுக்கலாம். க - கிராகனெடை பன்றிநெய்யுடன், ஒ-முதல், ய - கிறேன் வெள்ளிபஸ்மத்தைச்சேர்த்து களிம்புசெய்து, மெழுகுத்துணி சிலாக்கில்தடவிநீர்த்தாரையில் பிரயோகித்தால், வெள்ளை, தந்திமேகம் இவைகள் குணமாகும்.

DOSE. gr. ss. to gr. j.

ஒ. அளவு.—ஒ - முதல், க - கிறேன் அளவுக்கு எடுத்து, ரொட்டிச்சதையாவது, விளாம்பிசினியாவது, சருக்கரையாவது சேர்த்து மாத்திரைசெய்து தினத்துக்கு உ - அல்லது, ஙு - தடவைகொடுக்கலாம்.

**Argenti Nitras.** *Nitrate of Silver. Lunar Caustic.* ($AgO, NO_5 = 170$).
அர்ஜென்டை நைட்ரஸ். நைட்ரேட் ஆவ்ஸில்வர். லூனர்காஸ்டிக்.
காடிக்காரம்.

DESCRIP. AND PROP. விவரணம். குணங்கள்.—காடிக்காரமானது, கட்டியாயாவது, நீண்டகம்பிகளாயாவது இருக்கும்; கட்டியாய் இருக்கிறகாடிக்காரம், வெள்ளையாய் தெளிவானதாய் இருக்கும்; களிம்பைப்போல் வாய்க்குத்தட்டுப்படும்; பளுவானது; காற்றில்கெடாது; ஜலத்தில் கரையும்; நெருப்பில்வைத்தெரித்தால் உருகும், அப்போதே அச்சில்வார்த்துவிட்டால்; நீண்டகம்பிகளாய் இருக்கும். புதுசாய் செய்தகம்பிக் காடிக்காரம், அழுக்குப்படிந்த வெள்ளைநிறமாய் இருக்கும்; ஒடிந்தவிடத்தைப் பார்வையிட்டால், நாலுபக்கமும் ஓடிய கீற்றுகள் அகப்படும். உடம்பிலாவது துணியிலாவது பட்டால், பட்டவிடம் கறுத்துப்போகும் ; சருமத்தின்மேல் தேய்த்தால் புண்ணாக்கிவிடும்.

PREP. (Mix pure Nitric Acid f℥j. with Dist. Water f℥ij., add pure Silver ℥iss., and dissolve with the aid of a gentle heat ; increase the heat gradually till a dry salt be obtained; fuse this gradually in a porcelain or earthenware crucible, and pour the fused matter into iron moulds, previously heated, and slightly greased with tallow. Preserve in glass vessels.)

செய்முறை.—க - அவு. தோஷமில்லாத பொட்டிலுப்பு திராவகத்தை, உ - அவு. ஆவிநீரில்விட்டுக்கலக்கி, க½- அவு. சொக்கவெள்ளியைச்சேர்த்து, சிறுதீயிட்டெரித்து உருக்கி, பிறகு நீர்ச்சுண்டி ஈரமில்லாதஉப்பு அடியில்நிற்கிறவரையில், தீயைஅதிகரித்து, இந்தவுப்பை ஒருபீங்கான் மூசையிலாவது, மண்மூசையிலாவது வைத்துருக்கி, உருகினதை, இரும்புஅச்சுகளில் வார்த்துவிடவும். அச்சுகள் சூடாயும், கொழுப்பு தடவியும் இருக்கவேண்டியது. காடிக்காரத்தை, கண்ணாடிபுட்டிகளில்போட்டு, பத்திரப்படுத்திக் கொள்ளவேண்டியது.

INCOMPATIBLES. சத்துருபதார்த்தங்கள்.—கந்தகத்திராவகம், கறியுப்புத்திராவகம், டார்டாரிக் ஆஸிட் (Tartaric Acid) என்னும் உப்பு, ஆல்கெலீஸ்என்னும் உப்புகள், சுண்ணாம்புத்தண்ணீர், கிணற்றுஜலம், ஆற்றுஜலம், துவர்ப்புள்ள கஷாயங்கள், முட்டையின் வெள்ளைக்கரு, பால் இவைமுதலியவைகள், காடிக்காரத்தை முறித்துவிடும்.

ACTION. *Externally.* Stimulant, Escharotic, Vesicant. *Internally.* Antispasmodic, Sedative. Very large doses act as a Corrosive Poison.

செய்கை.—உடம்பின்மேல் தடவினால், உஷ்ணத்தைத் தரும், புண்ணாக்கும், கொப்புளிக்கும். உள்ளுக்குக்கொடுத்தால், வலிகளை நிறுத்தும், உஷ்ணத்தைத்தணிக்கும். மெத்தக்கொடுத்தால், வயிற்றைப்புண்ணாக்கிக் கொல்லும்.

USE. In Epilepsy, Dysentery, Ophthalmia, Leucorrhœa, Gonorrhœa, Herpes, Erysipelas, Tinea Capitis, Ulcers, Articular Affections, Bites of Dog, Cobra, and Stings of Scorpion, &c.

உபயோகம்.—காடிக்காரத்தை, காக்கைவலிரோகத்து உபயோகப்படுத்தினார்கள். சீதபேதிரோகத்துக்கு, டோவர்ஸ்பவுடர் (Dover's powder) என்னும் சூரணத்

தோடுகலந்து, மாத்திரைசெய்து கொடுக்கலாம். கண்ணோவுக்கு, நீரில் கரைத்தாவது, அல்லது பன்றிநெய்யுடன்சேர்த்து களிம்பாகச்செய்தாவது, உபயோகிக்கப்படுகின்றது. ஸ்திரிகளுக்குக்காணுகிற வெள்ளைக்கு, காடிக்கார ஜலத்தைபீச்சாங்குழலால் யோனியில் அடிக்கலாம். வெள்ளைவிழுதலுக்கு, மூத்திரதாரையில், காடிக்காரஜலத்தை மூத்திரதாரையில் அடிக்கக் குணமாகும். படர்தாமரைக்கு, காடிக்காரஜலத்தைப்பூசலாம். அக்கிரோகத்துக்கு, இதைச்சுற்றிலுமாவது, வியாதிகண்ட இடத்தின்மேலாவது பூசுகிறதுண்டு. கரப்பானிக்கு, காடிக்காரஜலத்தை மேலுக்குப்பூசலாம். ரணங்களுக்குப்போட்டால், அதிகமாய் வளர்ந்திருக்கிற சதையைத்தின்றுவிட்டு; கெட்டரணங்களைச் சீக்கிரத்தில் ஆற்றும். கில்நோவுகளுக்கு வீக்கத்தின்மேல் கோடுகோடுகளாக இழுத்தால், வியாதியைக்கேட்கும். நாய்க்கடி, பாம்புக்கடி, தேள்கொட்டல் முதலியவிஷக்கடிகளுக்கு, கடித்தவாயில் போடப்படும்.

DOSE. gr. $\frac{1}{4}$—gr. ij. or more, made into pills with crumb of bread.

ஔ. அளவு.—வ - முதல், உ - கிறேன் அளவுக்கு, ஜென்ஷன் சத்து (Ext. Gentian) அல்லது அதிமதுரச்சத்து, இவைகளுடன்சேர்த்து மாத்திரை செய்துக்கொடுக்கலாம்.

ANTIDOTES. முறிவுகள்.—விஷமிக்கும்படி காடிக்காரத்தைத் தின்றுவிட்டால், கறியுப்பைக்கொடுத்தால் முறித்துவிடும்; பால், முட்டையின் வெள்ளைக்கரு, இவைகளையும் கொடுக்கலாம். வயிற்றிலிருக்கிற விஷத்தை, வெளிப்படுத்தவேண்டியது. குழகுழப்பான பதார்த்தங்களையும் கொடுக்கலாம்.

## AURUM. *Gold.* (Au=200).

ஆரம். கோல்ட். தங்கம். பொன். சுவர்ணம்.

DESCRIP. AND PROP. விவரணம். குணங்கள்.—பொன்னானது தற்செயலாய் உண்டாகிறபதார்த்தம்; வெகுகாலமாய்த் தெரிந்திருக்கிறது; பொன்னுக்கிருக்கிற அபுருபமான குணங்களைப்பற்றி, அதைமேன்மைப்படுத்தப் படுகின்றது. நெடுநாளாய்ச் சுவர்ணமருந்துகள் உபயோகப்பட்டு வருகின்றது; பொன்னைத்தகடாய்த் தட்டலாம், கம்பியாக இழுக்கலாம், காற்றுக்கு அசையாது; சுவர்ணபேதி திராவகத்தில் (Nitro-Hydrochloric Acid) கரையும். அமரிக்கா, காலிபார்னியா (California) முதலிய தேசங்களில், பொன் அதிகமாய் விளைகின்றது. பொன் விலையுயர்ந்த லோகமானபடியால், சுவர்ணமருந்துகள் அபுருபமாகச் செய்யப்படுகின்றது.

USE. உபயோகம். தனிப்பொன்னுக்கு வியாதிகளைப் பேதிக்கிறகுணம் இருக்குமென்று செப்பி இருக்கின்றது; ஆதலால் மேஹம், கண்டமாலைரோகம், இவைகளுக்கு உபயோகிக்கப்படுகின்றது. உ - முதல் ரு - கிறேன் அளவுக்குக் கொடுக்கலாமென்று கண்டிருக்கிறது. சொத்தைப்பல்லை, பொன்னால் அடைக்கப்படுகின்றது.

### Pulvis Auri. *Powder of Gold.*

பவுடர் ஆவ்கோல்ட். பொன்பொடி. சுவர்ணப்பொடி. தங்கப்பொடி.

செய்முறை.—தங்கரேக்கை, தேனிலாவது, ஸல்பேட் ஆவபொடாஷ் (Sulphate of Potash) என்னும் உப்புடனாவது கலந்து, அரைத்து பிறகு ஜலம்விட்டுக்கழுவிவிட்டால், தங்கம் மெத்தசன்னக்கறுப்புப்பொடியாய்நிற்கும. தங்கப்பொடியை, வ - முதல், க - கிறேன் அளவுக்குஎடுத்து, குல்கந்துடன்சேர்த்து மாத்திரைசெய்து ே[illegible]

ரோகங்கள், கண்டமாலைரோகங்கள், நாள்பட்ட சருமரோகங்கள், இவைகளுக்கு தினந்தோறும் உ - ங - தடவை கொடுக்கும்படிக் கண்டிருக்கின்றது. இந்தப்பொடியை பல்லிலாவது, நாக்கிலாவது தேய்ந்து உடம்பில்பற்றும்படிச் செய்கிறதும்உண்டு. கொருக்கு ரணத்தின்மேல் போடப்படும்.

*Syrup of Gold.* ஸிரப் ஆவ் கோல்ட். தங்கரஸாயனம்.—செய்முறை. உ௰ - கிறேன், தங்கப்பொடி, க - அவுன்ஸ் சருக்கரைப்பாகு; இவைகளைச்சேர்த்து மிஸ்ரமித்துக்கொள்ளவும்.

## **Auri Peroxydum.** *Peroxide of Gold.* பெர் ஆக்ஸைட் ஆவ்கோல்ட். சுவர்ணபஸ்மம், தங்கபஸ்மம்.

PREP. செய்முறை.—குளோரைட் ஆவ் கோல்ட் (Chloride of Gold), க - பங்கு; கால்ஸைன்ட் மாக்னிஷியா (Calcined magnesia) என்னும் ஒருவிதகாந்தமண்சத்து, ச - பங்கு; ஜலம் ௬௰ - பங்கு. இவைகளைக்கொஞ்சநேரம் சிறுதீயிட்டு காய்ச்சி, அடியில்நிற்கிற வண்டலை ஜலத்தை விட்டுவிட்டுக்கழுவவேண்டியது; கழுவி இறுத்துவிடுகிற நீரில், காடிக்காரஜலம்விட்டால், வண்டல் ஒன்றும் படியாமலிருக்கவேண்டிய ஸ்திதிக்குவருகிறவரையில் கழுவவும். பிறகுபஸ்மத்தை குளிர்ச்சியாய் இருக்கிற விளாவினபொட்டிலுப்புத் திராவகத்தில்போட்டு ஊறவைத்தால், அதிலிருக்கிற காந்தமண்சத்து திராவகத்தில்கரைந்துவிடும்; அடியில்நிற்பதை இருட்டில்வைத்து, சூடுபடாமல் உலர்த்திக்கொள்ளவேண்டியது.

தமிழ்முறை.—க - பலம் தங்கத்தை தகடாகத்தட்டி, எலுமிச்சம்பழ ரசத்தில் பூங்காவியைக்கரைத்து, அதை தகட்டின்மேல் ரு - தரம் பூசிப்பூசிக்காய்ச்சிக்கொண்டு, வங்கபஸ்மம், நாகபஸ்மம், ரசபஸ்மம், வீரம், வெள்ளை, இவைகளைச்சமனிடையாய் எடுத்துக்கொண்டு, முட்டையின் கருவால் அரைத்து, அதை ஷை தகட்டின்மேல் பூசி, அண்டச் சுண்ணத்தில்வைத்து கவசமிட்டுச் சீலமண்செய்து, முழப்புடத்திலிட்டு எரித்தால், நீற்றுப்போகும். ஒருவேளை கறுப்பாய் இருந்தால், வ - பங்குவீரத்தைக் கூட்டி, முட்டையின்கருவாலாட்டி வெய்யிலில்உலர்த்தி, சுண்ணத்தில்வைத்து, முழப்புடம்போட்டு எரித்தால், வெள்ளையாய் நீற்கும். இதைத் தேன், நெய், சருக்கரையில் கொள்ள, சன்னி, மூலம், தோஷம், வலி, வாதநோய், பித்தம், பித்தவெட்டை, கிரகணி, பெரும்பாடு, பிரமேஹம், குன்மம், பாண்டு, சூலை, குஷ்டம், கிரந்திரோகம், உட்சுரங்கள், நீர்ச்சுருக்கு இவைமுதலிய ரோகங்கள்காணுதோடும். "அகஸ்தியர் வைத்திய ரத்தினச் சுருக்கம்."

குணங்கள்.—இந்தபஸ்மம் ஒருவித கறுப்புவர்ணமாய் இருக்கும்; ஜலம்விட்டால் மஞ்சள்நிறமாகும்; ஜலத்தில் கரையாது; வெளிச்சமாவது, சூடாவது பட்டால், அதித்துவாயில் கெட்டுப்போகும்.

USE. உபயோகம்.—மற்ற சுவர்ணமருந்துகளுக்கிற குணங்களே இதற்கும் இருக்கின்றது. முக்கியமாய் இதைஎலும்பில்காணுகிற கண்டமாலைசம்பந்தமான ரோகங்களுக்கு, கொடுக்கும்படி செப்பியிருக்கின்றது.

DOSE. 1-10th of a grain to 1-4th of a grain.

ஓ. அளவு.—க - கிறேனில் ௰ - பாகத்தில் க - பாகம்முதல், வ - கிறேன்வரையில் கொடுக்கலாம்.

**Auri Perchloridum.** *Perchloride of Gold. Sesquichloride of Gold.*

பெர்க்குளோரைட் ஆவ்கோல்ட்.

PREP. செய்முறை.—தங்கரேக்கு, ௧- பங்கு; பொட்டிலுப்புத்திராவகம், ௧- பங்கு; கறியுப்புத்திராவகம், ௨ - பங்கு. திராவகங்களிரண்டையும் கலந்துக்கொண்டு, அதில் தங்கரேக்கைப்போட்டு, சிறுதீயிட்டுக் கரைத்து, குளோரின் (Chlorine) என்னும்வாயு வெளிப்படுகிறவரையில் சுண்டக்காய்ச்சி, அசையாமல் வைத்துவிட்டால், குளிர்ந்தபிறகு கட்டிப்போகும்.

குணங்கள்.—இது ஊசியைப்போல் சிவந்த கம்பிகளாயிருக்கும்; வாசனையிராது, ஆனால் ஓர்விதமான துவர்ப்பும், வெகுட்டலுமுடைய ருசியையுடையது; அனல்காற்றில்கெடாது; ஈரக்காற்றில் உடனே நீராகிவிடும்; ஜலத்திலும் சாராயத்திலும் கரையும் சுவர்ணநீர் மஞ்சள் நிறமாய் இருக்கும். வெளிச்சம்பட்டால் கெட்டுப்போய், தங்கம் மேலேபடியும்.

USE. உபயோகம். இந்தபஸ்மத்தைதான் சாதாரணமாய் கொடுக்கப்படுகின்றது. மேகரோகம், கண்டமாலை சம்பந்தமானரோகங்கள், சொறிசிரங்கு, புத்துமுதலியரோகங்களுக்கு உபயோகப்படுத்தப்படும்.

DOSE. gr. 1-20th to gr. 1-15th.

ஒ. அளவு. ௧ - கிரேனில், ௨௰ - பங்கில், ௧ - பங்குமுதல், ௰௫ - பங்கில், ௧- பங்குவரையில், பசைவிட்டு மாத்திரைசெய்தாவது, அல்லது நீரில்கரைத்தாவது கொடுக்கலாம். தினத்துக்கொருதரம் கொடுக்கவும். அதே அளவை பசையோடுகலந்து, பல்லின்மேலும், நாக்கின்மேலும் தேய்க்கலாம்.

# அ—வது. அத்தியாயம்.

## VEGETABLE MATERIA MEDICA,

### தாவரம், அல்லது ஓஷதி சம்பந்தமான பதார்த்தங்கள்.

---

தாவரசம்பந்தமான அனேகவிலையுயர்ந்த மருந்துகள், முன்னோர் உபயோகப்படுத்தினதுபோல், இந்நாட்களிலும் உபயோகப்பட்டு வருகின்றன. சில ஓஷதிகள் நமது தேசத்தில் வளருகின்றன; சிலது அன்னிய தேசத்திலிருந்து இவ்விடத்தில் கொண்டுவந்து விற்கப்படும். அந்தந்த தேசம், நிலவளம் இவைகளுக்குத் தக்கபடி, செடிகள் செகிசூழியாய் வளர்ந்து, சத்துநன்றாய் இருக்கும்; சிலசெடிகளில் சத்து, சர்வாங்கமும் வியாபித்திருக்கும்; இவ்விதச்செடிகளின் சமூலமும், உபயோகப்படுத்திக்கொள்ளலாம். சிலபூண்டுகளில் சற்றுவேரிலும், சிலதில் இலையிலும், சிலதில் புஷ்பத்திலும், சிலதில் பட்டையிலும், சிலதில வித்திலும், தங்கி இருக்கும்; ஆகையால் சத்துள்ள முக்கியபாகத்தை மாத்திரம் எடுத்து, உபயோகிக்கவேண்டியது. மரம், செடி, பூண்டு, தழை, கொடி, முதலியவைகளின் குணங்களை வாசித்துச் செவ்வையாய்த் தெரிந்துக்கொள்வது மல்லாமல், ஓஷதிகளைச் சேகரிக்கிறமார்க்கமும், சேகரித்து அவுஷதத்துக்குப் பக்குவப்படுத்துகிற விதமும், நன்றாய்த்தெரிந்திருக்கவேண்டியது.

**HELLEBORUS NIGER.** *Black Hellebore. Christmas Rose.* Root.

*பிளாக் எல்லிபோர். கடுகுரோகிணி. கடுரோஹிணி (வேர்.)*

PROP. குணங்கள்.—இந்தவேரின்மேல்புறம் கறுத்தும், உள்ளேவெள்ளையாயும், கெட்டவாசனையோடும், கசப்பும், காரமுமாயும் இருக்கும்; வாயைத்திமிரட்படுத்திவிடும். இந்தவேர் உலர்த்தினாலும், நாள்படவைத்திருந்தாலும், குணம்கெட்டு ரசம் இழைந்துவிடும். சத்துக்கு "எல்லிபோரின்" (Helleborin) என்றுபேர்.

ACTION. Purgative. Emmenagogue.

செய்கை.—விரேசனகாரி, ருதுவர்த்தனகாரி.

USE. In Mania, Epilepsy, Scabies, Worms, &c. It is rarely employed.

உபயோகம.—இந்தமருந்தை பயித்தியரோகம், காக்கைவலி, சிரங்கு, க்ருமி, இவைமுதலிய ரோகங்களுக்கு உபயோகிக்கப்படும். அதிகமாய்க்கொடுத்தால், விஷமித்து கெடுதிசெய்யும். மிதமாய்க்கொடுந்தால் வயிற்றைக்கடுத்து, தண்ணீர் தண்ணீராய்ப்பேதியாகும், வாந்தியும் ஆகும். இதையிப்போது மெத்தஉபயோகப்படுத்துகிறதில்லை. நீர்க்கோவை ருதக்கட்டு, ருதகச்சூலை இவைகளுக்கும் உபயோகப்படுத்தினதுண்டு.

DOSE. gr.x.—to ℈i. as a drastic purgative: gr. iij to gr. viij. for milder effects.

ஔ. அளவு.—௰ - முதல், உ௰- கிரேன் கொடுத்தால், சாடிந்துப் பேதியாகும்; மற்றரோகங்களுக்கு, ௩ - முதல், அ - கிரேன்கொடுக்கலாம். (℥ij to ferv. Aq. Oj.) க - பைன்ட் கொதிக்கக்காய்ந்த ஜலத்தில், உ - டிராம் வேரைப்போட்டு, வெந்நீர்க்கஷாயஞ்செய்து, இதில், க - அவு. வீதம், ஒருவேளைக்குக்கொடுக்கலாம்.

**Tinctura Hellebori.** *Tincture of Hellebore.*

டிங்சர் அவ் எல்லிபோர். கடுகுரோகிணிபாவனத்திரவம்.

PREP. (Macerate Bruised Hellebore ℥v. in Proof Spirit Oij. for 7 days, then press, and strain.)

செய்முறை.—ரு - அவு. நொறுக்கிய கடுகுரோகிணியை, உ - பையின்ட் புரூவ்ஸ்பிரிட் என்னும் சாராயத்திற்போட்டு, எ - நாள் ஊறவைத்து, பிசைந்து வடிகட்டிக்கொள்ளவும்.

DOSE. fℨss. to fℨj.

ஒ. அளவு.—ஏ - முதல் க - திராம், அளவுக்கு ஜலத்தில் கலந்துகொடுக்கலாம். நமதுகடைகளில் அகப்படுகிற கடுகுரோகிணிக்கும், சீமைச்சரக்குக்கும் கொஞ்சம் வித்தியாசமுண்டு; ஆனால் குணத்தில் வித்தியாசமில்லை; ஜாக்கிரதையாய் உபயோகப்படுத்தவேண்டியது.

கடுகுரோகிணிக்கு, ஆமம், ஐயம், கரப்பான், சுரம், திரிதோஷம், புண், மலக்கட்டு, மாந்தம், வயிற்றுநோய், வாயு இவைகள்போம் என்றும், பேதியுண்டாகுமென்றும், "பதார்த்தகுண சிந்தாமணி" யில் செப்பி யிருக்கின்றது.

**ACONITUM.** *Aconitum Napellus. Aconite. Monkshood.* Root and Leaves.

ஆகொனைட். (வேர். இலை.)

PROP. குணங்கள்.—இந்த இலைகளின் மேற்புறம் மெத்தப்பச்சையாயும், அடிப்புறம் இளம்பச்சைநிறமாயும் இருக்கும்; வேரானது குவிந்தும், சல்லிவேர்களையுடையதாயும், கறுத்தும் உள்ளேவெளுத்தும் இருக்கும்; வாயில்போட்டவுடனே கசக்கும்; பிறகு காரமாயும், விறுவிறென்று நாக்கும் உதடுகளும் மரத்துவிடும்.

நாவி (Aconitum ferox) என்பதும் இதில் ஒருசாதி; வடதேசத்திலிருந்து வருகிறது. வெள்ளைநாவி, கருநாவி, வச்சநாவி, ருத்திரநாவி, என ௪ - விதங்களுண்டு. அவைகளின் குணங்களை, பதார்த்தகுண சிந்தாமணியில் காணலாம். வசம்பு முற்றினால், வச்சநாவியாகிறதென்று சொல்வதுவழக்கம். வச்சநாவி சற்றேறக்குறைய வசம்புபோலிருப்பதால், இப்படிச்சொல்லுகிறார்கள். வசம்பும், வச்சநாவியும், வெவ்வேறானபதார்த்தங்கள். நாவிமெத்தவிஷமுள்ளது; அதைக்காயங்களுக்குப் போட்டபோதிலும், அபாயம் சம்பவிக்கும். வடதேசத்துமனிதர்கள் நாவியை, அம்புகளுக்குத்தடவுகிறார்கள்.

நாவிச்சுத்தி.—நாவியை எருமை கோமயத்திற்போட்டு, க - நாள் ஊறவைத்து, பிறகு வேகவைத்து, கழுவி, வெய்யிலிலுலர்த்தி, மறுபடியும் எலுமிச்சம்பழ ரசத்தில், ஙய - நாழிகை ஊறவைத்து, உலர்த்தித் தூள்செய்துக்கொள்ளவும், குஷ்டம், கிருமிரோகம், சீதசுரம், பல்நோவு பாம்பு கடி, வாதரோகம், இவைகளுக்கு உபயோகப்படுத்திக்கொண்டுவருகிறார்கள்.

சீர்மையில், இங்கிலீஷ் வைத்தியர்கள் உபயோகிக்கிற நாவிக்கு, ஆகொனைடம் நெபெல்லஸ். (Aconitum Napellus) என்றுபேர். இவ்விரண்டுக்கும் குணம் ஒன்று.

ACTION. Anodyne, Sedative.

செய்கை.—வேதனைசாந்திகாரி. சமனகாரி.

USE. In Neuralgia, Rheumatism, and Diseases of the Heart.

உபயோகம்.—ஆகொனைட் என்னும்மருந்து கொடியவிஷமுள்ளது; நரம்பைப் பற்றியரோகம், கீல்வாதம், இருதயரோகம். இவைகளுக்கு உபயோகப்படுத்தப்படும். கின்னத்துக்கடைமென்றால், வாயில்நீர் சுரக்கும்; நாக்கிலும், உதடுகளிலும், விறுவிறுப்பையும், திமிரையும் உண்டாக்கும். இதைவெகுபத்திரமாய்க் கொடுக்கவேண்டியது.

DOSE.—gr. j ..gr. ij.

ஓ. அளவு.—க - முதல் உ - கிறேன் அளவுக்குக்கொடுக்கலாம்.

**Extractum Aconiti.** *Extract of Aconite.*

எக்ஸ்டிராக்ட் ஆவ் ஆகொனைட். ஆகொனைட் என்னும் மருந்தின்சத்து.

PREP. (Take fresh leaves of Aconite ℔ j. and bruise them in a stone mortar; then express the juice, and without straining evaporate to a proper consistence.)

செய்முறை.—க- ப்வு. ஆகொனைட்என்னும் இலையை, மரவுரளில் இடித்துப் பிறகு ரசத்தைப் பிழிந்து வடிகட்டாமல், பதத்துக்கு சுண்டக்காய்ச்சிக்கொள்ளவும்.

DOSE. gr. i—gr. ij. gradually increased.

ஓ. அளவு.—க - முதல், உ - கிறேன் அளவுக்குப் படிப்படியாய் அதிகரித்துக்கொடுக்கவும்.

**Tinctura Aconiti** *Tincture of Aconite.*

டிங்சர் ஆவ் ஆகொனைட். ஆகொனைட் என்னும் மருந்தின் பாவனத்திரவம்.

PREP. (Macerate Aconite root coarsely powdered ℥xv. in Sp. Rect. Oij, for 7 days, then press, and strain.) *Dose.* ♏ iij. or ♏v. three times a day.

செய்முறை.—மரு - அவு. ஒன்றரெண்டாய் இடித்த ஆகோனைட் என்னும் வேரை, உ - பைபி. ரெக்டிபைட்ஸ்பிரிட் என்னும் சாராயத்திற்போட்டு, எ - நாள்ஊறவைத்து, பிழிந்து வடிகட்டிக்கொள்ளவும்.

ஓ-அளவு—ந - ரு - மினிம்விதம், தினத்துக்கு, ரு - தடவைகொடுக்கலாம்.

டாக்டர் "பிளமிங்" (Dr. Fleming) என்பவருடைய முறை.—ம - அவுன்ஸ் (Troy), வெகுஜாக்கிரதையாயும், சன்னமாயும் பொடிசெய்த ஆகொனைட் நெபெல்லஸ் (Root of Aconitum Napellus) மசு - அவுன்ஸ் ரெக்டிபைட் ஸ்பிரிட் (Rectified Spirit) என்னும் சாராயத்தில், ச - நாள் ஊறவைத்துப் பிறகு பெர்கொலேடர் (Percolator) என்னும் வடிகட்டுகிற கருவியில்ஊற்றி, உச - அவுன்ஸ் அளவு திரவத்துக்கு வேண்டிய "ரெக்டிபைட் ஸ்பிரிட்" என்னும் சாராயத்தைச் சேர்த்துக்கொள்ளவேண்டியது. ஓ - அளவு.—ரு - மினிம், விதம்தினத்துக்கு, ரு - தடவைகொடுக்கலாம்.

ACONITINA. "ஆகொனிடைன்." ஆகொனைட்என்னும் மருந்தின் சத்துக்கு "ஆகொனிடைன்" என்றுபேர். இதுதோஷமில்லாமல் இருந்தால் மெத்தகொடிய நஞ்சு; உள்ளுக்கு உபயோகப்படுத்துகிறதில்லை. சாராயத்தில் கரைத்தும் களிம்பாகச் செய்தும் வாதநோய்களுக்கு மேலுக்குப் பூசப்படுகின்றது.

**DRIMYS WINTERI.** *Winter's Bark.* Bark.

விண்டர்ஸ்பார்க். (பட்டை)

இந்தப்பட்டையை "காப்டன் விண்டர்" என்பவர் ஒரு தீவிலிருந்து, ஐரோப்பிய தேசத்துக்கு, முதல் கொண்டுபோனபடியால், அந்தத் துரையினுடைய பேரே, இந்தப்பட்டைக்குக் கொடுக்கப்பட்டது. இசற்கு இலவங்கப்பட்டையின் குணங்களே இருக்கிறபடியால், இலவங்கப்பட்டைக்குப் பதிலாய், இதை உபயோகப்படுத்தப்படுகின்றது. ஆனால் இதை உபயோகிப்பது அரிது.

**PAREIRA.** *Cissampelos Pareira.* The Root.

பெரீரா. (வேர்.)

Prop. குணங்கள்.—இது ஒரு கொடியின் வேர்; கறுத்திருக்கும்; உட்சக்கை வலைப்போலிருக்கும்; சிவப்பும் மஞ்சளுங்கலந்த சாயலையுடையது; வாசனையிராது; மெத்தக் கசக்கும்.

Action. Tonic, Diuretic.

செய்கை.—பலகாரி, மூத்திரவர்த்தனகாரி.

Use. In irritation of the bladder, ulceration of the kidneys, Leucorrhœa and Dropsy.

உபயோகம்.—மூத்திரப்பை எரிச்சலுக்கும், மூத்திரக் குண்டிக்காயில் காணுகிற ரணத்துக்கும், ஸ்திரிகளுக்குக் காணுகிற வெள்ளைக்கும், நீர்க்கோவைக்கும் உபயோகப்படுத்தப்படுகின்றது.

Dose. In powder, ℈j.—ʒj.

ஒ. அளவு—வேரின் சூரணத்தை உய- கிறேன் முதல், க - திராம் வரையில் கொடுக்கலாம்.

**Decoctum Pareiræ.** *Decoction of Pareira brava.*

டிகாக்ஷென் ஆவ் பெரீரா பிரோவ. பேரீரா பிரோவவென்னும் வேரின் கஷாயம்.

Prep. (Take Pareira root sliced ʒx. and Dist. water, Oiss. Boil down to a pint and strain.) *Dose.* f℥j—f℥iij.

செய்முறை.—ய - திராம் துண்டித்த பெரீராவென்னும் வேரை, கஉ-பையிண்ட் ஆவிநீரில்போட்டு, க - பையிண்டுக்குக்காய்ச்சி வடிகட்டிக்கொள்ளவும்.

ஒ. அளவு.—க - முதல் ரு - அவுன்ஸ் கொடுக்கலாம்.

**Infusum Pareiræ.** *Infusion of Pareira brava.*

இன்பியுஷன் ஆவ் பெரீரா பிரோவா. பெரீரா பிரோவாவென்னும் வேரின் வெந்நீர் கஷாயம்.

Prep. (Macerate Pareira ʒvj. in Boiling Aq. Oj. for 2 hours in a covered vessel & strain through linen or calico.)

செய்முறை.—சு - திரம் பெரீராவென்னும் வேரை, க - பையி. கொதிக்கக் காய்ந்த ஜலத்திலேபோட்டு, உ - மணிநேரம்மூடி, வெளுப்பு, துணியில்வடிகட்டிக்கொள்ளவும்.

Dose. f℥j—f℥iv.

ஒ. அளவு.—க - முதல், ச - அவுன்ஸ் கொடுக்கலாம்.

**Extractum Pareiræ.** *Extract of Pareira brava.*

எக்ஸ்டிராக்ட் ஆவ் பெரீர பிரேவ. பெரீர பிரேவஎன்னும் வேரின் சத்து.

PREP. (Macerate bruised Pareira ℔ ijss, in boiling Aq. Dest. Cij. for 24 hours, boil down to Cj., strain while hot and evaporate to a proper consistence.) *Dose.* gr. x to ℥ss.

செய்முறை.—உ௰ - பவுன், நொறுக்கிய பெரீரஎன்னும் வேரை, உ - காலன் கொதிக்கக் காய்ந்த நீரில்போட்டு உச - மணிநேரம்வெதுப்பி, க - காலனுக்குச் சுண்டக்காய்ச்சி, சூடாயிருக்கும்போதே வடிகட்டி, பதத்துக்கு வரும்படி நீர்ச்சுண்டக் காய்ச்சிகொள்ளவும்.

ஒ. அளவு.—௰ - கிறேன் முதல். ௰ - திராம் வரையில் கொடுக்கலாம்.

## CALUMBA. *Cocculus palmatus.* Root.

கலம்ப. கலம்பவேர். (வேர்.)

PROP. குணங்கள்.—கலம்பவேரானது ஆப்ரிகா தேசத்தில் விளைகின்றது. தட்டையாய் உருண்டயில்லைகளாய் இருக்கும்; ஒருபக்கம் பள்ளமாயும், ஒருபக்கம் மேடாயுமிருக்கும். சிலவேளை இரண்டுபக்கங்களும் பள்ளமாய் இருக்கும்; மஞ்சள்நிறமுடையது; எளிதில் பொடியாக்கலாம்; பொடியானது, பச்சையும் மஞ்சளுங் கலந்த சாயலாய் இருக்கும்; கசப்பாயும், கொஞ்சம் வாசனையாயும் இருக்கும்.

ACTION. Stomachic, Tonic.

செய்கை.—ஜடராக்கினி வர்த்தனகாரி, பலகாரி.

USE. Dyspepsia, convalescence from fever, debility, sympathetic vomiting of pregnancy, &c.

உபயோகம்.—கலம்பவேருக்கு தேகத்துக்குப் பலத்தைக் கொடுக்கிற குணமுண்டு; இது மெத்தப்பிரயோஜனமான மருந்து; இதில் டானிக் ஆஸிட், காலிக் ஆஸிட்என்னும் துவர்ப்புசத்துகளில்லை, ஆகையால் அயம், சவ்வீரம் இவைகளைச்சேர்த்துக்கொடுக்கலாம். அக்கினி மந்தரோகம், காய்ச்சலில் விழுந்து எழுந்தபிறகும், துர்ப்பெலன், கருப்பிணிகளுக்குக் காணுகிற வாந்தி, இவைகளுக்குக்கொடுக்கக்குணமாகும்.

DOSE. gr. x.—℥ss. twice or thrice a day.

ஒ. அளவு.—௰ - கிறேன் முதல், ௰ - திராம்வரையில் தினத்துக்கு, உ - ௩- தடவை கொடுக்கலாம்.

**Infusum Calumbæ.** *Infusion of Calumba.*

இன்பியுஷன் ஆவ் கலம்ப. கலம்பவேர் வெந்நீர்க்கஷாயம்.

PREP. (Macerate Calumba sliced ℥v. in boiling Aq. Dest. Oj. for two hours, and strain.) *Dose.* f℥ iss.

செய்முறை.—௫ - திராம் அண்டித்த கலம்பவேரை, க - பைன்ட்கொதிக்கக்காய்ந்த ஆவிநீரில்போட்டு, உ - மணிநேரம் வெதுப்பி வடிகட்டிக்கொள்ளவும்.

ஒ. அளவு.—க௦ - அவு. அளவுக்கு, தினத்துக்கு, உ-௩- தரம் கொடுக்கலாம். இதுவெகு ஜலுதியில் கெட்டுப்போகும்.

**Tinctura Calumbæ.** *Tincture of Calumba.*

டிங்சர் ஆவ் கலம்ப. கலம்பவேர் பாவனத்திரவம்.

PREP. (Calumba ℥iij., Proof Spirit Oij.) *Dose.* f℥j.—f℥ij.

செய்முறை.—௩ - அவு. கலம்பவேரை பொடியாய்த்துண்டித்து, உ- பையி. புரூவ் ஸ்பிரிட்என்னும் சாராயத்தில் எ - நாள் ஊறவைத்து, பிறகு பிசைந்து வடிகட்டிக்கொள்ளவும்.

ஒ. அளவு.—க - திராம்முதல், உ - திராம்வரையில், வேறுமருந்துகளோடு சேர்த்துக்கொடுக்கலாம்.

**COCCULUS INDICUS.** *Anamirta Cocculus.* The fruit.

காக்கியுலஸ் இண்டிகஸ். காக்காய்கொல்லி. நஞ்சுக்கொட்டை. (கனி.)

இதின் பழத்திலிருக்கிற பருப்பை எடுத்து, க - க்கு—ு - பாகம் பன்றிநெய்யைச்சேர்த்து அரைத்து, களிம்புசெய்து, கரப்பான், சொறி சிறங்கு, படர்தாமரை இவைகளுக்கு, உபயோகப்படுத்தப்படும். இது நஞ்சுபதார்த்தம். இங்கிலாண்டுதேசத்தில் இதை பீர்சாராயத்தோடு கலப்பதுண்டு; அதற்குக் கசப்பும், நல்லவாசனையும். வெறிக்கிற குணமுந் தரும்.

**PAPAVER.** *Papaver Somniferum. The Garden or White Poppy. Opium Poppy.* Dried Capsules. Poppy-heads.

பபெவர். ஒயிட் பாப்பி. கார்டன் பாபி. கசகசாச்செடி. (போஸ்தக்காய்.)

கசகசாச் செடியானது, உ - முதல் - ச - அடி உயரமிருக்கும்; புஷ்பம் வெள்ளையாயும், காய் கோழிமுட்டை ரூபமாயுமிருக்கும்; காய்க்கு போஸ்தகாய்என்றும், உள்ளிருக்கிற வித்துக்கு, கசகசாவென்றும், அதில்உண்டாகிற பிசினிக்கு அபினியென்றும்பெயர். அபினிநிமித்தம், கசகசாவை, துருக்கி, பாரசீயம், ஈஜிப்ட், இந்தியாமுதலிய தேசங்களில் விஸ்தாரமாக பயிரிடுகிறார்கள். ஆனி, ஆடிமாதங்களில், கசகசாச்செடி புஷ்பிக்கும். காய்முற்ற இரண்டுமாதஞ்செல்லும்.

**Capsulæ Papaveris.** *Poppy-heads.*

பாப்பி ஹெட்ஸ். (போஸ்தக்காய்.)

PROP. குணங்கள்.—நன்முய் முற்றினபோஸ்தகாயில், சத்துமெத்த இராது, அந்தச்சத்துக்கு, அபினிக்கிருக்கிற குணங்களெல்லாம் உண்டு; ஆகையால்மெத்தமுற்றுமலிருக்கிற போஸ்தக்காய் மருந்துக்குநல்லது. போஸ்தகாயைப் பிளந்து பார்வையிட்டால், அரையரையாகவும், அவைகளில் கசகசாவித்துகள் ஒட்டிக்கொண்டும் இருக்கும்.

**Decoctum Papaveris.** *Decoction of Poppies.*

டிகாக்ஷன் ஆவ் பாபீஸ். போஸ்தக்காய் கஷாயம்.

PREP. (Boil Poppy-heads bruised ℥ iv. in Aq. Oiv. for ¼ hour. Strain).

செய்முறை.—௪ - அவுன்ஸ் நொறுக்கிய போஸ்தக்காயை, ௪ - பையின்ட் ஜலத்தில்போட்டு, ௨ - மணிநேரங்காய்ச்சி வடிகட்டிக்கொள்ளவும்.

ACTION. Demulcent, Anodyne.

செய்கை.—ஸினிக்தகாரி, வேதனசாந்தகாரி.

USE. உபயோகம்.—கண்ணோவு, வயிற்றுவலி, கீல்நோவு இவைகளுக்கு, இந்தக் கஷாயத்தைச் சுடசுடஒற்றிடம் கொடுக்கலாம்.

நமது வீடுகளில் போஸ்தக்காயுடன், துந்திபிலேயைச்சேர்த்து காய்ச்சி, ஒற்றிடம் கொடுப்பது வழக்கம்.

ஆயுர்வேதியர்கள் போஸ்தக்காயுடன், அதிவிடயம், கடுக்காய்ப்பூ, சிறுநாகப்பூ முதலிய துவர்ப்புள்ள பதார்த்தங்களைச்சேர்த்துக் கஷாயமிட்டு, பேதிகட்டக்கொடுக்கிறார்கள். இந்தகஷாயத்தில் சேருகிற போஸ்தக்காயில், அபினிச்சத்து இருப்பதால், குழந்தைகளுக்கு ஜாக்கிரதையாய் கொடுக்கவேண்டியது.

## Syrupus Papaveris. *Syrup of Poppy.*

## ஸிரப் ஆவ் பாபி. போஸ்தக்காய் பாணிதம்.

PREP. (Take Poppy-heads ℔ iij. without the seeds; boil them in boiling Aq. Dest. Cv. to Cij and press strongly. Boil again the strained liquor to Oiv. Strain while hot, set by for 12 hours, and boil the clear liquor to Oij. Add sugar ℔ v.; dissolve it, and make a syrup. Mix it lastly with Rect. Spirit f℥v.)

செய்முறை.—௩ - பவுன் விரையில்லாத போஸ்தக்காயை, ௫- காலன் கொதிக்கக் காய்ந்த நீரில்போட்டு, ௨ - காலனாகக் காய்ச்சி, நன்றாய்ப் பிசைந்து வடிகட்டி, மறுபடியும், ௪ - பையின்டாகக்காய்ச்சி, சூடாயிருக்கும்போதே வடிகட்டி, ௰௨ - மணிநேரம் அசையாமல்வைத்து, தெளிவான நீரை ௨ - பையின்டுக்குக் காய்ச்சி, ௫ - பவுன் சருக்கரையைச்சேர்த்துக் கரைத்து, பாணிதமாகச் செய்துகொள்ளவும். முடிவில், ௫ - அவு. ரெக்டிபைபிட்ஸ்பிரிபுட்என்னும் சாராயத்தைச் சேர்த்துக் கொள்ள வேண்டியது.

USE. உபயோகம்.—குழந்தைகளுக்கு அபினிஉபயோகப்படுத்தவேண்டியதாய் இருந்தால், இந்தமருந்தைக் கொடுக்கலாம், ஆனால் இது சீக்கிரத்தில் கெட்டுப் போகும்; இதிலிருக்கிற அபினிச்சத்தின் மிதமும், வித்தியாசப்பட்டுவிடும்.

ஓ. அளவு.—௨ -டிராம்முதல் ௭ - அவுன்ஸ் அளவுக்குப் பெரியவர்களுக்கும், ௰ -முதல் ௰௫ - மினிம்வரையில் குழந்தைகளுக்கும் கொடுக்கலாம்.

## Extractum Papaveris. *Extract of Poppy.*

## எக்ஸ்டிராக்ட் ஆவ் பாபி. போஸ்தக்காய்ச்சத்து.

PREP. (Macerate bruised Poppy-heads without the seeds ℥ xv. in boiling Aq. Cj. for 24 hours. Boil down to Oiv.; strain while hot and evaporate to a proper consistence.)

செய்முறை.—௰௫ - அவு. விரையில்லாத நொறுக்கிய போஸ்தக்காயை, ௧ - காலன் கொதிக்கக்காய்ந்த ஜலத்தில்போட்டு, ௨௪ - மணிநேரம் வெதுப்பி, பிறகு ௪ -

பையி. ஜலந்துக்குக்காய்ச்சி, கஷாயம் உஷ்ணமாய் இருக்கிறபோதே வடிகட்டி, பிறகு நீர்ச்சுண்டி பதத்துக்குவரும்படியாய் காய்ச்சிக்கொள்ளவும்.

ACTION. Narcotic, Anodyne.

செய்கை.—நித்திராகாரி, வேதனைசாந்தகாரி.

USE. உபயோகம்.—போஸ்தக்காய் சத்தை அபினிக்குப்பதிலாகஉபயோகிக்கலாம். அபினிக்கிருக்கிற சிலதுர்க்குணங்கள் இதற்கில்லை. நித்திரையில்லாமல் வருத்தப்படுகிற காலங்களில், இதை ராத்திரி படுத்துக்கொள்ளும்போது, நோயாளிக்குக் கொடுத்தால், ஆரோக்கியமாய் நித்திரையை யுண்டாக்கும்.

DOSE. gr ij.—gr. x.

ஒ. அளவு.—உ - முதல், ய - கிறேன் வரையில் கொடுக்கலாம்.

கசகசாவித்து :—கசகசாவில் அபினிச்சத்து இல்லாததால், அபினிக்கு இருக்கிற குணங்கள் கசகசாவுக்கு இராது ; ஆகையால் இங்கிலீஷ் வைத்தியாள் உபயோகப்படுத்துகிறதில்லை. கசகசாவிலிருக்கிற எண்ணெய் விளக்கெரியவைக்க, உபயோகமாகின்றது. திமிரு, நமைச்சல், கிராணி, அதிசாரம், சிரநீர், அநித்திரை, இவைகள் போமென்றும், அழகு, காந்தி, தாதுபுஷ்டி இவைகள் உண்டாகுமென்றும் பதார்த்தகுணசிந்தாமணியில் செப்பிஇருக்கின்றது. கசகசா, துத்தியிலை யிவைகளைச்சேர்த்து, காடிஜலத்தைவிட்டு அரைத்து நமைச்சலுக்கு மேல்பூசுகிறது இந்த தேசத்தின் வழக்கம்.

கசகசாலேகியம். செய்முறை.—கசகசா, வால்மிளகு, வகைக்கு பலம், உ- இவைகளை இளவறுப்பாய் வறுத்துக்கொண்டு, வாதுமைப்பருப்பு, கற்கண்டு, வகைக- க்குபலம், உ - சேர்த்து அம்மியில்வைத்து, நன்றய்அரைத்து, தேன், நெய் இவைகளைச்சேர்த்துப் பிசைந்து லேகியஞ்செய்துகொள்ளவும். இதில் கொட்டைப்பாக்களவு அந்திசந்தி இரண்டுவேளையுங் கொடுக்கலாம்.

**Opium.** *Concrete juice from the unripe Capsules of Papaver Somniferum.*

ஓபியம். அபினி. (கசகசாகாவின் உறைந்தபால்.)

போஸ்தகாயிலிருந்து வடிந்துறைந்த பாலுக்கு, அபினி யென்றுபேர். அபினியை எடுக்கிற விதமாவது,—காய்பழுக்காததற்கு முன்னும், புஷ்பஇதழ்கள் உதிர்ந்து -எ - நாள் ஆனபின்பும், சாயரக்ஷையில் காயின்மேல் நீண்டவாட்டமாய் மேலோடு, உ- ௩- கீற்று கீறினால், கீற்றுகளிலிருந்து பால் ராத்திரிமுழுதும் வடிந்து, உறைந்திருக்கும் ; காலையில் அதைச்சுரண்டி எடுத்துக்கொள்ளவேண்டியது. கீற்றுகளை ஆழமாய்க் கீறினால் பால்வடியாது. பகலில் கீறினால் வெய்யிலில் பால் உலர்ந்து, வடிகிறவாய் மூடிக்கொண்டு பால்வடியாது. இவ்விதமாய் காயின்மேல் உ - ௩ - தடவை கீறி, பாலெடுக்கப்படும். இத்தன்மையாக கொஞ்சங்கொஞ்சமாய் சேகரித்த அபினியைப் பக்குவப்படுத்தி உண்டைகளாக்கி, விக்கிரயத்துக்கு அனுப்பப்படும்.

இத்தேசத்தில் அபினியை, பங்குனி மாதத்தில் சேகரிக்கப்படுகின்றது.

அபினி அனேகதேசத்தில் விளைகின்றது ; அந்தந்த நிலவளத்துக்குத் தக்கபடி அதன் குணமும் வேறுபட்டிருக்கும். துருக்கியதேசத்து அபினி, எல்லாவற்றிலும் சிரேஷ்டமானது ; அதில் மார்பிய (Morphia) என்கிற சத்து அதிகமாய் இருக்கும். ஹிமோந்கிரி பருவத பிரதேசங்களில் விளைகிற அபினி, இரண்டாந்தரமானது.

அபினியில் இருக்கிற சத்துகள் அனேகம்; அவைகளில் மார்பிய (Morphia), கொடிய (Codeia), நார்கொடைனு (Narcotina), திபேய (Thebaia), இவைகள் முக்கியமானவைகள்.

**Morphia.** *A peculiar principle on which the medicinal activity of opium chiefly depends.*

மார்பிய. அபினிஉப்பு.—(இந்த உப்பில்தான் அபினியினுடைய குணங்கள் முக்கியமாய் இருக்கின்றன.)

PROP. குணங்கள்.—மார்பிய என்னும் பதார்த்தம், வெள்ளையாயும், வாசனையற்றதாயும், அதிக கசப்புள்ளதாயும் இருக்கும்; ஜலத்தில்கரையாது; ஆல்கோஹல் என்னும் சாராயத்தில் கரையும்; பொட்டிலுப்பு திராவகத்தைச்சேர்த்தால், சிவந்தநிறமாகும்; அயப்பாவனத்திர வத்தைச்சேர்த்தால், நீலவன்னமாகும்.

PREP. The hydrochlorate is directed to be dissolved in distilled water and precipitated by solution of ammonia.

செய்முறை.—க - அவு. ஹைட்ரோகுளோரேட் ஆவ் மார்பியஎன்னுஞ்சரக்கை, க - பையி. நீநீரில்கரைத்து, பிறகு ௫ - திராம் நவகூஷார ஜெயநீரை, க—அவு. ஜலம்விட்டு விளாவி இவ்விரண்டையுஞ்சேர்த்து நன்றுய்க்குலுக்கி, அடியில்படிகிற வண்டலை நீநீர்விட்டுக்கழுவி பிறகு சிறுதியிட்டெரித்து, உலர்த்திக்கொள்ளவேண்டியது.

ACTION. USE. செய்கை. உபயோகம்.—அபினிக்குடைய குணங்களெல்லாம், மார்பியாவுக்குஉண்டு; இதுஜலத்தில் கரையாததாகையால் அவுஷதமாக உபயோகப்படுத்துகிறதில்லை.

DOSE. gr. ¼ to gr j.

ஒ. அளவு.—வ - முதல் க - கிறே. அளவுக்குப் படிப்படியாய் அதிகரித்துக் கொடுக்கலாம். க-கிறேன் மருந்தைச் சன்னப்பொடியாய்ச்செய்து ரணங்கள்மேல் தூவலாம்.

**Morphiæ Hydrochloras.** *Morphiæ Murias. Hydrochlorate or Muriate of Morphia.*

மார்பிய ஹைட்ரொ குளோரஸ். மார்பிய முயுரியஸ். ஹைட்ரொகுளோரேட் ஆவ் மார்பிய. முயுரியேட் ஆவ் மார்பிய.

PREP. (A carefully made watery solution of opium is precipitated by Chloride of Lead, so as to leave the hydrochlorates of morphia and codeia in solution, while the lead forms insoluble salts with the meconic and sulphuric acids. The solution is crystallized; and the crystals, being re-dissolved are purified by animal charcoal. The Morphia is then thrown down by Solution of Ammonia leaving codeia unprecipitated; and after being re-dissolved in Hydrochloric Acid, is again exposed to the action of animal charcoal, and finally evaporated for the formation of crystals.)

செய்முறை.—க - பவுன் அபினியைத் துண்டுகளாக்கி ச - பையின்ட் நீநீரில்- ௰ - மணிநேரம் ஊறவைத்து, பிறகு இடித்து உ௰ - மணிநேரம் மறுபடியும் ஊறவை

ந்து, வடிகட்டி, பிழிந்துகொள்ளவும். ஜலத்தில் கரையாமல்நிற்பதை மறுபடியும் ஜலத்தில்போட்டு மூன்றுவது முறை ஊறவைத்து, ருசியில்லாமல்போகும்படி எத்தனை தரம்வேண்டியதோ அத்தனைதரம் இடித்து, இடித்து, பிழிந்து பிழிந்துகொள்ளவேண்டியது. (மிகொனேட் ஆவ் மார்பிய) (Meconate of morphia) என்னும் பதார்த்தம், ஜலத்தில்கரைந்திருக்கும். வடிகட்டி எடுத்தஜலத்தை முழுதும், பாகுபதத்துக்கு வரும்படி, ௱௪௰- டிக்கிரி உஷ்ணம் இருக்கும்படி, எரித்து சுண்டக்காய்ச்சி, பிறகு ௩- பையின்ட் நீரைச்சேர்த்து கல்மிஷங்களெல்லாம் அடியில் படிந்தபிறகு, தெளிவானநீரை இறுத்துக்கொள்ளவும். உ - அவு. அல்லது தேவையான குளோரைட் ஆவ் லெட் (Chloride of lead) என்னும்சரக்கை, ௪ - பையின்ட் கொதிக்ககாய்ந்த நீரில்கரைத்துக் கொண்டு, இதை ஷை ஜலத்துடன்சேர்த்தால், அடியில்வண்டல் படியும் ; வண்டல்படிவது நிற்கிறவரையில் சேர்க்கவும். இப்போது ஜலத்தில் ஹைட்ரோகுளோரேட் ஆவ் மார்பிய (Hydrochlorate of morphia) என்னும் பதார்த்தம் கரைந்திருக்கும். இந்த நீரைஇறுத்துக்கொண்டு, அடியில் நிற்பதில், நீர் விட்டு அடிக்கடிக்கழுவி எடுத்துக்கொண்டு, பிறகு வடிகட்டினநீரெல்லா வற்றையும் ஒன்றாய்ச்சேர்த்து, முன்போல் சிறுதீயிட்டெரித்து, உப்பு கட்டும்படிச் செய்து கொள்ளவும். இந்த உப்பை ஒருதுணியில்போட்டுப் பிழிந்து பிறகு, ௧ - பையி. நீரில் கரைத்து, ௧௦ - அவுன்ஸ், ரத்தத்தைத் சுட்டெரித்த கரியை (Animal charcoal) ச்சேர்த்து, ௱உ௰ - டிக்கிரி உஷ்ணம் இருக்கும்படி தீயிட்டு வெதுப்பிக் கொள்ளவும். இந்தக்கரி, உப்பிலிருக்கிற அழுக்கை நீக்கிவெள்ளையாய்ச் செய்கின்றது ; ஆனால் மெத்தஉப்பு நஷ்டமாகும். முடிவில் கரியைக் கழுவி நீக்கிவிட்டு, வெகுசாக்கிரதையாய் நீரைச்சுண்டவைத்து, பரிசுத்தமான உப்பு பூக்கும்படிச் செய்துகொள்ளவும்.

PROP. குணங்கள்.—இந்தமருந்து வெள்ளையாய்இருக்கும்; வாசனையிராது; ஒருவிதமான அதிககசப்பாய் இருக்கும் ; ஜலத்திலும், சாராயத்திலும் கரையும்.

ACTION. Anodyne, Diaphoretic.

செய்கை.—வேதனசாந்தகாரி, சுவேதகாரி.

USE. உபயோகம்.—அபினிக்கிருக்கிற குணங்களெல்லாம் இதற்குண்டு; ஆனால் தலைவலி, விகாரம் இந்தக்குணங்களை உண்டாக்கமாட்டாது ; உஷ்ணப்படுத்துகிற குணமுமில்லை. அபினியை உபயோகப்படுத்துகிற ரோகங்களுக்குக் கொடுக்கலாம்.

DOSE. gr. $\frac{1}{4}$ to gr. $\frac{1}{2}$.

ஒ. அளவு—வ- முதல் ௨ - கிறேன் அளவுக்குக் கொடுக்கலாம். ௫ - முதல், ௰- கிறேன் எடுத்துகொண்டால், விஷமித்துக்கொல்லும்.

**Liquor Morphiæ Hydrochloratis.** *Solution of Muriate of Morphia.*

**சொலூஷன் ஆவ் மியுரியேட் ஆவ் மார்பிய.**

PREP. (Take Hydrochlorate of Morphia ℨiv., Dist. Water Oj and Proof Spirit Oss. Mix & dissolve.) *Dose.* ♏ v.—x x.

செய்முறை.—௪- திரா. ஹைட்ரோ குளோரேட் ஆவ் மார்பியாவை, ௧-பையி. நீர், ௨ - பையி. புரூவ்ஸ்பிரிட், இவைகளில் சேர்த்துக் கரைத்து கொள்ளவும்.—௧- திரா. மார்பிய ஜலத்தில், ௪- கிறேன் உப்பு இருக்கின்றது.

ஓ. அளவு.—௫ - முதல் உ௰- மினிம்வரையில் கொடுக்கலாம்.

**Trochisci Morphiæ.** *Morphia Lozenges.*

மார்பிய லாஸென் ஜெஸ். மார்பிய பில்லைகள்.

Prep. (Dissolve Muriate of Morphia gr. x x in a little hot water. Mix it with Tincture of Tolu ʒiv. and pure sugar ℥xxv. and with a sufficiency of mucilage to form a proper mass for making lozenges ; each of which should weigh about 15 grains;) Each contains about gr 1-40th of Muriate of Morphia.)

செய்முறை.—உ௰ - கிறே மியூரியேட் ஆவ் மார்பியவை, கொஞ்சம் வெந்நீரில் கரைத்து, ச - திராம். டிங்சர் ஆவ் டொலு என்னும் மருந்தும், உ௰௫ - அவு. வெள்ளைச் சருக்கரையுஞ், சேர்த்து, தேவையான விளாம்பிசின் பசையைவிட்டு மொத்தையாக்கி, ஒவ்வொரு பில்லை, ௰௫- கிறேன் இடையுள்ளதாய் இருக்கும்படிச் செய்து கொள்ளவேண்டியது.

Action. Use. செய்கை. உபயோகம்.—சமனகாரி. இருமலைத்தணிக்க, இது மெத்த உபயோகப் பட்டுவருகின்றது.

Dose. ஒ. அளவு.—௰ - உ௰ - பில்லைகள் ஒவ்வொரு தினத்துக்குச் சாப்பிடலாம்.

**Trochisci Morphiæ et Ipecacuanhæ.** *Morphia and Ipecacuanha Lozenges.*

மார்பிய அன்ட் இபிகாயுயேனு லாஸென்ஜெஸ். மார்பியவும் இபிகாகியுயேனுவும் கலந்த பில்லைகள்.

Prep. (Dissolve and mix Muriate of Morphia gr. xx. Ipecacuanha in fine powder ʒ.j. Tinct. of Tolu fʒiv. pure sugar ℥xxv. and proceed as with the preceding Morphia lozenges) Each Contains 1-40 th gr. of Muriate of Morphia, and gr 1-13th of Ipecacuanha.)

செய்முறை.—உ௰- கிறே. மியூரியேட் ஆவ் மார்பியவை ஜலத்தில் கரைத்து, க - திரா. இபிகாகியுயேனு சூரணம், ச - திராம் டிங்கர் ஆவ்டொலு, உ௰௫ - அவு. வெள்ளைச்சருக்கரை, இவைகளைச்சேர்த்து, மார்பிய லாஜென்ஜெஸ்என்னும் பில்லைகளைச்செய்கிறமுறையாய், இதையுஞ் செய்துகொள்ளவேண்டியது.

Use. உபயோகம். இருமலுக்கு இதுசஞ்சீவி ; வெகுசீக்கிரத்தில் இருமலைத் தணித்துவிடும்.

Dose. ஒ. அளவு.—௰ - முதல், உ௰ - பில்லைகள் ஒவ்வொரு தினத்துக்குச் சாப்பிடலாம்.

**Morphiæ Acetas.** *Acetate of Morphia.*

மார்பிய அஸிடஸ். அஸிடேட் ஆவ் மார்பிய.

Prep. (Mix Acetic Acid fʒ iij. with Aq. dest. f℥iv. and pour them upon Morphia ʒvj. to saturation. Let the liquor evaporate with a gentle heat, that crystals may be formed.)

செய்முறை.—ரு - திரா. அஸிடிக் ஆஸிட்என்கிறகாடியில், ௪- அவு. நீர்விட்டுக்கலந்து, அதில் ௬ - திரா. மார்பியவைச்சேர்த்து, சிறுதீயிட்டுச் சுண்டக்காய்ச்சினால், உப்பு ஜனிக்கும்.

PROP. குணங்கள்.—இது வெள்ளைத்தூளாயும், வெகுகசப்பாயுமிருக்கும்; அதிலிருக்கிற காடி சுண்டிக்கெட்டுப்போகும்; ஆகையால் இதை ஜலத்திற்கலந்து கொடுக்க உத்தரவு செய்கிறபோதெல்லாம், கொஞ்சம் அஸிடிக் ஆஸிட்என்கிற காடியைச் சேர்த்து கொடுக்கவேண்டியது.

DOSE. ஒ. அளவு.—ஹு - முதல் வ - கிறேன் கொடுக்கலாம்.

அபினியிலிருக்கிற நார்கொடீன் (Narcotine) என்னும் சத்தை, குவைனவுக்குப் பதிலாக, டாக்டர் "ஒஷானஸி" (Dr. O'Shaughnessy) முதலிய வைத்தியர்கள், சீதசுரத்தில் (Ague), குளிர்வருகிறதற்கு முன்கொடுத்து, குளிரைத் தடுத்ததாய்க்கண்டிருக்கின்றது.

ADULTERATION. கலப்பு.—அபினி விலையுயர்ந்த மருந்தாகையால் மணல், வரட்டிப்பொடி, களிமண், சருக்கரை, ஊமத்த இலைத்தூள், வில்வப்பிசினி, போஸ்தக்காய்த்தூள், இவைகளில் எதையாவது அபினியுடன்கலந்து விற்பதுண்டு; ஆகையால் தோஷமில்லாத சரக்கை கண்டறிந்து வாங்கவேண்டியது. அபினியிலிருக்கிற தோஷங்களைக் கண்டறிவது, மிகவுங்கடினம்; அதினுடைய விலை கலப்புக்குத்தக்கபடியாயும் மார்பியஎன்னும் சத்துக்குத் தக்கபடியாயும், வித்தியாசப்படும்.

ACTION. Anodyne, Sedative, Narcotic, Antispasmodic, Diaphoretic, Stimulant in small doses.

செய்கை.—வேதனைசாந்தகாரி, சமனகாரி, நித்திராகாரி, அங்காகர்ஷண நாலகாரி, சுவேதகாரி, குறைந்த அளவில் கொடுத்தால் உஷ்ணிக்கும்.

USE. உபயோகம்.—அபினியைக் குறைந்த அளவில் கொடுத்தால் உஷ்ணிக்கும்; நாடி உரப்பாய்ப் படபடத்து நடக்கும்; கண்களில் பளபளப்பு காட்டும்; உச்சாகப் படுத்திவைக்கும்; சற்றுநேரஞ்சென்றபிறகு உறக்கங்காணும்; நாடி மெதுவாய் நடக்கும்; பின்னிட்டு அக்கினிமந்தம், மலச்சிக்கல் இவைகளையுண்டாக்கும். வயதுக்குத்தக்கபடி அபினியின் அளவை விகிதப்படுத்திக்கொடுக்க வேண்டியது; குழந்தைகளுக்கு மெத்த விரோதஞ் செய்யும்; ஆகையால் வெகு சாக்கிரதையாய் கொடுக்க வேண்டியது. அபினியின் குணம், முதலில் நரம்புகளைப்பற்றிப், பிறகு மற்றதாதுக்களில் வியாபிக்கும். அபினியை வழக்கப்படுத்தினவர்களுக்கு, மெத்தக் கொடுக்கவேண்டியதாய் இருக்கும். அளவுக்கதிகமானால் விஷமிக்கும். அதிசாரம் வாந்திபேதி, இசிவு, சுரம், சூலை, முதலிய ரோகங்களுக்கு கொடுத்தால் சௌக்கியப் படுத்தும். தாபனரோகங்களுக்கு (Inflammations) ரசபஸ்மம், இபிகாகியு ஏறு இவைகளில் எதையாவது ஜண்டித்துக்கொடுக்கலாம். தலை நோவு, வரகூழியிருமல் இவைகளுக்கு, இந்த மருந்து உதவாது. கர்ப்பிணிகளுக்கு அபினியைக் கொடுக்கலாகாது. எல்லா அவுஷதங்களைப்பார்க்கிலும், அபினி சிரேஷ்டமானது; அதை அடிக்கடி கொடுக்கப்படும்.

DOSE. gr. ss.—gr. ij.

ஒ. அளவு.—அபினியைக்கட்டி ரூபமாயாவது, திரவரூபமாயாவது, அல்லது அபினியிலிருந்தெடுக்கிற உப்புகளையாவது உள்ளுக்கு உபயோகிக்கலாம். சருமத்தின்

மேல் தடவியாவது, ரணத்தின்மேல் போட்டாவது உபயோகிப்பதும் உண்டு. ½- முதல், உ - கிறேன் கொடுக்கலாம்; ஆனால் வழக்கமாய்ப் பிரயோகிப்பது, க-கிறேன். சிலருக்கு ஒரு கிறேன் அளவுக்குக் குறைத்தும், சிலருக்கு ஒரு கிறேன் அளவுக்கு அதிகமாகவும் கொடுக்கவேண்டியதாய் இருக்கும். அபினி சாப்பிட்டு வழக்கப்பட்டவர்களுக்கு, மெத்தக்கொடுக்கவேண்டியது. அபினியை உண்டைசெய்தாவது, ஜலத்தில் கரைத்தாவது, ஆஸனத்தின் வழியாய் உபயோகிக்கலாம். நேத்திரத்துவாலே, போல்டிஸ், பிளாஸ்திரி, இவை முதலியவைகளோடுஞ் சேர்த்து உபயோகிப்பதும் உண்டு.

PREPARATIONS OF OPIUM.

அபினியின் பிரயோக ரூபங்கள்.

**Extractum Opii.** *Cold watery Extract of Opium.*

எகிஸ்டிராக்ட் ஆவ் ஓபியம். அபினிச்சத்து.

PREP. செய்முறை.—க½ - பவு. பொடிசெய்த அபினியுடன், உ½ - பையி. ந்நீரைக் கொஞ்சங்கொஞ்சமாய்விட்டு, அடிக்கடிக் கத்தியால்கிளறி, உச- மணிநேரம் ஊறவைத்து, வடிகட்டிக்கொள்ளவும். திப்பியில் உ½ - பையி. நீர்விட்டு, முன்போலவே பக்குவப்படுத்தி வடிகட்டிக்கொண்டு, அதையும் இதையும் ஒன்றாய்ச்சேர்த்து, பதத்திற்கு வரும்படியாய்ச் சுண்டக்காய்ச்சிக் கொள்ளவேண்டியது. இவ்விதமாய்ச்செய்துகொள்வதில் அபினியிலிருக்கிற மணல், முதலியதோஷங்கள் நீங்கி, அபினி சுத்தியாகும்.

DOSE. gr. ½ to gr. iij or v.

ஓ. அளவு.—½- முதல், ௩ - அல்லது ௫ - கிறேன் கொடுக்கலாம்.

**Trochisci Opii.** *Opium Lozenges.*

ஓபியம் லாஜென்ஜெஸ். அபினிபில்லைகள்.

PREP. (Reduce Opium ℨij to a fluid extract, as directed in Extractum Opii, mix it intimately with Extract of Liquorice ℥v., reduced to the consistence of treacle, add Tincture of Tolu ℥ss. sprinkle into the mixture powdered Gum Arabic ℥v. and finely powdered pure Sugar ℥vj. Beat into a proper mass. Divide into lozenges of 10 grs.)

செய்முறை.—உ - திரா. அபினியை, அபினிச்சத்துக்குச் செய்கிற முறையாய்ப் பக்குவப்படுத்திக்கொண்டு, இத்துடன், ௫ - அவு. அதிமதுரப்பாலை குழம்பாகச்செய்துசேர்த்து, ½ - அவு. டிங்சர் ஆவ் டொலுஎன்னும் சரக்கைவிட்டு, ௫ - அவு. கிளாப்பிசினித்தூளும், ௬ - அவு. சன்னமாய் அரைத்த வெள்ளைச்சருக்கரையும் தெளித்து, இடித்துப் பதமாக்கிக்கொண்டு, ய - கிறேன் இடையுள்ள பில்லைகளாய்ப் பங்கிட்டுக்கொள்ளவேண்டியது.

ஒவ்வொரு பில்லையில், ய - தில் ஒருபாகமான கிறேன் இடையுள்ள அபினிச்சத்து இருக்கின்றது. இது இருமலைத் தணிக்கும்.

**Pulvi Cretæ Compositus cum Opio.** *Pulvis Cretæ Opiatus. Compound Powder of Chalk with Opium.*

காம்பவுன் பவுடர் ஆவ் சாக் உத் ஓபியம். அபினி கலந்த சீமைச் சுண்ணாம்புக் கலவைச்சூரணம்.

Prep. (Triturate thoroughly together Comp. Chalk powder ℥vi. and powdered Opium ℈iv.)

செய்முறை.—௬௦ - அவு. சீமைச்சுண்ணாம்புக் கலவைச்சூரணத்துடன், அ௪- கிறேன் அபினியைச்சேர்த்து நன்றாய் மிஸ்ரமிக்கும்படி அரைத்துக்கொள்ளவும். ௪௦- கிறேன் சூரணத்தில், ௧ - கிறேன் அபினிஇருக்கின்றது.

Action. Antacid, Astringent, Stimulant, and Narcotic.

செய்கை.—ஆம்ல நாஸகாரி, ஸங்கோசனகாரி, உஷ்ணகாரி, நித்திராகாரி.

Use. In Diarrhœas.

உபயோகம்.—அதிசார பேதிக்கும், குழந்தைகளுக்குப் பல் முளைக்கிறபோது காணுகிறபேதிகளுக்குங் கொடுக்கலாம்.

Dose. gr. x.—gr. xxx.

ஓ. அளவு.—௰ - முதல், ௩௰ - கிறேன் அளவுக்குக்கொடுக்கலாம்.

**Confectio Opii.** *Electuarium Opii. Confection of Opium.*
கன்பெக்ஷன் ஆவ் ஓபியம்.

Prep. (Dry, and reduce together to a fine powder Long Pepper ℥j. Ginger ℥ij. Caraway ℥iij. Tragacanth ʒij. and powdered Opium ʒvj. Preserve them in a close vessel; and when required, add the powder by degrees to warmed Syrup f℥xvj. and mix.)

செய்முறை.—௧ - அவு. திப்பிலி, ௨ - அவு. சுக்கு, ௩ - அவு. காரவே, ௨ - திரா. டிரெகெகாந்த், ௬ - திரா. அபினி ; இவைகளை உலர்த்தி, சேர்த்திடித்து சூரணஞ்செய்து, வாசனைபோகாமல் வைத்துக்கொண்டு, தேவையானபோது, ௰௬ - அவு. சூடாயிருக்கிற சருக்கரைப்பாகுடன் மெதுவாய்ச்சேர்த்து, மிஸ்ரமித்துக்கொள்ளவும். சுமார், ௩௰௬ - கிறேன் சூரணத்தில், ௧ - கிறேன் அபினி இருக்கின்றது.

Action. Stimulant, Anodyne.

செய்கை.—உஷ்ணகாரி, வேதனாசாந்திகாரி.

Use. In Chronic Diarrhœa, &c.

உபயோகம்.—நாள்பட்ட அதிசாரபேதிக்குக் கொடுக்க, இது நருதியான அவுஷதம்.

Dose. gr. x.—dr. j.

ஓ. அளவு.—௰ - கிறேன் முதல், ௧ - திராம்வரையில் கொடுக்கலாம்.

**Tinctura Opii.** *Tincture of Opium. Laudanum.*
டிங்சர் ஆவ் ஓபியம். லாடனம். அபினிபாவனத்திரவம்.

Prep. (Macerate powdered Opium ℥iij. in Proof Spirit Oij. for 7days: then express and strain.)

செய்முறை.—௩ - அவு. அபினிப்பொடியை, ௨ - பைண்ட் புரூப் ஸ்பிரிட் என்னும் சாராயத்தில்போட்டு, ௭- நாள்ஊறவைத்து, பிசைந்து வடிகட்டிக்கொள்ளவும். ௰௩ - மினிம், அல்லது ௰௫ - துளி, அபினிபாவனத் திரவத்தில், ௧ - கிறேன் அபினியிருக்கின்றது.

ACTION. Anodyne, Narcotic.

செய்கை.—வேதனைசாந்திகாரி, நித்திராகாரி.

USE. உபயோகம்.—இந்தத்திரவத்தை வழக்கமாய் உபயோகிக்கப்படும்; உள்ளுக்குக் கொடுக்கவும், மேலுக்குபயோகிக்கவும் இது தகுதியானமருந்து.

DOSE. ♏ x.—fʒss.

ஔ. அளவு.—௰ - மினிம்முதல், ௫ திராம் அளவுக்குக்கொடுக்கலாம்; லேகியாதிகளில் இன்னும்அதிகமாய்க் கொடுப்பதுண்டு. குழந்தைகளுக்கு இந்தத்திரவத்தை, சாக்கிரதையாய் கொடுக்கவேண்டியது. ச - அளி லாடனம் அதிகமாகி, குழந்தைகளிறந்துபோனதும் உண்டு. உ - துளியால் மயக்கமும், அசந்த நித்திரையும் உண்டானதாய்த் தெரியவருகின்றது.

## **Vinum Opii.** *Wine of Opium.*

வைனம் ஒபை. ஒயின் ஆவ் ஒபியம். அபினி ஒயின்.

PREP. (Macerate Extract of Opium ℥ijss. Cinnamon bruised, and Cloves bruised of each ʒijss. in Sherry Wine Oij. for 7 days. Filter.)

செய்முறை.—உ௫ - அவு. அபினிச்சத்து, உ௫ - திரா. சன்னலவங்கப்பட்டைத்தூள், உ௫- திரா. லவங்கத்தூள்; இவைகளை உ - பையி. ஷெரி ஒயின்என்னும் சாராயத்தில், எ - நாள்ஊறவைத்து, வடிகட்டிக்கொள்ளவும். ௰௯ - மினிம் திராவகத்தில், க - கிறேன் அபினியிருக்கின்றது.

DOSE. ♏ x.—fʒj.

ஔ. அளவு.—௰ - மினிம்முதல். க - திராம் அளவுக்குக் கொடுக்கலாம். கண்ணோவுக்குக், கண்ணில் அடிக்கடி விடுவதுண்டு.

**Tinctura Camphoræ Composita.** *Compound Tincture of Camphor. Tinctura Opii Camphorata. Camphorated Tincture of Opium. Paregoric Elixir. English Paregoric.*

கம்பவுன் டிஞ்சர் ஆவ் காம்பர். பெரிகாரிக் இலிக்சர். கர்ப்பூர மிஸ்ரம பாவனத்திரவம்.

PREP. (Macerate together Camphor ℈iiss. Opium in powder gr. lxxij. Benzoic Acid gr. lxxij., Oil of Anise fʒj. Proof Spirit Oij. for 7 days; and strain.)

செய்முறை.—௫௰ - கிறேன் கர்ப்பூரம், எஉ- கிறே. அபினித்தூள், எஉ- கிறே. சாம்பிராணிப்பதங்கம், க - திரா. சோம்புத்தயிலம். உ - பையி. புரூவ்ஸ்பிரிட்என்னும் சாராயம்; இவைகளைச்சேர்த்து, எ - நாள்ஊறவைத்து வடிகட்டிக்கொள்ளவும். ௯ - அவு. திரவத்தில், சுமார் க - கிறே. அபினியிருக்கின்றது.

ACTION. Expectorant, Narcotic.

செய்கை.—கபஹரகாரி. நித்திராகாரி.

USE. உபயோகம்.—புகைத்து புகைத்து வருகிற இருமலைத்தணிக்கும், அதிசாரபேதியைக் கண்டிக்கும்.

DOSE. f℥ss.—f℥iv.

ஒ. அளவு.—ʒ - முதல், ச - திராம் வரையில் கொடுக்கலாம்.

**Liquor Opii Sedativus.** *Battley's Solution.*

லிகர் ஒபை ஸெடெடைவஸ். பாட்லீஸ் ஸொலூஷன்.

PREP. (Take dry Opium (Smyrna) in powder, 1 part, clean washed (Silica) sand, 2 parts. Mix and moistened with water, introduce into a percolator, and pass Aq. Dist. at 65° or 70° F. through the ingredients until, it passes both tasteless and colourless. Evaporate the liquor (by steam or water-bath) to the consistence of a hard pill extract. Take of this hard extract ℥iij. and Aq. dist. f℥xxx. Boil for two minutes; let it cool; filter, then add Rectified spirit f℥vj. and Aq. Dest. q. s. to make up nearly f℥xl. or one quart.)

செய்முறை.—க - பங்கு உலர்ந்த பொடிசெய்த அபினி ; உ - பங்கு கழுவி சுத்தியானமணல் ; இவைகளைக்கூட்டி ஜலம்விட்டு நனைத்து, பெர்கொலேடர்என்கிற யந்திரத்திலிட்டு, சுடு - அல்லது, எ௰ - டிக்கிரி உஷ்ணமுள்ள நீரை ஊற்றவும் ; ஜலத்தில்ரஸமில்லாமல் தெளிவாய் இறங்குகிறவரையில், ஜலத்தைச்சரக்கில் ஊற்றிக்கொண்டிருக்கவேண்டியது. பிறகு அந்தநீரை, ஜலயந்திரத்தில்வைத்து, சற்றுகட்டியாய் இருக்கும்படிச் சுண்டக்காய்ச்சவும் ; இறுகிப்போன சத்தில், ௩- அவு. எடுத்து, ௩௰ - அவு. நீரில்கலந்து, உ - நிமிஷம் கொதிக்கக் காய்ச்சி, குளிரவைக்கவும் ; இதை வடிகட்டிப்பிறகு, சு - அவு. ரெக்டிபைட் ஸ்பிரிட்என்னும் சாராயமும், ச௰ - அவு. அளவுக்குவேண்டிய அவ்வளவு நீருடம்விட்டுக் கலந்துகொள்ளவேண்டியது.

DOSE. ♏ v.—xx.

ஒ. அளவு.—ரு - முதல், உ௰ - மினிம் அளவுக்குக் கொடுக்கலாம். இந்தத்திரவம், உ௰ - மினிம் ஆகில், ௩௰ - மினிம் அபினி திரவத்துக்குச் சமானம்.

**Enema Opii.** *Opium Clyster.*

ஓபியம் கிளிஸ்டர்.

PREP. செய்முறை.—௩௰ - மினிம் அபினிபாவனத்திரவத்தை (Tincture of Opium), ச - அவு. அரொரூட் கஞ்சியில் (Decoction of Starch) சேர்த்துக்கொள்ளவும்.

ACTION. USE. செய்கை. உபயோகம்.—இதை ஆஸனத்தில் பிரயோகித்தால், குடலிலும், மூத்திர உறுப்புகளிலும் காணுகிற உபத்திரவங்கள் காணுதோடும்.

**Linimentum Opii.** *Liniment of Opium.*

லினிமெண்ட் ஆவ் ஒபியம். அபினித்தயிலம்.

PREP. (Mix Soap Liniment f℥vj. and Tinct. of Opium f℥ij.)

செய்முறை.—சு - அவு. சவுக்காரத் தயிலத்துடன், உ- அவு. அபினிபாவனத்திரவத்தைச் சேர்த்துக்கொள்ளவும்.

ACTION. USE. செய்கை. உபயோகம்.—இந்தத் தயிலத்தை தேய்த்தால், வாயுநோவுகள் நீங்கிப்போகும் ; அயர்ந்த நித்திரையுண்டாகும்.

INC. சத்துருபதார்த்தங்களாவன.—ஆல் கெலிஸ்என்னும் காரஉப்புகள், சுண்ணாம்புஜலம், டானிக்ஆஸிட் என்னும் துவர்ப்புச்சத்தையுடைய பதார்த்தங்கள், பால் அத்தம், மயில்துத்தம், அன்னபேதி, காடிக்காரம், சவ்வீரம் இவைகள் சேர்ந்தால், அபினிகெட்டுப்போகும்.

ANTIDOTES. பிரதிவிஷங்கள்.—அபினியை விஷமிக்கும்படியாய் தின்றவர்களுக்குச் செய்யவேண்டிய சிகிச்சையாவன :— வாயில் கையைக்கொடுத்தாவது, அல்லது பால்துத்தம், உப்பு, கடுகு இவைகளில் எதையாவது கொடுத்து, வாந்தியாகும்படிச் செய்யவேண்டியது ; ஸ்டமக்பம்ப் (Stomach Pump) என்னும் யந்திரத்தை, வாயில் பிரயோகித்து, வயிற்றிலிருக்கிற பதார்த்தங்களை வெளிப்படுத்தலாம். நோயாளியை நித்திரைபோக ஒட்டாமல் தூண்டிக்கொண்டிருக்கவேண்டியது ; முகருகிற உப்பை ஆக்கிராணம் செய்யவைக்கலாம் ; குளிர்ந்த ஜலத்தை சிரசின்மேலும், மார்பின்மேலும், ஊற்றவேண்டியது. ஸிங்கோனா. மாசக்காய் முதலிய துவர்ப்புள்ள பதார்த்தங்களில் எதையாவது, வெந்நீர்க்கஷாயஞ்செய்து உள்ளுக்குக் கொடுத்தால், அபினியைக்கெடுத்துவிடும். பிராந்தி (Brandy), அம்மோனிய (Ammonia), காபி (Coffee) முதலிய உஷ்ணகாரிகளைக் கொடுக்கவேண்டியது. கடுகைஅரைத்து, துணிமேல் தடவி பாதங்களுக்குப்போடவேண்டியது.

*Ague Draught.* அபினிப்பாவனத்திரவம் (T. Opii) சய - மினிம் ; சல்பியூரிக்ஈதர் (Sulph. Ether) க—திராம் ; கர்ப்பூரஜலம் க - அவு. இவைகளைச்சேர்த்து, சீதசுரத்தில், குளிர் காணுகிறபோது கொடுத்தால் குளிர் நிற்கும். சீதசுரத்தில் குழந்தைகளுக்கு அபினிபாவனத்திரவம். ஸோப்லினிமென்ட் (Soap Liniment) இவைகளைச் சமனிடையாய்ச் சேர்த்து, நடுமுதுகில் தேய்த்தால், குளிரை நிறுத்தும். (DR. JOSEPH BROWN)

*In Delirium Tremens.* மதுபானிகளுக்குக் காணுகிறஒருசாதி பித்தரோகத்துக்கு.—டார்டர் மெடிக் (Tartar Emetic) ச - கிறே.; அபினிபாவனத்திரவம் (T. Opii) உ - திரா.; கர்ப்பூரஜலம் க- அவு.; இவைகளைச்சேர்த்து, க- அவுன்ஸ் அளவுக்கு, ஒருமணிக்கொருதரம் கொடுத்துக்கொண்டு வந்தால், விகாரம் சயனப்படும்.

*In Asthma.* சுவாசகாசரோகத்துக்கு.—உ-கிறே. அபினியைக் கொடுத்தால், இளைப்பு உடனே நிற்கும்.

அபினி, வயிற்றுவலியையும், வாந்தியையும் நிறுத்தும்,

*In Diabetes.* மதுமூத்திரரோகத்துக்கு.—டோவர்ஸ் பவுடர். (Dover's powder) என்னும் சூரணத்துடன், அயச் சிந்தூரத்தைச் சேர்த்துக்கொடுக்க, ஸொஸ்தப்படும். நீரிழிவுரோகத்துக்கும் கொடுக்கலாம்.

*In false pains and after pains.* கர்ப்பிணிகளுக்குக்காணுகிற சண்டிநோவுக்கும், பிரஸவித்தபிறகு காணுகிற வயிற்றுவலிக்கும்.—யரு - அல்லது உய - துளி லாடனத்தை, (Laudanum), ஜலத்தில் கலந்துகொடுத்தால், தக்ஷணமே உபத்திரவம் நின்றுவிடும்.

*In Ear-ache.* காதுவலிக்கு.—லாடனமும், தேங்காயெண்ணெய்யும், சமனிடையாய்க்கூட்டி, பஞ்சியில் தவட்டிக் காதிலிட, நோய்நிற்கும். சயித்தியத்தால் உண்டாகிற செவிடும் நீங்கிவிடும்.

*In Tooth-ache.* பல்நோவுக்கு.—பஞ்சியை, லாடனத்தில் நனைத்து, பொத்தை விழுந்திருக்கிற பல்லிலிட, நோய் சற்றே தணியும். அபினியை மாத்திரை செய்து பற்சந்தில் வைக்கலாம்.

*In Rheumatism.* கீல்வாதரோகத்துக்கு.—௩- கிறேன் அபினி ; ௧- கிறே. இபிகாக்; ௫- கிறே. பொட்டிலுப்பு; இவைகளைச்சேர்த்து. உ- ௬ - மணிநேரத்துக்கொருதரம், கொடுத்துக்கொண்டு வந்தால், மூட்டுநோய் குணமாகும்.

*In Lumbago.* இடுப்பு வலிக்கு.—உ-திரா. லாடனம் ; ௧- திரா. நவச்சார ஜெயநீர் (Liq. Ammoniæ), ௬ - திரா. எரிவண்டு திரவம் (T. Cantharidis), ௧௰- அவு. சவுக்காரத்தயிலம், (Soap Liniment), இவைகளைக் கூட்டி, தயிலமாக்கி, இடுப்புமேல தேய்த்தால், வேதனை நீங்கும்.

*In Dysentery.* சீதபேதி ரோகத்துக்கு.—ரசபஸ்பம், அபினி, இபிகாக் (Ipecac.) இம் மூன்று சரக்குகளையும் சேர்த்துக்கொடுத்தால், சீதபேதியைக் கண்டிக்கும்,

குன்மம், வாதம், செவிநோய், பல்லின்வலி, பேதி, மந்தம், அஸ்திநோய், சிநசம், இந்நோய்களை அபினிபோக்குமென்று, பதார்த்தகுணசிந்தாமணியில், கண்டிருக்கின்றது.

ஆயுள் வேதியர், அபினியை மாத்திரையாகவும், லேகிய மாகவுஞ் செய்து உபயோகிக்கிறார்கள்.

கட்டுவாதிமாத்திரை. செய்முறை.—ஜாதிக்காய், ஜாதிபத்திரி, மாசிக்காய், கடுக்காய்ப்பூ, சீரகம், அதிவிடயம், இலவங்கப்பூ, வெந்தயம், அபினி, கசகசா, கோரோஜனம், வகை ௪-க்கு- விராகனிடை ௧- இவைகளை முலைப்பால்விட்டரைத்து, பிளகுபரிமாணம், உண்டைசெய்து நிழலில் உலர்த்திவைத்துக்கொண்டு, அதிசாரம், சீதபேதி இவைகளுக்கு, தேனிலாவது வெண்ணெய்யிலாவது சேர்த்து, கொடுத்துக்கொண்டு வருகிறார்கள்.

இந்த முறையில், ஒருமாத்திரையில் இவ்வளவு அபினியிருக்குதென்று நிதானிப்பது கடினம் ; மெத்தக்கொஞ்சமாய் இருப்பதற்குச் சந்தேகமில்லை. அபினியை எப்போதும் அளவிட்டுக் கொடுக்கவேண்டியது. மேலும் புத்தியில் சிறந்த இங்கிலீஷ் வைத்தியர்கள், மாசிக்காய், கடுக்காய் இவைகளுக்குப்பதிலாய், இவைகளிலிருக்கிற டானிக் ஆஸிட் (Tannic Acid), காலிக் ஆஸிட் (Gallic Acid), என்கிற துவர்ப்பு சத்துகளை அபினியோடு சேர்த்து கொடுக்கிறார்கள்; இதுவுமல்லாமல் ஜாதிக்காய், ஜாதிபத்திரி, சீரகம், கிராம்பு இவைகளுக்குப் பதிலாய், இவைகளின் தயிலத்தை இறக்கி உபயோகப்படுத்துகிறார்கள். இவ்விதமாய் ஒத்திட்டுப்பார்த்தால், இங்கிலீஷ் அவுஷதங்களுக்கும், தமிழ் அவுஷதங்களுக்கும் பேதமிராது ; செய்முறைகளில் மாத்திரம் பேதம் அகப்படும்.

சிறுபிள்ளைகளுக்கு கட்டுவாதிமாத்திரை செய்முறை.—ஜாதிக்காயைத் துளைந்து, ௧- பணவிடை அபினியை அதில் வைத்து, மஞ்சளால் மெழுகு செய்து, புடமிட்டு, வெந்தபிறகு, மஞ்சளை நீக்கி, முலைப்பால் விட்டு மைபோலரைத்து, உளுந்து பரிமாணம் மாத்திரை செய்துவைத்து கொண்டு. குழந்தைகளுக்கு, முலைப்பாலில் உரைத்துக்கொடுக்கிறார்கள். இதுவும் தகுதியானதுதான் ; ஆனால் சில குழந்தைகளுக்கு அதிகபோதையை உண்டாக்கின்றது.

அபினியை வெங்காயத்தில வைத்துச் சுட்டெடுத்து, மாத்திரை செய்துக்கொடு ப்பதும் உண்டு.

அபினியை பலவிதமாக உபயோகிக்கலாம் ; எவ்விதமாய் உபயோகித்த போதி லும், வயதுக்குத்தக்கபடி, அளவை திறுக்கிட்டுக் கொடுக்கவேண்டியது.

**ARMORACIA.** *Horse-radish.* Recent root.

ஆர்ஸ் ராடிஷ். (பச்சைக்கிழங்கு.)

இந்தக் கிழங்குக்கு, சருமத்தைச் சிவப்பித்து, கொப்பளிக்கச் செய்கிற குணமு ண்டு ; எரிச்சலையுந்தரும். உள்ளுக்குக் கொடுத்தால், உஷ்ணிக்கும் ; வாயில்போட்டால், ஜலஞ்சுரக்கும் ; மூத்திரத்தை அதிகப்படுத்துகிற குணமுண்டு. இதை வெந்நீர்க்கஷா யமாகவும், பாவனத்திரவருபமாகவுஞ்செய்து, உபயோகிக்கப்படும்.

இதை, இப்போது மெத்த உபயோகப்படுத்துகிறதில்லை.

**SINAPIS.** *Mustard.* Seeds.

ஸினெபிஸ். மஸ்டர்ட். கடுகு. (வித்து.)

PROP. குணங்கள்.—இங்கிலீஷ் சாஸ்திரத்தில், கடுகில் கருங்கடுகு, வெண்க டுகு என இரண்டுசாதிகளுண்டென்று, கண்டிருக்கின்றது ; இதன்றியில் நாட்டுக்கடுகு, மலைக்கடுகு, சிறுகடுகு என மூன்று சாதிகளுண்டு. சீர்மையில் கருங்கடுகுத்தூளோடு, வெ ண்கடுகுத் தூளுங்கலந்து விற்கப்படும் ; அதில் தயிலமில்லாமலிருக்கும்.

ACTION. Emetic, Stimulant, Rubefacient, Diuretic.

செய்கை.— வமனகாரி, உஷ்ணகாரி, ஷோணகாரி, மூத்திரவர்த்தனகாரி.

USE. In dyspepsia, dropsy, &c. *Externally* the fine powder of the seed is applied as a poultice, to the soles of the feet, in typhus, and comatose affections.

உபயோகம்.—கடுகைக் கொஞ்சமாய்க் கொடுத்தால், ஜீரணத்தை அதிகப்படுத் தும் ; வாயுவைக்கண்டிக்கும் ; சூட்டை எழுப்பும்: அதிக அளவில் கொடுத்தால், வாந்தி யாகும். இது குமட்டலும் ஆயாசமும் இல்லாமல், அதிதீவிரத்தில் வாந்தியையுண் டாக்குவதால், நஞ்சுண்டோருக்குக் கொடுத்து, வயிற்றிலிருக்கிற நஞ்சை வெளிப்படுத் த, இது தகுதியான பதார்த்தம். கடுகை முழுசாய் வித்தாகவேகொடுத்தால், உஷ்ணித் துபேதியாகும். கடுகைஅரைத்து துணிமேல் தடவி, கால்களுக்கும், கைகளுக்கும்போ ட்டால் சூட்டைஎழுப்பும் : நோயிருக்கிறஇடத்தில் போட்டால், உள்ளேயிருக்கிற நோ யைக்கிரகித்து, வேதனையைத்தணிக்கும். மார்பு, வயிறு, தொண்டை, இவைகளில் கா ணுகிறரோகங்களுக்கு, கடுகை அரைத்துப்போடுவது வழக்கம். துரைகள், கடுகை காடி விட்டுக்கலந்து போஜனபதார்த்தங்களோடு சேர்த்துக்கொள்ளுகிறார்கள் ; நமதுவீடு களில் கறிதாளிக்க உபயோகமாகின்றது ; அதிகமாய் வறுத்தால், அதிலிருக்கிறசத்து கெட்டுப்போகும். அரைத்தகடுகை, துணிமேல்தட்வி, கால்கெண்டைச்சதைமேல்போ ட்டால், சுரம் முதலிய ரோகங்களில் காணுகிற மயக்கத்தையும், தோஷகுணத்தையும் ஹரிக்கும். கடுகை விடாமல்கொடுத்தால், மூத்திரம் அதிகப்படும்.

DOSE. ʒj. to ℥ss.

ஔ. அளவு.—க - கிராம் முதல், ௫ - அவு. அளவுக்குக்கொடுக்கலாம். உ - ௩ - [illegible] அளவு [illegible] ரோகத்துக்கு. [illegible] உ - அவுன்ஸ் [illegible]

நடவைகொடுக்கலாம். க - உ - டேபில்ஸ்பூன் (Tablespoon) என்றும் கரண்டிஅள வுந்து, கா - அல்லது, அ - அவு. வெதவெதன்று இருக்கிறஜலத்தில், கரைத்துக்கொடுக்க, வாந்தியாகும்.

**Cataplasma Sinapis.** *Mustard Poultice or Sinapism.*

ஸின்னெபிஸம். மஸ்டார்ட் போல்டீஸ். கடுகுபிஸ்டம்.

PREP. (Mustard, Linseed Meal ā ā ℥ijss or q. s. Boiling water f℥x.)

செய்முறை.—உ௫- அவு. கடுகுத்தூள், உ௫ - அவு. அலிவிவிரைத்தூள், அல்லது இவைகளைத் தேவையானதை எடுத்துகொண்டு, ௰ - அவு. கொதிக்கக் காய்ந்த வெந்நீரில் கொஞ்சங்கொஞ்சமாகப் போட்டுக்கிளறி, போல்டீஸ் செய்துகொள்ள வேண்டியது.

ரோகங்களில், கை, கால் சில்விட்டு. சீதளித்துவிட்டால், கடுகுபோல்டீசை, கால்களின்மேல்போட்டுக் கட்டினால், சூட்டைஎழுப்பும். சீதபேதி, வயிற்றுவலி, இவைகளுக்கு இதை வயிற்றின்மேல் போடலாம். கடுகுடன் மிளகு, முருங்கப்பட்டைரசம்,இவைகளைச்சேர்த்தால், கடுகின் காரம் அதிகப்படும். கடுகை அரைத்து, மேல்போட்டு, எரிச்சலையுண்டாக்கிறவரையில் வைத்திருந்து, பிறகுஎடுத்து விடவேண்டியது ; நேரப்பட வைத்திருந்தால், போட்டவிடம் புண்ணகும். குழந்தைகளுக்கு, கடுகை அரைத்துப்போடவேண்டிய திருந்தால், கடுகுதூளுடன், அரிசிமாவையாவது, கோதுமை மாவையாவதுச்சேர்த்து, போல்டீஸ்செய்து, துணிமேல்தடவி, அதின்மேல் சல்லாத்துணியைப் போட்டுமூடி, வியாதியுள்ளவிடத்தின்மேல் போட்டுச் சற்றுநேரம் வைத்திருந்து பிறகு எடுத்து விடவேண்டியது.

**LINUM USITATISSIMUM.** *Linseed.* Flax. Linseed Oil. Linseed Meal.

லின்ஸீட். அலிவிவிதை. (வித்து, நார், தயிலம், மாவு.)

PROP. குணங்கள்.—இதை ஆளிவிரை, ஆழிவிரை, சிறுசானல்விரை என்றுஞ்சொல்லுகிறார்கள் ; தக்ஷிணிபாஷையில் அல்ஷிகெபீன்ஜ என்று பெயர். இதற்கு உமாபீஜம், அதஸிபீஜம் என்று சம்ஸ்கிருதத்தில் சொல்லப்படும். ஆளிவிரை என்று வேறுருவிதை இருக்கின்றது ; அதுசிறுசாய் சிவந்திருக்கும் ; அதிலும் அலிவி விதையைப் போல் குழகுழப்பானச் சத்து இருக்கின்றது.

அலிவிச்செடி சுமார் க௫ - அடி உயரம் வளரும் ; அதிலிருந்தெடுக்கிற நாரை, கேம்பிரிக், லினன் என்னும் நார்த்துணிகள் நெய்யப்படுகின்றன. இந்நாரால் நெய்த வஸ்திரங்களைத் தரித்துக்கொண்டால், தேக சூட்டை கிரகித்து, தேகத்தைக் குளிர்ச்சி செய்யும். சரீரம் வியர்க்கும்போதும், சீதளகாலத்திலும், இந்த வஸ்திரங்களை உடுத்திக்கொண்டால், குளிர்ச்சி அதிகமாகி, நடுக்கலுண்டாகும். லிண்ட் (Lint) என்கிற ரணச்சீலை அலிவிச்செடி நாரால் செய்யப்படுகிறது ; இதின் முதருநாரைப் பிருவப்படுத்தினால், டோ (Tow) என்னும் ஓர்வித சணம்புநார் ஆகிறது ; ரணமுதலியவைகளுக்கு, மாவுகிளறி கட்டுகிறதற்குப் பதிலாய், இந்த நாரை உபயோகிக்கலாம். அலிவிவிதையில்பசையும், எண்ணெய்யும் இருக்கின்றன; அலிவிவிதை மாவுக்கு, இங்கிலீஷில் "லின்ஸீட்மீல்" என்று சொல்லப்படும். அலிவிபிண்ணாக்கை ஊட்டினால், மாடுகள் கொழுக்கும், அலிவிவிரையும் அதிலிருந்து எடுக்கிற தயிலமும் ரோகச் சிகிச்சைகளுக்கு உப

யோகப்படுகின்றன ; விதையைச்செக்கில் ஆட்டினால் தயிலம் இறங்கும் ; இதற்கு சிக் கிறத்தில் உலருகிற குணமிருப்பதால், இதை வன்னங்களில் சேர்த்து அரைத்து உப யோகப்படுத்துகிறார்கள் ; இந்த அலிஸி எண்ணெய்யை இவ்விடத்தில், "அகத்தி எண் ணெய்யென்று" சாதாரணமாய் சொல்லப்படும். இதை உள்ளுக்கு உபயோகப்படு த்துகிறதில்லை.

ACTION. Emollient, Demulcent.

செய்கை.—ஸினிக்தகாரி,

USE. உபயோகம்.—விதையைவெந்நீர்க்கஷாயஞ்செய்துஉபயோகிக்கலாம்.

**Infusum Lini Compositum.** *Compound Infusion of Linseed.*

கம்பவுன் இன்பியுஷன் ஆவ் லின்ஸிட். அலிஸிவிதை மிஸ்ரம வெ ந்நீர்க் கஷாயம்.

PREP. (Linseed bruised ℨvj., Liquorice root sliced ℨij., Boiling Distilled water Oj.)

செய்முறை.—௬ - திராம் இடித்த அலிஸிவிரை ; உ - திராம் இடித்த அதிம துரம் ; இவைகளை க - பையின்ட் கொதிக்கக்காய்ந்த நிநீரில்போட்டு மூடி, ச - மணி நேரம் அனல்பட வெதுப்பி, வடிகட்டிக்கொள்ளவேண்டியது.

ACTION. செய்கை.—ஸினிக்தகாரி.

USE. உபயோகம்.—இருமல், கிரகணி, சீதபேதி, கல்லடைப்பு, நீர்ச்சுருக்கு, வெள்ளை, இவைமுதலிய ரோகங்களுக்குக் கொடுக்கலாம்.

DOSE. f℥jss.

ஒ. அளவு.—கஉ- அவுன்ஸ்வீதம், தேவையானபோதெல்லாம் சாப்பிடலாம்.

IN STRANGURY. ௱ - அவு. அலிஸிவிதை வெந்நீர்க்கஷாயம் ; உ - திராம் ஆலிவ் ஆயல் (Olive Oil); க - முட்டையின் மஞ்சட்கரு ; க - அவு. சருக்கரைப்பாகு ; இவைகளைக் கூட்டிக்கொள்ளவும். இதில்ஒரு பெரிய கரண்டிவீதம், நீர்ச்சுருக்கு ரோக த்துக்குக் கொடுத்தால், வியாதியைக் கண்டிக்கும்.

**Oleum Lini.** *Linseed Oil.*

லின்ஸிட் ஆயல். அலிஸிவிதை எண்ணெய். அகத்தி எண்ணெய்.

வித்திலிருக்கிற தயிலத்தை செக்கிலாட்டியாவது; ஜலத்தில்போட்டு தீயிட்டெரித் தாவது, எரிக்காமலாவது எடுக்கப்படும். தீயிட்டெரித்து வடிக்கிற எண்ணெய், மஞ்சள் நிறமாயாவது, அல்லது கறுத்தாவது, வெகுட்டலாயும், துர்வாசனையாயும் இருக்கும். தீயிட்டெரிக்காமல் வடிக்கிற எண்ணெய், வெளுத்து மெத்தவாசனையில்லாமலும், மெத் தவெகுட்டல் இல்லாமலும் இருக்கும்.

ACTION. Emollient, Cathartic.

செய்கை.—ஸினிக்தகாரி, விரேசனகாரி.

USE. உபயோகம்.—இந்தத்தயிலத்தை மேலுக் குபயோகப்படுத்தப்படும். அலிஸிஎண்ணெய் ௰உ - அவுன்ஸ் ; சுண்ணாம்பு ஜலம் எ - அவு. இவைகளைச்சேர்த்து,

தயிலமாக்கி, நெருப்பு, வெந்நீர் இவைகள்பட்டு உண்டாகிற ரணங்களுக்குந் தடவலாம். பஞ்சைத் தயிலத்தில் நனைத்து, ரணங்களுக்குப் போடலாம். இந்தத்தயிலத்துக்கு. "காரன் ஆயல்" (Carron Oil) என்றுபேர்.

Dose. f℥iv.—f℥j.

ஔ. அளவு.—ச - திராம் முதல், க - அவுன்ஸ் அளவுக்குக்கொடுக்கலாம்.

**Cataplasma Lini.** *Linseed Meal Poultice.*

லின்ஸீட்மீல் போல்டீஸ். அலிவிவிதை மாவு போல்டீஸ்.

Prep. (Boiling Water f℥x. Linseed powdered ℥ivss.)

செய்முறை.—ய - அவு. கொதிக்கக்காய்ந்த ஜலத்தில், சற - அவு. அலிவிவிதை மாவைக்கலந்து, பக்குவப்படுத்திக்கொள்ள வேண்டியது ஜலமும் மாவும், தேவையானதைச் சேர்த்தும், செய்துகொள்ளலாம்.

Use. உபயோகம்.—கட்டிகளுக்கும், ரணங்களுக்கும் உபயோகிக்கலாம்; எரிச்சலைத் தணித்துவிடும்.

**Arabis Chinensis.**

ஆளிவிதை.

இந்தவிதை சிறுசாய் சிவந்து நீண்டிருக்கும்; இதை எலுமிச்சம்பழரசம்விட்டு அரைத்து, மேலுக்குப் பத்துபோடுகிறதுண்டு.

**MALVA.** *Malva Sylvestris. Common Mallow.*

**ALTHÆA.** *Althœa Officinalis. Marsh Mallow.*

**ABUTILON INDICUM.** *Country Mallow.*

காமன் மாலொ. மார்ஷ் மாலொ. கன்டிரிமாலொ. துத்திச்செடி.
(இலை. வேர்.)

Prop. குணங்கள்.—துத்திச்செடியில் அனேகசாதிகளுண்டு; தேசத்துக்குத்தக்கபடி வித்தியாசப்படும். துத்தியிலையில் குழகுழப்பு இருக்கின்றது.

Action. Demulcent.

செய்கை. ஸினிக்தகாரி.

Use. உபயோகம்.—இலையை ஜலத்தில்போட்டுக் காய்ச்சி, நோயிருக்கிறஇடத்தில் ஒற்றிடம்கொடுத்தால், நோயதணியும். பச்சையிலையையாவது, உலர்ந்தஇலையையாவது, கஷாயமாய்க் காய்ச்சி, பாலும்சருக்கரையுஞ்சேர்த்து,சாப்பிட்டுக்கொண்டுவந்தால், மேகச்சூட்டைத் தணிக்கும். துத்தியிலையுடன் சிறுபயரும், வெங்காயமுஞ்சேர்த்து கூட்டுக்கறிசெய்து சாப்பிட்டால், மலத்தை உதைக்கும். துத்தியிலையை வதக்கி, வீக்கங்களுக்குக் கட்டலாம். சாதத்துடன்அரைத்து, பருவுகளுக்குக் கட்டினால், சீக்கிரத்தில் பழுத்துஉடையும். துத்திவேரை வெந்நீர்க்கஷாயஞ்செய்து, சுரத்துக்குக் கொடுக்கலாம். துத்திவிதைக்கு மலத்தைத்தள்ளுகிற குணமுண்டு.

**Mistura Althææ.**

மிஸ்டியுரா ஆல்தியி. துத்திவேர் கஷாயம்.

Prep. (Althæa-root ℥iv.; Raisins stoned ℥ij., Water Ov.)

செய்முறை.—ச - அவு. துத்திவேர்; உ - அவு. விரையில்லாத திராக்ஷப்பழம்;

இவைகளை ு - பையிண்ட் ஜலத்தில்போட்டு, ௩ - பையின்டுக்குச் சுண்டக்காய்ச்சி, வடிகட்டி, அசையாமல் வைத்தால், வண்டல் அடியில்படிந்துவிடும் ; பிறகு தெளிவாயிறுத்துக்கொண்டு, உபயோகித்துக் கொள்ளவேண்டியது.

இந்தக்கஷாயம், மதுரமாயிருக்கும். நீர்ச்சுருக்கு, தாகம், இவைகளுக்குக் கொடுக்கலாம். ஒருதினத்துக்கு க - உ - பையின்ட் அளவுக்குச் சாப்பிடலாம்.

**Syrupus Althææ.** *Syrup of Marsh-Mallow.*

ஸிரப் ஆவ் மார்ஷ்மாலே. துத்திவேர் பாணிதம்.

Prep. (Marshmallow-root dried and sliced ℥iss. ; Cold Dist illed Water Oj. Sugar lbiij. Rectified Spirit ʒss. to each f℥j.)

செய்முறை.—௩½ - அவு. துத்திவேரை, உலர்த்தித்துண்டித்து, க- பையி. குளிர்ந்தஜலத்தில்போட்டு, ௰உ - மணிநேரம் ஊறவைத்து, பிழிந்து துணியில் வடிகட்டி, பிறகு ௩ - பவுன் அல்லது தண்ணீர் இடைக்கு இரண்டத்தனையாவது சருக்கரையைச்சேர்த்து, சிறுதீயிட்டு எரித்துக்கரைத்துக் கொள்ளவும். பாணிதம் குளிர்ந்தபிறகு, க - அவு. பாணிதத்துக்கு, ௫ - திராம் வீதம் ரெக்டிபைட் ஸ்பிரிட்என்னும் சாராயத்தைச் சேர்த்துக்கொள்ளவேண்டியது.

Dose. f℥j. to f℥iv.

ஔ. அளவு.—க - முதல், ச - திராம் அளவுக்குக் கொடுக்கலாம். இது இருமலைத்தணிக்கும்.

**GOSSYPIUM.** *Gossypium herbaceum.* Raw Cotton.

காட்டன். பருத்திச்செடி. (பஞ்சு).

பருத்தியிலையில் குழகுழப்பு இருக்கும்; பருத்திக்கொட்டையிலிருக்கிற தயிலத்தை, பலவிதமாய் உபயோகப்படுத்துகிறார்கள். மாடுகளுக்குப் பருத்திக்கொட்டையைத்தின்னக்கொடுத்தால், கொழுத்துச் சதைபிடிக்கும். பருத்திப்பஞ்சை, நெருப்பு, வெந்நீர் இவைகள்பட்டு காணுகிற ரணங்களுக்குப்போட்டால், ஆறும்; காரமுள்ள கந்தகத்திராவகம், பொட்டிலுப்புத் திராவகம், இவைகளைச் சரியிடையாய் சேர்த்து, அதில், சுத்திசெய்த பருத்திப்பஞ்சைப்போட்டு, உ - நிமிஷம்வரையில் ஊறவைத்து, பிழிந்து சுத்தஜலத்தில் நன்றாய்க்கழுவி, அதிக சூடுபடாமல், வெகுஜாக்கிரதையாய் உலர்த்திக்கொள்ளவேண்டியது ; சூடு அதிகமானால், பஞ்சுபற்றிக்கொள்ளும். இப்படிச்செய்த பஞ்சுக்கு, "கன் காடன" (Gun Cotton) என்றுபெயர். இந்தப்பஞ்சை, ஸல்பியூரிக் ஈதர் (Sulphuric ether) என்னும் திராவகத்தில் போட்டால், கரைந்துவிடும். இதற்கு, "கலோடியன்" (Collodion) என்றுபெயர். வெட்டு காயங்களுக்கு, கலோடியன் என்னும்மருந்தைக் கோழிஇறகால் தடவினால்,சதையைக் கூட்டிவைத்து, சீக்கிரத்தில் காயத்தை ஆற்றும். ரணங்களுக்குந்தடவினால், காற்றுப்படவொட்டாமல் காக்கும். அட்டைக்கடிகளுக்குத் தடவினால், ரத்தம்வடிதல் நிற்கும்.

**TEA.**

௨. தேயிலே. (இலே).

தேயிலே சீனதேசத்தில் விளைகின்றது. இந்தஇலேயில் பச்சை, கறுப்பு என இரண்டுஇனங்களுண்டு. தேயிலேயில் துவர்ப்பு குணமும், கொஞ்சம் உஷ்ணகிரிகுணமும்

உண்டு. நரம்புகளில் வியாபித்து, தெம்பைக்கொடுத்து, ஆயாசத்தைப் போக்கும். முக்கியமாய்ப்பச்சைநிறத் தேயிலையானது, நித்திரையைப் போக்கடிக்கும் தேத்தண்ணீர், ரத்தவோட்டத்தைக் குறைத்து, சாராயம்குடித்துக்காணுகிற மயக்கத்தையும், தேகம் அலுத்துக்காணுகிற உறக்கத்தையும், நீக்குதென்று சிலருடைய சித்தாந்தம். வியாதிகளில் இளைப்பையாற்ற இதைக்கொடுக்கலாம். தேத்தண்ணீரைக் காரமாய் செய்துக் கொடுத்தால், சிலவேளைதெம்பைக் கொடுக்கும், சிலவேளை சோம்பலைத் தரும்.

**CITRUS BIGARADIA.** *Citrus Vulgaris. Seville or Bitter Orange.*
Rind; Flower; Oil.

*பிட்டர் ஆரன்ஞ் புளிப்புநாரத்தன்? கிச்சிலி? (பழத்தோல். புஷ்பம். தயிலம்).*

**Aurantii Cortex.** *Rind of the Bitter Orange.*

*ரின்ட் ஆவ் தி பிட்டர் ஆரன்ஞ். கிச்சிலிப் பழத்தோல்.*

கிச்சிலித்தோல் கசப்பாயும், வாசனையாயும் இருக்கும். மருந்துக்குபயோகப்படுத்தும்போது, உள்ளேஇருக்கிற சவ்வைஎடுத்துவிடவேண்டியது. இந்தத்தோலை லேகியமாயும், பாணிதமாயும் வெந்நீர்க்கஷாயமாயும் பாவனத்திரவமாயும் செய்துஉபயோகப்படுத்தப்படும்.

**Confectio Aurantii.** *Confection of Orange Peel.*

*கன்பெக்ஷன் ஆவ் ஆரன்ஞ் பீல். கிச்சிலித்தோல் லேகியம்.*

PREP. (Fresh rasped Orange Peel ℔j., Sugar ℔iij.)

*செய்முறை.*—உலராமல் அப்போது பிழிந்தெடுத்த ௧-பவுன் கிச்சிலித்தோலை, கல் உரலில்போட்டு, மர உலக்கையால் இடித்து, ௩-பவு. சருக்கரையைச் சேர்த்து இரண்டும் மிஸ்ரமமாகிறவரையில் இடித்துக்கொள்ளவேண்டியது.

ACTION. Stomachic.

*செய்கை.*—ஜடராக்கினி வர்த்தனகாரி. தீபனத்தை யுண்டாக்கும்.

USE. *உபயோகம்.*—பலகாரி. சுரணங்களையும், பேதிசுரணங்களையும், இதில் அநுபானம் செய்துகொடுக்க, மெத்த தகுதியானது.

**Syrupus Aurantii.** *Syrup of Orange Peel.*

*ஸிரப் ஆவ் ஆரன்ஞ்பீல். கிச்சிலிபழத்தோல் பாணிதம்.*

PREP. (Dried bitter Orange Peel ℥iiss., Boiling Distilled waterOj., Sugar ℔iij.)

*செய்முறை.*—௨½-அவு. உலர்ந்த கிச்சிலித்தோலை, ௧-பையின்ட் கொதிக்கக் காய்ந்த நீரில்போட்டு மூடி, ௰௨-மணிநேரம் வெதுப்பி, பிழிந்து ஜலத்தையிறுத்து, ௰-நிமிஷம் வரையில் காய்ச்சி, வடிகட்டிக்கொண்டு, ௩-பவு. சருக்கரையைச் சேர்த்து, சிறுதீயிட்டெரித்துக் கரைத்துக் கொள்ளவும்.

ACTION. Stomachic.

*செய்கை.*—தீபனத்தை அதிகப்படுத்தும்.

USE. *உபயோகம்.*—இதை வெகுட்டலையுடைய மருந்துகளோடு சேர்த்துக்கொடுக்கலாம்.

**Infusum Aurantii Compositum.** *Compound Infusion of OrangePeel.*
கம்பவுன் இன்பியுஷன் ஆவ் ஆரன்ஞ் பீல். கிச்சிலித்தோல் வெந்நீர்க்கஷாயம்.

PREP. (Dried Orange Peel ℥ss., Lemon Peel ʒij., Bruised Cloves ʒi., Boiling Aq. Dest. Oj.)

செய்முறை.—ரு - அவு. உலர்ந்த கிச்சிலிப் பழத்தோல் ; உ - திரா. எலுமிச்சம்பழத்தோல் ; க - திரா. பொடித்தலவுங்கம்; இவைகளை, க - பையி, கொதிக்கக்காய்ந்த நீரில்போட்டு, மூடி, வ - மணிநேரம் ஊறவைத்து, வடிகட்டிக்கொள்ளவும்.

ACTION. Warm Tonic.

செய்கை.—பலகாரி.

USE. உபயோகம்.—திராவகம், உப்பு முதலிய அவுஷதங்களை இதில் அனுபானித்துக்கொடுத்தால், இனிப்பாய் இருக்கும். கரு - அவு. வீதம் தினத்துக்கு, உ - ரூ-தடவை கொடுக்கலாம்.

**Tinctura Aurantii.** *Tincture of Orange Peel.*
டிங்சர் ஆவ் ஆரன்ஞ்பீல். கிச்சிலித்தோல் பாவனத்திரவம்.

PREP. (Dried bitter Orange Peel ℥iijss. ; Proof Spirit Oij.)

செய்முறை.—ருரு - அவு. கிச்சிலிப்பழத்தோலை, உ - பையி. புருவ்ஸ்பிரிட் என்னும் சாராயத்தில்போட்டு, எ-நாள் ஊறவைத்து, பிசைந்து வடிகட்டிக்கொள்ளவும்.

ACTION. Tonic.

செய்கை.—பலகாரி.

USE. உபயோகம்.—இதைவேறே மருந்துகளோடு கலந்து கொடுக்க உதவும்.

ஒ. அளவு.—க - முதல், ச - திராம், அளவுக்குக் கொடுக்கலாம்.

**Aurantii Floris Aqua.** *Orange Flower Water.*
ஆரன்ஞ் பிளவர் வாடர். கிச்சிலிப்பூத்நீர்.

PREP. (Orange flowers ℔x., Proof Spirit ℥vij., Water Cij. Distil Cj.)

செய்முறை.—ய - பவு. கிச்சிலிப்பூவும், எ - அவு. புருவ்ஸ்பிரிட்என்னும் சாராயமும், உ - காலன் ஜலத்தில்போட்டு, வாலையிலிட்டு காய்ச்சி, க - காலன் ஜலத்தை இறக்கிக் கொள்ளவேண்டியது.

**Aurantii Oleum.** *Oil of Orange Flowers. Oil of Neroli.*
ஆயல் ஆவ் ஆரஞ்பிளவர்ஸ். கிச்சிலிப்பூ தயிலம்.

PREP. செய்முறை.—கிச்சிலிப்பூவை, வாலையிலிட்டெரித்து, தயிலத்தை இறக்கப்படும்.

ACTION. Stimulant, Antispasmodic.

செய்கை.—உஷ்ணகாரி, அங்காகர்ஷண நாசகாரி.

USE. உபயோகம்.—பிரான்ஸ்தேசத்தில், கிச்சிலிப்பூ நீரை, வாதரோகங்களுக்கு, மெத்தஉபயோகப்படுத்தப்படும். நோயைத் தணிக்கும்; வலியை நிறுத்தும்.

ஒ. அளவு.—க - முதல், உ - அவு. அளவுக்குக்கொடுக்கலாம்.

**Citrus Aurantium.** *Common or Sweet Orange.* The Fruit.

ஆரஞ்சி. நார்த்தை. கிச்சிலி. கொளஞ்சி. ஆரஞ்சி. தித்திப்பு நாரத்தை. நாரன்ஞ். (பழம்.)

AURANTII FRUCTUS. *The fruit of the Sweet Orange.*

ஆரஞ்சிப்பழம்.—ஆரஞ்சிப்பழமானது, இனிப்பாய் இருக்கும் ; ரசம் குளிர்ச்சியைத் தரும் ; இளைப்பை ஆற்றும் ; ரோகிகளுக்குக் கொடுக்கலாம். ஆரஞ்சிப் பழத்தோலும், பூவும், அதில் இருந்து எடுக்கிற தயிலமும், மேற்கண்ட புளிப்பு நாரத்தையைப்போலவே, உபயோகப்படுகின்றது. சுரம் முதலிய ரோகங்களில், தாகத்தைத் தணிக்கக் கொடுக்கலாம். ஜலத்தைப்போல் வயிற்றை நிரப்பாமல், தாகத்தைமாத்திரம் தணிக்கும்.

**Citrus Medica.** *The Citron.*

ஸிட்ரன். கொடிநாரத்தை. (பழம்.)

கொடிநாரத்தன் பழத்தில் மெத்தரஸமிராது ; ரசத்தில் அதிகப்புளிப்பும் இராது. பழத்தின் தோலில் இருந்து, தயிலத்தை எடுக்கப்படும். எலுமிச்சம்பழரசத்தை, உபயோகப்படுத்துகிறத் தன்மையாய், இதையும் உபயோகப்படுத்தலாம்.

**Citrus Limonum.** *The Lemon.* The Fruit. The Juice of the Fruit. Lemon Peel. Oil.

லிமன். எலுமிச்சன். ஜம்பீரம். (பழம். ரசம். பழத்தின்தோல். தயிலம்.)

PROP. குணங்கள்.—எலுமிச்சம்பழத்துக்கு, மதுரமானவாசனையுண்டு ; பழரசத்திலிருக்கிற சத்துக்கு, ஸிட்ரிக் ஆஸிட் (Citric Acid) என்றுபேர். எலுமிச்சம்பழத்தில், அனேக ஜாதிகளுண்டு ; லைம் (Lime) என்பதும் ஒருசாதி எலுமிச்சன். நாள்பட்டால் பழம் கெட்டுப்போகும்.

*Limonum Cortex. Lemon Peel.* லிமன்பீல். எலுமிச்சம் பழத்தோல்.—இந்தப்பழத்தின் தோலானது, தங்கநிறமாய் இருக்கும்; உலர்ந்தால் கறுத்துப்போகும். இதற்குத் துவர்ப்பும் வாசனையும்உண்டு. இந்தத்தோல் அனேக கஷாயங்களோடும், டிங்சர்களோடும், சேர்க்கப்படும்.

*Limonum Oleum. Oil of Lemons.* ஆயல் ஆவ் லிமன்ஸ். எலுமிச்சம்பழத் தயிலம்.—இந்தத் தயிலத்தை, பட்டிகட்டி இறக்கப்படும். இதுபரிமளவாசனையோடு காரமாய் இருக்கும்.

*Limonum Succus. Lemon Juice.* லிமன் ஜூஸ். எலுமிச்சம்பழரசம்.—பழத்தின் மேல்தோலைப்போக்கி, விதையைநீக்கி, ரசத்தை எடுக்கப்படுகின்றது. இது கலங்கலாய் இருக்கும் ; மெத்த புளிப்புண்டு ; இனிப்பான வாசனையும், ருசியும் உண்டு. இந்த ரசம் கெட்டுப்போகும் ; ஆனால், கொஞ்சம் வாதுமை நெய்யை ரசத்தின்மேல் வார்த்துவைத்தால், நாட்பட இருக்கும்.

ACTION. Refrigerant, Antalkaline, Antiscorbutic.

செய்கை.—சீதளகாரி, உப்புகளை முறித்துவிடும் ; மேகத்தைக் கண்டிக்கும்.

Use. In febrile and inflammatory diseases, Acute Rheumatism, Scurvy, Vomiting, &c.

உபயோகம்.—சுரம் முதலிய ரோகங்களில் காணுகிற நாவறட்சிக்கு, எலுமிச்சம்பழரசத்தைக் கொடுத்தால், தாகத்தைத் தணிக்கும். இதை ஷர்பத்செய்துக் கொடுக்கலாம். ஸ்கர்வி என்னும் ஓர்வித மேகரோகத்துக்கு, பழரசம் முக்கியமாய் உபயோகப்படுத்தப்படும். கீல்வாதரோகத்துக்கு, பழரசத்தை, ½ - முதல், ௨ - அவுன்ஸ் வீதம், ஒரு மணிக்கொருதரம் கொடுத்துக்கொண்டு வந்தால், நன்மைசெய்யுமென்று கண்டிருக்கிறது. ½ - அவு. பழரசம், ௫௰ - கிரேன் ஸிட்ரிக் ஆஸிட் (Citric Acid) என்னும் உப்புக்குச் சமனாய் இருக்கும். கஞ்சித்தண்ணீர், பார்லித்தண்ணீர் இவைகளோடு சேர்த்தும் உபயோகிக்கலாம்.

*Lemonade.* லெமனேட். எலுமிச்சம்பழரசக்குடிநீர், அல்லது ஷர்பத், அல்லது பானகம்.—௨ - எலுமிச்சம்பழத்தை அறுத்து, ஒருபையின்ட் (ஒரு புட்டி) வெந்நீரில் போட்டு, ௨ - அவு. சருக்கரையைச் சேர்த்து ஊறவைத்து, ஜலம்குளிர்ந்தபிறகு, வடிகட்டிக்கொள்ளவும்.

*Aerated or Effervescing Lemonade.* லெமனேட்.—௧ - பையின்ட் ஜலத்தில், ௫ - அத்தனை கார்போனிக் ஆஸிட் காஸ் (Carbonic Acid Gas) என்னும் வாயுவை அடைத்து, ௨ - அவு. எலுமிச்சம்பழ பாணிதத்தைச் சேர்த்துக்கொள்ள வேண்டியது.

**Tinctura Limonum.** *Tincture of Lemon Peel.*

டிங்சர் ஆவ் லிமன் பீல். எலுமிச்சம்பழத்தோல் பாவனத் திரவம்.

Prep. (Fresh Lemon peel ℥iijss. Proof Spirit Oij.)

செய்முறை.—௫½ - அவு. எலுமிச்சம்பழப் பச்சைத்தோலை, ௨ - பையி. புரூவ்ஸ்பிரிட் என்னும் சாராயத்தில்போட்டு, ௭ - நாள் ஊறவைத்து, பிறகு வடிகட்டிக் கொள்ளவேண்டியது.

Action. Tonic, Aromatic.

செய்கை. உபயோகம்.—பலகாரி. இதில் தயிலமும், தோலின் சத்தும் இருப்பதால், மெத்த இனிப்பாய் இருக்கும்.

Dose. f℥j.—iij.

ஒ. அளவு.—௧ - முதல், ௩ - திராம் அளவுக்குக் கொடுக்கலாம்.

**Syrupus Limonum.** *Syrup of Lemons.*

ஸிரப் ஆவ் லிமன்ஸ். எலுமிச்சம்பழரசப் பாணிதம்.

Prep. (Strained Lemon juice Oj., Sugar lbijss., Rectified Spirit f℥iiss.)

செய்முறை.—௧ - பையின்ட் பழரசத்தை வடிகட்டி, ௰ - நிமிஷம் காய்ச்சி வடிகட்டி, இத்துடன் ௨½ - பவு. சருக்கரையைச் சேர்த்து கரைத்து, குளிர்ந்தபிறகு, ௨½ - அவுன்ஸ் ரெக்டிபைபிட்ஸ்பிரிட் என்னும் சாராயத்தை விட்டு மிஸ்ரமித்துக்கொள்ளவேண்டியது.

ஒ. அளவு.—௧ - முதல், ௪ - திராம் அளவுக்குக்கொடுக்கலாம்.

## Acidum Citricum. *Citric Acid.*

### ஸிட்ரிக் ஆஸிட். எலுமிச்சம்பழ உப்பு.

PROP. குணங்கள்.—இந்த உப்பால், பழரசத்துக்கு புளிப்பு சுவை உண்டாயிருக்கின்றது. திராக்ஷபழம், புளியம்பழம் முதலியவைகளில் இந்தஉப்பு இருக்கும். இது கற்கண்டு கட்டிகளைப்போல் வெள்ளையாயும், அதிகபுளிப்புள்ளதாயும் இருக்கும்; ஜலத்திலும், சாராயத்திலும் கரைந்துவிடும்.

PREP. (Boiling lemon juice is directed to be saturated with chalk, when carbonic acid is given off and an insoluble citrate of lime formed. This is washed with tepid water, and decomposed by boiling with dilute Sulphuric Acid: Sulphate of Lime is formed, which is insoluble, and Citric Acid remains in solution, and crystallizes on evaporation.)

செய்முறை.—ச - பையி. பழரசம்; சஉ - அவு. அல்லது தேவையான சுத்திசெய்த சீமைச்சுண்ணும்பு, ஈகூ—அவு. அல்லது சுண்ணும்புக்கு வேண்டிய விளாவின கந்தகத்திராவகம். பழரசத்தை கொதிக்கக் காய்ச்சி, தெளியவைத்து, தெளிர்ந்தரசத்தைஇறுத்து, மறுபடியுங்காய்ச்சி, சூடாயிருக்கும்போதே நுரை எழும்புதல் அடங்கி, ரசத்தில் புளிப்பு இல்லாமல் போகிறவரையில், கொஞ்சங்கொஞ்சமாய் சுண்ணும்பைச் சேர்த்து, அடியில் படிகிற வண்டலைஎடுத்து,வெந்நீர்விட்டு,ஜலம் தேட்டையாய் இறங்குகிறவரையில் கழுவி, அடியில் நிற்பதை, பிரஸில்வைத்து பலமாய் அழுத்தி, பிறகு அதை, உ - பையி. நீரில் மிஸ்ரமித்துக்கொண்டு, அதில் கந்தகத் திராவகத்தைக் கொஞ்சம் கொஞ்சமாய் துழவிக்கொண்டேவிட்டுசேர்க்கவும். இவ்விதமாய்ச்செய்தால் அடியில் வண்டலும், மேலே தெளிவான ஜலமும் நிற்கும். ஜலத்தை வடிகட்டிஎடுத்துக்கொண்டு அடியில் நிற்பதைக் குளிர்ந்தஜலம்விட்டுக் கழுவி, மேற்படி ஜலத்தோடு, இந்தஜலத்தையும்சேர்த்து, சிறுதீயிட்டெரித்தால், மேலே உப்பு கட்டும்; அப்போது தீயைவிட்டிறக்கி, அசையாமல் வைத்தால், ஜலங்குளிர்ந்து உப்புகட்டும். இந்தஉப்பை ஜலத்தில் கரைக்கிறதும், மறுபடியும் உப்புக் கட்டவைக்கிறதுமாய், உப்பு துல்லியமாய் ஆகிறவரையில் செய்தால், உப்புசுத்தியாகும்.

ACTION. Refrigerant, Anti-Scorbutic.

செய்கை.—சீதளகாரி, நாவிகரத்த பித்தரோகத்தைக் கண்டிக்கும்.

USE. உபயோகம்.—இந்த உப்புக்கு, எலுமிச்சம்பழரசத்துக்கிருக்கிற குணங்கள் இருக்கின்றன; இதை ஜலத்தில் போட்டுக்கரைத்து சுரங்களில்கொடுத்தால், மெத்தஉபயோகமுள்ளதாயும், இனிப்பாயும் இருக்கும். உய - கிறேன் கார்பொனேட் ஆவ்ஸோடா (Carbonate of Soda) என்னும் உப்புக்கு, கூஜ-கிறேன் ஸிட்ரிக் ஆஸிட், அல்லது ஈஉ - திராம் எலுமிச்சம்பழரசம் வேண்டியது. உய - கிறே. பைகார்பொனேட் ஆவ்ஸோடா (Bicarbonate of Soda) என்னும் உப்புக்கு, யஎ - கிறேன், ஸிட்ரிக் ஆஸிட், அல்லது ச - திரா. பழரசம் வேண்டியது. சிலருக்கு வாந்தியை நிறுத்தும்.

DOSE.—℈j. to ʒj.

ஒ. அளவு—உய - கிறேன் முதல், க - திராம் வரையில் கொடுக்கலாம். அஉ - திரா. பழரச உப்பை, யகு - அவு. ஜலத்தில்விட்டு கரைத்துக்கொள்ளவும்.

**ÆGLE MARMELOS**. *Indian Bael. Bengal Quince.* The bark of the root, and the dried half-ripe fruit.

இண்டியன் பெயில். வில்வம். (வேரின்பட்டை. உலர்ந்த செங்காய்.)

PROP. குணங்கள்.—வில்வக்காய் சிறுசாயும் பெரிசாயும், ஒரு மழுமழுவென் றதாய் இருக்கும்; உள்ளே ௰ - ௰௫ - அறைகளுண்டு; அவைகளில் விதைகளும் பிசிபிசிப்புள்ள பசையும் இருக்கும்; இந்தப்பசை உலர்ந்தால் இறுகிக்கட்டியாய்ப்போகும். இதை ஈரமாயிருக்கும்போது இழுத்தால், நார்போல் நீண்டுவரும். ஒவ்வொரு அறையில், ௬ - முதல், ௰ - விதைகளிருக்கின்றன.

ACTION. Astringent.

செய்கை.—ஸங்கோசனகாரி.

USE. In Dysentery and Diarrhœa.

உபயோகம்.—மலையாள தேசத்தில் வில்வவேரைக் கஷாயஞ் செய்து இருதய த்துடிப்பு, Hypochondriasis, Melancholy முதலிய ரோகங்களுக்கு உபயோகப் படுத் துகிறார்கள். வில்வஇலைக் கஷாயத்தை, சுவாசகாசரோகத்துக்குக் கொடுக்கிறார்கள்; வில்வஇலை ரஸத்தைப்பிழிந்து, அதில் கொஞ்சம் ஜலம்விட்டுக் கலந்து, ஜலுப்புக்கும், ஜுர ஆரம்பத்திலும் கொடுக்கலாம்; இந்தரசம் வியர்வையை யுண்டாக்கும். வில்வ இலைக்கொழுந்தை வதக்கி, கண்ணோவுக்குக் கட்டலாம். வில்வப்பூ, தேகத்தைக் குளிர்ச்சி க்குமென்று கண்டிருக்கிறது. வில்வவோடு, மஞ்சள்சாயம் போடுவதற்கு உபயோகமா கிறது. வில்வக்காயும் செங்காயும் பேதி, அதிசாரம் இந்தரோகங்களுக்கு உப யோகப்படுகின்றது; மலத்தை இறுகலாக்காது.

## Conserve of Bael.

கான்ஸவர் ஆவ் பெயில். வில்வாதி அல்வா.

PREP. செய்முறை.—௬௰ - வில்வப்பழத்தின் உள்ளேஇருக்கிற பசையை எடுத்து, ஜலம்விடாமல் சல்லாத்துணியில்ப்போட்டு பிழிந்துகொண்டு, ௬ -சேர் வெள்ளைச்சருக்கரையை காய்ச்சி பாகுசெய்து, அதில் ஷை வில்வப்பழ ரஸத்தைச்சேர்த்து, கிண்டிவிட்டெரித்து, அல்வா ரூபமாகச் செய்துகொள்ளவும்; சருக்கரையைக் காய்ச்சும்போது, மேலேடாய் வருகிற நுரையைச் செவ்வையாய்த் தள்ளிவிடவேண்டியது. (DR. J. JACKSON.)

USE. உபயோகம்.—மலபந்தத்துக்குக் கொடுக்கலாம்.

## Extract of Bael.

எக்ஸ்டிராக்ட் ஆவ் பேயில். வில்வாதிசத்து.

PREP. செய்முறை.—மேல் ஓடு சன்னமாயிருக்கிற கனிந்த வில்வப்பழங்களைப் பொறுக்கி, உள்ளிருக்கிற பசையை எடுத்து ஒருசட்டியில்போட்டு, அது மூழுகும்படி ஜலம்விட்டு, இரண்டுமணிநேரம் தயிர்கடைவதுபோல் கடைந்து, ஒட்டுத்துணியில்போட்டு, தெளிவான நீரெல்லாம் இறங்கினபிறகு, துணியிலிருக்கிற திப்பியை, மறுபடியுஞ் சட்டியில்போட்டு, முன்விட்ட ஜலத்துக்குப் பாதிஜலம்விட்டு, மறுபடியும்இரண்டுமணிநேரம் கடைந்து, முன்போல் வடிகட்டிக்கொள்ளவும். இவ்விதமாய் ஜலத்தில் நீர்த்திப்படாமல் போர்சலையில்ஜலத்தை விட்டுவிட்டு கடைந்துக்கடைந்து, வடி-

கட்டிக்கொள்ளவும். இதை இவ்விதமாய் பக்குவப்படுத்திக் கொண்டிருக்கும்போதே, சா - பழத்து வில்வஓடை நொறுக்கி உ - படி. ஜலத்தில்போட்டு நன்றுய்காய்ச்சி, மொட்டுத்துணியில்போட்டு வடிகட்டி, ஷை பழம் கடைந்த நீரோடுசேர்த்து, அகலபாத்திரத்தில் ஊற்றி, ஜலயந்திரத்தில் (Water-bath) வைத்துக்காய்ச்சி, சத்து, பதமாய் வந்தபிறகு எடுத்துக்கொள்ளவும். (Mr. Scott.)

Dose. ʒss. to ʒj.

ஒ. அளவு.—௨ - முதல், க - திராம். அளவுக்கு ஒருதினத்துக்கு, உ - அல்லது ௩ - வேளைக் கொடுக்கலாம்.

வில்வக்காயிலிருக்கிற பசையை, உலர்த்தி சிறுதுண்டுகளாக்கி, இதில் உ - அவுன்ஸ் நிறுத்தெடுத்து, க - பையி. ஜலத்தில்போட்டு, சிறுதீயிட்டு, வ - பையி. அளவுக்குச் சுண்டக்காய்ச்சிக்கொண்டு, இந்தகஷாயத்தில் ௩ - கரண்டிவீதம் உ - ௩ - மணிநேரத்துக்கு ஒருதரம், பலப்பட்டிருக்கிற சீதபேதி, அதிசாரம் இவைகளுக்குக் கொடுக்கலாம்; ஷை வியாதிகள் அல்பஸ்திதியிலிருந்தால், ஒருதினத்துக்கு ௩ - ச - வேளை கொடுக்கலாம். போஜனம் செய்தபிறகு உடனே இதைச்சாப்பிட்டால், வயிற்றில் வாயுவைச்சேர ஒட்டாமல்செய்யும். வில்வக்காய்க்குப்பேதியைக் கட்டுகிறகுணமும், பழத்துக்கு மலத்தைக் கழிக்கிற குணமும், உண்டு. வில்வப்பழத்துடன், புளியைச்சேர்த்து, பானகஞ்செய்து, சுரரோகிகளுக்குக் கொடுத்தால், தாகத்தை அடக்கும். குழந்தைகளுக்குக் காணுகிற நாள்பட்ட சீதபேதிக்கும், அதிசாரபேதிக்கும் கொடுக்கலாம். வயதுக்குத் தக்கபடி அளவை நிறுக்கிட்டுக்கொள்ளவேண்டியது. ஒருவேளை பேதியும், ஒருவேளை மலச்சிக்கலுமாய் உபத்திரவப் படுகிறவர்களுக்கு, க௦ - பலம் வில்வப்பழத்தை, ௨ - ஆழாக்கு ஜலத்தில் கரைத்து, தித்திக்கும்படி கொஞ்சம் சருக்கரையைச்சேர்த்து, நாள்தோறும் காலையில் கொடுத்துக்கொண்டு வந்தால், அந்த வியாதி ஒழிந்துவிடும்.

க - அவு. வில்வவேர் பட்டையை, க - பையி. ஜலத்திவிட்டு ௨ - பையி. அளவுக்குச் சுண்டக்காய்ச்சி, ௫ - ஆழாக்குவீதம் ஒருநாளைக்கு உ - முதல் ௬ - தடவைகொடுத்துக்கொண்டுவந்தால், சுரம் நிற்கும்.

வில்வப்பிஞ்சுக்கு, சுரம், பித்தம், வாதசந்நி, இவைகள்போமென்றும்; வில்வவேருக்கு அக்னிமந்தம், அதிசாரம், அரோசிகம், கபம், குன்மம், வாயுசந்நி, சோபை, தாகசுரம், நீரோற்றம், பித்தம், பித்தசுரம், வலி, வாந்தி, விக்கல் இவைகள் நீருமென்றும், பதார்த்தகுண சிந்தாமணியில் கண்டிருக்கின்றது.

## CAMBOGIA. *Gamboge.* Gum-resin.

காம்போஜ். மக்கி. (ரோஜனச்சத்தும், பிசினிச்சத்தும் கலந்திருக்கும்.)

Prop. குணங்கள்.—கார்வீனிய பிக்டோரிய (Garcinia Pictoria) என்னும் செடியிலிருந்து, மக்கியை எடுக்கப்படும்; இந்தப்பதார்த்தம் மஞ்சள்வர்ணமாய், குழாகந்தகத்தைப்போல் நீண்டு சமமாய்இருக்கும்; செடியைக் காயப்படுத்தினால், அதிலிருந்து பால்வடியும்; அந்தப்பாலை, மூங்கில்குழையில்பிடித்து உலரவைத்து, பக்குவப்படுத்திக்கொள்ளுகிறார்கள். மைசூர் மக்கியானது, சுத்திசெய்யாமல் இருப்பதால், அதிக அளவில் கொடுக்கவேண்டியது. மக்கிபலதேசத்திலிருந்து வருகின்றது.

Action. Hydragogue Purgative, Anthelmintic.

செய்கை.—வயிற்றைக்கடுத்து, ஜலம் ஜலமாய்பேதியாகும்; விரேசனகாரி; கிருமிநாசகாரி.

USE. In obstinate costiveness, Amenorrhœa, Dropsy.

உபயோகம்.—இந்த மருந்தைக்கொடுத்தால், தண்ணீர் தண்ணீராய்ப் பேதியாகும்; குமட்டல்,வாந்தி,வயிற்றுக்கடுப்பு இவைகளையும் உண்டாக்கும்; ஆகையால் இதைத்தனியாய் உபயோகிக்கிறதில்லை. வேறேபேதி மருந்துகளை, இதனோடு சேர்த்துக்கொடுத்தால், சாந்தியாய்ப் பேதியாகும். நீரேற்றம் கொண்டிருக்கிற ரோகங்களுக்கு, இதை திராக்ஷஉப்புடன் சேர்த்து கொடுக்கிறது வழக்கம். மலபந்தம், சூதகக்கட்டு இவைகளுக்கும் கொடுக்கப்படும். தேசமெங்கும் பிரசித்தமாய் இருக்கிற மாரீஸன் பில்ஸ் (Morrison's Pills) என்கிற மாத்திரையில் மக்கி மூஷாம்பரம், ஆற்றுத்தும்மட்டி, பிசின், திராக்ஷஉப்பு இவைகள்சேர்ந்திருக்கிறதாய் தெரியவருகின்றது.

DOSE. gr. ij—v.

ஒ. அளவு.—௨ - முதல், ௫ - கிரே. அளவுக்குக் கொடுக்கலாம். ரஸபஸ்மம், ஸ்காமொனி (Scammony) முதலியவைகளோடு ஐண்டித்து, பிரயோகிப்பதும் உண்டு.

**Pilula Cambogiæ Composita.** *Compound Gamboge Pill.*

கம்பவுன் காம்போஜ்பில். மக்கிக்கலவை மெழுக்கு.

PREP. (Gamboge ʒij., Socotrine or Hepatic Aloes ʒiij., Ginger ʒj, Soft Soap ℥ss.) *Dose.* gr.v.—xx.

செய்முறை.—௨ - திரா. மக்கித்தூள், ௩ - திரா. கரியபோளத்தூள், ௧-திரா. சுக்குத்தூள். இவைகளை மிஸ்ரமித்து, ½ - அவு. இளகிய சவுக்காரத்தைச் சேர்த்து இடித்து, மெழுகுபதமாய்ச் செய்துகொள்ளவேண்டியது.

ஒ. அளவு.—௫ - முதல் ௨௰ - கிரேன் அளவுக்குக் கொடுக்கலாம்,

*In Dropsy.* நீரேற்றரோகத்துக்கு.—மக்கி, கிரே ௨ - வெள்ளைச்சருக்கரை, கிரே ௨௰ - இவைகளை அரைத்து மிஸ்ரமித்து, மூன்றுமணி நேரத்துக்கொருதரம், பேதியாக ஆரம்பிக்கிறவரையில் கொடுத்து, பிறகு நிறுத்திவிடவேண்டியது.

மக்கி, கிரே. ௰௨- கரியபோளம் ; திரா. ½- திராக்ஷஉப்பு ; கிரே. ௩௯. இவைகளை அரைத்து ஜலம்விட்டு மெழுகுபதமாக்கி, ௨௪ - மாத்திரை செய்துகொண்டு, ௨ - மாத்திரைவீதம் தினத்துக்கு, ௩ - தடவைகொடுக்கலாம்.

## CANELLA ALBA. *White Canella.* Bark.

ஓயிட்கனெல்லா. (பட்டை.)

இந்தப்பட்டை சுருண்டு, உள்ளே வெள்ளையாய் இருக்கும். இதில் டானிக் ஆஸிட்என்னும் சத்து இல்லை. பசிதீபனத்தையும், தேகத்துக்கு வலிவையும் கொடுக்கும். மந்தாக்கினி ரோகத்துக்குக் கொடுக்கலாம். இந்தப்பட்டையின் சூரணத்தை, ௰௫ - முதல், ௩௰ - கிரேன் அளவுக்குக் கொடுக்கலாம்.

**VITIS VINIFERA.** *The Grape-vine. Uva. Raisin.* The fresh and dried fruits. Grapes and Raisins.

கிரேப்ஸ். ரேஸின்ஸ். கொடி-முந்திரிகை, திராக்ஷபழம். நிவதாக்ஷபழம்.

PROP. குணங்கள்.—திராக்ஷசெடி, கொடி இனத்தைச்சேர்ந்தது. இது அனேகதேசத்தில் காடாய் விளையும்; இதைச் சிலதேசங்களில் பயிரிடுகிறார்கள்; போஷா

பக்குந்தக்கபடி செடியும், பழமும் விருத்தியாகப்படுகின்றன; சிலஇடத்தில் செடியானது மெத்த உயரமேறி படருவதுமுண்டு; ௬0 - ௭0 - வருஷம் உலராமல் இருக்கிறதாயும் கண்டிருக்கின்றது. பழங்களில் சிவப்பு, பச்சை, வெள்ளை என பலநிறங்களுண்டு; பழத்துக்குள் ஜலமாவது, சதையாவது இருக்கும்; பழங்களில் சிலது நீள்நிறம், சிலது உருண்டும், சிலது முட்டையைப்போலும் இருக்கும்; விதைகள் எண்ணில் விருத்தியாகப்படும்; விதையில்லாத பழங்களும் இருக்கின்றன. திராக்ஷக்காய் புளிக்கும், பழம் (Grapes) தித்திப்பாயும், வாய்க்கினிப்பாயும் இருக்கும்; இதைரோகிகளும், மற்றவர்களும் சாப்பிடலாம்; சுரத்தில் தாகத்தை அடக்கும்; போஷணைச்செய்யும்; இதில் ஸிட்ரிக் ஆஸிட், (Citric acid), சுபர் டார்ட்ரேட் ஆவ் போடாஷ். (Supertartrate of Potash) என்னும் உப்புகள் இருப்பதால், கொஞ்சம் புளிக்கும்; இந்த உப்புகள்மாறி சருக்கரையாகிறதால், பழத்துக்கு தித்திப்பு உண்டாகிறது. திராக்ஷ சருக்கரைக்கு, கிரேப்சுக்கர் (Grape-sugar or Glucose) என்றுபேர். இதற்கும், கரும்புச்சருக்கரைக்கும் பேதமுண்டு. திராக்ஷசருக்கரைக்குப் புளிப்பேறினால், அது ஆல்கோஹல் என்னும் சாராயமாயும் (Alcohol), கார்போனிக் ஆஸிட் (Carbonic acid) என்கிற வாயுவாகியும், ரூபம் மாறிப்போகும்: பிழிந்தெடுத்த திராக்ஷ ரசத்துக்கு "மஸ்ட்" (Must) என்றுபேர்.

*Raisins*—ரேஸின்ஸ். முந்திரிகைப்பழவற்றல்; திராக்ஷபழவற்றல்; உலர்ந்த திராக்ஷப்பழம்.—வெயிலில் உலர்த்திப் பக்குவப்படுத்திக்கொள்ளுகிற திராக்ஷபழத்தில், ஜலமும், அதிலிருக்கிற உப்பும் குறைந்து, சருக்கரை மாத்திரம் அதிகமாய் இருக்கும். உலர்ந்த திராக்ஷப்பழத்தை, போஜன பதார்த்தங்களோடு சேர்ப்பது மல்லாமல், அநேக அவுஷதங்களோடும் கூட்டப்படும்; இது தேகதந்துக்கு வலிவைக்கொடுக்கும்; சிலவேளை சீரணமாகாமல் போவதும் உண்டு. பிழிந்த திராக்ஷரஸத்தை, புளிக்கவைத்தால், "ஒயின்", "ஆல்கோஹல்", "காடி" இவைகளாய் மாறிவிடும். ஒயின் சாராயத்திலிருக்கிற சருக்கரையானது, ஆல்கோஹல்என்னும் சாராயமாய் விட்டபிறகு, ஒயின் சாராயத்திலிருக்கிற சுபர்டார்ட்ரேட் ஆவ் போடாஷ் (Supertartrate of Potash) என்னும்உப்பு, ஆல்கோஹல் என்னும் சாராயத்தில் கரையாததால், பீப்பாய்களில், படிந்துவிடும்; இந்தஉப்புக்கு இங்கிலீஷில் "ஆர்கால்" (Argol) அல்லது "டார்டர்" (Tartar) என்றுபேர்; தமிழில் "திராக்ஷஉப்பு" என்று சொல்லப்படும். திராக்ஷஉப்புகளின் குணம்முதலியவைகளைப்பற்றி, முன்னமே தெரிவித்திருக்கின்றது. இந்தஉப்பிலிருந்து, "டார்டாரிக் ஆஸிட்" என்னும் திராக்ஷ புளிப்புப்பை எடுக்கப்படுகின்றது.

**Acidum Tartaricum.** *Tartaric Acid.*

டார்டாரிக் ஆஸிட். திராக்ஷப்பழ ரஸப் புளிப்பு உப்பு.

PROP. குணங்கள்.—இந்த புளிப்பு உப்பானது, திராக்ஷரஸம், புளிமுதலிய புளிக்கிற கனிவர்க்கங்களில் இருக்கும்; வெள்ளைநிறமாயும், வாசனையில்லாமலும், ஒருவிதமான இனிப்புள்ள புளிப்பாயும், பெரிய கட்டிகளாயும் இருக்கும்: காற்றில்கெடாது; ஜலத்தில்கரையும்: இதை ஜலத்தில் கரைத்துவைத்தால், சன்னசவ்வுபோலொத்த பதார்த்தம், ஜலத்தில் ஜனித்து மிதக்கும்.

PREP. (Add Chalk to the solution of Bitartrate of Potash; to this Chloride of Calcium is added. The Tartrate of Lime is then washed repeatedly with distilled water and afterwards decomposed by means of

Dilute Sulphuric Acid, an insoluble Sulphate of Lime is formed, and the Tartaric acid being set free, remains in solution, from which it is crystalised by evaporation.)

செய்முறை.—௪ - பவு. பைடார்ட்ரேட் ஆவ் போடாஷ் என்னும்உப்பை, ௨ - காலன் ஆவிநீரில் போட்டுக்காய்ச்சி, ௰௨ - அவுன்ஸ் ௭ - திராம், சுத்திசெய்த சிமைச்சுண்ணாம்பை கொஞ்சங்கொஞ்சமாய்ச்சேர்த்தால், நுரைக்கும்; அதுநின்றபிறகு ௨௯௯ - அவு. அல்லது தேவையான கறியுப்பு திராவகத்தை, ௪ - பை. ஆவிநீரில்சேர்த்து, அதில், ௰௨- அவு. ௭-திரா. சுத்திசெய்த சிமைச்சுண்ணாம்புசேர்த்து, வடிகட்டினால், டார்ட்ரேட் ஆவ் லைம்என்னும் உப்புநிற்கும்; அதை ஆவிநீர்விட்டு அடிக்கடி கழுவி, வாய்த்து ருசிதட்டுப்படாமலிருக்கச் செய்துகொண்டு, அதில் ௰ - பையின்ட், ௭ - அவு. விளாவின கந்தகத்திராவகத்தை ஊற்றி, ௰௫ - நிமிஷம் காய்ச்சி வடிகட்டிக்கொண்டு, இதை சிறுதியிட்டெரித்து சுண்டக்காய்ச்சினால், உப்பு பூக்கும். இந்தஉப்பை ஜலத்தில் கரைத்து வடிகட்டி, உப்பு பூக்கும்படிச்செய்தால், உப்பு சுத்தியாகும். இவ்விதமாய் ௨ - ௩ - தரம், உப்பை பூக்கும்படிச்செய்து கொள்ளவேண்டியதாய் இருக்கும். அஸ்திக்கரியால் சுத்திசெய்துகொண்டால், துல்லியமாகிவிடும்.

Inc. சத்துருபதார்த்தங்கள்.—ஆல்கெலீஸ் (Alkalies) என்னும் உப்புகள், சுண்ணாம்பு, வங்கம், காடிக்காரம், இவைகள் திராக்ஷப்பழ ரஸப்புளிப்பை முறித்துவிடும்.

Action. Refrigerant.

செய்கை.—சீதளகாரி.

Use. உபயோகம்.—இந்தஉப்பு நயமாய் இருப்பதால், ஸிட்ரிக் ஆஸிட் என்னும் உப்புக்குப்பதிலாய் உபயோகிக்கப்படுகின்றது. ௨௫-கிறே. திராக்ஷப்பழ ரஸப்புளிப்பு உப்பு ௯ - திராம், பைகார்பொனேட் ஆவ்ஸோடா (Bicarbonate of Soda), இவைகளை வெவ்வேறாய் ஜலத்தில்கரைத்து ஒன்றாய்ச்சேர்த்தால் பொங்கும்; பொங்குகிற போதே குடித்துவிடவேண்டியது. ஸெட்லிட்ஜ் பவுடர்ஸ் (Seidlitz powders) என்னும் மருந்து செய்முறை.—ஸோடா பொடாஷி யொடார்ட்ரேடிஸ் (Soda pot. tart.) ௨- திரா. பைகார்பொனேட் ஆவ் ஸோடா (Bicarb. of soda) ௨ - ஸ்குருபில், இவைகளைச் சேர்த்து ஒருபவுடர் செய்துகொள்ளவும். ௯ -திராம் டார்டாரிக் ஆஸிட்என்னும் உப்பை, மற்றொருபவுடர் செய்துகொள்ளவும்.

Dose. gr.x. to xxx.

௯. அளவு.—இந்தஉப்பை ௰ - முதல் ௩௰ - கிறேன் அளவுக்குக்கொடுக்கலாம்.

**GUAIACUM OFFICINALÆ.** *Guaiaci Lignum.* The Wood.

**Guaiacum Resina.** Resin obtained by heat from The Wood.

குவாகம். மரத்தின்சக்கையும், சக்கையை எரித்து அதிலிருந்து எடுக்கிற ரோஜனமும், உபயோகப்படும்.

Prop. குணங்கள்.—*Guaiacum wood.* குவாகம்என்கிற செடியானது, மெத்த வைரமுடையது: அதில் ரோஜனச் சத்து இருக்கும். பருவில்லாமல் இருக்கிறசக்கையை கஷாயஞ்செய்து உபயோகிக்கப்படும். மரத்தைவாளால் அறுத்தெடுத்த பொடியை விற்பதுமுண்டு. திக்தகாரமும், வாசனையுமாய் இருக்கும்; குவாக ரோஜனச்சத்திலிருக்கிற குணங்களெல்லாம் இதற்குமுண்டு; உஷ்ணத்தைத்தரும்; வியர்வையை

யுண்டாகிறும்; இதை நாள்பட்ட கில்வாதரோகத்துக்குக் கொடுக்கப்படுகின்றது. கண்டமாலை, சருமரோகம், மேகரோகங்கள் இவைமுதலிய ரோகங்களுக்கும், உதவுமென்று கண்டிருக்கின்றது.

*Resin of Guaiacum or Guaiac.* குவாகம் என்னும் ரோஜனச்சத்தானது, கட்டிகளாய், அதில் மரச்சக்கைகளும், பட்டையின் துண்டுகளும் ஒட்டிக்கொண்டு, பளம் பழுவன்னமாய் இருக்கும்; எளிதில் பொடியாகும்; ஒடித்தவிடம், மினுமினுப்பாயிருக்கும்; சாம்பிராணி வாசனையைத்தரும்; வாயில்போட்டால், மெத்த ருசியாய் இராது, ஆனால் பிறகு தொண்டையில் எரிச்சல்காணும்; ஒருதுண்டு மரத்தை நீண்டவாட்டத்தில் துணித்து, ஒருமுனையை நெருப்பில் வைத்து எரித்தால், ருபேட்டு, ரோஜனம் கரைந்து, மைத்தொரு முனையில் வெளிப்படும்; அதைஎடுத்து வைத்துக்கொள்ளவேண்டியது. சக்கைகளை ஜலத்தில்போட்டு, உப்பைச்சேர்த்துக் காய்ச்சி, ஜலத்தின்மேல் மிதக்கிற ரோஜனத்தை, வழித்து எடுத்துக்கொள்ளுவதும் ஒருமுறை. இந்த ரோஜனம் மரத்தில் தானுய்வடிகிறதென்றும், அல்லது மரத்தைக் காயப்படுத்தி எடுப்பதென்றும், செப்பியிருக்கின்றது.

ACTION. Stimulant, diaphoretic.

செய்கை.—உஷ்ணகாரி, சுவேதகாரி. வியர்வையை அதிகப்படுத்தாவிட்டால், மூத்திரத்தை அதிகப்படுத்தும். அதிகஅளவில் கொடுத்தால், குடலை வேதனைப்படுத்தும்,

USE. In Chronic Rheumatism, Dysmenorrhœa, Secondary Syphilis, Scrofula, Chronic Skin Diseases.

உபயோகம்.—நாள்பட்ட கில்வாதரோகம், சூதகச்சூலை, மேகரோகம், கண்டமாலைரோகம், நாள்பட்ட சருமரோகங்கள், இவைமுதலியவைகளுக்குக் கொடுக்கலாம்.

DOSE. gr.x.—ʒss.

ஒ. அளவு.—ய - கிறேன் முதல், ௦ - திராம் அளவுக்குச் சூரணமாயாவது, உண்டைசெய்தாவது கொடுக்கலாம்.

## Mistura Guaiaci. *Guaiacum Mixture.*

## குவாகம் மிகிஸ்சர்.

PREP. (Resin of Guaiacum ʒiij; Sugar ℥ss. Gum Arabic ʒij; Cinnamon water Oj.)

செய்முறை.—ங - திரா. குவாகம் என்னும் குங்கிலியத்தை, ௦ - அவு. சருக்கரை, உ - திரா. விளாம்பிசின்தூள், இவைகளோடேச் சேர்த்து அரைத்து, முடிவில், க - பைபி. லவங்கப்பட்டை ஜலத்தைக் கொஞ்சங்கொஞ்சமாய்ச் சேர்த்து அரைத்துக் கொள்ளவேண்டியது. இதில் ௦ - முதல், உ - அவுன்ஸ் வீதம் கொடுக்கலாம்.

## Decoctum Guaiaci. *Decoction of Guaiacum.*

PREP. (Guaiacum turnings ℥iij., Raisins ℥ij., Aq. Oviij., Sassafras rasped ℥j., Liquorice root bruised ℥j.)

செய்முறை.—ந - அவு. குவாகம் என்னும்தூள், உ - அவு. திராக்ஷபழம், இவைகளை அ - பைபி. ஜலத்தில்போட்டு, ரு - பைபி. ஜலத்துக்குக் காய்ச்சி, முடிவில், - ௧ - அவு. ஸாஸேப்பிராஸ்என்னும் சக்கை திருவிக்கொண்டும், க - அவு. அதிமதுர

ந்தை இடித்துக்கொண்டு, அதில்சேர்த்து, வடிகட்டிக் கொள்ளவும்.—இதில் உ -முத ல் ச - அவு. அளவுக்கு நாள்பட்ட சந்திகசிலேத்தும ரோகத்துக்குக் கொடுக்கலாம்.

**Tinctura Guaiaci.** *Tincture of Guaiacum.*

டிங்சர் ஆவ் குவாகம்.

PREP. (Resin of Guaiacum ℥vij., Rectified Spirit Oij.)

செய்முறை.—எ - அவு. குவாகம்என்னும், குங்கிலியச்சத்தை நொறுக்கி, உ - பையி. ரெக்டிபைட் ஸ்பிரிட்என்னும் சாராயத்தில் போட்டு, எ - நாள் ஊறவைத்து, பிறகு வடிகட்டிக்கொள்ளவும்.

USE. உபயோகம்.—இந்தப் பாவனத்திரவத்தை, நாள்பட்ட சந்திக சிலேஷ்மரோகத்துக்கு, க - திராம் முதல், ச - திராம் அளவுக்குப் பாலிலாவது, விளாம்பிசின் பாகிலாவது கொடுக்கலாம்.

**Tinctura Guaiaci Composita.** *Compound or Ammoniated Tincture of Guaiacum.*

கம்பவுன் டிங்சர் ஆவ் குவாகம்.

PREP. (Resin of Guaiacum ℥vii. Aromatic Spirit of Ammonia Oij.)

செய்முறை.—எ - அவு. குவாகம் என்னும் குங்கிலியச்சத்தை நொறுக்கி, உ - பையி. நவக்ஷாரமது வில்போட்டு, எ - நாள் ஊறவைத்து, பிறகு வடிகட்டிக்கொள்ளவும்.

USE. உபயோகம்.—இந்த மருந்து, மேற்கண்டமருந்தைப்பார்க்கிலும், வேகமுள்ளதாகையால், நாள்பட்ட கீல்வாதரோகத்துக்குக் கொடுக்கலாம். இந்தமருந்தையும், குழம்பான அனுபானம் எதிலாவது கொடுக்கவேண்டியது.

**RUTA.** *Ruta graveolens. Common or Garden Rue.* Leaves.

ருட்டா. ரூ. அருதா. சதாபு இலை. (இலை.)

PROP. குணங்கள்.—அருதா என்கிறஇலைகள், பச்சையில் சாம்பல் பூத்தவண்ணமாய்இருக்கும் ; இதில் தயிலமுண்டு ; மெத்தவாசனையும், விறுவிறென்று கசப்புள்ள வெகுட்டலை யுடையதாயும் இருக்கும். உலர்ந்தால் குணங்கள் குறைவுபடும்.

ACTION. Rubefacient, Stimulant, Antispasmodic, Emmenagogue, Anthelmintic.

செய்கை.—ஷோணகாரி, உஷ்ணகாரி, அங்காகர்ஷணநாஸகாரி, ருதுவர்த்தனகாரி, கிருமிநாசகாரி.

USE. In Hysteria, Convulsions of infants, &c.

உபயோகம்.—இது ஞாதகஜந்நிரோகத்துக்கு உபயோகப்படுகின்றது. வாயுசெய்து காணுகிற வயிற்றுவலிக்கு, இதை முக்கியமாய் உபயோகப்படுத்தும்படி, கண்டிருக்கிறது; உள்ளுக்காவது, அல்லது, ஆஸனத்துவழியாய்ஆவது பிரயோகிக்கலாம். குழந்தைகளுக்குக் காணுகிற இசுவுரோகத்துக்கு, கொடுக்கும்படியாயும் செப்பி இருக்கின்றது. இதுகெர்ப்பத்தில்போய்ப்பற்றிப் பிடிக்குமென்று முன்னோருடைய எண்ணம் ; இப்போதும் கர்ப்பிணிகளுக்குக் கொடுத்தால், பிண்டத்தைச் சேதப்படுத்துகிறதென்று, நமது தேசத்தாருடைய எண்ணம். இங்கிலாண்டுதேசத்தில், பிண்டத்தை வெளிப்

படுத்த, இதை எப்போதாகிலும் உபயோகப்படுத்துவதுண்டு. நமதுதேசத்து வைத்தியர், இலையை இடித்து, லீம்ஸ்தம்பரோகத்துக்கு (Paralysis), சருமம் சிவக்கும்படி கட்டுவதுமுண்டு. இருமலுக்கு, நோயாளி இருக்கிற அறைக்குள் தூபம்போடுவதுமுண்டு. வயிற்றிலிருக்கிற கிருமிகளுக்கு, ரசத்தைப் பிழிந்து, ஒரு தேயிலைக் கரண்டி, ரு - வருஷத்துக்கு மேல்பட்ட குழந்தைகளுக்குக் கொடுத்தால், நன்மைசெய்யும். துர்ப்பலத்தால் காணுகிற மந்தாக்கினிரோகத்துக்கு, தமிழ்வைத்தியர் உபயோகப்படுத்துகிறார்கள். இதை இப்போது மெத்த உபயோகப்படுத்துகிறதில்லை.

Dose. Fresh leaves ℈j—ij.

ஓ. அளவு.—பச்சை இலையை, க - முதல், உ - ஸ்குருபில் அளவுக்குக் கொடுக்கலாம்.

**Rutæ Oleum.** *Oil of Rue.*

ஆயல் ஆவ் ரூ. அருதா தயிலம்.

புஷ்பமும், காயுமிருக்கிற பூண்டை, ஜலத்தில்போட்டு, பட்டிகட்டி, தயிலத்தை இறக்கப்படும். இந்தத் தயிலம் இளம் மஞ்சள்நிறமாயும், விறுவிறுப்புள்ளதாயும், துர்வாசனையோடு கூடியும் இருக்கும்.

Use. உபயோகம்.—வலி, சூதகக்கட்டு முதலியரோகங்களுக்கு, உபயோகப்படுகின்றது.

Dose. ♏ij.—♏v.

ஓ. அளவு.—உ - முதல், ரு - மினிம் வரையில், சருக்கரையில் சேர்த்து, ஜலம்விட்டுக் கலந்துகொடுக்கலாம்.

சதாபு இலையை, லேகியமாகவும், பாணிதமாகவும் செய்து பிரயோகிக்கலாம்.

**BUCHU.** *Diosma Crenata. Barosma Crenata.* Leaves.

பக்கு. (இலை.)

Use. உபயோகம்.—இந்த இலையை மூத்திரப்பையில் காணுகிற நாள்பட்ட மேகத்துக்கு உபயோகப்பட்டுவருகிறது. இலையின் சூரணத்தில், உய - முதல், ௬ய - கிறேன் இடைக்குக்கொடுக்கலாம்.

**Infusum Buchu.** *Infusion of Buchu.*

இன்பியுஷன் ஆவ் பக்கு.

Prep. (Buchu leaves ℥j. Boiling Dist. Water Oj.)

Dose. ℥iss.

செய்முறை.—க - அவு. பக்கு இலையை, க - பையின்ட் கொதிக்கக் காய்ந்த வெந்நீரில்போட்டு, மூடி, ச - மணிநேரம் ஊறவைத்து, வடிகட்டிக்கொள்ளவும். இதை, கஉ - அவு. அளவுக்கு தினத்துக்கு, உ - ௩ - தடவை கொடுக்கலாம்.

**Tinctura Buchu.** *Tincture of Buchu.*

டிங்சர் ஆவ் பக்கு.

Prep. (Buchu ℥v. Proof Spirit Oij.) *Dose.* ʒj—iv.

செய்முறை.—ரு - அவு. பக்கு என்னும் இலையை, உ - பையி. புருவ்ஸ்பிரிட் என்னும் சாராயத்தில் போட்டு, எ - நாள்ஊறவைத்து, தெளிவாய் இருப்பதை இறுத்துக்கொண்டு, வடிகட்டிக்கொள்ளவும்.

ஓ. அளவு—இதை க - முதல், ச - டிராம் அளவுக்குக்கொடுக்கலாம்.

**QUASSIA.** *Picræna Excelsa. Jamaica Quassia. Wood.*

குவாஷியா. (சக்கை.)

PROP. குணங்கள்.—குவாஷியா என்கிறமரத்தை, சக்கைகளாய்ச்செய்தாவது, அன்டிரந்தாவது விற்கப்படும். நிறம் பலவிதமாய் இருக்கும்; இதற்கு வாசனையில்லை; மெத்தக் கசப்புள்ளது. இதிலிருக்கிற சத்துக்கு, குவாஸீன் (Quassine) என்றுபேர். கலம்பாஎன்னும் வேரைப்போல், இதில்டானிக் ஆஸிட்என்னும் துவர்ப்புசத்து இல்லாமையால், அயமருந்துகளை இதனோடு சேர்த்துக்கொடுக்கலாம்.

ACTION. Stomachic, Tonic.

செய்கை.—தீபனமுண்டாக்கும், பலகாரி.

USE. In Dyspepsia, Fevers, Cholera.

உபயோகம்.—அஜிரணம், பசியில்லாமை, துர்ப்பலம், சுரத்தின்மேலாவது, மற்ற எந்தரோகத்தாலாவது காணுகிற பலவீனம், இவைகளுக்கு உபயோகப்படுகின்றது. கிடங்களுக்கு உறக்கம் வரும்படிச்செய்துவிடும். மனிதர்கள், நாள்படச் சாப்பிட்டால், பார்வையை மந்தப்படுத்திவிடுகிறதென்று, கிராஸ் (Kraus) என்பவர்சொல்லுகிறார். ரசம், அயம், ஐயோடைட் ஆவ் பொடாஸியம் என்னும் உப்பு, இவைகளை, இதன் வெந்நீர்க்கஷாயத்தோடு சேர்த்துக்கொடுக்கலாம். வாந்திபேதி ரோகத்தை சொஸ்தப்படுத்துகிற குணம் இருக்குதென்று, இப்போது இதை உள்ளுக்குக் கொடுக்கிறதும் அன்றி அம்மை குத்துகிறதுபோல், இதன்பாவனத் திரவத்தைக்கொண்டு, உபயோகப்படுத்துகிறார்கள். ஆனால், இதற்கு அந்தக்குணம் இருக்கிற உண்மையை, இதுவரையிலும் தெரிந்துக்கொள்ளக் கூடாமையாய் இருக்கிறது. சிறுபிள்ளைகளுக்குக் காணுகிற கிருமிரோகத்துக்கு, இந்தச்சக்கையின் வெந்நீர்க்கஷாயத்தை, ரு - எ - நாள் விடாமல்கொடுத்து, பிறகுஉடனே நல்ல ஒரு பேதிக்குக் கொடுத்தால், கிருமிகளை நாசப்படுத்திவிடும்.

**Infusum Quassiæ.** *Infusion of Quassia.*

இன்பியுஷன் ஆவ் குவாஷியா.

PREP. (Sliced Quassia ℈ij., Boiling Aq. dest. Oj.) *Dose.* f℥iss.

செய்முறை.—உ-ஸ்குருபில் துண்டித்த குவாஷியாசக்கையை, க- பையின்ட் கொதிக்கக் காய்ந்த வெந்நீரில்போட்டு, மூடி, உ - மணிநேரம் ஊறவைத்து, பிறகு வடிகட்டிக் கொள்ளவும்.

ஒ. அளவு.—கஉ - அவு. வீதம், திரிசந்தியாகால அளவாய்க் கொடுக்கலாம்.

**Tinctura Quassiæ.** *Tincture of Quassia.*

டிங்கசர் ஆவ் குவாஷியா.

PREP. (Quassia ʒx. Proof Spirit Oij.) *Dose.* fʒss—ʒij.

செய்முறை.—ய - டிராம், துண்டித்த குவாஷியா என்னும் சக்கையை, உ - பையின்ட், புரூவ்ஸ்பிரிட்என்னும் சாராயத்தில்போட்டு, எ - நாள் ஊறவைத்து, பிறகு வடிகட்டிக் கொள்ளவேண்டியது.

ஒ. அளவு.—ə - முதல், உ - டிராம் வீதம், வேறுமருந்துகளோடு சேர்த்துக்கொடுக்கலாம்.

**SIMARUBA.** *Mountain Damson.* Bark of the root.

ஸிமரூபா. (வேரின் பட்டை.)

PREP. குணங்கள். இந்தப்பட்டை நீண்டதுண்டுகளாயும், பழுப்பு வன்னமாயும், மெத்தக் கசப்பாயும் இருக்கும். பச்சைப்பட்டையில் பால்போலொத்த ரசம் இருக்கும். இந்தப்பட்டையில் மெத்த நார் இருப்பதால், சுலபத்தில் சூரணமாகாது.

ACTION. Bitter Tonic.

செய்கை.—பலகாரி.

USE. In Dysentery, Diarrhœa.

உபயோகம்.—இந்தப்பட்டையின் குணம் குவாஷியா என்னும் சக்கைக்கு ஒத்திருக்கும். அதிக அளவில் கொடுத்தால், வாந்தியையும் பேதியையும் உண்டாக்கும். தேகபலம் குறைந்திருக்கிற ரோகங்களுக்கெல்லாம், கொடுக்கலாம். பட்டையின் சூரணத்தைக் கொடுப்பதுவழக்கம்இல்லை. சீதபேதி, அதிசாரம்,இவைகளுக்கு மெத்த உபயோகப் படுத்துவதுஉண்டு.

**Infusum Simarubæ.** *Infusion of Simaruba Bark.*

இன்பியுஷன் ஆவ் ஸிமரூபா.

PREP. (Simaruba Bark bruised ʒiij., Boiling water Oj.) *Dose.* f℥j—ij.

செய்முறை.—௩ - திராம், நொறுக்கிய ஸிமரூபா என்னும் பட்டையை, ௧ - பையின்ட் கொதிக்கக் காய்ந்த வெந்நீரில்போட்டு மூடி, ௨ -மணிநேரம் ஊறவைத்து, பிறகு வடிகட்டிக்கொள்ளவேண்டியது.

ஓ. அளவு.—௧ - முதல், ௨ - அவு. வீதம் கொடுத்தால், பலத்தைக் கொடுக்கும். அளவில் அதிகமானால், வாந்தியை யுண்டாக்கும்.

**TEREBINTHINA CHIA.** *Pistacia Terebinthus. Turpentine of Chio. Chian Turpentine.* Liquid Resin.

கியான் டர்பன்டையின். (தயிலத்தைப்போலொத்த ரோஜனம்.)

இது இளகலான ஓர்வித குங்கிலியம்; வாசனையாய் இருக்கும்; கர்ப்பூர தயிலத்துக்குடைய குணங்கள், இதற்குஉண்டு. மூத்திர உறுப்புகளில்போய் பற்றிப்பிடித்து, அவைகளிலிருந்து வடிகிற, மேகநீரை நிறுத்தும். இந்தபதார்த்தத்தை, ௰ - முதல், ௬௰ - கிறேன், அல்லது, இன்னம் அதிகஅளவில், விளாம்பிசின், அதிமதுரத்தூள், முட்டையின் மஞ்சள்கரு இவைகளில் எதையாவது, சேர்த்துக்குழப்பி, திரிசந்தியாகால அளவாய்க் கொடுக்கலாம்.

**MASTICHE.** *Pistacia Lentiscus.* Resinous Exudation of the Mastic Tree.

மாஸ்டிச். ரூமிமஸ்தகி. (ரோஜனம்.)

PROP. குணங்கள்.—இந்தச்சரக்கு, ரோஜன இனத்தைச் சார்ந்தது; உருண்டு, சின்னமணிகளாயும், இளமஞ்சள் வன்னமாயும்இருக்கும்; அரைத்தால், எளிதில் தூளாகிவிடும்; பிசுபிசுப்புஉண்டு; கர்ப்பூரத்தயிலம் (Turpentine), ஆல்கோஹால் இவைகளில் கரைந்துவிடும்; வாயில்போட்டு மென்றால், மிருதுவாகிவிடும். சொத்தை

ப்பல்லில் இருக்கிற பள்ளத்தில், இதை வைத்து அடைக்கலாம்; கம்பவுன் டிங்சர் ஆவ் அம்மோனிய (Compound Tincture of Ammonia) என்னும் மருந்தில், இந்தச்சரக்குச் சேருகின்றது.

Action. Use. செய்கை. உபயோகம்.—ருமிமஸ்தகிஎன்னும் சரக்கை, மெத்த உபயோகப்படுத்துகிறதில்லை. சொத்தைப்பல்லிருக்கிற குழியில், காற்றுப்புகாமல், இதை வைத்து அடைப்பதுண்டு. வாய்நாற்றத்தைப் போக்கும்; பல்லை இறுகச்செய்யும்; ஆகையால் இதை, துலுக்கப்பெண்டுகள், தாசனப்பொடியோடு சேர்த்துக் கொள்ளுகிறார்கள். இதை தூபமாக உபயோகிப்பதும்உண்டு. கர்ப்பூரத்ரயிலத்திலாவது, அல்லது, சாராயத்திலாவது கரைத்து, வார்னிஷ்பூசுவதுஉண்டு. இதைத்தமிழ்வைத்தியர்கள், சாலாமிஸிரியோடுசேர்த்து, பலம்வருகிறதற்குக் கொடுக்கிறார்கள்.

Dose. gr. xx. to ʒj. or more.

ஓ. அளவு.—உ௰ - கிறேன், முதல், க - திராம், அல்லது இன்னம் அதிகமாய் கொடுக்கலாம்.

**Olibanum.** *Boswellia thurifera.* Gum-resin.

ஒலிபேனம். பரங்கிச்சாம்பிராணி. (குங்கிலியம்.)

பரங்கிச்சாம்பிராணியானது, உருண்டமணிகளைப்போல் சிவப்பாயாவது, இளமஞ்சள்நிறமாயாவது, இருக்கும்; மேலே வெள்ளைத்தூள்படிந்து, உள்ளே துலாம்பரமாய் இருக்கும்; காரமாயும் கசப்பாயும், வாசனையாயும் இருக்கும்; நெருப்பில்போட்டால், சாம்பிராணிவாசனை வீசும்; இதைஇருமலில் காணுகிற கபம், மாதர்களுக்குக் காணுகிற வெள்ளை (எலும்புருக்கி), இவைகளை நிறுத்த உபயோகப்படுத்தினதுஉண்டு. பிளாஸ்திரிகளோடு கூட்டப்படும். முன்உபயோகப்படுத்தினதுபோல், இப்போது உபயோகப்படுத்துகிறதுஇல்லை. நெருப்பில்போட்டு, தூபமிட்டு உபயோகப்படுத்துகிறதுண்டு. இதை உள்ளுக்குக் கொடுப்பதுஅரிது. எண்ணெய், வெள்ளைமெழுகு, குங்கிலியம் வகை, க - க்கு பலம் க - இவைகளைச்சேர்த்து, இளகிய களிம்பாகச்செய்து ஆறாதரணங்களுக்குப்போட குணமாகும்.

குங்கிலியத்துக்கு, எலும்புருக்கி, புண், சீழ், சூலை, பெரும்பாடு, மேகப்புண், இவைகள் போமென்று, பதார்த்தகுணசிந்தாமணியில் கண்டிருக்கின்றது.

வெள்ளை குங்கிலியம்என்று ஒருசாதி குங்கிலியமுண்டு; அதற்கும், குங்கிலியத்துக்கும் இருக்கிற குணங்களேஇருக்கின்றது.

**MYRRH.** *Myrrha. Balsamodendron Myrrha.* Gum-resin.

மர். வாலேந்திரபோளம். வெள்ளாத்திப்போளம். வெள்ளைப்போளம்.

(பிசினியும், ரோஜனமும் சேர்ந்தச்சரக்கு.)

Prop. குணங்கள்.—வாலேந்திரபோளமானது, சிறுசும் பெரிசுமான மேடுபள்ளமுள்ள கட்டிகளாய் இருக்கும். சிறிய துண்டுகள் ஒட்டிக்கொண்டு உலர்ந்து இருப்பதுபோலிருக்கும்; மேலே தூள்படிந்து, சிவப்பும், கறுப்புங்கலந்த வன்னமாயும், எளிதில் தாளாகத்தக்கதாயும், கசப்போடு கூடிய நல்லவாசனையுள்ளதாயும், இருக்கும்; சாம்பிராணிமாதிரியாய், ஒர்விதவாசனைவீசும்; இந்தச்சரக்கில் வேறுசாதிகளும் உண்டு. மட்டச்சரக்கை, "குக்கில்" என்கிற பிசினியோடு கலந்து, விற்பனைச்செய்யப்

படும். வெள்ளைப்போளத்தை, ஜலத்தில் அரைத்தால் குழம்பாகும்; வாலேந்திரபோள பாவனத்திரவத்தில் ஜலத்தைச்சேர்த்தால், கலங்கலாகிவிடும்.

*Indian Bdellium.* குக்கில்.—குக்கில்என்கிற சரக்கை வாலேந்திரபோளத்துக்குப் பதிலாய், விற்பதும் உண்டு; அது வாலேந்திரபோளத்தில் மட்டச்சரக்கென்கிற யோசனை. இது உருண்டைகளாய், கறுப்பும் சிவப்பும் கலந்தவர்ணமுடையது; வெள்ளைப்போளத்தைப்பார்க்கிலும், இது ஈரமாயிருக்கும். சீக்கிரத்தில் பொடியாகாது; கைச்சூடுபட்டாலும், மிருதுவாகிவிடும்; கசப்பும், கொஞ்சம் காரமாய், வாசனையாயிருக்கும், அவ்வளவு இனிப்பாயிராது; பட்டைத்துண்டுகள், மேலேஒட்டிக்கொண்டிருக்கும். குக்கில்என்னும் சரக்குக்கு, உதடுநோய், கடி, கட்டி, காதுநோய், குன்மம், சூலை, நாசிநோய், மேகப்புண், வாதவித்திரதி முதலியவைகள் தீருமென்று, பதார்த்தகுண சிந்தாமணியில் கண்டிருக்கின்றது.

Action. Stomachic, Stimulant, Expectorant, Antispasmodic, Emmenagogue.

செய்கை.—தீபனமுண்டாக்கும்; உஷ்ணித்துக் கபத்தை வெளிப்படுத்தும்; வலிகளை நிறுத்தும்; ருதுகத்தைக் கிரமப்படுத்தும்.

Use. In Atonic Dyspepsia, Amenorrhœa, Chlorosis, Leucorrhœa, Bronchitis, Asthma, Cough, Sponginess of the gums, Ulcerated sore throat. Ptyalism, Foul and Indolent ulcers.

உபயோகம்.—வாலேந்திரபோளமானது, சீரண உறுப்புகளை உச்சாகப்படுத்தி, பசிஎடுக்கும்படிச்செய்யும்; காசம், மந்தாரகாசம், இருமல், எலும்புருக்கி, முதலியரோகங்களுக்குக் கொடுக்கலாம்; ருதுகக்கட்டுக்கு, இதைத்தனியாய்க்கொடுத்தால், மெத்தகுணத்தைக்கொடுக்காது; ஆனால், அயம், மூஷாம்பரம் இவைகளோடு சேர்த்துக்கொடுத்தால், மெத்த நலத்தைத்தரும். எயிற்றுப் புண், தொண்டைவிரணம், ஈறுவீக்கப்பு, இவைகளுக்கு, உ - ச - திராம், வாலேந்திரபோள பாவனத்திரவத்தை, ச - அவு. ஜலத்திலாவது, லிங்கோறு வெந்நீர்க்கஷாயத்திலாவது சேர்த்து, வாய்கொப்புளித்துக்கொண்டுவந்தால், நிவர்த்தியாகும். அழிபுண்களை, சீக்கிரத்தில்ஆற்ற, வாலேந்திரபோளதிரவத்தைக் காரத்தைக் குறைத்து, மேல்தடவினதும் உண்டு.

Dose. gr.x.—ʒss.

ஔ. அளவு.—ய - கிறேன் முதல், ௦ - திராம் அளவுக்குக்கொடுக்கலாம். இதைத்தனியாய்க்கொடுப்பதில்லை; பலகாரி, விரேசனகாரி, இவைகளோடுசேர்த்துப் பிரயோகிக்கப்படும்.

**Tinctura Myrrhæ.** *Tincture of Myrrh.*

டிங்சர் ஆவ் மர். வாலேந்திரபோள பாவனத்திரவம்.

Prep. (Powdered Myrrh ℥iii. Rectified Spirit Oij.)

செய்முறை.—ங - அவு. வாலேந்திரபோளத்தூளை, உ - பையின்ட் ரெக்டிபையிட்ஸ்பிரிட் என்னும் சாராயத்தில், எ - நாள் ஊறவைத்து, வடிகட்டிக் கொள்ள வேண்டியது.

Use. உபயோகம்.—வாலேந்திர போளத்திலிருக்கிற ரோஜனத்தையும், தயிலத்தையும், சாராயம், கிரகித்துக்கொள்ளுகிறது. இதை ௦ - முதல், க - திராம், அள

வுக்குக்கொடுக்கலாம்; ஆனால், சாதாரணமாய், இதை மருந்துகளுக்குஉதவியாய்ச்சேர்ப்பதுண்டு, ரணங்களுக்குத் தடவப்படும்.

க்ஷயம், கரப்பான், குன்மம், சூலை, சொறி இவைகள் வாலேந்திரபோளத்துக்குப் போகுமென்று, பதார்த்தகுண சிந்தாமணியில் செப்பியிருக்கின்றது.

℞ Myrrhæ Contritæ gr.vij., Pulvis Ipecacuan. gr.iij; Potassæ Nitratis ℥ss. Mix and divide into 4 parts. One to be given every 4 hours. *Expectorant.* Dr. PARIS.

வாலேந்திரபோளத்தூள், எ - கிறேன்; இபிகாக், ங - கிறேன்; பொட்டிலுப்பு, ௳ திராம். இவைகளை மிஸ்ரமித்து, ச - பாகங்களாக்கி, ஒன்றை, ச - மணிநேரத்துக்கு ஒருதரம் கொடுத்துக்கொண்டுவர, கபத்தை வெளிப்படுத்தும். இது டாக்டர், "பாரிஸ்" என்பவருடையமுறை.

℞ Ferri Subcarbonas ℥ss., Pulv. Myrrhæ, Ext. Aloes Pur. ana gr. xx.; Pulvis Rhei, gr.vi., Syrupi Zingib. q. s. Misce, ut fiant pilulæ xviij. Sumat ij vel iij bis in die. *In Amenorrhœa.*—Mr. SAVORY.

அயச் செந்தூரம், ௳ - திராம்; வாலேந்திரபோளத்தூள், உ௰ - கிறேன்; தோஷமில்லாத மூஷாம்பரசத்து, உ௰ - கிறேன்; ரேவல் சின்னித்தூள், சா - கிறேன்; சுக்குப் பாணிதம், தேவையானதைச் சேர்த்து மிஸ்ரமித்து, ௰அ - மாத்திரைகளாய்ப்பாகித்து, உ - அல்லது, ங - மாத்திரை வீதம், தினத்துக்கு அந்தி சந்தி இரண்டுவேளை, "ருதுகக்கட்டுக்கு" கொடுக்கலாம். இது "ஸேவொரி" யென்பவருடைய முறை.

## ACACIA. ACACIA GUMMI. *Gum Acacia or Gum Arabic.*

கம் அராபிக். அரப்தேசத்துப்பிசின். விளாம்பிசின். (பிசின்.)

PROP. குணங்கள்.—இந்தப் பிசின் பலசாதிசெடிகளி லிருந்து எடுக்கப்படுகிறது, இது விளாமரத்திலிருந்து வடிகிற பிசினியைப்போல்இருப்பதால், விளாம்பிசின்என்று சொல்லுகிறார்கள். இந்தப்பிசினிக்கு வாசனையும் ருசியும்இல்லை; மேடுபள்ளமுள்ள துண்டுகளாயும், வெள்ளையாயாவது, மஞ்சள் நிறமாயாவது இருக்கும்; எளிதில் தூளாகிவிடும்; துண்டித்தவிடம், பளபளப்புக் கொடுக்கும்; ஜலத்தில் கரையும், சாராயத்தில் கரையாது. இந்தப்பிசினியுடன், பலசாதி பிசினியைக்கலந்து விற்பதும் உண்டு.

ACTION. Demulcent.

செய்கை.—வழவழப்பாக்கி.

USE. In Catarrh, Pertussis, Ardor Urinæ, &c.

உபயோகம்.—இருமல், கக்கிருமல், மூத்திரக்கிரிச்சம் இவைமுதலிய ரோகங்களுக்குக்கொடுக்கலாம். ஜலத்தில் கரையாத மருந்துகளை, விளாம்பிசினியைச்சேர்த்து ஜலத்தைத்தளமாக்கி, அதில் மேற்படி அவுஷதங்களைக் கூட்டினால், மிஸ்ரமமாகும். விளாம்பிசினியைச் சேர்த்தால், எளிதில் மாத்திரைகளாகும். விளாம்பிசின் கட்டியை, வாயில் அடக்கிவைத்திருந்து ரஸத்தை விழுங்கினால், புகைந்து வருகிறஇருமல் தணியும், நெஞ்சு எரிச்சல் நீங்கிவிடும்.

DOSE. ʒj to ʒij.

௸. அளவு.—க - முதல், உ - திராம் அளவுக்குக் கொடுக்கலாம்.

INC. சத்துருபதார்த்தங்கள்.—வங்க உப்பு, சாராயம், அயத்திராவகம் இவைகளை விளாம்பிசினியோடு சேர்க்கலாகாது.

### Mistura Acaciæ. *Mucilage.*

மியுஸிலேஜ். விளாம்பிசின்பாகு.

PREP. (Powdered Acacia ℥x., Boiling Dist. water, Oj.)

செய்முறை.—ய - அவு. விளாம்பிசின் தூளில், க - பையி. கொதிக்கக் காய்ந்தவெந்நீரை, கொஞ்சங் கொஞ்சமாய்விட்டு, பிசின் கரைந்துபோகிறவரையில் அரைத்துக்கொள்ளவும்.

குழந்தைகளுக்குக் காணுகிற இருமலுக்கு.—விளாம்பிசின்பாகு கஉ - அவு. சருக்கரைப்பாகு, உ - அவு. ஜலம் கஉ - அவு. இ. மி. இதில் ஒருடேபில் ஸ்பூன்என்னும் கரண்டியளவீதம், கொடுத்துக் கொண்டுவந்தால் இருமல் தணியும்.

உ - அவு. விளாம்பிசினியின் தூளில், உ - அவு. நல்லதேனைச்சேர்த்து, இதில் ஒருதேயிலைக்கரண்டியளவீதம் அடிக்கடிக் கொடுத்துக்கொண்டுவந்தால், இருமல் தணியும்.

நீர்ச்சுருக்குக்கு.—விளாம்பிசின் தூள், க - அவு. சருக்கரைப்பாகு, உ - அவு. ஜலம், கஉ - பைபி. இ. மி. இதில் ஒருவயின் கிளாஸ் அளவுக்கு அடிக்கடிக் கொடுக்கவும்.

### Trochisci Acaciæ. *Acacia Lozenges.*

அக்கேஷிய லாஸென்ஜெஸ். விளாம்பிசின் பில்லைகள்.

PREP. (Gum Arabic ℥iv., Starch ℥j., Pure Sugar ℔j. Rose-water q.s.)

செய்முறை.—ச - அவு. விளாம்பிசின் தூள்; க - அவு. மாவு; க - பவு. நல்ல சருக்கரை. இவைகளைச்சேர்த்து, தேவையான பனிநீர்விட்டுப் பிசைந்து, உண்டைசெய்து, பில்லைகளாகச் செய்துகொள்ளவேண்டியது.

### CATECHU. *Acacia Catechu.* Extract of the wood.

காடிகியு. காசுக்கட்டி.

PROP. குணங்கள்.—அக்கேஷியா காடிகியு (Acacia Catechu) என்னும் செடியின் கட்டையைப் பிளந்து, ஜலத்திற்போட்டு, சத்துஇறங்கும்படிக் காய்ச்சி வடிகட்டி, பிறகு அந்தக்கஷாயத்தைச் சுண்டக்காய்ச்சினால், சத்து கெட்டியாகும். இதைக் காசுக்கட்டியென்று சொல்லப்படும். காசுக்கட்டியில் மூன்றுநிறமுண்டு; அதில் சிவந்திருப்பது நல்லசரக்கு. காசுக்கட்டியானது, வாசனையில்லாமல், துவர்ப்பும், பிசுபிசுப்பும், தித்திப்பும் உள்ளதாய் இருக்கும்; ஜலத்திலும், சாராயத்திலும் கரையும்.

ACTION. Astringent.

செய்கை.—ஸங்கோசனகாரி.

USE. In Diarrhœa, Intestinal Hæmorrhages, Aphthæ, Ulceration of the gums, Coughs, Hoarseness, &c.

உபயோகம்.—அதிசாரம், சீதபேதி, அக்ஷரம், பல்லரணை, இருமல், தொண்டைக்கம்மல், வெள்ளை, மூலைக்காம்பு வெடிப்பு, அதிகசீழ்வடிகிற ரணம், இவைமுதலிய ரோகங்களுக்கு உபயோகிக்கலாம். மேல்கண்டரோகங்களில், தாபஜ்ஜுணங்கள் தொடர்ந்திருந்தால், இதைக்கொடுக்கலாகாது.

DOSE. gr.x.—gr.xxx. or more.

ஒ. அளவு.—ய - முதல், ௩ய-கிறேன், அல்லது, இன்னம் அதிகஅளவிலாவது கொடுக்கலாம்.

**Infusum Catechu Compositum.** *Compound Infusion of Catechu.*
கம்பவுன் இன்பியுஷன் ஆவ் காடிகியு. காசுக்கட்டியின் மிஸ்ரம.
வெந்நீர்க்கஷாயம்.

PREP. (Catechu ʒvj. Cinnamon ʒj. Aq. dest Oj.)

செய்முறை.—க - பைபி. கொதிக்கக்காய்ந்த வெந்நீரில், கூ - திரா. காசுக்கட்டித்தூளையும், க - திரா. இடித்தலவங்கப்பட்டையும் சேர்த்து மூடி, க - மணிநேரம் ஊறவைத்து, வடிகட்டிக்கொள்ளவும்.

DOSE. ℥jss.

ஓ. அளவு.—கய - அவு. அளவுக்கு தினத்துக்கு, ங - ச - தடவை கொடுக்கலாம். இதற்கு மெத்தத்துவர்ப்புஉண்டு.

**Tinctura Catechu Composita.** *Compound Tincture of Catechu.*
கம்பவுன்டிங்சர் ஆவ் காடிகியு. காசுக்கட்டிக் கலவைபாவனத்திரவம்.

PREP. (Catechu ℥iijss., Cinnamon ℥ijss., Proof Spirit Oij.)

செய்முறை.—ஙய - அவு. காசுக்கட்டித்தூள், உய - அவு. இடித்த லவங்கப்பட்டை; இவைகளை உ - பைபி. புருவ்ஸ்ரிட் என்னும் சாராயத்தில்போட்டு, எ - நாள்ஊறவைத்து வடிகட்டிக்கொள்ளவும்.

USE, உபயோகம்.—இதைச் சீமைசுண்ணாம்புப் பாகுடன்கலந்து, அதிசாரபேதிக்குக் கொடுக்கலாம்.

DOSE. fʒj.—fʒij.

ஓ. அளவு.—க - முதல், உ - திராம் அளவுக்குக்கொடுக்கலாம்.

**Electuarium Catechu.** *Catechu Confection.*
காடிகியு கன் பெக்ஷன். காசுக்கட்டிலேகியம்.

PREP. (Take Catechu ℥iv. Kino ℥iv. Cinnamon ℥i. Nutmeg ℥i. Pulverize, then mix Opium diffused in a little Sherry Wine ʒiss. and Syrup of Red Roses reduced to the consistence of Honey Oiss. Beat into a uniform mass.)

செய்முறை.—ச - அவு. காசுக்கட்டி, ச - அவு. கைனோ, க - அவு. லவங்கப்பட்டை, க - அவு. சாதிக்காய் இவைகளைச் சூரணித்துக்கொள்ளவும். கய - திராம் அபினியைக் கொஞ்சம் ஷெரி ஒயின் என்னும் சாராயத்தில் கரைந்து, இதைத் தேன்பதமாய்ச் செய்துகொண்ட கய - பைபி. சிவப்பு ரோஜாப்பூ ரஸாயனத்தில் விட்டுக்கலந்து, இதில் ஷெ ரணத்தைப்போட்டு நன்றுப் மிஸ்ரமிக்கும்படி இடித்து, உண்டை செய்துகொள்ளவும்.

ACTION. Aromatic Astringent.

செய்கை.—ஸினிக்தகாரி.

DOSE. ℈j. ʒij.

ஓ. அளவு.—க - ஸ்குருபில் முதல், உ - திராம் வரையில் கொடுக்கலாம்.
க - அவு. லேகியத்தில், உவ - கிறேன் அபினி இருக்கின்றது.

INC. சத்துருபதார்த்தங்கள்.—யார்பிய, உப்பு இனங்கள் சுண்ணாம்புத் தண்ணீர், படிக்காரம், வெடியுப்பு, இபிகாக், முட்டையின் வெள்ளைக்கரு, இவைகள் இந்த மருந்தை முறித்துவிடும்.

*In Diarrhœa.* தாபன குணங்களில்லாத அதிசாரரோகத்துக்கு.—ய - கிறே. காசுக்கட்டி; ய - கிறேன் லவங்கப்பட்டைச் சூரணம், இவைகளைத் தேனிலாவது, அல்லது வெல்லத்திலாவது கலந்துகொடுக்கவும்.

காசுக்கட்டித்துண்டை, வாயில் அடக்கிவைத்திருந்தால், தொண்டைக்கம்மல் நீங்கும். ஒரு கட்டிச் சருக்கரையை, காசுக்கட்டிப்பாவனதிரவத்தில் தோய்த்து வாயில் போட்டுக்கொள்ளலாம். வாய் ரணமானதற்கும், உண்ணாக்கு வளர்ந்திருப்பதற்கும் இவ்விதமாய்ச் செய்யலாம்.

*In Leucorrhœa.* மாதருக்குக் காணுகிற வெள்ளைக்கு.—காசுக்கட்டியின் வெந்நீர்க்கஷாயத்தை, பீச்சாங்குழலால் யோனித்துவாரத்தில் அடிக்கலாம்.

க - திரா. காசுக்கட்டித்தூளை, க - அவு. வெண்ணெயிலாவது, அல்லது மெழுகுகளிம்புடன் ஆவது சேர்த்து மிஸ்ரமித்து, ஆறுமல் தீர்க்கந்தவாசனையோடு ஒழுகுகிற ரணங்களுக்குப்போடலாம். ரணங்களை இந்தக்கஷாயத்தினால் கழுவிக்கொண்டுவந்தாலும், நலந்தரும்.

*To Sore Nipples.* முலைக்காம்பு வெடித்து ரணமானதற்கு.—முலைக்காம்பை நன்றாய்க்கழுவிவிட்டு, காசுக்கட்டிப் பாவனத்திரவத்தை தடவிக்கொண்டுவந்தால், சவுக்கியப்படும்.

**LOGWOOD.** *Hæmatoxylum. Hæmatoxylon Campechianum.* Wood.

லாக்வுட். சாயமரம். (மரம்.)

ACTION. Mild Astringent, and Tonic.

செய்கை.—ஸ்தம்பகாரி, பலகாரி.

USE. In Chronic Diarrhœa, and Dysentery and Cholera Infantum.

உபயோகம்.—நாள்பட்ட உஷ்ணபேதி, வயிறுகொட்டல், குழந்தைகளுக்குக் காணுகிற வாந்திபேதி இவைகளுக்குக் கொடுக்கப்படுகிறது.

**Decoctum Hæmatoxyli.** *Decoction of Logwood.*

டிகாக்ஷன் ஆவ் லாக்உட். சாயமரக்கஷாயம்.

PREP. (Logwood-chips ʒx. Dist. Water. Oiss.) *Dose.* ℥j.—℥ij.

செய்முறை.—ய - திராம், சாயமரச்சிறுசக்கைகளை, கஅ - பையின்ட் ஆவிநீரில்போட்டு, க - பையின்டுக்குக் காய்ச்சி, ஜலத்தைவடிகட்டிக்கொள்ளவும்.

ACTION and USE. Astringent; used in Diarrhœa.

செய்கை.—உபயோகம்.—ஸ்தம்பகாரி, அதிசாரரோகத்துக்கு உபயோகப்படுகின்றது.

ஒ. அளவு.—க - உ - அவுன்ஸ் அளவுக்குக் கொடுக்கலாம்.

**Extractum Hæmatoxyli.** *Extract of Logwood.*

எகிஸ்டிராக்ட் ஆவ் லாக் உட். சாயமரச்சத்து.

செய்முறை.—உ௦ - பவுன் துண்டித்த சாயமரத்தை, உ - காலன் கொதிக்கக் காய்ந்த நீரில்போட்டு, உச - மணிநேரம் ஊறவைத்து, பிறகு, ௧ - காலனுக்குக் காய்ச்சி, சூடாயிருக்கும்போதே வடிகட்டி, மெழுக்குபதத்துக்குச் சுண்டக்காய்ச்சிக் கொள்ளவேண்டியது.

ஒ. அளவு.—ம - முதல், ௩ம - கிறேன் இடைக்குக்கொடுக்கலாம்.

Tamarindus. *Tamarindus Indica.* Pulp of the Pods. Fruit of the Common Tamarind Tree.

டமரின்ட். புளி.

TAMARINDUS PRÆPARATUS.—௫ - பவு. புளியை, அது முழுகும்படி ஜலத்தை விட்டு, ச - மணிநேரம் காய்ச்சி, பிரம்பு தல்லடையில் வடிகட்டி, பிறகு, அதை மயிர்ச்சல்லடையில் வடிகட்டி, முடிவில், ஜலயந்திரத்தில்வைத்து, லேகியப்பதத்துக்கு வரும்படிச் சுண்டக்காய்ச்சிக் கொள்ளவேண்டியது.

ACTION. Refrigerant, Laxative.

செய்கை.—சீதளகாரி, லகுவிரேசனகாரி.

USE. உபயோகம்.—சீதபேதி, சுரங்கள், இவைகளுக்குக் கொடுக்கலாம். உ - அவு. புளியை, க௦ - பையி. பாலில்போட்டுக் காய்ச்சி, வடிகட்டி, சுரங்களுக்குக் கொடுத்தால், தாகத்தை அடக்கும், வாய்க்கு இனிப்பாயும் இருக்கும். புளியைக் கரைத்து, சருக்கரையைச் சேர்த்து, சீதபேதிக்குக்கொடுக்கும்படி கண்டிருக்கின்றது.

DOSE. ℨss. to ℨij.

ஒ. அளவு.—ം - முதல், உ - திராம் அளவுக்குக் கொடுக்கலாம். சரக்கொன்றை, மேனு, இவைகளோடும் சேர்த்துக்கொடுப்பதும்உண்டு.

**CASSIA.** *Cassia Fistula. Purging Cassia.* Pulp of the Pods.

காஷிய. சரக்கொன்றை. கொன்றை. கொண்ணை. (புளி.)

PROP. குணங்கள்.—காய்நீண்டு உருண்டிருக்கும்; அதினுள்ளிருக்கிற புளி கறுத்து, பிசுபிசுப்புள்ளதாயும், தித்திப்புடைய ஒருமாதிரியான ருசியுள்ளதாய் இருக்கும்; தமட்டலைத்தருகிற வாசனையுண்டு. பருவாயும், விதைகள் ஆடாமலும் இருக்கிற காய்களைப் பொறுக்கிஎடுத்துக்கொள்ள வேண்டியது.

*Cassia Præparata.* சரக்கொன்றை புளியை சுத்திசெய்யுமுறை.—இத்தப்புளியை ஒருபாத்திரத்திற்போட்டு, அது முழுக ஜலம்விட்டு, ௬ - மணிநேரம் ஊறவிட்டு, பிசைந்து, மயிர்ச்சல்லடையில் வடிகட்டி, ஜலயந்திரத்தில்வைத்து, லேகியபதத்துக்குச் சுண்டக்காய்ச்சிக் கொள்ளவேண்டியது.

ACTION. Laxative, in large doses Purgative.

செய்கை.—மலகாரி. அதிகமாய் கொடுத்தால் பேதியாகும்.

DOSE. ℨi.—ℨij.

ஒ. அளவு—௧ - திராம் முதல், உ - அவுன்ஸ்வரையில் கொடுக்கலாம்.

34

சரக்கொன்றை புளியைமாத்திரம் கொடுத்தால், அதிகவயிற்றுக்கடுப்பு, குமட்டல், வாயு இவைகளை உண்டாக்கும்; ஆகையால் பேதிஉப்புடன்கலந்து கொடுக்கவேண்டியது.

**Confectio Cassiæ.** *Confection of Cassia.*

கன்பெக்ஷன் ஆவ் காஷியா. சரக்கொன்றை பழ லேகியம்.

Prep. (Dissolve Manna ℥ij., in Syrup of Rose f℥viij., add Prepared Cassia ℥vj., and Prepared Tamarind ℥j., evaporate to a proper consistence.)

செய்முறை.—உ - அவு. மேனுவை. அ - அவு. ரோஜாபூவின் ஷர்பத்தில் கரைத்து, சா - அவு. சுத்திசெய்த சரக்கொன்றை புளி, க - அவு. சுத்திசெய்தபுளி, இவைகளைச்சேர்த்து, பதத்துக்கு வரும்படி சுண்டக்காய்ச்சிக் கொள்ளவேண்டியது.

Action. Laxative.

செய்கை.—மலகாரி.

Dose. ʒij.—℥j.

ஓ. அளவு.—உ - திராம் முதல், க - அவு. வரையில் பெரியவர்களுக்குக் கொடுக்கலாம்.

சரக்கொன்றை விதைக்கும், இலைக்கும், மலத்தை உதைக்கிற குணம்உண்டு.

சரக்கொன்றை புளியுடன், மிளகாய், உப்பு, புளி, சருக்கரை, இஞ்சி முதலியவைகளைச் சேர்த்து, துவையல்செய்து, இராப்போஜனத்துடன் கொட்டைப்பாக்குப் பரிமாணம், சாப்பிட்டுக்கொண்டுவந்தால், காலையில் மலம் தாராளமாய் இறக்கும். இந்தப்புளியை, மிளகுநீராகச்செய்தும், சாப்பிடலாம்.

சரக்கொன்றை பூவை, வெந்நீர்க்கஷாயஞ் செய்துகொடுப்பதும் உண்டு.

சரக்கொன்றை கொழுந்தை வதக்கி, மேற்சொன்னபடி துவையல்செய்து, சாப்பிட்டுக்கொண்டுவந்தால், மலபந்தத்தைப் போக்கும். கொழுந்தை, கீரையில் கடைந்தும் சாப்பிடலாம்.

சரக்கொன்றை வேருக்கு, சுரத்தை கண்டிக்கிற குணம்உண்டு.

**SENNA.** *Sennæ Folia. The Leaves of Cassia Lanceolata, C. Ovata, C. Obovata and other species of Cassia.* Senna-leaves.

ஸென்னு. நிலஆவாரை. குரத்து நிலஆவாரை. (இலை.)

Prop. குணங்கள்.—நிலஆவாரையானது அநேகதேசங்களில் விளைந்துவருகின்றது; அவைகள் ரூபத்தில் வித்தியாசப்படும்; திருநெல்வேலியில் விளைந்துவருகிற சரக்கு சிரேஷ்டமானது. நிலஆவாரை, கசப்பும், வெகுட்டலு முள்ளதாய் இருக்கும்.

Action. Purgative.

செய்கை.—விரேசனகாரி.

Use. In Costiveness, Dropsy,

உபயோகம்.—பேதி மருந்துகளுக்குள், நிலஆவாரையை அடிக்கடி உபயோகப்படுத்தப்படும்; மலச்சிக்கல், நீரேற்றம் இவைகளுக்கு உபயோகிக்கலாம்; இதுகொஞ்சம் உஷ்ணஞ்செய்து, வயிற்றுக்கடுப்பையும், வாய்க்குமட்டலையும்உண்டாக்கும்: ஆகை

ஆரோக்கியமாய்ப் பேதியாகும். நிலஆவாரை வெந்நீர்க்கஷாயத்துடன், பேதிஉப்புகளை ச்சேர்த்துக் கொடுப்பதுவழக்கம். சீமை இந்துப்பு(Epsom Salts), திராக்ஷஉப்பு, சுக்கு, இவைகளில் எதையாவது சேர்த்துக்கொடுத்தால், வயிற்றுக் கடுப்பை யுண்டாக்கிற குணத்தைச் சமனப்படுத்தும்; சுரச்சிகிச்சையில், நந்தபேதி மருந்தை வழக்கமாய்க் கொடுக்கப்படுகின்றது. வயிறுபுண்ணாயிருக்கிறபோது, இதைக்கொடுக்கலாகாது; நில ஆவாரை முக்கியமாய் சிறுகுடலில் வியாபித்து, பேதியையுண்டாக்கும்; குழந்தைகளுக் குப்பாலூட்டும்மாதர்கள், இதைச்சாப்பிட்டால், இதன்குணம் முலைப்பாலில் இறங்கிகு ழந்தைக்குபேதியாகும். இதைக்கருப்பிணிகளுக்கும், மூலரோகிகளுக்கும் கொடுப்பதுவ ழக்கமில்லை. நிலஆவாரைக் கஷாயமும், உப்பும்சேர்த்துக் கொடுக்கிற பேதிக்கு, "பிளாக் டிராப்ட்" (Black Draught) என்றுபேர். இதுசாதாரணமாய், ௪-மணிநேரத்துக்குள் பேதியை உண்டுபண்ணும்; மெத்தஜலம் சாப்பிட்டால் அதிகமாய் பேதியாகும்; கர்ப் பூரம், இந்துப்புமுதலிய உப்புகள் பேதியை அதிகப்படுத்தும். நிலஆவாரையை அடுப் பில் வைத்துக்காய்ச்சுவதிலும், நாள்படவைத்திருப்பதிலும், ரேவல் சின்னி என்கிறம ருந்தைச் சேர்ப்பதிலும், அதன்குணம் குறையும், அல்லது கெட்டுப்போகும். காப்பி (Coffee) அல்லது பாலும் சருக்கரையும் சேர்த்தால், வெகுட்டலை நீக்கி, இனிப்புண்டா க்கும், அப்போது தேயிலைத் தண்ணீரைப்போல்இருக்கும். இதைவழக்கமாய் நாள்தோ றும், எடுத்துக்கொள்ளும்போது, சிற்றுமணக்கெண்ணெயைப்போல், அளவைக்குறை த்து எடுத்துக்கொள்ளவேண்டியது. இந்தஇலையை வயிற்றுக்குஒற்றிடம்கொடுத்தால், பேதியாகுமென்றும் கண்டிருக்கின்றது.

Dose.—Of the powder ʒss. to ʒij.

ஒ. அளவு — நில ஆவாரைச் சூரணத்தில், ½ - முதல், ௨ - திராம் அளவுக்கு க்கொடுக்கலாம். இதை திராக்ஷஉப்போடு சேர்த்தரைத்து, வயிறு கடுக்காமலிருக்கக் கொஞ்சம் சுக்குத்தூள் சேர்த்துக்கொடுக்கப் பேதியாகும். சருக்கரையோடும் அனுபா னிக்கலாம்; ஆனால், கஷாயமே தகுதியானது.

**Infusum Sennæ Compositum**. *Infusion of Senna.*

இன்பியுஷன் ஆவ் ஸென்னு. நிலஆவாரை வெந்நீர்க்கஷாயம்.

Prep. (Senna ʒxv., Bruised ginger ℈iv., Boiling Dist. Water Oj.) *Dose.* ℥iss—iij.

செய்முறை.—௰௫ - திராம், நிலஆவாரை, ௪ - ஸ்குருபில் நொறுக்கிய சுக்குத் தூள், இவைகளை, ௧ - பையின்ட் கொதிக்ககாய்ந்த ஆவிநீரில்போட்டு, மூடி, ௧ - மணி நேரம் ஊறவைத்து, வடிகட்டிக்கொள்ளவேண்டியது.

குளிர்ந்த ஜலத்திலாவது, கல்கூறு காய்ந்தஜலத்திலாவது, ஊறவைத்து செய் த கஷாயம், வயிற்றை மெத்தக்கடுக்கமாட்டாது. நாள்படவைத்தால் கெட்டுப்போ கும்; அது வயிற்றை மெத்தக் கடுக்கும், பேதியாகாது. பேதிஉப்புகளையும், பாவனத் திரவங்களையும் இந்தக்கஷாயத்தோடு சேர்த்து வழக்கமாய்க் கொடுப்பதும் உண்டு. இதற்கு பிளாக்டோஸ். (Black Dose) என்றுபெர்.

ஒ. அளவு.—௧½ - முதல், ௩ - அவுன்ஸ் அளவுக்குக் கொடுக்கலாம்.

### Tinctura Sennæ Composita. *Compound Tincture of Senna.*

கம்பவுன் டிங்சர் ஆவ் ஸென்ன. நிலஆவாரை மிசிரபானத் திராவம்.

PREP. (Senna ℥iijss., Bruised Caraway ʒiijss., Bruised Cardamons ʒj., Raisins ℥v., Proof Spirit Oij.) *Dose.* ʒij.

செய்முறை.—௩௨ - அவ. நில ஆவாரை, ௩௨-திராம் நொறுக்கிய கேக்விதை; ௧ - திராம், நொறுக்கிய ஏலரிசி; ௫ - அவ. விதையில்லாத திராக்ஷபழம்; இவைகளை, ௨ - பையி. புரூவ்ஸ்பிரிட் என்னும் சாராயத்தில்போட்டு, ௭ - நாள்ஊறவைத்து, வடிகட்டிக்கொள்ளவும்.

ஓ. அளவு.—௨ - திராம் அளவுக்குக் கஷாயத்தோடுகொடுப்பது வழக்கம். சிலவேளை, ௨ - அவுன்ஸ் தனியாய்க் கொடுப்பதும்உண்டு.

### Syrupus Sennæ. *Syrup of Senna.*

ஸிரப் ஆவ் ஸென்ன. நிலஆவாரை ஷர்பத். நிலஆவாரை பாணிதம்.

PREP. (Senna ℥iijss., Fennel, bruised ʒx., Manna ℥iij., Boiling dist. water Oj., treacle ℔iij.) A laxative for children, to whom it may be given in *Dose* of ʒj.—iij.

செய்முறை.—௩௨ - அவுன்ஸ். நிலஆவாரை; ௰ - திராம். நொறுக்கிய பெருஞ்சீரகம்; இவைகளை, ௧ - பையி. கொதிக்கக்காய்ந்த ஆவிநீரில்போட்டு, ௬ - மணிநேரம் கிழநியில் வெதுப்பி, பிறகு வினக்கெடுக்கிற சீலையில் ஊற்றிப்பிழிந்து, அந்தக்கஷாயத்தில், ௩ - அவ. மேனாவைச்சேர்த்துக் கொள்ளவும்; ௩ - பவுன் வெல்லப்பாகை ஜலயந்திரத்தில்வைத்து, மேலேநிகட்டி வரும்படியான பதந்துக்குக்காய்ச்சி, சூடாயிருக்கிறபோதே, இந்த கஷாயத்தைச்சேர்ந்து, இரண்டும் செவ்வையாய் மிஸ்ரமிக்கிறவரையில் சாக்கிரதையாய் கிழவவேண்டியது. இந்தப் பாணிதம், வாய்க்கினிப்பாய் இருக்கும், குமட்டலையும், வயிற்றுக்கடுப்பையும் உண்டாக்காது.

ஓ. அளவு.—௩ - திராம் பெரியவர்களுக்கும், ௧ - முதல், ௩ -திராம், குழந்தைகளுக்கும் கொடுக்கலாம்.

### Confectio Sennæ. *Confection of Senna.*

கன்பெக்ஷன் ஆவ் ஸென்ன. நிலஆவாரை லேகியம்.

PREP. (Senna ℥viij., Coriander ℥iv., Aq. Oiij., Figs ℔j., Fresh bruised Liquorice ℥iij., Sugar ℔ijss., Prepared Prunes ℔ss., Cassia ℔ss., Tamarind ℔ss.) *Dose.* ʒiv.

செய்முறை.—௧ - பவுன், சீமை அத்திப்பழம், ௩ - அவ. இளைந்த பச்சை அதிமதுரம், இவைகளை [illegible] - பையிண்டு ஜலத்தில்போட்டு, [illegible] - பையிண்டு ஜலம் [illegible] காய்ச்சி, பிழிந்து வடிகட்டி, இதை ஜலயந்திரத்தில் வைத்து, ௨௪ - அவுன்ஸ் [illegible] [illegible], இதில் [illegible] - பவுன் சருக்கரையைச் சேர்த்து பாகுசெய்து, இதி[illegible], [illegible] செய்த [illegible] (Prepared Prunes), [illegible] கொன்றைப்புளி, புளிப்புளி, இவைக[illegible] [illegible] - [illegible] - [illegible] - பவுன், [illegible] சேர்த்து அரைத்து, பிறகு, அ - அவுன்ஸ், நில

ஆவாரை, ச - அவுன்ஸ் கொத்துமல்லிவிதை, இவைகளைச் சூரணித்து வஸ்திரகாயஞ் செய்து, இதில் ம - அவுன்ஸ் சூரணத்தை மேற்படி பாகில்போட்டுக் கிளறி, மிஸ்ரமித்துக்கொள்ளவேண்டியது.

ஒ. அளவு.—க - முதல், ச - திராம் அளவுக்குக் கொடுத்தால் பேதியாகும். மலபந்தமுடையவர்களுக்கு, இதை மெத்த உபயோகப்படுத்தப்படும்.

உ - விராகனெடை, நிலஆவாரையும், அதற்குத்தகுந்த சுக்கு,கொத்துமல்லி,சோம்பு, இவைகளைச்சேர்த்து, ஙு - ஆழாக்கு வெந்நீரில், க - மணிநேரம் ஊறவைத்து, வடிகட்டி, பிறகு அதில் பாலும், சருக்கரையுங்கலந்து, தேயிலை தண்ணீர்போல் சாப்பிட்டால், செவ்வையாய்ப் பேதியாகும்.

நிலஆவாரை, உ - விராகனெடை; நிலவேம்பு,கொத்துமல்லிவிதை, சுக்கு, சோம்பு, கடுக்காய்ப் பிஞ்சு, ஆரஞ்சிப் பழத்தோல், ரோஜாமொக்கு, வகை - க க்கு - க - விராகனெடை, எப்ஸம்ஸால்ட், ச - கூ - விராகனெடை, இவைகளை, இராத்திரியில், படுத்துக்கொள்ளப்போகும்போது, ஙு - ஆழாக்கு வெந்நீரில்போட்டு, ஊறவைத்து, காலையில்வடிகட்டிச் சாப்பிட்டால், ஆரோக்கியமாய்ப் பேதியாகும்.

நில ஆவாரையுடன், புதுப்புளி, இஞ்சி, பச்சைக்கொத்துமல்லி, சருக்கரை, எலுமிச்சம்பழரசம், திராக்ஷப்பழம், உப்பு, மிளகாய், இவைகளைச்சேர்த்து துவையல்செய்து தாளித்து இதில் கொட்டைப்பாக்குப் பரிமாணம், இராபோஜனத்துடன் சாப்பிட்டுக்கொண்டு வந்தால், கிரமமாய்க் காலப்பிரவர்த்தியாகி தேகத்துக்கு ஆரோக்கியமுண்டாகும்.

நிலஆவாரை, சுக்கு, மிளகு, வாய்விளங்கம், ஓமம், வகை, க-க்கு, க-பலம்; இவைகளை வெய்யிலில் உலர்த்தி, சிதறாமல் இடித்துச் சூரணமாக்கி, இதில் சருக்கரையைச் சமனெடையாய்ச்சேர்த்து. வெந்நீரில் மிதமாய் நித்தியம் இரண்டுவேளையுஞ் சாப்பிட்டுக்கொண்டுவந்தால், வாயு, பித்தம், உஷ்ணம், பொருமல், விம்மல், சிலேற்றுமத்திலெடுத்த நோய்கள், விக்கல், வாந்தி, உடம்பெரிவு, சுவாசகாசம், நீரருகல், மலபந்தம், வயிறுவிம்மல், இருமல், அஷ்டகுன்மங்கள், மகோதரம், கெர்ப்பவலி, கெர்ப்பரோகம், புழுக்கள் முதலிய வயிற்றில் காணுகிற சகலரோகங்களும் நிவர்த்தியாகும். இது அகஸ்தியர் முறை.

கடுக்காய்ப் பிஞ்சு, சூரத்துக்கடுக்காய், தான்றிக்காய், நெல்லிவற்றல், சூரத்துக் கருப்புப்பு, சுக்கு, சோம்பு, வகை. க - க்கு - ஹ - பலம், கடுக்காய், நிலஆவாரை, வகை க - க்கு - க-பலம்; கொத்துமல்லி, கஹ - பலம்; இவைகளை இடித்துச் சூரணஞ்செய்து, திட்டமாய்த் தேன்சேர்த்துப்பிசைந்து வைத்துக்கொண்டு, க - கூ - கொட்டைப்பாக்குப் பரிமாணம், இராக்காலத்தில் சாப்பிட்டுக்கொண்டுவந்தால், அன்றுடம் காலையில் தாராளமாய் மலம்இறங்கும், சரீர ஆரோக்கியமுண்டாகும்.

நிலஆவாரை வெந்நீர்க்கஷாயம் உ - அவு., சீமை இந்துப்பு, ச - கூ - அவு., அல் [illegible], ஈ - திரா., நிலஆவாரைப் பாவனத்திரவம், ௬ - திரா., ஜாலப்பாவனத்திரவம், ௬ - திரா. சுக்குபாவனத்திரவம், ஹ - திராம், ஜென்ஷென் பாவனத்திரவம், [illegible] திராம். இவைகளை மிஸ்ரமித்துக் கொடுத்தால், செவ்வையாய்ப் பேதியாகும்.

[illegible] (Blue pill) [illegible] மெழுக்கைச்சேர்த்து மாத்திரைசெய்து, இராத்திரியில் கொடுத்து, காலையில் மேல்கண்ட பேதிமருந்தைக் கொடுத்தால் பேதியாகும்.

நில ஆவாரைச் சூரணம், குவயாகம், (Guaiacum), இவைகளைச் சமனெடையாகச் சேர்த்து, க - விராகனெடை வீதம், தினந்தோறும், உ - ௩ - தடவை சருக்கரையிற் கலந்துகொடுத்துக்கொண்டுவந்தால், மஞ்சள்காமாலை ஸொஸ்தமாகும்.

நில ஆவாரை லேகியம், க0 - அவுன்ஸ், ஜாலப்சூரணம், ௧ - திராம் ; கந்தகம், ௧ அவுன்ஸ, நிலஆவாரை பாணிதம் தேவையானதைச் சேர்த்து மிஸ்ரமித்து, இதில் கொஞ்சம் சாப்பிட்டுக்கொண்டுவந்தால், மூலரோகத்தைக் கண்டிக்கும்.

நில ஆவாரை லேகியம், க0 - அவு. கிராகூஉப்பு, உ - திரா. ஜாலப், ௧ - திராம்; சருக்கரைப்பாகு தேவையானதைச் சேர்த்து மிஸ்ரமித்து, இதில் கொட்டைப்பாக்கு ப் பரிமாணம், அந்திசந்தி இரண்டுவேளையும், சாப்பிட்டுக்கொண்டுவந்தால் மலச்சிக்கலை நீக்கிவிடும்.

**COPAIBA**. *Copaiva. Copaiva Balsam. Balsam of Copaiba.* Fluid resinous exudation of several species of Copaifera.

கொபேபா. பால்ஸம் ஆவ் கொபேபா. குங்கிலியத் தயிலம்,

PROP. குணங்கள்.—கொபேபா என்கிற சரக்கை, அனேகஜாதி மரத்திலிருந்து சேகரிக்கப்படுகின்றது அடிமரத்தை ஆழமாகக் கீறி, அதிலிருந்து வடிகிற தயிலத்தை எடுத்துக்கொள்ளப்படும். ஒவ்வொருவேளை, ௰உ-பவுன்தயிலம், ௩-மணி நேரத்தில் வடியும் ; ஒருவருஷத்தில் சில செடிகளில், உ - ௩- தடவை தயிலத்தை எடுக்கப்படுகின்றது. பால்ஸம் ஆவ் கொபேபா என்கிற குங்கிலியத் தயிலமானது, திவ்வியமாய், கொஞ்சம் மஞ்சள் நிறமாயும், எண்ணெய்யைப்போலிருக்கும் ; ஒருவிதமான வாசனைவீசும், அது சிலருக்குச் சகிக்கக்கூடாமலிருக்கும் ; கசப்பாய் கறகறவென்று, வெகுட்டலையுடையதாய் இருக்கும்; காற்றுப்படவைத்திருந்தால், மெத்த இறுகலாகி, கறுத்துவிடும். இது ஆல்கோஹல் என்கிற சாராயத்திலும், எண்ணெய்களிலும் மிஸ்ரமாகிவிடும், ஆனால் ஜலத்தில் ஆகாது; ஆல்கெலீஸ் என்கிற உப்புகளைச் சேர்த்தால் சவுக்காரமாகும் ; இதில் அதிக ஜலம்விட்டால் பிரிந்துவிடும்.

ADULTERATION. குங்கிலியத் தயிலத்தில், வழக்கமாய், வேறுதயிலங்களைக் கலந்து விற்கின்றார்கள் ; தோஷம் அற்ற தனிச்சரக்கு அகப்படுகிறது கடினம்.

ACTION. Stimulant of Mucous Membranes, especially of the Urinary Passages. In large doses, Cathartic and Diuretic.

செய்கை.— இந்தத் தயிலம் பிரதானமாய் மூத்திரதாரையில் சென்று குணத்தைக்காட்டும். அதிகமானல் பேதியாகும் ; நீரை அதிகப்படுத்தும்.

USE. In Gonorrhœa, Leucorrhœa, Piles, Chronic Coughs, &c. *Externally*, to indolent Ulcers.

உபயோகம்.—இந்தக் குங்கிலியத்தயிலத்தை, முக்கியமாய் வெள்ளைவிழுதலுக்கு, உபயோகப்படுகின்றது; அந்தரோகத்துக்கு இதைவிட பெரியமருந்து வேறில்லை; வெள்ளைகண்டபோதே இதைக்கொடுத்தால், அதிக்குறையில் ஸொஸ்தப்படுத்தும் ; வியாதி நீங்கினபிறகும், அ - ௰ - நாள்வரைக்கு இதைக்கொடுத்தால் மெத்த நன்மையுண்டாகும். இதைக் கொஞ்சநாளைக்கு விடாமல்கொடுத்தால் பேதிகாணும் ; அப்போது மருந்து உடம்பில்பற்றிப் பிடித்ததென்று நிச்சயிக்கவேண்டியது. நத்திமேகரோகத்துக்கு, இந்த தயிலத்தை பூஜி (Bougie) என்னும் மெழுக்குத்துணி கிளாக்கில் தடவி, நீர்த்தாரையில்விட்டால், வியாதி நீங்கும். மாதர்களுக்குக் காணுகிறவெள்ளை, மூலரோகம்,

காலரோகங்கள், இவைமுதலிய வைகளுக்கும் உபயோகப்படுத்தி குணத்தைக்கண்ட தாய், தெரியவருகின்றது. விரணச்சிகிச்சையில் இதை ரணத்தின்மேல் தடவலாம்.

DOSE. ♏xv.—♏xxx or even ʒj.

ஒ. அளவு.—௰௫ - முதல், ௩௰ - துளியாவது, அல்லது, ௧–திராம் அளவுக்கா வது படிப்படியாய் அதிகரித்து, திரிசந்தியாகால அளவாய்க் கொடுக்கலாம்; இதுமெ த்த வெருட்டலானதால், வாசனையுடைய பதார்த்தங்களில் எதையாவது சேர்த்து, அல்லது ஜலத்தில் துளிக்கணக்காய் விட்டு, வாசனையுடைய ஆரஞ்சித்தோல் பாவனத் திரவத்தைச் சேர்த்தாவது, அல்லது வினாம்பிகின்பாகு, முட்டை, இவைகளில் எதை யாவது சேர்த்துக்குழம்பாக்கி கொடுக்கலாம். பாலில் சிலவேளை கொடுப்பதுமுண்டு. ஜெலடன் (Gelatine) என்னும் பசைக்குள்வைத்து மாத்திரையாகச் செய்தும் உட்கொ ள்ளப்படும். இதற்கு கொபேபா காப்குல் (Copaiba capsule) என்றுபேர்.

**Oleum Copaibæ.** *Volatile Oil of Copaiva.*

ஆயல் ஆவ் கொபேவா.

PREP. (Distil Copaiva f℥i., with water Oiss., and separate the Oil.) *Dose.* ♏x.—xxx.

செய்முறை.—௧ - அவு. கொபேவா என்னும் தயிலத்தை, ௧௨ - பயின்ட் ஜல த்தில்விட்டு, வாலேபிவிட்டிறக்கி தயிலத்தைப் பிரித்துக்கொள்ளவேண்டியது.

ஒ. அளவு.—௰ - முதல், ௩௰ - மினிம் அளவுக்குக் கொடுக்கலாம். இதை ஜெல டன் (Gelatine) என்னும் பசையில்வைத்து உண்டைகளாகச் செய்து விற்கப்படும்.

℞ Copaibæ ʒiij., Pulv. Cupebæ ʒivss., Pulv. Jalapæ gr. xlv., Mellis q. s. Mix and make into an electuary. Half to be taken in the morning and the remaining half in the evening. *In Gonorrhœa*—M. *Daiday.*

குங்கிலியத் தயிலம், ௩ - திராம்; வால்மிளகுத்தூள், ௪௨- திராம்; ஜாலப்தூள், ௪௫- கிறேன்; தேன் தேவையான அளவைச்சேர்த்து லேகியமாக்கி, பாதிகாலேயிலும், மற்ற பாதி மாலேயிலும், வெள்ளை விழுதலுக்குக் கொடுக்கும்படி "டிடே" என்கிற துரை சொல்லுகிறார்.

**BALSAMUM PERUVIANUM.** *Balsam of Peru.* Fluid Balsamic exudation of Myroxylon (Myrospermum) Peruiferum.

பால்ஸம் ஆவ் பிரு.

PROP. குணங்கள்.—இது செடியிலிருந்து எடுக்கிற ஒருவித குங்கிலியத் தயிலம். இதை அடிமரத்தைக்கீறி எடுக்கப்படும். இது வெல்லப்பாகைப்போல் கறுப் பும் சிவப்பும் கலந்தவன்னமாய் இருக்கும்; ஒருவித சாம்பிராணி வாசனை வீசும்: கசப் பாய் இருக்கும்.

ACTION.—Stimulant, Expectorant.

செய்கை.—உஷ்ணகாரி, கபஹரகாரி.

USE. In Chronic Catarrhs, Leucorrhœa, Gonorrhœa, Chronic Rheumatism, Amenorrhœa, Diabetes. *Externally,* to unhealthyu lcers, Sore Nipples, Baldness.

உபயோகம்.—நாள்பட்ட இருமல் ரோகங்களுக்கு தாபிதகுணங்கள் இல்லா மல் இருக்கிறபோது, இந்த மருந்து உபயோகப்படும். எலும்புருக்கி ரோகம், பிரமே

கம், நாள்பட்ட மேல்வாதரோகம், மூத்திரக்கட்டு, மத்ராச்சத்திர ரோகம், முதலியவைகளுக்கும் உபயோகப்பட்டு வருகின்றது. மேல் தடவினால், அழுகிய விரணங்களை ஆற்றும்; புகை நீராம்பு விரணத்தைப்போக்கும், தலைமயிரை முளைக்கச் செய்யும்.

DOSE. ♏xv.—xxx. made into emulsion with Mucilage or Yolk of Egg.

ஒ. அளவு.—டு - முதல் ௩0 - துளிவரையில், விளாம்பிசினியோடாவது, முட்டையின் மஞ்சள் கருவோடாவது சேர்த்துக் குழப்பிக் கொடுக்கலாம்.

**Balsamum Tolutanum.** *Balsam of Tolu.* Concrete Balsamic Exudation of Myroxylon (Myrospermum) Toluiferum.

பால்ஸம் ஆவ் டொலு.

PROP. குணங்கள்.—இந்த மருந்து நல்ல வாசனையாயும், சிகப்பும் மஞ்சளும் கலந்த வன்னமாயாவது, அல்லது ஊதாநிறமாயாவது இருக்கும்; இது எப்போதும் உலர்ந்து கட்டியாய் இருக்கும்; எளிதில் தூளாகும். புது சரக்கு, இளகலாய் நடிப்பேறி தேனைப்போலிருக்கும். காரமாயும் தித்திப்பாயுமிருக்கும்.

ACTION.—Stimulant, Expectorant.

செய்கை.—உஷ்ணகாரி, கபஹரகாரி.

USE. In cough.

உபயோகம்.—இருமல் ரோகங்களுக்கு இதை உபயோகப்படுத்தப்படும். ஆனால் இதை வாசனைக்காக சேர்த்துக் கொள்ளுவது வழக்கம்.

DOSE. gr. xv. to gr. xl.

ஒ. அளவு.—௰டு-முதல் ௪0 - கிறேன் இடைக்கு, விளாம்பிசின் பாகுடன் கலந்துகொடுக்கலாம்.

**Tinctura Tolutana.** *Tincture of Tolu.*

டிங்சர் ஆவ் டொலு.

PREP. (Balsam of Tolu ℥ij., Rectified Spirit Oij.) *Dose.* f℥ss.—j.

செய்முறை.—உ - அவு. பால்ஸம் ஆவ் டொலுஎன்னும் சரக்கை, உ - பைண்ட் ரெக்டிபைட் ஸ்பிரிட்என்னும் சாராயத்தில்போட்டு, பால்ஸம் கரைகிறவரையில் ஊறவைத்து, வடிகட்டிக்கொள்ளவேண்டியது.

ஒ. அளவு.—அ - முதல், ௧ - திராம் அளவுக்குக் குழம்பாகச் செய்துகொடுக்கலாம்.

**Syrupus Tolutanus.** *Syrup of Tolu.*

ஸிரப் ஆவ் டொலு.

PREP. (Balsam of Tolu ℥x., Boiling water Oj., Sugar lbijss.) *Dose.* f℥j.—ij.

செய்முறை.—௰ - திராம் பால்ஸம் ஆவ் டொலு என்பதை, ௧ - பைண்ட் கொதிக்கக்காய்ந்த ஜலத்தில்போட்டு மூடி, ஊறி வடிகட்டி, அதில், உஅ - பவுன் சருக்கரையைப்போட்டுக் கரைத்துக்கொள்ளவேண்டியது.

ஒ. அளவு.—இதை, ௧ - உ - திராம் அளவுக்குக் கொடுக்கலாம். சிலவேளை வாசனைக்காக மருந்துகளோடு சேர்ப்பதும் உண்டு.

**PTEROCARPUS.** *Pterocarpus Santalinus. Red Sandal wood.* Wood.
ரெட் ஸண்டால் உட். சிவப்புசந்தனம். (கட்டை.)

இது செம்மரத்தைப்போலவே இருக்கும், ஆனால் நிறம் மெத்தச் சிவந்திருக்கும். இதினுடைய நிறம், சாராயத்திலும், ஆல்கெலிஸ்என்கிற காரங்களிலும் இறங்கும். உஷ்ணிக்கிற குணமும், துவர்ப்பு குணமும் இருக்கிறதென்று கண்டிருக்கிறது. இந்தச் சக்கையை மருந்துகளுக்கு நிறத்தைக் கொடுக்க உபயோகப்பட்டு வருகின்றது. பாஷாண ஜெயநீர் (Liq. potassæ arsenitis) செய்கிற முறையில், இதைச் சேர்க்கப்படும்.

**KINO.** *Indian Kino.* The juice (hardened in the sun) flowing from the incised bark of Pterocarpus Marsupium.

கைநோ.

PROP. குணங்கள்.—இது சிறுகட்டிகளாய், வாசனையில்லாமல் துவர்ப்பாய் இருக்கும். இதன் சூரணம் சிவந்திருக்கும். காசுக்கட்டிக்குடைய குணங்களே இதற்கும் உண்டு.

ACTION. Powerful Astringent.

செய்கை.—ஸங்கோசனகாரி.

USE. In Diarrhœa, Dysentery, Debility, Sore throat, relaxed state of the Uvula, &c.

உபயோகம்.—இந்தச்சரக்கு, அதிசாரபேதி, ரத்தபேதி, தூர்ப்பலம், தொண்டைவிரணம், உண்ணாக்கு வளர்ந்துபோகுதல், இவைமுதலிய ரோகங்களுக்கு உபயோகப்பட்டுவருகின்றது. காசுக்கட்டிக்குடைய குணங்களே இதற்கும்உண்டு; ஆனால்இதில் துவர்ப்புச்சத்து விசேஷித்துஇருக்கும். இதை வேறுமருந்துகளோடு சேர்த்துக் கொடுப்பது வழக்கம்; ஆனால் தனிப்படவும் கொடுக்கலாம்.

**Tinctura Kino.** *Tincture of Kino.*

டிங்சர் ஆவ் கைநோ என்னும் பாவனத்திரவம்.

PREP. (Kino ℥iijss., Rectified Spirit Oij.) *Dose.* ʒj.—ij.

செய்முறை.—௩௨ - அவுன்ஸ், கைநோ என்கிற சரக்கை பொடித்து, ௨ - பைன்ட் ரெக்டிபையிட் ஸ்பிரிட்என்கிற சாராயத்தில்போட்டு, எ - நாள் ஊறவைத்து, வடிகட்டிக்கொள்ள வேண்டியது.

ஒ. அளவு.—௧ - முதல், ௨ - டிராம் அளவுக்குக் கொடுக்கலாம். இதைச் சாக்மிக்ஸ்சர் (Chalk mixture) என்னும் சிமைச்சுண்ணாம்புக் குழம்போடுசேர்த்து வழக்கமாய் கொடுக்கப்படுகின்றது.

**Pulvis Kino Compositus.** *Compound Powder of Kino.*

கம்பவுன் பவுடர் ஆவ் கைநோஎன்னும் சூரணம்.

PREP. (Kino ʒxv., Cinnamon ʒiv., Dried Opium ʒi.) *Dose.* gr.x.—xx.

செய்முறை.—கைநோ ௧௫ - டிராம், கருவாப்பட்டை ௪ - டிராம், உலர்ந்த அபினி ௧ - டிராம். இவைகளை வெவ்வேறுப் அரைத்து மெத்த சன்னதூளாக்கிக்கொண்டு, பிறகு ஒன்றுய்ச்சேர்த்து மிஸ்ரமித்துக்கொள்ள வேண்டியது.—௨௰ - கிறேன் சூரணத்தில், ௧ - கிறேன் அபினியிருக்கின்றது.

ஒ. அளவு.—௰ - முதல், உ௰ - கிறேன். இடைக்குக்கொடுக்கலாம். இதை அதிசாரபேதி, ரத்தபேதி இவைகளுக்குக் கொடுத்தால், பேதியைக்கட்டும்.

**BUTEA FRONDOSA.** *Bastard Teak.* Gum; Seeds.

பாஸ்டர்ட் டீக். புரசன். பலாஸ். (பிசின். வித்து.)

மேற்சொல்லிய கைநோ என்னும் சரக்குக்குஉடைய குணங்களே புரசன்பிசினிக்கு இருக்கின்றன. செடியின் பட்டையைக் கீறினால், பால்வடிந்து உறைந்து கட்டியாய்ப்போகும்; இதுகெம்புகல்லுகளைப்போலிருக்கும்; இதன் புஷ்பம் சிவந்து அலங்காரமாய் இருக்கும்; இதில் படிக்காரஞ்சேர்ந்து துணியைத்துவைத்தால், மஞ்சள் சாயமேறும், ஆல்கெலீஸ் (Alkalies) என்னும் காரத்தைச்சேர்த்து துவைத்தால், சிவந்த ஆரஞ்சிப்பழச்சாயமேறும். பிசினியையும், புஷ்பத்தையும். ஹிந்துக்கள் உபயோகப்படுத்துகிறதில்லை. புரசன் பிசினி, அதிசாரம், சீதபேதி இவைகளுக்கு உபயோகப்படுகின்றது. புரசன் வித்து தகடாய் சக்கரம்போல் காவிக்கல்நிறமாய் இருக்கும்; வயிற்றில்இருக்கிற தட்டைக்கிருமி, நிமிர்ப்பூச்சி இவைகளைப்போக்க, ஹிந்து வைத்தியர்கள் இதை உபயோகப் படுத்துகிறார்கள். உ - ரு - வித்தை ஜலத்தில் ஊறவைத்துமேல்தோலை நீக்கி, அந்தி சந்தி இரண்டுவேளையும், உ - ரு - நாள்கொடுத்து, பிறகு நல்ல ஒருபேதிக்குக் கொடுத்தால், பூச்சிகள் கூண்டோடு வெளிப்படும்.

புரசங்கொட்டைக்கு, கணம், கரப்பான், சீதம், படர்த்தாமரை, வாதம், வயிற்றுக்கிருமி, வயிற்றுவலி, வயிற்றிரைச்சல் இவைகள் போம் என்றும், பித்தம் உண்டாகுமென்றும்—புரசமரத்துக்கு, கபம், கிராணி, குன்மம், பித்தம், வாதம், பெருவலி இவைகள் போம்என்றும், தீபனம் உண்டாகுமென்றும், பதார்த்தகுண சிந்தாமணியில் கண்டிருக்கிறது. வித்தை எலுமிச்சம்பழ ரசத்தில் அரைத்துப் பூசவேண்டியது.

**Glycyrrhiza.** *Glycyrrhiza glabra. Glycyrrhiza Radix. Liquorice plant. Liquorice.* The Root.

லிகொரீஸ். சீமை அதிமதுரம். (வேர்.)

PROP. குணங்கள்.—இந்த வேரானது. சிறுசும் பெருசாயுமிருக்கும்; தித்திக்கும்; வெளிப்புறம் அழுக்குபடிந்த நிறமாயும், உள்ளே மஞ்சளாயும் இருக்கும்; இடித்தால் சூரணமாகும், இதுவும் மஞ்சளாய் இருக்கும். நமதுதேசத்தில் இதற்குப் பதில் குன்றிமணிவேர் (Abrus Precatorius) உபயோகப்படுகிறன்து. குன்றிமணிவேருக்கு அதிமதுரம்என்றுபெயர்.

ACTION. Demulcent, Emollient.

செய்கை.—ஸ்னிக்தகாரி.

USE. In catarrhs and irritations of the mucous membranes of the bowels and urinary passages.

உபயோகம்.—அதிமதுரத்தை, இருமல், பேதி, நீர்ச்சுருக்கு இவைகளுக்குக் கொடுக்கப்படும். மூஷாம்பரம், நிலஆவாரை முதலிய கசப்பான மருந்துகளோடு சேர்த்துக்கொண்டால், அவைகளுக்கு வாசனையும், ருசியுங்கொடுக்கும். சூரணத்தை மாத்திரைகளோடு சேர்க்கப்படும். க௦ - அவுன்ஸ், அதிமதுரத்தை, க - பையிண்ட் ஜலத்தில் போட்டுக் கஷாயமாய்க்காய்ச்சி, நீர்ச்சுருக்கு, மூத்திரப்பையில்காணுகிறரோகம் இவைகளுக்குக் கொடுக்கப்படும். அதிமதுரத்தை வாயில்போட்டு அடக்கி ரசத்தை விழுங்கினால், இருமல் தணியும், தறகறப்பு நீங்கும்.

**Extractum Glycyrrhizæ.** *Extract of Liquorice.*

எக்ஸ்டிராக்ட் ஆவ் லிகொரீஸ். சீமை அதிமதுரப்பால்.

PREP. (Fresh Liquorice root bruised, lbijss., Boiling Distilled Water, Cij)

செய்முறை.—௨½ - பவுன் புது அதிமதுரவேரை இடித்து, ௨ - காலன் கொதிக்கிற ஆவிநீரில்போட்டு, ஊறவைத்து, பிறகு, ௧ - காலனுக்குச் சுண்டக்காய்ச்சிக் கொண்டு, சூடாயிருக்கிறபோதே வடிகட்டி முடிவில் பதத்துக்குச் சுண்டக்காய்ச்சிக் கொள்ளவேண்டியது.—இதை வாயில்போட்டு அடக்கி ரசத்தை உட்கொண்டால், இருமல், கபரோகம் இவைகள் குணமாகும்.

**Trochisci Glycyrrhizæ.** *Liquorice Lozenges.*

லிகொரீஸ் லாஸென்ஜெஸ். அதிமதுரப்பால் பில்லைகள்.

PREP. (Extract of Liquorice, Gum Arabic, ā ā ℥vj. Pure Sugar lbj. Boiling Water, q s.)

செய்முறை.—௬ - அவு. அதிமதுரப்பால், ௬ - அவு. விளாம்பிசின், ௧ - பவு. நல்லச்சருக்கரை. இவைகளை அதற்குத்தகுந்த ஜலத்தில்போட்டு ஜலயந்திரத்தில்வைத்து, பில்லைகளாகிற பதத்துக்குச் சுண்டக்காய்ச்சிக் கொள்ளவேண்டியது.—இது தொண்டையில் கறகறப்போடு புகைந்து புகைந்து காணுகிற இருமலைத்தணிக்கும்.

DOSE. ஒ. அளவு.—இதில் தேவையான பில்லைகளைச் சாப்பிடலாம்.

**TRAGACANTHA.** *Astragalus verus. Tragacanth.*

டிரெகெகாந்த.

PROP. குணங்கள்.—இந்தப்பிசின், அகலத்தகடுகளாய் இருக்கும்; நிறம்வெள்ளை அல்லது மஞ்சள்; இதற்கு வாசனையும் ருசியும் இராது; தூளாக்கிறது கடினம்.

ACTION. Demulcent.

செய்கை.—ஸினிக்தகாரி.

USE. In Coughs, Diarrhœa, &c.

உபயோகம்.—இருமல், பேதி இவைகளுக்கு உபயோகிக்கலாம். ஜலத்தில் கரையாத ரஸபஸ்மம் முதலியமருந்துகளை இதனோடுச்சேர்த்து, குழந்தைகளுக்குக்கொடுக்க உபயோகமாகின்றது. கொஞ்சம் வாயில்போட்டு அடக்கி ரசத்தை விழுங்கினால், தொண்டையில் குழகுழப்பேரி, பொடிஇருமலைத் தணிக்கும்.

DOSE. ʒss.—ij

ஒ. அளவு.—½ - முதல், ௨ - திராம் அளவுக்குக் கொடுக்கலாம்.

**MUCUNA.** *Mucuna Pruriens. Dolichos Pruriens. Cowhage, or Cowitch.* Hairs from the Pod.

கவ் எஜ். பூனைக்காலி. (காயின்மேல்இருக்கிற சுனை.)

PROP. குணங்கள்.—பூனைக்காலியின் காய்நீண்டுஇருக்கும்; அதின்மேல்இருக்கிற சுனை தேகத்தின் மேல்பட்டால், சகிக்கக்கூடாத தினவை உண்டாக்கும், பட்டவிடம்சூடாகும்; சிலவேளை நோவையும், வீக்கத்தையும் தரும்.

ACTION. Mechanical anthelmintic.

செய்கை.—கிருமிநாசகாரி.

USE. Useful in expelling lumbrici and ascarides.

உபயோகம்.—இதை உள்ளுக்குக் கொடுத்தால், வயிற்றிலிருக்கிற உருண்டநாக்குப்பூச்சி, திமிர்பூச்சி இவைகளை குத்தி உபத்திரவப்படுத்தி, உயிரோடு வெளிப்படுத்தும். சுணையிருக்கிற காயைச் சருக்கரைப்பாகில் துவைத்து, சுரண்டி, பாகில் கலந்துகொள்ளவும். இந்தப்பிரகாரமாய்ப் பாகானது தேனைப்போல் தடிப்பாகிறவரையில், சுணையைச்சேர்த்து, புட்டியில் வைத்துக்கொண்டு, இதில், உ - ச - தேயிலைக்கரண்டிவீதம் காலையில், ரு - நாளைக்குக்கொடுத்து, பிறகு சிற்றுமணக்கெண்ணெய் பேதிக்குக்கொடுத்தால், வயிற்றில்இருக்கிற கிருமிப்பூச்சிகள் உயிரோடுவெளிப்படும். குழந்தைகளுக்கு ஒரு தேயிலைக்கரண்டி அளவுகொடுக்கலாம். பூனைக்காலிவேரை, கஷாயம் செய்து, இருமலுக்குக் கொடுப்பது வழக்கம்.

**INDIGO**. *A peculiar colouring matter obtained from the leaves of several species of Indigofera.* Indigofera tinctoria.

இண்டிகோ. நீலம்.

அவுரிஇலையில் இருந்து எடுக்கிற பதார்த்தத்துக்கு, நீலம் என்றுபெயர். இதைப் பலஜாதி செடியில்இருந்து சேகரிக்கப்படும்.

USE. உபயோகம்.—சிலவருஷத்துக்குமுன் நீலத்தை, சீமையில் காக்கைவலி முதலிய நரம்பைப்பற்றி வருகிறரோகங்களுக்கு உபயோகப்படுத்தினதுண்டு. இப்போது இதைக்கையாடுவதில்லை. உய - கிறேன் முதல், படிப்படியாய் சா - கிறேன் அளவுக்கு உயர்த்தி தினத்துக்கு, உ - ரு - தடவை கொடுக்கலாம்.

**POTENTILLA TORMENTILLA**. *Tormentilla. Common Tormentil.*
The Root.

டார்மென்டில்ல. (வேர்.)

இந்த வேரில் துவர்ப்புச்சத்து இருக்கின்றது; பேதி, நாள்பட்ட சீதபேதி இவைகளுக்கு, ஹ - முதல், க - திராம் அளவுக்கு உபயோகிக்கலாம். இதைக் கஷாயம்செய்து உபயோகிப்பதும் ஒருமுறை.

**ROSA**. *Rose.*

ரோஜ். ரோஜாப்பூ. பன்னீர்ப்பூ.

ரோஜாபூவில் பலஜாதிகளுண்டு; அவைகளில் மூன்றுஜாதிகள், மருந்துக்கு உபயோகமாகின்றது. அவைகளை இதனடியில் கூறப்படும்.

**Rosa Canina**. *Dog Rose.* The Fruit.

டாக் ரோஜ்என்னும் ஒருசாதி ரோஜாப்பூ. (காய்.)

புஷ்பத்துக்கு அடியில்இருக்கிற காய், சதைபிடித்து அண்டவடிவாயும், தித்திப்பாய் கொஞ்சம் புளித்துக்கொண்டும் இருக்கும்.

**Confectio Rosæ Caninæ**. *Confection of Dog Rose.*

கன்பெக்ஷன் ஆவ் டாக் ரோஜ்என்னும் ரோஜாகாய் லேகியம். குல்கந்.

PREP. (Fruit of the Dog-rose, without the seeds ℔j., Powdered Sugar ℔j. and ℥viij.)

செய்முறை.—க - பவுன் விரை நீக்கிய காய்களோடு, க - பவுன். அ - அவுன்ஸ் அரைத்த சருக்கரையைக் கொஞ்சங் கொஞ்சமாய்ச் சேர்த்து இடித்துக்கொள்ள வேண்டியது.

ACTION. USE. செய்கை. உபயோகம்.—சீதளகாரி. முக்கியமாய் இது, மருந்துகளை அனுபானிக்க, உபயோகப்படுகின்றது.

**Rosa Gallica.** *Red (or French) Rose. Fresh and dry Buds.*

ரெட் ரோஜ். சிவப்பு ரோஜா. குலாப்பு புஷ்பம். (உலர்ந்தும், உலராமலும் மொக்குள்இருக்கிற இதழ்கள்.)

PROP. குணங்கள்.—மொக்குள்சிறுசாய் மெத்தச்சிவந்து, அற்பவாசனையைத்தரும். இதில் டானிக் ஆஸிட், காலிக் ஆஸிட் (Tannic and gallic acids) என்னும் சத்துக்கள் இருப்பதால், துவர்க்கும். இதில் சிவந்தரசம் இருப்பதால், அவுஷதங்களுக்கு வன்னத்தைக்கொடுக்க இதை உபயோகப்படுத்தப்படும்.

**Infusum Rosæ Compositum.** *Compound Infusion of Roses.*

கம்பவுன் இன்பியுஷன் ஆவ் ரோஸெஸ். சிவப்பு ரோஜாமொக்குள் வெந்நீர்க்கஷாயம்.

PREP. (Petals of dried Red Rose ʒiij., Boiling Distilled Water Oj.. Dil. Sulph. Acid ʒiss., Sugar ʒvj.) *Dose.* f℥iss.

செய்முறை.—ங-திராம். உலர்ந்த ரோஜாமொக்குளின் இதழ்களோடு க-பையின்ட் கொதிக்கிற ஆவிநீரைச்சேர்த்து, பிறகு கஉ - திராம், விளாவின கந்தகத்திராவகம்விட்டு, உ - மணிநேரம் ஊறவைத்து, வடிகட்டி முடிவில் சா - திராம் சருக்கரையைச்சேர்த்துக் கொள்ளவேண்டியது.

ACTION. Slightly Astringent, and Tonic.

செய்கை.—உபயோகம்.—இதற்குக் கொஞ்சம் துவர்ப்பு குணமுண்டு; பலத்தைத் தரும்: உப்பு, பேதிமருந்துகளையும், குவைனைன் (Quinine) என்னும் மருந்தையும், இதில் அனுபானித்துக் கொடுக்க மிகவும் தகுதியானது. இதனோடு திராவகங்களையாவது, படிக்காரத்தையாவது, தேனையாவது சேர்த்து வாய்கொப்புளித்தால், வாய் விரணத்தை ஆற்றிவிடும்.

ஒ. அளவு.—கஉ - அவுன்ஸ்வீதம், ஒருவேளைக்குக்கொடுக்கலாம்:

**Confectio Rosæ.** *Conserve of Red Rose.*

கன்பெக்ஷன் ஆவ் ரெட்-ரோஜ். சிவப்பு ரோஜாப்பூ லேகியம். குல்கந்.

PREP. (Fresh Red-rose petals ℔j., Sugar ℔iij.)

செய்முறை.—க - பவுன் உலர்ந்த சிவப்புரோஜாப்பூ இதழ்களை, கல்லுரலில் போட்டு இடித்து, ங - பவுன் சருக்கரையைக் கொஞ்சங்கொஞ்சமாய்ச் சேர்த்து செவ்வையாய் மிஸ்ரமிக்கும்படி இடித்துக்கொள்ளவும்.

ACTION. USE. செய்கை.—உபயோகம்.—இதற்குக் கொஞ்சம் துவர்ப்பு குணமிருக்கின்றது. க - உ - கிராம் அளவுக்குக் கொடுக்கலாம்; ஆனால் இதை மாத்திரைகள் செய்வதற்கு முக்கியமாய் உபயோகப்படுத்தப்படும்.

**Mel Rosæ.** *Honey of Roses.*

ஹனி ஆவ் ரோஸெஸ். ரோஜாப்பூ மது.

PREP. செய்முறை.—ச-அவுன்ஸ், உலர்ந்த சிவப்புரோஜாப்பூ இதழ்களைப் பிரித்து ௰௬ - அவுன்ஸ் கொதிக்கிற ஆவிநீரில்போட்டு, உ - மணிநேரம் ஊறவைத்து பிறகு கையால் மெதுவாய்ப்பிசைந்து வடிகட்டிக்கொள்ளவேண்டியது. திப்பியில் அ-அவுன்ஸ், கொதிக்கிற ஆவிநீர் விட்டு மறுபடியும் ஊறவைத்து, ஜலத்தை இறுத்துக் கொண்டு, இதில் முதல்செய்த கஷாயத்தில், பாதியைவிட்டுக் கலந்து, பிறகு இந்தக் கூட்டுக் கஷாயத்தில் ௫ - பவுண் தேனைக்கூட்டி ஜலயந்திரத்திவிட்டு எரித்து, மிஞ்சி கஷாயம் பாதியையுஞ் சேர்த்து, பதத்துக்குக் காய்ச்சிக் கொள்ளவேண்டியது.

ACTION. USE. செய்கை.—உபயோகம்—சிறுதுவர்ப்போடு இனிப்பாய் இருக்கும். இதை நாக்கில் காணுகிற அத்திளன்னும் ரோகத்துக்குத் தடவலாம்; வாய் கொப்புளிக்கிற ஜலத்தோடு சேர்த்து, உபயோகப்படுத்தப்படுகின்றது.

**Syrupus Rosæ Gallicæ.** *Syrup of the Red Rose.*

ஷிரப் ஆவ் தி ரெட்ரோஜ். சிவப்புரோஜாப்பூபாணிதம், அல்லது ஷர்பத்.

PREP. (Dried Red-rose Petals ℥ij., Boiling Water Oj. Pure Sugar ℥xx.)

செய்முறை.—உ -அவுன்ஸ் உலர்ந்த சிவப்பு ரோஜாப்பூ இதழ்களை, ஒரு பீங்கான் பாத்திரத்தில்போட்டு, க - பையின்ட், கொதிக்கிற ஆவிநீர்விட்டு, சாயமெல்லாம் இறங்குகிறவரையில் காய்ச்சி,பிசைந்து வடிகட்டி, வண்டலெல்லாம் அடியில் படிகிறவரையில் வைத்து, தெளிவான சலத்தை இறுத்துக்கொண்டு, இதில் உ௰- அவு. நல்ல சருக்கரையைச் சேர்த்து, ஜலயந்திரத்தில் வைத்துக்கரைத்துக் கொள்ளவேண்டியது.

ACTION. USE. செய்கை.—உபயோகம்.—சிறுதுவர்ப்பாய் இருக்கும். இதை முக்கியமாய், மருந்துகளுக்கு நிறத்தைக்கொடுக்கவும், இனிப்பையுண்டாக்கவும் உபயோகிக்கப்படுகின்றது.

**Rosa Centifolia.** *The Hundred-leaved or Cabbage Rose.* Petals.

காப்பேஜ் ரோஜ். ரோஜாப்பூ. குலாப்பு புஷ்பம், (இதழ்கள்.)

இந்தப்பூச்செடியை தோட்டங்கள்தோறும் வைத்துப் பயிரிடுகிறார்கள். இதன்புஷ்பம் அழகாயும் நல்ல வாசனையாயும் இருக்கும்; இதில் அனேக சாதிகளுண்டு.

**Syrupus Rosæ.** *Syrup of Roses.*

ஷிரப் ஆவ் ரோஸெஸ். ரோஜாப்பூ பாணிதம்.

PREP. (Fresh Petals of Rosa centifolia ℥vij.; Boiling Water Oiij.; Sugar ℔vj.; Rectified Spirit f℥vss.) *Dose.* f℥j.—f℥iv.

செய்முறை.—எ - அவு. உலர்ந்த ரோஜாப்பூ இதழ்களை, ௩ - பையி. கொதிக்கிற ஜலத்தில்போட்டு, ௰உ - மணிநேரம் ஊறவைத்து, வடிகட்டி, வடிகட்டின கஷாயத்தை ஜலயந்திரத்தில்வைத்து, உ - பையின்ட் கஷாயத்துக்குச் சுண்டவைத்து,

பிறகு கூ - பவுன் சருக்கரையைச்சேர்த்து, கடைசியில் ௫௦ - அவு. ரெக்டிபையிட் ஸ்பிரிட்என்னும் சாராயத்தைச் சேர்த்துக்கொள்ளவேண்டியது.

ACTION. USE. செய்கை.— உபயோகம்—மலத்தை உதைக்கும். குழந்தைகளுக்கு க - முதல், ச - திராம் அளவுக்குக் கொடுக்கலாம்.

**Aqua Rosæ.** *Rose water.*

ரோஸ் வாடர். பந்நீர்.

PREP. (Fresh Petals of Rosa centifolia lbx., water Cij. Distil Cj.)

செய்முறை.—ய-பவுன், உலர்ந்த ரோஜாப்பூஇதழ்களை, உ -காலன் ஜலத்தில் போட்டு, வாலையிலிட்டுக் காய்ச்சி, க - காலன் ஜலத்தை இறக்கிக்கொள்ளவும்.

ACTION. USE. செய்கை.—உபயோகம்.—இதில் மருந்துகளைச் சேர்த்து, உபயோகித்தால், வாசனையாயும், இனிப்பாயும் இருக்கும்.

**Oleum Rosæ.** *Volatile Oil, or Attar of Roses.*

ஆயல் ஆவ் ரோஸெஸ். அத்தர்.

இது சகலருக்கும் தெரிந்த பதார்த்தமாகையால், விவரித்துச்சொல்லுவது பிரயோஜனமில்லை, லக்ஷம் ரோஜாப்பூவை ஜலத்தில்போட்டு, வாலையிலிட்டு எரித்து, எடுத்தால் ரு - திராம் அத்தர்இறங்கும். இதைக் களிம்புகளோடும், ரணங்களுக்குப் போடுகிற ஜலங்களோடும் சேர்த்தால், மெத்தவாசனையாய் இருக்கும்.

**KOUSSO OR CUSSO.** *The dried flowers of Brayera Anthelmintica.*

கொஸ்ஸோ. (உலர்ந்த புஷ்பங்கள்.)

ACTION. USE. செய்கை.—உபயோகம்.—இது அபூருபமான சரக்கு, ஆகையால் வேறுபதார்த்தங்களைக் கலந்து விற்கப்படும். இந்தப்புஷ்பங்களைக் கொடுத்தால், வயிற்றிலிருக்கிற தட்டைக்கிருமிப்பூச்சிகளை வெளிப்படுத்திவிடும். பெரியவர்களுக்கு, கூ - முதல், அ - திராம் வரையில் கொடுக்கலாம். குழந்தைகளுக்கு, ௨ - முதல், உ - திராம் கொடுக்கலாம். பூவைப் பொடிசெய்து, வெந்நீரில்போட்டு, வ - மணி நேரம் ஊறவைத்து, கொஞ்சம் எலுமிச்சம்பழரசத்தைச் சேர்த்து, கஷாயத்தைக் கலந்து, தூளோடு ஜலத்தைச் சாப்பிடவேண்டியது. இதை வெறும் வயிற்றில் கொடுக்கவேண்டியது. ந - ச - மணிநேரத்துக்குள் மலம் இறங்காவிட்டால், சிற்றுமணக்கெண்ணெய்யையாவது, உப்பு பேதிக்காவது, கொடுக்கவேண்டியது.

**AMYGDALUS COMMUNIS.** *Amygdalus dulcis. Sweet Almonds.* Kernels.

ஸ்வீட் ஆமன்ட்ஸ். தித்திப்பு வாதுமை. பார்ஸி வாதுமை. (பருப்பு.)

PROP. குணங்கள்.—நமது தேசத்தில் விளைகிற வாதுமைக்கும், பார்ஸி வாதுமைக்கும், மெத்த வித்தியாசம் இருக்கின்றது. தித்திப்பு, கசப்பு என இரண்டு ஜாதி, வாதுமைப்பருப்பு இருக்கின்றன: கசப்பு வாதுமைப் பருப்பில் விஷமிக்கிற குணம் உண்டு. கொஞ்சமாய் கொடுத்தபோதிலும், சிலருக்கு வயிற்றில் கெடுதிசெய்யும்; இதைத் தின்று இறந்துபோனதும் உண்டு. வாதுமைப் பருப்பு, தட்டையாய், ஒருமுனை கூர்மையாய் சிவந்தவன்னமாய், மேலே மஞ்சள்தூள்படிந்து இருக்கும். உள்ளே இருக்கிற பருப்பு வெள்ளையாய், உறுதியாய் தித்திப்பாய் இருக்கும்; வாசனைஇராது; இடி..

நால், நெய் வெளிப்படும். ஜலஞ்சேர்த்து அரைத்தால் ஒருவித வாசனை பிறக்கும். கசப்புவாதுமைப் பருப்பு, சிறுசாய் இருக்கும்.

ACTION. Nutritive, Emollient, Demulcent.

செய்கை.—தேகத்தைப் போஷிக்கும், ஸினிக்தகாரி.

USE. Used in the form of emulsion, in Catarrhal complaints, Dysentery, Strangury, Calculous affections, &c.

உபயோகம்.—வாதுமைப்பருப்பை, ஊறவைத்துமேல் தோலை நீக்கிவிட்டு, உபயோகிக்கவேண்டியது; தோலோடு சாப்பிட்டால், வாந்தி அல்லது பேதியை உண்டாக்கும்; தேகமெங்கும் சிரங்கு உண்டானதாயும், கண்டிருக்கின்றது. வாதுமைப் பருப்பை ஜலம்விட்டு அரைத்துக்குழம்பாகச்செய்து, இருமல், ரத்தபேதி, நீர்ச்சுருக்கு, கல்லடைப்பு இவைமுதலிய ரோகங்களுக்குக் கொடுக்கப்படுகின்றது; நீர் எரிவை எடுத்துவிடும். வாதுமைப்பருப்புப் பாலைத் தனியாய் உபயோகிக்கிறதில்லை; வேறு அவுஷதங்களோடுசேர்த்து, கொடுக்கப்படும்.

**Confectio Amygdalæ.** *Almond Confection or Paste. Confection of Almonds.*

கன்பெக்ஷன் ஆவ் ஆமன்ட். பார்ஸிவாதுமைப் பருப்பு லேகியம்.

PREP. (Sweet Almonds ℥viij., powdered Gum Arabic. ℥j., Sugar ℥iv.) *Dose.* ʒj.—ʒiij.

செய்முறை.—அ - அவுன்ஸ். தித்திப்பு பார்ஸிவாதுமைப்பருப்பை, குளிர்ந்த ஜலத்தில் ஊறவைத்து, தோலைநீக்கி, தந்திகளால் செய்த சல்லடையில் தேய்த்து எடுத்துக்கொண்டு, பிறகு க - அவுன்ஸ், விளாம்பிசின், ச - அவுன்ஸ், சருக்கரை, இவைகளைச்சேர்த்து, நன்றாய்இடித்து, செவ்வையாய் மிஸ்ரமிக்கும்படி செய்துகொள்ளவேண்டியது.—இது நல்ல ருசியாய்இருக்கும். க - ௩ - திராம் கொடுக்கலாம். இதை அடியில் கண்டிருக்கிறபிரகாரமாய், குழம்பாகச்செய்து உபயோகப்படுத்தப்படும்.

**Mistura Amygdalæ.** *Almond Emulsion or Milk. Mixture of Almonds.*

மிக்ஸ்சர் ஆவ் ஆமன்ட். பார்ஸி வாதுமைப்பருப்பின் குழம்பு.

PREP. (Confection of almond ℥iiss., Distilled water Oj.) *Dose.* ℥j.-iij.

செய்முறை.—உ௨ - அவு. பார்ஸி வாதுமைப் பருப்பு லேகியத்தில், க - பையின்ட் ஜலத்தைக் கொஞ்சங்கொஞ்சமாய்ச்சேர்த்து, இடைவிடாமல் அரைத்து, நார்த்துணியில் வடிகட்டிக்கொள்ளவேண்டியது.

ACTION. USE. செய்கை.—உபயோகம்.—ஸினிக்தகாரி. வேறுமருந்துகளுக்கு, அனுபானமாக, உபயோகிக்கப்படும்.

**Oleum Amygdalæ.** *Almond Oil.*

ஆமன்ட் ஆயல். வாதுமை நெய்.

PREP. (Prepared by expression from the seeds of the sweet, and bitter almonds.) *Dose.* ʒj—iv.

செய்முறை.—பார்ஸி வாதுமைப்பருப்பை, செக்கிலாட்டி நெய்யை எடுக்கப்படுகின்றது.

ACTION. Laxative, Emollient.

செய்கை.—மலகாரி, ஸினித்தகாரி.

USE. உபயோகம்.—இதை உள்ளுக்குக் கொடுப்பது அரிது. புளிந்தயிலங்க ளோடு சேர்க்கப்படும்.

**PRUNUM**. *Prunes. Prunus domestica. French Plums.* Dried Fruit.

புரூன்ஸ். பிளம்ஸ். ஆல் பகோரா.

இந்தப் பழம் கறுத்து, மேலே சுரைதயாயும். உள்ளே விதையும் இருக்கும்; திந்தி க்கும்; இதற்கு மலத்தை உதைக்கிற குணம் இருப்பதால், இது, நில ஆவாரை, சரக் கொன்றை முதலிய அவுஷதங்களோடு சேர்க்கப்படும். நிலஆவாரைக் கஷாயத்துடன் சேர்த்தால், குமட்டலை சமனப்படுத்தும். இதைப் பழமாகவே சாப்பிடலாம்; கஷாய ஞ்செய்துங் கொடுக்கலாம்.

**ACIDUM HYDROCYANICUM DILUTUM**. *Diluted Hydrocyanic Acid;* that is, *Prussic Acid* diluted with 50 parts of water.

ஹைட்ரோஸையானிக் ஆஸிட். புருஸிக் ஆஸிட்.

PROP. குணங்கள்.—இந்த மருந்து தெளிவான ஜலரூபமாயும், ஒருவிதமான வாசனையாயும் இருக்கும். இது, கசப்பு வாதுமைப்பருப்பில் காணலாம்; அதிலிருந்து ம் சேகரிக்கலாம்; ஆனால், மருந்தின் நிதானம் அகப்படாதாகையால், அடியில் கண் டிருக்கிறவிதமாய் செய்யப்படுகின்றது.

PREP. (Ferrocyanide of Potassium ℥ij., Sulphuric acid f℥vij., Distilled water Oiss.,)

செய்முறை.—எ - திராம், கந்தகத்திராவகத்தை, ச - அவு. ஆவிநீருடன் கல ந்து, அது குளிர்ந்தபிறகு, ஒரு கண்ணாடி வாலையில்விட்டு, இதில், உ - அவு. பெர்ரோ ஸையெனைட் ஆவ் பொடாஸியம் என்னும் உப்பை, ௨ - பையின்ட் ஜலத்தில், முதல் கரைத்துக்கொண்டு, சேர்த்துக்கொள்ளவேண்டியது. அ - அவுன்ஸ் ஜலத்தை, பட்டி யில்ஊற்றி, பிறகு வாலையைச் சரிப்படுத்தி, வாலுகாயந்திரத்திலேற்றி, சிறுதியிட்டு எ ரித்து, கூ - அவு. திராவகம், பட்டியில் இருக்கிற ஜலத்தில் இறக்கிக்கொண்டு, முடிவில், கூ - அவு. ஜலம், அதிகமாய் விட்டுக் கலந்துகொள்ளவேண்டியது.

இந்த மருந்தை, இங்கிலீஷ்வாகடங்களைப் பார்வையிட்டு, செய்யவேண்டியது.

ACTION. Sedative, Anodyne.

செய்கை.—ஸமனகாரி, வேதனைசாந்தகாரி.

USE. In Chronic Cough, affections of the Heart, Neuralgia, Gastrodynia. *Externally* as a wash to allay pain and irritation in chronic skin diseases.

உபயோகம்.—இதுமெத்தக் கடுவிஷமான திராவகம்; வெகு ஜாக்கிரதையாய் உபயோகிக்கவேண்டியது; ஒருகிரேன் இடை, சாப்பிட்டு, பிராணன்போனதாய்க் க ண்டிருக்கின்றது. நாள்பட்ட இருமல், இருதயரோகங்கள், வருத்தப்படுத்துகிற நரம் புவலி, குலெரிவு, இவைகளுக்குக் கொடுக்கலாம். இதை ஜலத்தில் கலந்து சகிக்கக்கூ டாத நமைச்சலுக்குத் தடவலாம். இதை, விஷமிக்கும்படி சாப்பிட்டால், வலி, கட்டு

சுவாஸம், பிரஞ்ஞை இல்லாமை, இவைமுதலிய துர்க்குணங்கள்கண்டு, உடனே பிராண ன் போய்விடும். சிலதருணங்களில், ௭ - ௧ - மணி நேரஞ்செல்லு பிராணன் போகும். அதிகமாய் சாப்பிட்டால், உ - ரு - தரம் பெருமூச்சு உள்ளுக்கு வாங்கிக்கொண்டே பி ராணன் போய்விடும்.

Dose. ♏ij.—♏v.

௳. அளவு.—உ - முதல் ரு - துளி, ௧ - அவு. ஜலத்தில்கலந்து, சருக்கரையை ச்சேர்த்துக் கொடுக்கலாம். இதை ஒருதடவை எடுத்துக்கொள்ளும்படியாகவே, செய் துகொள்ளவேண்டியது; பலதரம் எடுத்துக்கொள்ளும்படியாக செய்துகொடுத்தால், திராவகம் ஜலத்தின்மேல் மிதந்துவிடும்; அதை ஒரேவேளையில் தெரியாமல் எடுத்துக் கொண்டால், விஷமிக்கும். அளவை வெகுஜாக்கிரதையாய் அதிகப்படுத்தவேண்டியது. உ - திராம், திராவகத்தை, ௭ - டையின்ட் பந்நீர், அல்லது நீரில் கலந்து, துவாலை செய்துக்கொள்ளலாம்.

*Antidotes.* விஷமிக்கும்படி சாப்பிட்டவர்களுக்குச் சிகிச்சை.—இந்தத்திராவ கம், வெகுசீக்கிரத்தில் விஷமிக்கிறபடியால், சிகிச்சைசெய்ய நேரமிராது. குளிர்ந்தஜ லத்தை தலைமேலும், முதுகுமேலும் ஊற்றவேண்டியது; ஆக்கிராண உப்பை, முகர வைக்கவேண்டியது; நவச்சார ஜெயநீரை, உள்ளுக்குக் கொடுத்து, மேலுக்குத் தேய் க்கலாம். குளோரின் வாடர் (Chlorine water) என்னும் ஜலத்தில், ௧ - உ - தேயிலைக் கரண்டிவீதம் கொடுக்கவும். நோயாளியின் வாயில் ஊதி, சுவாஸத்தை உச்சாகப் படு த்தவேண்டியது; காலமிருந்தால், ம - கிறேன் அன்னபேதியை, ௧ - அவுன்ஸ் ஜலத் தில் கரைத்து, ௧ - திராம், அயத்திராவகத்தைச் சேர்த்துக்கொள்ளவும். உ - கிறேன் கார்பொனேட் ஆவ் போடாஷ் (Carbonate of Potash) ௧ - உ - அவுன்ஸ் ஜலத்தில் க ரைத்துக்கொள்ளவும். ஷை உப்பை முதலில் கொடுத்து, உடனே அயத்தைச் சேர்த்து க்கொண்ட ஜலத்தைக் கொடுத்துவிடவேண்டியது. இது, ஸ்மித் (Smith) என்பவரு டைய முறை.

**CAJUPUTI.** *Melaleuca Cajuputi. Cajuput Oil, or Oil of Cajuput.* Volatile Oil of the Leaves.

ஆயல் ஆவ் காஜிபட். காயபுட்டித் தயிலம்.

Prop. குணங்கள்.—இந்த எண்ணெய் தெளிவாய், பச்சைநிறமாய், கர்ப்பூ ரம், பந்நீர், பெப்பர்மெண்டு இவைகள் சேர்க்கையான இனிப்பான வாசனையாய் இரு க்கும்; வாயில்வைத்தால் காரமாய், பிறகு வாய் ஜில்விட்டுப்போகும்.

Prep. செய்முறை.—இலைகளை ஜலத்தில் உச - மணிநேரம், ஊறவைத்து, பிறகு செப்புவாலையில்போட்டு, அதற்கு வேண்டியஜலத்தை ஊற்றிஎரித்தால், ஜலமும் தயிலமும், பட்டியில் இறங்கி, தயிலம் மேலேமிதக்கும்.

Action. Powerful Diffusible Stimulant, Antispasmodic.

செய்கை.—உஷ்ணகாரி. அங்காகர்ஷண நாஸகாரி.

Use. In Chronic Rheumatism, Gout, Hysteria and other nervous affections, Colic, low Fever, &c.

உபயோகம்.—துஅராருயஉ - ம் வருஷத்தில், சீமையில் வாதபேதிரோகத்து க்கு, இதை மெத்த உபயோகப்படுத்தினதுண்டு; இதை இப்போது மெத்தஉள்ளுக்குக்

கொடுப்பதில்லை, கீல்வாதம், கணுவாதம், சூதகஜந்நி, வயிற்றுவலி, முதலிய வாதத்தில் எடுத்தநோய்களுக்கு மெத்த உபயோகப்பட்டு வருகின்றது. சுரத்துக்குங் கொடுக்கலாம்.

DOSE. ♏iij.—v.

ஒ. அளவு.—௩-௫-துளி சருக்கரையில் அரைத்து கொடுக்கலாம். கர்ப்பூரத்தோடுசேர்த்து,பூசுந்தயிலமாக்கிக்கொண்டு மேலே தடவினால்,வாதநோய் குணமாகும்.

**CARYOPHYLLUM**. *Caryophyllus aromaticus. Cloves.* Dried Flower-buds.

குளோவஸ். கிராம்பு. இலவங்கம். (உலர்ந்தமொக்கு.)

PROP. குணங்கள்.—இந்தச்சரக்கு, நல்லவாசனையாயும், பரிமளமாயும், காரமாயும், இருக்கும்; வாயில்போட்டால், விறுவிறுப்பைத்தரும்.

ACTION. Stimulant Carminative.

செய்கை.—உஷ்ணகாரி, கர்ப்பவாதஹரகாரி.

USE. Given to correct flatulence, and excite languid digestion; but chiefly as an adjunct to bitter tonics, or as a corrective to purgatives.

உபயோகம்.—வயிற்றில் உண்டாகிற வாயுவைப்போக்கவும் தீபனத்தை உண்டாக்கவும், கிராம்பைக் கொடுக்கப்படும்; ஆனால், முக்கியமாய் கசப்பு மருந்துகளோடும், பேதி மருந்துகளோடும் சேர்க்கப்படும். பேதி மருந்துகளுக்குடைய தீர்க்குணத்தைப்போக்கும்; இதைச்சேர்த்தால் மருந்துகள், வாசனையாய் இருக்கும்.

**Oleum Caryophylli.** *Oil of Cloves.*

ஆயல் ஆவ் குளோவ்ஸ். கிராம்புத்தயிலம். இலவங்கத் தயிலம்.

வாலையில் கிராம்பைப்போட்டு எரித்து, தயிலத்தைஇறக்கிக்கொள்ளவேண்டியது. இந்தத் தயிலம், புதுசானால், தெளிவாய் வெள்ளையாய் இருக்கும், நாள்பட்டால் சிவந்தநிறமாகும். அதிக வாசனையாயும், காரமாயும், பரிமளித்துக்கொண்டு, இருக்கும். ஜலத்தில்விட்டால், அடியில் படிந்துவிடும். ஒ. அளவு.—உ-முதல், ரு-துளி அளவுக்குக் கொடுக்கலாம்.

**Infusum Caryophylli.** *Infusion of Cloves.*

இன்பியுஷன் ஆவ் குளோவ்ஸ். கிராம்பு வெந்நீர்க்கஷாயம்.

PREP. (Bruised Cloves ʒiij., Boiling Distilled Water Oj.) *Dose.* fʒj.—ij.

செய்முறை.—௩-திராம் இடித்த கிராம்பை, க-பையிந். கொதிக்கிற ஆவிநீரில்போட்டு, மூடி, உ-மணிநேரம் ஊறவைத்து, வடிகட்டிக்கொள்ளவும்.—இதுவயிற்றிலிருக்கிற வாயுவைக் கண்டிக்கும்; வேறுமருந்துகளுக்கு அனுபானமாய்க் கொள்ளலாம். ஒ. அளவு.—க-உ-அவுன்ஸ் அளவுக்குக் கொடுக்கலாம்.

**PIMENTA**. *Eugenia Pimenta. Pimento, Allspice, or Jamaica Pepper.*

பிமென்ட். ஆல்ஸ்பைஸ்.

இந்தச்சிறிய காய்கள், நல்லவாசனையாயும், காரமாயும் இருக்கும்; இதில்தயிலமிருக்கின்றது; இதற்கு உஷ்ணிக்கிற குணமும், தீபனத்தை அதிகப்படுத்துகிறகுண

மும்உண்டு ; வாசனைக்காக வேறுமருந்துகளோடு சேர்க்கப்படும் ; இது, தயிலம், நீர், பாவனத்திரவம், இந்த ரூபங்களாய் உபயோகிக்கப்படும். இதை ௰ - கிறேன் முதல், ௨ திராம் அளவுக்குக் கொடுக்கலாம்.

**GRANATUM.** *Punica granatum. Pomegranate.* Rind of the Fruit. and Bark of the Root of Pomegranate.

பம்கிரானெட். மாதுளங்கனி. தாடிமக்கனி. (பழத்தின்தோல். வேரின் பட்டை.)

*The Rind of the Fruit.* மாதுளம்பழத்தோலின் குணம்.—பலகாரியும், ஸங்கோசனகாரியும் ஆனது,இதை அதிசாரம், சீதபேதி இவைகளுக்கு உபயோகிக்கலாம். இதில்டானிக் ஆஸிட்என்கிற சத்து இருக்கின்றது.

௨ - அவுன்ஸ் மாதுளம்பழத்தோல், ௧௨-பையின்ட் ஆவிநீர், இவைகளை, ௧ - பையின்டுக்குச் சுண்டக்காய்ச்சி, வடிகட்டிக்கொள்ளவும். இவை ௧ - ௪ - அவுன்ஸ் அளவுக்குக் கொடுக்கலாம்.

*The Bark of the Root.* வேரின் பட்டைக்கு வாசனை அல்பமாய் இருக்கும் ; சிறுகசப்பும், துவர்ப்பும் உள்ளதாய் இருக்கும். இது கிருமிநாஸகாரி (Anthelmentic), இதற்கு துவர்ப்பு குணமும் இருக்கின்றது.

DOSE. ஒ. அளவு.—சூரணத்தில், ௨௰ - கிறேன் அளவுக்குக் கொடுத்தால், வயிற்றிலிருக்கிற நட்டைக்கிருமிப்பூச்சிகள், வெளிப்படும். ௨- அவுன்ஸ் வேரின்பட்டையை, ௨ - பையின்ட் ஆவிநீரில்போட்டு, ௧ - பையின்டாகச் சுண்டக்காய்ச்சி, வடிகட்டிக்கொள்ளவும். இந்தக்கஷாயத்தில் ௧ - ௪ - அவுன்ஸ் அளவுக்குக் காலையில் வெறும் வயிற்றில், ௨ - மணிநேரத்துக்கொருதரம், ௨ - ௪ - தடவைகொடுக்கவும். முதல்நாளில் பூச்சிகள் விழாவிட்டால், மறுநாளும் ஷை க்ரமமாகவே கொடுக்கவேண்டியது. பிறகு சிற்றுமணக்கெண்ணெய் பேதிக்குக் கொடுத்தால், கிருமிப்பூச்சிகள் வெளிப்படும். வேரின்பட்டையை,பச்சையாகவே உபயோகித்தால்,நல்லதென்று கண்டிருக்கின்றது.

புஷ்பத்திலும், இளம்பிஞ்சியிலும், துவர்ப்புச் சத்து இருப்பதால், பேதிகட்டநம ஹிந்து ஜெனங்கள் உபயோகப்படுத்துகிறார்கள்.

INCOMPATIBLES. அன்னபேதி, காடிக்காரம், வங்கஉப்பு முதலியவைகளை, இதனுடன் சேர்த்துக்கொடுக்கலாகாது.

மாதுளஞ் சமூலத்துக்கு, வாந்தி, அதிசாரம், இவைகள் போமென்றும்,—பழத்துக்கு (தாடிமக்கனி), அக்நிதாகம், பித்தம், வாய்நீரூறல், கசப்பு, வாந்தி, விக்கல், மந்தம், நெஞ்செரிவு, காதடைப்பு, ஓயாதமயக்கம் இவைகள் தீருமென்றும்—புளிப்பு மாதளம்பிஞ்சுக்கு, பேதி, சீதபேதி, ரத்தபேதி இவைகள்கட்டுமென்றும்—மாதுளம் பூவுக்கு வாந்தி, பித்ததோஷம், ரத்தமூலம் இவைகள் சவுக்கியப்படுமென்றும், ரத்தபுஷ்டியையும், அதிபலத்தையும் உண்டாக்குமென்றும், பதார்த்தகுணசிந்தாமணியில் கண்டிருக்கின்றது.

செடியில் வெடித்த பழத்தின் விதைகளின் ரசத்தைப்பிழிந்து, கற்கண்டுதூள் சேர்த்துச்சாப்பிட்டால், குடிதணியும், தேகம் குளிர்ச்சியாகும்.

**COLOCYNTHIS.** *Colocynth. Bitter Cucumber.* The pulp of the fruit of Citrullus (formerly Cucumis) Colocynthis.

காலோஸிந்த். கலிங்கம். ஆற்றுத்தும்மட்டி. பேய்த்தும்மட்டி. பேய்க்கும்மட்டி. (காயின் சதை.)

PROP. குணங்கள்.—ஆற்று தும்மட்டிக்காய் உருண்டு, மஞ்சளும் வெள்ளையும் பச்சையுங் கலந்த நிறமாயிருக்கும்; வாசனையிராது. மெத்தக்கசப்பாய் குமட்டலெடுக்கும். லேசானது; உட்சதை உலர்ந்தால், இலேசாய் செல்லடித்ததுபோல், துவாரங்கள்தோன்றும். வதக்குவதக்கு என்றிருப்பதால், தூளாகிறது மெத்தக்கடினம்.

PREP. செய்முறை.—காய்களைப் பறித்து, மேலோட்டை நீக்கி, உலர்த்திக் கொள்ளுகிறது ஒருமுறை. சில இடங்களில் தோலோடவே உலர்த்திக்கொள்ளப்படும்.

ACTION. Powerful Hydrogogue Cathartic.

செய்கை.—நன்னீர் தண்ணீராய் சாடித்து பேதியாகும். அளவுக்கு அதிகமானால் மெத்த உபத்திரவப்படுத்தும்: பிராண அபாயம் நேரிடுவதும்உண்டு. மூத்திரத்தை அதிகப்படுத்துகிற குணமும் இருக்குதென்று செப்பியிருக்கின்றது.

USE. In Constipation, passive Dropsies, Apoplexy, Mania, &c.

உபயோகம்.—ஆற்றுத் தும்மட்டியானது, பெருங்குடலில்போய் வியாபித்து, அதன் குணத்தைக்காட்டும். மலபந்தம், நீர்ஏற்றம், அஸ்திஜந்நீ, பயித்தியம், இவை முதலிய சாட்டியங்களுக்கு உபயோகப்பட்டு வருகின்றது. ரஸபஸ்மம், குதமெழுக்கு இவைகளில் எதையாவது சேர்த்துக்கொடுத்தால், செவ்வையாய் மலத்தைக்கழிக்கும். இது வயிற்றுக்கடுப்பு, குமட்டல், வாந்தி, என்னும் துர்க்குணங்களையும் உண்டாக்கும்; கர்ப்பூரத்தையாவது, ஐயாஸியாமஸ், (Hyoscyamus) என்னும் மருந்தையாவது சேர்த்துக்கொடுத்தால். மேற்படி துர்க்குணங்களை சமனப்படுத்தும். ரணத்தின்மேலாவது, காயத்தின்மேலாவது போட்டால்,பேதியாகும். கலிங்காதிக்குடித்தயிலம், கலிங்காதி எண்ணெய் என்கிற தமிழ்முறைகள், வெகுசிரேஷ்டமானவைகள்; ஆனால் அவைகளைக் கிரமமாய் செய்யவேண்டியது. இவைகள் குதகக்கட்டு முதலிய வியாதிகளுக்குக் கொடுக்கப்படும்.

DOSE. In powder gr. ij.—viij.

ஒ. அளவு.—௨ - முதல் ௮ - கிரேன் அளவுக்கு சாந்தமானமருந்துகளோடு சேர்த்துக்கொடுக்கலாம். இதை மெத்த உபயோகித்தால், வயிற்றைப் புண்ணுக்கிவிடும்.

**Extractum Colocynthidis.** *Extract of Colocynth.*

எகிஸ்டிராகட் ஆவ் காலோஸிந்த். கலிங்காதி மெழுக்கு. ஆற்றுத்தும்மட்டிக்காய் மெழுக்கு.

PREP. (Colocynth cut in pieces, & deprived of its seeds, ℔ iij., Cold Distilled Water C ss.) *Dose.* gr. v.—xx.

செய்முறை.—௩ - பவுன் விதைநீக்கிய ஆற்றுத்தும்மட்டிக்காய் சோற்றை, ½ - காலன் குளிர்ந்த ஆவிநீரிலேபோட்டு, அடிக்கடிக் கையால் பிசைந்து, ௩௬ - மணி நேரம் ஊறவைத்து, பிறகு செவ்வையாய் பிழிந்துவிட்டு, வடிகட்டி, முடிவில், மெழுக்குபதத்துக்குச் சுண்டக்காச்சிக்கொள்ள வேண்டியது.

ஒ. அளவு.—௫ - முதல், ௨௰ - கிரேன் அளவுக்குக் கொடுக்கலாம். ஆனால் தனியாய்க் கொடுப்பது அரிது.

**Pilulæ Colocynthidis Compositæ.** *Compound Colocynth Pill.*
கம்பவுன் காலொஸிந்த் பில். கலிங்காதிகலவை மெழுக்கு.

PREP. (Powdered Extract of Aloes ʒvi., Powdered Scammony ʒij. Powdered Cardamon ʒss., Extract of Colocynth ʒj., Soft Soap, ʒiss.) *Dose.* gr. v.—xv.

செய்முறை.—கூ - திராம் மூஷாம்பரச் சூரணம்; உ - திராம், ஸ்காமொனிச் சூரணம்; ௦ - திராம் ஏலரிசிச்சூரணம்; இவைகளை ஒன்றுப்கலந்து, இதில், க - திராம் கலிங்காதிமெழுக்கு, கஹ - திராம் இளகிய சவுக்காரம் இவைகளைச் சேர்த்து, இடித்து ஒன்றுக்கி, மெழுக்குபதத்துக்குச் செய்துகொள்ளவேண்டியது.—இது வயிற்றில் மெத்தக்கடுப்பை உண்டாக்காது.

இதில், ரஸபஸ்மம்சேர்த்து, மாத்திரையாக்கி, வழக்கமாய் கொடுக்கப்படுகின்றது.

ஒ. அளவு.—ரு - முதல், ௰ரு - கிறேன் அளவுக்குக்கொடுக்கலாம். ஆற்றுத்தும்மட்டிக்காயை, பாவனத்திரவரூபமாகவும், கஷாயரூபமாகவும், செய்துகொடுக்கப்படுகின்றது.

**ELATERIUM.** *Squirting or Wild Cucumber. Momordica Elaterium.* Unripe fruit.

இலெடீரியம். (காய்ரஸத்திலிருந்து அடியில்படிகிற வண்டல்.)

PROP. குணங்கள்.—இதுசன்ன தட்டைபில்லைகளாய் இருக்கும்; அவைகள் சுருண்டுக்கொண்டு இருப்பதும்உண்டு; இலேசானது; பொடிப்பொடியாய்ப் பிட்டுவிடலாம்; கொஞ்சம் வாசனை உண்டு; கறகறப்போடு கசப்பாய் இருக்கும்; மருந்துகாயப்போட்ட துணியின் இழைகள், பில்லைகள்மேலே காணப்படும். இதில் மட்டச்சரக்கும் இருக்கின்றது; அதுகறுத்தாவது, அல்லது கறுப்பும் பச்சையும்கலந்த வன்னமாயாவது இருக்கும்; கெட்டியாய் இலேசில் ஒடியாது.

**Extractum Elaterii.** *Elaterium, or Extract of Elaterium.*
எகிஸ்டிராக்ட் ஆவ் இலெடீரியம். இலெடீரியச்சத்து.

PREP. செய்முறை.—செங்காய்களை நெடுகப்பிளந்து, மயிரினால் செய்த சன்னசல்லடையில் போட்டு, ரசத்தை மெதுவாய் பிழிந்து வடிகட்டி, தழுப்பான சுரசம் அடியில் படிந்துவிடுகிறவரையில், கொஞ்சநேரம் அசையாமல்வைத்து, தேட்டையாய் இருக்கிற ரஸத்தை, இறுத்து, எறிந்துவிட்டு, அடியில் நிற்கிறகுழம்பை சிறுதீயிட்டெரித்து, உலர்த்திக்கொள்ளவேண்டியது.

ACTION. Powerful Hydragogue Cathartic.

செய்கை.—தண்ணீர் தண்ணீராய்ச் சாடித்துப் பேதியாகும்; குமட்டல், வாந்தி இவைகள் சம்பவிப்பதும்உண்டு. அளவுக்கதிகமானால், கொடிய நஞ்சாகும்; வயிற்றைப்புண்ணாக்கிவிடும்.

USE. In Dropsy, and Cerebral Affection.

உபயோகம்.—நீரோற்றம், சிரோரோகங்கள் இவைகளில் கெட்டநீரை வெளிப்படுத்த, கொடுக்கப்படுகின்றது. மூளைகாய்ந் தாலையாவது, சுக்குத் தாலையாவது, இந்த

மருந்துடன் கலந்துகொடுத்தால், வயிற்றுக்கடுப்பு, வாந்தி இவைமுதலிய, துர்க்குணங்களை, ஒருபரியாயம் சமனப்படுத்தும். வாய்உலரல், தொண்டைவறளல், தாகம், இவைகளையும் உண்டாக்கும். பேதியானபிறகு, தூர்ப்பெலன், உறக்கம், இவைகள் கண்டு, சீக்கிரத்தில் போய்விடும்; மெலிந்த தேகமுடையவர்களுக்கு, இதை வெகுஜாக்கிரதையாய்ப் பிரயோகிக்கவேண்டியது.

DOSE. gr. 1-16 to ¼.

ஓ. அளவு.—விசம் முதல், வ - கிறேன் வரையில், மாத்திரை செய்துகொடுக்கலாம். மட்டச்சரக்கை, ஒ - க - கிறேன் அளவுக்கு உபயோகிக்கலாம். முதல் குறைந்த அளவில் கொடுக்கவேண்டியது; பிறகு மருந்தின் குணத்தைப் பார்வையிட்டு, அளவை உயர்த்திக்கொள்ளவேண்டியது.

## CARAWAY. *Carum Carui.* Seed.

### காரவே. கேக்விதை.

PROP. குணங்கள்.—இந்த விதை, சின்னதாய்,நல்லவாசனையோடு காரமாய்க் கசுப்போடி இருக்கும்; இதில் தயிலம் இருக்கின்றது, அதைஆல்கோஹல் என்கிற சாராயத்தில் இறக்கிக்கொள்ளலாம்; அல்லது வாலையில் இட்டு எரித்து, தயிலத்தைச் சேகரிப்பதும்உண்டு. இந்தவிதை கறி மசாலையோடுசேர்ந்து, வழக்கமாய் உபயோகப்படுத்தப்படும்.

ACTION. Stomachic, Carminative.

செய்கை.—ஜாடராக்கினி வர்த்தனகாரி, கர்ப்பவாத ஹரகாரி.

USE. உபயோகம்.—இந்த வித்தை, பலகாரவர்க்கங்களோடு சேர்த்துக்கொண்டால், பரிமள வாசனையைத் தரும்.

DOSE. ஓ. அளவு.—வித்தையை, க - உ - திராம் அளவுக்குக்கொடுக்கலாம்.

### Oleum Carui. *Oil of Caraway.*

### ஆயல் ஆவ் காரொவே. கேக்விதைத் தயிலம்.

தயிலங்களை இறக்கிக்கொள்ளுகிற விதிப்படி, இந்தவித்தை, ஜலத்தில்போட்டு, வாலைகட்டி எரிந்துத் தயிலத்தை இறக்கி எடுத்துக்கொள்ளப்படும். இது வெளுமையாயிருக்கும், நாள்பட்டால் பழுப்புநிறமாகிவிடும்; வித்தின்குணம் தயிலத்துக்கும் இருக்கின்றது.

ஓ. அளவு.—க - ய - துளி கொடுக்கலாம்.

### Spiritus Carui. *Spirit of Caraway.*

### ஸ்பிரிட் ஆவ் காரொவே. கேக்விதை தயிலங்கலந்த சாராயம்.

PREP. (Oil of Caraway. f℥ij., Proof Spirit Cj.)

செய்முறை.—உ - திராம் கேக்விதை தயிலத்தை; க - காலன், புரூவ்ஸ்பிரிட் என்கிற சாராயத்தில்விட்டுக் கலந்துகொள்ளவேண்டியது.

ஓ. அளவு.—க - முதல், ச - திராம் அளவுக்குக் கொடுக்கலாம்.

### Essentia Carui. *Essence of Caraway.*

எஸ்ஸென்ஸ் ஆவ் காரொவே.

PREP. (Oil of Caraway, f℥i., Rectified Spirit f℥ix.)

செய்முறை.—க - அவு. தயிலத்தை, கூ - அவு. ரெக்டிபையிட் ஸ்பிரிட் என்னும் சாராயத்திலவிட்டு குலுக்கி, மிஸ்ரமித்துக் கொள்ளவேண்டியது. இது வயிற்றிலிருக்கிற வாயுவைக் கண்டிக்கும்; உஷ்ணத்தைத் தரும். வயிற்றிரைச்சல், அஜீரணம், வயிற்றுவலி, இவைகளுக்குக் கொடுத்தால், நீங்கிவிடும். சேக்விதை தைலத்தை, சருக்கரையில் விட்டு சாப்பிடுவது பக்குவம்; அவுஷதங்களுடைய வெகுட்டலை அடக்குவதற்கு, இதைமெத்த உபயோகப்படுத்தப்படும்.

### Aqua Carui. *Caraway water.*

காரொவெவாடர். கேக்விதை தீநீர்.

PREP. செய்முறை.—சதகுப்பைத் தீநீர் செய்துகொள்ளுகிற முறையாய், இதையும் செய்துஇறக்கிக்கொள்ளவேண்டியது. க - அவு. எஸ்ஸென்ஸ் ஆவ் கரொவெ (Essence of Caraway) என்கிற சரக்கோடு, ஹ - காலன் தீநீரைவிட்டு, இரண்டும் கலக்கும்படி குலுக்கி, கடுதாசியில் வடிகட்டிக்கொள்ளவேண்டியது.

ஔ. அளவு.—க - ௨ - அவுன்ஸ் கொடுக்கலாம்,

### ANISUM. *Anise. Pimpinella Anisum. Aniseed.* Fruit.

அனிசீட். சோம்பு. (விதை.)

PROP. குணங்கள்.—இது பழுப்பு நிறமாய் இருக்கும்: ஒருமாதிரியான, இனிப்பான வாசனையாய், காரமும் தித்திப்புள்ளதாய் இருக்கும்; வித்தில் தயிலமிருக்கும். சோம்புத்தயிலம் தேட்டையாய், வெளிரோடினதாய், பச்சையும், மஞ்சளும் கலந்த சாயலாய் இருக்கும்.

ACTION. Carminative, Stimulant.

செய்கை.—கர்ப்பவாத ஹரகாரி, உஷ்ணகாரி.

USE. In flatulent Colic and Diarrhœa of children.

உபயோகம்.—வயிற்றில் வாய்வு சேர்ந்து காணுகிற நோய், குழந்தைகளுக்குக்காணுகிற அதிசாரம் இவைகளுக்குக் கொடுக்கலாம். முலைப்பாலை சுறப்பிக்கிற குணம் இதற்கு இருக்குதென்று செப்பியிருக்கின்றது. மருந்துகளுக்கு நல்லவாசனையுண்டாகும்படி, இதை மெத்தக்கையாடப்படும்.

ஔ. அளவு.—ம - முதல், ஹ - கிராம்வரையில் கொடுக்கலாம்.

### Oleum Anisi.. *Oil of Anise.*

ஆயல் ஆவ் அனீஸ். சோம்புத்தயிலம்.

இதை வாலையிலிட்டு எரித்து இறக்கப்படும்; இந்தத் தயிலம் மெத்த மஞ்சள்நிறமுள்ளது. மெத்தவாசனையாயும் இனிப்பாயும் இருக்கும். வயிற்றில் குட்டைப்பிறப்பித்து, திபனத்தை அதிகப்படுத்தும்; வாயுசேர்ந்து உண்டாகிற வயிற்றுவலிக்குக் கொடுக்கலாம். ஔ. அளவு.—பி - முதல், மரு - துளிவரையில் கொடுக்கலாம்.

**Spiritus Anisi.** *Spirit of Anise.*

ஸ்பிரிட் ஆவ் அனிஸ். சோம்புத்தயிலம் கலந்தசாராயம்.

செய்முறை.—உ - திராம் சோம்புத்தயிலத்தை, க - காலன், புரூவ்ஸ்பிரிட்என்னும் சாராயத்தில் விட்டுக் கரைந்துக்கொள்ளவேண்டியது. ஒ. அளவு.—ஐ - முதல், க - திராம் அளவுக்குக் கொடுக்கலாம்.

**Essentia Anisi.** *Essence of Anise.*

எஸ்ஸென்ஸ் ஆவ் அனீஸ்.

இதை இஸ்ஸென்ஸ் ஆவ் காரவே (Essence of Carui) என்னும் சரக்கைப்போல் செய்துகொள்ளவும். ஒ. அளவு.—உ௰ - முதல், ச௰ - துளிவரையில் கொடுக்கலாம்.

**Aqua Anisi.** *Anise-water.*

அனீஸ்வாடர். சோம்புத் திநீர்.

செய்முறை.—க - அவு. சோம்புத்தயிலம் கலந்தசாராயத்தை (Essence of Anise), ௨ - காலன் ஆவிநீரில்விட்டுக் கலந்து, குலுக்கிக்கடுதாகியில் வடிகட்டிக்கொள்ளவும்.—ஒ. அளவு.—ஐ - முதல், உ - அவுன்ஸ் கொடுக்கலாம்.

**FŒNICULUM.** *Fœniculum dulce. Sweet Fennel. Common Fennel.* The fruit.

ஸ்வீட் பென்னல். பெருஞ்சீரகம்.

Action. Stimulant, Carminative.

செய்கை.—உஷ்ணகாரி, கர்ப்பவாதஹரகாரி.

உபயோகம்.—இதை இப்போ மெத்த உபயோகப்படுத்துகிறதில்லை; சோம்பைஉபயோகப்படுத்துகிற ரோகங்களுக்கு, அதைப்போலவே,இதையும் கொடுக்கலாம். ஒ. அளவு.—ஐ - க - திராம் அளவுக்குக் கொடுக்கலாம்.

**Oleum Fœniculi.** *Oil of Fennel.*

ஆயல் ஆவ் பென்னல். பெருஞ்சீரகத்தயிலம்.

விதையை, வாலையிலிட்டெரித்து, தயிலத்தை இறக்கப்படும்.—ஒ. அளவு.—க-௰-துளிவரையில் கொடுக்கலாம்.

**Essentia Fœniculi.** *Essence of Fennel.*

எஸ்ஸென்ஸ் ஆவ் பென்னல். பெருஞ்சீரகத்தயிலம் கலந்தசாராயம்.

செய்முறை.—க - அவு. பெருஞ்சீரகத் தயிலத்தை, கூ - அவு. ஆல்கோஹல் என்கிற சாராயத்தில் கலந்து, குலுக்கிக்கொள்ளவும்.—ஒ. அளவு.—உ௰ - ௬௰ - துளி வீதம் கொடுக்கலாம்.

**Aqua Fœniculi.** *Fennel Water.*

பென்னல் வாடர். பெருஞ்சீரகத் திநீர்.

கேக்விதை திநீரைச்செய்கிற முறையாய், இதையும்செய்துக்கொள்ளவேண்டியது. ஒ. அளவு.—க - ச - அவுன்ஸ் கொடுக்கலாம்.

**ANETHUM**. *Anethum graveolens. Dill. Dill-seed.* The fruit.
டில்சீட். சதகுப்பை. ஸோயி.

ACTION. Stimulant, Carminative.

செய்கை.—உஷ்ணகாரி, கர்ப்பவாதஹரகாரி.

உபயோகம்.—இதைக்குழந்தைகளுக்குக் காணுகிற வயிற்றுவலிக்கு, உபயோகப்படுத்துகிறார்கள். ஒ. அளவு.—௰ - கிறேன் முதல், ௧ - திராம் வரையில் பெரியவர்களுக்குக்கொடுக்கலாம்.

**Oleum Anethi**. *Oil of Dill.*
ஆயல் ஆவ் டில்சீட். சதகுப்பைத் தயிலம்.

விதையை, வாலையிலிட்டு எரித்து, தயிலத்தை இறக்கிக்கொள்ளப்படும்.
ஒ. அளவு.—௧ - ௫ - துளிசருக்கரையில் கலந்துகொடுக்கலாம்.

**Aqua Anethi**. *Dill Water.*
டில்சீட் வாடர். சதைகுப்பைத் தீநீர்.

செய்முறை.—௰௮ - அவுன்ஸ், சதகுப்பையை இடித்து, ௨ -காலன் ஜலத்தில் போட்டுக்கலந்து, வாலையிலிட்டெரித்து, ௧ - காலனுக்கு இறக்கிக்கொள்ளவேண்டியது.

உபயோகம்.—இதைக் குழந்தைகளுக்குக் கொடுத்தால், மாந்தத்தைக் கண்டிக்கும், மருந்துகளை இதில் அனுபானம் செய்துகொடுக்கப்படும். ஒ. அளவு.—௨ - ௩ - அவுன்ஸ் கொடுக்கலாம்.

**SAGAPENUM**. *Ferula Sagapenum.* Gum-resin.
ஸெகபீனம். (ரோஜனப்பிசின்.)

இது பிசினியும் ரோஜனமும் கலந்தசரக்கு; கட்டிகளாய் இருக்கும். பெருங்காயவாசனை அடிக்கும்; அதைப்பார்க்கிலும் பிரகாசமாயும், மெத்த மஞ்சள்நிறமாயும் இருக்கும். பெருங்காயத்துக்குடைய குணங்களே இதற்கும் உண்டு; ஆனால், அதற்கு இது இளப்பம். இதை ௫ - முதல், ௨௰ - கிறேன் இடைக்குக் கொடுக்கப்படும்.

**ASSAFŒTIDA.** *Narthex Assafœtida.* Gum-resin.
அஸ்ஸெபிடிட். பெருங்காயம். காயம். இங்கு. (ரோஜனப்பிசின்.)

பெருங்காயம், பார்ஸீகதேசத்திலிருந்து வருகின்றது. இது ஒருசெடியின் வேரிலிருந்து எடுக்கிறபால். ௪-வருஷத்து செடியில், வேரின் இலைகளைப் பறித்துவிட்டு, ௪௰-நாள் சென்றபிறகு, வேரின் மேல்புறத்தை துண்டித்துவிட்டால், பால்வடியும்; அது இரண்டுநாளையில் இறுகிப்போகும்; அதைச்சுரண்டி எடுத்துகொண்டு, மறுபடியும் வேரைத் துண்டித்தால் பால்வடியும்; இதையும் சேகரித்துக்கொள்ளவும். இவ்விதமாய், ௰ - ௰௨ - தடவை ௬ - கிழமைகளுக்குள் செய்துகொள்ளவும். பாலை வெய்யிலில் வைத்து இறுகும்படிச் செய்துகொள்ளப்படும். பிறகுகட்டிகளைத் தோலில்சுற்றி பீப்பாய்களிலாவது, பெட்டிகளிலாவதுபோட்டு, அடைத்து, தேசாந்தரங்களுக்கு அனுப்பப்படுகின்றது.

## Assafœtida Præparata. *Prepared Assafœtida.*

பிரிபேர்ட் அஸ்ஸெபெடிட. சுத்திசெய்த பெருங்காயம்.

PREP. செய்முறை.—க - பவுன், பெருங்காயக்கட்டியை ஒருபாத்திரத்தில் போட்டு, அது முழுகும்படி ஜலத்தைவிட்டு, காய்ச்சி, காயத்தைக் கரைத்துகொண்டு, அதைமயிரால் செய்த சல்லடையில்போட்டு வடிகட்டி, ஜலயந்திரத்தில் வைத்து, இடைவிடாமல் துழவி, சுண்டக்காய்ச்சி, குளிர்ந்தஉடன் கட்டிப்போகிற பதத்துக்கு, இறக்கிக்கொள்ளவேண்டியது.

PROP. குணங்கள்.—கடைச்சரக்கு, மேடுபள்ளமுள்ள கட்டிகளாய், மஞ்சள் நிறமாய் இருக்கும்; புதுசாய் துண்டித்தஇடம், முத்துநிறமாய் இருக்கும்; மெழுக்கு போல் பிரகாசிக்கும்; காற்றுப்படவைத்தால், ரோஜாப்பூ நிறமாகிவிடும்; இதற்கு சகிக்கக்கூடாத வாசனையுண்டு; வெள்ளைப்பூண்டு நாற்றம்வீசும்; மெத்தக்கசப்பும் காரப்பும் உள்ளசுவையைஉள்ளது. சாராயத்திலும், ஈதர் என்னும் சரக்கிலும், காடியிலும், கரையும்; ஜலத்தில்சேர்த்துப்பால்போல் செய்யலாம். இதைச்சூரணம்செய்வது கடினம், ஆனால், கார்பொனேட் ஆவ் போடாஷ்என்னும் உப்பைச்சேர்த்தால், சூரணமாகிவிடும்.

ACTION. Stimulant, Antispasmodic: considered also Emmenagogue and Anthelmintic.

செய்கை.—உஷ்ணகாரி, அங்காகர்ஷணநாசகாரி, சூதகத்தைக்கிரமப்படுத்துகிறசெய்கையும், கிருமிகளைநாசப்படுத்துகிற செய்கையும் இருக்குமென்று யோசனை.

USE. In Hysteria, Chorea, Epilepsy, Hooping cough, Asthma, &c.

உபயோகம்.—பெருங்காயத்தை முக்கியமாய், ஸ்திரிகளுக்குக் காணுகிற சூதகஜன்னி, கோரியஎன்னும்வலி, காக்கைவலி, முதலியரோகங்களுக்குக் கொடுத்தால், மெத்தநன்மைசெய்யும். சூதகஜந்நியைக் கேட்க, இதைவிட உயர்ந்தமருந்து கிடையாது; ஜந்நிகண்டிருக்கிறபோதாவது, அல்லது தணிந்திருக்கிற காலத்திலாவது, இதை அதிக அளவில் கொடுத்தால், உடனே சவுக்கியப்பட்டுவிடும். உள்ளுக்குக்கொடுக்க உதவாமலிருந்தால், ஆஸனத்தின்வழியாகப் பிரயோகிக்கலாம். குழந்தைகளுக்கு மாந்தத்தால் காணுகிற இசுவுகளுக்கும், வயதுசென்றவர்களுக்கு மலம்இறுகி வாயுசெய்து இருப்பதற்கும், பெருங்காயம்கொடுக்கவுதவும். கக்குவாய்ரோகத்தில் காணுகிறஇளைப்பு, சுவாஸகாஸம், நாள்பட்டஇருமல் ரோகத்தில்காணுகிற இளைப்பு, இந்தவியாதிகளுக்கும் கொடுக்கலாம். இதுகெட்டவாசனையாய் இருப்பதால், மெத்த கையாடுகிறதில்லை. கிருமிகளை வெளிப்படுத்த, இதைஉபயோகிப்பதும் உண்டு. நமது தேசத்தில் பெருங்காயத்தைப் போஜன பதார்த்தங்களோடு, சேர்த்துக்கொள்ளுவது வழக்கம்.

DOSE. gr. v.—xx.

ஓ. அளவு.—ரு - முதல், உ௰ - கிறேன் அளவுக்கு, மாத்திரைசெய்து கொடுக்கலாம். ஜலத்தில் கலந்துகொடுந்தால், சீக்கிரத்தில் குணந்தரும். நமது தேசத்தில், பிரஸவித்த பெண்டுகளுக்கு, காயத்தை பனைவெல்லத்தில்வைத்துக்கொடுப்பதுவழக்கம்; மிதமாய்க்கொடுத்தால் விரோதம் ஒன்றுமில்லை; சாதாரணமாய் கருப்பையிலிருக்கிற அழுக்கை வெளிப்படுத்த, அதிகமாய்க்கொடுத்துவிடுகிறார்கள்; அதனால் அனேக துர்க்குணங்கள் சம்பவிக்கின்றது. இந்தவழக்கத்தை சீக்கிரத்தில் நீக்கிவிடுகிறதே நல்லது.

### Tinctura Assafœtidæ. *Tincture of Assafœtida.*

*டிங்சர் ஆவ் அஸ்ஸெபெடட. பெருங்காயப் பாவனத்திரவம்.*

PREP. (Assafœtida ℥v. Rectified Spirit Oij.) *Dose.* fℨj.—fℨij.

செய்முறை.—ரு - அவு. பெருங்காயத்தைத் துண்டுதுண்டாய்ச் செய்து, உ - பையின்ட் ரெக்டிபையிட் ஸ்பிரிட்என்னும் சாராயத்தில்போட்டு, எ - நாள் ஊறவைத்து வடிகட்டிக்கொள்ள வேண்டியது.—ஒ. அளவு.—க - உ - டிராம் வரையில் கொடுக்கலாம்; அது குதகஜந்திகளுக்குக் கொடுக்கப்படுகின்றது.

### Pilulæ Assafœtidæ. *Assafœtida pills.*

*அஸ்ஸெபெடட பில்ஸ். பெருங்காயமெழுக்கு.*

PREP. (Assafœtida, Galbanum, Myrrh, of each 3 parts, and conserve of Red Roses 4-parts, or q. s.) *Dose.* gr. v.—xx.

செய்முறை.—பெருங்காயம், கால்பெனம், வெள்ளாத்திபோளம், இவைகள் வகைக்கு, ௩ - பங்கு; குல்கந்து, ௪ - பங்கு, இவைகளைச்சேர்த்து மெழுகுபதத்துக்கு இடித்துக் கொள்ளவேண்டியது.

ஒ. அளவு.—ரு - முதல், உ௰ - கிறேன் அளவுக்குக்கொடுக்கலாம்.

### AMMONIACUM. *Gum-Ammoniac. Dorema Ammoniacum.* Gum-resin.

*கம் அம்மொனியாக் என்னும் போஜனப் பிசின்.*

PROP. குணங்கள்.—இந்தச்சரக்கில் குங்கிலியமும், பிசினியும் சேர்ந்திருக்கும்; இது சின்னதும் பெரிதுமான உருண்ட கட்டிகளாய் இருக்கும்; அல்லது இந்தக்கட்டிகளெல்லாம் ஒன்றாய்ச்சேர்ந்து, முத்தையாய் இருக்கும். மேலுக்கு மஞ்சளாயாவது, அல்லது, செங்கமாவின் நிறமாயாவது இருக்கும்; உள்ளே வெள்ளையாய், பற்களைப்போல் பிரகாசிக்கும்: கட்டியாய் பலபலவென்று உதிர்ந்துவிடும்: ஒருமாதிரியான வெகுட்டலையுடைய வாசனைவீசும்; கசப்பும் வாய்க்கினிப்பில்லாத சுவையையுடையது; சுடவைத்தால் இளகலாகும்; ஜலத்தில் கரையாது, ஆனால் மெதுவாகிப்பாலைப்போல் குழம்பாகும். பிசினிமாத்திரம் கரைந்து, ரோஜனம் மிதக்கும், சாராயத்தில் கரைந்துவிடும்.

### Ammoniacum Præparatum. *Prepared Ammoniac.*

*பிரிபேர்ட் அம்மொனியாக். சுத்திசெய்த அம்மொனியாக் என்னும் பிசினி.*

செய்முறை.— க - பவுன், முத்தைகளாய் இருக்கிற அம்மொனியாக் என்னும் பிசினியை, அதுமுழுகும்படி ஜலம்விட்டு, இரண்டும் கலந்துபோகிறவரையில் காய்ச்சி, மயிர்ச்சல்லடையில் வடிகட்டி, பிறகு ஜலயந்திரத்தில்வைத்து, அடிக்கடித் துழவி, குளிர்ந்தஉடன் கட்டியாய்ப்போகிற பதத்துக்கு சுண்டவைத்துக்கொள்ள வேண்டியது.

ACTION. Stimulant, Expectorant, Antispasmodic.

செய்கை.—உஷ்ணித்துக் கபத்தை அறுக்கும்; வலிகளைக்கண்டிக்கும்.

USE. In Chronic Catarrhs.

உபயோகம்.—நாள்பட்ட காசரோகங்களுக்கு உபயோகிக்கப் படுகின்றது. இப்போது இதை பிளாஸ்திரியாகச் செய்து, மேகக்கட்டிகள், பருந்தமூட்டுகள், முதவிய வீக்கங்களுக்குப் போடப்படும்.

DOSE. gr. x. to ʒss.

ஒ. அளவு.—ம - முதல், ௩ம - கிறேன் அளவுக்கு மாத்திரைச் செய்தாவது, அல்லது, பால், ஜலம் இவைகளில் எதிலாவது கரைத்துக் கொடுக்கலாம்.

**Mistura Ammoniaci.** *Ammoniac Mixture, or Emulsion.*

அம்மொனியாக் மிகிச்சர்.

PREP. (Prepared Ammoniacum ʒv., Distilled Water Oj.) *Dose.* ℥ss.—jss.

செய்முறை —ரு - திராம், அம்மொனியாகம் என்னும் பிசினியில், க - பையின்ட் ஜலத்தைக் கொஞ்சங் கொஞ்சமாய் விட்டு, இரண்டும் கலந்துபோகிறவரையில் அரைக்கவேண்டியது.—ஒ. அளவு.—௨ - முதல், க௨ - அவு. அளவுக்கு, நாள்பட்ட இருமல் ரோகத்துக்குக்கொடுக்கலாம்.

**Emplastrum Ammoniaci.** *Ammoniac Plaster.*

அம்மோனியாக் பிளாஸ்டர் என்னும் கெட்டிக் களிம்பு.

PREP. செய்முறை.—ரு - அவுன்ஸ் அம்மொனுயகம் என்னும் பிசினியை, அ - அவுன்ஸ், டிலூட் அஸிடிக் ஆஸிட், (Dilute Acet. Acid) என்னும் காடியுடன் சேர்த்து, உருக்கி, பிறகு இடைவிடாமல் அழவிக்கொண்டே சுண்டவைத்துக் கொள்ளவேண்டியது.—இதில் காடியானது பிசினியைக் கரைக்கிறதில்லை, இளகலாக்கும். இதை த்தோல், அல்லது நார்துணிமேலாவது தடவி, நாள்பட்ட வீக்கங்களுக்குப் போட்டால், கரையும்;

**GALBANUM.** *Opoidea Galbanifera. Galbanum Officinale.* Gum-resin.

கால்பெனம். ரோஜனப்பிசின்.

PROP. குணங்கள்.—இது ரோஜனம் கலந்த ஓர்விதபிசின். சிறியகட்டிகள் சேர்ந்து, முத்தையாய் இருக்கும். கொஞ்சம் பச்சையும் மஞ்சளும் கலந்தசாயலாயும், ஒருவிதமான மெத்தவாசனையாயும், கறகறப்பும், வாய்க்கினிப்பில்லாமல், கசப்பாயும் இருக்கும்; கட்டிகளாய் இருப்பது கொஞ்சம் கறுத்திருக்கும்; ஜலம்விட்டரைத்தால் பால்போலாகும்.

**Galbanum Præparatum.** *Prepared Galbanum.*

பிரிபெர்ட் கால்பேனம. சுத்திசெய்த கால்பேனம்.

PREP. செய்முறை.—அம்மொனியகம் என்னும் பிஸினியைச் சுத்திசெய்த முறையாய், இதையும் சுத்திசெய்து கொள்ளவேண்டியது.

ACTION. Antispasmodic, Expectorant.

செய்கை.—வலிகளைக் கண்டிக்கும்; கபத்தை அறுக்கும்.

USE. உபயோகம்.—பெருங்காயத்தைக் கொடுக்கிற ரோகங்களுக்கு, இதை க்கொடுக்கப்படும்; ஆனால் அதற்கு இது இளப்பம். இதின் களிம்பை மேலுக்கு அடிக்கடி உபயோகப்படுத்தப்படும்.

DOSE. gr. x.—xx.

ஒ. அளவு.—ய - முதல், உய - கிறேன் அளவுக்கு, மாத்திரைசெய்தாவது, ஜலம்விட்டுக் குழம்பாக்கியாவது, கொடுக்கலாம்.

**Pilula Galbani Composita.** *Compound Galbanum Pill.*
கம்பவுன் கால்பேனம் பில், கால்பேனம் மெழுக்கு.

PREP. (Prepared Galbanum ʒij., Myrrh, Prepared Sagapenum, of each ʒiij., Prepared Assafœtida ʒj., Soft soap ʒij., Treacle q. s.) *Dose.*—gr. x—xx.

செய்முறை.—உ - திராம், சுத்திசெய்த கால்பேனம்; ௩ - திராம் வெள்ளைத்திபோளம்; ௩ - திராம் ஸெகபீனம்; க - திராம் சுத்திசெய்த காயம்; உ - திராம் இளகிய சவுக்காரம்; வெல்லப்பாகு அதற்குத் தகுந்தது. இவைகளைச்சேர்த்து இடித்து, முத்தையாய்ச்செய்துகொள்ள வேண்டியது.—ஒ. அளவு.—ய - முதல், உய - கிறேன் இடைக்குக்கொடுத்தால், வலிகளைக் கண்டிக்கும், குதகத்தைக் கிரமப்படுத்தும்.

**Emplastrum Galbani.** *Emplastrum Gummosum. Galbanum plaster.*
கால்பேனம் பிளாஸ்டர். கால்பேனம் கெட்டிக்களிம்பு.

PREP. (Prepared Galbanum ℥viij., Common Turpentine ℥j., Prepared Frankincense ℥iij., Lead Plaster ℔iij.)

செய்முறை.—அ - அவுஸ் சுத்திசெய்த கால்பேனம்; க - அவுன்ஸ் டர்பன்டயின், இவைகளைச்சேர்த்து உருக்கி, பிறகு இத்துடன், ௩ - அவுன்ஸ் சுத்திசெய்த குந்திரகம் பிசினி, ௩ - பவுன் வங்கபிளாஸ்திரி, இவைகளை முதல் கிறுநீயிட்டெரித்து உருக்கி, சேர்த்து மிஸ்ரமித்துக்கொள்ள வேண்டியது.

செய்கை. உபயோகம்.—இதைத்தோலின்மேல் தடவி, கரையாத கட்டிகளுக்குப்போட்டால், கட்டிகள் கரைந்துவிடும்.

**CAROTA.** *Daucus Carota. Common Carrot.* The fresh root.
காரட். கார்ட் கிழங்கு.

இந்தக்கிழங்கு முள்ளங்கியைப்போல் மஞ்சள் நிறமாய், தித்திப்பாய் இருக்கும்; இதை அனேக இடங்களில் பயிரிடுகிறார்கள்; சமைத்து சாப்பிடப்படும். இந்தக்கிழங்கை, வேகவைத்து போல்டீஸ்செய்து, ரணங்களுக்குப்போட்டால், துர்வாசனையை நீக்கி, அழுகிய மாமிஸத்தை விழச்செய்யும்; ஆராமல் அழுகி இருக்கிற ரணங்களை கிவப்பித்து ஆற்றும். இதில் காட்டில் விளைகிற சாதி ஒன்றுண்டு; அதின் விதையை அவுஷதமாய் உபயோகிக்கப்பட்டிருந்தது; ஆனால் இப்போது உபயோகிப்பதில்லை.

**CYMINUM.** *Cuminum Cyminum. Cumin. Cumin seeds.* Fruit.
கம்மின்சீட்ஸ். சீரகம். (வித்து.)

சீரகம் நல்ல வாசனையாய்க்காரமாய் இருக்கும்; உள்ளே தயிலமுண்டு. இதை இங்கிலீஷ்வைத்தியாள் மெத்த உபயோகப்படுத்துகிறதில்லை. சீரகத்தைக் கெட்டிக்களிம்பாகச்செய்து, வாயுவுசெய்து உபத்திரவப்படுத்துகிறபோது, வயிற்றுக்குப்போடுவதுண்டு. இதை நமது தேசத்தில் சாதாரணமாய்க்கஷாயங்களோடும், லேகியங்களோடும்,

சூரணங்களோடும் சேர்ப்பதுண்டு. சீரகவடைசெய்து கொடுப்பது ஒருமுறை. விதையை ம- முதல், கம - கிறேன் அளவுக்குக் கொடுக்கலாம்.

**CONIUM**. *Conium maculatum. Hemlock.* The leaves.

கோனியம். ஹெம்லாக். (இலை.)

PROP. குணங்கள்.—இந்த இலை கசப்பாயும், வெகுட்டலாயும், பச்சைநிறமாயும் இருக்கும்.

ACTION. Sedative, Anodyne.

செய்கை.—சமனகாரி. வேதனுசாந்தகாரி.

USE. In acute and chronic Rheumatism, Neuralgia, Cancer, &c.

உபயோகம்.—இதை உள்ளுக்கும், வெளிக்கும் உபயோகப்படுத்தப்படும். கீல்வாயு, நரம்புவேதனை, புத்து, விரணம், இவை முதலியரோகங்களுக்கு உபயோகிக்கலாம், வேதனையை சமனப்படுத்தும். இது முக்கியமாய் முள்ளந்தண்டைப்பற்றி குணத்தைக்காட்டும். இதை வெகுஜாக்கிரதையாய்க்கொடுக்கவேண்டியது. மிதத்துக்கு அதிகமானால், ஸ்தம்பம் பரோகம் (Paralysis) காணும். இதைக்கொடுக்கும்போது, தொண்டையில் வரளலும், இருகலும் கண்டால், மருந்து அதிகமானதற்கு அடையாளம்.

DOSE. Of the Powder of the leaves. gr. iij.—gr. v.

ஓ. அளவு.—இலையின் சூரணத்தில், ஈ - முதல் ரு - கிறேன் அளவுக்குத் தினத்துக்கு உ - ஈ - தடவை கொடுக்கலாம்.

**Extractum Conii**. *Extract of Hemlock.*

எகிஸ்டிராட் ஆவ் ஹெம்லாக். ஹெம்லாக் சத்து.

செய்முறை.—க -பவுன் பச்சை ஹெம்லாக் என்னும் இலைகளை, கல்லு உரலில் இடித்து, ரஸத்தைப்பிழிந்து, வடிகட்டாமல் சுண்டவைத்து, மெழுக்குபதமாக்கிக் கொள்ளவேண்டியது. இது மெத்த பச்சைநிறமாய்க்கெட்டுப்போகாமல் மெத்தநாள் இருக்கும்.—ஓ. அளவு.—ஈ - கிறேன், இடைக்கு தினத்துக்கு, உ - ஈ - தடவை கொடுக்கலாம்.

**Tinctura Conii**. *Tincture of Hemlock.*

டிங்சர் ஆவ் ஹெம்லாக். ஹெம்லாக் பாவனத்திரவம்.

PREP. (Dried leaves of Conium ℥v., Proof Spirit Oij.) *Dose.* fℨss.—fℨj.

செய்முறை.—ரு - அவுன்ஸ் கோனியம் என்னும் உலர்ந்தஇலையை, உ - பையிண்ட் புரூவ்ஸ்பிரிட் என்னும் சாராயத்தில்போட்டு, எ - நாள் ஊறவைத்து, பிழிந்து வடிகட்டிக்கொள்ள வேண்டியது.

ஓ. அளவு.—൨ - முதல், க - திராம் அளவுக்குக் கொடுக்கலாம்.

**Pilula Conii Composita.** *Compound Hemlock Pill.*

சம்பவுன் ஹெம்லாக்பில் ஹெம்லாக் மெழுக்கு.

PREP. (Extract of Hemlock ℈v., Powdered Ipecacuanha ℈j., Treacle q. s.) *Dose.* gr. v.

செய்முறை.—ரு- திராம். எகிஸ்டிராக்ட் ஆவ் ஹெம்லாக் என்னும்சத்துடன்,

க - திராம், இபிகாக்கியுஎரு என்னும் சூரணத்தைச் சேர்த்து, அரைக்குழந்த வெல்லப்பாகைவிட்டு, அரைத்து முத்தையாய்ச் செய்துகொள்ள வேண்டியது.

ஒ. அளவு.—ஒ - கிறேன் அளவுக்குக் கொடுத்தால், இரைப்போடு காணுகிற இருமலைத் தணிக்கும்.

கோனியம் என்னும் சரக்கை, இளகிய களிம்பாகவும், போல்டஸ் ஆகவும்செய்து உபயோகிக்கப்படும்.

## CORIANDRUM. *Coriandrum sativum. Coriander.* Fruit.

கோரியான்டர். கொத்துமல்லி. தனியா. (விதை.)

PROP. குணங்கள்.—கொத்துமல்லியானது, காய் இனத்தில்சேர்ந்தது ; ஆனால், விதை என்று சொல்வதுவழக்கம். இது சகலருக்கும் பிரசித்தமாய்த்தெரிந்த பதார்த்தம். காரமாயும், வாசனையாயும், இருக்கும் ; உள்ளே தயிலமுண்டு.

ACTION. Stimulant, Carminative, Stomachic.

செய்கை.—உஷ்ணமான கர்ப்பவாத ஹரகாரி ; ஜாடராக்கினி வர்த்தனகாரி.

USE. உபயோகம்.—கிராம்பு, சோம்பு, இவைமுதலிய வைகளுக்கு இருக்கிற குணமே, இதற்கும் உண்டு. வாசனையாய் இருக்க மருந்துகளோடு முக்கியமாய் இதை சேர்க்கப்படும்; தனியாய் உபயோகிக்கிறதில்லை ; மசாலையோடு சேர்ப்பது வழக்கம் ஏ - முதல் க - திராம் அளவுக்குக் கொடுக்கலாம். இதை வெந்நீரில்போட்டு ஊறவைத்து, பாலும் சருக்கரையும் சேர்த்து, குடித்துக்கொண்டு வந்தால், பித்த சமனமாகும், வாதத்தைப்போக்கும், வாந்தியை நிறுத்தும், தாகத்தை அடக்கும். கொத்துமல்லிக் கீரையை, துவையல்செய்து சாப்பிட்டால், அரோசகம்போம், பித்தசமனமாகும், சுரத்துக்கும் நல்லது.

## IPECACUANHA. *Ipecacuan. Hippo. Cephaelis Ipecacuanha.* Root.

இபிகாகியு எரு. (வேர்.)

PROP. குணங்கள்.—இந்த வேர் நீண்டு, முறுக்கிக்கொண்டு முடிகள் போட்டதாய் இருக்கும் ; வெளிக்கு சாம்பல் நிறமாயும், உள்ளே வெள்ளையாயும் இருக்கும் ; எளிதில் தூளாக்கலாம் ; கொஞ்சம் வெகுட்டலோடு கூடிய ஒருமாதிரி வாசனையாயும், கறகறப்புள்ள சுவையாயும் இருக்கும். இதிலிருக்கிற உப்புக்கு, எமிடைன் (Emetina) என்றுபேர்.

ACTION. Emetic in large doses; Expectorant, Diaphoretic, Sedative, in smaller.

செய்கை.—வமனகாரி, கபஹரகாரி, சுவேதகாரி, ஸமனகாரி.

USE. In Fevers, Phthisis, Buboes, Swelled testicles, Dysentery, Asthma, Hooping cough, Hæmorrhages, Pneumonia, Rheumatism, Gout, &c.

உபயோகம்.—சுரங்கள், க்ஷயரோகம் இதுகள் ஆரம்பத்திலும், மேகக்கட்டி, அண்டநோய் இவைகளுக்கும் இதை வாந்திக்குக் கொடுக்கலாம் ; சீத சுரத்தில், குளிர் காணுதற்கு முன்னதாய், இதை வாந்திக்குக் கொடுத்தால், குளிரின் வேகத்தைத் தணிக்கும். சீதபேதி, சுவாசகாசம், கக்கிருமல், ரத்தப்பெருக்கு, நுரைஈரல் தாபனரோகம்,

இவைகளுக்கு, குமட்டல் உண்டாகும்படியாய் கொடுக்கலாம். இதை அபினியோடு சேர்த்து, வியர்வை பிறக்கும்படி, சந்திகளிலேத்துமரோகம், கணுவாதரோகம், சுரங்கள், இவைகளுக்குக் கொடுக்கப்படுகின்றது. குழந்தைகளுக்கும், பலவீனமுடைய வயது தளர்ந்தவர்களுக்கும், மெலிந்த தேகமுடைய ஸ்திரிகளுக்கும், மெத்த ஆயாசத்தை உண்டாக்காமல் வாந்திக்குக் கொடுக்கவேண்டியதாய் இருந்தால், இந்தச் சூரணத்தைக் கொடுக்கலாம். கபத்தை அதிகப்படுத்தத்தகுந்த ரோகங்களுக்கும் கொடுக்கலாம். இதை, டார்டர் மெடிக் (Tartar Emetic) என்னும் வாந்தி உப்போடு சேர்த்துக்கொடுப்பது வழக்கம். விஷத்தை வயிற்றிலிருந்து வெளிப்படுத்த, இதை வாந்திக்குக் கொடுக்கலாகாது.

DOSE. gr. xv—gr. xx. as an Emetic. gr. ij. as a Nauseant. gr. j—gr. ij., as an Expectorant and Diaphoretic. gr. ½ as an Alterative in Dyspepsia.

ஓ. அளவு.—யரு - முதல் உய - கிறேன், அல்லது. ½ - திராம் அளவுக்குக் கொடுத்தால், வாந்தியாகும். க - கிறேன் வாந்திஉப்பை (Tartar Emetic), இதனோடு சேர்த்துக்கொடுப்பது வழக்கம். வெந்நீரைக் குடித்துக்கொண்டிருந்தால், வாந்தி தாராளமாய் ஆகும். உ - கிறேன், கொடுத்தால், வயிற்றைப் புரட்டிக்கொண்டே வாயில் ஜலம் ஊறும். க - முதல் உ - கிறேன் கொடுத்தால், கபம் வெளிப்படும், வியர்வை பிறக்கும். ½ - கிறேன் அளவுக்கு, மந்தாக்கினிரோகத்துக்குக் கொடுக்கலாம்.

**Vinum Ipecacuanhæ.** *Ipecacuanha Wine.*

இபிகாகியுவனு ஒயின் என்னும் சாராயம்.

PREP. (Ipecacuanha root bruised, ℥ijss. Sherry Wine, Oij.) *Dose.* ♏. x.—♏. xxx. as an Expectorant and Diaphoretic; fʒij. to fʒiv. as an Emetic.. Often given to children in doses of ♏xx. to fʒj.

செய்முறை.—உ½ - அவுன்ஸ் இபிகாகியு வனு என்னும் வேரை நொறுக்கி, உ - பையின்ட் ஷெரி ஒயின் என்னும் சாராயத்தில் போட்டு, எ - நாள் ஊறவைத்து, பிறகு வடிகட்டிக் கொள்ளவேண்டியது.

ஓ. அளவு.—ய - முதல், ஙய-மினிம் விதம் கொடுத்தால், கபத்தை அறுக்கும், வியர்வையைப் பிறப்பிக்கும்; உ - முதல் - ச - திராம் அளவுக்குக் கொடுத்தால், வாந்தியாகும். உய - மினிம்முதல், க - திராம் அளவுக்கு வழக்கமாய் குழந்தைகளுக்குக் கொடுக்கப்படுகின்றது. பெரியவர்களுக்கு, இதை வாந்திக்குக் கொடுப்பது அரிது.

**Syrupus Ipecacuanhæ.** *Syrup of Ipecacuanha.*

ஸிரப் ஆவ் இபிகாகியுவனு, என்னும் பாணிதம்.

PREP. (Ipecacuan in coarse powder ℥iv., Rectified Spirit Oj., Proof Spirit and distilled water, of each f℥xiv., Syrup Ovij.) *Dose.* Expectorant fʒj.—fʒij. Emetic for infants fʒss.—fʒj.

செய்முறை.—ச - அவுன்ஸ் ஒன்று இரண்டாய் இடித்த இபிகாகியுவனு என்னும் வேரை, யரு - அவு. ரெக்டிபைட் ஸ்பிரிட் என்னும் சாராயத்தில்போட்டு, உச-மணிநேரம், சிறுதிப்படும்படியாய் எரித்து ஊறவைத்து, வடிகட்டி, திப்பியைப் பிழிந்து

வடிகட்டிக்கொள்ளவும். திப்பியில் மறுபடியும், ம௪ - அவுன்ஸ் புரூவ் ஸ்பிரிட்என்னும் சாராயத்தை விட்டு, முன்போல் திப்பட ஊறவைத்து, மறுபடியும், ம௪ - அவுன்ஸ், தி நீர்விட்டு, ஷெ பிரகாரமாய் ஊறவைத்து, பிறகு எல்லாவற்றையும் ஒன்றுய்ச்சேர்த்து, மஉ - அவுன்ஸ் அடியில் திற்கும்படியாய் வாலையிலிட்டெரித்து, சாராயத்தை வடித்துக்கொண்டு, அடியில் திற்கிறதுடன், ரு - அவுன்ஸ் ரெக்டிபையிட் ஸ்பிரிட்என்னும் சாராயத்தைச் சேர்த்து, பிறகு, எ - பையின்ட்-பாணிதத்தைச் சேர்த்துக்கொள்ளவேண்டியது.—இது குழந்தைகளுக்குக் கொடுக்க எடுத்த மருந்து. உ - அவுன்ஸ் பெரியவர்களுக்கும், உம - துளி முதல், கூம - துளிவரையில், குழந்தைகளுக்குங் கொடுத்தால், வாந்தியாகும்.

**Pulvis Ipecacuanhæ Compositus.** *Compound Ipecacuan powder.*
Dover's Powder.

கம்பவுன் இபிகாகியுயன் பவுடர். டோவர்ஸ்பவுடர் என்னும் சூரணம்.

Prep. (Ipecacuan in powder, Opium, of each ʒj., Sulphate of Potash, ʒviij.) Diaphoretic in *Doses* of gr. v. to gr. x.

செய்முறை.—இபிகாகியு ஏனு என்னும் சூரணம், அபினி, இவைகள் வகை - க - க்கு - க - திராம் ; அ - திராம் ஸல்பேட் ஆவ் போடாஷ் என்னும் உப்பு ; இவைகளைச்சேர்த்து செவ்வையாய் அரைத்துக்கொள்ள வேண்டியது.—ம - கிறேன், சூரணத்தில், க - கிறேன் அபினி இருக்கின்றது.

ஒ. அளவு.—இதை, ரு - கிறேன் முதல், ம - கிறேன் இடைக்குக்கொடுத்தால், வியர்வைபிறக்கும். குல்கந்து சேர்த்து, மாத்திரைசெய்துகொடுக்கலாம். கொஞ்சநேரம் விட்டுவிட்டு கொடுக்கவேண்டியதாய் சிலவேளை இருக்கும். இதை இருமல், சளுப்பு, முடக்கு வாதம், நீர்க்கோவை, இவை முதலியரோகங்களுக்குக் கொடுக்க உதவும். வாந்தியாகிலும், கிரோபாரமாகிலும் இருக்கிறபோது இதைக் கொடுக்கலாகாது.

**Pilula Ipecacuanhæ cum Scilla.** *Pill of Ipecacuanha and Squill.*

பில் ஆவ் இபிகாகியு ஏனு அன்ட் ஸ்குவில்.

Prep. (Pulvis Ipecacuan Co. ʒiij., Squill freshly powdered, and Ammoniacum powdered, of each ʒj., Treacle q. s.) *Dose.* gr. v.—gr. x.

செய்முறை.—௩ - திராம் டோவர்ஸ் பவுடர் என்னும் சூரணம் ; அப்போது தூள்செய்த ஸ்குவில்ஸ் என்னும்சரக்கு ; தூள்செய்த அம்மோனியகம் என்னும்சரக்கு, இவைகள் வகை - க - க்கு - க - திராம். வெல்லப்பாகு, அதற்குத்தகுந்தது. இவைகளைச்சேர்த்து இடித்து முத்தைசெய்து கொள்ளவேண்டியது.—இது வியர்வையைப் பிறப்பிக்கும், கபத்தை அறுக்கும்,

ஒ. அளவு.—ரு - முதல், ம - கிறேன் இடைக்குக் கொடுக்கலாம்.

**COFFEA ARABICA.** *Coffee.*

காபி. காப்பிக்கொட்டை. (வித்து.)

காப்பிக்கொட்டைக்குப் பலத்தைக்கொடுக்கிற குணமும், உஷ்ணம்செய்கிற குணமும் உண்டு ; காரமாய்ச்செய்த காப்பித்தண்ணீரில், கொஞ்சம் கொடுத்தால், பேதியை நிறுத்தும் ; மெத்தக் குடித்தால் பேதியாகும். இதற்குத் திபனத்தை உண்டாக்குகிற குண

மும், பித்தத்தை விருத்திபடுத்துகிறகுணமும் இருக்குதென்று கண்டிருக்கிறது. குவை ஞு, நிலஆவாரை, சீமை இந்துப்பு, இவைகளோடு சேர்த்துக்கொடுத்தால், அவைக ளுக்கு இருக்கிறவெகுட்டலை, எடுத்துவிடும். சுவாஸகாஸத்திற்குக் கொடுத்தால், உடனே சமப்படுத்தும்; குழந்தைகளுக்குக் காணுகிறவாந்தி, முகஜந்தி, சுரங்கள், கக்கிருமல் ரோகம், அபினிமுதலியவைகளை விஷமிக்கும்படி சாப்பிட்டு விடுதல், தலைவலி முதலிய் ரோகங்களுக்குக் கொடுத்து சவுக்கியமுண்டானதாய்த் தெரியவருகின்றது.

## CINCHONA. *Peruvian Bark.*

ஸின்கோனு. பிருவியன்பார்க். (பட்டை.)

ஸின்கோனு என்கிற பட்டையில் மூன்று சாதிகளுண்டு.—

க. Cinchona Pallida. Pale Bark. Cinchona Lancifolia. C. Ovata. C. Condaminea. Crown or Loxa Bark.—பேல்பார்க். வெளிறேடின ஸின்கோனு பட்டை.—இந்தச்சாதிப்பட்டையில் இருக்கிற சத்துக்கு, ஸின்கோனிய (Cinchonia) என்றுபெயர்.

உ. Cinchona flava. Yellow Bark. C. Calisaya. C. Cordifolia.—எல் லொபார்க். மஞ்சள் வருணமான ஸின்கோனு பட்டை.—இந்தப்பட்டையில் இருக்கிற சத்துக்கு, குவைனு (Quina) என்றுபெயர்.

ந. Cinchona Rubra. Red Bark. C. Oblongifolia—ரெட்பார்க். சிவந்த் ஸின்கோனுபட்டை.—இந்தப்பட்டையில், குவைனு, ஸின்கோனிய என்கிற சத்து கள் இருக்கின்றன.

மேற்சொல்லிய மூன்று சாதிப்பட்டைகளிலும், ஸின்கோனிய, குவைனு, என்கிற ஆல்கேலாய்டஸ் (Alkaloids.) என்னும் உப்புகளும், கைனிச் ஆஸிட் (Kinic Acid) என் னும் சாரமும் இருந்தபோதிலும், மஞ்சள் வருணமான ஸின்கோனுபட்டையில் குவை னு அதிகமாகவும்—வெளிறேடின ஸின்கோனுபட்டையில், ஸின்கோனிய அதிகமாக வும்—சிவந்த ஸின்கோனுபட்டையில், குவைனுவும், ஸின்கோனியாவும், சமரஸமாக வும் இருக்கின்றன.

ACTION. Astringent, Antiseptic, Tonic, Anti-periodic.

செய்கை.—மேல் விவரித்த மூன்றுஜாதி ஸின்கோனுபட்டைகளின் குணம் ஒ ன்று; அவைகள் பலகாரி, ஸங்கோசனகாரி, மாமிஸம் அழுகிப்போகுதலைத் தடுக்கும்; காலக்கிரமமாய்க் காணுகிற ரோகங்களை நிவிர்த்திக்கும்.

USE. In Intermittents, continued fevers, keeping the bowels clear; confluent smallpox, erysipelas, acute rheumatism, passive hæmorrhages, and in every disease attended with deficient action. *Externally* in gargles; and lotions, in gangrenous ulcerations, &c. To check the nausea excited by it, wine and aromatics are added; to prevent purging, opium; costiveness, rhubarb.

உபயோகம்.—மேற்சொல்லிய மூன்றுசாதிப்பட்டையில், மஞ்சள்வருணப்பட்டை யானது மெத்தவேகமுள்ளது. வெளிறேடின பட்டையை, கொஞ்சம்பலம்வரும்படியா ய்ச்செய்யவேண்டிய ரோகச்சிகிச்சையில் பிரயோகிக்கலாம். சிவப்புப்பட்டையை இப் போதுமெத்தக்கையாளுகிறதில்லை. இந்தமூன்றுசாதிப்பட்டையில் எதையாவது, மூன்று

யாய்காணுகிற ரோகங்களுக்கும், விடாக்காய்ச்சலுக்கும், பெரியம்மை, அக்கி, கபோகில் வாதரோகம், ரத்தப்பெருக்கு, துர்ப்பலமுடைய சகலரோகங்கள், இவை முதலியவைக ளுக்குக்கொடுக்கலாம். வாயிரணத்துக்கு, வாய்கொப்புளிக்கிற ஜலமாகவும், துவாலையாக வும் உபயோகப்படுகின்றது. அழுகிய ரணங்கள்மேல் தூவினால், துர்வாசனையை எடுத் துவிடும். இது குமட்டலை உண்டாக்கினால், ஒயின் சாராயத்தையும், லவங்கப்பட்டை முதலிய மணமுள்ளவைகளைச் சேர்த்துக்கொடுக்கவேண்டியது; இதனால் பேதியானால், அபினியையும், மலச்சிக்கலானால், ரேவல்சின்னியையும் சேர்த்துக்கொள்ளலாம். முதல் பேதிக்குக்கொடுத்து, வயிற்றிலிருக்கிற துர்மலத்தைப்போக்கினபிறகு, இந்தஔஷதத் தைக் கொடுக்கவேண்டியது. துர்ப்பலமுடையவர்களுக்குக் கொடுத்தால், தேகத்துக்கு பலம்வரும். முறைக்காய்ச்சல், காலக்கிரமமாய்க்காணுகிறநோய்கள், இவைகளைக்கண்டி க்கும். சுரம் இல்லாதபோது, இதைக்கொடுக்கவேண்டியது. பார்க்பவுடரை, குறை ந்த அளவில் அடுத்து அடுத்துக்கொடுத்தால், மெத்தநன்மைசெய்யும்; ஏனெனில், ஒரு வேளைக்குக் கொடுக்கிற அளவு, பரிமாணத்தில் மெத்த இருப்பதால், குமட்டலையாவது வாந்தியையாவது உண்டுபண்ணும். நாட்பட்ட ரத்தபேதி, அதிசாரம், இந்த ரோகங் களுக்கு, ஸின்கோனுவைக் கொடுக்கலாம்.

DOSE. gr. x.—LX. as a tonic. ʒj.—ij., as an antiperiodic.

ஓ. அளவு.—பார்க்பவுடரை, இப்போது சூரணமாய்க் கொடுப்பது அரிது. தேகத்துக்கு வலுவு வரும்படிக்கொடுக்கவேண்டியதாய் இருந்தால், ய - முதல், சய- கிறேன் அளவுக்கு, தினத்துக்கு, உ - ௩ - தடவை கொடுக்கலாம். நோய்களைத் தடுக்க வேண்டியகாலங்களில், க - முதல், உ - டிராம் அளவுக்கு, உ - அல்லது, ௩ - மணிநே ரத்துக்கு ஒருதரம் கொடுக்கவேண்டியது; இந்த அளவு சிலருக்கு மாத்திரம் ஏற்றுக் கொள்ளும். இதைப் பாலில்கலந்து, உடனே சாப்பிட்டுவிட்டால், கசப்பு மெத்தத் தட்டுப்படாது.

*Incompatibles*. சத்துருபதார்த்தங்கள்.—பார்க் பவுடர் என்னும் சூரணத்து டன், அம்மொனிய, போடாஷ், சுண்ணாம்புநீர், ஆர்ஸினைட் ஆவ்பொடாஷ் (Arsenite of Potash) என்னும் பாஷாணம், வாந்தி உப்பு (Tartar Emetic), அன்னபேதி, வங்க உப்பு, வீரம், காடிக்காரம், மாசக்காய், டானிக் ஆஸிட், ஜிலடீன் (Gelatine) இவைக ளில் எதைச்சேர்த்தாலும், முறிந்துவிடும்.

## **Infusum Cinchonæ.** *Infusion of Cinchona.*

## இன்பியுஷன் ஆவ் ஸின்கோனு. ஸின்கோனுபட்டை வெந்நீர்க்கஷாயம்.

PREP. (Bruised Yellow Bark, ℥j., Boiling Dist. Water, Oj.) *Dose*. ℥j.-iij.

*செய்முறை*.—க - அவுன்ஸ் நொறுக்கிய மஞ்சள் வருணமான ஸின்கோனுப ட்டையை, க - பையின்ட் கொதிக்கிற ஆவிநீரில்போட்டு மூடி, உ - மணிநேரம் ஊற வைத்து, வடிகட்டிக்கொள்ள வேண்டியது.

வெளிறேடின ஸின்கோனு பட்டையை, ஷை முறையாகவே வெந்நீர்க் கஷாய மாய்ச் செய்துகொள்ளவேண்டியது.

ஓ. அளவு.—இவ்விரண்டு வெந்நீர்க் கஷாயங்களில், எதையாவது, க - முதல் ௩ - அவுன்ஸ் அளவுக்கு, ச - மணிக்கொருதரம் கொடுக்கலாம். இவைகள் தீபனத்தை

விருத்திபடுத்தும்; பலத்தைத்தரும். முக்கியமாய் அக்கினி மந்தரோகம், தூர்ப்பலம், இவைகளுக்குக் கொடுக்கப்படுகின்றன.

**Decoctum Cinchonæ.** *Decoction of Cinchona.*

டிகாக்ஷன் ஆவ் ஸின்கோனா. ஸின்கோனாபட்டைக் கஷாயம்.

Prep. (Bruised Yellow Bark, ℨx., Dist. Water, Oj.) *Dose.* ℥j.—ij.

செய்முறை.—௰ - திராம், நொறுக்கிய மஞ்சள்நிறமான ஸின்கோனாபட்டையை, ௧ - பையின்ட் நீரில்போட்டு மூடி, ௰ - மினிட்டுநேரம்காய்ச்சி, சுடுகையாய் இருக்கிறபோதே வடிகட்டிக் கொள்ளவேண்டியது.

மற்ற இரண்டுசாதி ஸின்கோனாபட்டைகளை, ஷை முறையாகவே கஷாயமாய்ச் செய்துகொள்ளவேண்டியது. இதை நெருப்பின்மேல் வைத்துக்காய்ச்சுவதில், அதிகசத்து இறங்கும்; ஆனால், கஷாயம் குளிர்ந்த உடனே, சத்து அடியில் படிந்துவிடும்.

ஓ. அளவு.—இம்மூன்று கஷாயங்களில் எதையாவது, ௧ - முதல், ௨ - அவுன்ஸ் அளவுக்குக் கொடுக்கலாம். இவைகளும் தீபனத்தை அதிகப்படுத்தும், பலத்தைக் கொடுக்கும். நோயுற்றெழுந்தோர்களுக்குக் கொடுக்கலாம்.

**Tinctura Cinchonæ.** *Tincture of Cinchona.*

டிங்சர் ஆவ் ஸின்கோனா. ஸின்கோனாபட்டை பாவனத்திரவம்.

Prep. (Bruised Yellow Bark, ℥viij., Proof Spirit, Oij.) *Dose.* fℨj.—iij.

செய்முறை,—௮ - அவுன்ஸ் நொறுக்கிய மஞ்சள்நிறமான ஸின்கோனாபட்டையை, ௨ - பையின்ட் புரூவ்ஸ்பிரிட் என்கிற சாராயத்தில்போட்டு, ௭ - நாள்ஊற வைத்து, பிறகு வடிகட்டிக் கொள்ளவேண்டியது. வெளிறேடின ஸின்கோனாபட்டையை, ஷை முறையாகவே, பாவனத்திரவரூபமாய்ச் செய்துகொள்ளவேண்டியது.

ஓ. அளவு.—இவ்விரண்டுவித பாவனத்திரவத்தில் எதையாவது, ௧ - முதல், ௩ - திராம் அளவுக்கு, ஷை கஷாயங்களோடு சேர்த்துக்கொடுக்கலாம். தேகத்துக்கு வலுவை உண்டாக்கும்.

**Tinctura Cinchona Composita.** *Compound Tincture of Cinchona.*

கம்பவுன் டிங்சர் ஆவ் ஸின்கோனா. ஸின்கோனாபட்டை மிஸ்ரம பாவனத்திரவம்.

Prep. (Bruised Pale Bark, ℥iv., dried Orange peel, ℥iij., Powdered root of Aristolochia Serpentaria, ℨvj., Chopped Saffron, ℨij., bruised Cochineal, ℨj., Proof Spirit, Oij.) *Dose.* ℨj.—iv.

செய்முறை.—௪ - அவுன்ஸ் நொறுக்கிய வெளிறேடின ஸின்கோனாபட்டை; ௩ - அவுன்ஸ் உலர்ந்த ஆரஞ்சிப் பழத்தோல்; ௬ - திராம் ஸர்பன் டேரிய என்னும் வேரின் தூள்; ௨ - திராம் நொறுக்கிய குங்குமப்பூ; ௧ - திராம், நொறுக்கிய இந்திரகோபம். இவைகளை, ௨ - பையின்ட் புரூவ்ஸ்பிரிட் என்னும் சாராயத்தில் போட்டு, ௭ - நாள்ஊறவைத்து, பிறகு வடிகட்டிக் கொள்ளவேண்டியது. இதற்கு ஹக்ஸாம்ஸ் டிங்சர் ஆவ் பார்க் (Huxham's Tincture of Bark) என்று சொல்லப்படும்.

ஓ. அளவு.—௧ - முதல், ௪ - திராம் அளவுக்குக் கொடுத்தால், கொஞ்சம் உஷ்ணம்செய்து, பலத்தைக் கொடுக்கும்.

**Extractum Cinchonæ.** *Extract of Cinchona.*

எகிஸ்டிராக்ட் ஆவ் ஸின்கோனா. ஸின்கோனா பட்டைச் சத்து.

PREP. (Yellow Bark, bruised, is to be boiled several times in distilled water, the decoction strained while hot, and evaporated to a due consistence) *Dose.* gr. v.—xxx.

செய்முறை.—௧ - பவுன் ஒன்று இரண்டாய் நொறுக்கிய மஞ்சள் நிறமான ஸின்கோனாபட்டையை, ௮ - பையின்ட் தீநீரில்போட்டு, பட்டைக்கு ஈரம் செவ்வையாய் ஏறும்படி கத்தியால் துழாவி, ௨௪ - மணிநேரம் ஊறவைத்து, பிறகு நார்துணியில் வடிகட்டி, திப்பியை மறுபடியும், ௨ - பயின்ட்சலத்தில்போட்டு, ௨௪-மணிநேரம் ஊறவைத்து, பிறகு வடிகட்டி இரண்டையும் ஒன்றுய்ச்சேர்த்து, பதத்துக்குச்சுண்டக் காய்ச்சிக் கொள்ளவேண்டியது:

மற்ற இரண்டுசாதி ஸின்கோனாபட்டையை; மேற்படி முறையாகவே காய்ச்சி, சத்தை எடுத்துக்கொள்ளவேண்டியது:

ஒ: அளவு.—இந்த மூன்றுசாதி ஸின்கோனாபட்டைச் சத்தில், எதையாவது, ௫ - கிறேன் முதல், ஒ - திராம் இடைக்குக் கொடுக்கலாம்.

**Quinæ Disulphas.** *Quinæ Sulphas. Disulphate or Sulphate of Quina; commonly called Sulphate of Quinine.* A crystalline salt prepared from Yellow Cinchona.

குவைனிடை ஸல்பஸ். ஸல்பேட் அவ் குவைனென். குவைனென்.

பார்க்பவுடர் என்னும் சூரணத்தில் இருந்து எடுக்கிற உப்பு.

DESCRIP. AND PROP. விவரணம். குணங்கள்.—இதை குவைனென் என்று சாதாரணமாய்ச் சொல்லப்படும். இதைதான் இப்போது மெத்த உபயோகப்படுத்துகிறார்கள். குவைனென் என்பது மஞ்சள்வருணமான ஸின்கோனாபட்டையில் இருந்து எடுக்கிற ஓர்விதஉப்பு; ஒருபவுன் பட்டையில்; சுமார்; ௫ - திராம் ஸல்பேட் ஆவ்குவைனென் இருக்கின்றது. இந்த உப்பு வெள்ளை; பளபளப்பாயிருக்கும்; வாசனை இல்லை; அதிககசப்புடையது; சிறியநீண்ட கம்பிகள்போல் இருக்கும்; காற்றுப்பட புட்டியைத்திறந்துவைத்தால், உப்பாய் இருப்பது, மலர்ந்து, சூரணமாகிவிடும். இந்தச் சரக்கு விலையுயர்ந்ததாகையால், சருக்கரை; அரொருட்மாவு, ஜல்பேட் ஆவ் லைம் (Sulphate of Lime) என்னும் சுண்ணும்பு, இவைமுதலியவைகளைக் கலந்து விற்பதுண்டு. இதில் கெந்தகம் முதலிய திராவகங்களைச் சேர்த்தால், உடனே ஜலத்தில் கரைந்துவிடும். குவைனென் கலந்திருக்கிற ஜலம், கொஞ்சம் நீலச்சாயலாய் இருக்கும். குளிர்ந்த ஜலத்தில் கரையாது.

PREP. செய்முறை.—மஞ்சள் வருணமான பார்க்பட்டையை ஒன்று இரண்டாய் இடித்து, ஜலத்தில்போட்டுக் கொஞ்சம் கந்தகத் திராவகத்தைவிட்டு புளிப்பேற்றி, காய்ச்சிக்கொள்ளவேண்டியது. திப்பியில் ஜலமும், திராவகமும் விட்டு, ௨ - முதல் ௮ - தடவைக் காய்ச்சிக்கொள்ளவும்; பிறகு எல்லாவற்றையும் ஒன்றுய்ச்சேர்த்து வடிகட்டி, கஷாயம் குளிர்ந்தபிறகு; சன்னமாய் பொடிசெய்த தாளித்த சுண்ணும்பை, கஷாயம் காரம்ஏறிக், கறுப்பாகிறவரையில் சேர்க்கவும். அ

டியில் படிகிற வண்டலை எடுத்துக்கொண்டு, தண்ணீர் வடிந்தபிறகு, பிரஸ்ஸில் வைத்து மெதுவாய் அழுத்தினால், கட்டியாகும்; இதை உலர்ந்தபிறகு, சூரணஞ் செய்துகொண்டு, ரெக்டிபையிட்ஸ்பிரிட் என்னும் சாராயத்தில்போட்டு வெதுப்பி, வடிகட்டி, இந்தத்திரவத்தை வாலையில்விட்டு எரித்தால், திரவம் பாகுபோல் கறுத்துவரும்; இது, "கெட்டகுவைனீன்." இதனுடன் வளாவின கந்தகத்திராவகத்தை, மெத்தக்காரமில்லாமல் செய்து, வெகுசாக்கிரதையாய் விட்டு, ஸாடியுரேட் (Saturate) செய்து வடிகட்டி, உப்புகட்ட, அசையாமல் வைத்துவிடவேண்டியது. மஞ்சள்வருண டைஸல்பேட் என்னும் அடியில் படிந்தஉப்பைத் துணியில்போட்டு தண்ணீர் வடிந்தபிறகு பிரஸ்ஸில்வைத்து முடுக்கி, மறுபடியும் ஜலத்தில் கரைத்து, எலும்பு கரியைச்சேர்த்து, அழுக்கெடுத்து, மறுபடியும் உப்பு கட்டும்படிச் செய்யவேண்டியது. முடிவில், உப்பு தூளாகாமல் இருக்கும்படி வெகு ஜாக்கிரதையோடு, உலர்த்திக்கொள்ளவேண்டியது.

ACTION.—Tonic, Antiperiodic.

செய்கை.—பலகாரி, காலக்கிரமமாய் வருகிற ரோகங்களைத் தடுக்கும்.

USE. In fevers, and in every case in which chinchona has been employed.

உபயோகம்.—சுரங்களுக்கும், பார்க்பவுடர் என்னும் சூரணத்தைக் கொடுக்கிற பிரதிரோகங்களுக்கும், குவைனீன் என்கிறமருந்தை பிரயோகிக்கப்படுகின்றது. சீதசுரத்துக்கு, இந்தமருந்து சஞ்சீவி; சுரமில்லாதபோது, இதைக் குறைந்த அளவில் அடிக்கடிகொடுத்து, உடம்பில் ஊறும்படிச் செய்யவேண்டியது; அல்லது, குளிர்காணுகிறதற்குமுன், அதிகஅளவில் ஒரேதடவையாய்க்கொடுக்கலாம். இதனால் மலபந்தம்உண்டாகும், தலைநோய்காணும், காதில் கிங்காரத்துவனியைப்போல் ஒருவித இரைச்சலும் உண்டாகும். குவைனுஎன்கிற ஔஷதத்தை அதிகமாய்ச்சாப்பிட்டு, காதுசெவிடு ஆனதும்உண்டு. குவைனுவைக் கொடுத்துக்கொண்டு வருகிறபோது, காதில் இரைச்சல்கண்டால், உடனே ஔஷதத்தை நிறுத்திவிடவேண்டியது; இது, மருந்து தேகத்தில் ஊறினதற்கு ஒர்குறி. குவைனுவை பிரயோகிக்கிறதற்குமுன், வாந்திக்கும் பேதிக்கும் கொடுத்து, வயிற்றிலிருக்கிற துர்மலத்தை நீக்கிவிட்டால், மருந்து வெகுசீக்கிரத்தில் குணத்தைத்தரும். குவைனுவுடன், வளாவின கந்தகத்திராவகத்தைவிட்டு, (க—கிறேனுக்கு, க - துளி வீதம்) கரைத்து, வெறும்வயிற்றில் கொடுத்தால், வெகு சீக்கிரத்தில் உடம்பில்ஊறி, வியாதியைக் கண்டிக்கும். இது மெத்தக் கசப்புள்ளதாகையால், குழந்தைகள் இன்பமாய் சாப்பிடாது; ஆகையால், ஏமார்பஸ் குவைனு (Amorphas quina) என்கிற மருந்தைக் கொடுக்கலாம்.

*Contra-indication.* ரத்தபுஷ்டி யுடையவர்களுக்கும், சிரசில் அதிகரத்தம் பரவிய குறிகள் இருக்கிறபோதும், சிரோபாரத்திலும், வயிற்றிலும் தாபனம் கண்டிருக்கிறபோதும், குவைனுவைக் கொடுக்கலாகாது.

DOSE. gr. j.—x.

ஔ. அளவு.—க - முதல், ய - கிறேன் இடைக்குக்கொடுக்கலாம். முறைக்காய்ச்சல் முதலிய ரோகங்களைத்தடுக்க குவைனுவைக் கொடுக்க விரும்பியபோது, ய - முதல், உய - கிறேன் இடைக்கு, சுரம்காணுகிறதற்குமுன் கொடுக்கவேண்டியது. இதை குல்கந்துசேர்த்து, மாத்திரைசெய்தாவது, அல்லது, ஜலத்தில்போட்டு, கந்தகத்திரா

வகம்விட்டுக் கரைத்தாவது கொடுக்கலாம். ரோஜாபூவில், டானிக் ஆஸிட் என்கிற துவர்ப்புச்சத்து இருப்பதால், ரோஜாபூ கஷாயத்தில் கொடுக்கலாகாது.

**Tinctura Quinæ Composita.** *Compound Tincture of Quina.*

கம்பவுன் டிங்சர் ஆவ் குவைனு என்னும் குவைனு பாவனத்திரவம்.

PREP. செய்முறை.—௫ - திராம், உ௰ - கிறேன், டைஸல்பேட் ஆவ் குவைனு (Disulphate of Quina) என்னும் சரக்கை, உ - பையின்ட் ஆரஞ்சிப்பழப் பாவனத்திரவத்தில்போட்டு, எ - நாளாவது அல்லது, குவைனு சாராயத்தில் கரைகிறவரையிலாவது சிறுதிப்பட ஊறவைத்து, வடிகட்டிக்கொள்ள வேண்டியது. க - திராம், பாவனத்திரவத்தில், க - கிறேன் குவைனு இருக்கின்றது. ஓ. அளவு.—க - முதல் ரு - திராம் அளவுக்குக் கொடுக்கலாம்.

**Quinæ Valerianas.** *Valerianate of Quina.*

வெலிரியனேட் ஆவ் குவைனு என்னும் ஓர்வித உப்பு.

PREP. (Valerianate of Soda, gr. 124., Distilled Water, f℥xvj., Muriate of Quina, ʒvij.)

செய்முறை.—௱உச - கிறேன் வெலிரியனேட் ஆவ்சோடா என்னும்உப்பை, உ - அவுன்ஸ் ஆவிநீரில்கரைத்துக்கொள்ளவும், எ-திராம் முயுரி ஏட் ஆவ் குவைனுஎன்னும் உப்பை, ௰௪ - அவுன்ஸ் நீரில், கரைத்துக்கொள்ளவும். இவ்விரண்டையும் வெவ்வேறாய், ௱உ௰-டிக்கிரி உஷ்ணம் இருக்கும்படி, காய்ச்சி, பிறகுஒன்றாய்ச்சேர்த்து, உச-மணிநேரம் அசையாமல்வைத்து, அதின்பிறகு, வெலிரியனேட் ஆவ் குவைனு என்னும் உப்பு ஜனித்து ஊசிக் கம்பிகளைப்போல் சேர்ந்து கட்டிவிடும். இதை பிளாடிங்பேபர் என்கிற ஊறுகிற கடுதாசியில் வைத்து, மடித்து அழுத்தி, பிறகு சூடுபடாமலே உலர்த்திக்கொள்ளவேண்டியது. இது மெத்த நல்லமருந்து. வலிகளோடு சேர்ந்த ஜந்நிகளை எடுத்துவிடும். விட்டுவிட்டு காணுகிற நரம்பைப்பற்றிய வியாதிகளுக்கு அடுத்த ஔஷதம். ஓ. அளவு.—௧ - முதல், உ - கிறேன் இடைக்கு, தினத்துக்கு, ரு - தடவை கொடுக்கலாம். வாதக்குடைச்சல் ரோகத்துக்கு, குடைச்சல்காண, க-மணிநேரம் முன்னதாய், சாதாரணமாய்க்கொடுக்கிற அளவுக்கு, இரட்டித்துக்கொடுக்கவேண்டியது. விளாம்பிசின் பசையையாவது, குல்கந்தையாவதுசேர்த்து மாத்திரைசெய்து கொடுக்கலாம்.

**Quinæ Arsenis.** *Arsenite of Quina.*

ஆர்ஸினேட் ஆவ் குவைனு என்னும் உப்பு.

இந்த ஔஷதத்தை, சீதசுரத்துக்கு மெத்தக் கொடுப்பதுண்டு. ஒருகிறேனில், பத்தில் ஒருபாகம் முதல், வ - கிறேன் இடைக்கு, மெத்த ஜலத்தில் கரைத்துக் கொடுக்கவேண்டியது.

**Ferri et Quinæ Citras.** *Citrate of Iron and Quinine.*

ஸைட்ரேட் ஆவ் ஐரன் அன்ட் குவைனு என்னும் உப்பு.

இந்த உப்பு ஜலத்தில் அதிதிவிரத்தில் கரைந்துவிடும். இதற்கு, அயத்துக்கும், குவைனுவுக்கும் இருக்கிறகுணங்களே, இருக்கின்றது. இதை, உ - முதல், ரு - கிறேன் இடைக்கு, தினத்துக்கு, ரு - தடவை கொடுக்கலாம்.

**Liquor Quinæ Amorphous.** Solution of Amorphous Quina.
லொஹுஷன் ஆவ் எமார்பஸ் குவைனு என்னும் திரவம்.

இந்த திரவத்தில், ௫ - மினிம் கொண்டது, ௧ - கிறேன் குவைனுவுக்குச் சமானம். இதை, ௫ - மினத்துக்கு அதிகமாய் கொடுக்கலாம்.

**VALERIANA.** *Valeriana Officinalis.* (The Root.)
வெலிரியன். சடாமாஞ்சி. (வேர்.)

DESCRIP. AND PROP. விவரணம். குணங்கள்.—சடாமாஞ்சி என்னும் வேரானது, அநேக ஜல்விவேர்களையுடைய ஒருசாதிக்கிழங்கு; மேலே அழுக்குபடிந்ததாயும், உள்ளே வெள்ளைநிறமாயும் இருக்கும்: ஒரு மாதிரியான அதிகவாசனையாயும், கசப்பும், காகரப்பும், மணமுள்ள சுவையை யுடையதாயும், இருக்கும்; இதன்வாசனை சிலருக்கு விருப்பமாயிராது. ஏரிகரையிலும், சதுப்பு நிலத்திலும் உள்ள செடியின்வேருக்கு, விரோதம் செய்கிறகுணம் இல்லை. இதில் இருக்கிற சத்துக்கு, வெலிரியானிக் ஆஸிட் (Valereanic acid) என்றபெயர்.

ACTION. Diffusible Stimulant, and Antispasmodic.
செய்கை.—உஷ்ணகாரி, அங்காகர்ஷண நாஸகாரி.

USE. In epilepsy, hysteria, spasmodic cough, dyspnœa, dyspepsia, and neuralgia; also as a Vermifuge.

செய்கை.—சடாமாஞ்சியின் குணம் முக்கியமாய் மூளையிற்காட்டுகிறபடியால் அதிகமாய்க்கொடுத்தால், தலைவலி, மயக்கம் காணும், கண்கெட்டுப்போகும். இதை, காக்கைவலி, குதகஜந்தி, இரைப்போடு கூடிய இருமல், கஷ்டசுவாசம், மந்தாக்கினி, குடைச்சல், கிருமி இவைமுதலியரோகங்களுக்கு உபயோகிக்கப்படுகின்றது. இதை குதகஜந்திக்குக் கொடுத்தால், மெத்த குணத்தைக்கொடுக்கும்; ஆனால், வெகுசீக்கிரத்தில் இதன்வேகம் குறைந்துவிடுகின்றது. இப்போது இதை மெத்த உபயோகப்படுத்துகிறதில்லை: ஆனால், வெலிரியனேட் ஆவ் ஐரன், குவைனு, ஜிங், என்னும் சடாமாஞ்சியைச் சேர்த்துச்செய்கிற மருந்துகள், நாள்தோறும் உபயோகப்பட்டு வருகின்றது. இவைகளை நம்பிக்கொடுக்கலாம்.

DOSE. Of the powdered root gr. xx—xl.

ஒ. அளவு.—வேரைத் தூள்செய்து, ௨௰ - முதல், ௪௰ - கிறேன் இடைக்குக் கொடுக்கலாம்.

சடாமாஞ்சிக்கு, இருமல், இரத்தபித்தம், இரைப்பு, உஷ்ணம், கண்ணோய், குஷ்டம், சிலந்திவிஷம், பழயசுரம், பேதி, வாயு, இவைகள்போகுமென்று தமிழ்நூலிற் கண்டிருக்கின்றது.

**Infusum Valerianæ.** *Infusion of Valerian.*
இன்பியுஷன் ஆவ் வெலிரியன். சடாமாஞ்சி வெந்நீர்க்கஷாயம்.
PREP. (Valerian root ℥ss., Boiling Dist. Water, Oj.)
*Dose.* f℥j—ij.

செய்முறை.—½ - அவுன்ஸ், சடாமாஞ்சிவேரை, ௧ - பைன்ட் கொதிக்க

காய்ந்த ஆவிநீரில்போட்டு மூடி, ௬-மணி நேரம் ஊறவைத்து, பிறகு வடிகட்டிக்கொள்ளவேண்டியது.

ஔ. அளவு.—௧ - முதல், ௨ - அவுன்ஸ் அளவுக்குக் கொடுத்தால், கொஞ்சம் உஷ்ணஞ்செய்யும்.

**Tinctura Valerianæ.** *Tincture of Valerian.*

டிங்சர் ஆவ் வெலிரியன். சடாமாஞ்சி பாவனத்திரவம்.

PREP. (Bruised Valerian root, ℥v., Proof Spirit, Oij.)

*Dose.* ʒ ss—iv.

செய்முறை.—௫ - அவுன்ஸ் இடித்த சடாமாஞ்சிவேரை, ௨ - பையின்ட் புரூவ் ஸ்பிரிட் என்னும் சாராயத்தில் போட்டு, ௭ - நாள் ஊறவைத்து, பிறகு பிழிந்து வடிகட்டிக்கொள்ளவேண்டியது.

ஔ. அளவு.—௪-முதல், ௪ - திராம் அளவுக்குக் கொடுக்கலாம்.

**Tictura Valerianæ Composita.** *Tinctura Valerinæ Ammoniata.*

*Compound Tincture of Valerian.*

கம்பவுன் டிங்சர் ஆவ் வெலிரியன். சடாமாஞ்சி மிஸ்ரம பாவனத்திரவம்.

PREP. (Valerian root bruised, ℥ v., Aromatic Spirit of Ammonia, Oij.) *Dose.* fʒ ss—ij.,

செய்முறை.—௫ - அவுன்ஸ் இடித்த சடாமாஞ்சியை, ௨ - பையின்ட் பரிமள நவக்ஷாரமதுவில் போட்டு, ௭ - நாள் ஊறவைத்து, பிறகு வடிகட்டிக்கொள்ளவேண்டியது.

ஔ. அளவு.—இது மெத்த வேகமுள்ளது. ௬ - முதல், ௨ - திராம் அளவுக்குக் கொடுக்கலாம்.

**ANTHEMIS.** *Anthemis nobilis. Chamomile, or Camomile* (Flowers.)

கமொமயில். சீமை செவ்வந்திப்பூ (புஷ்பம்.)

இந்தப்புஷ்பம் பிரசித்தமாய் எல்லாருக்கும் தெரிந்திருப்பதால், விவரித்து இவிடத்தில் சொல்லவில்லை.

ACTION. Stomachic, Tonic, and Febrifuge.

செய்கை.—ஜாடராக்கினிவர்த்தனகாரி, பலகாரி, சுரஹரகாரி.

USE. In dyspepsia, and general debility.

உபயோகம்.—மந்தாக்கினிரோகம், தூர்ப்பலம் இவைகளுக்கு செவ்வந்திப்பூ உபயோகிக்கப்படுகின்றது. செவ்வந்திப்பூ வெந்நீர்க்கஷாயத்தை சூடாய் சாப்பிட்டால், வாந்தியை அதிகப்படுத்தும், இதை ஜலத்தில் போட்டுக் காய்ச்சியாவது, வெந்நீரில்போட்டு ஊறவைத்தாவது, சுடச்சுட ஒத்தடம்கொடுத்தால், நோவை சமனப்படுத்தும்; குளிர்ந்த கஷாயத்தைக் கண்ணுக்குத் அலம்பலாகப்போட்டால், கண்ணில் இருக்கிற ரத்தநரம்புகளுக்கு வலுவைக்கொடுக்கும்; மூலத்துக்கும் உபயோகிக்கலாம்.

DOSE. Of the powdered flowers, 5 to 30 grains.

ஔ. அளவு.—புஷ்பத்தின் சூரணத்தில், ரு - முதல், ௩௰ - கிறேன் இடைக்குக் கொடுக்கலாம்; ஆனால் இதை உபயோகிக்கிறதில்லை.

### Infusum Anthemidis. *Infusion of Chamomile.*

### இன்பியூஷன் ஆவ் கமொமயில். சீமை செவ்வந்திப்பூ வெந்நீர்க்கஷாயம்.

செய்முறை.—ரு - திராம் - செவ்வந்திப்பூவை, க-பையின்ட் கொதிக்கிற ஆவிநீரில்போட்டு மூடி, ௰ - நிமிஷம்வரையில் ஊறவைத்து, பிறகு வடிகட்டிக்கொள்க.—இந்தக்கஷாயம் கொடுத்தால் பலம் வரும்; சூடாய்க் கொடுத்தால் வாந்தியாகும்.

ஔ. அளவு.—குளிர்ந்த கஷாயத்தில், க - முதல், உ - அவுன்ஸ் கொடுக்கலாம். செவ்வந்திப்பூவில் இருந்து எடுக்கிறசத்தும் (Extract of Chamomile), தயிலமும் (Oil of Chamomile) உபயோகப்படுகின்றன. சத்தில், ௰-முதல், உ௰ - கிறேன் கொடுக்கலாம். தைலத்தில், க - முதல், ரு - துளி கொடுக்கலாம்.

### PYRETHRUM. *Anacyclus Pyrethrum. Pellitory of Spain.* (Root.)

### பைரித்திரம். அக்கரகாரம். (வேர்.)

குணங்கள்.—இந்த வேர் பிரசித்தமாய் எல்லாருக்கும் தெரிந்தபடியால், இவிடத்தில் விவரிக்கவில்லை.

ACTION. Irritant, Sialogogue.

செய்கை.—வெப்பத்தைத் தரும், திரவகாரி.

உபயோகம்.—இதை இங்கிலீஷ்வைத்தியர்கள் உள்ளுக்கு உபயோகிப்பது அரிது. இது மெத்த காரமுள்ளது; சருமத்தின்மேல் தேய்த்தால் எரிச்சல் காணும், சிலவேளை வீங்கி நோய் எடுக்கும். இதை வாயில்போட்டு மென்றால், முதல் ஒன்றும் தெரியாது, பிறகு காரமாயும், விருவிருப்பாயும் இருக்கும். அதிக உமிழ்நீர் வடியும். இதின் சத்துக்கு, பைரிதிரின் (Pyrethrin) என்று பெயர். பல்நோவு, நாக்கில் காணுகிற ஸ்தம்பரோகம், உண்ணாக்கு வளர்ந்திருத்தல், இவைகளுக்கு உபயோகப்படுத்தலாம். இதை முக்கியமாய் வாயில் ஜலம் ஊற உபயோகிக்கப்படுகின்றது. ஜலத்திற் கரைத்து வாதரோகங்களுக்கு உபயோகப்படுத்துகிறார்கள். பல்நோவுக்கு, ஒரு துண்டு அக்கரகாரத்தை வாயில்போட்டு மென்றால் அதிக நீர்வடிந்து, நோய் சமனப்படும். தமிழ் வைத்தியர்கள், கண்டா ஔஷதம் செய்கிறமுறையில் இது பிரதானச்சரக்கு என்றுசேர்க்கிறார்கள். தோஷித்துப்போய் வாயில் ஜலம் இல்லாதகாலத்தில், இதை உபயோகப்படுத்தலாம். அக்கரகாரத்தினாலே, சுரம், தாகம், தோஷம், வாதம் இவைகள் போமென்றும், வாயிலடக்க, ஜலம் உண்டாகுமென்றும், தமிழ் நூல்களிற் கண்டிருக்கின்றது.

ஔ. அளவு.—க - திராம் இடைக்கு, அடிக்கடி வாயில்போட்டு மெல்லலாம்.

## ARTEMISIA SANTONICA. *Southernwood. Semen Sanctum. Semen Contra.* (Worm Seed.)

ஒரம்ஸீட்.

மொக்கும் கரம்புகளும் தூள்செய்துகொள்ளுகிற ஓர்வித ஔஷதம். இதை ௰ - முதல் ௫௰-கிறேன் இடைக்கு, அந்தி சந்தி இரண்டுவேளையும் சிலநாள் கொடுத்து, பிறகு நல்ல பேதிக்குக் கொடுத்தால்; உருண்ட கிருமிகள் வெளிப்படுவிடும். இதில் இருந்து எடுக்கிற சத்துக்கு ஸான்டொனீன் என்று பெயர்

**Santonine.**

ஸ்ரன்டொனீன்.

ஸான்டொனீன் என்பது, ஒரம்ஸீட் என்னும் பதார்த்தத்தின் சத்து. இது பிரகாசமான தகடுகளாய் மெத்த அழகாய் இருக்கும்; வெளிச்சம்பட்டால், வெகு சீக்கிரத்தில் மஞ்சள்நிறமாகிவிடும்; கசக்கும்; ஜலத்தினுற் கரையாது, ஆனால் கொழுப்பிலும், சாராயத்திலும் கரையும்; கொஞ்சம் சூடுபட்டால் பறந்துவிடும். இதைச் செய்வது கஷ்டமானதாலும், சீக்கிரத்திலே கெட்டுப்போவதாலும், இதின்விலை அதிகமாய் வைத்து விற்கப்படுகின்றது. இதை திமிர்ப்பூச்சி, உருண்டநாகப்பூச்சி இவைகளுக்குக் கொடுத்தால், அவைகளைக்கொன்று வெளிப்படுத்திவிடும்.

ஒ. அளவு.—வெளிச்சம்பட்டு கெட்டுப்போகாமல் சுயம்பாய் இருக்கிற ஸான்டொனீன் என்னும் உப்பை, ௪-முதல், ௬-கிறேன் அல்லது இன்னம் அதிகமாய் பெரியவர்களுக்குக் கொடுக்கலாம்; ஹ-முதல், ௨-கிறேன் இடைக்கு, வயதுக்குத் தக்கபடி குழந்தைகளுக்குக் கொடுக்கவேண்டியது. இதை ஸ்காமொனி (Scammony), ரேவல்சின்னி, அயச்சிந்தூரம், இவைகளில் எதிலாவது கலந்து குழந்தைகளுக்குக் கொடுக்கலாம். சிற்றுமணக்கு எண்ணெயில் கலந்துகொடுக்கும்படியாய், ஒரு வைத்தியர் சொல்லுகிறார். மிகச் சிறிய குழந்தைகளுக்கு, வருத்தமில்லாமல் கொடுக்க இது தகுதியான மருந்து.

## ABSINTHIUM. *Artemisia Absinthium. Wormwood.* (Flowering tops.)

அப்ஸிந்தியம். ஒரம்உட். மாஸிபத்திரி. (சடை)

குணங்கள்.—உலர்ந்த மாசிபத்திரியானது, கசப்பாயும், ஒருமாதிரியான வாசனையாயும் இருக்கும்; இதை சாக்கிரதையாய் உலர்த்திக்கொண்டால், இந்த குணங்கள் வெகுநாளைக்கு இருக்கும்.

Action. Anthelmintic, Tonic.

செய்கை.—கிருமிநாஸகாரி, பலகாரி.

உபயோகம்.—இதைக் கிருமிரோகத்துக்கு உபயோகிக்கப்படும். மறுபடியும் கிருமிகள் உற்பத்தியாகாமல் செய்கிற குணம் உண்டு. இதற்கு வலுவைத் தருகிற குணம் இருப்பதால், பலவீனம், அக்கினிமந்தம், இவைகளுக்குக் கொடுக்கலாம். ௩ - திராம் தூளை, ௨-அவுன்ஸ் வெந்நீரிற்போட்டு, வெந்நீர்க் கஷாயமாகச் செய்து கொடுத்தால் மெத்த சுலபம்: இதை ஜலத்தில்போட்டுக் காய்ச்சி ஒத்தடம் கொடுத்தால், வீக்கம் கரையும், தூர்வாசனை நீங்கிவிடும்.

DOSE. The dose of the powdered herb is 20 to 30 grains.

ஓ. அளவு.—இந்தப் பூண்டின் சூரணத்தில், உ௰ - முதல், ௩௰ - கிறேன் அளவுக்குக் கொடுக்கலாம்.

**TARAXACUM.** *Dandelion.* (The recent root.)

டெராக்ஸிகம். டான்டிலியன். (பச்சைவேர்)

குணங்கள்.—இந்த வேரானது அழுக்குபடிந்த நிறமாயும், உள்ளே வெள்ளையாயும் இருக்கும். சமூலத்தில் பாலைப்போன்ற ரசம் இருக்கும்; இந்த ரசத்தில் இருக்கிற சத்துக்கு, டெராக்ஸீன் என்று பெயர்.

ACTION.—Aperient, Deobstruent, Alterative.

செய்கை.—லகுவிரேசனகாரி, ஸோபாநாஸகாரி, வியநாபேதகாரி.

USE. In affections of the liver, in chronic cutaneous diseases, dyspepsia, dropsy, and cachectic disorders.

உபயோகம்.—இந்த மருந்தை யகுர்திகண்ட ரோகங்களுக்கும், நாள்பட்ட சருமரோகங்களுக்கும், அக்கினிமந்தம், நீர்க்கோவை, மேகம் முதலிய ரோகங்களுக்குக்கொடுப்பதுண்டு. இதை முக்கியமாய் பித்தநீர் அதிகரிக்க கொடுக்கின்றது. அதிகமாய் கொடுத்தால், மூத்திரத்தை அதிகப்படுத்தும்; மலத்தைப்போக்கும்.

**Decoctum Taraxaci.** *Decoction of Taraxacum.*

டிகாக்ஷன் ஆவ் டெ ராக்ஸிகம். டெராக்ஸிகம் கஷாயம்.

PREP. (Fresh Dandelion root bruised, ℥ iv., Distilled water, Oiss.) *Dose.*—℥jss.

செய்முறை.—௪ - அவுன்ஸ், நொறுக்கிய டான்டிலியன் என்னும் பச்சைவேரை, க௨ - பையின்ட் ஆவிநீரில்போட்டு, க - பையின்ட்டுக்குச் சுண்டக்காய்ச்சி, வடிகட்டிக்கொள்ளவேண்டியது.

ஓ. அளவு.—இதை, க௨ - அவுன்ஸ் அளவுக்குக் கொடுக்கலாம்.

**Extractum Taraxaci.** *Extract of Taraxacum.*

எகிஸ்டிராக்ட் ஆவ் டெராக்ஸெகம். டெராக்ஸெகம் சத்து.

செய்முறை.—இதை, அதிமதுரச்சத்தை செய்கிறமுறையாய்ச் செய்துகொள்ளவேண்டியது.

உபயோகம்.—இந்தச் சத்தைத்தான் வழக்கமாய் உபயோகப்படுத்துகிறார்கள். இது கசப்பாய் இருக்கவேண்டியது.

ஓ. அளவு.—௰ - முதல், ௩௰ - கிறேன் அளவுக்குக் கொடுக்கலாம்.

**LOBELIA.** *Lobelia Inflata. Indian Tobacco.*

(The flowering herb.)

லொபிலிய இன்பிளேடா. இன்டியன் டொபாக்கொ. (பூக்கிற செடி.)

இது அமெரிகாதேசத்திலுள்ள ஒருபூண்டு. அவிடத்தில் உபயோகிப்பதைப்பார்த்து, சீமையிலும் உபயோகப்படுத்துகிறார்கள். இதைச் சூரணரூபமாகவும்,

பாவனத்திரவரூபமாகவும், செய்து உபயோகப்படுத்தக்கூடும்; இதற்கு நித்திரையைத்தருகிற குணமும், இளைப்பைத்தணிக்கிற குணமும் இருப்பதால், சுவாஸகாசரோகத்துக்குக் கொடுக்கப்படுகின்றது. மெத்தக் கொடுத்தால் வாந்தியும், பேதியும் ஆகும். சூரணத்தில், ௧ - முதல், ௫ - கிரேன் கொடுத்தால் கபத்தை வெளிப்படுத்தும்; ௰ - முதல் - ௨௰ - கிரேன் கொடுத்தால் வாந்தியாகும். பாவனத்திரவத்தில், ௰-முதல், ௯௰ - துளி கொடுத்தால், கபத்தைக் கண்டிக்கும்; ௧ - முதல், ௨ - திராம் வீதம், ௨ - அல்லது ௩ - மணிநேரத்துக்கு ஒருதரம் கொடுத்தால், இளைப்பைத்தணிக்கும்; ௪ - திராம் கொடுத்தால் வாந்தியாகும்.

**UVA URSI.** *Arctostaphylos Uva Ursi. Bearberry.* (Leaves.)

யூவா அர்ஸை. (இலைகள்.)

*குணங்கள்.*—இந்த இலைகள் உலர்ந்து பச்சைநிறமாயும், பளபளப்பாயும், ஒருபக்கம் மேடாயும், ஒருபக்கம் பள்ளமாயும் இருக்கும்; துவர்க்கும்; கொஞ்சம் வாசனையுண்டு. இதில் இருக்கிற சத்துக்கு ஆர்பியுடின் (Arbutin) என்று பெயர்.

Action. Astringent, Tonic, Mild Diuretic.

*செய்கை.*—ஸங்கோசனகாரி, பலகாரி, அல்ப மூத்திரவர்த்தனகாரி

Use. In the latter stage of chronic inflammation of the bladder.

*உபயோகம்.*—இந்த இலைக்கு, கிட்னியை உஷ்ணிக்கிற குணம் இருக்கிறதாய் காணப்படுகின்றது. சிலர், இதற்கு மூத்திரத்தை அதிகப்படுத்துகிறகுணம் இருக்குதென்றும், சிலர் இல்லையென்றும், சொல்லுகிறார்கள். இதை முக்கியமாய் நாள்பட்ட மூத்திரப்பை தாபன ரோகத்துக்குக் கொடுக்கலாம். இதை நாள்பட கொடுக்கவேண்டியது. மூத்திரப்பையில் கல்லு இருந்து, உபத்திரவப்படுத்துகிற ரோகத்திலும், இது சிலவேளை கொடுக்கப்படுகின்றது. மூத்திரப்பையில் இருக்கிற எரிச்சலைத் தணிக்க, இதை "பைகார்போனெட் ஆவ் ஸோடா" என்னும் உப்புடன் கலந்துகொடுப்பதுண்டு; அல்லது மூத்திரப்பை உள்ளே இருக்கிற சவ்வுக்கு பலம் வர, இதனுடன் திராவகங்களைச் சேர்த்துக்கொடுக்கிறார்கள்,

Dose. Of the powder gr. x—xxx.

ஔ. *அளவு.*—சூரணத்தில், ௰ - முதல், ௩௰ - கிரேன் கொடுக்கலாம்.

**Decoctum Uvæ Ursi.** *Decoction of Bearberry.*

டிகாக்ஷன் ஆவ் பேர்பெரி. யூவா அர்ஸை வெந்நீர்க் கஷாயம்.

Prep. (Bruised Uva Ursi, ℥j., Distilled Water, Oiss.)

*Dose.* ℥jss—iij.

*செய்முறை.*—௧ - அவுன்ஸ் இடித்த யூவா அர்ஸை என்னும் இலையை, ௧½ - பையின்ட், ஆவிநீரில்போட்டு, ௧ - பையிண்டுக்குக் காய்ச்சி, வடிகட்டிக்கொள்க.

ஔ. *அளவு.*—௧½ - முதல், ௩ - அவுன்ஸ் அளவுக்கு தினத்துக்கு மூன்று ஆவர்த்தி கொடுக்கலாம்.

**Extractum Uvæ Ursi.** *Extract of Bearberry.*

எக்ஸ்டிராக்ட் ஆவ் பேர்பெரி. யூவா அர்ஸை சத்து.

ஹாப்ஸ் (Hops) என்னும் மருந்தின் சத்தை எடுக்கிறமுறையாய், இதைச் செய்துகொள்ளவேண்டியது.

ஓ. அளவு.—௫ - முதல், ௰ - கிறேன் இடைக்கு, தினந்தோறும், ௨ - ௩-ஆவர்த்தி கொடுக்கலாம்.

## GUTTA PERCHA. *Isonandra Gutta.*

கட்டபர்ச்சா. (உறைந்துபோன பால்.)

இதுசெடியில் இருந்துவடிந்து உலர்ந்துவிடுகிற ஒருசாதிப்பால்; இதுகட்டியாய் அழுக்குப்படிந்தவன்னமாய் இருக்கும்; சூடுபட்டால் மிருதுவாகும்; நாப்தா (Naphtha) குளோரொபாரம் (Chloroform), டர்பன்டைன் (Turpentine) இவைகளில் கரையும். மிருதுவாயிருக்கிறபோது, நாம் எந்தவிதமாய் செய்துவைக்கின்றமோ, அந்த விதமாகவே உலர்ந்தபோதும் இருக்கும். எலும்பு ஒடிந்துபோனதற்கு, பத்தையைவைத்துக்கட்டுவதற்குப் பதிலாய், கட்டபர்ச்சாவில் பத்தையாகச் செய்து கட்டப்படும். ஜலத்தில் கரையாது, திராவகத்தில் கெடாது. இது அனேக விதங்களாய்ச் செய்து உபயோகிக்கப்படுகின்றது.

## STYRAX. *Styrax Officinale. Storax.*

ஸ்டைராக்ஸ்—ஸ்டொராக்ஸ்.

குணங்கள்.—இது கட்டியாயாவது, இளகலாயாவது இருக்கும் ; சாம்பிராணிவர்சனை வீசும்; கறுப்பும், சிவப்பும் கலந்த சாயலாய் இருக்கும். இதில் பென்சாயிக் ஆஸிட் (Benzoic acid) என்கிற சத்து இருக்கின்றது. கடைச்சரக்கில் தோஷங்கள் மெத்த உண்டு.

### Styrax Præparata. *Prepared Storax.*

பிரிபேர்ட் ஸ்டொராக்ஸ். சுத்திசெய்த ஸ்டொராக்ஸ்.

செய்முறை.—௧ - பவுன் ஸ்டொராக்ஸ் என்னும் சரக்கை, ௪ - பையின்ட் ரெக்டிபைட் ஸ்பிரிட் என்னும் சாராயத்தில் கரைத்து, நார்த்துணியில் வடிகட்டி, சிறுதியிட்டு எரித்து, சாராயத்தை வடித்துக்கொண்டு, அடியில் நிற்பதை, ஜலயந்திரத்தில் வைத்து பதத்துக்கு சுண்டக்காய்ச்சிக்கொள்ளவேண்டியது.

ACTION. Stimulant, Expectorant.

செய்கை.—உஷ்ணித்துக் கபத்தை வெளிப்படுத்தும்.

USE. In chronic coughs.

உபயோகம்.—நாள்பட்ட இருமல்முதலிய கபரோகங்களுக்குக் கொடுக்கப்படும். பால்ஸம் ஆவ் பிரு, டொலு, பென்சாயின் என்கிற மருந்துகளுக்குடைய குணங்களே இதற்கும் உண்டு ; ஆனால், இதை மெத்த உபயோகப்படுத்துகிறதில்லை.

ஓ. அளவு.—௰ - முதல், ௨௰ - கிறேன் இடைக்குக் கொடுக்கலாம்.

### Pilula Styracis Composita. *Compound Storax Pill.*

காம்பவுன் ஸ்டொராக்ஸ் பில். ஸ்டொராக்ஸ் கலவை மெழுக்கு.

PREP. (Prepared Storax, ℥ vj., powdered Opium and Saffron, of each ℥ ij.) *Dose.* gr. v or more.

செய்முறை.—௬ - திராம், சுத்திசெய்த ஸ்டொராக்ஸ் என்னும் சரக்கு ; ௨ -

திராம் அபினி, குங்குமப்பூ. இவைகளைச் சேர்த்து இடித்து மொத்தை செய்து கொள்ளவேண்டும். ௫ - கிறேன் மெழுகில், ௧ - கிறேன் அபினி இருக்கின்றது.

ஒ. அளவு.—அபினி எவ்வளவு கொடுக்கவேண்டியதோ அதற்குத் தக்கபடி, அளவை நிருக்கிட்டு, ௫ - கிறேன் முதல், அதிகப்படுத்திக்கொடுக்கலாம்.

**BENZOINUM.** *Styrax Benzoin. Benzoin. Gum Benjamin.*

பென்ஜாயின். பென்ஜெமின். மலக்கா சாம்பிராணி.

குணங்கள்.—இது பட்டையில் இருந்து வடிந்து உறைந்துபோன ஓர்விதத் தைலம். பெருங்காயத்தை துண்டித்துப் பார்வையிட்டால், எவ்விதமாய் இருக்குமோ அவ்விதமான நிறமாய் சிறிய மணிகளைப்போல் இருக்கும். நல்லவாசனையாய், இனிப்பாய் இருக்கும்.

ACTION. Stimulant, Expectorant.

செய்முறை.—உஷ்ணித்துக் கபத்தை வெளிப்படுத்தும்.

USE. In chronic catarrhs, and in fumigations.

உபயோகம்.—இதற்கு கபத்தைக்கண்டிக்கிறகுணம் இருக்கின்றது. இதின் தூபம் துர்வாசனையை எடுத்துவிடும். சுக்குவாய் இருமலுக்கு, இதின் தூபத்தைக்கொடுத்தால், சுகுணத்தைக் கொடுக்குமென்றுகண்டிருக்கின்றது. இதை உள்ளுக்குக்கொடுப்பது அரிது.

DOSE. gr. x—xxx.

ஒ. அளவு.—௰ - முதல், ௩௰ - கிறேன் இடைக்குக் கொடுக்கலாம்.

**Tinctura Benzoini Composita.** *Compound Tincture of Benzoin.*

கம்பவுன் டிங்சர் ஆவ் பென்ஜாயின். மலக்கா சாம்பிராணி பாவனத்திரவம்.

PREP. (Benzoin coarsely powdered, ℥ iijss., Prepared Storax, ℥ijss., Balsam of Tolu, ʒ x., Aloes, Socotrine or Hepatic, coarsely powdered, fʒ v., Rectified Spirit, Oij.) *Dose.* ʒ ss.—ij.

செய்முறை.—௩௨ - அவுன்ஸ் ஒன்று இரண்டாய் பொடிசெய்த மலக்கா சாம்பிராணி ; ௨௨ - அவுன்ஸ் சுத்திசெய்த ஸ்டொராக்ஸ் ; ௰ - திராம் பால்ஸம் ஆவ் டொலு ; ௫ - திராம், ஒன்று இரண்டாய் பொடிசெய்த மூஷாம்பரம் ; இவைகளை, ௨ - பைபின்ட் ரெக்டிபைட் ஸ்பிரிட் என்னும் சாராயத்தில் போட்டு, ௭ - நாள் ஊற வைத்து, வடிகட்டிக்கொள்ளவேண்டியது. இது கபத்தைப் போக்கும். ஜலத்தில் கலந்தால் மருந்துகள் பிரிந்துவிடும் ; ஆனால், விளாம்பிசின், முட்டையின் மஞ்சட்கரு, சருக்கரைப்பாகு இவைகளைச்சேர்த்து ஜலத்தில் மிஸ்ரஞ்செய்துகொள்ளலாம். இதை, பெரியர்ஸ் பால்ஸம் (*Friar's Balsam*) என்கிற பெயரோடு, முன்னே கந்திவெட்டு, காயம், ரணம் இவைகளுக்கு உபயோகப்படுத்தினதுண்டு.

ஒ. அளவு.—௨ - முதல், ௨ - திராம் அளவுக்குக் கொடுக்கலாம்.

**Acidum Benzoicum.** *Benzoic Acid.*

பென்ஜாயிக் ஆஸிட். சாம்பிராணிப்பதங்கம்.

சாம்பிராணியை பதங்கித்து எடுக்கப்படும். இது மிருதுவாய் வெள்ளை

யாய், சிறுகம்பிகளாய் இருக்கும் ; சாம்பிராணிக்குடைய வாசனையில் கொஞ்சம் உண்டு ; புளிப்பும் காரமும் இருக்கும் ; காற்றில் கெடாது ; இதின் புகை இருமலை உண்டாக்கும். இதை, இருமல் ரோகத்துக்கு சிலநாளைக்குமுன் மெத்த உபயோகப்படுத்தினதுண்டு ; ஆனால், தனியாய் இதை இப்போது கொடுப்பது அரிது. கர்ப்பூர மிஸ்ரம பாவனத்திரவத்தில் (Comp. Tinct. of Camphor) சேர்க்கப்படுகின்றது.

ஒ. அளவு.—௫ - முதல், ௩௰ - கிறேன் இடைக்கு, அதிக ஜலத்தில் கரைத்துக்கொடுக்கவேண்டியது, இல்லாவிட்டால் தொண்டையில் உபத்திரவம் காணும்.

**OLIVE OIL.** *Olivæ Oleum. European Olive. Salad Oil. Sweet Oil.*

ஆலிவ் ஆயல். ஸலாத் ஆயல். ஸ்வீட் ஆயல். சீமை எண்ணெய்.

குணங்கள்.—ஆலீவ் ஆயல் என்கிற எண்ணெய் தாவள்ளியமாய் தடித்து பிசுக்குபிசுக்கென்று மஞ்சள் நிறமாயாவது, வெளுறேடினதாயாவது, பச்சைச் சாயலாயாவது, தரத்துக்குத் தக்கபடி இருக்கும். முதல்தரம் தெளிவாய் இருக்கும். நல்ல தைலத்துக்கு வாசனையிராது, தித்திக்கும், நள்பட்டால், கார்த்துக்கெட்டுப்போகும். இதில் இலெயின் (Elaine or Oleine) மார்கரீன் (Margarine) என்கிற இரண்டுவித சத்துகள் இருக்கின்றன. காற்றுறவைத்தால் தளமாகும், உலராது ; ஜலத்திலும், சாராயத்திலும் கரையாது.

செய்கை. உபயோகம்.—தேகத்தைப் போஷிக்கும் ; எரிச்சலைத்தணித்து, போட்டவிடத்தை தளரப்பண்ணும் ; வெப்பகுணமுடைய விஷங்களைத் தின்றவர்களுக்கு, உள்ளுக்குக் கொடுக்கலாம். பூசுத்தைலங்களோடும், இளகிய களிம்பு, கெட்டிக்களிம்பு இவைகளோடும் சேர்க்கப்படும் ; இதற்கு சீக்கிரத்தில் உலருகிற குணம் இல்லாதபடியால், தலைமயிருக்குத் தடவலாம். ௧ - அவுன்ஸ் கொடுத்தால் வயிற்றை வழிக்கும் ; ஆனால் உள்ளுக்குக் கொடுப்பது அரிது. ஆஸனத்தில் பிரயோகிக்கிற மருந்துகளோடு சேர்க்கப்படுகின்றது. சீதபேதி, மூத்திரக்கடுப்பு இவைகளை சமனப்படுத்தும்.

**SAPO.** *Soap. Sapo Durus. Hard Soap. Spanish or Castile Soap.* Made with Olive Oil and Soda.

ஸோப். சவுக்காரம். கெட்டிச்சவுக்காரம்.

இதை, ஆலீவ் ஆயல் என்கிற எண்ணெயோடு, ஸோடா என்கிற உப்பைச்சேர்த்துச் செய்யப்படும். இது, வெள்ளை ; அயம்பட்டால், சிவப்பு அல்லது நீல நிறமான கீற்றுகள் இதன்மேல் காணப்படும் ; ஜலத்தில் கரையும். இதில், ஒலி ஏட் ஆவ் ஸோடா (Oleate of Soda), மார்கரேட் ஆவ் ஸோடா (Margarate of Soda) என்கிற பதார்த்தங்கள் இருக்கின்றன. இது, லிரேடம், பிளாஸ்திரி, தைலம் இவைகள்செய்கிற முறையில் சேருகின்றது.

**Sapo Mollis.** *Soft Soap.* Made with Olive Oil and Potash.

ஸாப்ட் ஸோப். இளகிய சவுக்காரம்.

இதை ஆலீவ் ஆயல் என்கிற எண்ணெயோடு, பொடாஷ் என்கிற உப்பைச் சேர்த்து செய்யப்படும். இது, மஞ்சளாய், மிருதுவாய், வெள்ளைப் புள்ளிகள்பட்டு

இருக்கும். இது, ஆசனத்தில் பிரயோகிக்கிற மாத்திரை ரூபமான மருந்துகளிலும் (Suppositories), கலவை கர்தகக்களிம்பிலும், சில மாத்திரைகள் செய்கிற முறையிலும்; சேருகின்றது.

சவுக்காரத்திற்கு புளிப்பை கண்டிக்கிற குணம் இருப்பதால், மூத்திரப்பையில் இருக்கிற லிதிக் ஆஸிட் கால்கியுலை (Lithic Acid Calculi) என்கிற கல்லைக்கரைக்க, மிக உபயோகப்பட்டுவருகின்றது. சருமரோகங்களுக்கு இதைத் தேத்துக் கழுவினால், சுகுணமுண்டு.

ஔ. அளவு.—கட்டிச்சவுக்காரத்தை, ௰ - முதல், ௩௰ - கிறேன் கொடுக்கலாம்.

**Pilula Saponis Composita.** *Compound Soap Pill.*

கம்பவுன் ஸோப் பில். சவுக்காரக் கலவை மெழுகு.

Prep. (Opium, and Liquorice, ā ā ʒij., Soft Soap, ʒvj.)

*செய்முறை.*—௨ - திராம் அபினித்தூள்; ௨ - திராம் அதிமதுரத்தூள்; ௬ - திராம் இளகிய சருக்காரம்; இவைகளைச்சேர்த்து, சமரசமாகும்படி இடித்துக்கொள்ளவேண்டியது. ௫ - கிறேன் மெழுகில், ௧ - கிறேன் அபினி இருக்கின்றது.

ஔ. அளவு.—௫ - முதல், ௰ - கிறேன் இடைக்குக் கொடுத்தால் நித்திரைவரும். ௫ - முதல் ௨௰ - கிறேன் இடைக்கு மாத்திரைசெய்து, ஆஸனத்தில் பிரயோகிக்கலாம்.

**Linimentum Saponis.** *Soap Liniment. Opodeldoc,*

ஸோப் லினிமென்ட். ஒபொடெல்டாக். சவுக்காரப் பூசுத் தைலம்.

Prep. (Distilled Water, f℥ij., Spirit of Rosemary, f℥xviij; Hard Soap, ℥ijss., Camphor, ʒx.)

*செய்முறை.*—௨ - அவுன்ஸ் நீரை, ௰௮ - அவுன்ஸ் ஸ்பிரிட் ஆவ் ரோஸ்மெரி என்னும் சரக்கில் மிஸ்ரமித்து பிறகு, ௨½ - அவுன்ஸ் கெட்டிச் சவுக்காரமும், ௰ - திராம், கர்ப்பூரமும் சேர்த்து அடிக்கடிக்குலுக்கி, அவைகள் கரைகிறவரையில் ஊறவைக்கவும். இந்தத்தைலம் சூட்டைக்கொடுத்து, நோயைத் தணிக்கும். ஒரே இடத்தில் இருக்கிற வாதநோய்களுக்குத் தேய்க்கக் குணமாகும்.

**Ceratum Saponis Compositum.** *Compound Soap Cerate.*

கம்பவுன் ஸோப்ஸிரோட். சவுக்கார மிஸ்ரக்களிம்பு.

Prep. (Oxide of Lead, ℥xv., Vinegar, C. j., Soap ℥x., Wax, ℥xiiss., Olive Oil, Oj.)

*செய்முறை.*—௰௫ - அவுன்ஸ், ஈயச்செந்தூரப்பொடியை, ௧ - காலன் காடியில்போட்டு சிறுதீயில் கொதிக்கவைத்து, அவைகள் சேருகிறவரையில், இடைவிடாமல் துழாவிக்கொண்டு இருக்கவும். பிறகு, ௰ - அவுன்ஸ் சவுக்காரத்தைச் சேர்த்து, ஈரமெல்லாம் சுண்டிப்போகிறவரையில் முன்போலவே காய்ச்சுக, ௰௨½ - அவுன்ஸ் மெழுகை, ௧ - பையின்ட் ஆலிவ் ஆயல் என்னும் எண்ணெயில் கரைத்து, மேற்படி சரக்குகளுடன் சேர்த்துக்கொள்ளுக. இதை மேகம் முதலிய ரணங்களுக்குப் போடலாம்.

**Emplastrum Saponis.** *Soap Plaster.*

ஸோப்பிளாஸ்டர். சவுக்காரக் கெட்டிக்களிம்பு. சவுக்காரப் பிளாஸ்திரி.

PREP. (Lead plaster, ℔iij., White Castile Soap sliced, ℔ss., Resin, ℥j.)

செய்முறை.—௩ - பவுன் வங்கபிளாஸ்திரியை, சிறுதீயில் வைத்து உருக்கி, ½ - பவுன் துண்டுதுண்டாய் அறுத்த வெள்ளைக் கெட்டிச் சவுக்காரம், ௧ - அவுன்ஸ் ரோஜனம்; இவைகளை முதல் உருக்கிக்கொண்டு, ௸ சரக்கோடு சேர்த்து, பிறகு இடைவிடாமல் துழாவிக்கொடுத்து, பதத்துக்குச் சுண்டக்காச்சிக் கொள்ளவேண்டியது. இதைக் கட்டிகளுக்குப் போடலாம்.

**Glycerina.** *Glycerine.* A sweet principle produced during Saponification.

கிளிஸிரீன்.

கிளிஸிரீன் என்பது, சவுக்காரத்தைச் செய்யும்போது எண்ணெயிலிருந்து ஜனிக்கிற ஓர்சாதி தைலம். இது, சருக்கரைப் பாகுபோலத் தடித்து, இள மஞ்சள் நிறமாய்த் தித்திப்பாயிருக்கும்; வாசனையில்லை; இது எண்ணெய்களில் இருக்கிற தித்திப்புப் பதார்த்தம்; காற்றுப்பட்டால் புளித்துப்போகாது. இது, காது செவிட்டுக்கு மெத்த உபயோகப்படுத்தப்படும். உள்ளுக்கு இதை மெத்தக்கொடுப்பதில்லை. இதற்கு, போட்டவிடத்தை ஈரமாகவே வைத்திருக்கிற குணம் இருப்பதால், சில சருமரோகங்களுக்கு உபயோகப்படுத்துகிறார்கள். ௨ - முதல் ௪ - திராம் அளவுக்கு, காப்பித்தண்ணீரிலாவது, சுத்தஜலத்திலாவது சேர்த்து, தினத்துக்கு ௨ - ௩ - தடவைகொடுக்கலாம்.

**MANNA.** *Fraxinus Ornus.* (Concrete exudation.)

மேனு. (உறைந்துபோன பால்.)

இது பலசாதி செடிகளில் இருந்து சேகரிக்கப்படுகின்றது.

குணங்கள்.—இது துண்டுகளாய் ஒருபக்கம், பள்ளமாய் இருக்கும்; தித்திக்கும்; கைச்சூடுபட்டால் மிருதுவாகும்; ஜலத்திலும் சாராயத்திலும் கரையும்.

செய்கை. உபயோகம். இது சாந்தியாய் மலத்தைக் கழிக்கும். இது குழந்தைகளுக்கும், அதிக நாஜூக்குடைய பெண்களுக்குமே கொடுக்கப்படும்; இதைத்தனியாய்க் கொடுப்பது அரிது. பேதிமருந்துகளோடு தித்திப்புக்காகச் சேர்க்கப்படும். மெத்தக் கொடுக்கலாகாது, வாயு செய்யும். மருந்துகளை மெழுகு பதமாக்க கூட சேர்க்கப்படும்.

ஔ. அளவு.—இதை குழந்தைகளுக்கு, ௧ - முதல் ௨ - திராம் இடைக்கும், பெரியவர்களுக்கு ௧ - முதல் ௨ - அவுன்ஸ இடைக்கும் கொடுக்கலாம்.

**CALOTROPIS GIGANTEA.** *Asclepias Gigantea. Gigantic Swallow-wort. Mudar.*

முடார். எருக்கன்.

செய்கை. உபயோகம்;—எருக்கனில் இரண்டு ஜாதிகளுண்டு; புஷ்பத்தில்

மாத்திரம் வித்தியாசம் காணலாம். இந்தச் செடியின் வேர்ப்பட்டை, பால், இவைகளைத் தமிழ் வைத்தியர்கள் வெகுநாளாய் உபயோகப்படுத்திக்கொண்டுவருகிறார்கள். எருக்கம்பால் விஷக்கடிகளுக்கும், வீக்கங்களுக்கும் உபயோகப் படுத்தப்படும். வாந்தி, பேதி, வியர்வை, இவைகளை உண்டாக்குகிற குணம் இதற்குண்டு. வேரின்பட்டைத்தூளை, ௭ - முதல், ௧ - கிராம் கொடுத்தால், வாந்தியாகும். ௨ - முதல், ௫ - கிறேன் இடைக்கு, ௨ - மணிக்கொருதரம் கொடுத்தால், குமட்டலோடு வியர்வை பிறக்கும்; குஷ்டரோகம் ஆரம்பத்தில் இதைக் கொடுத்தால், மெத்த சவுக்கியத்தைத்தரும். பாலைக் களிம்புசெய்து, ரணங்களுக்குப் போடுகிறதும் உண்டு. எருக்கிலை மிளகு இவைகளைச்சேர்த்து பாம்பு கடிக்குக் கொடுக்கிறார்கள்; இதை எண்ணெயில் போட்டுக் காய்ச்சி சொறி சிரங்குக்குத் தடவுகிறதுண்டு.

ஒ. அளவு.—வேர்பட்டைத் தூளில் ௫ - முதல், ௰ - கிறேன் இடைக்கு, தினத்துக்கு மூன்று தடவை கொடுக்கலாம்.

**HEMIDESMUS INDICUS.** *Indian Sarsaparilla.*
*Country Sarsaparilla.* (The root.)
இன்டியன் ஸார்ஸபெரில்லா. நாட்டு நன்னாரிவேர். (வேர்.)

குணங்கள்.—இந்த வேர் நீண்ட துண்டுகளாய் மேலே கறுத்து, உள்ளே மரமாயும், நல்ல வாசனையாயும், கசப்பாயும் இருக்கும்.

செய்கை.—உபயோகம்.—நன்னாரிவேர் பலத்தைக் கொடுக்கும், நாள்பட்ட வியாதிகளை ஸ்வஸ்தப்படுத்தும். கண்டமாலை, மேஹரோகம், சருமரோகங்கள் இவைகளுக்கு உபயோகிக்கலாம். இதற்கு மூத்திரத்தை விருத்திப்படுத்துகிற குணம் இருக்கிறபடியால், இருதயரோகத்தின்மேல் காணுகிற நீர்க்கோவைக்குக் கொடுத்தால், அதை நிவர்த்திக்குமென்று கண்டிருக்கின்றது. இதை வெந்நீர்க் கஷாயமாகவுஞ் செய்து உபயோகிக்கலாம்.

செய்முறை.—௪ - அவுன்ஸ் நன்னாரிவேரை, ௧ - பையின்ட் கொதிக்கிற ஜலத்தில் போட்டு, ௫௰ - நிமிஷம் ஊறவைத்து, வடிகட்டிக்கொள்ளுக. இதில் ௧ - முதல், ௨ - அவுன்ஸ் அளவுக்குக் கொடுத்தால், பலத்தைக் கொடுத்துக்கொண்டே மூத்திரத்தை அதிகப்படுத்தும்.

**Syrupus Hemidesmus.** *Syrup of Indian Sarsaparilla.*
ஸிரப் ஆவ் இண்டியன் ஸார்ஸபெரில்லா. நாட்டு நன்னாரிவேர்
பாணிதம், அல்லது ஷர்பத்.

Prep. (Indian Sarsaparilla bruised, ℥iv., Boiling Distilled Water, Oj., Refined Sugar in powder, as much as is sufficient.)

செய்முறை.—௪-அவுன்ஸ் நொறுக்கிய நன்னாரிவேரை, ௧-பையின்ட் கொதிக்கிற ஆவிநீரில்போட்டு, மூடி, ௪-மணிநேரம் ஊறவைத்து வடிகட்டிக்கொண்டு அசையாமல் வைத்தால், அடியில் மஷ்டுபடிந்துவிடும்; பிறகு கஷாயத்தைத் தெளிவாய் இறுத்துக்கொண்டு, கஷாய இடைக்கு இரண்டத்தனை, வெள்ளைச் சருக்கரையைச் சேர்த்து, ஆவிச் சூடாவது, ஜலத்தின் சூடாவது படும்படியாய் கரைத்துக்கொள்ளவேண்

டியது. இந்தப் பாணிதம் இனிப்பாய் இருக்கும் ; வேறு மருந்துகளுக்கு அநுபானமாய் உபயோகப்படுகின்றது.

ஒ. அளவு.—௨ - முதல், ௪ - அவுன்ஸ் அல்லது, இன்னம் அதிகமாய் கொடுக்கலாம்.

ஸ்திரீகளால் உண்டாகிற ருடு, உழலை, சலதோஷம், சுரம், தாகம், பித்தம், புண், மதுமேகமுந், கற்றுழைசோற்றில் கலந்து உண்ண வண்டுகடியும், தேனில் அரைத்து வெதுப்பி உண்ண வெறியும்போம் என்று தமிழ் நூல்களில் செப்பியிருக்கின்றது.

**NUX VOMICA.** *Strychnos Nux Vomica.* (The Seeds.)

*நக்ஸ் வாமிக. எட்டிக்கொட்டை, காஞ்சிரங்கொட்டை. (வித்து.)*

*குணங்கள்.*—எட்டிக்கொட்டையானது தட்டை உருண்ட பில்லைகளைப்போல், மேடும் பள்ளமாயும், பழுப்பு வன்னமாயும், வாசனையில்லாமலும் மெத்தக் கசப்பாயும் இருக்கும். வித்தில் இருக்கிற இரண்டுவித சத்துகளுக்கு, ஸ்டிரிக்நியா, (Strychnia), புருஸிய (Brucia) என்றுபெயர். இவைகள் மெத்த விஷமிக்கிற பதார்த்தங்கள் ; ஆகையால் வெகு ஜாக்கிருதையாய் இவைகளுடைய அளவை திறுக்கிட்டுக் கொடுக்கவேண்டியது.

*செய்கை. உபயோகம்.*—எட்டிக்கொட்டைக்கு முள்ளந்தண்டுக் கொடியின் நரம்புகளை உஷ்ணிக்கிற குணம் இருக்கின்றது ; அளவுக்கு அதிகப்பட்டால் இசிவுகாணும் ; இதை ஸம்ஸதம்பரோகங்களுக்கு (Paralysis) கொடுத்தால், உணர்ச்சியை மெதுவில் வரும்படிச்செய்து, ஆட்டமில்லாமல் போய் இருக்கிற சதைகளுக்கு வலுவைக் கொடுக்கும். இந்த மருந்தை சாப்பிட்டுக்கொண்டு இருக்கிறபோது, கைகால்களில் இசிவுகண்டால், மருந்து தேகத்தில் அதிகப்பட்டதென்று எண்ணவேண்டியது. திமிர் வியாதிகளுக்கு இதை நோய்கண்ட இடத்தில் உபயோகிக்கலாம். மந்தாக்கினிரோகத்துக்கு பலத்தைக்கொடுக்கும், வீரிய விருத்திக்கும் உபயோகப்படுகின்றது. எட்டிப்பட்டையில் புருஸிய (Brucia) என்கிற சத்துமாத்திரம் இருக்கின்றது ; கொட்டைக்கிருக்கிற குணமே, பட்டைக்கும் இருக்கின்றது. ௨ - முதல், ௩ - கிறேன் இடைக்கு, கொட்டையின் சூரணத்தைக் கொடுத்தால், தேகத்துக்கு வலுவைக்கொடுத்து, தீபனத்தை அதிகப்படுத்தும், மூத்திரத்தை விருத்திசெய்யும் ; எட்டிக்கொட்டைச் சூரணத்தில் ௩௰ - கிறேன் தின்று பிராணன் போனதும் உண்டு. வழக்கப்படுத்தினால், அதிகமாய் சாப்பிட்டு நிர்வகிக்கலாம். ஹ - கிறேன் அளவுக்கு ஆரம்பித்து, படிப்படியாய் அதிகரித்து, ஒரு முழுக்கொட்டைப் பரிமாணத்துக்குச் சாப்பிட்டு, கிரமப்படுத்திக்கொள்ளுகிற சக்தி சிலருக்கு இருக்குதென்று கண்டிருக்கின்றது. இதைச் சாப்பிட்டு உடனே போஜனம்செய்தாலும், அல்லது போஜனம் செய்த உடனே இதைச் சப்பிட்டாலும், கெடுதி செய்யாது ; இதை மறந்தால் ஒருவேளை இசிவுகாணும்.

DOSE. gr. j—iij.

ஒ. அளவு.—எட்டிக்கொட்டைத்தூளை, ௧ - முதல், படிப்படியாய் அதிகரித்து, ௩ - கிறேன் அளவுக்குக் கொடுக்கலாம். இதனால் சதைகள் விருவானாலும் சரி, அல்லது இசிவு கண்டாலும் சரி, உடனே மருந்தை நிறுத்திவிட்டு, வியாதியின் குணத்துக்குத் தக்கபடி, மறுபடியும் கொடுக்கவேண்டியது.

### Extractum Nucis Vomicæ. *Extract of Nux Vomica.*

எக்ஸ்டிராக்ட் ஆவ் நக்ஸ் வாமிக. எட்டிக்கொட்டைச் சத்து.

செய்முறை.—௮ - அவுன்ஸ் எட்டிக்கொட்டையைப் புட்டவித்து, மிருதுவாக்கி, அதை இடிந்து சன்னமில்லைகளாய் அறுத்து உலர்த்திக்கொண்டு, பிறகு ௨-பையின்ட் ரெக்டிபையிட் ஸ்பிரிட் என்கிற சாராயத்தில் ௭ - நாள் ஊறவைத்து, பிழிந்து வடிகட்டிக்கொண்டு, மறுபடியும் திப்பியை, ௧-பையின்ட் ரெக்டிபைட் ஸ்பிரிட் என்கிற சாராயத்தில் போட்டு, ௫ - நாள் ஊறவைத்து, பிறகு பிழிந்து வடிகட்டி, இரண்டையும் ஒன்றுப்ச் சேர்த்து, வாலையில் இட்டு சாராயத்தை இரக்கிக்கொண்டு, அடியில் நிற்பதை பதத்துக்கு வரும்படியாய், சுண்டக் காய்ச்சிக்கொள்ளவேண்டியது.

செய்கை. உபயோகம்.—இந்தச்சத்து மெத்தக் கசப்பாய் இருக்கும். இதை ஒ - கிறேன் முதல், படிப்படியாய், ௫ - கிறேன் இடைக்கு அதிகரித்துக் கொடுக்கலாம்.

### Tincture of Nux Vomica.

டிங்சர் ஆவ் நக்ஸ்வாமிக. எட்டிக்கொட்டை பாவனத்திரவம்.

செய்முறை.—௨-திராம் சுறண்டி எடுத்துக்கொண்டவித்தை, ௮-அவுன்ஸ் ரெக்டிபையிட் ஸ்பிரிட் என்னும் சாராயத்தில்போட்டு, ௭-நாள் ஊறவைத்து, வடிகட்டிக் கொள்ளவேண்டியது. இது அதிக கசப்பாய் இருப்பதால், உள்ளுக்கு மெத்தக்கொடுக்கிறதில்லை. நடுக்கல் முதலிய, நரம்புகளைப்பற்றிக் காணுகிறரோகங்களுக்குக் கொடுக்க, இது மெத்த தகுதியான மருந்து, வாதரோகங்களுக்குப் பூசுத்தைலமாகச் செய்து உபயோகிக்கலாம்.

ஒ. அளவு.—௫ - முதல், ௰ - துளிவரையில் கொடுக்கலாம்.

### Strychnia. *Strychnine.* (A crystalline alkaloid prepared from Nux Vomica.)

ஸ்டிரிக்னைன். எட்டிக்கொட்டை உப்பு.

குணங்கள்.—இந்த உப்பு பழுப்பு வருணமாய் சிறுமணலைப்போல் இருக்கும்; வாசனையில்லை; அதிக கசப்பாய் இருக்கும்; ஜலத்தில் மெத்தக் கரையாது; கரைத்த ஜலம் மெத்தக் கசப்பாய் இருக்கும்; விளாவின ஆல்கோஹல் என்கிற சாராயத்தில் கரையும்.

செய்முறை.—இந்த உப்பு எட்டிக்கொட்டையில் இருந்து எடுக்கப்படும்.

*Brucia.* புருஸிய. இது மருந்துக்குபயோகப்படுத்துகிறதில்லை. எட்டிக்கொட்டை உப்புக்கு இருக்கிற அனேக குணங்கள் இதற்கும் இருக்கின்றன.

செய்கை. உபயோகம்.—எட்டிக்கொட்டைக்கு இருக்கிற குணங்களே, இந்த உப்புக்கும் உண்டு; இதையும் அவ்வித ரோகங்களுக்கு உபயோகிக்கலாம். ப௩-கிறேன் இடையிலிருந்து ஆரம்பித்து படிப்படியாய் அதிகரித்து மருந்தின் குணம் அகப்படுகிறவரையில் கொடுக்கலாம். இதனோடு ரொட்டிச்சத்தையாவது, அல்லது குல்கந்தாவது சேர்த்து மாத்திரைசெய்து கொடுப்பது வழக்கம்; ஆனால் ஏற்றக்குறைச்சல் இல்லாமல் இருக்கும்படி பாகித்துக்கொள்ள மாத்திரைபத்தில்

ஆகாதபடியால், ௧ - கிரேன் உப்பை, ௨ - அவுன்ஸ் ரெக்டிபைட் ஸ்பிரிட் என்னும் சாராயத்தில், ௨ - துளி கந்தகத்திராவகம், அல்லது கறி உப்புத் திராவகம், அல்லது அஸிடிக் ஆஸிட் (Acetic Acid) என்கிற புளிப்போடு கலந்து கரைத்துக்கொண்டால், மெத்தச் சுலபமாய் இருக்கும். இந்த ஜலத்தில், ௰ - துளியில், ௧ - கிரேனில் ௰௨ - பங்கில் ஒருபங்கு இருக்கின்றது. சரீரத்தைப் புண்ணாக்கி மேற்றோலை எடுத்துவிட்டு, இந்த உப்பையாவது, எட்டிக்கொட்டைத்தூளையாவது ரணத்தின்மேல் தெளிக்கலாம். கை கால் சதைகளில் இசிவுகண்டால், மருந்து தேகத்தில் பற்றினதற்குமுதற் குறியாகும்; இது நித்திரையில் காணும். வாயுவால் அசைவு குறைந்த சதைகளே முதல் இழுக்கும்; பசியும் சுமாராய் அதிகப்படும்; அளவுக்கு அதிகப்பட்டால், ரணஜந்நிக்குறிகள் காணும்; தாடை கிட்டிக்கொள்ளும்; இவைகள் விட்டுவிட்டு காணும். முதல் இசிவு எப்போது காணுகின்றதோ, அப்போது மருந்தை நிறுத்திவைக்க வேண்டியது. சிலருக்கு மருந்து தேகத்தில் சேர்ந்திருந்து, ஒரே தடவையாய் குணத்தைக்காட்டும். எப்படி இருந்தபோதிலும், எட்டிக்கொட்டையையாவது, அதின் உப்பையாவது வெகு ஜாக்கிரதையாய் கொடுக்கவேண்டியது. இதற்கு முறிவு தெரியாது. சிலருக்கு அதித் துரையில் தேகத்தில் பற்றிவிடும். ௰௫ - வயதுடைய ஒரு பெண் ௩ - கிரேன் எட்டிக்கொட்டை உப்பை சாப்பிட்டு இறந்துபோனதும் உண்டு.

## **GENTIANA**. *Gentiana Lutea. Gentian.* (The root.)

ஜென்ஷன். (வேர்.)

குணங்கள்.—இந்த வேர், பெரிசும் சிறுசுமான துண்டுகளாய், சிலுத்து முறுக்கிக்கொண்டு, மேலே பழுப்பு நிறமாயும் உள்ளே மஞ்சள் நிறமாயும் இருக்கும்; எளிதில் தூளாகாது; நல்ல வாசனையாயும் தித்திப்பும் கசப்புமாயும் இருக்கும். இதின் சத்து, ஜலத்திலும், சாராயத்திலும், சுலபமாய் இறங்கிவிடும்.

ACTION. Tonic, Stomachic.

செய்கை.—பலகாரி, ஜாடராக்கினி வர்த்தனகாரி.

USE. In dyspepsia, and convalescence.

உபயோகம்.—அக்கினிமந்த ரோகத்துக்கும், நோயுற்றெழுந்தோர்களுக்கும் கொடுக்கலாம். சுரங்களுக்கும், கிருமிகளுக்கும் கணுவாதரோகத்துக்கும் உபயோகப்படுத்துகிறார்கள். இதன் தூளை அழிரணங்கள் மேல் தூவப்படும்:

ஓ. அளவு.—௰ - முதல், ௩௰ - கிரேன் இடைக்குக் கொடுக்கலாம். ஆனால் சூரணமாய் கொடுப்பது அரிது.

## **Infusum Gentianæ Compositum.** *Compound Infusion of Gentian.*

கம்பவுன் இன்பியுஷன் ஆவ் ஜென்ஷன். ஜென்ஷன் கலவை வெந்நீர்க் கஷாயம்.

PREP. (Sliced Gentian, Dried Orange Peel, āā, ʒij., Lemon Peel, ʒiv., Boiling Distilled Water, Oj.) *Dose*, ℥iss.

செய்முறை.—௨ - திராம் ஜென்ஷன், ௨ - திராம் உலர்ந்த ஆரஞ்சிப்பழத் தோல், ௪ - திராம் எலுமிச்சம்பழத்தோல் இவைகளை சிறு துண்டுகளாக்கி, ௧ - பை

பின்ட் கொதிக்கிற ஆவிநீரில்போட்டு, மூடி ஒருமணிநேரம் ஊறவைத்து, வடிகட்டிக்கொள்ளவும். இது சீக்கிரத்தில் கெட்டுப்போகும்; ஆகையால் தேவையான போது வேண்டிய அம்மாத்திரம் செய்துகொள்ளவேண்டியது.

ஓ. அளவு.—௧½ - அவுன்ஸ் கொடுக்கலாம். இந்தக் கஷாயம் பலத்தைக் கொடுக்கும்; நிபன மந்த ரோகங்களுக்குக் கொடுக்கலாம். திராவகங்களும், ஸோடா உப்புகளும் கலந்து கொடுக்க இது மெத்தத் தகுதியானது.

## Mistura Gentianæ Composita. *Compound Gentian Mixture.*

கம்பவுன் ஜென்ஷன் மிக்ஸ்சர்.

Prep. (Compound Infusion of Gentian, f℥xij., Compound Infusion of Senna, f℥vj., Compound Tincture of Cardamoms, f℥ij.) *Dose.* f℥iss.

செய்முறை.—௰௨ - அவுன்ஸ் கம்பவுன் இன்பியுஷன் ஆவ் ஜென்ஷன்; ௬ - அவுன்ஸ் நில ஆவாரை மிஸ்ர வெந்நீர்க் கஷாயம்; ௨ - அவுன்ஸ் ஏலரிசி மிஸ்ரம பாவனத்திரவம். இவைகளை மிஸ்ரமித்துக்கொள்ளவும். இது பலத்தைக் கொடுக்கும்; மலத்தைக் கழிக்கும்.

ஓ. அளவு.—௧½ - அவுன்ஸ் வீதம் தினத்துக்கு, ௨ - ௩ - ஆவர்த்தி கொடுக்கலாம்.

## Tinctura Gentianæ Composita. *Compound Tincture of Gentian.*

கம்பவுன் டிங்சர் ஆவ் ஜென்ஷன். ஜென்ஷன் கலவை

பாவனத்திரவம்.

Prep. (Sliced Gentian, ℥ijss., Dried Orange Peel, ʒx., Bruised Cardamoms, ʒv., Proof Spirit, Oij.) *Dose.* fʒj.—ij.

செய்முறை.—௨½ - அவுன்ஸ் ஜென்ஷன் வேரை, சிறுசாய் துண்டித்து, ௰ - திராம் உலர்ந்த ஆரஞ்சிப்பழத்தோல், ௫ - திராம் இடித்த ஏலரிசி, இவைகளை ௨ - பையின்ட் புருவ் ஸ்பிரிட் என்னும் சாராயத்தில் போட்டு, ௭ - நாள் ஊறவைத்து வடிகட்டிக்கொள்ளவேண்டியது.

ஓ. அளவு.—௧ - முதல் ௨ - திராம் அளவுக்குக் கொடுக்கலாம். பலத்தையும் நிபனத்தையும் தரும். கசப்பு கஷாயங்களோடு சேர்த்துக் கொடுக்கலாம்.

## Extractum Gentianæ. *Extract of Gentian.*

எகிஸ்டிராக்ட் ஆவ் ஜென்ஷன். ஜென்ஷன் சத்து.

செய்முறை.—௫ - பவுன் சிறுசாய் துண்டித்த ஜென்ஷன் வேரை, ௪ - பையின்ட ஜலத்தில் போட்டு, ௰௨ - மணிநேரம் ஊறவைத்து, ஜலத்தை இறுத்து வடிகட்டி, திப்பியில், ௨ - பையின்ட் ஜலத்தைச் சேர்த்து, ௬ - மணி நேரம் ஊறவைத்து, மெதுவாய்ப் பிழிந்து ஜலத்தை வடிகட்டி முடிவில், இரண்டையும் ஒன்றாய்ச் சேர்த்து, பதத்துக்குச் சுண்டக்காய்ச்சிக் கொள்ளவேண்டியது.

ஓ. அளவு.—௫ -முதல், ௨௰ - கிறேன் இடைக்குக் கொடுக்கலாம். காஸ்டிக், அன்னபேதி இவை முதலியவைகளைச் சேர்த்தால் கெட்டுப்போகும்.

**CHIRETTA**. *Ophelia Chiretta.* (Herb and Root.)

சிரட்டா. சிரட்டாகுச்சி. (வேரோடேகூடிய பூண்டு.)

குணங்கள்.—தண்டும் வேருமாய் இருக்கிற இந்தப்பூண்டானது கசக்கும்; இதின் சத்து ஜலத்திலும் சாராயத்திலும் இறங்கும்.

இதைப்போலவே வேறொரு பூண்டு இந்தியாவில் இருக்கின்றது; இங்கிலீஷில் கிரியாட் (Creyat or Justicia Paniculata) என்றும், தமிழில் நிலவேம்பு என்பது.

செய்கை. உபயோகம்.—பலகாரி, ஜாடராக்கினி வர்த்தனகாரி. அக்கினிமந்தரோகத்துக்கும், நோயுற் றெழுந்தோர்களுக்கும் இதைக் கொடுக்கலாம். குளிர்ந்த ஜலத்தில் கஷாயஞ்செய்துகொண்டால், குமட்டல் இராது. இதனோடு கொஞ்சம் ஆரஞ்சிப்பழத்தோலாவது, ஏலரிசியாவது சேர்த்துக்கொள்ளப்படும்.

**Infusum Chirettæ**. *Infusion of Chiretta.*

இன்பியுஷன் ஆவ் சிரட்டா. சிரட்டா வெந்நீர்க்கஷாயம்.

PREP. (Chiretta, ℥iv., Boiling Water, Oj.) *Dose.* f℥iss.—iij.

செய்முறை.—௪ - திராம் சிரட்டாகுச்சியை, ௧ - பையின்ட் கொதிக்கிற ஜலத்தில் போட்டு, ௨ - மணிநேரம் ஊறவைத்து வடிகட்டிக்கொள்ளவேண்டியது.

ஓ. அளவு.—௧௨ - முதல், ௩ - அவுன்ஸ் கொடுத்தால், தீபனம் அதிகப்படும். இதை போஜனம் செய்கிறதற்கு முன் சாப்பிடவேண்டியது.

**Tinctura Chirettæ**. *Tincture of Chiretta.*

டிங்சர் ஆவ் சிரட்டா. சிரட்டா பாவனத்திரவம்.

PREP. (Bruised Chiretta, ℥v., Proof Spirit, Oij.) *Dose.* f℥j.—iij.

செய்முறை.—௫ - அவுன்ஸ் இடித்த சிரட்டா குச்சியை, ௨ - பையின்ட் புரூவ் ஸ்பிரிட் என்கிற சாராயத்தில் போட்டு, ௰௪ - நாள் ஊறவைத்து, வடிகட்டிக்கொள்ளவேண்டியது.

ஓ. அளவு.—௧ - முதல்; ௩ - திராம் கொடுக்கலாம்.

**JALAPA**: *Exogonium Purga.* (Tuber.)

ஜாலப். (கிழங்கு.)

குணங்கள்.—ஜாலப் என்னும் கொடியானது, அமெரிக்காக் கண்டத்தில் மெக்ஸிகோ என்கிற தேசத்தில், ஜலேபா என்கிற பட்டணத்தில் வளர்வதால், இதற்கு ஜாலப் என்று பெயர் பெற்றது. ஜாலப் கிழங்கு, உருண்டையாய் சிறிசும் பெரிசுமாயும், கறுத்த மேல்தோல் சிலுத்துக்கொண்டும், உள்ளேகொஞ்சம் மஞ்சள்சாயலாயும் இருக்கும். இதற்கு குமட்டலையுடைய சுவையும், வெகுட்டலையுடைய வாசனையும் உண்டு. இதில் இருக்கிற சத்துக்கு ஜலபீன் (Jalapine) என்று பெயர் ஆகும்.

ACTION. Cathartic.

செய்கை.—விரேசனகாரி.

USE. In Constipation, Ascites, Vermes, &c.

உபயோகம்.—ஜாலப் என்னும் சூரணத்தைக் கொடுத்தால் நன்றாய்ப்பேதியாகும்; அளவுக்கு அதிகமானால், அதிகபேதியையுண்டாக்கி, வயிற்றைப் புண்ணாக்கி

விடும். ஜாலப் சூரணத்துடன் ரஸபஸ்மம் சேர்த்துக்கொடுத்தால், கிருமிகளைப்போக்கும்; கிராக்ஷ உப்பைச்சேர்த்து நீர்க்கோவைரோகத்துக்குக் கொடுக்கலாம்; இதை இரணத்தின்மேல் போட்டாலும் பேதியாகும். இது வயிற்றுக் கடுப்போடு பேதியை உண்டாக்கி, உஷ்ணம் செய்யும். பெப்பர்மெண்டு, சுக்கு, இவைகள் மேற்படி துர்க்குணங்களை எடுத்துவிடும். மலபந்தம், மகோதரம், கிருமி, இந்தச் சாட்டியங்களுக்குக் கொடுக்கலாம்.

*Contra-indications.* வயிறு புண்ணுயிருக்கிறவர்க்கும், கர்ப்பிணிகளுக்கும், மாதவிடாய் கண்டிருக்கிறவர்க்கும், ஜாலப் பேதிக்குக் கொடுக்கலாகாது.

DOSE. gr. x. to gr. xxx for adults, gr. ij to gr. viij for Children.

ஒ. அளவு.—௰ - முதல், ௩௰ - கிறேன் இடைக்குப் பெரியவர்களுக்கும், ௨ - முதல், ௮ - கிறேன் குழந்தைகளுக்கும் தேன், இஞ்சி சுரஸம், சுக்குக்கஷாயம், துளசிரஸம், பெப்பர்மெண்டுஜலம் இவைகளில் எதையாவது அனுபானமாக்கிக்கொண்டுகொடுக்கலாம்.

### Pulvis Jalapæ Compositus. *Compound Jalap Powder.*

கம்பவுன் ஜாலப் பவுடர். ஜாலப் கலவைச்சூரணம்.

PREP. (Jalap powder, ℥iij., Bitartrate of Potash. ℥vj., Ginger, ʒij.) *Dose.* ℈j.—ʒj.

செய்முறை:—௩ - அவுன்ஸ் ஜாலப் சூரணம், ௬ - அவுன்ஸ் கிராக்ஷ உப்பு ௨ - திராம் சுக்கு; இவைகளை வெவ்வேறாய் மெத்த சன்னத்தூளாக்கிக்கொண்டு, பிறகு மிஸ்ரமித்து அரைத்துக்கொள்ளவேண்டியது.

ஒ. அளவு.—க - ஸ்குருபில் முதல், க - திராம் அளவுக்குக் கொடுக்கலாம்; இது தண்ணீர்தண்ணீராய் பேதியை உண்டாக்கும். மலபந்தக்காரர்களுக்குக் கொடுக்கலாம்.

### Tinctura Jalapæ. *Tincture of Jalap.*

டிங்சர் ஆவ் ஜாலப். ஜாலப் பாவனத்திரவம்.

PREP. (Powdered root of Jalap, ℥v., Proof Spirit Oij.) *Dose.* ʒj.—ij.

செய்முறை.—௫ - அவுன்ஸ் தூள்செய்த ஜாலப் கிழங்கை, ௨ - பையின்ட் புரூவ் ஸ்பிரிட் என்கிற சாராயத்தில் போட்டு, ௭ - நாள் ஊறவைத்து, வடிகட்டிக் கொள்ளவேண்டியது.

ஒ. அளவு.—க - முதல், ௨ - திராம் கொடுக்கலாம்.

### Extractum Jalapæ. *Extract or Resin of Jalap.*

எக்ஸ்டிராக்ட் ஆவ் ஜாலப். ஜாலப் சத்து.

செய்முறை.—௨௦ - பவுன் தூள்செய்த ஜாலப் கிழங்கை, க - காலன் ரெக்டிபைட் ஸ்பிரிட் என்னும் சாராயத்தில் போட்டு, ௪ - நாள் ஊறவைத்து, சாராயத்தை இறுத்துக்கொண்டு, திப்பியை, ௨ - காலன் ஜலத்தில் போட்டு, ௦ - காலனுக்குக் காய்ச்சி, திரவத்தையும் கஷாயத்தையும் வடிகட்டி, கஷாயத்தை சுண்டவைத்து, பாவனத்திரவத்தை புட்டியில் விட்டிறக்கிக் குழம்பாக்கிக்கொண்டு, பிறகு இரண்டையும் ஒன்றாய்ச் சேர்த்து, பதத்துக்குச் சுண்டக் காய்ச்சிக்கொள்ளவேண்டி-

யது. இந்தச் சத்தை மாத்திரைகளுக்கு இளகலாயும், சூரணங்களுக்குக் கட்டியாயும் வைத்துக்கொள்ளவேண்டியது.

ஓ. அளவு.—௫ - முதல், ௨௰ - கிறேன் இடைக்குக் கொடுத்தால் பேதியாகும். இதை வேறுமருந்துகளோடு சேர்த்துக்கொடுப்பது வழக்கம்.

**SCAMMONIUM.** *Convolvulus Scammonia. Scammony.*
(Gummy Resinous Exudation from incisions into the root.)
ஸ்காமொனி. (வேரில் இருந்து வடிகிற பிசினியும், ரேஜனமும் கலந்த ஒருசாதிச் சரக்கு.)

குணங்கள்.—இது பலரூபமான கட்டிகளாய், பச்சையும் கறுப்புக்கலந்த சாயலாய், மேல் தூள்படிந்து இருக்கும்; ஜலத்தில் குழம்பாகும். இதிலிருக்கிற சத்துக்கு, ஸ்காமொனின் (Scammonin) என்று பெயர். கொஞ்சம் கெட்டவாசனையுள்ளதாயும், கசப்பாயும், காரமாயும் இருக்கும்.

ACTION. A Drastic Cathartic. Hydragogue.

செய்கை.—வயிறு கடுத்துத் தண்ணீர் தண்ணீராய் பேதியாகும்.

USE. In obstinate costiveness, worms, dropsy.

உபயோகம்.—மலபந்தம், கிருமி, நீர்க்கோவை இவைகளுக்குக் கொடுக்கலாம். ஜாலப்புக்கு இருக்கிற குணங்களே இதற்கும் உண்டு; ஆனால் கொஞ்சம் வேகமுள்ளது. இது வயிற்றை மெத்தக் கடுக்கும்; ஆதலால் தனியாய்க் கொடுக்கலாகாது. ரேவல்சின்னி, பரிமளவர்க்கங்கள் இவைகளைச் சேர்த்துக் கொடுக்கலாம். ரஸபஸ்மம் சேர்த்துக் குழந்தைகளுக்குக் கொடுக்கப்படும்.

**Pulvis Scammonii Compositus.** *Compound Scammony Powder.*
கம்பவுன் ஸ்காமொனி பவுடர். ஸ்காமொனி கலவைச் சூரணம்.

செய்முறை.—ஸ்காமொனி, ஜாலப் கெட்டிச்சத்து இவைகள் வகைக்கு ௪ - ஐ, ௨ - அவுன்ஸ், ௫ - அவுன்ஸ் சுக்கு. இவைகளை வெவ்வேறாய் சன்னது தூள் செய்து கொண்டு, மிஸ்ரமித்துக்கொள்ளவேண்டியது.

ஓ. அளவு.—௰ - முதல், ௩௰ - கிறேன் இடைக்குக் கொடுத்தால், பேதியாகும்.

**Confectio Scammonii.** *Scammony Confection.*
ஸ்காமொனி கன்பெக்ஷன். ஸ்காமொனி லேகியம்.

செய்முறை.—௪௫ - அவுன்ஸ் ஸ்காமொனி சூரணம், ௬ - கிராம், இடித்த லவங்கம், ௬ - கிராம், இடித்தசுக்கு, இவைகளைச் சேர்த்துச் சன்னப் பொடியாய் அரைத்துக்கொள்ளவேண்டியது. இதை உபயோகப்படுத்துகிறபோது, அதற்குத் தகுந்த ரோஜாபூ பாணிதமும், ௫ - கிராம், கேக்விதை தைலமும் (Oil of Caraway), விட்டுக் கலந்துகொள்ளவேண்டியது.

ஓ. அளவு.—௨௰ - முதல், ௬௰ - கிறேன் கொடுத்தால் பேதியாகும்.

**Mistura Scammonii.** *Scammony Emulsion.*
ஸ்காமொனி இமல்ஷன். ஸ்காமொனி கலந்தபால்.

செய்முறை.—எ - கிறேன் ஸ்காமொனியை, ௩ - அவுன்ஸ் கடையாத பாலைச்

கொஞ்சம் கொஞ்சமாய் விட்டு அரைத்துப் பாகுபோல் செய்துகொள்ளவேண்டியது. இது இனிப்பாய் இருக்கும்.

## LAVANDULA. *Lavandula Vera. Common Lavender.*

(Flowering Heads.)

லவன்டர். (புஷ்பம்.)

குணங்கள்.—இது சின்னப்பூண்டு, ௨ - ௪ - அடி உயரமுள்ளது. புஷ்பம் கதிர்போல் இருக்கும்: புஷ்பத்தில் தைலம் இருக்கின்றது ; வாசனையாய் இருக்கும்.

Action. Stimulant, Carminative.

செய்கை.—உஷ்ணகாரி, கர்ப்பவாதஹரகாரி.

உபயோகம்.—துர்ப்பலம், மருந்துகளுடைய துர்க்குணம் இவைகளை நீக்க, இது உபயோகப்படுத்தப்படும்.

### Oleum Lavandulæ. *Oil of Lavender.*

ஆயல் ஆவ் லவன்டர். லவன்டர் தைலம்.

செய்முறை.—மற்றத் தைலங்களை வாலையிலிட்டு இறக்குவதுபோல, இதுவும் இறக்கப்படும். இது இளமஞ்சள் நிறமாயும், நல்ல வாசனையாயும், காரமாயும் இருக்கும்.

ஔ. அளவு.—௫ - முதல், ௰ - துளி கொடுக்கலாம்.

### Spiritus Lavandulæ. *Spirit of Lavender.*

ஸ்பிரிட்ஸ் ஆவ் லவன்டர்.

செய்முறை.—௨½ - பவுன் உலராத லவண்டர் புஷ்பங்களை, ௧ - காலன் ரெக்டிபைட் ஸ்பிரிட் என்னும் சாராயத்தில் போட்டு, ஜலயந்திரத்தில் வைத்து, ஜலத்தில் சுடுகைப்படும்படியாகவே, ௭ - பையின்டுக்கு வடித்துக்கொள்ளவேண்டியது. தைலத்தோடு, சாராயத்தைச் சேர்த்துச் செய்துகொள்ளலாம். கடைகளில் விற்கிற லவண்டர் வாடர் (Lavender Water) என்னும் திரவத்தைப்போல் இருக்கும் ; ஆனால் அதில் இன்னம் வேறு தைலங்கள் சேர்க்கப்படுகின்றன.

### Tinctura Lavandulæ Composita. *Compound Tincture or Spirit of Lavender. Lavender Drops.*

கம்பவுன் டிங்சர் ஆவ் லவண்டர். ஸ்பிரிட் ஆவ் லவண்டர்.

லவண்டர் கலவை பாவனத்திரவம். லவண்டர் மது.

Prep. (Cinnamon, Nutmeg, ā ā ʒijss., Red Sandal Wood Shavings ʒv., Rectified Spirit, Oij., Oil of Lavender, fʒiss., Oil of Resemary, ♏x.) *Dose.* xv.—fʒij.

செய்முறை.—௨½ - திராம் - நொறுக்கிய லவங்கப்பட்டை ; ௨½ - திராம் நொறுக்கிய ஜாதிக்காய் ; ௫ - திராம் இழைத்த வர்த்தங்கிச் சக்கை ; இவைகளை, ௨ - பையின்ட் ரெக்டிபைட் ஸ்பிரிட் என்னும் சாராயத்தில் போட்டு, ௭ - நாள் ஊற வைத்து, பிழிந்து வடிகட்டி, இந்தத் திரவத்தில் ௧½ - திராம் லவன்டர் தைலமும், ௰ - துளி ரோஸ்மெரி தைலமும் விட்டுக் கரைத்துக்கொள்ளவேண்டியது. இது உ

ஷ்ணத்தைத் தரும்; வாயுவைக் கண்டிக்கும். குதக ஜந்தி, வயிற்றுவலி இவைக ளுக்கு, ௰௫ - துளி முதல், ௨ - கிராம் அளவுக்குக் கொடுக்கலாம்.

**MENTHA VIRIDIS.** *Spearmint. The whole Herb.*

மெந்தா விரிடிஸ். ஸ்பர்மின்ட். சமூலம்.

இந்தப் பூண்டு நல்ல வாசனையாயும், இனிப்பாயும், சிறுகசப்பாயும் இருக்கும் பூக்கிற பூண்டை ஜலத்தில் போட்டு வாலையிலிட்டு தைலம் இறக்கிக்கொள்ளப்படும். (Oleum Menthæ Viridis. Oil of Spearmint.) இது வெந்நீர்க்கஷாயம், நீர், சாராயம், இவைகளாலேசெய்து உபயோகப்படுகின்றது. இந்த மருந்து வயிற்று வாயுவைக் கண்டிக்கும்.

**MENTHA PIPERITA.** *Peppermint.* (The whole Herb.)

பெப்பர்மின்ட். (சமூலம்.)

குணங்கள்.—இந்தப் பூண்டு, பரிமளவாசனையாயும், காரமாயும் இனிப்புள்ள ருசியாயும் இருக்கும்; இதன்காரம், முதல் உறைப்புக்கண்டு பிறகு சில்லிட்டுவிடும். இதில் தைலமிருக்கின்றது.

ACTION. Stimulant, Carminative.

செய்கை.—உஷ்ணகாரி. கர்ப்பவாதஹரகாரி.

USE. In Flatulent Colic, &c.

உபயோகம்.—இதை வாத சூலைக்குக் கொடுக்கலாம். மருந்துகளுக்கிருக்கிற குமட்டலையும், வயிறு கடுக்கிற குணத்தையும், மருந்துகளுடைய ருசியையும் மறைத்துவிடும். வாய்க்குமட்டல், சூலை எரிவு இவைகளுக்கு, கொடுக்கக் குணமாகும்.

**Oleum Menthæ Piperitæ.** *Oil of Peppermint.*

ஆயல் ஆவ் பெப்பர்மின்ட். பெப்பர்மின்டு தைலம்.

செய்முறை.—பச்சைப் பூண்டையாவது, உலர்ந்த பூண்டையாவது ஜலத்தில் போட்டு வாலையிலிட்டு தைலம் இறக்கிக்கொள்ளப்படும். இது செய்த புதிதில், துலாம்பரமாய் இருக்கும்; வெகு சீக்கிரத்தில் பச்சையும் மஞ்சளும் கலந்த சாயலாகிவிடும்; மெத்த நாள்பட்டால், அதிக மஞ்சள்நிறமாகிவிடும்; வாசனை இன்பமாய் மண்டைக்கேறும்; விருவிருப்பும் குளிர்ச்சியான சுவையும் உண்டு. இதை வயிற்றுச் சூலைகளுக்குக் கொடுக்கலாம்.

ஔ. அளவு.—௨ - முதல், ௫ - துளி சருக்கரைக்கட்டியில் விட்டுக் கொடுக்கலாம்.

**Essentia Menthæ Piperitæ.** *Essence of Peppermint.*

எஸ்ஸென்ஸ் ஆவ் பெப்பர்மின்ட்.

PREP. (Oil of Peppermint, f℥j. Stronger Spirit, f℥ix.) *Dose.* ♏xx. to fʒj.

செய்முறை.—௧ - அவுன்ஸ் பெப்பர்மின்ட் தைலத்தை, ௯ - அவுன்ஸ் காரமான சாராயத்தில் விட்டு, குலுக்கி மிஸ்ரமித்துக்கொள்ளவேண்டியது. இது உஷ்ணம் செய்யும், வாயுவை ஹரிக்கும்,

ஔ. அளவு.—௨௰ - துளி முதல், ௧ - கிராம் அளவுக்குக் கொடுக்கலாம்.

**Aqua Menthæ Piperitæ.** *Peppermint Water.*
பெப்பர்மின்ட் வாட்டர். பெப்பர்மின்ட் நீர்.

செய்முறை.—௨ - பவுன் உலர்ந்த பெப்பர்மின்டையாவது, அல்லது, ௪ - பவுன், பச்சைப் பூண்டையாவது, ௨ - காலன் ஜலம் விட்டு, வாலையில் இட்டு எரித்து, ௧ - காலனுக்கு இறக்கிக்கொள்ளவேண்டியது.—௧ - அவுன்ஸ் எஸ்ஸென்ஸ் ஆவ் பெப்பர்மின்ட்டை, ௯ - காலன் ஆவிநீரில் சேர்த்து குலுக்கி மிஸ்ரமித்துக்கொண்டு, கடுதாசியில் வடிகட்டிக்கொள்ளவேண்டியது.

ஓ. அளவு.—௧ - ௨ - அவுன்ஸ் அளவுக்குக் கொடுக்கலாம்.

**Spiritus Menthæ Piperitæ.** *Spirit of Peppermint.*
ஸபிரிட் ஆவ் பெப்பர்மின்ட். பெப்பர்மின்ட் மது.

செய்முறை.—௩ - திராம், பெப்பர்மின்ட் தைலத்தை, ௧ - காலன் புரூவ் ஸ்பிரிட் என்னும் சாராயத்தில் விட்டுக் கரைத்துக்கொள்ளவேண்டும்.

ஓ. அளவு.—௯ - முதல், ௨ - திராம் கொடுக்கலாம்.

**MENTHA PULEGIUM.** *Pennyroyal.* (The Herb.)
பென்னிருயல். (சமூலம்.)

இந்தப் பூண்டு மெத்த வாசனையாய், காரமாய், மணமாய், கசந்துகொண்டு இருக்கும். இதில் தைலம் இருக்கின்றது. மேற்சொன்ன பூண்டுகளுக்குடைய குணங்களே இதற்கும் உண்டு. பெப்பர்மின்டைப்போல் இதையும் உபயோகப்படுத்தலாம்.

**ROSEMARY.** *Rosmarinus Officinalis.* (The Tops.)
ரோஸ்மெரி. (நுனிகள்.)

குணங்கள்.—இந்தச்செடி, ௬ - அடி உயரம் உள்ளது; புஷ்பம் வெள்ளை, நுனிகளில் தைலமிருக்கின்றது. இது மெத்த வாசனையாய், காரமாய், கசப்பாய், சிறுதுவர்ப்பாய் இருக்கும்.

ACTION. Stimulant, Carminative.

செய்கை.—உஷ்ணகாரி, கர்ப்பவாதஹரகாரி.

உபயோகம்.—இந்தச்சாதியைச் சேர்ந்த பூண்டுகளுக்குள் இது மெத்த உஷ்ணமானது. குதகஜந்நி, தலைவலி முதலியவைகளுக்கு உபயோகப்படுகின்றது; மேலே தேய்த்தால், சருமம் சிவப்பாகும்; மயிரை வளரச்செய்கிற குணமும், உதிர்ந்துபோக ஒட்டாதகுணமும் செய்யும். லவன்டர் கலவை பாவனத்திரவத்திலும், சவுக்காரத் தைலத்திலும் சேருகின்றது.

**Oleum Rosmarini.** *Oil of Rosemary.*
ஆயல் ஆவ் ரோஸ்மெரி. ரோஸ்மெரி தைலம்.

செடியின் நுனிகளை ஜலத்தில் போட்டு வாலையில் இட்டு இறக்கத்தக்கதும். நவ ளமாய் இருக்கும். இது முக்கியமாய் மேலுக்கு உபயோகிக்கப்படுகின்றது, வாசனைகளோடு கூட்டப்படுகின்றது.

**Spiritus Rosmarini.** *Spirit of Rosemary.*

ஸ்பிரிட் ஆவ் ரோஸ்மெரி. ரோஸ்மெரி மது.

*செய்முறை.*—௨ - திராம் ரோஸ்மெரி தைலத்தை, ௧ - காலன் ரெக்டிபைட் ஸ்பிரிட் என்னும் சாராயத்தில் விட்டுக் கரைத்துக்கொள்ளவேண்டும்.

**DIGITALIS.** *Digitalis Purpuria. Foxglove.* (The Leaves.)

டிஜிடேலிஸ். பாக்ஸ்குளோவ். (இலை.)

*குணங்கள்.*—இந்தச்செடி, ௩ - ௪ - அடி உயரமிருக்கும், இலைக்கு வாசனை இல்லை, கசக்கும், குமட்டும், வெளிச்சம்பட்டால் நிறமும் குணமும் கெடும். இலைகளை வெயில்படாமல் உலர்த்திக்கொள்ளவேண்டியது.

ACTION. Indirectly Sedative, Diuretic.

*செய்கை.*—முதல் உஷ்ணம் செய்து, பிறகு ஸமனகாரியாகும்; மூத்திரவர்த்தனகாரி.

USE. In inflammatory diseases, phthisis, active hæmorrhages, dropsy, &c.

*உபயோகம்.*—இந்த மருந்து தாபனரோகங்கள், க்ஷயம், ரத்தப்பெருக்கு, இருதயரோகங்கள், சுரம் நீர்க்கோர்வை, இருமல் இவை முதலிய ரோகங்களுக்கு ரத்தவோட்டத்தைக் குறைக்கிற நிமித்தம் உபயோகப்படுத்தப்படுகின்றது. இது முதல் உற்சாகப்படுத்தி, பிறகு இருதய நடையின் பலத்தையும், துடிப்பையும் மெத்தக் குறைத்துவிடும். மூத்திர குண்டிக்காயின் செய்கையை அதிகப்படுத்துவதால், மூத்திரம் அதிகமாய் இறங்கும். இதற்கு தேகத்தில் தங்கி, பிறகு ஒரோதரமாய் குணத்தைக் காட்டுகிற தன்மை இருக்கிறபடியால், குமட்டலாவது, நாடி விட்டுவிட்டு அடித்துக்கொள்ளுதலாவது கண்டால், மருந்தைச் சிலநாள் விட்டுவைத்து, மருந்தினுடைய ஸேஷ்டை தேகத்தில் இருக்குமளவும், நோயாளி எழுந்திராமல் படுத்துக்கொண்டே இருக்கவேண்டியது: இதை, நீர்க்கோர்வையில், நீரை மூத்திரவழியாய் அதிகப்படுத்தக் கொடுக்கிறபோது, அதிகமாய் ஜலம் சாப்பிடவேண்டியது.

ஔ. அளவு.—௧ - ௧௨ - கிறேன் அளவுக்கு, சூரணத்தைக் கொடுத்தால், சமனகாரியாகும். ஒருதினத்துக்கு ௩ - ௪ - தடவை அதினுடைய செய்கையை நிதானித்துக்கொண்டே கொடுக்கவேண்டியது. மூத்திரம் அதிகமாக, ௧ - ௩ - கிறேன்இடைக்கு தினத்துக்கு ௩ - தடவை கொடுக்கவேண்டியது. டானிக் ஆஸிட் என்கிற துவர்ப்புக் குணமுடைய பதார்த்தங்களைச் சேர்த்தால், இதிலிருக்கிறசத்து அடியில் படிந்துவிடும்.

*Antidotes.*—இதைச் சாப்பிட்டு விஷமித்தாலாவது, அதிகமாய் சாப்பிட்டுவிட்டாலாவது, வயிற்றிலிருப்பதை வெளிப்படுத்த வாந்திக்குக் கொடுத்து, வாந்தி தாராளமாக ஜலம் சாப்பிடவேண்டியது. மாசக்காய் கஷாயமாவது, பச்சைத்தேயிலைத் தண்ணீராவது கொடுத்து, படுக்கவைக்கவேண்டும்; அம்மோனிய, ஒயின், பிராந்தி முதலிய உஷ்ணகாரிகளை கொடுக்கவேண்டியது.

**Infusum Digitalis.** *Infusion of Foxglove.*
இன்பியுஷன் ஆவ் பாக்ஸ் குளோவ். பாக்ஸ் குளோவ்
வெந்நீர்க் கஷாயம்.

PREP. (Dried leaves of Digitalis, ℨj., Boiling Distilled Water, Oj. Spirit of Cinnamon, f℥i.) *Dose.* fℨiv. to f℥j.

செய்முறை.—௧ - திராம், உலர்ந்த டிஜிடெலிஸ் என்னும் இலைகளை, ௧ - பையின்ட் கொதிக்கிற ஆவிநீரில் போட்டு, மூடி, ௪ - மணிநேரம் ஊறவைத்து, வடிகட்டி, பிறகு, ௧-அவுன்ஸ் லவங்கப்பட்டை மதுவை விட்டுக் கலந்துகொள்ளவேண்டியது.

ஒ. அளவு.—௪ - திராம் முதல், ௧ - அவுன்ஸ் அளவுக்கு, ௩ - அல்லது ௪ - மணிக்கொருதரம் கொடுக்கலாம்.

**Tinctura Digitalis.** *Tincture of Foxglove.*

PREP. (Dried leaves of Digitalis, ℥iv., Proof Spirit. Oij.)

செய்முறை.—௪ - அவுன்ஸ் உலர்ந்த பாக்ஸ்குளோவ் என்கிற இலையை, ௨ - பையின்ட் புருவ் ஸ்பிரிட் என்கிற சாராயத்தில் போட்டு, ௭ - நாள் ஊறவைத்து, வடிகட்டிக்கொள்ளவேண்டியது.

ஒ. அளவு.—௰ - முதல், ௪௰ - துளி படிப்படியாய் அதிகப்படுத்திக் கொடுக்கலாம்.

**BELLADONNA.** *Atropa Belladonna. Deadly Nightshade.*
(The recent & dried leaf of.)
பெல்லடொனு. (பச்சையிலை. உலர்ந்த இலை.)

குணங்கள்.—இந்தச்செடி, ௩ - ௪ - அடி உயரமுள்ளது. காய்கறுத்து இலை பச்சைநிறமாயும் அழகாயும், புஷ்பம் துளையாயும் இருக்கும், கொஞ்சம் கசப்பு வாசனைவீசும், கசக்கும், குமட்டலுண்டாக்கும், உலர்ந்துபோனாலும் அதின் குணம் குறையாது. இதின் சத்துக்கு, அட்ரொபின் (Atropine) என்று பெயர். ஆம் இது கொடியவிஷமுள்ள ஓர்விதஉப்பு. இது இலையில் இருந்து சேகரிக்கப்படுகின்றது.

ACTION. Anodyne. Antispasmodic.

செய்கை.—வேதனைசாந்திகாரி, அங்காகர்ஷண நாஸகாரி.

USE. In neuralgia, convulsive affections, as chorea, epilepsy, and hooping-cough, tic douloureux, rheumatism, dysmenorrhœa, &c. Locally, it is used to relieve pain, & to dilate the pupil. The vapour of its decoction is inhaled to relieve asthma.

உபயோகம்.—குடைச்சல், கோரியா, காக்கைவலி, கக்கிருமல், முகஜந்நி, சந்திகசிலேஷ்மம், சூதகசூலை, இவைகளுக்குக் கொடுக்கப்படுகின்றது. நோயுள்ள இடத்தில் போடலாம்; கண்ணில் போட்டால் கண்தாரை விரியும். கஷாயத்தினுடைய ஆவியை, சுவாசகாசம் தணிய உள்ளுக்குக் கொடுக்கப்படும். இலைக்கு இருக்கிற குணமே வேருக்கும் உண்டு; இந்த கெட்ட மருந்தை வெகு ஜாக்கிரதையாய் உபயோகிக்கவேண்டியது. தொண்டை யுலர்ந்து குழகிப்போகுதல், மய

க்கம், மந்தப்பார்வை, குமட்டல், கண்தாரை விரிவு, இவைகள் கண்டால், மருந்தை நிறுத்திவிடவேண்டியது.

DOSE. Of the powder gr. j., gradually increased to gr. v.

ஒ. அளவு.—தூளை, ௧ - கிறேன் இடையிலிருந்து படிப்படியாய் உயர்த்தி ௫ - கிறேன்வரையில் கொடுக்கலாம்.

**Extractum Belladonnæ.** *Extract of Belladonna.*

எக்ஸ்டிராக்ட் ஆவ் பெல்லடோனா. பெல்லடோனா சத்து.

செய்முறை.—எக்ஸ்டிராக்ட் ஆவ் அகொனைட் (Extract. Aconiti) என்கிற சத்து செய்கிறமுறையாய் இதையும் செய்துகொள்ளவேண்டியது.

DOSE. gr. ss. or gr. j.—gr. v.

ஒ. அளவு.—உ - அல்லது, ௧ - கிறேன், அளவில் இருந்து படிப்படியாய் அதிகரித்து, ௫ - கிறேன், அளவுக்கு பெல்லடோனாவுக்கு உடைய குணங்கள் காணப்படுகிறவரையில் கொடுக்கலாம். இதை ஜலம்விட்டுக் குழப்பி கண் இமை மேல் போட, கண்தாரை விரியும்; கண்ணில் ஒருதுளிவிட்டாலும் இந்தக் குணத்தை க்காட்டும். பலத்த நோய்களுக்கு இதை பூசுத்தைலமாகச்செய்து மேலே தேய்க்கலாம். பிரசவவேதனையிலிருக்கிறபோது கருப்பைவாய்க்குத் தடவினால், அது விரியும். மூத்திரதாரை அடைப்பு, ஆஸனவலி இவைகளுக்கும் தடவினால் நன்மை செய்யும்.

**Emplastrum Belladonnæ.** *Belladonna Plaster.*

பெல்லடோனா பிளாஸ்டர். பெல்லடோனா பிளாஸ்திரி.

PREP. (Soap Plaster, ℥iij., Extract of Belladonna, ℥iij.)

செய்முறை.—௩ - அவுன்ஸ் சவுக்கார பிளாஸ்திரியை ஜலயந்திரத்தில் வைத்து உருக்கி, இத்துடன் ௩ - அவுன்ஸ் பெல்லடோனா சத்தைச் சேர்த்து, இடைவிடாமல் துழவி மிஸ்ரமித்துக்கொள்ளவேண்டியது. இதை வாதநோய்களுக்கும், குடைச்சல்களுக்கும் தோலில் தடவிப்போட்டால், சவுக்கியத்தைத் தரும்.

**Unguentum Belladonnæ.** *Belladonna Ointment.*

பெல்லடோனா ஆயின்ட்மென்ட். பெல்லடோனா இளகிய களிம்பு.

PREP. (Ext. Belladon. gr. 80, Lard, ℥j.)

செய்முறை.—அ0 - கிறேன் பெல்லடோனா சத்தை, ௧ - அவுன்ஸ் பன்றிநெய்யுடன் சேர்த்து, அரைத்துக்கொள்ளவேண்டியது. இதை வாதநோய்களுக்குப் போடலாம்.

*Antidotes.* பெல்லடோனாவை விஷமிக்கும்படித் தின்றவர்களுக்கு, வாந்திக்கும், பேதிக்கும் கொடுக்கவேண்டியது; துவர்ப்புக் கஷாயங்கள், தலைக்கு குளிர்ந்த ஜலம், குடிபிறக்க மேலுக்குத் தேய்ப்பு, இவைகள் செய்து, மயக்கம் கண்டிருந்தால், அம்மோனியாவைக் கொடுக்கவேண்டியது.

**Atropia.** *Atropine.* (A crystalline alkaloid prepared from the root of Atropa Belladonna.)

அட்ரொபிய. அட்ரொபீன். பெல்லடொனு சத்து.

இந்தப் பதார்த்தம், பெல்லடொனு என்னும் செடியின் வேரில் இருந்து எடுக்கிற ஓர்வித உப்பு; இதைச்செய்கிற முறை பலவிதம். பெல்லடொனுவுக்கு இருக்கிற குணங்களே இதற்கும் இருக்கின்றன; ஆனால் விசேஷித்து இருக்கும். இது கொடிய நஞ்சு. இதை உள்ளுக்குக் கொடுத்தால் அபாயம் நேரிடும். நணவைத்தியர்களுக்கு மெத்த உபயோகம். இதில் க - உ - கிறேன் இடைக்கு, க - அவுன்ஸ் ஜலத்தில் கரைத்துக்கொண்டு, இந்த ஜலத்தில், உ - ௩ - துளி கண்ணில் விட்டால், கண்தாரை விரியும். நேத்திரப்படல ரோகத்துக்கு, (Cataract) இது முக்கியமாய் உபயோகப்படுத்தவேண்டியதாய் இருக்கின்றது.

**Atropiæ Sulphas.** *Sulphate of Atropia.*

ஸல்பேட் ஆவ் அட்ரொபிய என்னும் பெல்லடொனு சத்து.

Prep. (Distilled Water, ℥ss., Diluted Sulphuric Acid, f℥ij., Atropine, ℈viiss, or q. s.)

செய்முறை.—ウ - அவுன்ஸ் ஆவிநீரில், உ - திராம் விளாவின கந்தகத்திராவகம் சேர்த்து, எ௫ - ஸ்குருபில் அல்லது தேவையான அட்ரொபீன் என்னும் சரக்கை ஸாடுயுரேஷன் ஆகும்படிச் சேர்த்து, கொஞ்சங்கொஞ்சமாய் ஜலத்தை வடிகட்டி உப்பு கட்டும்படியாய், சிறுதீயிட்டு, சுண்டக் காய்ச்சிக்கொள்ளவேண்டியது.

இந்த உப்பு ஜலத்தில் கரைந்துவிடும் கெட்டுப்போகாது, ஆகையால், இதையே மெத்தக் கையாடுகிறார்கள். க - கிறேன் ஸல்பேட் ஆவ் அடரொபீன் என்கிற உப்பை, க - திராம் ஆவிநீரில்போட்டுக் கரைத்துக்கொள்ளவேண்டியது. இதைக் கண்ணில் விட்டால்; கண்தாரை விரியும்.

**CAPSICUM.** *Capsicum annuum. Chillies.* (Fruit.)

சில்லீஸ் ; முளகாய். (உலர்ந்த பழம்.)

குணங்கள்.—எல்லாருக்கும் பிரசித்தமாய்த் தெரிந்த இந்தப் பதார்த்தத்தில், அநேக ஜாதிகளுண்டு. இதிலிருக்கிற சத்துக்கு காப்ஸிஸின் (Capsicin) என்றுபேர்.

Action. A powerful Stimulant, Rubefacient.

செய்கை.—அதிக உஷ்ணம் செய்யும் ; சருமத்தை சிவப்பிக்கும்.

உபயோகம்.—இதை மசாலையோடு இவ்விடத்தில் சேர்க்கிறதுபோல், அவர்கள் சீமையில் மெத்தச் சேர்க்கிறதில்லை: அக்கினிமந்தரோகத்தில் இது தீபனத்தை அதிகப்படுத்தும். பேதிமாத்திரைகளோடு சேர்க்கப்படும். வாய் ரணத்துக்கு, க - திராம் முளகாய்த்தூள், க - ஸ்குருபில் உப்பு, ௬ - திராம் காடி ௬ - அவுன்ஸ் வெந்நீர். இவைகளைச் சேர்த்து கஷாயமாக்கி வாய்க்கொப்புளிக்கச் செ

ப்பலாம். ௬-கிறேன், முளகாய்த்தூளை, ௩-அ-அவுன்ஸ் ரோஜாபூ வெந்நீர்க்கஷாயத்தில் சேர்த்து, கலக்கி வாய்க்கொப்புளித்தால், தொண்டநோய் குணமாகும். இதை அரைத்துத் துணியில் தடவி, ஜந்நிரோகங்களுக்குப் போடலாம். களிம்பாகச் செய்துபோட்டால், சருமத்தைச் சிவப்பிக்கும்.

ஒ. அளவு.—உ - ம - கிறேன் இடைக்குக் கொடுக்கலாம்.

**Tinctura Capsici.** *Tincture of Capsicum.*

டிங்சர் ஆவ் காப்ஸிகம். முளகாய்ப் பாவனத்திரவம்.

செய்முறை.—ம - திராம் முளகாய்ப் பொடியை, உ - பையின்ட் புரூவ்ஸ்பிரிட் என்னும் சாராயத்தில் போட்டு, எ - நாள் ஊறவைத்து வடிகட்டிக்கொள்ளவேண்டியது.

ஒ. அளவு.—ரு - முதல் ௩௰ - மினம்வரையில் கொடுக்கலாம். சிறுகுழந்தைகளுக்குக் கொடுக்கலாகாது.

**STRAMONIUM.** *Datura Stramonium.* *Thornapple.*

(The leaves and Seeds.)

ஸ்டரமொனியம். ஊமத்தை. (இலை. விதைகள்.)

குணங்கள்.—காய் உருண்டு, பச்சையும் சாம்பலும் கலந்த நிறமாய், ஒருமாதிரியான வாசனையாய், கசப்பாய் மேலே முள்ளுகள் இருக்கும்; உள்ளே நான்கு வரிசையாய் விதைகள் அடங்கியிருக்கும்; விதை சிறுத்து மாங்கொட்டை வடிவாய் சொறசொறவென்று இருக்கும்; இலைக்கிருக்கிற வாசனையே இடித்த விதைக்கும் உண்டு. விதைகளும் கசக்கும். விதையிலிருந்து எடுக்கிற உப்புக்கு டடூரியா (Daturia) என்று பெயர்.

Action. Narcotic, Anodyne, Antispasmodic.

செய்கை.—நித்திராகாரி, வேதனுசாந்திகாரி, அங்காகர்ஷணநாஸகாரி.

உபயோகம்.—இது வேதனையை அடக்கி நித்திரையைப் பிறப்பிக்கின்றது. பெல்லடோனா என்னும் பதார்த்தத்துக்குள்ள குணங்களே, இதற்குமுண்டு. குடைச்சல், கீல்வாதம், இவைகளுக்கு உள்ளுக்குக் கொடுத்து வெளியில் போடலாம். சுவாஸகாசரோகத்துக்கு ஊமத்தை இலையோடு புகையிலையைச் சேர்த்து சுருட்டுப்பிடித்தால், நோய் உடனே தணியும். ஒருவேளைக்கு ம - ௩ம - கிறேன் இடைக்கு சுருட்டுக்குபயோகிக்கலாம். இலையை வெந்நீரில் போட்டு நீர் ஆவியை உட்கொண்டாலும் இளைப்பு அடங்கும். ஊமத்தை கொடிய நஞ்சு. நேத்திர தாரையைப் பெரிதாக்கும். ஒவ்வொருவேளைக்கு, மெத்தக் கொஞ்சமாய் உபயோகிக்கவேண்டியது; இல்லாவிட்டால் துர்க்குணம்செய்யும். வயது தளர்ந்தவர்களுக்கு இதைக்கொடுக்கலாகாது. இலையை வதக்கிக் கட்டிகளுக்குப்போடுவது வீட்டுவழக்கம்.

ஒ. அளவு.—இலைத்தூளில், க - முதல், ௩-கிறேன் இடைக்கும்—விதையில், ௨ - முதல் க - கிறேன் இடைக்கும், இதின் குணம் சகிக்கிறவரையில் படிப்படியாய் அ

திப்படுத்தி கொடுக்கவேண்டியது. இதைச் சுருட்டு பிடிக்கிறபோது, ௫ - ௪ - நிமிஷம், பொறுந்து பொறுந்து, ஒவ்வொரு இழுப்பு இழுக்கும்படிச்செய்து, அதின்பேரில் உண்டாகிற குணத்தை வெகு ஜாக்கிறதையாய்க் கண்டறியவேண்டியது.

**HYOSCYAMUS.** *Hyoscyamus niger. Henbane.* (The leaves.)

*ஐயாஸியாமஸ். ஹென்பேன். குரோசாணி ஓமம். (இலை.)*

*குணங்கள்.*—இந்த இலை பச்சையும் மஞ்சளுங்கலந்த வர்ணமாயிருக்கும்; கசக்கும்; ஒருவிதமான வாசனைவீசும்; இதின் சத்துக்கு ஐயாஸியாமியா (Hyoscyamia) என்று பெயர்.

Action. Narcotic, Anodyne, Antispasmodic, Slightly Stimulant.

*செய்கை.*—நித்திராகாரி, வேதனைசாந்திகாரி, அங்காகர்ஷணநாஸகாரி, அல்ப உஷ்ணகாரி.

Use. In spasmodic coughs or dyspnœa neuralgia, &c.

*உபயோகம்.*—ரோகச்சிகிச்சையில், நோயைத்தணித்து, எரிச்சலை அடக்கி, நித்திரையை உண்டாக்கவேண்டியபோதெல்லாம் இதை உபயோகிக்கலாம். அபினியைப்போல் இதற்கு மலத்தைக்கட்டுகிற குணம் இல்லை. ரஸபஸ்மம், பேதிமருந்துகள், முதலியவைகளோடுசேர்த்துக் கொடுக்கப்படும்; இசிவுக்கும், மூச்சடைப்போடு காணுகிற இருமலுக்கும், வாதநோய்களுக்கும் கொடுக்கப்படுகின்றது. அளவுக்கு அதிகப்பட்டால், பித்தல், பிதற்றல், உறக்கம் இவைகள் காணும்; இன்னம் அதிகப்பட்டால் கொன்றுவிடும். அபினியைக் கொடுக்கச் சரிப்படாத ரோகங்களுக்கெல்லாம் இதைப் பிரயோகிக்கலாம். இதன் வித்துகளுக்கு அதிக வேகமுண்டு; ஆனால், அதை மெத்தக் கையாடுகிறதில்லை. இலையை ஒற்றடமாகவும், போல்டீஸ் செய்தும், கிரந்திகளுக்கும், நோயுள்ள விரணங்களுக்கும், மூலவியாதிகளுக்கும் உபயோகப்படுத்தலாம். சிலருக்கு தலைவலி, விகாரம், காணும்; அவர்களுக்கு நீக்கிவைக்கவேண்டியது. பேதிமருந்துகளோடு சேர்த்துக்கொடுத்தால், அவைகளுக்குள்ள துர்க்குணத்தை நீக்கிவிடும். குரோசாணி ஓமத்துக்கு, கடுப்பு, கபம், கரப்பான், புண் பேதி, வாதம், விரியநஷ்டம், வெகுமூத்திரம் இவைகள் போமென்றும், மயக்கம், உண்டாகுமென்றும், பதார்த்தகுணசிந்தாமணியில் கண்டிருக்கின்றது.

**Extractum Hyoscyami.** *Extract of Henbane.*

*எக்ஸ்டிராக்ட் ஆவ் ஹென்பேன். குரோசாணி ஓமச்சத்து.*

*செய்முறை.*—எக்ஸ்டிராக்ட் ஆவ் ஆகொனைட் என்னும் மருந்தைச் செய்கிறமுறையாய், இதையும் செய்துக்கொள்ளவேண்டியது.

ஒ. *அளவு.*—௫ - முதல், ௨௰ - கிறேன் இடைக்குக் கொடுக்கலாம்.

**Tinctura Hyoscyami.** *Tincture of Henbane.*

*டிங்சர் ஆவ் ஹென்பேன். குரோசாணி ஓமப் பாவனத்திராவம்.*

Prep. (Dried leaves of Hyoscyamus niger, ℥v., Proof Spirit, Oij.) *Dose.* fʒss.—fʒij.

செய்முறை.—ரு - அவுன்ஸ் உலர்ந்த குரோசானி ஓம இலையை, உ - பையின்ட் புரூப் ஸ்பிரிட் என்னும் சாராயத்தில் போட்டு, எ - நாள் ஊறவைத்து, வடிகட்டிக்கொள்ளவேண்டியது.

ஒ. அளவு.—ஏ - முதல், உ - திராம் அளவுக்குக் கொடுக்கலாம்.

**TABACUM.** *Nicotiana Tabacum. Tobacco.* (Dried leaves.)

டொபாக்கொ. புகையிலை. (உலர்ந்த இலை.)

குணங்கள்.—இது எல்லாருக்கும் பிரசித்தமாய்த் தெரிந்த பதார்த்தம். பச்சை இலைக்குக்கொஞ்சம் வாசனை உண்டு; உலர்ந்தபிறகு வாசனை அதிகப்படும். இதிலிருக்கிற சத்துக்கு நைகோஷியனு (Nicotiana) என்று பெயர். இது மெத்தக் கெடுதி செய்யும். புகையிலை கசப்பும், காரமும், குமட்டலையுமுடையதாய் இருக்கும். இதில் பொட்டிலுப்பு இருக்கின்றது.

ACTION. Errhine, Sialogogue, Sedative, Antispasmodic, Emetic, Laxative, Diuretic.

செய்கை.—நஸ்யம், திரவகாரி, சமனகாரி, அங்காகர்ஷணநாசகாரி, வமனகாரி, மலகாரி மூத்திரவர்த்தனகாரி.

USE. In strangulated hernia, obstinate constipation from spasm of the bowels, or retention of urine from spasm of the urethra.

உபயோகம்.—புகையிலைக் கஷாயத்தை, இறுகிக்கொண்ட குடல்வாதம், குடல் இறுகிக் காணுகிற மலபந்தம், மூத்திர தாரை இறுகிக் காணுகிற நீரடைப்பு, இவைகளுக்கு ஆஸனத்தில் உபயோகப்படுத்தப்படும். புகையிலைச் சுருட்டைப் பிடித்தால், மலம் தாராளமாய் இறங்கும்; அதிகமாய்ப் பிடித்தால், மயக்கம் காணும் திபனத்தை மந்தப்படுத்தும், மெத்த ஆயாசத்தைத் தரும். மூக்குத்தூள் போடுவதில், அப்போதுமாத்திரம் தென்பைக்கொடுத்து, பிறகு ஆயாசத்தைத்தரும். வழக்கமில்லாதவர்கள் தூள்போட்டால், தும்மல் காணும் ; சற்றுநேரம் இல்லாவிட்டால் மூக்கடைக்கும் ; வாயில் அடக்கிக்கொண்டால், உமிழ்நீர் அதிகமாய் வடியும், பல்நோவைச் சாந்திப்படுத்தும். சிறுகுழந்தைகளுக்குக் காணுகிற மலபந்த வியாதிக்கு, நமது வீட்டுப்பெண்டுகள், புகையிலைக் காம்பை ஆஸனத்தில் வைப்பது வழக்கம் ; இந்த வழக்கம் சிலருக்கு நன்மையும், சிலருக்கு தீன்மையும் செய்கின்றது. புகையிலை அப்பியாசம் நீக்கிவிடுவதே சகலத்துக்கும் நல்லது. இதைக் கட்டிகள் மேலுக்குப் போடுகிறார்கள். இதன் வெந்நீர்க்கஷாயத்தை, கரப்பான், சொறி சிரங்கு, முதலிய சருமரோகங்களுக்கு உபயோகப்படுத்துவதுண்டு : ஆனால், ஒருவேளை குமட்டலை உண்டாக்கும். டிஜிடேலிஸ் என்கிற மருந்தைப்போல், இருதயத்தினுடைய தொழிலைக் குறைக்கின்றது. அதிகமாய் உபயோகித்தால் இருதயத்துடிப்பு முதலிய மார்புநோய் காணும். இதற்கு மெத்த ஆயாசத்தைக் கொடுக்கிற குணம் இருப்பதால், அதிகமாய் உபயோகப்படுத்துகிறதில்லை. மெத்த துர்ப்பலமுடையவர்களுக்கும், கிழவர்களுக்கும், சிறு குழந்தைகளுக்கும், கொடுக்கலாகாது.

**RHEUM.** *Rhubarb.* The root of Rheum palmatum, R. Undulatum, and other Species.

ருபார்ப். வரியாத்துக்கிழங்கு. ரேவல்சின்னி. பேதிகந்தம். பேதிக்கிழங்கு.

குணங்கள்.—இந்தக்கிழங்கில் அனேக ஜாதிகள் உண்டு. டர்கிதேசத்து பேதிக்கிழங்கு, சிரேஷ்டமானது. கிழங்கு வழுவழுவென்று,மஞ்சள் வன்னமாய் இருக்கும்; சூரணம் அதிக மஞ்சளாயும், குமட்டலையுடைய வாசனையும் ருசியும் உடையதாயும் இருக்கும். இதைச் சாப்பிட்டால், மூத்திரம் மஞ்சளாய் இறங்கும்; ஈஸ்ட் இன்டியன் ருபார்ப் (East Indian Rhubarb) என்று சொல்லுகிற இனத்தில், பட்டை ஒட்டிக்கொண்டு இருக்கின்றது. பேதிகிழங்கின் சத்துக்கு, ரீயின், (Rheine) என்று பெயர். கஷாயமாய்க் காய்ச்சினால், குடிபட்டு மருந்து கெட்டுப்போகும்.

ACTION. Cathartic, Mild Astringent and Tonic.

செய்கை:—விரேசனகாரி, அல்பசங்கோசனகாரி, பலகாரி.

USE. In Costiveness, and in the early stages of Diarrhœa.

உபயோகம்.—மலபந்தத்துக்குக் கொடுத்தால், சாந்தியாய் மலத்தை கழிக்கும்; பேதி கண்டவர்களுக்கு ஆரம்பத்தில் கொடுத்தால், வயிற்றிலிருக்கிற துர்மலத்தைப் போக்கிவிடும். இதற்க்கு, பேதியானபிறகு மலத்தை இறுகச்செய்கிற குணம் இருக்கின்றது; ஆகையால் மலபந்தக்காரருக்கு இதை பேதிக்குக் கொடுக்கலாகாது. இதனால் உபத்திரவமில்லாமல் பேதியானபோதிலும், தாபனரோகங்களிலும் சுரங்களிலும், இதைப் பேதிக்குக் கொடுக்கலாகாது. குழந்தைகளுக்கு பேதிக்குக் கொடுக்க, இது மெத்த நல்ல ஔஷதம்; ஆனால், நமது குழந்தைகளுக்கு பேதி செவ்வையாய் ஆகிறதில்லை. பலவீனத்தால் உண்டாகிற அக்கினிமந்தரோகத்தில், டின்னர் பில்ஸ் (Dinner-pills) என்கிற யாத்திரையாய்ச் செய்துகொடுத்தால், குன்மவியாதியை எடுத்துவிடும்; அதிசாரரோகத்தில் இதைப் பேதிக்குக் கொடுத்தால், பேதியானபிறகு, குடலுக்கு வலுவைக் கொடுக்கும். கொஞ்சமாய் கொடுத்தால் தீபனத்தை அதிகப்படுத்தும், வலுவைக் கொடுக்கும். இதனுடன் காந்தமண்பஸ்மத்தை (மாக்நிஷியா) ச்சேர்த்து, குழந்தைகளுக்கு வழக்கமாய் பேதிக்குக் கொடுக்கப்படும். ரஸபஸ்மத்தையும் சேர்த்துக்கொடுப்பதுண்டு.

DOSE. Of the powder, gr. x.—℈j.

ஔ. அளவு.—சூரணத்தில், ய - முதல், உய - கிறேன் இடைக்குக் கொடுக்கலாம்.

**Pulvis Rhei Compositus.** *Compound Rhubarb Powder Gregory's Powder.*

கம்பவுன் ருபார்ப் பவ்டர். கிரிகொரீஸ் பவ்டர். ரேவல்சின்னி கலவைச்சூரணம்.

PREP. (Magnesia, ℔j., Ginger, ℥ij., Rhubarb, ℥iv.) *Dose.* ℈j.—ʒj. For children, gr. v.—x.

செய்முறை.—க - பவுன் மாக்நிஷிய, உ - அவுன்ஸ் சுக்குத்தூள், ச-அவுன்ஸ்

ரேவல்சின்னிச் சூரணம். இவைகளைச் சேர்த்து, எல்லாம் செவ்வையாய் மிஸ்ரமமா கும்படி அரைத்துக்கொள்ளவேண்டியது.

ஒ. அளவு.—உ௰ - கிரேன் முதல், க - திராம் கொடுக்கலாம். குழந்தைக ளுக்கு, ௫ - முதல், ௰ - கிரேன் கொடுக்கலாம்.

**Pilula Rhei Composita.** *Compound Rhubarb Pill..*

கம்பவுன் ரூபார்ப்பில். ரேவல்சின்னி கலவைமெழுகு.

PREP. Rhubarb, ʒiv., Aloes, ʒiij., Myrrh, ʒij., Soft Soap, ʒss., Oil of Caraway, ♏xv., Treacle q. s.) *Dose* gr. x.—℈j.

செய்முறை.—௪ - திராம் ரேவல்சின்னித்தூள், ௩ - திராம் மூஷாம்பரத்தூள், உ - திராம் வெள்ளைத்திப்போளத்தூள்; இவைகளைச் சேர்த்து, மிஸ்ரமித்து, பிறகு, ஒ - திராம் இளகிய சவுக்காரம், ௰௫ - துளி, கேக்விதைத் தைலம், அதற்குத் தகுந்த வெல்லப்பாகு, சேர்த்து, மெழுகு பதத்துக்கு அரைத்துக்கொள்ளவேண்டியது.

ஒ. அளவு.—௰ - முதல், உ௰ - கிரேன் கொடுத்தால்; பேதியாகும்.

**Tinctura Rhei Composita.** *Compound Tincture of Rhubarb.*

கம்பவுன் டிங்சர் ஆவ் ரூபார்ப். ரேவல்சின்னிக் கலவைப் பாவ னத்திரவம்.

PREP. (Rhubarb, ℥ijss., Bruised Liquorice, ʒvj., Cut Ginger and Saffron, āā ʒiij., Proof Spirit, Oij.) *Dose.* ʒi. to ℥i.

செய்முறை.—உஒ - அவுன்ஸ் தரித்த ரேவல்சின்னி, ௬ - திராம் சிதைத்த அதிமதுரம், ௩ - திராம் தரித்த சுக்கு, ௩ - திராம் குங்குமப்பூ. இவைகளை, உ - பையின்ட் புரூவ் ஸ்பிரிட் என்னும் சாராயத்தில்போட்டு, எ - நாள் ஊறவைத்து, வடிகட்டிக்கொள்ளவேண்டியது.

ஒ. அளவு.—க - திராம் கொடுத்தால் தீபனத்தை அதிகப்படுத்தும். ஒ - முதல், க - அவுன்ஸ் கொடுத்தால் பேதியாகும்.

**MEZEREUM.** *Daphne Mezereum. Mezereon.* (Root-Bark.)

மெஜிரியன். (வேர்ப்பட்டை.)

இந்த வேரைத் தனிப்படக் கொடுப்பது அரிது. இது கஷாயமாய்ச் செய்து, உபயோகப்படுத்தப்படும். சிமை நன்னாரிவேர்க் கலவைக் கஷாயத்தில் (Decoctum Sarsæ Compositum.) இது சேருகின்றது. மேலே போட்டால் எரிச்சலைத் தரும்; நேரப்படவைத்தால் கொப்புளம் உண்டாகும். இதற்கு வியர்வை அதிகப்படுத்துகிற குணமும், மூத்திரத்தை அதிகப்படுத்துகிற குணமும் இருக்கின்றது. இதை மேக சம்பந்தமான கில்வாதரோகங்களுக்குக் கொடுப்பதுண்டு.

**MYRISTICA.** *Myristica Officinalis. M. Moschata. Nutmeg.* (Seed.)

நட்மெக். ஜாதிக்காய். (பருப்பு.)

ஜாதிக்காயானது அண்டவடிவாய், கெட்டியாய், பழுப்பு நிறமாய், அறுத்துப்பார்த்தால் உள்ளே புள்ளிபுள்ளியாய் இருக்கும்; இதை எளிதிற் சுரண்டித்தூளாக்கலாம். இதற்கு நல்ல பரிமள வாசனையுண்டு; கறி மசாலையோடும், தாம்பூலத்திலும் வழக்கமாய் சேர்க்கப்படுகின்றது.

*Mace.* மேஸ். சாதிபத்திரி.—சாதிக்காயின்மேல் மூடிக்கொண்டு இருக்கிற பதார்த்தத்துக்கு, சாதிபத்திரி என்று பெயர். சாதிக்காய்க்குள்ள குணங்களே இதற்கும் உண்டு; ஆனால் கொஞ்சம் வெகுட்டலாய் இருக்கும். இதை ஔஷதங்களோடு கூட்டுவதில்லை.

Action. Aromatic and Stimulant; in large doses Narcotic.

செய்கை.—வாசனைப்பதார்த்தம், உஷ்ணகாரி; அதிகமானால் நித்திரையையுண்டாக்கும்.

உபயோகம்.—சாதிக்காய் சாதிபத்திரி இவைகள், கறிமசாலையோடு சேருகின்றன. சாதிக்காய் அநேக கூட்டுமருந்துகளோடு சேரும். போர்ட் ஒயினோடு சேர்த்துக்கொடுத்தால், குட்டைப் பிறப்பித்து, வாயுவைக் கண்டிக்கும், பேதிமருந்துகளோடு சேர்த்தால், வயிற்றுக் கடுப்பை நீக்கிவிடும். அசதி ஜந்நிரோகத்துக்குட்பட்டவர்கள் சாதிக்காயை நீக்கிவைக்கவேண்டியது.

ஓ. அளவு.—௫ - முதல், ௰௫ - கிறேன் அளவுக்குச் சாதிக்காய்த்தூளைக் கொடுக்கலாம்.

**Oleum Myristicæ.** *Volatile or Essential Oil of Nutmeg.*

ஆயல் ஆவ் நட்மெக். ஜாதிக்காய்த்தைலம்.

செய்முறை.—சாதிக்காய்களைத் தூள்செய்து, ஜலத்தில்போட்டு, வாலையிலிட்டு வடித்து, தைலத்தைச் சேகரிக்கப்படுகின்றது. இது இளமஞ்சள் வர்ணமாய் இருக்கும். சாதிக்காய் வாசனையும், உருசியும் இதற்கு உண்டு. சாதிபத்திரித் தைலமும் இதைப்போன்றதுதான்.

ஓ. அளவு.—க - முதல், ங-துளி கொடுத்தால் உச்சாகப்படுத்தும்.

**Spiritus Myristicæ.** *Spirit of Nutmeg.*

ஸ்பிரிட் ஆவ் நட்மெக். சாதிக்காய் மது.

செய்முறை.—உ - அவுன்ஸ் சாதிக்காய் தைலத்தை, ௬ - அவுன்ஸ் ரெக்டிபைடு ஸ்பிரிட் என்னும் சாராயத்தில் விட்டு, கரைத்துக்கொள்ளவேண்டியது.

ஓ. அளவு.—க - முதல், ச - திராம் அளவுக்குக் கொடுக்கலாம்.

**SASSAFRAS.** *Sassafras Officinale.* (The Root.)

ஸாஸெபராஸ். (வேர்.)

இந்த வேருக்கு உஷ்ணிக்கிறகுணமும், வியர்வையைப் பிறப்பிக்கிற குணமும் உண்டு. இது மருந்துகளோடு சேர்த்து உபயோகிக்கப்படும். சீமை நன்னாரிவேர்க் கலவைக்கஷாயத்தில் இது சேருகின்றது. இதின் வேரும், சக்கையும், பட்டையும் ஜலத்தில்போட்டு வாலையிலிட்டு வடித்து எடுக்கிற தைலத்தில், உ - முதல், ௫ - துளி கொடுக்கலாம்.

**CAMPHORA.** *Camphora Officinarum. Camphor.*

காம்பர். கர்ப்பூரம்.

கர்ப்பூரம் அநேக செடியில் இருக்கின்றது; ஆனால் முக்கியமாய் இரண்டுசேர்ந்துச் செடியிலிருந்து சேகரிக்கப்படும். செடியின் சமூலத்திலும் கர்ப்பூரம் இரு

க்கின்றது. வேர், அடிமரம், கிளைகள், இவைகளைப் பிளந்து துண்டுகளாக்கி, முதல் ஜலத்தில் காய்ச்சி, பிறகு பதங்கித்து எடுத்துக்கொள்ள வேண்டும். தோஷங்களுடைய இந்தக் கர்ப்பூரத்துடன் சுண்ணாம்புசேர்த்து, கண்ணாடிவாலேயில் போட்டு, பதங்கித்தால், சுத்தியாகிவிடும்.

குணங்கள்.—கர்ப்பூரமானது, வெள்ளைக்கட்டிகளாய், நொய் அணுக்கள்போல் இருக்கும்; அழுந்தும்; சாராயம் விட்டு அரைத்தால் தூளாகும்; இதற்கு அதிக வாசனையுண்டு; ஜலத்தில் கரையாது; ஆல்கோஹல் சாராயத்திலும், ஈதர் என்னும் சரக்கிலும், எண்ணெயிலும் கரையும்; காற்றுப்பட்டால் பறந்துவிடும்; விளாம்பிசின், சருக்கரை, முட்டையின் கரு, இவைகளில் எதையாவதுச் சேர்த்து ஜலத்தில் மிஸ்ரமாகும்படிச் செய்யலாம்; ஜலத்தில் மிதக்கும். கர்ப்பூரத்தைலத்துடன் (Turpentine), கறி உப்புத்திராவகத்தைச் சேர்த்தால் (Hydrochloric acid), கர்ப்பூரமாதிரியான பதார்த்தம் ஒன்று ஏற்படும். இதைக் கொளுத்தினால், கர்பபூரத்தைல வாசனையைத் தரும்.

ACTION. Diffusible Stimulant, Diaphoretic; Externally Anodyne.

செய்கை.—உஷ்ணகாரி, சுவேதகாரி, மேலுக்குத் தடவினால், நோயைச் சமனப்படுத்தும்.

USE. In Fevers Rheumatism, Hysteria, Nervous Complaints, &c.

உபயோகம்.—கர்ப்பூரமானது நாடியைத்தீவிரப்படுத்தாமல், கொஞ்சம் உச்சாகப்படுத்தும், வேதனையைத் தணிக்கும், நித்திரையை உண்டாக்கும்; எரிவண்டுப் பிளிஸ்டர் போட்டுக் காணுகிற நீர்க்கடுப்பைக் குறைக்கும். வியர்வையைப் பிறப்பிக்கிற மருந்துகளோடு சேர்த்து, குணத்தை அதிகப்படுத்தி, சுரங்கள், கீல்வாதரோகம் முதலியவைகளுக்குக் கொடுக்கப்படுகின்றது. கர்ப்பூரத்துடன் பெருங்காயம், சடாமாஞ்சி சேர்த்து, சூதகஜந்நி, வலிகள் இவைகளுக்குக் கொடுக்கலாம். பார்க் பவுடரோடு சேர்த்து, கெட்ட சுரங்களுக்கும், அழிபுண்களுக்கும் கொடுப்பதுண்டு. கர்ப்பூரத்தை மோந்தால், ஜலதோஷம் நீங்கும்; ஆவியை வாயால் உள்ளுக்கிழுத்தால், கபரோகங்களுக்கு நல்லது. கர்ப்பூரவேது, வியர்வையை அதிகப்படுத்தும்; நாள்பட்ட சருமரோகங்களை குணப்படுத்தும்; மூத்திரக்கட்டு, மூத்திரத்தாரை, மூத்திரப்பை, கருப்பாசயம், ஆஸனம் இவைகளில் காணுகிற தாபனரோகங்களுக்கு, உபயோகிக்கலாம். வாந்திபேதிக்கு இதை அதிக அளவில் கொடுக்கவேண்டியது.

ஒ. அளவு.—௩ - முதல், ௰ - கிறேன் கொடுக்கலாம்.

## Mistura Camphoræ. *Camphor Mixture.*

## காம்பர் மிக்சர். கர்ப்பூரஜலம்.

செய்முறை.—௨ - திராம் கர்ப்பூரத்தில், ௰ - துளி ரெக்டிபையிட் ஸ்பிரிட் என்னும் சாராயத்தைவிட்டு, அரைத்து, ௧ - பையின்ட் ஆவிநீரைக் கொஞ்சங்கொஞ்சமாய்ச் சேர்த்துக்கொண்டு, நார்த்துணியில் வடிகட்டிக்கொள்ளவேண்டியது. மருந்துகளை இந்த ஜலத்தோடு கொடுத்தால், இனிப்பாயிருக்கும்.

ஒ. அளவு.—உ - முதல், ௩ - அவுன்ஸ் கொடுக்கலாம்.

**Tinctura Camphoræ Composita.** *Compound Tincture of Camphor. Tincture Opii Camphorata. Paregoric. Paregoric Elixir.*
கம்பவுன் டிஞ்சர் ஆவ் காம்பர். பெரிகாரிக். கர்ப்பூரக்கலவைப் பாவனத்திரவம்.

இதைச் செய்கிறமுறை, உ௩௫ - வது பக்கத்தில்செப்பிஇருக்கின்றது. ௧ - அவுன்ஸ் திராவகத்தில், ௧ - கிறேன் அபினி இருக்கின்றது. ௧ - முதல், ௪ - திராம் அளவுக்குக் கொடுக்கலாம்.

**Linimentum Camphoræ.** *Camphor Liniment. Camphorated Oil.*
காம்பர் லினிமென்ட். கர்ப்பூரப் பூசுத்தைலம்.

செய்முறை.—௧-அவுன்ஸ் கர்ப்பூரத்தை, சாராயம்விட்டரைத்துக்கொண்டு, ௪ - அவுன்ஸ் ஆலிவ் ஆயல் என்னும் எண்ணெயைச் சேர்த்து மிஸ்ரமித்துக்கொள்ளவேண்டியது.—இதை நோய் இருக்கிற இடங்களில் தேய்த்தால் நோய் சமனப்படும்.

**Linimentum Camphoræ Compositum.** *Compound Camphor Liniment.*
கம்பவுன் காம்பர் லினிமென்ட். கர்ப்பூரக் கலவைப் பூசுத்தைலம்.

PREP. (Camphor, ℥iiss., Oil of Lavender, f℥j., Rectified Spirit, f℥xvij., Strong Liquor Ammonia, f℥iij.)

செய்முறை.—உ½ - அவுன்ஸ் கர்ப்பூரம், ௧ - திராம் லவன்டர் தைலம், ௰௭ - அவுன்ஸ் ரெக்டிபையிட் ஸ்பிரிட் என்னும் சாராயம். இவைகளைக் கரைத்துக்கொண்டு, ௩ - அவுன்ஸ் காரமான லிகர் அம்மோனியாவைச் சேர்த்து, மிஸ்ரமாகிறவரையில் குலுக்கிக்கொள்ளவேண்டியது.—இதை மேலுக்குத் தேய்த்தால், சருமத்தைச் சிவப்பிக்கும், உஷ்ணம் செய்யும்.

**CINNAMOMUM.** *Cinnamomum Zeylanicum. Cinnamon.* (Bark.)
ஸின்னமன். கருவாப்பட்டை. சன்ன லவங்கப்பட்டை (பட்டை.)

குணங்கள்.—இந்தப்பட்டை சுருண்டு நார்நாராய், நல்லவாசனையாய், காரமுள்ளதாய் இருக்கும். இதன் சத்து சாராயத்தில் இறங்கும்.

ACTION. Stimulant, Astringent, Carminative.

செய்கை.—உஷ்ணகாரி, ஸ்தம்பகாரி, கர்ப்புவாதஹரகாரி.

உபயோகம்.—கருவாப்பட்டைக்கு வயிற்றிலிருக்கிற வாயுவை ஹரித்து மலத்தைக் கட்டுகிற குணம் இருப்பதால், குழந்தைப்பேதிச் சிகிச்சையில் இது மெத்த உபயோகப்படுகின்றது. பலவீனத்தால் காணுகிற அக்கினிமந்தரோகம், வயிறு உப்பலிசம், அதிசாரம், வாந்தி இவைகளுக்குக் கொடுக்கலாம். இதைத் தனியாய் கொடுக்கிறவழக்கமில்லை; கசப்பு மருந்துகளோடும், பேதி மருந்துகளோடும், துவர்ப்பு மருந்துகளோடும் சேர்த்து உபயோகப்படுத்தப்படும். கறி மசாலை செயற்கையில் இது முக்கியமானது.

ஒ. அளவு.—சூரணத்தில் ௰ - முதல், உ௰ - கிறேன் கொடுக்கலாம்.

**Oleum Cinnamomi.** *Oil of Cinnamon.*

ஆயல் ஆவ் ஸின்னமன். கருவாப்பட்டைத் தைலம். சன்ன லவங்கப்பட்டைத் தைலம்.

செய்முறை.—சன்ன லவங்கப்பட்டைத் தூள், உப்பு ஜலத்தில் ஊறவைத்து, பிறகு வாலையிலிட்டு வடித்து எடுக்கப்படும்.

ஓ. அளவு.—க - ௩ - துளி கொடுக்கலாம்.

**Aqua Cinnamomi.** *Cinnamon Water.*

ஸின்னமன் வாடர். கருவாப்பட்டைத் தீநீர்.

செய்முறை.—சதகுப்பித் தீநீர் செய்கிற முறையாய் இதையும் செய்து கொள்ளவேண்டியது.

ஓ. அளவு.—௧ - முதல், ௩ - அவுன்ஸ் கொடுக்கலாம்.

**Tinctura Cinnamomi.** *Tincture of Cinnamon.*

டிஞ்சர் ஆவ் ஸின்னமன். கருவாப்பட்டைப் பாவனத்திரவம்.

செய்முறை.—௩௨ - அவுன்ஸ் கருவாப்பட்டைப் பொடியை, ௨ - பையின்ட் புரூவ் ஸ்பிரிட் என்னும் சாராயத்தில் போட்டு, எ - நாள் ஊறவைத்து, வடிகட்டிக்கொள்ளவேண்டியது.

ஓ. அளவு.—க - ச - திராம் கொடுக்கலாம்.

**CASSIÆ CORTEX.** *Cassia Bark.*

காஷிய பார்க்.

இதுவும் ஒரு சாதி கருவாப்பட்டை. இது தளமாய் இருக்கும்; வாசனையும் காரமும் மட்டு, கொஞ்சம் கசக்கும்; கருவாப்பட்டைக்கு இருக்கிற குணங்களே இதற்கும் உண்டு. அதை உபயோகிக்கிற கிரமமாய், இதையும் உபயோகப்படுத்தக்கூடும்.

**CROTON TIGLIUM.** *Tiglium Officinale.*

குரோடன் டிக்லியம். நேவாளம். கிழ்நோக்கி.

குணங்கள்.—நேர்வாளச்செடி, சின்னதாய் ௰ - ௨௰ அடி உயரமிருக்கும் இதின் புஷ்பம், இலை, காய், வேர் முதலியவைகளிலும், பேதியாகிற குணம் இருக்கின்றது. இது நேபாளதேசத்தில் இருந்து வந்தபடியால், நேவாளம் என்று பெயர்பெற்றது. நேவாளக்கொட்டை சற்றேறக்குறைய, ஆமணக்கு முத்துபோலிருக்கும் பருப்பில், தைலமிருக்கின்றது. இவ்விடத்தில் தமிழ் வைத்தியர்கள் கொட்டையைச் சுத்திசெய்து, அதிலிருக்கிற முளையை எடுத்துவிட்டு பிறகு உபயோகிக்கிறார்கள். யூரோப் தேசத்தில் அதிலிருக்கிற எண்ணெயை எடுத்து உபயோகிக்கின்றார்கள். வாளம் சுத்திசெய்யாமல் உபயோகிந்தால், மெத்த வயிற்றுக்கடுப்பையும், வாந்தியையும் உண்டாக்கும். வாளத்தில் வெகு ஜாக்கிரதையாய் கையிட வேண்டியது; இல்லாவிட்டால் முகம் வீங்கும், சரீரசவுக்கியம் கெடும். வாளத்தைச் சுத்திசெய்கிற முறைகள் அநேகம்; எப்படிச் சுத்திசெய்தபோதிலும், பருப்

பிஃமேல் இருக்கிற சவ்வையும், பருப்புக்குள் இருக்கிற முளையையும் எடுத்துவிடுகிற தே பிரதானம்: நேர்வாளத்தைச் சுத்தி செய்கிற முறைகளாவன.—

க. நேர்வாளக் கொட்டைகளை உடைத்து, பருப்பை எடுத்து பாலில் வேக வைத்து, எலுமிச்சம்பழ ரசம்விட்டு அரைத்து, மிளகு பரிமாணம் மாத்திரைகள் செய்துகொள்ளுவது ஒரு முறை.

உ. நேர்வாளக்கொட்டை ஒவ்வொன்றையும், புது சாணத்தால் கவசமிட்டு, நெருப்பில்போட்டு வேகவைத்து, கொட்டைகளை உடைத்து, முளையை எடுத்துவிடுகிறது ஒரு முறை.

ரு. அகஸ்தியர் முறை.—எருமைச்சாணத்தை கழுநீரிலாவது, காடி நீரிலாவது கரைத்து, நேர்வாளக்கொட்டைகளைத் துணியில் முடிந்து அதில் போட்டு, வேக வைத்து, கொட்டைகளை உடைத்து, முளையை எடுத்துவிட்டு, புளிப்பேறின மோரில் ௰ - நாள் ஊறவைத்து, எடுத்துக்கொள்ளவேண்டியதுதான்:

ச. நேர்வாளக்கொட்டைகளைச் சாணம் கரைத்த நீரில் ஒரு நாள் ஊறவைத்து, பிறகு பாலில் ரு - தரம் வேகவைத்து, பிரதிதடவையும் வெயிலில் நன்றாய் உலர்த்திக் கொட்டைகளை உடைத்து, முளையை நீக்கி உலர்த்திக்கொள்ளுவது ஒரு முறை. இப்படியாக இன்னம் அனேக முறைகள் உண்டு.

ACTION. Powerful Cathartic.

செய்கை.—பலமுள்ள விரேசனகாரி.

USE. In obstinate constipation, in dropsy, and in apoplexy or paralysis, where a speedy irritant action on the intestines is desired.

உபயோகம்.—மலச்சிக்கல், நீர்க்கோவை, அஸ்தி ஜந்தி, ஸம்ஸ்தம்பரோகம், உன்மாதம் இவைகளுக்கு நேர்வாளத்தை உபயோகிக்கலாம். இந்தியாதேசத்தில் இது வழக்கமாய் பேதிக்குக் கொடுக்கப்படுகின்றது. வாளத்தைக் கொடுத்தால் சீக்கிரத்தில் ஜலம் ஜலமாய் பேதியை உண்டாக்கும்; நரம்புகளைப்பற்றிக் காணுகிற வலி முதலிய ரோகங்களுக்குப் பேதிக்குக் கொடுக்க எடுத்த மருந்து, மெத்த பலவீனமுடையவர்களுக்கும், வயிற்றில் தாபனரோகம் கண்டிருப்பவர்களுக்கும், வயது சென்றவர்களுக்கும், கெர்ப்பிணிகளுக்கும், நேர்வாளமாத்திரை கொடுக்கலாகாது.

DOSE. About a grain or half a seed.

ஒ. அளவு.—க - கிறேன் அல்லது, ½ - பருப்புக் கொடுக்கலாம். ஆனால் இவ்விடத்தில் அதிகமாய்க் கொடுப்பது வழக்கம். காய்ச்சுக்கட்டி, மிளகு இவைகளில் எதையாவது சேர்த்துக் கொடுக்கலாம். வாளம் சிலருக்கு நன்றாய் பேதியாகும்; சிலருக்கு வயிற்றைப் புண்ணாக்கும்; அளவு அதிகப்பட்டால் கொன்றுவிடும். முக்கியமாய், வீரம், பூரம், தாளகம் இவைகளைச் சேர்த்துச் செய்கிற முறை, மெத்தக் கெடுதிச் செய்கின்றது. அதிகபேதியானால், ௨௰ - துளி லாடனத்தைக் கொஞ்சம் ஜலத்தில்விட்டுக் கொடுத்தால், பேதியை நிறுத்திவிடும். அபினியை மாத்திரைசெய்தும் கொடுக்கலாம்.

கர்ப்பூரபேதி மாத்திரை.—சுத்திசெய்த வாளம் க - கிறேன், கர்ப்பூரம் உ - கிறேன், இவைகளைச் சேர்த்து மாத்திரைசெய்து கொடுக்கலாம்.

௧ - அவுன்ஸ் வாளத்தை, ௪ - அவுன்ஸ் சாராயத்திற்போட்டு, ஊறவைத்து, நமைச்சலுக்குத் தேய்க்க குணமாகும். இந்தப் பாவனத்திரவத்தில், பனிநீர் சேர்த்தும் உபயோகிக்கலாம்.

நேர்வாள ... லச் சூரணத்தை, நாகப்பாம்புக் கடிக்குப் போடுகிற வழக்கம் உண்டென்றும் கண்டு இருக்கின்றது.

அகஸ்தியர் குழம்பு :—பெருங்காயம், கடுகு, இந்துப்பு, ரசம், வெண்காரம், மனோசிலை, திப்பிலி, அரிதாரம், கருஞ்சீரகம், சுத்திசெய்து வருத்தவாளம் வகை ௧ - ௰ கவ-விராகனெடை. இவைகளைக் கல்வத்திலிட்டு, எலுமிச்சம்பழம் ரஸம் விட்டு ௪ - ஜாமம் அரைத்து கடுகுபரிமாணம் மாத்திரைசெய்து, ஜுரத்துக்கு சுக்கு கஷாயத்திலும், இருமலுக்கு கடுக்காய் கஷாயத்திலும், சீதஜுரத்துக்கு சுக்கு மிளகு கஷாயத்திலும், ரத்தமூலத்துக்கு நெய் அல்லது எருமைப்பாலிலும், பாண்டு மகோதரம் நீராமை சோகை வீக்கம் முதலிய ரோகங்களுக்கு, வெள்ளை வெங்காய ரசத்திலும், ஜந்நிக்கு இஞ்சி சுரசத்திலும் கொடுக்கிறார்கள். ஜந்நி பாதம்-பேய்-விஷம் இந்த ரோகங்களுக்கு, ஒரு மாத்திரையை முலைப்பாலில் உரைத்துக் கலிக்கம் போடுகிறதும் உண்டு. இது கெட்டவழக்கம். கண்ணுக்கு வெகு உபத்திரவம் காணும்.

சுத்திசெய்த வாளம், ஆமணக்கு முத்து, காய்ச்சுக்கட்டி, இதுகள்சமனெடைசேர்த்து, பசுவின்பால் அல்லது பழரசம் விட்டரைத்து, துவரைப்பரிமாணம் மாத்திரைகள்செய்து, ஒருமாத்திரை வெந்நீரில் கொள்ள நன்றாய்ப் பேதியாகும். பேதி யதிகமானால், வசம்புக்கஷாயம் அல்லது அபினி சாப்பிடவேண்டும். புளித்த மோருஞ் சாதமும் தின்றால், பேதி நிற்கும். காய்ச்சுக்கட்டிக்குப பதிலாக மிளகைச் சேர்த்துக்கொள்ளலாம்.

காய்ச்சுக்கட்டிப் பேதிமாத்திரை.—சுத்திசெய்த வாளம் ௨-பலம், காய்ச்சுக்கட்டி ௨ - பலம், பெப்பர்மின்ட் தைலம் கொஞ்சம் சேர்த்து, அரைத்து, ௨ - கிறேன் எடையுள்ள மாத்திரைகளாய்ச் செய்துகொள்ளவேண்டும். இதில் ௧-௨-மாத்திரைப் பொடிசெய்து, வெல்லத்தில் வைத்து விழுங்கி வெந்நீர்ச்சாப்பிட்டால், நன்றாய்ப் பேதியாகும்.

## **Tiglii Oleum.** *Croton Oil.*
## குரோடன் ஆயல். நேர்வாளத்தைலம்.

*குணங்கள்.*—நேர்வாள எண்ணெய் புதிதாயும் சுயம்பாயும் இருந்தால், துல்லியமாய் இருக்கும் ; பருப்பை மெத்த உலரவைத்தால், எண்ணெய் நிறம் சிவந்துவிடும். கடைச்சரக்கு பழுப்பு நிறமாயாவது, சிவந்த நிறமாயாவது, இருக்கின்றது. எண்ணெய் நெஞ்சில் கறகறப்பைக் கொடுக்கும். இதில் சிற்றாமணக்கெண்ணெயாவது, காட்டாமணக்கெண்ணெயாவது கலந்து விற்பதுண்டு.

*செய்முறை.*—நேர்வாளமுத்தைச் செக்கில் ஆட்டியாவது, அல்லது இரும்புத் தகட்டால் கசக்கிப் பிழிந்தாவது எண்ணெயை எடுக்கவேண்டும்.

*செய்கை. உபயோகம்.*—இதைக் கொடுத்தால் வயிறு கடுத்து பேதியாகும். நோயாளி பிரக்ஞைதப்பி எதையும் விழுங்க சக்தி இல்லாமல் இருக்கிறபோது, பேதிக்குக் கொடுக்கவேண்டியதாயிருந்தால், ௨ - துளி நேர்வாள எண்ணெயைச் சருக்கரையில் கலந்து வாயில் போட்டால் பேதியாகும். குழந்தைகளுக்குத் தொப்பு

ளில் நேர்வாள எண்ணெயைத் தடவினால் பேதியாகும்; எண்ணெயைச் சரீரத்தின் மேல் தேய்த்தால், தேய்த்தவிடம் சிவந்து சிக்கொப்புளங்களுண்டாகும்.

ஓ. அளவு.—௧ - ௨ - ௩ - துளி விதம் மாத்திரை செய்துகொடுத்தால், பேதியாகும். அபினியையும் சேர்த்துக்கொடுப்பதுண்டு. நீராகாரம், சருக்கரை, வாழைப்பழம், நெல்லித்துவையல் இவைகளில் எதிலாவதுச் சேர்த்துக்கொடுக்கலாம். வித்தை தேங்காய்ப்பாலில் போட்டுக் காய்ச்சி, எண்ணெயை எடுத்து பேதிக்குக் கொடுக்கலாம்.

## **RICINI OLEUM.** *Castor Oil.*

## காஸ்டர் ஆயல். சிற்றாமணக்கெண்ணெய்.

குணங்கள்.—துல்லியமாய் வைக்கோல் நிறமாய் இருக்கிற சிற்றாமணக்கெண்ணெய் நல்லசரக்கு, மஞ்சள் நிறம் அதிகப்பட்டிருந்தால் அது மட்டம். ஜலத்துக்கு லேசானதால், ஜலத்தின்மேல் மிதக்கும், கரையாது. ஆல்கோஹால், ஈதர் இவைகளில் கரையும். நயமாய் இருக்கிற எண்ணெய்களை, இதனோடு கலந்து கடையில் விற்பதுண்டு.

செய்முறை.—சிற்றாமணக்கெண்ணெயைச் செக்கிலாட்டியாவது, வேவித்தாவது எடுக்கவேண்டியது. ஆமணக்கு முத்தை ஜலத்தில் போட்டு வேகவைத்து உலர்த்தி, இடித்து மறுபடியும் ஜலத்தில்போட்டு வேகவைத்தால், எண்ணெய் வடிந்து ஜலத்தில் மிதக்கும். இதற்கு "அவித்தெடுத்த எண்ணெய்" என்று பெயர். முத்துகளை வறுத்து எடுக்கிற எண்ணெய்க்கு, வறுத்தெடுத்த எண்ணெய் என்றும், உஷ்ணம் படாமல் எடுக்கிற எண்ணெய்க்கு, பச்சை எண்ணெய் (Cold drawn Castor Oil) என்றும் பெயர். பச்சை எண்ணெய் சிரேஷ்டமானது.

Action. Purgative.

செய்கை.—விரேசனகாரி.

உபயோகம்.—சிற்றாமணக்கெண்ணெயைக் கொடுத்தால், உபத்திரவமில்லாமல் சாந்தமாய் பேதியாகும். வயிற்றில் உஷ்ணம் செய்யாமலும் வேதனையில்லாமலும் பேதியாகும்படிச் செய்யவேண்டியபோதெல்லாம் இதைக் கொடுக்கலாம். குடற் புண், வயிறு முறுக்கலோடு வேதனை, மூத்திர உறுப்புகள், ஜனன உறுப்புகள் இவைகளின் வியாதி, மூலரோகங்கள், மலத்துவாரம் அடைப்பு, கர்ப்பிணிகள், பிரசவித்த மாதர்கள், வியாதிகண்டிருக்கிற குழந்தைகள் இவர்களுக்கு பேதிக்கு சிற்றாமணக்கெண்ணெய் கொடுப்பது நல்லது. அயம் கொடுத்துக் காணுகிற மலச்சிக்கலுக்கும், இதைக் கொடுக்கலாம். குழந்தைகளுக்கு செவ்வெண்ணெய் என்று முலைப்பாலில் கலந்து வார்ப்பது நமது வீட்டுவழக்கம்; ஆனால் நாள்தோறும் அந்தி சந்தி இரண்டுவேளையும் வார்த்துக்கொண்டிருக்கிற வழக்கங்கெட்டது; அதனால் அனேக துர்க்குணங்கள் காணுகிறது. அவசரமாய் எப்போது வேண்டியதோ, அப்போது உபயோகப்படுத்தினால், சவுக்கியத்தைத் தரும்.

ஓ. அளவு.—௨ - முதல், ௧௨ - அவுன்ஸ் அளவுக்கு, தண்ணீர் கலந்த சாராயத்திலாவது, சூடாய் இருக்கிற பால், காப்பி, சுக்குக் கஷாயம், உப்புசேர்ந்த நீராகாரம், இவைகளில் எதிலாவது விட்டுக் கலந்துகொடுக்கலாம். எலுமிச்சம்பழரஸம்விட்டு சருக்கரையைச் சேர்த்துக்கொண்டால், இனிப்பாய் இருக்கும். குழந்

தைகளுக்கு வயதுக்குத்தக்கபடி, அளவை நிறுக்கிட்டுக்கொள்ளவேண்டியது. ௧ - முதல் ௨ - கிராம் கொடுக்கலாம்.

சிற்றுமணக்கெண்ணெயுடன், பேயன் வாழைப்பழம், கற்கண்டு, சீரகம் இவைக ளைக் கலந்து ஊறவைத்து, காலையில் கொஞ்சம் சாப்பிட்டுக்கொண்டுவந்தால், தேக த்தைக் குளிர்ப்பிக்கும், மலச்சிக்கலிராது.

ஆமணக்குமுத்தைத் துவையல் செய்து கொடுத்தால் மலத்தைக் கழிக்கும்.

**TAPIOCA.** *Jatropha Manihot. Janipha Manihot. Bitter Cassava.* (Fecula of the root.)

டாபியோக. மரவள்ளிக்கிழங்குமாவு.

இந்தக் கிழங்கிலிருக்கிற விஷத்தைப்போக்கிய மாவுக்கு, டாபியோகா என்று பெ யர். இதைக் கஞ்சியாய்க் காய்ச்சி பிணியாளர்களுக்கும், குழந்தைகளுக்குப் பாலை மறக்கடிக்கிறபோதும், கொடுக்கலாம்.

**PIPER NIGRUM.** *Black Pepper. Dried unripe Berries.*

பிளாக் பெப்பர். மிளகு. உலர்ந்தகாய்கள்.

குணங்கள்.—மேல்தோலை நீக்கியதற்கு வெள்ளை மிளகு (White Pepper) எ ன்று பெயர். மிளகு காரமாயும் வாசனையாயும் இருக்கும்; மிளகில் இருக்கிற சத் துக்கு பைபிரீன் (Piperine) என்று பெயர்.

Action. Stimulant, Carminative.

செய்கை.—உஷ்ணகாரி, கர்ப்பவாதஹரகாரி.

உபயோகம்.—மிளகு மசாலையுடன் சேர்க்கப்படுகின்றது. இதற்கு சுரத் தைக் கண்டிக்கிற குணம் இருக்கிறதென்றும் தெரியவருகின்றது. ஔஷதங்களு க்கிருக்கிற துர்க்குணத்தை மிளகு மாற்றிவிடும். பிரமேகத்துக்கு மிளகைக்கொடுக் கலாம். களிம்பாகச்செய்து எச்சிற்றழும்புக்குத் தடவினால் குணமுண்டு; மிளகு சத் து குவைனாவுக்குப்பதிலாக, முறைக்காய்ச்சலுக்கு உபயோகப்படுகின்றது. இதில் ௨௰ - கிறேன் அளவுக்குக் கொடுக்கலாம்.

ஓ. அளவு.—மிளகுத்தூளில் ௫ - ௨௰ - கிறேன் அல்லது இன்னம் அதிகமாய் அக்கினிமந்தரோகத்துக்குக் கொடுக்கலாம்.

வாந்திபேதிக்கு மிளகுமாத்திரை.—மிளகு, பெருங்காயம், அபினி, வகை ௧-இ ௨௰- கிறேன்; இவைகளைச்சேர்த்து, ௰௨ - மாத்திரைகளாக்கிக்கொள்ளவேண்டும். இதில் ஒருமாத்திரையை, ௧ - ௧ - மணி நேரத்துக்கொருதரம், வாந்தியும் பேதியும் நிற் கிறவரையில் கொடுக்கவேண்டியது. ௭ - ௰௪ வயதுள்ளவர்களுக்கு, ௧ - மாத்திரை கொடுக்கலாம்.—பங்காளத்தில் இந்த மாத்திரைகளை உபயோகித்து, அநேகருக்கு சொஸ்தமானதாய்க் கண்டிருக்கின்றது.

சீதசுரத்துக்கு.—௪௰ - கிறேன் மிளகு, ௨௰ - கிறேன் பெருங்காயம், ௱ - கிறேன் கழற்சிப்பருப்பு இவைகளைத் தேன்விட்டு நன்றாய் இடித்து, ௩௰ – மாத்திரைகளாய்ச் செய்து சுரமில்லாதபோது, ௨ - மாத்திரை வீதம், தினத்துக்கு ௨ - ௩ தடவை கொ க்கலாம், குழந்தைகளுக்கு ௧ - மாத்திரை கொடுக்கலாம்.

தேமல்-படர்தாமரை இவைகளுக்கு.—௧ - அவுன்ஸ் மிளகுத்தூளை, ௪ - அவுன்ஸ் பசுவின் நெய்யுடன் மிஸ்ரமித்து, அந்தி சந்தி இரண்டு வேளையும் தடவிக்கொண்டுவர குணமாகும்.

பிரமேகத்துக்கு.—௰ - கிறேன் மிளகுத்தூளைத், தேனில் கலந்து, தினம் ௨ - தடவைக்கொடுக்கத் தீரும்.

## **PIPER LONGUM.** *Long Pepper.* (Dried unripe fruit.)

### லாங் பெப்பர். திப்பிலி. (ஓர்விதக்காய்.)

குணங்கள்.—திப்பிலியானது நீண்டு, மேலே மேடுகளாய் இருக்கும் ; இவைகளில் வித்துகள் இருக்கின்றன. இதற்குக் கடுங்காரமும், விருவிருப்பும், கொஞ்சம் வாசனையும் உண்டு. மிளகுக்கிருக்கிற குணங்களெல்லாம் இதற்கு இருக்கின்றன.

ACTION. Stimulant.

செய்கை.—உஷ்ணகாரி.

உபயோகம்.—திப்பிலியை மிளகுக்குப் பதிலாய் உபயோகிக்கலாம். இது, அனேககூட்டு வர்க்க ஔஷதங்களோடு சேருகின்றது. இது தனியாய் உபயோகப்படுத்துகிறதில்லை. தமிழ் வயித்தியத்தில், திப்பிலி, திப்பிலிக்கட்டை, திப்பிலிமூலம் இவைகள் உபயோகப்படுகின்றன. திப்பிலியை லேகியஞ்செய்து கொடுக்கலாம்.

ஓ. அளவு.—௫ - ௨௰ - கிறேன் அளவுக்குக் கொடுக்கலாம்.

திப்பிலிரஸாயனம்-செய்முறை.—திப்பிலி பலம் - ௰. மிளகு பலம் - ௫, சுக்கு பலம் - ௬, குரோசானி ஓமம், சோம்பு, சீரகம், சன்னராஷ்டகம், அம்பராஷ்டகம், தாளிசபத்திரி, லவங்கபத்திரி, லவங்கப்பட்டை, கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், லவங்கம், ஏலம், சித்திரமூலம், இவைகள் வகை ௧ - க்கு பலம் - ௧. இவைகளை இளவறுப்பாய் வறுத்து சூரணித்து, சமனெடை சருக்கரையைச் சேர்த்து தேன்விட்டு பிசைந்து, பீங்கானில் வைத்துக்கொண்டு, கொட்டைப்பாக்களவு, ௪௰ - நாள் சாப்பிட்டால் காசரோகமும், ௯௯ - சிலேத்தும ரோகங்களும், வயிற்றிலுண்டாகிற வாதரோகங்களும், இருமலும், வாந்தியுந்தீரும். இதனுடன் தாம்பிர சிந்தூரத்தைச் சேர்த்துக் கொடுக்கலாமென்றும் செப்பி இருக்கின்றது.

## **CUBEBA.** *Piper Cubeba. Cubeba Officinalis. Cubeb Pepper.* (Fruit or Berries.)

### குயுபெப்ஸ். வால்மிளகு. (உலர்ந்த காய்கள்.)

குணங்கள்.—வால்மிளகானது மிளகுப்பிரமாணம் இருக்கின்றது. மேல்தோல் சுருங்கிக் கறுத்து, உள்ளே வெளுத்து தைலமிருக்கும். காயில் காம்பு ஒட்டிக்கொண்டு வால்போல் இருப்பதால், வால்மிளகு என்று சொல்லப்படும். ஒரு மாதிரியான மெத்தவாசனையாய், காரமாய், விருவிருப்பாய், மணந்துகொண்டிருக்கும். வால்மிளகு சத்துக்கு, குபிபின் (Cubebin) என்று பெயர்.

ACTION. Stimulant, Carminative, Stomachic.

செய்கை.—உஷ்ணகாரி, கர்ப்பவாதஹரகாரி, ஜாடராக்கினிவர்த்தனகாரி.

உபயோகம்.—வால்மிளகைத் தாம்பூலத்துடன் வழக்கமாய்ப்போட்டுக்கொள்ளுவதுண்டு. நீர்த்தாரையிலிருந்து வடிகிற சீழை நிறுத்துகிற குணம் இருப்பதால், இதை வெள்ளைகண்டவர்களுக்கு மெத்த உபயோகிக்கக்கூடும். ரணம் ஆறினபிறகு இதை ஜாக்கிரதையாய்க்கொடுக்கவேண்டியது; இல்லாவிட்டால், நீர்த்தாரை எரிச்சலும், பீஜநோவுங்காணும். நாள்பட்ட மேகத்தைகுணப்படுத்துவது கடினம். ௩ - ௫ - நாளைக்கு அதிகமாய்க் கொடுத்தால், தேகத்தைக் கெடுக்கும். எலும்புருக்கி வியாதிக்கும் இதைக் கொடுக்கலாம்.

ஒ. அளவு.—வால்மிளகு தூளை, ௨௰ - கிறேன் முதல், ௨ - திராம் அளவுக்குத் தினத்துக்கு ௩ - ௪ - தடவை கொடுக்கலாம். புதுசாய் செய்ததூள் நல்லது, நாள் பட்டால் கெட்டுப்போகும். இதை பாலிலாவது, ஜலத்திலாவது, குங்கிலியத்தை லத்திலாவது கலந்து கொடுக்கலாம்.

## Oleum Cubebæ. *Oil of Cubebs.*

### ஆயல் ஆவ் குயுபெப்ஸ். வால்மிளகு தைலம்.

தைலங்களை இறக்கிற முறையாகவே வால்மிளகை வாலையிலிட்டு வடித்து, எடுத்துக்கொள்ளவேண்டியது. வால்மிளகுக்கு இருக்கிற குணங்களே, தைலத்துக்கும் இருக்கின்றன.

ஒ. அளவு.—௰ - ௩௰ - துளி அளவுக்கு ஜலத்தில் விட்டுக் கொஞ்சம் சருக்கரையைச்சேர்த்துக் கொடுக்கலாம்.

## Tinctura Cubebæ. *Tincture of Cubebs.*

### டிங்சர் ஆவ் குயுபெப்ஸ். வால்மிளகு பாவனத்திரவம்.

செய்முறை.—௪ - பவுன் வால்மிளகு தூளை, ௨ - பையின்ட் புரூவ் ஸ்பிரிட் என்னும் சாராயத்திலபோட்டு, எ - நாள் ஊறவைத்து வடிகட்டிக்கொள்ளவேண்டும்.

ஒ. அளவு.—பிரமேகத்துக்கு, ௧ - திராம் வீதம், தினத்துக்கு ௨ - ௩ - ஆவர்த்திக் கொடுக்கலாம்.

## MATICO. *Artanthe elongata.* (The leaves.)

### மெடிகொ. (இலைகள்.)

இந்த இலைக்கு அவர்ப்புக்குணம் இருப்பதால், ரத்தபீனசம்முதலிய ரத்தம்வடிதலுக்குப் போட்டால், ரத்தத்தை நிறுத்தும். சீதபேதி கழிச்சல் இவைகளுக்குக் கொடுக்கலாம்.

ஒ. அளவு.—வெந்நீர்க்கஷாயத்தில், ௧ - ௨ - அவுன்ஸ் வீதமும், பாவனத்திரவத்தில், ௧ - ௨ - திராம் வீதமும், உள்ளுக்குக் கொடுக்கலாம். ரத்தம் வடிகிற இடத்தின்மேல் தாராளமாய்ப் போடலாம்.

## CANNABIS SATIVA. *Indian Hemp. Ganjah.*

### இன்டியன் ஹெம்ப். கஞ்சா. (இலை. சத்து.)

குணங்கள்.—இந்தியா தேசத்தில் விளைகிற கஞ்சாவுக்கு, கெனேபிஸ் இன்டிக, (Cannabis Indica) என்றும், இங்கிலாந்து தேசத்தில் விளைகிறதற்கு, கெனேபிஸ்

ஸெடைவா (C. Sativa) என்றும் இங்கிலீஷில்பெயராகும். சிலர் இவ்விரண்டுக்கும்பேதமிருக்கிறதென்றும், சிலர் இல்லை என்றும் சொல்லுகிறார்கள். இந்தச் செடியிலிருந்து எடுக்கிற நார், கோணிப்பை முதலியவைகள் செய்ய உபயோகமாகின்றது. (௧) இலை முதலியவைகளில் இருக்கிற சத்தை எடுக்காமல், புஷ்பித்தபின்பு செடியை வெட்டி, உலரவைத்து, விற்கிறசரக்குக்கு, கஞ்சாவென்று பெயர். இதைமுக்கியமாய்ப் புகையிலையோடுசேர்த்துப் புகைபிடிக்க உபயோகப்படுத்துகிறார்கள். (௨) இலையும், பூவும் ஆகிய இரண்டும்கூடியசடைக்கு பங்கி, ஸப்ஜி, என்று பெயர். (௩) இலையிலும், புஷ்பத்திலும் இளந்தண்டிலும் இருந்து வடிகிற சத்துக்கு, சர்ரஸ் (Churrus) என்று பெயர். இங்கிலாண்டு தேசத்து கஞ்சாவில், இந்தச்சத்து வடிகிறதில்லை. இதை எடுக்கிற முறை எப்படியெனில், இளஞ்செடி நுனியை இரண்டு கைகளாலும் பற்றி, மெதுவாய்த் தேய்த்தால், அதிலிருக்கிற சத்து கைகளில் ஒட்டிக்கொள்ளும்; அதைச் சுறண்டி எடுத்துக்கொண்டு, உண்டை செய்து கடையில் விற்கிறார்கள்.

ACTION. Powerful Excitant, Narcotic.

செய்கை.—உச்சாககாரி, நித்திராகாரி.

உபயோகம்.—கஞ்சா சந்தோஷத்தையும் நித்திரையையும் உண்டாக்கும், கண்களுக்குத் தோற்றுதலைகளை தோற்றும்படிச் செய்விக்கும்; இடைவிடாமல் பேசுவிக்கும், ஆனந்தக்களிப்பை யுண்டாக்கும், நகைப்பு, ஆடல் பாடலுடன் கூத்தாடப்பண்ணும், வீரிய விர்த்தியையும் அதிக பசியையும் உண்டாக்கும், வேதனையைச் சாந்திபடுத்தும், வலிரோகங்களை நீக்கும். கஞ்சாவை வழக்கப்படுத்திய சிலருக்கு ஓர்வித உன்மத்தரோகம் காணுகின்றது. இதை அதிகமாய் சாப்பிட்டால், காடலெப்ஸி (Catalepsy) என்னும் ஓர்வித ஜந்நி உண்டாகின்றது; அது கண்டிருக்கிறபோது, காலையாவது, கையையாவது நாம் எடுத்து எவ்விதமாய் வைக்கின்றமோ, விழாமல் அப்படியே நிற்கும்; கண்தாரையை பெரிதாக்கும். இது அபினியைப்போல் நாக்கில் திரவமில்லாமல் செய்யாது; தீபனத்தை மந்தப்படுத்தாது; மலச்சிக்கலை மெத்தவும் உண்டாக்காது. கஞ்சாவைச் செவ்வையாய் பரிசைக்ஷ செய்த டாக்டர் ஒஷானஸி என்பவர், கஞ்சாவை இந்தியா தேசத்தில் கொடுபபதைப்பார்க்கிலும், இங்கிலாந்து தேசத்தில் அதிக அளவில் கொடுக்கவேண்டுமென்று கண்டிருக்கிறார். இவ்விடத்தில் க - கஒ - கிறேன் கஞ்சாசத்து போதுமானது; அவ்விடத்தில் ய - யஉ - கிறேன் இடைக்கு அதிகமாய்க் கொடுக்கவேண்டியதாய் இருக்கின்றது. கஞ்சாவுக்கு நித்திராகாரி, வேதனுசாந்திகாரி, அங்காகர்ஷணநாசகாரி இக்குணங்கள் இருக்கிறபடியால், நித்திரைபங்கம், சகிக்கக்கூடாதநோய், ரணஜந்நி, நாய்க்கடிஜந்நி, வாந்திபேதி இவைகளுக்குக்கொடுக்கலாம். பிரசவநோய் லேசாயிருக்கிறபோது இதைக் கொடுத்தால், நோயை அதிகப்படுத்தி விரைவில் பிண்டத்தை வெளிப்படுத்தும். பெரும்பாடுவியாதிக்கும் கொடுக்கலாம். கஞ்சாவைப் புகையிலையுடன் சேர்த்து, சாதாரணமாய் பைராகி முதலியவர்கள் புகை குடிக்கிறார்கள்.

## *Alcoholic Extract of Indian Hemp.*

## கஞ்சா சத்து.

செய்முறை.—உலர்ந்த கஞ்சாவை தேர்ந்ததாய் எடுத்து, ரெக்டிபைட் ஸ்பிரிட் என்னும் சாராயத்தில் போட்டு, ரோஜனசத்து முழுமையும் கரைந்துவிடுகி

றவரையில் காய்ச்சி, பிறகு அந்தத் திரவை எடுத்து ஜலயந்திரத்தில் வைத்து சுண்டக்காய்ச்சி, பதமானபிறகு எடுத்துக்கொள்ளவேண்டியது.

ஒ. அளவு.—௧ - முதல், ௫ - கிறேன் இடைக்கு, மாத்திரை செய்து கொடுக்கலாம்.

**Tinctura Cannabis Indicæ.** *Tincture of Indian Hemp.*

*டிங்சர் ஆவ் இன்டியன் ஹெம்ப். கஞ்சா பாவனத்திரவம்.*

PREP. (Purified Extract, ℥ss., Rectified Spirit, f℥x.) *Dose.* ♏x.—fʒj.

செய்முறை.—௨ - அவுன்ஸ் சுத்திசெய்த கஞ்சாசத்தில், ௰ - அவுன்ஸ் ரெக்டிபைட் ஸ்பிரிட் என்னும் சாராயத்தை விட்டு கரைத்துக்கொள்ளவேண்டியது. ௨௰ - துளியில், ௧ - கிறேன் சத்து இருக்கின்றது.

ஒ. அளவு.—௰ - துளி முதல், ௧ - திராம்வரையில் கொடுக்கலாம். இதை ஜலத்தில்விட்டு உடனே சாப்பிடவேண்டியது; இல்லாவிட்டால், சத்து பாத்திரத்தில் ஒட்டிக்கொள்ளும். டாக்டர் "ஒஷானஸி" என்பவர் ரணஜந்நி, நாய்க்கடி ஜந்நி இவைகளுக்கு ௧ - திராம்வீதம் ௨ - மணிநேரத்துக்கொருதரம், இசிவு நிற்கிறவரையிலாவது, அல்லது காடலெப்ஸி என்கிற ஸ்திதி பிறக்கிறவரையிலாவது கொடுத்து சிகிச்சைசெய்து இருக்கின்றார். வாந்திபேதிக்கு இதை ௰ - ௰௫ - துளி ௨ - மணிநேரத்துக்கொருதரம், விளாம்பிசின்பாகில் கலந்துகொடுக்கலாம்.

ஆயுர்வேதியர்கள், கஞ்சாவைச் சுத்திசெய்து, லேகியம் சூரணம், கிருதம் முதலிய ரூபங்களாய்ச்செய்து உபயோகிக்கிறார்கள்.

கஞ்சாசுத்தி.—௫ - பலம் கஞ்சாவை, விரை காம்பு இல்லாமல் ஆய்ந்து, ௧ - பானை ஜலத்தில் ௧ - இராமுழுமையும் ஊறவைத்து, காலையில் கஞ்சாவைக் கைகளால் நன்றாய்ப் பிசைந்தால், சத்து கைகளில் ஒட்டிக்கொள்ளும். பிறகு நீரை வடித்துவிட்டுக் கஞ்சாவை எடுத்துக்கொண்டு, மறுபடியும் புதுஜலத்தில் போட்டு, சாயரக்ஷவரையில் ஊறவைத்து, மறுபடியும் பிசைந்து கழுவவேண்டியது. இவ்விதமாய்க் காலையிலும் மாலையிலும், ௭ - ௯ - தரம் கழுவினால், அதிலிருக்கிற சத்து நீங்கிவிடும். பிறகு இலையை உலர்த்திக்கொண்டு, இஷ்டப்படி உபயோகப்படுத்துகிறார்கள். பாலிலாவது, நெய்யிலாவது, காய்ச்சி சுத்திசெய்கிறதும் உண்டு.

கஞ்சாவை அரைத்து ஜலத்தில் கலந்து, பால், சருக்கரை, ஜாதிக்காய் முதலிய மணமுள்ள சரக்குகளைச் சேர்த்து சாப்பிடுகிறார்கள். கஞ்சாவை மாஜனமாகச்செய்து சாப்பிடுவதும் ஒருமுறை. கஞ்சாவைப் பாலிற்போட்டுக் காய்ச்சி, தயிராக்கி வெண்ணெய் எடுத்து உருக்கி நெய்செய்து, உபயோகப்படுத்துகிறதும் உண்டு.

பூரணதிலேகியம்.—செய்முறை.—சுக்கு, திப்பிலி, தாளிசபத்திரி, கிராம்பு, லவங்கபத்திரி, சிறு லவங்கப்பட்டை, கசகசா, சோம்பு, ஏலம் - தும்பராஷ்டகம் - அதிமதுரம் - சீரகம் - சிறுநாவற்பூ - சுத்திசெய்த கஞ்சா - வகை ௧ - இ - பலம் ௧௨ ; மிளகு - தேன், வகை ௧ - இ பலம் - ௨௫ ; ஜாதிக்காய் - ஜாதிபத்திரி வகை ௧ - இ பலம் - ௨௬ ; சருக்கரை வீசை - ௲ ; நெய் பலம் - ௫ ; புளிப்பு நாரத்தை அல்லது, எலுமிச்சம்பழ ரசம் ஆழாக்கு - ௧௨. சூரணிக்கிற சரக்குகளை இளவறுப்பாக வறுத்துச் சூரணித்து சருக்கரையையும், பழரசத்தையும் பாகுசெ

ய்து, இந்தப்பாகில் ௯ சூரணத்தைப்போட்டுக் கிளறி, தேனையும், நெய்யையும்விட்டு மிஸ்ரமித்துக்கொள்ளவேண்டும். இதில் பிள்ளைகளுக்குச்சுண்டைக்காய்ப்பரிமாணமும், பெரியவர்களுக்குக் கொட்டைப்பாக்குப் பரிமாணமும், பக்குவமறிந்துகொடுத்தால், அஜீரணம், மந்தம், பசியில்லாமை, உஷ்ணபேதி, மாந்தம், வயிற்றிரச்சல் முதலியரோகங்கள் தீரும். “இது கைகண்டது.”

கஞ்சாவை விஷமிக்கும்படி சாப்பிட்டவர்களுக்கு, முன் அபினியைக்குறித்துச் சொல்லிய சிகிச்சைக் கிரமப்படியே, இதற்கும் செய்யவேண்டியது.

சுக்குக் கஷாயம், மிளகு கஷாயம், இவைகள் கஞ்சாவுக்கு முறியென்று கேள்வி.

**FICUS.** *Ficus Carica. The Common Fig.* (The Dried Fruit.)

சீமை அத்திப்பழம். (வற்றல்.)

இது பிரசித்தமாய் எல்லாருக்கும் தெரிந்த பதார்த்தம். இதற்கு மலத்தை உதைக்கிற குணம் இருக்கின்றது. சில கூட்டுமருந்துகளோடு இதைச் சேர்க்கக்கூடும்.

**GALLA.** *Quercus Infectoria. Galls. Nutgalls.*

கால்ஸ். கால்நட்ஸ். மாசக்காய்.

குணங்கள்.—ஸைனிப்ஸ் (Cynips) என்னும் வண்டு இனத்தில் பெண்வண்டானது, மாஸக்காய் செடியின் துளிரைத் துளைத்து அதில் முட்டை இடும். அப்போது துளிரில் இருந்து ரசம்வடிந்து காய்போலக் கட்டிக்கொள்ளும். முட்டை பொரித்து, குஞ்சு பெரிதாகி, காயைத் துளைத்துக்கொண்டு வெளிப்பட்டுவிடும். காயின்மேல் காணப்படுகிற துவாரங்களுக்குக் காரணம் இதுதான். காய் உருண்டு பளுவாய் மேலே மேடுகளாய் இருக்கும். மாசக்காயை எளிதில் சூரணிக்கலாம்; வாசனையில்லை; துவர்ப்பாய் இருக்கும்; இதில் டானிக் ஆஸிட், காலிக் ஆஸிட் என்கிற சத்துகள் இருக்கின்றன. துவாரமில்லாத காய்கள் நல்லன.

ACTION. Astringent.

செய்கை.—சங்கோசனகாரி.

உபயோகம்.—அதிசாரபேதி, ரத்தபேதி, சீதசுரம் இவைகளுக்கு உபயோகப்பட்டுவருகின்றது; ஆனால் முக்கியமாய் வாய் கொப்புளிக்கிற ஜலமாயும், இன்ஜெக்ஷனாயும் செய்து உபயோகப்படுத்தப்படும். வெள்ளை கண்டு விழுகிறவர்களுக்கு மாசக்காய்த்தூளில், ௨௰-கிறேன் இடைக்கு, தினத்துக்கு ௨-௫-தடவை கொடுக்கலாம். மாசக்காய்ப்பொடியை மூக்கில் நஸியமிட்டால் ரத்தபீனசம் நிற்கும். அபினி, ஊமத்தை முதலியவைகளை விஷமிக்கும்படி சாப்பிட்டுவிட்டால், இதைக் கொடுத்தால் மருந்தை முறித்துவிடும்.

ஓ. அளவு.—௮ - ௰௯ - அல்லது ௨௰ - கிறேன் கொடுக்கலாம்.

**Decoctum Gallæ.** *Decoction of Galls.*

டிகாக்ஷன் ஆவ் கால்ஸ். மாசக்காய்க் கஷாயம்.

செய்முறை.—௨௨ - அவுன்ஸ் பொடித்த மாசக்காயை, ௨ - பைபின்ட் ஜலத்திற்போட்டு, ௧ - பைபின்டாகக் காய்ச்சி வடிகட்டிக்கொள்ளவேண்டியது.

ஓ. அளவு.—௧ - ௨ - அவுன்ஸ் கொடுக்கலாம்.

## Tinctura Gallæ. *Tincture of Galls.*

டிஞ்சர் ஆவ் கால்ஸ். மாசக்காய்ப் பாவனத்திரவம்.

செய்முறை.—௫ - அவுன்ஸ் பொடிசெய்த மாசக்காயை, ௨ - பையின்ட் புரூவ் ஸ்பிரிட் என்னும் சாராயத்தில் போட்டு, எ - நாள் ஊறவைத்து வடிகட்டிக்கொள்ளவேண்டியது.

ஓ. அளவு.—௭ - ௨ - திராம் கொடுக்கலாம்.

## Unguentum Gallæ. *Ointment of Galls.*

ஆயின்ட்மென்ட் ஆவ் கால்ஸ். மாசக்காய்க் களிம்பு.

செய்முறை.—௧ - திராம் சன்னமாய் சூரணித்த மாசக்காய்த் தூளை, எ-திராம் வெள்ளை மெழுகு களிம்போடுசேர்த்து அரைத்துக்கொள்ளவேண்டியது.—இதை வெளி மூலத்துக்குத் தடவலாம்.

## Unguentum Gallæ Compositum. *Compound Ointment of Galls.*

கம்பவுன் ஆயின்ட்மென்ட் ஆவ் கால்ஸ். மாசக்காய்க் கலவைக் களிம்பு.

செய்முறை.—௬ - திராம் மாசக்காய்த்தூள், ௧௨ - திராம் அபினிப்பொடி, ௬ - அவுன்ஸ் பன்றிநெய் இவைகளைச்சேர்த்து அரைத்துக்கொள்ளவேண்டியது.

உபயோகம்.—இதை மூலத்துக்குத் தடவினால் நோயைத் தணிக்கும்; சீழையும் ரத்தத்தையும் வறட்டும். இதனுடன் மார்பியாவை, சீமை எண்ணெயில் கலந்து சேர்த்துக்கொண்டால், மெத்த நன்மை செய்யும்.

## Acidum Tannicum. *Tannic Acid or Tannin.* A crystalline acid prepared from the Oak-Gall.

டானிக் ஆஸிட். டானின்.

துவர்ப்புள்ள எல்லாப் பதார்த்தங்களிலும், டானிக் ஆஸிட் என்கிற சத்து இருக்கின்றது. இதைச் செய்கிற முறையை இங்கிலீஷ் புத்தகத்தைப் பார்வையிட்டால், விவரமாய்த் தெரியவரும். இந்தத் துவர்ப்பு உப்பு மாசக்காயில் இருந்து சேகரிக்கப்படுகின்றது.

குணங்கள்.—இது மஞ்சளும் வெள்ளையும் கலந்த சாயமாய், பிரகாசமாய், வாசனையில்லாததாய், கசப்பில்லாமல் துவர்ப்புமாத்திரம் உள்ளதாய் இருக்கும். காற்றுப்படவைத்தால், ஆக்ஸிஜென் என்கிற வாயுவைக் கிரகித்துக்கொண்டு, முழுதும் காலிக் ஆஸிட் என்னும் சத்தாய் மாறிவிடும். டானிக் ஆஸிட் என்கிற உப்பு ஜலத்தில் கரைந்துவிடும். சாராயத்தில் கொஞ்சமாய் கரையும்; எண்ணெய்களில் கரையாது; அன்னபேதியைச் சேர்த்தால், கறுப்பாகிவிடும். இதுதான் எழுதுகிறமை.

Action. Astringent.

செய்கை.—ஸங்கோசனகாரி.

உபயோகம்.—இரத்தப்பெருக்குக்கும், பெரும்பாட்டுக்கும், துர்ப்பலத்தால் காணுகிற பேதி வியர்வை இவைகளுக்கும் கொடுக்கலாம். அக்கினிமந்தரோகிகளுக்கு வெகு ஜாக்கிரதையாய்க் கொடுக்கவேண்டியது. அதிகமாய் சீழ்வடிகிற ரணங்களுக்குப் போடலாம்.

ஒ. அளவு.—ஒ - முதல், ௧ - ௨ - கிறேன் இடைக்கு, மாத்திரைச் செய்தாவது, ஜலத்தில் கரைத்தாவது கொடுக்கலாம்.

**Acidum Gallicum.** *Gallic Acid.* A crystalline acid prepared from the Oak-gall.

காலிக் ஆஸிட். மாசக்காயில் இருந்து எடுக்கிற ஓர்விதத் துவர்ப்பு உப்பு.

குணங்கள்.—இது பிரகாசமுள்ள வெள்ளையும் மஞ்சளும் கலந்தநிறமாய் இருக்கும்; காற்றில் கெடாது; வாசனை இல்லை; கொஞ்சம் துவர்ப்பாய் இருக்கும் பிறகு தித்திக்கும். அன்னபேதிபட்டால் கறுத்துவிடும்.

செய்கை.—அதிக துவர்ப்புள்ள பதார்த்தம்.

உபயோகம்.—ரத்தவமனம், ரத்தகாசம், ரத்தப்பிரமேஹம், பெரும்பாடு அதிகவியர்வை இவை முதலிய ரோகங்களுக்கு உபயோகப்படுத்தலாம். இது மூத்திரத்தில் இறங்கும்; அன்னபேதியை விட்டுப்பார்த்தால் தெரியவரும்.

ஒ. அளவு.—௩ - முதல், ௰ - கிறேன் அளவுக்கு, தினத்துக்கு, ௩ - தடவை கொடுக்கலாம்.

**ABIETIS RESINA.** *Thus. Resin of Abies excelsa and Pinus palustris. Spruce Fir.*

எபைடஸ்ரிஸைன.

இது ஒருவிதரோஜம், இளமஞ்சள் நிறமாய், கர்ப்பூரதைல வாசனையாய், காறலும் கசப்பும் உள்ளதாய் இருக்கும். இதை ஜலத்தில்போட்டு உருக்கி, துணியில் வடிகட்டிக்கொண்டதற்கு பர்கண்டி பிச். (Burgundy Pitch) என்று பெயர்.

**EMPLASTRUM PICIS.** *Burgundy Pitch Plaster. Warm Plaster.*

பர்கண்டி பிச் பிளாஸ்டர். வாரம்பிளாஸ்டர்.

PREP. (Prepared Burgundy Pitch, ℔ ij., Prepared Frankincense, ℔ j, Resin and Bees' Wax, ā ā ℥iv., Expressed Oil of Nutmegs, ℥j., Olive Oil, f℥ij., Water f℥ij.)

செய்முறை.—௨ - பவுன் சுத்திசெய்த பர்கண்டி பிச், ௧ - பவுன், சுத்திசெய்த குந்தரிகம் பிசின், ௪ - அவுன்ஸ் ரோஜனம், ௪ - அவுன்ஸ் மெழுகு. இவைகளைச் சேர்த்து உருக்கி, பிறகு ௧ - அவுன்ஸ், சாதிக்காய்த்தைலம், ௨ - அவுன்ஸ் ஆலிவ் ஆயல் என்னும் எண்ணெய், ௨ - அவுன்ஸ் ஜலம், இவைகளைச் சேர்த்து, இடைவிடாமல் துழவி, பதத்துக்குச் சுண்டக் காய்ச்சிக்கொள்ளவேண்டியது.

உபயோகம்.—இதைத் தோலில்தடவி மார்புக்குப்போட்டால் இருமல் தணியும். மூட்டு வீக்கங்களுக்கும் போடுவதுண்டு.

**RESINA.** *Resin. Rosin.*

ரிஸின். ரோஸின். ரோஜனம். டாமர்.

அனேக சாதிச்செடிகளில் இருந்து எடுக்கிற டர்பன்டயின் என்னும் சரக்கை, வடித்தால் எண்ணெய் பிரிந்துவிடும்; அடியில் நிற்பதே ரோஜனமாம்.

**Ceratum Resinæ.** *Resin Cerate. Basilicon Ointment.*
ரிஸின்ஸிரேட். பெஜிலிகன் ஆயின்ட்மென்ட். ரோஜன
இளகிய களிம்பு.

PREP. (Resin, ℥xv., Wax, ℥xv., Olive Oil, Oj.)

செய்முறை.—௰௫-அவுன்ஸ் ரோஜனம் ; ௰௫-அவுன்ஸ் மெழுகு ; இவைக ளைச் சிறுதீயிட்டெரித்து உருக்கி, பிறகு க - பையின்ட் சீமை எண்ணெயைச் சேர்த்து களிம்பு சூடா இருக்கிறபோதே, நார்த்துணியில் வடிகட்டிக்கொள்ளவேண்டியது.

ACTION. A mild Stimulant.

செய்கை, உபயோகம்.—சார்தமான உஷ்ணகாரி. இந்தக்களிம்பை ஆறு தவிரணங்களுக்கும், அழிபுண்களுக்கும் போட்டால் மெத்த சவுக்கியமுண்டாகும்.

**TEREBINTHINÆ OLEUM.** *Oil of Turpentine. Spirits of Turpentine.*

ஆயல் ஆவ் டர்பன்டயின். ஸ்பிரிட்ஸ் ஆவ் டர்பன்டயின்.
கர்ப்பூரத்தைலம்.

குணங்கள்.—இந்தத் தைலம் வெள்ளையாய், மெத்தவாசனையாய், விருவிருப்பும் கசப்பும் உள்ளதாய் இருக்கும் ; பற்றிக்கொண்டு எரியும், எரியும்போது அதிகமாய்க்கறுப்புப் புகைச்சல் உண்டாகும் ; ஜலத்தில் கொஞ்சமாயும், சாராயத்தில் அதிகமாயும் கரையும் ; எண்ணெயோடு மிஸ்ரமாகும் ; ரோஜனம் கொழுப்பு இவைகளைக் கரைத்துவிடும் ; காற்றுப்பட்டவைத்தால் ரோஜனம் உண்டாகும், ஆகையால் நாள்பட்ட தயிலங்களில், எப்போதும் ரோஜனச்சத்திருக்கின்றது. கறி உப்பு திராவகத்தைச் சேர்த்தால் ஒருவிதமான பதார்த்தம் உண்டாகின்றது. அதற்கு இங்கிலீஷில் ஆர்டிபிஷியல் காம்பர் (Artificial Camphor) என்று பெயர்;

PREP. Prepared from the Oleo-resin by Distillation.

செய்முறை.—டர்பன்டயின் என்கிற பதார்த்தத்துடன் ஜலம்சேர்த்து வாலையிலிட்டு எரித்துக் கர்ப்பூரத்தைலத்தை வடித்துக்கொள்ளவேண்டியது. அடியில் மஞ்சள் ரோஜனம் நிற்கும்

ACTION. *Externally,* Rubefacient, Counter-Irritant. *Internally,* Diuretic, Diaphoretic, Cathartic, Anthelmintic, Stimulant, also given as Astringent.

செய்கை.—மேலே தடவினால், சருமத்தை சிவப்பிக்கும், உள்ளிருக்கிற நோய்களை வெளிக்கு இழுக்கும். உள்ளுக்குக் கொடுத்தால், மூத்திரம் அதிகப்படும், வியர்வை காணும் பேதியாகும், கிருமிகள் வெளிப்படும், உஷ்ணம் செய்யும். ரத்தவடிதலை நிறுத்தவும் கொடுப்பதுண்டு.

USE. In Chronic Rheumatism, Lumbago, Sciatica, Passive Uterine Hæmorrhages, Deafness, Tape Worm, &c.

உபயோகம்.—கர்ப்பூரத்தயிலம் அனேக வியாதிகளுக்கு உபயோகமாகின்றது. மெத்தக்கொடுத்தால் பேதியாகும், கிருமிகளை வெளிப்படுத்தும். பேதியாகா

விட்டால் மூத்திரக்குண்டிக்காயில் அதிகரத்தம் சேர்ந்து நீர்க்கடுப்பு, அல்லது நீர் அடைப்புகாணும். வயிறுவிம்மலுக்கு இதை பேதிக்குக் கொடுக்கலாம். பிரஸவசுரத்துக்கு (Puerperal Fever) நல்லது. குறைந்த அளவில் இதை அனேக ரோகங்களுக்குக் கொடுக்கக்கூடும். நீர்க்கோவை நீரடைப்பு, இவைகளில் நீரை அதிகப்படுத்தவும், ரத்தபித்தரோகத்தில் (Internal Bleeding) ரத்தத்தை நிறுத்தவும், பிரமேகம் எனும்புருக்கி வியாதி இவைகளில் சீழை நிறுத்தவும் கொடுக்கக்கூடும். நேத்திர ரோகத்துக்கு (Inflammation of the eye) கொடுத்துக்கொண்டுவருகிறார்கள். குறும்பி சேர்ந்து செவிடுண்டானால், இதை காதில் விடலாம். கீல்வாதம், இடுப்புவலி முதலிய வாதநோய்களுக்குப் பூசலாம்.

ஒ. அளவு.—அ - முதல், ௫௰ - துளி கொடுத்தால் உஷ்ணம் செய்யும், மூத்திரத்தை அதிகப்படுத்தும்; ஒ - முதல், ௨ - அவுன்ஸ், கொடுத்தால் பேதியாகும், கிருமிகளை வெளிப்படுத்தும். சிற்றாமணக் கெண்ணெயுடன் கலந்து கொடுப்பது வழக்கம். இதை விளாம்பிசின் பாகுடனாவது, முட்டையின் கருவோடாவது சேர்த்துக்கொடுக்கலாம்.

## PIX LIQUIDA. *Tar. Pinus Sylvestris.*

டார். தார்.

குணங்கள்.—இது பிசுபிசுப்பாய் இளகலாய் தளமாய் கறுப்பாயிருக்கும்; இழுத்தால் நார்போல வரும்; மரங்களுக்குப் பூசினால் செல்லு அணுகாது.

செய்முறை.—பையின் உட் (Pine wood) என்னும் கட்டைத்துண்டுகளை அடுக்கிக் கொளுத்தினால், தார் அடியில் இறங்கும்; அதைக் குழாய்கள்வைத்து பீப்பாய்களில் சேகரித்துக்கொள்ளக்கூடும். இதை குழித்தயிலமிறக்குகிறவிதமாய் எடுக்க வேண்டும்.

செய்கை, உபயோகம்.—உஷ்ணகாரி. முன்னே க்ஷயரோகத்துக்கு உபயோகப்படுத்தினதுண்டு. வெந்நீரில்விட்டு ஆவியை உட்கொண்டால், இருமலைத்தணிக்கும். குஷ்டம், எச்சிற்றழும்பு, சொறிசிரங்கு முதலிய சருமரோகங்களுக்குப் பூசலாம்.

ஒ. அளவு.—ஒ - முதல் ௧ - திராம் கொடுக்கலாம்.

## FRANKINCENSE. *Pinus Excelsa, and Pinus Palustris.*

பிரான்கின்ஸென்ஸ். குந்திரிகம்.

குந்திரிகம் பிசினை உபயோகப்படுத்துவதற்கு முன் சுத்திசெய்துகொள்ள வேண்டியது. இது உஷ்ணகாரி. மேலுக்குமாத்திரம் உபயோகப்படுத்தப்படும்.

## JUNIPERUS. *Common Juniper. Juniperus Communis.* (The fruit.)

ஜூனிபர். (கனி.)

இந்தப் பதார்த்தத்துக்கு, மூத்திரத்தை அதிகப்படுத்துகிற குணம் இருக்கிறது. இதை நீர்க்கோவை ரோகத்துக்குக் கொடுக்கலாம். கனியை வாலையிலிட்டு வடித்து தைலம் (Oil of Juniper) எடுக்கப்படும். வெந்நீரில்போட்டுக் கஷாயஞ் செய்து கொடுக்கலாம். தைலத்தில், ௨ - ௰ - துளியும், வெந்நீர்க்கஷாயத்தில், ௧ - ௪ - அவுன்சும் கொடுக்கலாம்.

**SABINA.** *Juniperus Sabina. Savin or Savine.*

ஸெவைன்.

குணங்கள்.—இந்தச் செடியின் தளிர்கள் பச்சையாய் இருக்கும், துர்வாசனை வீசும்; இதில் தைலம் இருக்கின்றது.

செய்கை. உபயோகம்.—எரிச்சலைத் தரும், அளவுக் கதிகப்பட்டால் விஷமிருக்கும். கொஞ்சமாய்க் கொடுத்தால் உஷ்ணிக்கும், மூத்திரத்தை அதிகப்படுத்தும், ருதகத்தைத் தாராளப்படுத்தும். பிண்டத்தை வெளிப்படுத்த சிலவேளை எடுத்துக்கொள்ளுவதுண்டு.

OLEUM SABINÆ. *Savin Oil.* ஸெவைன் ஆயல். ஸெவைன் தைலம். தளிர்களை ஜலத்தில்போட்டு வாலையிலிட்டு வடித்துக்கொள்ளப்படும். இதில் ௨-௫-துளி சருக்கரையில் வைத்துக் கொடுக்கலாம்.

UNGUENTUM SABINÆ. *Savine Cerate or Ointment.* ஸெவைன் ஆயின்ட்மென்ட். ஸெவைன் களிம்பு. செய்முறை. உபயோகம்.—௧-பவுன் பன்றி நெய்யில், ௩-அவுன்ஸ் வெள்ளை மெழுகு சேர்த்து உருக்கி, ௨-பவுன் புதுசாய் இடித்த ஸெவையின் என்னும் இலைப் பொடியைச் சேர்த்து, நார்த்துணியில் வடிகட்டிக்கொள்ளவேண்டும். இதுபச்சை நிறமாய் இருக்கும். இதை பிளிஸ்டர்செய்த ரணத்தின்மேல் துணியில் தடவிப் போட்டால், ரணம் சீக்கிரத்தில் ஆறுது.

PHŒNIX DACTYLIFERA. *The Date tree.* பேரீச்சன். கஜ்ஜூர். பேரீச்சம் பழம் அரேபியா தேசத்தில் விளைந்து இவ்விடத்தில் வருகின்றது. அவ்விடத்தில் அனேகர் இதையே சாப்பிட்டு ஜீவிக்கிறார்கள். இதை மருந்தாக உபயோகப் படுத்து கிறதில்லை. இதற்கு அரோசகம், சுரம், தாகம், பித்தம், முதலியவைகள் போகுதென்று தமிழ் சாஸ்திரங்களில் கண்டிருக்கின்றது.

PHŒNIX SYLVESTRIS. *Wild date.* நாட்டு ஈச்சன். ஈச்சன்கள்ளுக்கு அருசி, கிரிச்சிரம், மேகம் இவைகள் போகுதென்றும், ஈச்சன் வெல்லத்துக்கு பித்தம் போகுதென்றும் கண்டிருக்கின்றது.

COCOS NUCIFERA. *Cocoa-Nut Palm.* தென்னமரம். தென்னங்கள்ளை அரிசிமாவோடு சேர்த்து போல்டீஸ் செய்து ரணங்களுக்குப் போட்டால், துர்வாசனையை எடுத்துவிடும். தேங்காய் நெய் (எண்ணெய்) அநேக காரியங்களுக்கு உபயோகமாகின்றது. தேங்காய்ப் பாலைக் கொப்புளித்தால், வாய் ரணம் ஆறும். இளநீர் மூத்திரத்தை அதிகப்படுத்தும், தாகத்தை அடக்கும். தென்னம் பூவுக்கு, பெரும்பாடு, ரத்தபித்தம், மேகம் இவைகள் போகுதென்று தமிழ் நூல்களில் கண்டிருக்கின்றது. தேங்காய் போஜன பதார்த்தங்களோடு சேர்க்கப்படுகின்றது.

BORASSUS FLABELLIFORMIS. *The Thar Palm. Palmyra Palm.* பனைமரம். இந்த மரம் அனேக வேலைகளுக்கு உபயோகமாகின்றது. மெத்தப் பிரயோஜனமுள்ளது. கற்பக விருக்ஷத்துக்குச் சமானமென்று சொல்லலாம். பனையின் மதுவை (பனங்கள்) அதிகாலையில் குடித்தால், இனிப்பாயிருக்கும்; விடாய் தணியும்; ஆனால் தென்னங்கள்ளுக்கு இது தாழ்ச்சி, மலத்தை உதைக்கும்,

வெய்யில் எறிஞல் புளிப்பேறிவிடும், அதைச்சாப்பிட்டால் வெறிகாணும். குடிவை க்குச் சுண்ணும்புதடவி எடுக்கிற கள்ளுக்கு, பதனி பனஞ்சாறு என்று பெயர். ப னைவெல்லத்துக்கு, அருசி, கபம், குன்மம், ஜந்நி வாதபித்தம் இவைகள் போமென் றும், பனங்கற்கண்டுக்கு தாகம் வெப்பம நீர்ச்சுருக்கு மேக அனல் இவைகள் போ மென்றும் கண்டிருக்கின்றது. பனம்பழமும், பனங்கிழங்கும் தேக சவுக்கியத்தைக் கெடுக்கும். பனநுங்கு தேகத்துக்குக் குளிர்ச்சி. பனம்பஞ்சை, ரத்தத்தை நிறு த்த உபயோகப்படுத்துகிருர்கள்.

ARECA CATECHU. *The Catechu or Betle-Nut Palm.* பாக்குமர ம். கமுகு. பாக்கில் துவர்ப்புச்சத்து இருப்பதால், வெற்றிலையுடன் சேர்த்துப் போ ட்டுக்கொள்ளப்படுகின்றது. பாக்கை ஜலத்தில் வேகவைத்து அடியில் நிற்கிற நீரைச் சுண்டக் காய்ச்சி, இரண்டுவித பதார்த்தங்கள் எடுக்கக்கூடும்; அவைகளுக்குக் கா ய்ச்சுக்கட்டி, கற்றைக்காம்பு என்றுபெயர். கற்றைக்காம்பைத் தாம்பூலத்துடன்தரித் துக்கொள்ளுகிருர்கள், காய்ச்சுக்கட்டியை அதிசாரபேதிக்குக் கொடுக்கலாம்; விரண ங்களின் மேல் தூவலாம். பாக்கைச் சுட்டுக் கரிசெய்து, பல் துலக்குவதுண்டு. களிப் பாக்குக்கு, அரோசகம் பித்தம் இவைகள் போம் என்றும், தொண்டையில் கபம், பேதி இவைகள் உண்டாகுமென்றும், கொட்டைப்பாக்குக்கு கோழை, சுரம், மலம், மூ லக்கிருமி இவைகள் போமென்றும், சோபை உண்டாகுமென்றும், மருந்துண்ட வாய் க்கு ஆகுமென்றும் செப்பி இருக்கின்றது.

SAGO. *Sagus lævis.* (*Rumph.*) ஸேகோ. ஜவ்வரிசி. சப்ரிசி. உபயோ கம்.—நோயாளிகளுக்கு இது தகுதியான ஆகாரம்; ஆனல் அரோரூட், டாபியோ கா இவைகளுக்கு இது தாழ்வு. இதைக் கஞ்சியாகக் காய்ச்சி பால்சருக்கரை சேர் த்துக்கொடுக்கலாம்.

**ALLIUM.** *Allium sativum. Garlic.* (Bulb.)

கார்லிக். வெள்ளைப்பூண்டு. வெள்ளுள்ளி.

ACTION. Rubefacient, Stimulant, Expectorant. Diuretic, Anthelmintic.

செய்கை.—வெள்ளைப்பூண்டை அரைத்து மேலே போட்டால், போட்டவி டம் சிவக்கும்; உள்ளுக்குக் கொடுத்தால் உஷ்ணம் செய்யும், கபத்தை வெளிப்படு த்தும், மூத்திரத்தை அதிகப்படுத்தும், கிருமிகளைப்போக்கும்.

உபயோகம்.—வெங்காயத்துக்கு வெள்ளைப்பூண்டு காரம் அதிகம். பூண்டை குழம்பு செய்து சாப்பிட்டால் தேகத்துக்கு சவுக்கியம். காது வலி செவிடு இவை களுக்கு ரசத்தை காதில்விடலாம். கட்டிகளுக்கு இதை அரைத்து போல்டீஸ்செ ய்து போட்டால் கரையும். மசாலையோடு சேர்க்கலாகும். நாள்பட்ட இருமல், சுவா சகாசம், கிருமிரோகம் இவைகளுக்குக் கொடுக்கலாம்.

௯. அளவு.—௧ - ௨ - கிராம் இடைக்கு தனியாயாவது, சவுக்காரத்தைச் சேர்த்தாவது கொடுக்கலாம். வெள்ளைப்பூண்டு ரசத்தில் ௰ - ௬௰ - துளி சருக்கரை யில் விட்டுக்கொடுக்கலாம். ௧ - அவுன்ஸ் பூண்டை, ௬ - அவுன்ஸ் வெந்நீரிலாவது, ௨ - ௬ - அவுன்ஸ் பாலிலாவது போட்டுக் கஷாயஞ்செய்து தினத்துக்கு - ௨ - ௬ தட வை கொடுக்கலாம்.

ALLIUM CEPA. *The Common Onion.* அனியன். வெங்காயம். ஈருள்ளி.—வெள்ளைப்பூண்டுக்குடைய குணங்களே, வெங்காயத்துக்கும் இருக்கின்றன.

**SCILLA.** *Scilla maritima. Squill. Sea Onion.* (Fresh Bulb.)
ஸ்குவில். நரிவெங்காயம். பேயுள்ளி.

குணங்கள்.—இது சிறிதும் பெரிதுமாய் உருண்டையாய் வெங்காயத்தைப் போல் புரைகள் இருக்கும்; அண்டித்து உலர்ந்த பத்தைகள், மஞ்சள் வருணமாய் இருக்கும், காற்றுப்பட்டால் ஈரமாகி வளையும்; வாசனையில்லை; குமட்டலையுடைய தாயுமிருக்கும்.

ACTION. An Irritant Poison. In small doses, Expectorant, Diuretic, and in larger Emetic, and Cathartic.

செய்கை.—அளவுக்கதிகமானால் விஷமிக்கும். குறைந்த அளவில் கொடுத்தால் கபத்தை வெளிப்படுத்தும் மூத்திரத்தை அதிகப்படுத்தும்; அதிக அளவில் கொடுத்தால், வாந்தியாகும், பேதியாகும்.

USE. In Dropsy, and Chronic Bronchitis.

உபயோகம்.—நீர்க்கோவை ரோகத்துக்கு, டிஜிடேலிஸ், ரஸபஸ்மம், இவைகளோடு சேர்த்துக் கொடுத்தால், மூத்திரத்தை அதிகப்படுத்தும். தாபகுணங்கள் இருக்கிறபோது இதைக் கொடுக்கலாகாது. இருமலுக்கு இபிகாக் முதலிய கபத்தைக் கண்டிக்கிற மருந்துகளோடு சேர்த்துக்கொடுக்கவேண்டியது. இதை வாந்திக்காவது, பேதிக்காவது கொடுப்பது அரிது.

ஔ. அளவு.—சூரணத்தில், க - ௩-கிறேன் கொடுக்கலாம். ௰ - ௰௫ - கிறேன் கொடுத்தால் வாந்தியாகும்.

**Pilula Scillæ Composita.** *Compound Squill Pill.*
கம்பவுன் ஸ்குவில் பில். நரிவெங்காயக்கலவை மெழுகு.

PREP. (Squill, ʒj., Ginger, Ammoniacum āā, ʒij., Soap, ʒiij., Treacle ʒi.)

செய்முறை.—க - திராம், அப்போது உலரவைத்து இடித்த நரிவெங்காயத்தூள், உ - திராம் சுக்குத்தூள், உ - திராம் அம்மோனியாகம்தூள்; இவைகளை மிஸ்ரமித்து, பிறகு ௩ - திராம் இளகிய சவுக்காரம், க - திராம் வெல்லப்பாகு, இவைகளைச் சேர்த்துப் பதத்துக்கு அரைத்துக்கொள்ளவேண்டியது.

ஔ. அளவு.—௫ - ௰௫ - கிறேன் இடைக்குக் கொடுத்தால், கபத்தைக் கண்டிக்கும்.

**Syrupus Scillæ.** *Syrup of Squill.*
ஸிரப் ஆவ் ஸ்குவில். நரிவெங்காயப் பாணிதம்.

செய்முறை.—எ - பவுன் பொடிசெய்த வெள்ளைச் சருக்கரையை, ௩ - பையின்ட் நரிவெங்காயக் காடியில் போட்டுக் கரைத்து, சிறுதிப்படும்படிச் சுடவைத்துத் துழவிக் கரைத்துக்கொள்ளவேண்டியது.

ஔ. அளவு.—க - உ - திராம் அளவுக்குக் கொடுத்தால், கபத்தை வெளிப்படுத்தும். குழந்தைகளுக்கு க - திராம் வீதம், வாந்திக்குக் கொடுக்கக்கூடும்.

**Tinctura Scillæ.** *Tincture of Squill.*

டிங்சர் ஆவ் ஸ்குவில். நரிவெங்காயப் பாவனத்திரவம்.

செய்முறை.—௫ - அவுன்ஸ் உலர்ந்து புதுசாய் இருக்கிற நரிவெங்காயத்தை, உ - பையின்ட் புரூவ் ஸ்பிரிட் என்னும் சாராயத்தில் போட்டு, எ - நாள் ஊறவைத்து வடிகட்டிக்கொள்ளவேண்டியது.

ஒ. அளவு.—ம - ௩ம - துளி விதம் கொடுத்தால், கபத்தைக் கண்டிக்கும், மூத்திரத்தை அதிகப்படுத்தும்.

## ALOES.

ஆலோஸ். மூஷாம்பரம். கரியபோளம்.

குணங்கள்.—கற்றாழையினத்தைச் சேர்ந்த சில செடிகளில் இருந்து எடுத்து உலரவைத்துக்கொள்ளுகிற ஒருவித பதார்த்தம். இதில் ஸொகொட்ரையின் (Socotrine), ஹிப்பாடிக் (Hepatic), பார்பெடோஸ் (Barbadoes), கேப் ஆலோஸ் (Cape Aloes) என, முக்கியமாய் ச - சாதி கரியபோளங்கள் இருக்கின்றன. இவைகள் ஒன்றுக்கொன்று நிறத்தில் மாத்திரம் வித்தியாசப்படுமேயொழிய, செய்கையில் பேதமில்லை.

ACTION. In small doses it is Tonic, Stomachic; in larger Cathartic.

செய்கை.—குறைந்த அளவில் கொடுத்தால், தீபனத்தை அதிகப்படுத்தும் வலுவைக்கொடுக்கும், அதிகமாய்க் கொடுத்தால் பேதியாகும்.

உபயோகம்.—கரியபோளம் பெருங்குடலிலும், ஆஸனத்திலும் போய் வியாபித்து குணத்தைக் காட்டுகின்றது. குறைந்த அளவில் கொடுத்தால் தீபனத்தை அதிகப்படுத்தும்; குடல்களுக்குப் பலத்தைத் தரும். இது மலக்குடலில் (Rectum) சென்று உஷ்ணிப்பதால், மூலரோகிகளுக்கும் கருப்பிணிகளுக்கும், வெகு ஜாக்கிரதையாய்க் கொடுக்கவேண்டியது; இதன்வேகம் கருப்பைக்குப்போய் பற்றுகிறபடியால், ருதுவர்த்தனகாரி என்றும் சொல்லப்படும். மலச்சிக்கல், அக்கினிமந்தம், காமாலை இவைகளுக்குக் கொடுக்கலாம்.

**Extractum Aloes.** *Extract of Aloes.*

எகிஸ்டிராக்ட் ஆவ் ஆலோஸ். மூஷாம்பரச்சத்து.

செய்முறை.—ம௫ - அவுன்ஸ் ஸொகொட்ரைன் ஆலோஸ் என்னும் மூஷாம்பரத்தை, க - காலன் வெந்நீரில் போட்டு, கிறுதிப்பட எரித்து ௩ - நாள் ஊறவைத்து, வடிகட்டி, வண்டல் அடியில் படியும்படி அசையாமல் வைத்து, தெளிந்த நீரை இறுத்துவிட்டு, பதத்துக்குச் சுண்டக்காய்ச்சிக் கொள்ளவேண்டியது. ஒ. அளவு.—௫ - ம௫ - கிறேன் கொடுத்தால், பேதியாகும்.

**Pilula Aloes Composita.** *Compound Aloes Pill.*

கம்பவுன் ஆலோஸ் பில். மூஷாம்பரக் கலவைமெழுகு.

PREP. (Powdered Socotrine Aloes, ℥j., Extract. Gentian, ℥ss., Oil of Caraway, ♏xl., Treacle, q. s.)

செய்முறை.—க - அவுன்ஸ், மூஷாம்பரச்சூரணம், ௧ - அவுன்ஸ், ஜென்ஷன் சத்து, சம - அளி காரவே தைலம், தேவையான வெல்லப்பாகு. இவைகளைச்சே ர்த்து மெழுகு பதத்துக்கு இடித்துக்கொள்ளவேண்டியது. ஒ. அளவு.—ம - கம - கிறேன் கொடுக்கலாம்.

**Pilula Aloes cum Myrrha.** *Aloes and Myrrh Pill.*
ஆலோஸ் அன்ட் மர் பில். வெள்ளாத்திப்போளம் சேர்ந்த மூஷாம்பர மெழுகு.

PREP. (Powdered Socotrine or Hepatic Aloes, ℥ss., Saffron, powdered Myrrh, and Soft Soap, āā ʒij., Treacle q. s.)

செய்முறை.—௧ - அவுன்ஸ் மூஷாம்பரம், உ - திராம் குங்குமப்பூ, உ - தி ராம் வெள்ளாத்திப்போளத்தூள், உ - திராம் இளகிய சவுக்காரம், வெல்லப்பாகு தேவையானது. இவைகளைச் சேர்த்து, மெழுகுபதத்துக்கு இடித்துக்கொள்ளவே ண்டியது. ஒ. அளவு.—ம - உம - கிறேன் கொடுத்தால் பேதியாகும்.

**Decoctum Aloes Compositum.** *Compound Decoction of Aloes.*
கம்பவுன் டிகாக்ஷன் ஆவ் ஆலோஸ். மூஷாம்பரக் கலவைக் கஷாயம்.

PREP. (Extract of Liquorice, ʒvij, Carbonate of Potash, ʒj., Extract of Alces, Myrrh, Saffron, āā ʒjss., Distilled Water, Oiss., Compound Tincture of Cardamoms. f℥vij.)

செய்முறை.—எ - திராம் அதிமதுரச்சத்து, க - திராம் கார்பொனேட் ஆவ் பொடாஷ், க௧ - திராம் மூஷாம்பரச்சத்து, க௧ - திராம் வெள்ளாத்திப்போள த்தூள், க௧ - திராம் குங்குமப்பூ, இவைகளை க௧ - பையின்ட் ஆவிநீரில்போட்டு, க - பையின்டாகச் சுண்டக்காய்ச்சி வடிகட்டி, இதில் எ - அவுன்ஸ் ஏலரிசி மிஸ்ரமபாவ னத்திரவத்தைச் சேர்த்துக்கொள்ளவேண்டியது. ஒ. அளவு.—௧ - முதல், உ - அவு ன்ஸ் கொடுத்தால் பேதியாகும். ருதகத்தைக் கிரமப்படுத்தும்.

**Tinctura Aloes.** *Tincture of Aloes.*
டிங்சர் ஆவ் ஆலோஸ். மூஷாம்பரப் பாவனத்திரவம்.

செய்முறை.—க - அவுன்ஸ் மூஷாம்பரத்தைப்பொடிசெய்து, க௧ - பையின் ட் ஆவிநீர், ௧ - பையின்ட் ரெக்டிபையிட் ஸ்பிரிட் இவைகளில்போட்டு, எ - நாள் ஊறவைத்து, பிறகு ௩ - அவுன்ஸ் அதிமதுரச் சத்தைக் கரைத்து வடிகட்டிக்கொள் ளவேண்டியது. ஒ. அளவு.—௧ - உ - திராம் கொடுக்கலாம்.

**COLCHICUM.** *Meadow Saffron.* (Corm and Seeds.)
கால்சிகம். (கிழங்கு. விரை.)

குணங்கள்.—இந்தக்கிழங்கு பச்சையாய் இருக்கிறபோது, வெள்ளையாய் இருக்கும், பால்வடியும், மேலே சவ்வுமூடிக்கொண்டு இருக்கும், இதை நீக்கி உலர வைத்தால் பழுப்புநிறமாகிவிடும். கிழங்கு வில்லைகளாய்த் தறித்து விற்கப்படுகின் றது. விரைகளும் அவுஷதத்துக்கு உபயோகமாகின்றன.

ACTION. Cathartic, Diuretic, Diaphoretic, Sedative, Anodyne.

செய்கை.—விரேசனகாரி, மூத்திரவர்த்தனகாரி, சுவேதகாரி, சமனகாரி, வேதனுசாந்திகாரி.

USE. In Gout, and Rheumatism.

உபயோகம்.—கால்சிகம் என்பதை அதிகமாய் சாப்பிட்டால் விஷமித்துக் கொல்லும்; இது முக்கியமாய் கணுவாதரோகம், குலைக்கட்டு இவைகளுக்குக் கொடுக்கப்படுகின்றது.

ஔ. அளவு.—கிழங்கையாவது, விரையின் தூளையாவது க - ௫ - கிறேன் கொடுக்கலாம்.

**Extractum Colchici.** *Extract of Colchicum.*

எக்ஸ்டிராக்ட் ஆவ் கால்சிகம்.

செய்முறை.—ஆகொனைட் சத்தை (Extr. Aconiti) செய்கிற முறையாய், பச்சைக்கிழங்கைப் பக்குவப்படுத்தி, சேகரிக்கக்கூடும். ஔ. அளவு.—க - கிறேன் இடைக்கு, ௩ - ௪ - மணி நேரத்துக்கொருதரம் கொடுக்கலாம்.

**Extractum Colchici Aceticum.** *Acetic Extract of Colchicum.*

அஸிடிக் எக்ஸ்டிராக்ட் ஆவ் கால்சிகம்.

செய்முறை.—க - பவுன் கால்சிகம் என்னும் பச்சைக்கிழங்கை, நொறுக்கி, ௩ - அவுன்ஸ அஸிடிக் ஆஸிட் என்னும் காடியைக் கொஞ்சங் கொஞ்சமாய் விட்டு, ரஸத்தைப்பிழிந்து வடிகட்டாமல், பதத்துக்குச் சுண்டக் காய்ச்சிக்கொள்ளவேண்டியது. ஔ. அளவு.—க - ௩ - கிறேன் இடைக்குக் கணுவாதம் முடக்குவாதம், இவைகளுக்கு, தினத்துக்கு ௩ - ௪ - தடவை கொடுத்தால், வியாதியைக்கேட்கும்.

**Vinum Colchici.** *Wine of Colchicum.*

ஒயின் ஆவ் கால்சிகம்.

செய்முறை.—அ - அவுன்ஸ் உலர்ந்த கால்சிகம் பத்தைகளை, உ - பையின்ட் ஷெரி ஒயின் என்னும் சாராயத்தில் போட்டு, எ - நாள் ஊறவைத்து, வடிகட்டிக் கொள்ளவேண்டியது. ஔ. அளவு.—ய - மினம் முதல், க - திராம் கொடுக்கலாம்.

**Tinctura Colchici.** *Tincture of the Seeds of Colchicum.*

டிங்சர் ஆவ் தி ஸீட்ஸ் ஆவ் கால்சிகம். கால்சிகப் பாவனத்திரவம்.

செய்முறை.—௫ - அவுன்ஸ் நொறுக்கிய கால்சிகம் விதையை, உ - பையின்ட் புரூவ் ஸ்பிரிட் என்னும் சாராயத்தில் போட்டு, எ - நாள் ஊறவைத்து, வடிகட்டிக் கொள்ளவேண்டியது. ஔ. அளவு.—ய௫ - மினம் முதல், க - திராம் கொடுக்கலாம்.

**SARSA OR SARZA.** *Sarsaparilla. Smilax Officinalis.* (The Root.)

ஸார்ஸபெரில்ல. சீமை நன்னாரிவேர். (வேர்.)

குணங்கள்.—இந்த வேரில் அனேக சாதிகளுண்டு; நீளத்திலும் பருமனிலும், பெரிசும் சிறுசுமாய் இருக்கும், தித்திக்கும். இதனுடன் வேறு வேர்கள்க் கலந்து விற்கப்படும்,

ACTION. Alterative, Diaphoretic.

செய்கை. உபயோகம்.—வியதாபேதகாரி, சுவேதகாரி, சிலவேளை குமட்டலும் வாந்தியும் காணும்; இது தேகத்துக்கு வலுவைக் கொடுத்து புஷ்டியாக்கும். மேகரோகங்களுக்கும், கண்டமாலைரோகத்துக்கும் கொடுக்கலாம்.

**Decoctum Sarzæ.** *Decoction of Sarsaparilla.*

டிகாக்ஷன் ஆவ் ஸார்ஸபெரில்ல. சீமை நன்னாரிவேர்க் கஷாயம்.

செய்முறை.—௰ - அவுன்ஸ் சீமை நன்னாரிவேரை, ௪ - பையிண்ட் ஆவிநீரில் போட்டு, ௨ - பையின்டாகச் சுண்டக்காய்ச்சி வடிகட்டிக் கொள்ளவேண்டியது. ஒ. அளவு.—௫ - ௯ - அவுன்ஸ் கொடுக்கலாம்.

**Decoctum Sarzæ Compositum.** *Compound Decoction of Sarsaparilla.*

கம்பவுன் டிகாக்ஷன் ஆவ் ஸார்ஸபெரில்ல. சீமை நன்னாரிவேர்க் கலவைக் கஷாயம்.

PREP. (Boiling Decoction of Sarza, Oiv., Sassafras, Guaiacum wood, Liquorice root, ā ā 3x., Mezereon, 3iij.)

செய்முறை.—௪ - பையின்ட் கொதிக்கிற சீமை நன்னாரிவேர்க் கஷாயத்தில், ஸாஸபிராஸ், குவயாகம், அதிமதுரம், இவைகள் வகை ௧௰ - திராம், மெசீரியன் ௩ - திராம், இவைகளைப் போட்டு, ௨ - மணிநேரம் காய்ச்சி, வடிகட்டிக்கொள்ளவேண்டியது. ஒ. அளவு.—௫ - ௯ - அவுன்ஸ் அளவுக்கு, தினத்துக்கு, ௨ - ௩ - தடவை கொடுத்தால், நாள்பட்ட வியாதிகளை ஸொஸ்தப்படுத்தும்.

**Syrupus Sarzaæ.** *Syrup of Sarsaparilla.*

ஸிரப் ஆவ் ஸார்ஸபெரில்ல. சீமை நன்னாரிவேர்ப் பாணிதம்.

செய்முறை.—௰௨ - பவுன் சீமை நன்னாரிவேரை, ௨ - காலன் ஆவிநீரில் போட்டு, ௧-காலனுக்குச்சுண்டக்காய்ச்சி, இறுத்துச்சூடாயிருக்கிறபோதே வடிகட்டி, மறுபடியும் வேரில், ௧ - காலன் ஜலத்தைவிட்டு, ௨ - காலனுக்குச் சுண்டக்காய்ச்சி வடிகட்டி, இரண்டையும் ஒன்றாய்ச்சேர்த்து, ௨ - பையின்டுக்குச் சுண்டவைத்து, ௰௮ - அவுன்ஸ் சருக்கரையைப் போட்டுக் கரைத்துக்கொண்டு, முடிவில் குளிர்ந்தபிறகு, ௨ - அவுன்ஸ் ரெக்டிபைட் ஸ்பிரிட் என்னும் சாராயத்தை விட்டுக் கலந்துகொள்ள வேண்டியது. ஒ. அளவு.—௪ - திராம் அளவுக்கு ஜலத்தில் விட்டாவது, கஷாயத்தில் விட்டாவது கொடுக்கலாம்.

**SALEP.** (The Dried root of Orchis mascula.)

ஸெல்ப். சாலாமிசிரி. (உலர்ந்தவேர்,)

இது பெர்ஷியாதேசத்தில் விளைகின்றது. மகமதியர்கள் இதை விசேஷித்து உபயோகப்படுத்துகிறார்கள். ஐரோப்பியர்கள் உபயோகப்படுத்துகிறது அரிது. இது, உப்புத்தண்ணீரில் இருக்கிற உப்பை எடுத்துவிடுகிறதென்று செப்பிபி

ருக்கின்றது. இவிடத்தில் இதை பலம் வருகிறதற்குக் கொடுக்கிறார்கள். மகமதியர்கள் க்ஷயத்துக்கு உபயோகிக்கிறார்கள். இது குளிர்ந்த ஜலத்தில் கரையாது, கொதிக்கிற ஜலத்தில் கரையும். இதை ஏந்திரத்தில்போட்டு அரைத்து மாவாக்கி, ஜலத்தில் போட்டுக் காய்ச்சி கஞ்சிசெய்து தேன்விட்டுக் கலந்து கொடுக்கலாம். ௧ - அவுன்ஸ் மாவுக்கு, ௧ - பையின்ட் ஜலம்விட்டுக்கொள்ளலாம்.

**ARROWROOT.** *Maranta. Maranta arundinacea. West Indian Arrow-root.* (Fecula of the Tubers and Rhizome.

அரோரூட். அரோரூட் மாவு. கூவமாவு.

இது எல்லாருக்கும் பிரசித்தமாய்த் தெரிந்திருக்கிற பதார்த்தம். இதைக் கஞ்சிசெய்து நோயாளிகளுக்குக் கொடுக்கவேண்டியது. இது சாந்தமாய்த் தேகத்தைப் போஷிக்கும். பாலகர்களுக்கும், குழந்தைகளுக்கும், ஆகாரமாய்க் கொடுக்க இது மெத்தத் தகுதியானது. இதன் பிரயோஜனத்தைச் செவ்வையாய்த் தெரிந்துகொள்ளாத நமது தேசத்து மனிதர்கள், இதற்கு அநேக குற்றங்களைச் சொல்லுகிறார்கள். ௧ - பையின்ட் ஜலத்துக்கு, ௧ - கரண்டி மாவு போதுமானது. முதல் கொஞ்சம் ஜலம்விட்டு மாவைக் கரைத்துக்கொண்டு, பிறகு ஜலமெல்லாவற்றையும் விட்டுக் கொஞ்சநேரம் கொதிக்க வைத்துக்கொள்ளவேண்டியது. இதில் சருக்கரையும், பாலும் விட்டு இனிப்பு உண்டாக்கிக்கொடுக்கலாம்.

**ZINGIBER.** *Zingiber officinale. Ginger.* (Rhizome.)

ஜின்ஜர். சுக்கு. (அடிவேர்.)

குணங்கள்.—சுக்கு ஒருமாதிரியான நல்ல வாசனையாய் காரமாய் இருக்கும்; ரூபத்தில் வித்தியாசப்படும்; அழுத்தமாய் பளுவாய் இருப்பது நல்லசரக்கு; இளசாய் இருக்கிற இஞ்சியை, வெந்நீரில்போட்டு சற்றுநேரம் ஊறவைத்து, பிறகு மேல்தோலைப் போக்கி, சருக்கரைப் பாகில்விட்டு ஊறவைத்திருப்பதற்கு (Preserved ginger) என்று பெயர். இஞ்சியை வெந்நீரில் போட்டெடுத்து, காயவைத்து, மேல்தோலை நீக்காமல் இருக்கிற சரக்குக்கு (Black ginger) என்றும், மேல்தோலை நீக்கியதற்கு (White ginger) என்றும் பெயர்.

ACTION. Aromatic, Stimulant, Rubefacient, Errhine, Sialogogue, &c.

செய்கை.—உஷ்ணகாரி, ஷோணகாரி, நஸியம், திரவகாரி.

USE. In Flatulence. In Medicine it is principally used to give warmth and flavour to other drugs.

உபயோகம்.—சுக்கு மிதமாய்ச் சாப்பிட்டால் தீபனத்தை அதிகப்படுத்தும். இது போஜன பதார்த்தங்களோடு மெத்தச் சேருகின்றது. சுக்கைச் சேர்த்தால் மருந்துகளுக்குக் காரமும், நல்ல வாசனையும் கொடுக்கும். இதற்கு மூத்திர தாரையை உஷ்ணிக்கிற குணம் இருப்பதால், நீரடைப்பு உள்ளவர்களுக்கு சுக்கு கொடுக்கலாகாது. நாக்கு அசைவு அற்றுப்போவதற்கும், உண்ணாக்கு வளர்ந்து இருப்பதற்கும் சுக்கை வாயில்போட்டு மெல்லலாம். சுக்குத்தூளை வெந்நீர்விட்டுக் கிளறித்துணிமேல் தடவிப் போட்டால், சருமம் சிவந்துவிடும். பேதிமருந்துகளோடுசேர்த்தால், குமட்டலை நிறுத்தும். சுக்குக்கு அதிசாரம், அழலை, ஆமக்கட்டி,

இளைப்பு, இருமல், ஏப்பம், கபதோஷம், குலைநோய், சீதசுரம், சீதபேதி, சூலை, செவிநோய், தலைநோய், மந்தம், மூலம், வயிறூதல், வயிற்றுக்குள் குத்தல், வாதகுன்மம், வாதநோய் இவைகள் போகுமென்றும், சுக்கு முடிந்துப்போட்டுக் காய்ச்சிய கஞ்சிக்கு, சுரம், பல பிணிகள் வாயு இவைகள் போகுமென்றும், பசி அதிகப்படுமென்றும், தமிழ் நூலில் கண்டிருக்கின்றது. ஒ. அளவு.—சுக்குத்தூள் -ம - உம-கிரேன் கொடுக்கலாம்.

## Tinctura Zingiberis. *Tincture of Ginger.*

### டிங்சர் ஆவ் ஜின்ஜர். சுக்குப் பாவனத்திரவம்.

செய்முறை.—உ௦ - அவுன்ஸ் சுக்குத்தூளை, உ - பையின்ட் ரெக்டிபையிட் ஸ்பிரிட் என்னும் சாராயத்தில் போட்டு, எ - நாள் ஊறவைத்து, வடிகட்டிக் கொள்ளவேண்டியது. ஒ. அளவு.—ம - மினம் முதல், க - திராம் கொடுக்கலாம்.

## Syrupus Zingiberis. *Syrup of Ginger.*

### ஸிரப் ஆவ் ஜின்ஜர். சுக்குப்பாணிதம், சுக்கு சர்பத்.

செய்முறை.—உ௦ - அவுன்ஸ் துண்டித்த சுக்கை, க - பையின்ட் கொதிக்கிற வெந்நீரில் போட்டு, ச - மணிநேரம் ஊறவைத்து வடிகட்டி, உ௦ - பவுன் அல்லது அதற்குத் தேள்வையான சருக்கரையைச் சேர்த்து சுத்தியிலைப் பாணிதம் போலச் செய்துகொண்டு, க - அவுன்ஸ் பாணிதத்துக்கு, ௦ - திராம் வீதம் ரெக்டிபைட் ஸ்பிரிட் என்னும் சாராயத்தைச் சேர்த்துக்கொள்ளவேண்டியது. ஒ. அளவு.—உ - ச - திராம் கொடுக்கலாம்.

இஞ்சியும் கொத்துமல்லி விதையும் சேர்த்து, வெந்நீர்க் கஷாயமாகச் செய்து, பாலும் - சருக்கரையும் சேர்த்து, காலையில்சாப்பிட்டுவரத் தேகசவுக்கியமுண்டாகும்.

## CURCUMA. *Curcuma longa. Turmeric.* (Rootstock.)

### டர்மிரிக். மஞ்சள். குளவிந்தம். (வேர்.)

உபயோகம்.—மஞ்சளுக்குக் கொஞ்சம் வாசனையுண்டு. கறி மசாலையுடன் சேர்க்கப்படும். சாயத்துக் குபயோகமாகின்றது. மஞ்சட்கடுதாசி (Turmeric paper) மூத்திரத்தில் துவைத்துச் சிவந்துபோனால், மூத்திரத்தில் ஆல்கெலிஸ் என்னும் உப்பு இருக்கிறதென்று நிச்சயிக்கவேண்டியது. மஞ்சள் உஷ்ணகாரி, கர்ப்பவாத ஹரகாரி. சுக்குக்கு இதுதாழ்ச்சி. வயிற்றுப் பொருமலுக்கு, கு-உம - கிரேன் வீதம் தினத்துக்கு உ-ஆவர்த்தி கொடுக்கலாம். இரணங்கள்மேல் தூவுகிறதுண்டு. சாதத்துடன் அரைத்துக் கட்டிகளுக்குக்கட்டலாம். மஞ்சளைச்சுட்டுப் புகையை ஆக்கிராணித்தால் சலுப்பு நீங்கும்.

## CARDAMOMUM. *Cardamom.* (The Seeds.)

### கார்டெமம். ஏலரிசி. (வித்து.)

குணங்கள்.—ஏலக்காய் மூன்று பிரிவுகளாய் உள்ளே மூன்று மூலையை உடைய கறுத்த வித்துகள் இருக்கும். வித்துக்குக் காரமும், வாசனையும் உண்டு, இதை மருந்துகளோடு சேர்த்தால் வாசனை தரும்.

செய்கை. உபயோகம்.—கர்ப்பவாதஹரகாரி. ஏலரிசி முக்கியமாய் சுதி மசாலைகளோடு சேருகின்றது; கிராம்பு, லவங்கம் இவைகளைப்போல், இது, வெகுட்டலுடைய மருந்துகளுக்கு, வாசனை இனிப்பையுண்டாக்கவும், வயிறு கடுக்கிற குணத்தைப்போக்கவும் சேர்க்கப்படுகின்றது.

**Tinctura Cardamomi Composita.** *Compound Tincture of Cardamoms.*

கம்பவுன் டிஞ்சர் ஆவ் கார்டெமம்ஸ். ஏலரிசிக் கலவைப் பாவனத்திரவம்.

Prep. (Cardamoms, Cochineal, Caraways, ā ā ʒijss., Cinnamon ʒv., Raisins, ℥v., Proof Spirit, Oij.)

செய்முறை.—நொறுக்கிய ஏலரிசி, இந்திரகோபம், கேக்விதை, இவைகள் வகை ௧ - இ ௨௦ - கிராம்; ௫ - கிராம் நொறுக்கிய லவங்கப்பட்டை; ௫ - அவுன்ஸ், விரையில்லாத திராக்ஷப்பழ வற்றல்; இவைகளை ௨ - பையின்ட் புரூவ் ஸ்பிரிட் என்னும் சாராயத்தில் போட்டு, ௭ - நாள் ஊறவைத்துப்பிழிந்து வடிகட்டிக்கொள்ளவேண்டியது. ஒ. அளவு.—௧ - ௨ - கிராம் அளவுக்குக் கொடுக்கலாம்.

**CROCUS.** *Crocus sativus. Saffron.* (The Stigma.)

ஸாப்ரன். குங்குமப்பூ.

குணங்கள்.—இது சிறிய இழைகளைப்போல் ஆரஞ்சிப்பழ நிறமாய் இருக்கும்; இதன் சாயம் ஜலத்திலும் சாராயத்திலும் இறங்கும்; ஒருவித வாசனையாய், கொஞ்சம் இனிப்பாய் காரமாய் கசந்துகொண்டு இருக்கும்; மென்றால் எச்சிலை மஞ்சளாக்கிவிடும்.

செய்கை. உபயோகம்.—இதற்குக் கொஞ்சம் உஷ்ணம் செய்கிற குணம் உண்டு. இவிடத்தில் இதை மெத்தச் சிலாகித்துப் பேசுகிறார்கள்; இங்கிலீஷ் வைத்தியர் இது தனியாய் கொடுக்கிறதில்லை; உஷ்ணகாரிகளோடும், லேகியம் முதலானவைகளோடும் சேர்க்கப்படுகின்றது. சூதகக்கட்டு வலி இவைகளுக்குக் கொடுக்கலாம். ௧ - கிராம் குங்குமப்பூவை, ௧ - பையின்ட் ஜலத்தில்போட்டு வெந்நீர்க்கஷாயமாக்கி மந்தாக்கினிக்குக் கொடுக்கலாம். இது, ௰ - முதல் ௯௰ - கிறேன் இடைக்கு வலிகளுக்குக் கொடுக்கப்படுகின்றது. பரிமள லேகியத்தில் சேருகிற மருந்துகளில் இது ஒன்று.

**ACORUS CALAMUS.** *Sweet Flag.* (Rhizome.)

ஸ்வீட் பிளாக். வசம்பு. (வேர்க்கட்டை.)

செய்கை. உபயோகம்.—உஷ்ணகாரி, ஜாடராக்கினிவர்த்தனகாரி. இது முக்கியமாய் இதர உஷ்ணகாரிகளோடும், வலுவைக் கொடுக்கிற கசப்புள்ள மருந்துகளோடும் சேர்க்கப்படுகின்றது. மந்தாக்கினி, சுரம் இவைகளுக்குக் கொடுக்கலாம்.

ஒ. அளவு.—வசம்புச் சூரணத்தில், ௰ - ௨௰-கிறேன் வீதமும், வெந்நீர்க்கஷாயத்தில் (௧ - ௨ - அவுன்ஸ் ௧ - பையின்ட் ஜலம்) ௧ஒ - அவுன்ஸ் வீதமும், பாவனத்திரவத்தில், ஒ - ௧ஒ - கிராம் அளவுக்கும் கொடுக்கலாம். வசம்புக்கு, அக்கினிமந்

தம், இசிவுமாந்தம், சூலை, ஜந்தி, சீதம், புண், பேதி, வாயு, வாதம், இவைகள் போமென்று, தமிழ் நூல்களில் செப்பியிருக்கின்றது.

**HORDEUM.** *Hordeum distichon. Barley.* (Seeds.)
பார்லி. பார்லி அரிசி. (விதை.)

செய்கை. உபயோகம்—ஸினிக்தகாரி. பார்லி அரிசிக் கஞ்சி சுரத்தில் தாகத்தை அடக்கவும், இருமலைத் தணிக்கவும், பிரமேகத்துக்கும், உபயோகப்படுகின்றது. பலுவாய் இருக்கிற சூரணங்களை இதில் கலக்கிக் கொடுக்கலாம், இதற்குக் கொஞ்சம் தேகத்தைப் போஷிக்கிற குணம் உண்டு.

**Decoctum Hordei.** *Barley Water.*
பார்லிவாட்டர். பார்லிகஞ்சித் தண்ணீர்.

செய்முறை.—௨௧ - அவுன்ஸ் பார்லி அரிசியை, உமித்தவிடு போகும்படிக் கழுவி, ௧ - பையின்ட் ஜலம்விட்டுக் கொஞ்சங் கொதிக்கவைத்து, அந்த நீரை இறுத்துவிட்டு, ௬௧ - பையின்ட் கொதிக்கிற தண்ணீர்விட்டு, ௨ - பையின்ட்டு அளவுக்குச் சுண்டக்காய்ச்சி வடிகட்டிக்கொள்ளவேண்டியது.

**ERGOTA.** *Ergot of Rye. Spurred Rye. Secale Cornutum.*
எர்கட் ஆவ் ரை. ஒருவித கோதுமை.

குணங்கள்.—இது கோதுமை அரிசிபோல் இருக்கும். நிறம் கறுப்பு; முழுசாய் இருந்தால் வாசனை கொஞ்சமாயும் தூளாக்கினால் அதிகமாயும் இருக்கும். காற்றுப்பட்டால்பூரணம்பிடிக்கும்; இதில்சிறுபூச்சிகள் உண்டாகி, மத்தியிலிருக்கிறதை அரித்துவிடும், அதனால் ஒளஷதகுணம் போய்விடும். இதைக்கல்கார்க்கு உடைய புட்டிகளில் போட்டு வைக்கவேண்டியது.

செய்கை. உபயோகம்.—இந்த மருந்துக்கு, கருப்பையைச் சுருங்கச்செய்கிற குணம் இருப்பதால், மந்தப் பிரசவத்துக்கு வழக்கமாய்க் கொடுப்பதுண்டு. பிரசவவேதனைகண்டு இருக்கிற பெண்களுக்குக் கொடுத்தால், கொஞ்சமாய் இருக்கிற நோவை அதிகப்படுத்தி, சிசுவைச் சீக்கிரத்தில் வெளிப்படுத்திவிடும். மாதர்கள் பிரஸவவேதனைபடும்போது, கருப்பைக்குப் பலம் இல்லாமல் மெதுவில் சுருங்கிக்கொண்டு சண்டிநோயுடன் வருத்தப்படுகிற வேளையில் இதைக் கொடுக்கவேண்டியது தென்று தீர்மானமாய்விட்டது. கருப்பையைச்சுருங்கச்செய்து ரத்தப்பிரவாகத்தை நிறுத்த, இதைக் கொடுக்கத்தக்கது. இதை வெகு ஜாக்கிரதையாய்க் கொடுக்கவேண்டியது; ஏனென்றால், தாய் சவுக்கியத்தையும், சிசுவின் சவுக்கியத்தையும் கெடுத்துவிடும்; இதனால் அநேக குழந்தைகள் செத்து வெளிக்கண்டதுண்டு. அளவுக்கு அதிகமானால் குமட்டல், வாந்தி, வயிற்றுநோவு, தலைவலி, மயக்கம், விகாரம் காணும்.

ஔ. அளவு.—௨௰ - முதல், ௬௰ - கிறேன் இடைக்குப் பொடிசெய்து, வெந்நீரில் போட்டு சற்றுநேரம் ஊறவைத்து, கலக்கி கொடுத்துவிடவேண்டியது; சருக்கரைப்பாகில் கலந்தும் கொடுக்கலாம்; ௰ - ௧ - மணி நேரத்துக்கு ஒருதரம், ௨ - அல்லது ௩ - ஆவர்த்தி கொடுக்கவேண்டியது.

TRITICUM VULGARE. *Wheat.* (Seeds.) உவீட். கோதுமை. (அரிசி.)
கோதுமைரொட்டி பத்தியத்துக்கு எடுத்தது. ரொட்டிச்சதையோடு சிலமருந்

துகளைச்சேர்த்து மாத்திரைசெய்து கொள்ளப்படுகின்றது. கோதுமை ரவையைக் கஞ்சிசெய்து, பாலும் சருக்கரையும் சேர்த்து, நோயாளிகளுக்குக் கொடுப்பது எங்கும் வழக்கமாய்விட்டது. இது தேகத்தை போஷிக்கும்; எரிச்சலைத்தணிக்கும். ஸேகோ, அரோருட், டாபியோகா இவைகளைப்போல் இதுவும் உபயோகிக்கப்படுகின்றது. கோதுமைமாவை மேலே தெளித்தால் தோல் எரிச்சல் நீங்கும். கோதுமைமாவு போல்டீஸ், ரணங்களுக்கும் கட்டிகளுக்கும் போடலாம். கோதுமைக்கஞ்சியை ரத்தபேதிக்கு ஆஸனத்திலும், நீர்ச்சுருக்குக்கு மூத்திரதாரையிலும் பீச்சாங்குழலால் அடிப்பதுண்டு.

RICE. *Oryza sativa.* ரைஸ். அரிசி. பச்சையரிசி பத்தியத்துக்குதவாது, மந்தித்து வாயு செய்யும். கொதித்தண்ணீரில் கற்கண்டும், வெண்ணெயும் விட்டுச் சாப்பிட்டால், நீரெரிவு அடங்கி, தேகம் குளிர்ந்திருக்கும். பிரமேகத்துக்கு கஞ்சித்தண்ணீரில் பொட்டிலுப்பைச்சேர்த்து சாப்பிட நன்மைசெய்யும். அரிசி மாவைக் ளெறி, போல்டீஸ்செய்து ரணங்களுக்குப் போடலாம். அரிசி கோதுமைக்குத் தாழ்ச்சி இதில் குளுடின் இல்லாததால், கோதுமைக்குள்ள அவ்வளவு பலம் கொடுக்கிறதன்மை இல்லை. சில இடங்களில் அரிசிச் சாராயத்தை மெத்த உபயோகிக்கிறார்கள்.

**SACCHARUM.** *Sugar Cane. The Juice. Sugar.*

ஷுகர். சருக்கரை. கரும்புரஸம்.

குணங்கள்.—இது எல்லாருக்கும் பிரசித்தமாய் தெரிந்தபதார்த்தம். சிலவிடங்களில், பழங்களிலும், வேர்களிலும் இருந்து சருக்கரையை எடுக்கிறார்கள். பனவெல்லம், தென்னவெல்லம், இவைகளும் மருந்துகளுக்கு உபயோகப்படுகின்றன. கருப்புச்சருக்கரையை (Brown Sugar, Raw Sugar) சுத்திசெய்தால், (White or refined Sugar, Pure Sugar) வெள்ளையாகிவிடும், கரும்புரஸத்தில், சருக்கரையை எடுத்துக்கொண்டபிறகு அடியில் வெல்லப்பாகு நிற்கும் (Treacle Molasses or the Concentrated uncrystallized juice of Saccharum Officinarum.)

செய்கை. உபயோகம்.—சருக்கரைக்குத் தேகத்தைப் போஷிக்கிற குணம் இருக்கின்றது; இது போஜன பதார்த்தங்களோடு மெத்த சேர்க்கப்படும்; இருமலைத் தணிக்கும்; விஷம் தின்றவர்களுக்கு, இதைக் கொடுக்கலாம். மருந்துகளோடு சேர்த்தால், இனிப்புண்டாகும். வெல்லம் இளகலாய் இருப்பதால் மருந்துகளை மெழுகு பதமாய்ச் செய்துகொள்ளலாம். கற்கண்டை வாயில் அடக்கிக்கொண்டால் இருமல் தணியும்.

**Syrupus.** *Syrupus Simplex. Syrup.*

ஸிரப். ரஸாயனம். ஷர்பத். பாணிதம்.

செய்முறை.—௩ - பவுன் சருக்கரையை, ௧ - பையின்ட் ஆவிநீரில் போட்டு கிறதிபிட்டு எரித்து கரைத்துக்கொள்ளவேண்டியது.

**ALCOHOL.** *Pure Spirits. Spirit of Wine.*

ஆல்கோஹல். ஆல்கோஹல் சாராயம்.

குணங்கள்.—இந்தச் சாராயமானது, பரிசுத்தமாய, வெள்ளையாய், ஜலரு

யமாய் கடுங்காரமாய் வாசனையாய் இருக்கும் ; சூடுபட்டால் பறந்துவிடும் ; காற்றிலி ருக்கிற ஜலத்தைக் கிரகிக்கும்.

செய்முறை.—ரெக்டிபைட் ஸ்பிரிட் என்னும் சாராயத்தில், குளோரைட் ஆவ் கால்ஷியம் என்னும் சுண்ணும்பைச் சேர்த்து, வாலையிலிட்டு வடித்துக்கொள்ளவேண்டியது.

**Spiritus Rectificatus.** *Rectified Spirit. Strong Spirits of Wine,* Sp. Gr. ·838.

ரெக்டிபைட் ஸ்பிரிட். இரட்டித்து வடித்த சாராயம்.

செய்முறை.—புளிப்பேறிய சருக்கரைச் சத்தையும், அனேக தானிய வகைகளையும், வாலையிலிட்டெரித்து இறக்கி, அதை மறுபடியும் வாலையிலேற்றி வடித்துக்கொள்ளவேண்டியது. இதில் ௱-இ ௮௪-பங்கு ஆல்கோஹலும், ௰௬-பங்கு ஜலமும் இருக்கும்.

**Spiritus Tenuior. Proof Spirit.** *Weak Spirits of Wine.* Sp. Gr. ·920.

புரூவ் ஸ்பிரிட் என்னும்சாராயம்.

செய்முறை.—௫-பைன்ட் ரெக்டிபைட் ஸ்பிரிட் என்னும் சாராயத்தில், ௩-பைன்ட் தீநீர்விட்டு மிஸ்ரமித்துக்கொள்ளவேண்டும். இதில் ௱-இ ௪௮ பங்கு ஆல்கோஹலும், ௫௨-பங்கு ஜலமும் இருக்கும். இவ்விரண்டு சாராயங்களும் பார்வைக்கு ஒன்றைப்போலிருக்கும். அதிக காரமுள்ளது மருந்துகள் செய்ய உபயோகப்படுத்தப்படும்.

உபயோகம்.—பாவனத்திரவங்கள் முதலிய மருந்துகள் செய்கிற முறையில் இவைகள் சேருகின்றன. சத்து அதிகமாய் இருக்கிற பதார்த்தங்களுக்கு, அதிக காரமுள்ளதைச் சேர்த்துக்கொள்ளவேண்டியது.

**Spiritus Vini Gallici.** *Spirit of French Wine. Brandy.*

பிராந்தி. பிராந்தி சாராயம்.

குணங்கள்.—சுயம்பான புது பிராந்தி சாராயம், வெள்ளையாய் இருக்கும் ; ௱-இ ௫௩-பங்கு ஆல்கோஹல் இருக்கும்.

செய்முறை.—புளிக்கிற பலசரக்குகளை வடித்து அனேகவித பிராந்திகள் எடுக்கப்படுகின்றன. வெல்லச் சாராயத்துக்கு ரம் (Rum) என்றும், பார்லி அரிசி சாராயத்துக்கு வுஸ்கி (Whiskey) என்றும், பார்லி ரை இவைகளைச் சேர்த்து வடித்த சாராயத்தில் ஜூனிபர் (Juniper Berries) என்பதைப் போட்டு இரட்டித்து வடித்த சாராயத்துக்கு, ஹாலண்ட் ஜின் (Holland Gin) என்றும் பெயர். பார்லி ரை உருளைக்கிழங்கு இவைகளின் சாராயத்தில், டர்பண்டயின் விட்டு இரட்டித்து வடித்த சாராயத்துக்கு ஜின் (Gin) என்று பெயர். நமது தேசத்தில் அரிசி, வேலன்பட்டை, இலுப்பைப்பூ முதலிய அனேக பதார்த்தங்களில் இருந்து சாராயம் சேகரிக்கப்படுகின்றது. எல்லா சாராயங்களிலும் ௱-இ ௫௧-௫௪-பங்கு ஆல்கோஹல் இருக்கின்றது.

செய்கை, உபயோகம்.—சாராயங்களெல்லாம் உற்சாகப்படுத்தும், பிறகு உடனே சோர்வுகாணும். கொஞ்சமாய் சாப்பிட்டால்தேகத்துக்கு சவுக்கியம், ஆனால் அதைத்தொடாம லிருக்கிறதே சகலத்துக்கும் உத்தமம்; பிராந்திக்கு நாடியை தீவிரப்படுத்துகிற குணமும், திடனத்தை அதிகப்படுத்துகிற குணமும் - ரம்சாராயத்துக்கு உஷ்ணமும் வியர்வையும் பிறப்பிக்கிறகுணமும்— ஜின், உஸ்கி, இவைகளுக்கு மூத்திரத்தை அதிகப்படுத்துகிற குணமும் இருக்கின்றன. சாராயத்தில் ஜலம்விட்டுக்கலந்து, காயம் சுளுக்கு வீக்கம் இவைகளுக்குப் போட்டால் குளிர்ச்சியைத்தரும்; ஆனால் துணியிலிருக்கிற ஈரம்வறளும்படிச் செய்யவேண்டியது, மூடிவைத்தால் போட்டவிடம் சிவந்துபோகும். பிராந்தியை, மூர்ச்சை சுவாசமில்லாமல் பிணம்போலிருக்குதல் இவைகளுக்கு இருதயஸ்தானத்தில் தேய்க்கலாம். துர்ப்பலத்துக்கு பிராந்தியைக் கொடுத்தால் மெத்தநன்மைசெய்யும். பெருங்குடியால் அனேககெடுதிகள் சம்பவிக்கின்றன.

## VINUM XERICUM. *Sherry Wine.*

### ஷெரி ஒயின் என்னும் சாராயம்.

குணங்கள்.—இதை, வெள்ளை ஒயின்சாராயம் (White wine) என்றும், சொல்லுவதுண்டு. சில மருந்துசெய்முறைகளில் இது சேருகின்றது. உஷ்ணம் பிறப்பிக்க இதைத் தனியாய்கொடுப்பதுண்டு. புளிப்பேறி நுரைக்கிற எல்லா ரசங்களிலும் இருந்து ஒயின் சாராயங்களைச் சேகரித்தபோதிலும், திராக்ஷப்பழரஸத்தில் இருந்து எடுப்பது சிரேஷ்டமானது. சாராயங்களுக்குத் தக்கபடி, நிறம்வித்தியாசப்படும். போர்ட் ஒயின்சாராயத்தில் சருக்கரை, திராக்ஷ உப்பு, இவைமுதலியவைகள் இருக்கின்றன. காற்றுப்பட்டு சருக்கரைக்கு புளிப்பேறினால், ஆல்கோஹல்சாராயம் ஜனிக்கும்; இதில் திராக்ஷஉப்புகரையாததால், அடியில் படிந்துவிடும். ஒயின்சாராயங்கள் புளித்துப் போகிறதற்கு இது காரணமாம். போர்ட் (Port), மதேரா (Madeira), ஷெரி (Sherry), இவைகளில் ஆல்கோஹல் அதிகமாயும்; கிளாரெட் (Claret), ஷாம்பெயின் (Champagne), இவைகளில் ஆல்கோஹல் கொஞ்சமாயும் இருக்கும். பிராந்தி முதலிய சாராயங்களைப்பார்க்கிலும், ஒயின் சாராயங்களுக்கு கயப்புக்குறைச்சல். ஒயின்சாராயத்துக்கு நாடியைத் தீவிரப்படுத்துகிற குணமும், பலத்தைத் தருகிறகுணமும் உண்டு. இதை ரோகங்களுக்குத் தக்கபடி கண்டறிந்து கொடுக்கவேண்டியது.

செய்முறை.—திராக்ஷரஸத்தை புளிக்கவைத்து, ஷெரிஒயின் என்னும் சாராயத்தைச் செய்யவேண்டியது.

உபயோகம்.—ஒயின் சாராயங்களுக்கு தேகத்தைப் போஷிக்கிற குணம் இல்லை; பிராந்தியைக் கொடுக்கிற ரோகங்களுக்கு, ஷெரி ஒயின் சாராயத்தைக்கொடுக்கலாம். இது இனிப்பாயும், மெத்த கயப்பு இல்லாததாயும் இருப்பதால், ஸ்திரிகளுக்கும், குழந்தைகளுக்கும் கொடுக்க மெத்தத் தகுதியானது. மந்தாக்கினி ரோகத்துக்குக்கொடுக்கலாம்.

சாராயங்கள் அதிகமாய் சாப்பிட்டால் விஷமித்துக்கொல்லும், நாடி மெதுவாய் நடக்கும், நேத்திரதாரை சுருங்கிவிடும், பிரக்கினை இல்லாமல் போகும். சாராயத்தைவிஷமிக்கும்படிஅதிகமாய்க்குடித்துவிட்டால், ஸ்டமக் பம்ப் (Stomach Pump)

என்னும் கருவியைப் பிரயோகித்து, வயிற்றிலிருப்பதை வெளிப்படுத்தி, சூடு பிறக்கும் படி கை கால்களைத் தேய்த்து, குளிர்ந்த ஜலத்தை தலைமேல் ஜாக்கிரதையாய் ஊற்றவேண்டியது ; பிரக்ஞை இல்லாமல் இருந்தால் அம்மோனியாவை உள்ளுக்குக் கொடுக்கவேண்டியது ; அதிக ரத்தம்தலைக்கேறின குறிகள் இருந்தால், துணியைக் குளிர்ந்த ஜலத்தில் நனைத்து, சிரசின்மேல்போட்டு, கை கால்களில் சூடு பிறக்கும்படிச்செய்தால் நலந்தரும்.

**ÆTHER.** *Æther Sulphuricus. Ether. Sulphuric Ether.*

ஈதர். ஸல்பியுரிக் ஈத.

குணங்கள்.—இது பரிசுத்தமாய் வெள்ளையாய் ஜலரூபமாய் நல்லவாசனையாய் இருக்கும், நாக்கில் பட்டால் விருவிரு என்று நல்ல ருசியாய் இருக்கும், பிறகு நாக்கிலும், அண்ணத்திலும் குளிர்ச்சி காணும். அதித்துரையில் பரந்துவிடும் ; தீப்பட்டால் வெகு சீக்கிரத்தில் பற்றிக்கொள்ளும், ஜலத்தைப் பார்க்கிலும் இது லேசானது.

செய்முறை.—ரெக்டிபையிட் ஸ்பிரிட் என்னும் சாராயத்தோடு, கந்தகத்திராவகத்தைச் சேர்த்து, கண்ணாடி வாலையில் இட்டு, எரித்து ஈதரை இறக்கிக்கொண்டு, இதனுடன் கார்பொனேட் ஆவ் பொடாஷ் என்னும் உப்பைச் சேர்த்து, மறுபடியும் வடித்துக்கொள்ளத்தக்கது.

Action. General diffusible Stimulant. *Externally,* it is applied to produce cold by evaporation. *Inhaled,* it produces insensibility to pain.

செய்கை. உபயோகம்.—ஈதரைச் சாப்பிட்டால் சர்வாங்கம் உஷ்ணிக்கும், ஆனால் இந்த உஷ்ணம் வெகுசீக்கிரத்தில் போய்விடும். அதிகமாய்ச் சாப்பிட்டால் விஷமிக்கும். இதை சுவாஸகாஸம், மார்படைப்பு, வயிற்றுவலி, சூலை, மாந்தம், விக்கல், இருதயத்துடிப்பு, மூர்ச்சை, நரம்பைப்பற்றிய தலைவலி, தொண்டைக்கம்மல் இவைமுதலிய, நரம்புகளைப்பற்றி காணுகிற ரோகங்களுக்கும், சூதக சூலைகளுக்கும் உபயோகப்படுத்தத்தக்கது. இதை, அடிக்கடி கொடுக்கவேண்டியது. இதை மேலுக்குப் போட்டால், போட்டவிடம் சில்லிட்டுப்போகும். இதை மோந்தால் இதன் ஆவினா ஈரலுக்குள் சென்று உணர்ச்சியில்லாமலும், நோவு தெரியாமலும் செய்துவிடும் ; ஆகையால், குளோரோபாரம் என்னும் மருந்தைக் கண்டுபிடிக்கிறதற்குமுன், இதை ஸஸ்திரவேலைகளுக்கு மயக்கமுண்டாக உபயோகப் படுத்தினதுண்டு, ஆனால் அதற்கு இது குணத்தில் இளப்பமானபடியாலும், இருமல் முதலிய துர்க்குணங்களை உண்டாக்குகிறபடியாலும், இதை இப்போது உபயோகப் படுத்துகிறதில்லை.

ஒ. அளவு.—௰௫ - மினிம் முதல், ௧ - திராம் வரையில் கொடுக்கலாம்.

**SPIRITUS ÆTHERIS NITRICI.** *Spirit of Nitric Ether. Sweet Spirits of Nitre.*

ஸ்பிரிட் ஆவ் நைட்ரிக் ஈதர். ஸ்வீட் ஸ்பிரிட்ஸ் ஆவ் நைடர்.

குணங்கள்.—இது வெள்ளையாய், இனிப்பாய், வாயில் விட்டால் சில்லென்று இருக்கும் ; மற்றகுணங்களில், ஸல்பியுரிக் ஈதர் என்னும் திரவத்துக்கு ஒத்து இருக்கும்,

செய்முறை.—உ - பையின்ட் ரெக்டிபையிட் ஸ்பிரிட் என்னும் சாராயத்தில், ௩௦ - அவுன்ஸ் பொட்டிலுப்பு திராவகத்தைக் கொஞ்சம் கொஞ்சமாய் விட்டு, கலந்து, வாலையில் இட்டு எரித்து, உ௮ - அவுன்ஸ் திரவத்தை வடித்துக்கொள்ள வேண்டியது.

ACTION. Stimulant, Antispasmodic, Diuretic, Diaphoretic.

செய்கை.—உற்சாககாரி, அங்காகர்ஷணநாஸகாரி, மூத்திரவர்த்தனகாரி, ஸ்வேதகாரி.

உபயோகம்.—இதை முக்கியமாய், டிஜிடேலிஸ், நரிவெங்காயம் முதலிய வைகளோடுசேர்த்து, நீர் அதிகமாக்கக் கொடுக்கவேண்டியது. அஸிடெட் ஆவ் அம்மோனிய என்னும் மருந்தோடு சேர்த்து கொடுத்தால், வியர்வையைப் பிறப்பிக்கும்.

ஒ. அளவு.—ஒ - உ - திராம், அல்லது இன்னம் அதிகமாய் கொடுக்கலாம்.

## CHLOROFORM. *Chloroformyl.*

## குளொரொபாரம்.

குணங்கள்.—இது வெள்ளையாய், ஜலத்தைப்பார்க்கிலும் பளுவாய் இருக்கும் ; ஜலத்தில் மெத்தக் கொஞ்சமாய்க் கரையும் ; காற்றுப்பட்டால் பறந்துவிடும் ; ரப்பர், கட்டபர்சா, கன்காடன், சில ரோஜனங்கள், இவைகள் இதில் கரைந்துவிடும்.

செய்முறை.—குளோரைட் ஆவ் லைம், ரெக்டிபையிட் ஸ்பிரிட் என்னும் சாராயம், ஜலம், இவைகளைச் சேர்த்து வாலையில் இட்டு எரித்து வடித்துக்கொள்ளப் படும். இது, இவிடத்தில் செய்வது கடினம் ; செய்ய விரும்புகிறவர்கள், இங்கிலீஷ் வாகடங்களைப் பார்வையிட்டுச் செய்துக்கொள்ளவேண்டியது.

செய்கை. உபயோகம்.—குளொரொபாரத்தைக் குறைந்த அளவில் உள்ளுக்குக் கொடுத்தால் உஷ்ணிக்கும், நாடியைத் திவிரப்படுத்தும் ; அதிகமாய்க்கொடுத்தால், கயப்பு காணும் ; அதற்கும் அதிகமானால், உணர்ச்சி அடக்கி, பிரக்ஞை இல்லாமல் செய்துவிடும். சிலவேளை இருதய நடையை அடக்கிவிடுவதால், பிராணன் போவதும் உண்டு. அபினியைப்போல் இது சுனைகளை திமிர்ப்படுத்திவிடும். இது வலிரோகங்களுக்கு, குறைந்த அளவில் கொடுக்கப்படுகின்றது.

இந்தமருந்தை முக்கியமாய், ஸஸ்திரம் செய்யும்போது, நோவு தெரியாமல் இருக்க, மொகரக் கொடுப்பதுண்டு ; இதனால் அறிவுகெட்டுப்போய், ஸஸ்திரம்செய்யும்போது சுத்தமாய் நோவுதெரியாமல் இருக்கும். அனேகருக்கு யாதொரு அபாயமும் சம்பவிக்கிறதில்லை. கஷ்டப்பிரசவத்தில் ஆயுதப்பிரயோகம் செய்து, சிசுவை வெளிப் படுத்தவேண்டிய போதும், பிரசூதவேதனையை மட்டிடவும், இதை உபயோகப் படுத்தலாம். மூட்டு சரிந்துபோகுதல், இழுக்கிக்கொண்ட குடல்வாதம், இவைகளுக்கு இதைமொகரவைத்தால், சுனைகளைத்தளர்ச்சிசெய்து, சிகிச்சைசெய்கிறதற்கு அனுகூலப்படுத்தும்.

குளொரொபாரத்தின் ஆவியை ஆக்கிராணித்தால், முதல் கொஞ்சம் இருமல் கண்டு பிறகு நாடி வேகமாய் நடக்கும் ; தென்பு உண்டாகும் ; மேலுமேலும் விடாமல் ஆவியை ஆக்கிராணிக்கச்செய்தால், கனவு காணுகிற தன்மையைப்போல உண்டாகும், ஆனால் நோவு தெரியும் ; மறுபடியும் விடாமல் ஆக்கிராணிக்கச்செய்

தால், பூர்த்தியாய் உணர்ச்சி தெரியாமல் போய்விடும்; அயர்ந்து நித்திரையில் இருப்பதுபோல கால் கை அசையாமல், நோவுந்தெரியாமல் இருக்கும். இந்த மூன்றுவதுபடியில்தான், ஸஸ்திரமுதலியவற்றால் வேலைகளைச் செய்யவேண்டியது. அசதிசுந்தி காணுகிறகுறிகள் இருப்பவர்களுக்கும், இருதயரோக முடையவர்களுக்கும், மூர்ச்சைகாணுகிறவர்களுக்கும், குளோரொபாரத்தை முகருவிக்கலாகாது. பிரஸவ வேதனையில் எல்லாருக்கும் குளோரொபாரம் கொடுக்க நிமித்தமிராது; ஆனால் பிரமாத வேலைகள் செய்யவேண்டியதாய் இருக்கிறபோதும், பிரஸவவேதனை சகிக்கக்கூடாததாய் இருக்கிறபோதும், இந்த மருந்தை உபயோகிக்கலாம்.

குளோரொபாரம் கொடுக்கிறபோது, அடியில் கண்டிருக்கிற விதிகளை வெகு ஜாக்கிருதையாய் மனதில் வைத்திருக்க வேண்டியது. (க). நோயாளி மல்லாக்கப்படுத்திருக்கவேண்டியது. (உ). குளோரொபாரம் ஆவியை காற்றோடு மிஸ்ரமித்து ஆக்கிராணிக்கச் செய்யவேண்டியது. (௩). இதை முகரவைக்கிறதற்கு முன் இருதயத்தையும், நுரை ஈரலையும் பரீக்ஷைசெய்து, அவைகளில் வியாதியில்லாததைத் தெரிந்துகொள்ளவேண்டியது. (ச). இதை போஜனம் செய்தபிறகு முகரவைக்கலாகாது. (௫). ஸ்மாரகமில்லாமல் போய்விட்டபிறகு, இதை விடாமல் முகரவைக்க நிமித்தமில்லை; விட்டுவிட்டுக் கொடுக்கலாம். (௬). சிரசில் அதிக ரத்தம் சேர்ந்திருக்கிற குறிகள் காணுதல், இருதய நடை வித்தியாசப்படுதல் அல்லது பலவீனப்படுதல், கஷ்டசுவாசம் அல்லது சுவாசம் நின்றுபோகுதல், இந்த துர்க்குணங்கள் கண்டால், நோயாளியின்மேல் காற்று தாராளமாய் வீசும்படிச்செய்து, நவாசார ஆவியை முகரவைத்து, தலைமேல் குளிர்ந்த ஜலத்தைப்புரோக்ஷித்து, நுரை ஈரலில் ஆக்ஸிஜென் என்னும் வாயுவைச் செலுத்தி, சுவாசம் நடக்கவேண்டிய முயற்சிகளைத் தேடவேண்டியது.

குளோரொபாரம் முகரவைத்து கொதிப்பு உண்டாகிற ஸ்திதியில், உறக்கப்பாடுதல், வாய்க்குவந்ததெல்லாம் பிதற்றுதல் முதலியவைகள் கண்டு பிறகு சுமாரகம் தப்பிவிடும். மயக்கம் செவ்வையாய் எடுக்கிறதற்கு க - கிராம் முதல் க - அவுன்ஸ் அல்லது இன்னம் அதிகமாயும் கொள்ளுகின்றது.

ஒ. அளவு.—௫ - முதல் ௰ - துளி அளவுக்கு, சாராயத்தில் கரைத்தாவது, விளாம்பிசினிப்பாகு, அல்லது முட்டையின் மஞ்சட் கருவிலாவது சேர்த்து கொடுக்கலாம். முகரவைக்க, முதல் க – கிராம் அளவுக்கு ஆரம்பித்து பிறகு அதே அளவை தேவையானவரையில் கொடுக்கவேண்டியது. இதை ஒரு குட்டையில் ஊற்றி, வாய்க்கருகில் வைத்து மெதுவாய் ஆக்கிராணிக்கச்செய்தால் மயக்கம் வரும். இதைக்கொடுக்க அநேகவித கருவிகள் ஏற்பட்டிருக்கின்றன.

## ACETUM. *Common or British Vinegar.*

### வினிகர். சீமைக்காடி.

இந்தக் காடி, மால்ட் (Malt) என்னும் கோதுமையைப் புளிக்கவைத்துச்செய்யப்படுகின்றது. இதில் அஸிடிக் ஆஸிட் (Acetic Acid) என்கிற புளிப்பு இருக்கின்றது.

செய்கை. உபயோகம்.—ரத்தஸ்தம்பகம், ரத்தவமனம், அதிகவியர்வை இவைகளுக்கு காடியை மெத்த ஜலம்விட்டு விளாவி, நாகத்திற்குப் சாப்பிடுகிறதுபோலச் சாப்பிட்டால், தவறுமல் அவைகளைக் கண்டிக்கும். நாசி, கருப்பை, மூலம், ரணம் இவைகளிலிருந்து வடிகிற ரத்தத்துக்கு, துணியில் நனைத்து மேலே போடலாம். பெருங்குடலிலிருந்து வடிகிற ரத்தத்துக்கு, பிச்சாங்குழலில் போட்டு ஜலம்விட்டு விளாவி, ஆஸனத்தில் அடித்தால, நலந்தரும். ஜலம்விட்டு விளாவி நாள்பட்ட கண்ணேய்க்குப் போட்டால், குணமாகும். ஆல்கெலீஸ் என்னும் கார உப்புகள், விஷமிக்கும்படித் தின்றுவிட்டவர்களுக்கு, காடியைக் கொடுத்தால், முறிந்துவிடும்.

௭. அளவு.—௨ - ௮ - டிராம் கொடுக்கலாம். அதிக வியர்வை காணுவதற்கு ஒருநாளைக்குக் குடிக்கும்படியாய் ௩ - அவுன்ஸ் காடியை ௧௨ - பையின்ட் ஜலத்துடன் கலந்து குடிநீராகச் செய்துகொள்ளலாம்.

Acetum Destillatum. *Distilled Vinegar.* டிஸ்டில்ட் விநிகர். வடித்த சீமைக்காடி. செய்முறை.—௧ - காலன் சீமைக் காடியை, வாலுகா யந்திரத்தில் வைத்து, எரித்து, ௭ - பையின்டுக்கு வடித்துக்கொள்ளவேண்டியது.

## Acidum Aceticum. *Acetic Acid.*

## அஸிடிக் ஆஸிட் என்னும் காடி.

குணங்கள்.—இது வெள்ளையாய், காரமான வாஸனையாய் மெத்தக் கசப்பாய் இருக்கும்.

செய்முறை.—மரத்தை காற்றுப்புகாமல் பாத்திரத்திலிட்டு எரித்து இந்தக் காடியை வடித்துக்கொள்ளவேண்டியது. வங்க உப்பிலிருந்து (Acetate of Lead) இதை எடுப்பதும் உண்டு.

செய்கை. உபயோகம்.—இதைப் போட்டால் புண்ணாகும்; ஆனால் மெத்த ஜலம் சேர்த்து உபயோகித்தால், குளிர்ச்சிசெய்யும். க்ஷயரோகத்தில், இரவில் காணுகிற வியர்வையை நிறுத்த உபயோகமாகின்றது. சுயம்பான இந்தக்காடியை, ஆண்குறியில் காணுகிற மருள் காய்ப்பு இவைகளுக்குப் போடலாம்.

Acidum Aceticum Dilutum. *Dilute Acetic Acid.* டைலூட் அஸிடிக் ஆஸிட் என்னும் காடி. செய்முறை.—௨௩ - டிராம் அஸிடிக் ஆஸிட் என்னும் காடியில், ௧ - பையின்டு அளவாக்க எவ்வளவு ஆவிநீர் தேவையோ அவ்வளவு விட்டு மிஸ்ரமித்துக்கொள்ளவேண்டியது.

## CREASOTUM. *Creasote. Kreosote.*

## கிரியஸோட் என்னும் தைலம்.

குணங்கள்.—இது சுயம்பாய் இருந்தால், நவளமாய் ஒருவிதமான மெத்த வாசனையாய், காரமாய் இருக்கும்; ஆனால் சாதாரணமாய் இளமஞ்சள் நிறமாய் இருக்கின்றது. ஜலத்தில் கரையாது; அஸிடிக் ஆஸிட், ஆல்கோஹால், ஈதர், இவைகளில் கரையும். ரத்தத்தில் இருக்கிற க்ஷீரம், ஆல்பியூமன் என்னும் பதார்த்தங்களை உறைந்துபோகும்படிச் செய்யும்.

செய்முறை.—இது தார் எண்ணெயில் இருந்து (Oil of Tar or Pyroxylic Acid) வடித்து எடுக்கப்படுகின்றது.

செய்கை. உபயோகம்.—இது நாக்கில் வைத்தால் நோவு காணும்; சரீரத்தில் பட்டால் எரியும்; சிறுசெந்துக்களைக் கொன்றுவிடும்; ரணங்களுக்கும் சரும ரோகங்களுக்கும், களிம்புசெய்து உபயோகிக்கப்படுகின்றது. சொத்தைப்பல்லுக்குப்போட்டால், நோயைத் தணிக்கும்; வாந்தியை நிறுத்த இது மெத்த நல்லமருந்து; கப்பலில் காணுகிற வாந்தியை, சில தருணங்களில் நிறுத்திவிடுகின்றது. நரம்புவலி, மதுமூத்திரம், நாள்பட்ட கீல்வாதரோகம், க்ஷயம், இவை முதலிய ரோகங்களுக்குக் கொடுத்துப் பரீக்ஷித்ததுண்டு; ஆனால் தவறாமல் நன்மையைச் செய்ததில்லை.

ஔ. அளவு.—௧ - முதல், படிப்படியாய் ௬ - துளி வரையில், அதிகரித்து மாத்திரை செய்தாவது, ஜலத்திலாவது, கொடுக்கலாம். ௧ - ௰ - அவு - ன்ஸ் ஜலம்விடவேண்டியது. ௨ - ௬ - துளியை, ௧ - அவுன்ஸ் ஜலத்தில் கரைத்து, மேலுக்கு உபயோகிக்கலாம்.

## Unguentum Creasoti. *Creasote Ointment.*

### கிரியஸோட் ஆயின்ட்மென்ட் என்னும் களிம்பு.

செய்முறை.—௨ - திராம், கிரியஸோட் என்னும் மருந்தை, ௧ - அவுன்ஸ் பன்றி நெய்யுடன் சேர்த்து, அரைத்துக்கொள்ளவேண்டியது.

## PETROLEUM. *Barbadoes Tar. Rock Oil. Earth Oil.*

### பிட்ரோலியம். மண்ணெண்ணெய். மண் தைலம்.

குணங்கள்.—இந்தத்தைலம் பர்மா தேசத்தில் மெத்த இருக்கின்றது; கருக்கரைப்பாகுபோல் தடிப்பாய் கறுத்து, தாருக்குடைய வாசனையும் ருசியும் உள்ளதாய் இருக்கும்; ஜலத்தில் கரையாது, ஈதரில் கரையும்; காற்றுப்பட வைத்தால் கட்டியாய்ப்போகும்; எரிவிட்டால் மெத்தப் புகைச்சல் உண்டாகும்.

Action. Stimulant, Antispasmodic, Diaphoretic, Anthelmintic.

செய்கை. உபயோகம்.—இது உஷ்ணிக்கும், வலிகளை நீக்கும், வியர்வையைப் பிறப்பிக்கும், கிருமிகளைப் போக்கும். இதில் சமன் இடை தேங்காயெண்ணெயைச் சேர்த்து தைலமாக்கி, கீல்வாதரோகம், நாள்பட்ட சருமரோகங்கள் முதலிய தைலம் வேண்டிய ரோகங்களுக்கெல்லாம் உபயோகப்படுத்தலாம்.

ஔ. அளவு.—௰௨ - ௨௰ - துளி கொடுத்தால், வாந்தியை நிறுத்தும். ௫௰ - துளி முதல், ௨ - திராம் அளவுக்கு, லவங்கப்பட்டை ஜலத்தில் கொடுத்தால், வியர்வையைப் பிறப்பிக்கும், கபத்தைக் கண்டிக்கும்.

## SUCCINUM. *Amber.*

### ஆம்பர். இதுவே அம்பர்.

இது பூமியில் உற்பத்தியாகிறதற்குச் சந்தேகமில்லை. சமுத்திரத்தில் அடித்துக்கொண்டுவந்து கரையில் ஒதுக்கிவிடுகின்றது. இது ஒரு செடியில் உண்டாகிற ரோஜனமென்று சிலருடைய எண்ணம், இது துண்டுகளாய், பருப்புக்களாய்,

ளிதில் ஒடியத்தக்கதாய், மஞ்சள்வருணமாய், அல்லது மஞ்சளும் சிவப்புங்கல ந்த சாயலாய், ரோஜனத்தைப்போல் இருக்கும்; ஜலத்திலும் சாராயத்திலும் கரையாது.

OLEUM SUCCINI. *Oil of Amber.* ஆயல் ஆவ் ஆம்பர். ஆம்பர் தைலம். செய்முறை.—ஆம்பரும் நல்ல மணலும் சமனிடையாய்ச் சேர்த்து, எரித்து, தைல த்தை வடித்துக்கொள்ளவேண்டியது.

செய்கை, உபயோகம்.—இந்தத் தைலத்தை, ௫ - துளிவீதம் கொடுத்தா ல் உஷ்ணிக்கும், வலிகளை நிறுத்தும். இதை, நமது தேசத்தில் ஹிந்துவைத்தியர்கள் எவ்விதமாய்ச் சிலாகித்துப்பேசுகிறார்களோ அவ்விதமாகவே, இங்கிலிஷ் வைத்திய த்திலும், மெத்தப்புகழ்பெற்றிருந்தது. இதற்கு ஔஷதகுணங் கொஞ்சமாய் இரு ப்பதால், இதை இப்போது மெத்த உபயோகப்படுத்துகிறதில்லை.

---

## ௬-வது அத்தியாயம்.

# ANIMAL MATERIA MEDICA.

## ஜீவவர்க்க சம்பந்தமான பதார்த்தங்கள்.

### SPONGIA OFFICINALIS. *The Officinal Sponge.*

### ஸ்பன்ஞ். கடற்காளான். கடற்பாசி. நீர்ப்பஞ்சு.

இது கடலில் இருந்து எடுக்கிற ஓர்வித பாசி. இது அநேகவேலைகளுக்கு உதவி யாகின்றது. ரணவயித்தியத்துக்கு இது மெத்த உபயோகப்படுத்தப்படும். மெ ழுகைக் காய்ச்சி உருக்கி ஸ்பஞ்சைத் தவைத்து, சிறிய துண்டுகளாக்கி உருட்டி க்கொண்டு, ரணங்களில் ஓடுகிற புரையின் வாயில் வைத்தால், துவாரத்தைப்பெரி தாக்கும்; இதற்கு டென்ட் (Tent) என்று பெயர். ஸ்பன்ஞ் துண்டுகளை நூலால் சுற்றி புரையில் வைத்து பிறகு அந்த நூலை அறுத்துவிட்டால் மலர்ந்துவிடும். ஸ் பன்ஜில், ஐயொடயின் இருக்கின்றது. இதற்காக ஸ்பன்ஜை சுட்டு, கழுத்தில் கா ணுகிற புரைக்குழல், கண்டமாலை, இவைகளுக்கு பூர்வீகத்தில் கொடுத்ததுண்டு. ௧-தி ராம் அல்லது இன்னம் அதிக அளவில், தேனில் கலந்து கொடுக்கலாம்.

### HIRUDO. *The Leech.*

### லீச். அட்டை.

அட்டையில் அநேக ஜாதிகளுண்டு. வயதுக்குத்தக்கபடி பெரிசு சிறுசா ய் இருக்கும். அட்டையின்வாய்க்கடி திரிகோணரூபமாய் இருக்கும். கையில்ரத் தங்குத்தி வாங்குதல், பேதிக்குக் கொடுக்குதல், இவைகளால் தேக பலம் குறையும்; ஆகையால் ரத்தங்கட்டிக்கொண்டு இருக்கிற இடத்தில் (தாபனரோகம்) அட்டையைக் கடிக்கவிட்டால், அவ்விடத்தில் இருக்கிறரத்தத்தை உறிஞ்சுவிடும்; ஒரு அட்டை ௨ - திராம் ரத்தத்தைக் குடிக்குமென்று சாதாரணமாய்க் கணக்கிட்டிருக்கின்றது. அட்டைக் கடி மேல் காப்பிடம் போட்டால் அதிகரத்தம் வடியும். அக்கி என்னும் வியாதிகண்டிருக்கிற இடத்தில் அட்டையைக் கடிக்கவிடலாகாது. அட்டைக் கடித்த

இடத்தில் கரித்தூளியைவைத்து அழுத்தினால் ரத்தம் நிற்கும்; இதற்கும் நிற்காவிட்டால், அயப்பாவனத்திரவம், காடிக்காரம், குளிர்ந்த ஜலம் முதலிய துவர்ப்புள்ள மருந்துகளைப்போட்டு நிறுத்தவேண்டியது. சிலவேளை கடித்த இடத்தைத் தைக்கவேண்டியதாயும் நேரிடும்.

## CANTHARIS. *The Blister Beetle. Spanish Fly.*

பிளிஸ்டரிங் பிளேஸ். ஸ்பானிஷ் பிளேஸ். எரிவண்டு. புள்ளிவண்டு.

இந்த வண்டுகள் தேசத்துக்குத் தக்கபடி, அநேக சாதிகளாய் இருக்கும். இதைப் பிடித்து காடியில் போட்டுக் கொல்லுவதுண்டு. இந்தப் பூச்சிகளில் வேறு பூச்சிகள் உண்டாகி, நாசப்படுத்துகின்றது. இதில் இருக்கிற சத்துக்கு, கன்தாரிடின் (Cantharidine) என்று பெயர்.

ACTION. Acrid Poison, Rubefacient, Irritant, Stimulant, Diuretic.

செய்கை. உபயோகம்.—இது கொடிய விஷமுள்ள பதார்த்தம்; ஆனால் குறைந்த அளவில் கொடுத்தால், மூத்திரத்தை அதிகப்படுத்தும். இதை மூத்திரப்பைக்குள் காணுகிற ஸ்ம்ஸ்தம்பரோகத்துக்கும், தந்திமேகத்துக்கும், நாள்பட்ட வெள்ளைக்கும், எலும்புருக்கி ரோகத்துக்கும், சிலவேளை பலவீனத்தால் காணுகிற நீர் ஏற்றத்துக்கும் கொடுக்கவேண்டியது. சருமரோகங்களாகிய குஷ்டம், சொறி சிரங்கு, கக்கிருமல்ரோகம் இவைகளுக்குக் கொடுப்பதுண்டு. இது முக்கியமாய் நோய் இருக்கிற இடத்தில் புண்ணுக்குகிறதற்குப் போடப்படும். பூசுத்தைலங்களோடு சேர்த்துத் தேய்த்தால், சருமம் உஷ்ணித்து சிவக்கும். எரிவண்டுக்கு மூத்திர உறுப்புகளைக் கெடுதிசெய்கிற குணம் இருப்பதால், நீர் விடும்போது முக்கல், நீரில் ரத்தம் இவைகளும் காணுவதுண்டு. அதிகமாயாவது அடிக்கடியாவது எரிவண்டை உபயோகித்தால், சிலவேளை நீரடைப்பு கண்டு அந்த நீர் மூளைக்குச் சென்று தூர்க்குணங்களை உண்டாக்கிக் கொன்றுவிடும். அக்கினிப் பிளாஸ்திரியைப் போட்டால், ௬ - ௰௨ - மணி நேரத்தில் கொப்புளிக்கும்; சிலவேளை நீர் எரிச்சல் காணும்.

## Tinctura Cantharidis. *Tincture of Cantharides.*

டிங்சர் ஆவ் கெந்தாரிடிஸ். எரிவண்டுப் பாவனத்திரவம்.

செய்முறை.—௧ - அவுன்ஸ் நொறுக்கிய எரிவண்டை, ௨ - பையின்ட் புரூவ் ஸ்பிரிட் என்னும் சாராயத்தில் போட்டு, ௭ - நாள் ஊறவைத்து வடிகட்டிக்கொள்ளவேண்டியது.

செய்கை. உபயோகம்.—உஷ்ணகாரி, மூத்திர வர்த்தனகாரி. இதை தந்திமேகம், எலும்புருக்கிரோகம் (Leucorrhœa), சொட்டுமூத்திரம், இவைகளுக்கு உள்ளுக்குக் கொடுக்கலாம். இதில் சவுக்காரத்தைலம், கர்ப்பூரப்பூசுத்தைலம், இவைகளில் எதையாவது சேர்த்து, குலேப்கட்டு முதலிய ரோகங்களுக்குத் தேய்க்கலாம்.

ஒ. அளவு.—௰ - துளி முதல் ௧ - திராம்வரையில் படிப்படியாய் அதிகரித்துக் கொடுக்கலாம்.

## Acetum Cantharidis. *Vinegar of Cantharides.*

### வினிகர் ஆவ் கெந்தாரிடிஸ். எரிவண்டுக்காடி.

செய்முறை.—௨ - அவுன்ஸ் - மெத்த சன்னமாய் பொடிசெய்த எரிவண்டை, ௧ - பையின்ட் அஸிடிக் ஆஸிட் என்னும் காடியில் போட்டு, அடிக்கடி குலுக்கிக்கொடுத்து, ௮ - நாள் ஊறவைத்து, பிழிந்து வடிகட்டிக்கொள்ளவேண்டியது.

செய்கை. உபயோகம்.—இது மெத்த வேகமுள்ளது; உள்ளுக்குக் கொடுக்க உதவாது; இதைச் சருமத்தின்மேல் தேய்த்தால் கொப்புளிக்கும்.

## Ceratum Cantharidis. *Cantharides Cerate or Ointment.*

### ஸிரோட் ஆவ் கெந்தாரிடிஸ். எரிவண்டுக்களிம்பு.

செய்முறை.—௮ - அவுன்ஸ் மீன்கொழுப்புக் களிம்பை (Spermaciti Cerate), உருக்கி, ௧ - அவுன்ஸ் மெத்த சன்னமான எரிவண்டு சூரணத்தைச் சேர்த்து, மிஸ்ரமித்துக்கொள்ளவேண்டியது.

செய்கை. உபயோகம்.—இது எரிச்சலைத்தரும். பிளிஸ்டர்போட்டுப் புண்ணுக்கின இடத்தை ஆற ஒட்டாமல் வைத்திருக்க இது உபயோகமாகின்றது.

## Emplastrum Cantharidis. *Blistering Plaster.*

### பிளிஸ்டர் பிளாஸ்டர். எரிவண்டு பிளாஸ்திரி. அக்கினிப்பிளாஸ்திரி.

செய்முறை.—௯ - அவுன்ஸ் பன்றிநெய், ௭௨ - அவுன்ஸ் மெழுகு, ௭௨ - அவுன்ஸ் ஆட்டுக்கொழுப்பு; இவைகளைச்சேர்த்து உருக்கி, ௯ - அவுன்ஸ் ரோஜனத்தை முன்னதாகவே உருக்கிச்சேர்த்துக்கொண்டு, நெருப்பைவிட்டு இறக்கி, உறைந்துபோக ஆரம்பிக்கிற தருணத்தில் ௧ - பவுன் எரிவண்டுச் சூரணத்தைத் தெளித்து மிஸ்ரமித்துக்கொள்ளவேண்டியது.

செய்கை. உபயோகம்.—விரணகாரி. இது சாதாரணமாய்க் கொப்புளமெழுப்பி புண்ணுக்க உபயோகப்படுத்தப்படும். சிலவேளை, புண்ணுக்கவேண்டிய இடத்தை முதல் தேய்த்தாவது, அல்லது கடுகை அரைத்தாவது போட்டு, பிறகு இதைப் போடவேண்டியதாய் இருக்கும்.

## COCCUS. *Coccus Cacti. Cochineal.* (The entire insect.)

### கோசினில் பூச்சி. இந்திரகோபம். தம்பலப்பூச்சி. அருத்திரபுருகு.

இது இப்போது முக்கியமாய் மருந்துகளுக்குச் சாயமேற்ற உபயோகமாகின்றது; ஆனால் இதற்கு நோயைத் தணிக்கிற குணமும், வலிகளைக் கண்டிக்கிற குணமும் இருக்குதென்று, கக்கிருமல் ரோகத்துக்குக் கொடுத்ததுண்டு. இதை இப்போது மெத்த உபயோகப்படுத்துகிறதில்லை.

## MEL. *Honey.*

### ஹனி. தேன்.

தேனீக்கள் புஷ்பங்களில் இருக்கிற மதுவை உண்டு, தேன்கூட்டில் சேர்த்துவைக்கிற பதார்த்தத்துக்கு தேன் என்றுபேர். தேன்கூட்டில் இருந்துவடித்து எடுப்பதேசுய

டிபானதேன். புஷ்பங்களுக்குத்தக்கபடி, தேன் குணமும் வித்தியாசப்படும். தேனில் மோசடிகள் செய்வதுண்டு ; அதை நாம் கண்டறிந்து, நல்லதேனைக் கொள்ள வேண்டியது.

MEL DEPURATUM. *Clarified Honey.* கிளாரிபைடு ஹனி. சுத்தி செய்த தேன். செய்முறை.—தேனை ஜலயந்திரத்தில்வைத்து, உருக்கி, சூடாயிருக்கிறபோதே பிளானலில் ஊற்றி வடிகட்டிக்கொள்ளவேண்டியது. நமது வீடுகளில் ஒட்டைச்சுட்டு தேனில் போட்டு சுத்திசெய்கிறது வழக்கம்.

செய்கை. உபயோகம்.—தேனுக்குத்தேகத்தைப் போஷிக்கிறகுணமும்,இருமலைத் தணிக்கிற குணமும், மலத்தைப் போக்குகிற குணமும் உண்டு. இது, முக்கியமாய் மருந்துகள் அனுபானத்துக்கு உபயோகப்படுகின்றது. வாய் கொப்புளிக்கிற நீரில் தேன் சேருகின்றது.

OXYMEL. ஆக்ஸிமெல். செய்முறை.—௫ - பவுன் தேனைச் சுடவைத்து, ௭ - அவுன்ஸ் அஸிடிக் ஆஸிட்டை, ௮ - அவுன்ஸ் ஆவிநீருடன் சேர்த்துகொண்டு, ஷை தேனுடன் மிஸ்ரமித்துக்கொள்ளவேண்டியது.

செய்கை. உபயோகம்.—கபஹரகாரி, சுவேதகாரி, ஒ. அளவு.—௩ - ௪ - டிராம் அளவுக்கு, கபத்தைக்கண்டிக்கிற மருந்துகளோடு சேர்க்கலாம்.

## CERA. *Wax.*

### வாக்ஸ். மெழுகு.

தேன் கூட்டை உருக்கி எடுக்கிற மெழுகு, மஞ்சளாய் இருக்கும். (Cera Flava. Yellow or Common Wax). இந்த மஞ்சள் மெழுகைச் சுத்திசெய்து, அழுக்கை எடுத்துவிட்டால் வெள்ளையாய்விடுகின்றது. (Cera Alba. White Wax).

செய்கை. உபயோகம்.—ஸினிக்தகாரி. இதைக்குழம்புசெய்து, இருமல், நாள்பட்டசீதபேதி, இவைகளுக்குச் சிலவேளை கொடுப்பதுண்டு ; ஆனால் இது முக்கியமாய்க் களிம்புகள் செய்து மேலுக்கு உபயோகப்படுத்தப்படும்.

### Ceratum. *Simple Cerate.*

### ஸிரேட்டம். மெழுகுக் களிம்பு.

செய்முறை.—௩௰ - அவுன்ஸ் வெள்ளை மெழுகை உருக்கி, ௧ - பையின்ட் ஆலிவ் ஆயல் என்னும் எண்ணெயைச் சேர்த்து மிஸ்ரமித்துக்கொள்ளுக. இது ரணங்களுக்குச் சாதாரணமாய்ப் போடப்படுகின்றது.

## ICHTHYOCOLLA. *Isinglass.*

### ஐஸிங்கிளாஸ்.

இது சில மீன்களில் இருந்து எடுக்கிற ஒருவித சவ்வுப்பை. இது உலர்த்தியாவது, அல்லது உலர்த்தி சன்னகம்பிகளாய்க் கத்தரித்தாவது இருக்கும். கொதிக்கவைத்து இதிலிருந்து மெத்த சுயம்பான ஜிலடின் (Gelatine) என்னும் பசை எடுக்கப்படுகின்றது.

செய்கை. உபயோகம்.—ஸினிக்ததாரி. இதைக் கஞ்சிசெய்து நோயாளிகளுக்குக் கொடுக்கலாம், உஷ்ணஞ் செய்யாத ஆகாரமாகின்றது. ஜிலடின் என்

கிற பசைகளை, எலும்பு முதலிய அன்னியபதார்த்தங்களில் இருந்து எடுப்பதும் உண்டு. ஜிலடீன் என்னும் பசையை கவசமாகச்செய்து, அதற்குள் கோபேப, மீன் எண்ணெய் முதலிய வெருட்டலையுடைய மருந்துகளை வைத்துக் கொடுப்பதும் உண்டு; மாத்திரைகளின்மேல் பூசுவதும் உண்டு. இப்படிச் செய்து சாப்பிட்டால் இதமாய் இருக்கும்.

## MORRHUÆ OLEUM. *Oleum Jecoris Aselli. Cod-liver Oil.*
## காட்லிவர் ஆயல். மீன் எண்ணெய்.

குணங்கள்.—இந்த எண்ணெயானது பலவிதங்களாய் எடுக்கிறபோது, படுகிற உஷ்ணத்துக்குத்தக்கபடி நிறம் வித்தியாசப்பட்டு கொஞ்சம் கறுத்திருக்கும், கொஞ்சந்தெளிவாய் கொஞ்சம் மஞ்சள்நிறங்கலந்ததாய் இருக்கும்; மாமிசவாசனை வீசும்; வாய்க்கினிப்பில்லாமல் குமட்டலையுடைய சுவையையுடையது. இதில் வேறு எண்ணெய்களைச் சேர்த்து மாறுபாடுசெய்வதுண்டு. எண்ணெய்ச்சத்துகள் இதில் இருப்பதும் தவிர, பித்தநீரில் இருக்கிற முக்கிய பதார்த்தங்களும், கொஞ்சம் ஐயோடைன், புரோமின் முதலிய உப்புகளும் இருக்கின்றன.

செய்முறை.—இந்த எண்ணெயை காட்பிஷ் (Cod-fish) என்கிற மீனின் ஈரலில் இருந்து எடுக்கிறபடியால், அந்த மீனின் பேரே இதற்கும் இடலாயிற்று. வேறு மச்சங்களுடைய ஈரல்களில் இருந்தும், எண்ணெயைச் சேகரிக்கக்கூடும்; ஆனால் காட்லிவர் ஆயல் என்னும் எண்ணெயில் இருக்கிற முக்கிய பதார்த்தங்கள், வேறு எண்ணெய்களில் இல்லாத படியால், அவுஷதகுணத்தில் வித்தியாசப்படும். இந்த எண்ணெய் இரண்டுவிதங்களாய் எடுக்கப்படுகின்றது.

௧-வது—ஈரல்களை எடுத்து அடுக்கிக் கொஞ்சநாளைக்கு வெயிலில் வைத்தால், அது அழுகித்தைலம் வெளிப்பட்டு, பாத்திரத்தில் இறங்கிவிடும். இதைச் சுத்திசெய்யாவிட்டால், கறுப்பாய் கார்த்து கெட்டவாசனை வீசும்.

௨-வது—ஈரல்களை இருப்புப்பாத்திரத்தில் போட்டுக் காய்ச்சி, துணியிலபோட்டு பிழிந்து வடிகட்டி எடுத்துக்கொள்ளவேண்டும்.

செய்கை. உபயோகம்.—மீன் எண்ணெயை இப்போது, ரோகச் சிகிச்சைகளுக்கு மெத்தவும் உபயோகப்படுத்துகிறார்கள். பலவீனத்தால் காணுகிற மந்தாக்கினி, இளைத்துப்போகுதல், நாள்பட்ட அதிசாரம், துர்ப்பலம், கண்டமாலை, க்ஷயம் இவை முதலிய இன்னம் அநேக ரோகங்களுக்குக் கொடுக்கத்தக்கது. இதைக் கொடுத்தால், இளைத்துப்போகிற தேகம் பூரிக்கும், பசி நன்றாய் எடுக்கும், ரத்தம் விருத்தியாகும்; சருமரோகங்கள், குலைக்கட்டு எலும்புவியாதி, மூட்டுநோய் இவைகளுக்கும் கொடுக்கலாம். இந்த எண்ணெயை நாள்படக் கொடுக்கவேண்டியது. க்ஷயரோக ஆரம்பத்தில் கொடுத்தால் மெத்த நன்மை செய்யும். மேல்கண்ட வியாதிகளில் தேகம் சுட்கித்து மெலிந்து இருக்கிறபோது கொடுத்தால், நோயாளி ஸ்தூலித்து, தேகசவுக்கியம் உண்டாகிறதற்கு யாதொரு சந்தேகமில்லை.

அளவு.—௨-டிராம் முதல், ௧-௨-அவுன்ஸ் அளவுக்கு தினத்துக்கு, ௩-தடவை கொடுக்கலாம், நல்ல எண்ணெயாய் இருந்தால் வெருட்டல் மெத்த இராது. இதை, பால் குளிர்ந்த டீ, காபி, ஒயின் முதலியவைகளில் எதிலாவது, நோ

யாளி இஷ்டப்படி சேர்த்துக்கொடுக்கலாம். இதை நாள்பட சாப்பிடவேண்டியது, இல்லாவிட்டால் குணம்தராது. முதல் குறைந்த அளவில் துவக்கி, பிறகு படிப்படியாய் அதிகரித்துக்கொடுக்கவேண்டியது.

நிராதசருமரோகங்களுக்கு இது உள்ளுக்குக்கொடுக்க உதவாமல் இருக்கிறபோது மேலே தடவலாம். கீல்கள் பருத்து வியாதிகண்டு இருக்கிறபோது, ஐயோடயின், ரஸம், இவைகளுக்குப் பதிலாய் இந்த எண்ணெயைப் பூசலாம். குழந்தைகளுக்கு, ௧ - ௨ - திராம் வீதம் தினத்துக்கு ௩ - தடவை கொடுக்கலாம்.

## OVUM. *Egg.*

### எக். முட்டை. அண்டம்.

கோழிமுட்டை, போஜனபதார்த்தமாக உபயோகப்பட்டுவருகின்றது. இதை அனேக விதங்களாய் சமையல்செய்து புசிக்கப்படும். முட்டையின் ஓட்டில் கார்பொனேட் ஆவ் லைம் என்னும் சுண்ணும்பு இருக்கின்றது ; தமிழ் வைத்தியர், அண்ட ஓட்டுச் சுண்ணம் இன்னம் உபயோகிக்கிறார்கள் ; இங்கிலீஷ் வைத்தியர்கள் உபயோகிப்பது அரிது. ஓட்டுக்குள் சவ்வு ஒட்டிக்கொண்டு இருக்கும் ; இந்த சவ்வுக்குள் வெள்ளைக்கரு (Albumen Ovi. The White of Egg), மஞ்சள்கரு (Vitellus Ovi. The Yolk or Yelk) என இரண்டுவித பதார்த்தங்கள் இருக்கின்றன. வெள்ளைக்கரு ஜலத்தில் கரையும், வேகவைத்தால் கட்டியாகிவிடும் ; அப்போது ஜலத்தில் கரையாது. வீரம், மயில்துத்தம் இவைகளில் எதையாவது விஷமிக்கும்படி தின்றுவிட்டால், முட்டையின் வெள்ளைக்கருவைக் கொடுத்தால், அவைகளை முறித்துவிடும். மஞ்சள் கருவானது, தடித்த எண்ணெய்போல் இருக்கும்.

செய்கை. உபயோகம்.—வெள்ளைக்கருவை பதார்த்தங்களின் அழுக்கை எடுக்கவும் எரிச்சலைத்தணிக்கவும் உபயோகப்படுத்துகிறார்கள். படிக்காரத்தைச்சேர்த்து குலுக்கினால், உறைந்த போல்டீஸ்போல் ஆகும் ; அதைக் கண்ணோவுக்குப்போடலாம். மஞ்சள்கரு தேகத்தைப்போஷிக்கும். இது எண்ணெய், குங்கிலியத்தைலங்கள், ரோஜனம்முதலியவைகளோடு சேர்த்து, குழம்பாகச்செய்துகொடுக்கப்படுகின்றது. இதை டீ, பால் இவைகளில் எதிலாவது சேர்த்துக் கொடுக்கலாம். இதை எரித்தால் எண்ணெய் ஜனிக்கும், இதற்கு அண்டத்தைலமென்று பெயர். தமிழ் வைத்தியர், முக்கியமாய் குழந்தைகளுக்குக் காணுகிற மாந்த வலிகளுக்கு, அண்டத்தைலத்தில் குங்குமப்பூ கோரோஜனம் முதலிய அவுஷதங்களைச் சேர்த்து உபயோகிக்கிறார்கள்.

## CETACEUM. *Spermaceti.*

### ஸ்பெர்மெஸிடி. மீன் கொழுப்பு.

இந்தக்கொழுப்பு ஒரு சாதி மீனின் தலையில் இருந்து எடுக்கப்படுகின்றது.

செய்கை. உபயோகம்.—ஸினிக்தகாரி. விளாம்பிசினிப்பாகு, முட்டையின் மஞ்சள் கரு, இவைகளில் எதிலாவது சேர்த்து, முன்பு உள்ளுக்கு மெத்த உபயோகப்படுத்தினதுண்டு ; ஆனால் இப்போது முக்கியமாய் களிம்புகள் செய்து உபயோகப்படுத்துகிறார்கள்.

## Unguentum Cetacei. *Spermaceti Ointment.*

ஸ்பெர்மெஸெடி ஆயின்ட்மெண்ட். மீன்கொழுப்பின் இளகிய களிம்பு.

செய்முறை.—ங - அவுன்ஸ் மீன் கொழுப்பு, மச - அவுன்ஸ் வெள்ளை மெழுகு, க - பையின்ட் ஆலிவ் ஆயல்; இவைகளைச்சேர்த்து சிறுதீயிட்டு உருக்கி, சில்லிட்டுப்போகிறவரையில் செவ்வையாய்த் துழவிக்கொடுக்கவேண்டியது.

உபயோகம்.—இந்தக்களிம்பை ரணங்களை ஆற்ற மேலுக்குப் போடலாம்.

## OSSA. *Bones.*

போன்ஸ். எலும்புகள்.

எலும்புகளைக் காற்றுப்பட எரித்தால், அதிலிருக்கிற பசை முதலிய பதார்த்தங்கள் போய்விடும்; பாஸ்பேட் ஆவ் லைம் (Phosphate of lime), கார்பொனேட் ஆவ் லைம் (Carbonate of lime) என்னும் சுண்ணும்புகள் மாத்திரம் நிற்கும். இது, ஸோடிபாஸ்பஸ் என்னும் உப்புச்செய்ய உபயோகமாகின்றது. காற்றுப்படாமல் எலும்பை எரித்தால், எலும்புக்கரி எடுக்கலாம். (Carbo Animalis or impure animal charcoal). இந்தக்கரி, சருக்கரை முதலியவைகளில் இருக்கிற அழுக்கை எடுக்க உபயோகமாகின்றது. ஆட்டு எலும்பு குப்புசெய்து, நோயாளிகளுக்குக் கொடுத்தால், பலம்வரும்.

## CORNU CERVI. *Hart's horn.*

ஹார்ட்ஸ் ஹாரன். மான்கொம்பு.

ஆடு, மாடு இவைகளின்கொம்புக்கும், மான்கொம்புக்கும் வித்தியாஸமுண்டு. மான்கொம்பை வாலையிலிட்டு எரித்து எடுக்கிற பதார்த்தத்துக்கு, ஸ்பிரிட் ஆவ் ஹார்ட்ஸ் ஹாரன் (Spirits of Harts-horn) என்று பேர். மான் கொம்பை சீவி எடுத்து, அதைக் காய்ச்சி ஜல்லி செய்து, உபயோகப்படுத்தப்படும். ஷிருங்கி பஸ்மம் செய்கிற முறையில், மான் கொம்பு சேருகின்றது. நமது தேசத்தில் மான் கொம்பை இழைத்து நோயுள்ளவிடத்தில் போடுவது வழக்கம்.

## MOSCHUS. *Musk.*

மஸ்க். கஸ்தூரி.

குணங்கள்.—மானைப்போல் இருக்கிற ஒருசாதி கொம்பில்லாத ஆண் மிருகத்தில் இருந்து கஸ்தூரி எடுக்கப்படுகின்றது. இதன் மேல்வாயின் சிங்கப்பற்கள் நீண்டு இருக்கும். கஸ்தூரி இருக்கிறப் பை, கோஜத் தோலுக் கருகாமை இருக்கும். இது அண்டவடிவாய், முன்புறத்தில் ரோமங்கள் இருக்கும்; பின்பக்கம் இராது. கஸ்தூரி புதுசாய் இருந்தால், மிருதுவாய், சிகப்பும் கறுப்பும் கலந்தசாயலாய், மெத்த வாசனையாய் இருக்கும். இது அநேக தேசங்களில் இருந்து வருகின்றது. இந்துக்கள் இதை, வாஸனைக்காகவும், மருந்தாகவும் அநேக நாளாய் உபயோகப்படுத்திக்கொண்டுவருகிறார்கள். கஸ்தூரியை மாறுபாடு மெத்தச் செய்வதுண்டு; அதை செவ்வையாய்ப் பரீக்ஷித்து நாம் கொள்ளவேண்டியது.

ACTION. Stimulant, Antispasmodic.

செய்கை. உபயோகம்.—உஷ்ணகாரி, அங்காகர்ஷணநாஸகாரி. கஸ்தூரி, நரம்பைப்பற்றிவருகிற அனேக ரோகங்களுக்குக் கொடுக்கப்படுகின்றது. காக்கை வலி, ஜூதகஜந்நி, சக்கிருமல், நாய்க்கடிஜந்நி, ரணஜந்நி, இவைமுதலிய கொடிய வியாதிகளுக்குக் கொடுக்கலாம். சுரத்தில் பலவீனம்கண்டு இருக்கிறபோதும், வாத்திபேதி முதலிய ரோகங்களில் காணுகிற ஆயாசத்திற்கும் கொடுக்கலாம். தமிழ் வைத்தியர் செய்கிற கஸ்தூரிமாத்திரை என்கிறமுறையில், இது சேருகின்றது; அதை, சுரம், ஜலுப்பு, மாந்தம் முதலியவைகளுக்குக் கொடுக்கிறார்கள்.

ஒ. அளவு.—௫ - முதல் ௨௰ - கிறேன் அளவுக்கு படிப்படியாய் அதிகரித்து கொடுக்கலாம்.

## **SEVUM.** *Suet.*

### ஸூயட். ஆட்டுக் கொழுப்பு.

ஆட்டுமாமிசம், தேகத்தைப் போஷிக்கும். குட்டிக்கறி வியாதியஸ்தர்களுக்கு கொடுக்கலாம். ஆட்டுக்கொழுப்பு கிட்னி அருகாமையில் இருக்கும்; இதை உருக்கி வடிகட்டி, உபயோகத்துக்கு வைத்துக்கொள்ளவேண்டியது. ஆட்டுக் கொழுப்பு அதிக சூடுகொண்டு உருகும்.

செய்கை. உபயோகம்.—ஸினிக்தகாரி. களிம்பு, பிளாஸ்திரி முதலியவைகள் செய்கிற முறையில் ஆட்டுக்கொழுப்பு சேருகின்றது.

## **LAC.** *Milk.*

### மில்க். பால்.

பசும் பால் மெத்த உபயோகமாகின்றது; ஆடு, எருமை, கழுதை, ஒட்டை இவைகளின் பாலும், உபயோகப்படுத்துகிறார்கள். பாலில் உண்டாகிற தயிர், மோர், வெண்ணெய், நெய், இவைகளும் போஜனபதார்த்தங்களாகின்றன.

செய்கை. உபயோகம்,—எண்ணெய் முதலியவைகளை, பாலோடுசேர்த்து கொடுக்கலாம். குழந்தைகளுக்குக் கொடுக்கிற மருந்துகளை, பாலில்சேர்த்துக் கொடுத்தால், அவைகள் விருப்பமாய்க் குடிக்கும். பால் தேகத்தைப்போஷிக்கும்; நோயாளிகளுக்குக் காய்ச்சுகிற கஞ்சியில், பாலைவிட்டுக் கொடுத்தால் நன்மைசெய்யும். பாலுக்கு நமது ஹிந்து ஜெனங்கள் சொல்லுகிற தோஷத்தை செப்பிமுடியாது. நோயாளி மெத்தத் தாருமாறாய் இருக்கிறபோது, முலைப்பாலைக் கொடுப்பது நமது வீட்டு வழக்கம். துணியை முலைப்பாலில் நனைத்து, தலை நோவுக்கு நெற்றிமேலும், சிற்றுமணக்கெண்ணெயுடன் கலந்து கண்ணோவுக்கும் போடுவது நல்லது. பாலை முறித்து, ஜலத்தை எடுத்து, நோயாளிகளுக்குத் தாகத்துக்குக் கொடுக்கலாம். தயிர், மோர் இவைகள் தேகத்தைக்குளிர்ச்சிபண்ணும். ஸ்தூல சரீரமுடையவர்கள், நெய்யை நீக்கிவைப்பது நல்லது.

## **ADEPS.** *Hog's Lard.*

### ஹாக்ஸ் லார்ட். பன்றிநெய்.

ஆட்டுக்கொழுப்பைப்போல், பன்றிக்கொழுப்பையும் பக்குவப்படுத்தி, நெய்செய்துகொள்ளவேண்டியது.

செய்கை. உபயோகம்.—ஸ்னிக்தகாரி. களிம்புகள் செய்கிற முறையில், பன்றி நெய் சேருகின்றது. கணச்சூட்டுக்கு பன்றிநெய் கொடுக்கிறார்கள். பன்றி இறைச்சி மூலரோகிகள் சாப்பிடலாம்; பன்றியின் உத்தாம்புள்ளே, அநேக காரியங்களுக்கு உபயோகமாகின்றது.

**CASTOREUM.** *Castor.*

காஸ்டர். நீர் நாயின் சவ்வாது.

குணங்கள்.—காஸ்டர் என்பது, கஸ்தூரியைப்போலொத்த ஒருவித பதார்த்தம். இது பீவர் (Beaver) என்னும் ஜெந்துவில் இருந்து எடுக்கப்படுகின்றது.

ACTION. Moderate Stimulant and Antispasmodic.

செய்கை. உபயோகம்.—அல்ப உஷ்ணகாரி, அங்காகர்ஷண நாஸ்காரி, ருது வர்த்தனகாரி. இது சூதகஜந்தி, காக்கைவலி முதலிய நரம்பைப்பற்றிய வியாதிகளுக்குக் கொடுக்கப்படுகின்றது.

ஓ. அளவு.—௰ - உ௰ - கிறேன் கொடுக்கலாம்.

**Tinctura Castorei.** *Ticture of Castor.*

டிங்சர் ஆவ் காஸ்டர்.

செய்முறை.—உ௫ - அவுன்ஸ் நொறுக்கிய காஸ்டர் என்னும் சரக்கை, உ - பையின்ட் ரெக்டிபைட் ஸ்பிரிட் என்னும் சாராயத்தில் போட்டு, எ - நாள் ஊற வைத்து வடிகட்டிக்கொள்ளவேண்டியது.

ஓ. அளவு.—க - முதல், உ - திராம் அளவுக்குக் கொடுத்தால், வலிகளை நிறுத்தும்.

---

௰-வது அத்தியாயம்.

## INDIGENOUS DRUGS.

## சுதேஸ மருந்துகள்.

The following is a list of a few Native drugs with their properties and uses, which may in many cases, be advantageously substituted for more costly European Medicines, or may be used with great success in cases of emergency.

இங்கிலீஷ்வாகடங்களில் இல்லாத தமிழ்மருந்துகள் அனேகமுண்டு; சுலபத்தில் அகப்படும்படியானதாயும், நாள்தோறும் உபயோகப்படுத்திக்கொண்டு வருகிறதாயுமிருக்கிற, சிலமுக்கிய மருந்துகளை இதனடியில் கூறப்படும். ஒவ்வொரு மருந்துகளுடைய குணமும், உபயோகமும் சொல்லப்புகின், நூல் மெத்த விரியும், ஆகையால் சங்கிரகமாய் இவ்விடத்தில் சொல்லியிருக்கின்றது. தமிழில் பெரிய கிரந்தங்களைப் பார்வையிட்டால், இன்னம் விசேஷமாய்த் தெரிந்துகொள்ளலாம்.

---

அகத்தி. (Agati grandiflora) (கீரை - பட்டை - பூ.)—மலகாரி, பலகாரி. அகத்திக்கீரை மலத்தை உதைக்கும், பித்தத்தைத் தணிக்கும், ரசத்தை, தேசுராத்

தில் குளிர்காணுகிறபோது ருசியமிடுகிறார்கள். பட்டையை கஷாயமிட்டுக்கொடுத்தால் பலம்வரும்.

அதிவிடையம். (வேர்)—பலகாரி, ஜாடராக்கினிவர்த்தனகாரி. இதின் சூரணத்தில்—௨ - விராகனிடைவீதம், நாள்பட்ட அதிசாரபேதிக்கு தினத்துக்கு ௨ - ஆவர்த்தி கொடுக்கலாம்; கஷாயமிட்டுங்கொடுப்பதுண்டு.

அத்தி. (Common Fig tree) (பட்டை - பால் - பிஞ்சு-விரை-கள்ளு.)—சங்கோசனகாரி. பட்டையை பெரும்பாடு, சீதபேதி, ரத்தமூத்திரம் இவைகளுக்குக்கொடுத்தால் குணமாகும். சூரணத்தில் ௭ - பலம் அளவுக்கும், வெந்நீர்க்கஷாயத்தில் ௧ - ஆழாக்குவீதம், இரண்டுவேளையும் கொடுக்கலாம். பட்டையை மோர்விட்டிடித்து பிழிந்தரசத்தில், ௭ - ஆழாக்குவீதம் கொடுக்கலாம். அத்திப்பாலை வெண்ணெயில்கலந்து நீரிழிவுக்கும், ரத்தபேதிக்கும் கொடுப்பதுண்டு; வீக்கங்களுக்கும் பூசுகிறார்கள். அத்திப்பிஞ்சு பத்தியத்துக்குதவும். விரையைப்பாயசஞ்செய்து சாப்பிட்டால் மலம் இறங்கும். அத்திக்கள்ளின்குணம் பலகாரி, வியதாபேதகாரி. மேகம், பித்தமயக்கம், தாகம் இவைகளுக்குக் கொடுக்கலாம்.

அந்தரத்தாமரை. ஆகாசத்தாமரை. (Pistia Stratiotes) (இலை)—சீதளகாரி, ஸினிக்தகாரி. கஷாயமிட்டு நீர்ச்சுருக்குக்குக் கொடுக்கலாம். அரைத்து மூலத்துக்குப் போடலாம். தேங்காய்ப்பால் சேர்த்து சீதபேதிக்கும், பன்னீர் சருக்கரை இவைகளைச் சேர்த்து இருமலுக்கும், சுவாஸகாசத்துக்கும் கொடுக்கப்படுகின்றது.

அமுக்கிராக்கிழங்கு. அசுவகந்தி. (Winter Cherry) (கிழங்கு)—சோபாநாசகாரி. சுக்குடன் அரைத்து வீக்கங்களுக்குப் பூசலாம்.

அரத்தை. (Galangal) (வேர்.)—பேரரத்தை, சித்தரத்தை என ௨ - சாதிகளிருக்கின்றன. பேரரத்தைக்கு, தும்பராஷ்டகம் என்றும், சித்தரத்தைக்கு சன்னராஷ்டக மென்றும் பேர். இவ்விரண்டுக்கும் குணம் ஒன்று. கபஹரகாரி, சுரஹரகாரி, ஜாடராக்கினி வர்த்தனகாரி. வெந்நீர்க்கஷாயஞ்செய்து, சுரம், இருமல், அக்கினிமந்தம் இவைகளுக்குக் கொடுக்கலாம். வேரை சாராயத்தில் ஊறவைத்து, வாதநோய்களுக்குப் பூசக்குணமாகும். ௧ - விராகனிடைச் சூரணம், ஒருவேளைக்குக் கொடுக்கலாம்.

ஆடாதோடை. (Malabar Nut) (இலை-வேர்)—சுரஹரகாரி, அங்காகர்ஷணஞசகாரி, கிருமிஞசகாரி. இதை வெந்நீர்க்கஷாயம்செய்து சுவாசகாசம், சீதசுரம், கிருமிரோகம் இவைகளுக்குக்கொடுக்கலாம்.

ஆடுதீண்டாப்பாளை. (Worm killer) (இலை.)—கிருமிநாசகாரி. இந்தப் பூண்டு கசக்கும். உலர்ந்தஇலையை வெந்நீர்க்கஷாயமிட்டு ௨ - ஆழாக்கு வீதம் கொடுத்தால், வயிற்றுக்கிருமிகள் நாசமடையும். இலை ரசத்துடன் எண்ணெய்க்கலந்து, சிரங்கு, கரப்பான், கருங்குஷ்டம் சிலந்தி இவைகளுக்குப் பூசலாம். இலையை ஜலத்தில் அலசி, சர்ப்பக்கடிக்கு உள்ளுக்குக் கொடுக்கப்படுகின்றது.

ஆலமரம். (Banyan tree) (பால்-பட்டை-விரை.)—சங்கோசனகாரி. ஆலம்பால் பல் நோவுக்குதவும்; கால்வெடிப்புக்குத் தடவலாம். பத்தியத்துடன் காலையில் சாப்பிட்டுவர, நாவக்ஷரம் நீங்கும். பட்டைக்கஷாயம் நீரிழிவுக்குதவும். ௧ - விராகனிடை வீதம் ஆலவிரை லேகியம் சாப்பிட்டுவர, தேகச்சூடு தணியும்.

ஆவாரை. (Eared Cassia) (பூ-விரை)—பூவை வெந்நீர்க்கஷாயஞ்செய்தும், விரையை லேகியஞ்செய்தும் நீரிழிவுக்குக் கொடுக்கலாம். ஆவாரைப் பூவுடன் பச்சைப்பயறு சேர்த்து உடம்பு தேய்த்து ஸ்நானம் செய்துகொண்டுவந்தால், கற்றாழைநாற்றம் நீங்கும்.

இந்துப்பு-இந்துநாட்டுப்பு. (Indus). ஸயிந்தியலவணம் - சிந்துதேச உப்பு. (Sinde) (Rock salt)—விரேசனகாரி. நில ஆவாரையோடுசேர்த்துக்கொடுத்தால் பேதியாகும். மலபந்தத்தால் காணுகிற ரோகங்கள் நீங்கிவிடும்.

இன்புருவேர். சிறுவேர். (Chay Root.) (இலை-வேர்)—கபஹரகாரி. கஷாயமிட்டு, கபரோகம், சுவாஸகாசம் இவைகளுக்குக் கொடுக்கலாம். இலைத்தூளை அரிசிமாவுடன் சேர்த்து, ரொட்டிசுட்டுக் கொடுத்தாலும், ஷை ரோகங்கள் குணமாகும்.

இஸ்போகல் விரை. இஸ்கோல்வித்து. (Spogel Seed)—ஸினிக்தகாரி. ௩ - விராகனிடை இஸ்போகல் விரை, ௨ - விராகனிடை அதிமதுரம்; இவைகளை ௧ - படி வெந்நீரில் போட்டு ௩ - மணிநேரம் ஊறவைத்து வடிகட்டி, ௧ - ஆழாக்கு அளவுக்கு அடிக்கடிக் கொடுக்கலாம். நீர் எரிச்சல், பிரமேகம், இருமல், இவைகள் குணமாகும்.

உத்தாமணி. வேலிப்பருத்தி. (Dæmia extensa) (இலை)—அங்காகர்ஷணநாஸகாரி. வெந்நீர்க்கஷாயமிட்டு, வலி, இளைப்பு, மாந்தம், இவைகளுக்குக் கொடுக்கலாம். ரசத்தோடு சுண்ணும்பு சேர்த்து வீக்கங்களுக்குப் பூசக் குணமாகும்.

எள்ளு. (Sesamum seed)—எள்ளுநெய். நல்லெண்ணெய் அநேககாரியங்களுக்கு உபயோகமாகின்றது. சீமை எண்ணெய்க்குப் பதிலாய் இதை உபயோகிக்கலாம். தைலமுறைகளில் சேருகின்றது. மல்லிகை, சாமந்தி, ரோஜா, இவ்வித வாசனையுள்ள பூவில் எதையாவது, ௧ - க்கு - ௩ - பங்கு கூறல் எண்ணெயில் ௪௰ - நாள் ஊறவைத்தால், பூவின்மணம் எண்ணெயில் இறங்கும்; அதை சிரசுக்குபயோகிக்கலாம். நல்லெண்ணெயை நாள்தோறும் சாப்பிட்டுக் கொண்டு வந்தால், தேகம் பூரிக்கும், சொறிசிரங்கு நீங்கும், இருமல் தணியும். இதை ரணங்களுக்குப் பூசலாம்.

ஓமம். (Omum) (வித்து)—உஷ்ணகாரி, கர்ப்பவாதஹரகாரி. இதை வயிற்றுவலி, பேதி, வாந்தி, மாந்தம், வயிற்றிரைச்சல், அஜீரணம் இவைமுதலிய ரோகங்களுக்குக்கொடுக்கலாம். ஓமத்திநீர் (Omum water) செய்முறை.—௧ - வீசை ஓமத்தை சல்லாத்துணியில் முடிந்து வாலையில் தொங்கவைத்து (அடியில் படிந்தால் காந்திவிடும்), ௬ - புட்டி தண்ணீர்விட்டு, ௪ - புட்டிக்கு வடித்துக்கொள்ளவும். திநீரின்மேல் தைலம் மிதக்கும்; அதை கோழியிறகால் சேகரித்துக் கொள்ளவேண்டியது. ஓமத்தைலம்; மெத்தகாரமுள்ளது; ௧ - ௨ - துளி சருக்கரையில் விட்டுக்கொடுக்கலாம். அதிக சூடுபட்டால் ஓமம் கெட்டுப்போகும், வறுக்கலாகாது. இதை அரைத்தாவது, வெந்நீர்க்கஷாயஞ் செய்தாவது கொடுக்கலாம். ஓமம் அனேக முறைகளில் சேருகின்றது.

கஞ்சாங்கோரை. (White Basil) (இலை)—உஷ்ணகாரி, கர்ப்பவாதஹரகாரி. ரசத்தில் ஒருபாலடை அளவுக்குக் குழந்தைகளுக்குக் கொடுத்தால், இருமல், மாந்தக்கழிச்சல், சுரம் இவைகள் நீங்கும். இலையை உலர்த்தித் தேயிலைக்குப் பதிலாய் இங்கிலீஷ்காரர்கள் உபயோகப்படுத்திக்கொள்ளுகிறார்கள்.

கடலைப்புளிப்பு. (Vinegar of the Bengal Horse-gram)—கடலைச்செடிமேல்விழுகிறபனியைச் சல்லாத்துணியைப்போட்டுச் சேகரித்துப்பிழிந்து எடுத்துக்கொள்ளப்படும். இது புளிக்கும்; ஜலத்தில்விட்டுக் குடிநீராகச்செய்து கொடுத்தால் அனலைத் தணிக்கும். அதிகமானால் தூர்க்குணம் நேரிடும்.

கடுக்காய். வரிக்காய். அரிதகி. (Chebulic Myrobalan, or Ink-nut)—சங்கோசனகாரி, மலகாரி. கடுக்காயில் அனேகசாதிகளிருந்த போதிலும், குண

த்தில் மெத்த வித்தியாசமிராது. காபூலிகடுக்காய் சிறந்தது. கடுக்காய், காசுக்கட்டி, இவைகளை சமனாய் அரைத்து, நாக்குரணத்துக்குத் தடவலாம். கடுக்காயை இழைத்துக்குழந்தைகளுக்குத் தலைக்கு வார்த்தபிறகு நாக்குமேல் தடவுகிறது வீட்டு வழக்கம். உப்புபேதி கஷாயத்தில் இதைச்சேர்க்கலாம். கடுக்காய், பழரசம் இவைகளைச்சேர்த்து, பாவனக்கடுக்காய் என்று செய்வது ஒருமுறை. கடுக்காயைத் துவையல்செய்து சாப்பிட்டால் அரோசகம் நீங்கும், மலம் இறுகும். வெந்நீர்க்கஷாயமிட்டு கண்ணோவுக்கும், அதிமூத்திர ரோகத்துக்கும் உபயோகிக்கலாம். கடுக்காய் பிஞ்சுமேல் ஆமணக்கெண்ணெய் தடவி, வறுத்துத் தூள்செய்து சீதபேதி ரோகத்துக்குக் கொடுக்கலாம். கடுக்காய் பூவுக்கும் (கர்க்கடகசிங்கி) துவர்ப்புகுணம் இருக்கின்றது. கடுக்காயோடு ரோஜாப்பூ சேர்ந்தால் மலம் இறுகாது; கடுக்காய்ப் பொடியால் பற்றுலக்கினால், ஈறிலிருந்து வடிகிற ரத்தம் நின்று, ரணம் ஆறி, ஈர்வளர்ந்து, நோய்த்தணிந்து பல் இறுகும். கடுக்காயை ஒருவருஷம் விடாமல் காலையில் சாப்பிட்டுக்கொண்டுவந்தால், தலைமயிர்நரையாது என்று கண்டிருக்கின்றது. கடுக்காய்த்தூள் மூலத்தின்மேல் தூவலாம், ரத்தபீனசத்துக்கு நஸியமிடலாம். ௬ - கடுக்காயை நொறுக்கி விரையைநீக்கி, ௧ - விராகனிடை கிராம்பு அல்லது லவங்கப்பட்டைச் சேர்த்து, ௬ - ஆழாக்கு ஜலத்தில் போட்டு ம - நிமிஷம் காய்ச்சி வடிகட்டி சாப்பிட்டால், வயிறுகடுப்பு வாந்தி இவைகளில்லாமல் ௩ - ௪ - தடவை செவ்வையாய்ப் பேதியாகும். ஜலத்துக்குப்பதில் பாலைச்சேர்த்துக் கொள்ளலாம். சீதபேதிக்கு இதைக் கொடுத்தால் மெத்தநன்மைசெய்யும்.

கண்டுபாரங்கி. சிறுதேக்கு. (வேர்)—இத்துடன் சுக்கு, கொத்துமல்லி, இவைகளைச்சேர்த்து வெந்நீர்க்கஷாயமிட்டு, குமட்டல், சுரம், இருமல் இவைகளுக்குக் கொடுக்கலாம்.

கருஞ்சீரகம். (Nigella sativa.) (விதை)—இதை அரைத்து எண்ணெயில் குழப்பி சிரங்குக்குப் பூசலாம்.

கருநொச்சி. (Gendarussa Vulgaris.) (இலை)—ரசத்தை கடுகுடன்சேர்த்துக் கொடுத்தால் வாந்தியாகும். எண்ணெயோடுசேர்த்து 'வீக்கங்களுக்குத்தேய்க்கலாம். இலையை வெந்நீர்க்கஷாயமிட்டு சுரங்களுக்குக் கொடுக்கப்படும். இந்த இலையை ஜலத்தில்போட்டு காய்ச்சி சுரத்தில் உடம்புக்கு வார்த்துக்கொள்ளலாம். உப்புசேர்த்து வறுத்து மூட்டுவலிகளுக்கு ஒற்றிடம் கொடுக்கலாம்.

கருந்துளசி. (இலை)—இருமல், சளுப்பு இவைகளுக்குகொடுக்க உதவும்.

கருவேப்பிலை. கறிவேப்பிலை. கறியபிலை. (Curry leaf)—உஷ்ணகாரி, ஜாடராக்கினி வர்த்தனகாரி, மலகாரி. இலையை லேகியமாயாவது, வெந்நீர்க்கஷாயமாயாவது செய்து, வாந்திநிறுத்தக் கொடுக்கலாம். ஈர்க்குபரணையை முலைப்பால் விட்டிடித்து ரசம்பிழிந்து, கிராம்பு திப்பிலி சேர்த்து குழந்தைகளுக்கு வாந்திநிற்க, தினத்துக்கு ௨ - ௩ - தடவை கொடுக்கலாம். கறியபிலை துவையல் அரோசகம், சுரம், பித்தம், வயிற்றுளைச்சல் இவைகளுக்கு உபயோகித்தால் நலந்தரும்.

கருவேல் மரம். (Babool tree) (பிசின் - பட்டை)—விளாம்பிசினுக்குப் பதிலாய் இது உபயோகப்படுகின்றது. பட்டையைக் கஷாயமிட்டுக் கொடுத்தால் பலம் வரும்; வாய் கொப்புளித்தால் ரணம் ஆறும்; ரணங்களைக் கழுவினால் சீக்கிரத்தில் உலரும். அரைப்புக்குப் பதிலாய் உபயோகிக்கலாம். கருவேலன் பட்டை, பனைவெல்லம் இவைகளைச் சேர்த்துக் காய்ச்சி, பட்டை சாராயம் (Arrack) இறக்குகிறார்கள்.

கர்ப்பூரவள்ளி. (Thick-leaved Lavender) (இலை)—கபஹரகாரி. இலையை வதக்கி ரசம் பிழிந்து, கோரோஜன மாத்திரை சேர்த்து குழந்தைகளுக்கு ஜலுப்புக்கும் இருமலுக்கும் கொடுக்கலாம்.

கழற்சி. களிச்சிக்காய். (Bonduc nut.) (வித்து - இலை)—சோபாநாசகாரி, சுரஹரகாரி, பலகாரி. பருப்பில், ൰ - கிறென் இடைக்கு குளிர்காய்ச்சலுக்குக் கொடுக்கலாம். மிளகு ௪൰ - கிறேன், பெருங்காயம் ௨൰ - கிறேன், கழற்சிப் பருப்பு ௱ - கிறேன். இவைகளைத் தேன்விட்டிடித்து ௩൰ - மாத்திரைகள் செய்து, ௨ - மாத்திரை வீதம் தினத்துக்கு ௨ - ௩ - ஆவர்த்தி சீதசுரத்துக்கு சுரமில்லாதபோது கொடுக்கலாம். விரைவாதத்துக்கு பருப்பை அரைத்துப்பற்றுப்போடலாம், அல்லது இலையை தேங்காய்ப்பூ சேர்த்து வதக்கிக் கட்டலாம். வச்சிரபீஜ தைலத்தில் கழற்சி பருப்பு சேருகின்றது.

கள்ளி. (Milk-hedge) (பால்)—கொடிக்கள்ளி, இலைக்கள்ளி, சதுரக்கள்ளி, திருகுக்கள்ளி என முக்கியமாய் ௪ - சாதிகளுண்டு. இவைகளின் பாலுக்கு பேதியாகிற குணம் இருக்கிறது. கள்ளிப்பாலை புளியில் கறந்து பேதிக்குக் கொடுப்பது வழக்கம்; சிலருக்கு அதிக பேதியாகி துர்க்குணத்தைச் செய்கிறது. மேலே தடவினால் புண்ணாகும். கீல்வாதத்துக்குத் தடவி வேர் மண்ணைப் போடுகிறதுண்டு. பட்டை நரம்புசிலந்திக்குக்கட்ட உதவுமாம். மற்ற இனங்கள், தைலமுறைகளில் சேருகின்றன. கொடிக்கள்ளியையாவது, இலைக்கள்ளியையாவது வதக்கி ரசமெடுத்துச் சிறு குழந்தைகளுக்கு பேதிக்கு வார்க்கிற வழக்கம் கெட்டது.

கற்றாழை. (Small Aloe) (மடல்)—இதில் பல இனங்களுண்டு. கற்றாழை சோற்றை எடுத்து பால் போக நன்றாய்க் கழுவி, சல்லாத்துணியில் போட்டு படிக்காரப் பொடியைத்தூவி, கண்ணோவுக்கு ஒற்றிடம் கொடுக்கலாம். இதை வீக்கங்களுக்கும் கட்டலாம். இதை கற்கண்டு சேர்த்துச் சாப்பிட்டால், தேகச்சூடு தணியும்.

காக்கட்டான். (Clitoria Ternatea.) (வித்து - வேர்)—இதில் வெள்ளை நீலம் என ௨ - சாதிகளுண்டு; வெள்ளையினம் நல்லது. விரையை நெய்விட்டு இளவறுப்பாய்வறுத்துத் தூள்செய்து, க - விராகனிடை கொடுத்தால் பேதியாகும். திராக்ஷ உப்பைச் சேர்த்தும் கொடுக்கலாம். வேரின் சூரணத்தில் ௨ - ௩ - வயது குழந்தைக்கு, ൦ - விராகனிடை கொடுத்தால், ஒக்காளிக்கும். சிலவேளை வாந்தியாகும். கபரோகத்துக்கு நல்லது.

காமாக்ஷிப்புல். வாசனைப்புல். காவட்டம்புல். (Lemon grass)—வாசனையுடைய இந்தப் புல்லை கஷாயமிட்டு குழந்தைகளுக்குக் கொடுத்தால் பசி எடுக்கும், வியர்வை பிறக்கும். புல்லை மோர்விட்டரைத்து எச்சிற்றழும்புக்குப் பூசலாம். தைலத்தை வாதநோய்களுக்குப் பூசலாம்.

கீழ்வாய் நெல்லி. கீழாநெல்லி. (Phyllanthus Niruri.) (சமூலம்)—பித்தசமனகாரி. மூத்திரவர்த்தனகாரி. இதை அரைத்து ൦ - பலம் வீதம் ஒரு ஆழாக்குப்பாலில் கலக்கித்தினத்துக்கு ௨ - வேளை கொடுத்துக்கொண்டுவர, மஞ்சள் காமாலை நீங்கிவிடும். சூரணமாகவும், கஷாயமாகவும் பிரயோகிப்பதுண்டு. தளிர்களை வெந்தியம் சேர்த்து, வெந்நீர்க்கஷாயமிட்டு வயிறு கொட்டலுக்குக் கொடுக்கலாம். இலைத்தூளில் ௨ - திரிகடி அளவுக்கு தேனில் கலந்து கொடுத்தால், தீபனத்தை அதிகப்படுத்தும். இது தைலமுறைகளில் சேருகின்றது.

குப்பைமேனி. (Indian Acalyphe) (வேர் - இலை)—விரேசனகாரி. வேரை அரைத்துக்கொடுத்தால் பேதியாகும். இலைத்தூளில் ௩௰ - ௪௰ - கிறேன் இடைக்கு ஷர்பத்தில் கலந்து கொடுத்தால் கிருமியை வெளிப்படுத்தும். இலைரசத்துடன் வேப்பெண்ணெயைச் சேர்த்துக் குழந்தைகளுக்கு நாக்கில் தடவினால், குமட்டலுடன் கபம் வெளிப்படும். இலைச்சத்தில் உப்புசேர்த்து சொறிசிரங்குக்குப் பூசலாம். குப்பைமேனி தைலம் கீல்வாதத்துக்குப் பூசலாம்.

குன்றிமணி. குண்டுமணி. (Wild Liquorice) (வேர்-இலை)—கபஹரகாரி. இதில் சிவப்பு, கறுப்பு, வெள்ளை என மூன்றுசாதிகளுண்டு. வித்தை தின்றால் குற்றமில்லை. ஈஜிப்ட்தேசத்தில் இதைப் போஜனமாய்ச் சாப்பிடுவதுண்டு. வேர் அதிமதுரத்துக்குப் பதிலாய் உபயோகப்படுகின்றது. இலைத்தூளில் சருக்கரை கலந்து கொடுத்தால் இருமல் தணியும். ௨ - பலம் வேரை ஒரு புட்டி வெந்நீரில் போட்டு ஊறவைத்து வடிகட்டி, ௮ - பலம் கற்கண்டாவது, தேனாவது சேர்த்துக் காய்ச்சி பாகுசெய்து, இதில் ஒரு உச்சிகரண்டி பிரமாணம் குழந்தைகளுக்குக் கொடுத்துக்கொண்டுவந்தால் இருமல் தணியும்.

குறிஞ்சா. கொடிக்குறிஞ்சா. (Country Ipecacuanha) (வேர் - இலை)—வமனகாரி. வேரை வெந்நீர்க்கஷாயமிட்டு குழந்தைகளுக்குக் கொடுத்தால் வாந்தியாகும், கபம் வெளிப்படும். இலைத்தூளில் ௨௰ - ௩௰ - கிறேன் கொடுத்தால் வாந்தியாகும். ௩ - ௫ - கிறேன் குறிஞ்சா இலைத்தூள், ௨௰ - கிறேன் விளாம்பிசின், ௧ - கிறேன் அபினி; இவைகளைக் கூட்டி மாத்திரை செய்து கொடுத்தால் பேதி, சீதபேதி இவைகள் குணமாகும். நாள்பட்ட இருமலுக்கும், கக்குவானுக்கும் கொஞ்சமாய்க் கொடுக்கலாம்.

கையாந்தகரை. கரசிலாங்காணி. (Eclipta Erecta)—(சமூலம்) இதைக் கஷாயமிட்டு சுரம், மாந்தம் இவைகளுக்குக் கொடுக்கலாம். தைல முறைகளில் சேருகின்றது.

கோஷ்டம். விரணாரி. (Costus Arabicus) (வேர்)—இதை வெந்நீர்க்கஷாயமிட்டு தோஷசுரங்களுக்குக் கொடுக்கலாம். பசியெடுக்கும், பலம்வரும்.

கோரைக்கிழங்கு. முத்தக்காசு. (Cyperus Juncifolius) சுவேதகாரி, மூத்திர வர்த்தனகாரி. இதைக் கஷாயமிட்டு சீதசுரத்தில் கொடுத்தால், வியர்வை பிறக்கும். வாசனைக்காக, அனேக முறைகளோடு சேர்க்கப்படும்.

கோரோசனை. (Biliary Calculus of a Cow or Ox)—பசு அல்லது எருதின் பித்தப்பையில் உண்டாகிற ஒருவிதக்கல்லு. இது எப்போதும் ஒரு பையில் அடங்கி இருக்கும். ௨ - ௩ - புளியங்கொட்டைப் பரிமாணமிருக்கும், நிறம் மஞ்சள். பால வைத்திய சிகிச்சையில் இது மெதத உபயோகப்படுகின்றது. ௧ - சடுகு பரிமாணம், வெற்றிலைரசத்திலாவது, முலைப்பாலிலாவது இழைத்துச் சுரம், சனுப்பு, மாந்தம் முதலிய ரோகங்களுக்குக் கொடுப்பதுண்டு. கோரோசன மாத்திரை—செய்முறை.—கோரோசனம், குங்குமப்பூ, கர்ப்பூரம், பச்சை கர்ப்பூரம், ஏலம், கிராம்பு, கோஷ்டம், சாதிக்காய், அக்கிராகாரம், வசுக்கு பலம் - ௧. இவைகளைச் சநதனக்கட்டையின் கஷாயம்விட்டு மைபோல் அரைத்துக் குன்றிபோலுண்டைசெய்துகொள்ளவேண்டியது. ரசசெந்தூரம், அப்பிரகம், இவைகள் கொடியதாகையால் நீக்கலாயிற்று. சண்பகப்பூ கஷாயம், குங்குமப்பூ கஷாயம், நிமித்தமில்லை. (வைத்திய ரத்தினச்சுருக்கம்.) இங்கிலீஷ் வைத்தியத்தில் கோரோசனை அப்பிரயோஜனமான சரக்கு.

சாம்பிராணி. (Benzoin)—இதை எண்ணெயில் காய்ச்சி காது வலி, வாத நோய் இவைகளுக்கு உபயோகிக்கலாம். சாம்பிராணிப்புகை சலதோஷத்தையும் கெட்டவாசனையும் நீக்கும். சாம்பிராணி, கஸ்தூரிமஞ்சள், அபினி, சுக்கு, இவைகளை அரைத்து தலைவலிக்கு நெற்றிமேல் பூசலாம். சாம்பிராணி தைல

த்தை, நெற்றியிலும், கன்னப்பொறியிலும் தடவினால், சலுப்பு, தலைவலி, நீர்ப்பீனசம் இவைகள் குணமாகும். சாம்பிராணி சத்தை சருக்கரையில் கலந்து கபரோகத்துக்குக் கொடுக்கலாம்.

சித்திரமூலம். கொடிவேலி. (Leadwort) (வேர்)—விரணகாரி, உஷ்ணகாரி. இதில் சிவப்பு, வெள்ளை, நீலம், என ௩ - சாதிகளுண்டு. பச்சை வேரை வடிகஞ்சிநீர் விட்டு அரைத்துத் துணியில் சன்னமாய் தடவி ௧ - மணி நேரம் உடம்புமேல் போட்டுவைத்துப் பிறகு எடுத்துவிட்டால், போட்டவிடம் கொப்புளித்துப் புண்ணாகும். அரையாப்புக்கட்டிமேலும், இருமலுக்கு மார்பின்மேலும் போடலாம். அநேக மருந்து டாப்புகளோடு சேருகின்றது ; இது மெத்த கெடுதி செய்கிற வஸ்துவாகையால் நீக்கிவைப்பதே உத்தமம். வேரை எண்ணெயில் கலக்கி வாதநோய்களுக்குப் பூசலாம். ஸ்திரீகள் கருப்பிண்டத்தைக் கரைக்க, இதை அரைத்துத் தின்று தேக சவுக்கியத்தை விருதாவில் கெடுத்துக்கொள்ளுகிறார்கள். இதற்குக் கருப்பையை உஷ்ணிக்கிற குணம் இல்லை. சிலர் சித்திரமூலக்குச்சியையாவது அல்லது அதை நறுக்கி மெல்லியதுணியில்வைத்து, திரிசெய்தாவது கருப்பை வாயில் வைத்து புண்ணாக்கிப் பிண்டத்தை வெளிப்படுத்திவிடுகிறார்கள். இது மெத்த உபத்திரவமான செய்கை. இச்செய்கை துரைத்தனச்சட்டத்துக்கு விரோதமாகையால், இதை செய்துகொள்ளுகிறவர்களுக்கும், செய்கிறவர்களுக்கும் பலமான தண்டனை கிடைக்கும்.

சிவதைவேர். (Indian Jalap.)—விரேசனகாரி. வேர்ப்பட்டையை அரைத்து, பாலில் கலந்து கொடுத்தால் பேதியாகும். ௬ - அங்குலவேர் ஒருவேளைக்குப் போதுமானது. ஜாலப்புக்குப் பதிலாய் இதை உபயோகிக்கலாம். அதைப்போல் வெகுட்டலிராது. திராக்ஷ உப்பையும் சேர்த்துக்கொள்ளலாம்.

சிற்றாமுட்டி. (Pavonia Zeylanica) (வேர்)—சுரஹரகாரி. இதைக் கஷாயமிட்டு சுரங்களுக்குக் கொடுக்கலாம். தைல டாப்புகளில் சேருகின்றது.

சீமை யகத்தி. வண்டுகொல்லி. (Ringworm shrub) (இலை)—இதை எச்சிற்றழும்புக்குத் தேய்க்கலாம். இலை ரசத்தை தேங்காய்ப்பாலில் கலந்து சிரங்குக்குப்பூச குணமாகும்.

சீயக்காய். சிகைக்காய். (Acacia Concinna) (காய் - கொழுந்து)—காயைக்கொடுத்தால், பேதியும் வாந்தியும் ஆகும். நஸியமிட உதவும். கொழுந்தைத் துவையல் செய்து சாப்பிட்டால் பித்தசமனமாகும் ; புளிக்குப்பதிலாய் இதைச் சேர்த்துக்கொள்ளலாம்.

சுருளுபட்டை. செங்கத்தாரிப்பட்டை.—இதைத் தேங்கா எண்ணெயில் போட்டுக் காய்ச்சி ரணங்களுக்குப் போட்டால், சீக்கிரத்தில் உலரும்.

செம்பை. (Sesbania Ægyptiaca) (இலை)—இதில் ௨ - சாதிகளுண்டு. இலையை விளக்கெண்ணெய்விட்டு வதக்கி கட்டிகளுக்குக் கட்டினால் சீக்கிரத்தில் பழுக்கும், வீக்கம் கரையும்.

செம்மரம். (Red wood)—இதைக் கஷாயமிட்டு சீதசுரத்துக்கு கொடுக்கலாம். அதிகமானால் மயக்கங்காணும். இதை யிழைத்து வீக்கங்களுக்குப் பூசுவதுண்டு.

தகரை. (Cassia Tora) (வேர்-விதை)—வேரைப் பழரசம் விட்டரைத்துப் படர்தாமரைக்குப் போடலாம். விதையை அரைத்து மோரில் கலந்து, சொறிசிரங்குக்குப் பூசலாம்.

தாளிசபத்திரி. (Flacourtia Cataphracta.) (இலை)—சங்கோசனகாரி. சாடராக்கினிவர்த்தனகாரி. பேதி, சீதபேதி, சுரம், துர்ப்பலம், காசம், இவைகளுக்கு, ௧ - விராகனிடை வீதம் கொடுக்கலாம். தொண்டைக் கம்மலுக்கும் கொடுப்பதுண்டு. தாளிசபத்திரி சூரணம்—செய்முறை.—தாளிசபத்திரி பலம்-

டி, திரிகடுகு, திரிபலம், கோஷ்டம், அக்கரகாரம், யானைத்திப்பிலி, சீரகம், கொத்துமல்லி, வாய்விளங்கம், கிராம்பு, ஏலம், சாதிக்காய், சாதிபத்திரி, சடாமாஞ்சி, சோம்பு, வால்மிளகு, லவங்கப்பட்டை, வகைக்குப் பலம், க. இடித்துச் சூரணித்து, சரி இடை சருக்கரை கூட்டிக்கொண்டு, திரிகடிப் பிரமாணம் கொள்ள, காசம், அஸ்திசுரம், தாகம், பித்தபாண்டு, கிரகணி, அரோசகம், பொருமல், விக்கல், கை காலெரிவு, இவை முதலானவைகள் தீரும். (வைத்தியசார சங்கிரகம்.)

தான்றிக்காய். (Terminalia Bellerica)—இதற்குத் துவர்ப்பு குணமுண்டு. மேக ரணத்துக்கு இழைத்துப் போடலாம். அநேக டாப்பு முறைகளில் சேருகின்றது.

திருநீற்றுப்பச்சை. திருநீற்றுப்பத்திரி. ருத்திரசடை. சப்ஜா. (Sweet Basil) (இலை-விரை)—சப்ஜா விரைக்கு குழகுழப்புண்டு. இதை வெந்நீரில் போட்டு ஊறவைத்து, மேகம், இருமல், வயிறுகொட்டல், அதிசாரம் இவைகளுக்குக் கொடுக்கலாம். ரசத்தை காதிலிட வலி நிற்கும். சீமையில் வாசனைக்காக போஜன பதார்த்தங்களோடு இதைச் சேர்ப்பதுண்டு.

துளசி. (Holy Basil) (வேர் - இலை)—வேரைக் கஷாயமிட்டு, சுரங்களுக்குக் கொடுக்கலாம். இலைரசத்தைக் குழந்தைகளுக்குக் கொடுத்தால், இருமல் குணமாகும். பழரசம் சேர்த்துச் சிரங்கு, படை, தழும்பு இவைகளுக்குத் தடவலாம். துளசிவிரை வெந்நீர்க் கஷாயத்தை, இருமலுக்குக் கொடுக்கலாம்.

தூதுளை. (Solanum Trilobatum) (சமூலம்)—இதைக் கஷாயமிட்டு, இருமலுக்குக் கொடுக்கப்படும். இலையை லேகியமாயும், துவையலாயும்செய்து கொடுப்பதுண்டு.

நாயுருவி. (Achyranthes Aspera) (சமூலம்)—இலையை அரைத்துத் தேள் கொட்டின விடத்தில் தடவினால் சவுக்கியத்தைத் தருமென்று கண்டிருக்கின்றது.

நாய்த்துளசி. (இலை)—இதின் ரசத்தைக் கொடுத்தால், இருமல் தணியும், மாந்தம் அறும்.

நாய்வேளை. (Polanisia Icosandra) (இலை)—இதை அரைத்துக் கட்டினால் தோல் சிவக்கும். நீரை கிரகிக்குமென்பது சந்தேகம். விதைக்கு நாய்க்கடுகு என்று பேர். இதைத்துவையல் செய்து நோயாளிகளுக்குக் கொடுக்கலாம்.

நிலவிளா. குட்டிவிளா. நரிவிளா—இலையை வெந்நீர்க் கஷாயமிட்டு, அதிகதாகம், பித்தம், சுரம் இவைகளுக்குக் கொடுக்கலாம்.

நீர்முள்ளி. (Asteracantha Longifolia) (சமூலம்)—இதைக் கஷாயமிட்டு, ௩ - ஆழாக்கு வீதம் நீர்க்கோவைக்குக் கொடுத்தால், நீர் அதிகமாய் இறங்கும். இதின் சாம்பலை சிறுநீரில் கலந்து, வீக்கத்துக்கு தடவுகிறதில் பிரயோசனமில்லை.

நெல்லி. (Emblica Officinalis) (காய் - பட்டை - விதை)—விரையையாவது, வற்றலையாவது கஷாயமிட்டுக் கொடுத்தால் சூடு தணியும், பித்த மயக்கம் தாகம் அடங்கும், ஓக்காளம் நிற்கும். பட்டையைக் கஷாயமிட்டுக் கொடுத்தால் பேதிகட்டும். நெல்லிக்காய் ஊறுகாய், அல்லது துவையல், நோயாளிக்குக் கொடுக்க உதவும். அரோசகத்தை எடுக்கும்.

நெருஞ்சி. (Tribulus Lanuginosus) (சமூலம்)—ஸினிக்தகாரி, மூத்திரவர்த்தனகாரி. இதை ஜலத்தில் ஊறவைத்து, இறுத்துச் சருக்கரையைச் சேர்த்து, சீழ்மேகத்துக்கும், நீர்க்கடுப்புக்கும் கொடுக்கலாம். யானை நெருஞ்சிலுக்கும் இதுவே குணம்.

நொச்சி. (Gendarussa Vulgaris) (இலை)—நொச்சியிலைபோட்டு காய்ச்சின ஜலம் ஒற்றிடம்கொடுத்தாலும், ஸ்நானம்செய்தாலும், வாதநோய் உடம்புவலி இ

வைகளை எடுக்கும். இலையைவதக்கி, உப்புதூவி மூட்டுநோய்களுக்கும், தலைவலிக்கும், பீனசத்துக்கும் கட்டலாம். நொச்சியிலை ரசத்தில் கடுகு கலந்து கொடுத்தால் வாந்தியாகும். நொச்சியைத் துணிகளோடு வைத்தால், பூச்சிகள் அணுகாது.

பப்பளிசெடி. (Papaw Tree)—இளம்பிஞ்சில் பால் அதிகம். ஆட்டிறைச்சி, கோழிமாமிசம் இவைகளை உ - ௩ - மணிநேரம் இந்தச்செடிக்கீழ் கட்டிவைத்துச் சமைத்தால் மிருதுவாகும். காயை மாமிசங்களோடு சேர்த்து சமைத்தால் மிருதுவாகும். பாலைக்குடித்தால் வயிற்றிலிருக்கிற பூச்சி வெளிப்படும். பல்நோவுக்குப் போடுவதுண்டு. கரு தரிக்காமலிருக்கப் பழத்தைச் சாப்பிட்டுக்கொண்டு வருவதுண்டு. கருவை அழிக்க சாப்பிடுகிறார்கள், ஆனால் சந்தேகம்.

பற்பாடகம். (Mollugo Cerviana)—இதை வெந்நீர்க் கஷாயமிட்டு சுரங்களுக்குக் கொடுத்தால் வியர்வை பிறக்கும்.

பிரண்டை. (Vitis Quadrangularis)—இதை மஞ்சளோடிடித்து நாய்க்கடிக்குக் கட்டுவதுண்டு. கொழுந்தை உலர்த்தித் தூள்செய்து பேதிகட்டக் கொடுப்பது வழக்கம். துவையல்செய்து சாப்பிட்டால் அதிக பசியெடுக்கும்.

பிரமதண்டு. (Yellow Thistle)—பாலைக் கண்ணோவுக்குச் சுற்றிலும் போடுவதுண்டு. மேகரணத்துக்குத் தடவுகிறார்கள். விதையைக்கொடுத்தால் வாந்தியாகும், நித்திரைவரும். தைலத்தில் ௩0 - துளி சருக்கரையில்விட்டுக்கொடுத்தால், வயிற்று வலியை உடனே நிறுத்தும், நித்திரை யுண்டாகும், மலம் உதையும்.

புங்கன். (Pongamia glabra) (வேர்)—ரசத்தைப் புரைகள் ஓடுகிற ரணங்களுக்கு உபயோகித்தால், சீக்கிரத்தில் உலரும். புங்கின் நெய் கரப்பான் சொறிசிரங்கு இவைகளை ஆற்றும்.

பூவரசன். (Portia Tree)—காயின் ரசத்தை எற்சிற்றமும்புக்குப் பூசலாம். பட்டை கஷாயங்களிலும், தைலங்களிலும் சேருகின்றது.

பேய்ப்புடல். (Trichosanthes Cucumerina)—இதைக் கஷாயமிட்டுச் சுரம், இருமல் இவைகளுக்குக் கொடுப்பதுண்டு. இலை ரசம் வாந்தியாகும். வேர் ரசம் பேதியாகும்.

பொடுதலை. பொற்றலைக் கையாந்தகரை. (Zapavia nodiflora) (சமூலம்)—இதைக் கஷாயமிட்டுக் குழந்தைகளுக்குக் காணுகிற மாந்தம், பேதி, இவைகளுக்குக் கொடுக்கலாம்.

மணத்தக்காளி. (Solanum Nigrum) (கீரை - விதை)—இதில் சிவப்பு - கறுப்பு என இரண்டு சாதிகளுண்டு. இலை ரசத்தில் சருக்கரையைச் சேர்த்து, அக்ஷரம் கரப்பான் இவைகளுக்குக் கொடுக்கலாம். கஷாயமிட்டு வாய் ரணத்துக்குக் கொப்புளிக்கலாம். வற்றல் கஷாயமிட்டுக் கொடுத்தால் நீர் அதிகப்படும். மணத்தக்காளி தீநீருக்கும் அதுவே குணம். நீர்க்கோவைக்கு உதவும்.

மரமஞ்சள். (கிழங்கு)—இது தைலமுறைகளில் சேருகின்றது.

மாங்காய். (Mango). மாங்கொட்டைப் பருப்பைப் அரைத்து மூலச்சூடு, ரத்தமூலம் இவைகளுக்குக் கொடுக்கலாம். வேர்ப்பட்டை கஷாயமிட்டுக் கொடுத்தால் சீதபேதி குணமாகும்.

மிளகரணை. (Scopolia Acubata). (வேர் - பட்டை - இலை)—சர்ப்பவாத ஹரகாரி, பலகாரி. இதை வெந்நீர்க்கஷாயமிட்டு. அசீரணம், வாயு, கபரோகம் இவைகளுக்குக் கொடுக்கலாம்.

மராட்டி மொக்கு. இதைச் சாப்பிட்டால் மயக்கம் கொடுக்கும். லேகியமாயாவது, பாலில் காய்ச்சியாவது பேதிகட்டவும், வேதனைகளைச் சமனப்படுத்தவும் கொடுப்பதுண்டு. ஒரு மொக்கு ஒருவேளைக்குக் கொடுக்கலாம். இதைச் சாக்கிரதையாய் உபயோகிக்கவேண்டியது.

முக்காவேளை. (Prickly Galega). (வேர்)—இதைச் சுக்குடன் கஷாயமிட்டு, சுரத்துக்குக் கொடுக்கலாம்.

முசுமுசுக்கை. (Rough Bryony). (வேர் - இலை)—இலை ரசத்தில் கோரோசனம் சேர்த்து கபரோகங்களுக்குக் கொடுக்கலாம். வேரை கஷாயமிட்டும் உபயோகப்படுத்துகிறார்கள்.

முடக்கற்றான். (Cardiospermum halicacabum.) (இலை - வேர்)—வேரை கஷாயமிட்டுக் கொடுத்தால் மலம்உதையும். இலையை கபரோகங்களுக்குக் கொடுக்கலாம். தைலம் செய்து சொறிசிரங்கு சூலைக்கட்டு, இவைகளுக்கு உபயோகிப்பதுண்டு.

முருங்கை. (Horsh-radish). (வேர் - பட்டை)—இந்த ரசத்தை, பாரிசவாதம், சீதசுரம், காக்கைவலி, சூதகசந்நி இவைகளுக்குக் கொடுக்கலாம். அரைத்து மேலுக்குப்போட்டால் தோல் சிவக்கும். முருங்கப்பூவை பாலில் காய்ச்சி, இந்திரிய புஷ்டிக்குக் கொடுப்பதுண்டு.

மூக்குரட்டை. (Spreading Hog-weed). (வேர்)—இதை தூள்செய்தாவது, வெந்நீர்க் கஷாயமிட்டாவது மலம் உதையவும், கிருமி வெளிப்படவும் கொடுப்பதுண்டு.

வல்லாரை. (Asiatic Hydrocotyle). (சமூலம்)—பலகாரி, சாடராக்கினிவர்த்தனகாரி, மூத்திரவர்த்தனகாரி. இந்தப் பூண்டு சருமரோகங்களுக்குக் கொடுத்தால் வெகு சவுக்கியத்தைத் தரும். குஷ்டம், ரணம், மேகம் கண்டமாலை இவை முதலியவைகளுக்குக் கொடுக்கலாம். பூண்டை ஆய்ந்து நிழலில் உலர்த்தி, சன்னமாய்த் தூள்செய்துகொள்ளவேண்டியது. இதை வெய்யிலில் உலர்த்தினால் நிறம் மாறும்; தீப்பட்டால் மணம் போய்விடும். இந்தச் சூரணத்தில், ரு - அ - கிறேன் இடைக்குக் குளிர்ந்த ஜலத்தில் தினத்துக்கு, உ - ஆவர்த்தி கொடுககலாம். உ - அவுன்ஸ் தூளை, உ - பையின்ட் வெந்நீரில் போட்டு ஊறவைத்து, கஷாயமிட்டுக்கொள்ளலாம். ௩ - பவுன் வல்லாரை பூண்டை, அ - காலன் ஜலத்திலிட்டு ஊறவைத்து ஸ்நானம் செய்யலாம். வல்லாரை கஷாயத்துடன், அயச்செந்தூரம் சேர்த்து குஷ்டத்துக்குக் கொடுக்கலாம். வல்லாரையைச் சிலநாள் சாப்பிட்டால், தேகம் சிவந்து, சகிக்கக்கூடாத எரிச்சலும், நமச்சலும், சூடும் காணும். தழும்புகள் காணுவதும் உண்டு. தூளை ரணங்கள் மேல் தூவினால் சீக்கிரத்தில் உலரும்.

வாய்விளங்கம். (விதை)—இதை அரைத்து தேள் கொட்டலுக்குப் பூசலாமென்று கண்டிருக்கின்றது.

விலாமிச்சுவேர். இதைக் கஷாயமிட்டு, மயக்கம், பித்தம், தாகம் இவைகளுக்குக் கொடுககலாம்.

விழுதியிலை. விரேசனகாரி. பேதியாகும். விழுதிவேருக்குக் கருப்பையிலிருக்கிற கிருமி செத்து, கருத்தரிக்குமென்று கண்டிருக்கின்றது.

விளாம்பிசின். (Wood Apple gum). (பிசின் - பழம்)—பிசினியை க ௲ விராகனிடை விதம் ஜலத்தில் கரைத்து, நீர் எரிச்சல், இருமல், பேதி, இவைகளுக்குக் கொடுக்கலாம்.

விஷ்ணுகிராந்தி. (Evolvulus Alsinoides). (சமூலம்)—இதை கஷாயமிட்டுச் சுரம், இருமல் இவைகளுக்குக் கொடுக்கலாம்.

வெட்டிவேர். (Cuscus grass). உஷ்ணகாரி, சுவேதகாரி. இதைக் கஷாயமிட்டு சுரம் வாதரோகங்கள் இவைகளுக்கு கொடுக்கலாம். தாகமடங்கும். பாலில் கலந்து நமைச்சலுக்குப் பூசலாம்.

வெண்டை. (Abelmoschus Esculentus). இலையை போல்டீஸ் செய்து

உபயோகிக்கலாம். விரையை, பார்லி அரிசி கஞ்சிமாதிரியாய்க் காய்ச்சிக் கொடுத்தால், இருமல் தணியும், நீர் எரிச்சல் அடங்கும். பேதிகளுக்குக் கொடுக்க உதவும்.

வெந்தயம். (விதை) (Fenugreek).—சினிக்தகாரி. இதை ஊறவைத்து அரைத்துக்கொடுத்தால் சீதபேதி நிற்கும்; பிள்ளைகளுக்குக் கணக்காய்ச்சல் போகும், தேகம் குளிர்ச்சியாகும், இருமலுக்கும் நல்லது. பருவுகளுக்குக் கட்டினால் எரிச்சல் தணியும், சீக்கிரத்தில் பழுக்கும். ஜலத்தில் காய்ச்சி வீக்கமிருக்கிற விடத்தில் ஒற்றிடம் கொடுக்கலாம்.

வேப்பன். (Neem tree). (பட்டை - இலை - தைலம் - கள்ளு - பூ - பிசின்)—பலகாரி. பட்டைத்தூளில் ௧ - விராகனிடை வீதம், சீதசுரத்தில், சுரம் விட்டிருக்கிறபோது தினத்துக்கு ௩ - ௪ - ஆவர்த்தி கொடுக்கலாம். ௧ - பலம் பட்டையை, ௨ - படி ஜலத்தில் போட்டு, வ - படிக்குச் சுண்டக்காய்ச்சி, இதில் வ - ஆழாக்கு, தினத்துக்கு ௩ - தடவை நோயுற்றெழுந்தோர்களுக்கும், திபனமில்லாதவர்களுக்கும் கொடுக்கலாம். லவங்கப்பூ சேர்த்தால் குணம் அதிகப்படும். பார்க் பவுடருக்குப் பதில் இதை உபயோகிக்கலாம். வேப்பிலையை அரிசிமாவுடன் சேர்த்து போல்டீஸ் செய்து கட்ட ரணங்கள் சீக்கிரத்தில் ஆறும். இலையை அரைத்துச் சொறிசிரங்கு, அம்மை ரணம், இவைகளுக்கு உபயோகிக்கலாம். வேப்பன் கொழுந்து, ஓமம், மிளகு, வசம்பு, பூண்டு இவைகளை அரைத்துக் கொடுத்தால் வயிறு விம்மல் நீங்கும். வேப்பன்பூ துவையல் பித்தத்தை அடக்கும். வேப்பெண்ணெய் ரணங்களை ஆற்றும். வேப்பம் ஈர்க்கு சுர கஷாயங்களில் சேருகின்றது. வேப்பங்கள்ளு பசியை அதிகப்படுத்தும்.

வேலிப்பருத்தி. உத்தாமணி. (Dæmia Extensa) (சமூலம்.) இதை வெந்நீர்க்கஷாயமிட்டுக் கபரோகங்களுக்குக் கொடுப்பதுண்டு. அதிகமானால், ஒக்காளம், வாந்தியாகும். ரசத்தைச் சுண்ணும்புடன் கலந்து வாதநோய்களுக்குப் பூசுவதுண்டு.

இதற்கடியில், பத்தியத்துக்கான பதார்த்தங்கள், பிணியாளர்களுக்குக் கொடுக்க உபயோகமான சில துவையல்கள், கஞ்சிகள் இவை முதலானவைகளைக் கூறப்படும்:—

பத்தியத்துக்காகும் பதார்த்தங்கள்.—அத்திப்பிஞ்சு, அவரைப்பிஞ்சு, ஆடாதோடைக்காய், அறுகீரை, ஆரைக்கீரை, எலுமிச்சம் பழம், கத்திரிப்பிஞ்சு, கோதுமை, கோவைக்காய், சிறுபயறு, சிறுகீரை, துவரை, தூதுளை, வசலை, பழம்புளி, பீர்க்கம்பிஞ்சு, புடலம்பிஞ்சு, புதியநெய், பெருங்காயம், பேயன் வாழைப்பழம், பொன்னாங்காணி, மணத்தக்காளி, மாங்காய்பருப்பு, மாங்காய்பிஞ்சு, முருங்கைப்பிஞ்சு, முன்னை, வாழைப்பிஞ்சு, வாழைப்பூ, வெண்டைப்பிஞ்சு, வெள்ளுள்ளி, வேளை இவைகளாம். உருளைக்கிழங்கு, பாவைக்காய் இவைகளும் பத்தியத்துக்குதவும்; ஆனால், நமது ஜனங்கள் இவைகளுக்குத் தோஷம் சொல்லிக் கொடுக்கிறதில்லை.

இறைச்சிவகையில்.—உடும்பு, உள்ளான், ஊர்க்குருவி, கவுதாரி, காடை, கோழிக்குஞ்சு, மான், முசல், வெள்ளாடு.

கருவாடுவகையில்.—கச்சைக்கருவாடு, காரைப்பொடி, ஓலைவாளைச்சரகு, கிழங்கான், குரவை, சென்னைக்கூனி, சுறு, திருக்கை, வரால், வெள்ளாறு, நெத்திலி, சுதும்பு.

ஊறுக்காய் வகையில்.—இஞ்சி, கடுக்காய், எலுமிச்சங்காய், களாக்காய், நார்த்தங்காய், மரிமாங்காய், நெல்லிக்காய், மாம்பிஞ்சு.

பழவகையில்.—திராக்ஷை, ஆல்பகோரா, கிச்சிலி, மாதுளம், பேயன்வாழை.

சுண்டாங்கி அல்லது துவையல்களில்.—பிரண்டை, புளியாரை, வேப்பம்பூ, பொதினா, பச்சைக்கொத்துமல்லி, நாய்க்கடுகு, துவரம்பருப்பு, பச்சைப்பயறு.

கஞ்சிவகையில்.—சுக்குமுடிச்சுப்போட்டுக்காய்ச்சிய கஞ்சி, புனர்ப்பாகம், சிறுபயறுகஞ்சி, கோதுமைக்கஞ்சி, பால்கஞ்சி, நெல்பொரிக்கஞ்சி, ஆரரூட் கஞ்சி, சேகோகஞ்சி, ஆள்வள்ளிக்கிழங்குமாவின் கஞ்சி, பாயசம்.

பலகார வகையில்.—மிளகு காயம் இஞ்சி கறியவேப்பிலை இவைகள்சேர்ந்த தோசை. இட்டலி, கோதுமை அடை, அவல், நெற்பொரி.

குழம்புவகையில்.—மிளகு, கடுகு, கொத்துமல்லி, வெள்ளப்பூண்டு, சீரகம். இவைகளின் குழம்பு வாயுவைக் கண்டிக்கும். பெருங்காயம் பதார்த்தங்களில் மிதமாய்ச் சேர்த்துக்கொடுக்கலாம்.

மலபந்தத்தை நீக்குகிற பதார்த்தங்கள்.—கீரை இனங்கள், கத்திரிக்காய், நிலாவிரைத் துவையல், சரக்கொண்ணைத் துவையல், வாதநாராயண இலை மிளகுநீர், வாழைப்பழம், அத்திப்பழம்.

மலத்தைப் பிடிக்கிற பதார்த்தங்கள்.—வாழைக்கச்சல், வாழைப்பூ, அத்திப்பிஞ்சு, மாங்கொட்டைப் பருப்பு, வெந்தியம்.

## கஷாயங்கள்.

**நீர் பேதி கஷாயம்.**—௨ - படி வெந்நீரில், பசளை, கீழாநெல்லி, அருகம்வேர், துத்தி இலை, வெள்ளரிவிதை, வகை ௧ - இ பலம் - ௩, போட்டு, ௨ - ௩ - மணி நேரம் ஊறவைத்து, வடிகட்டிக்கொள்ளவும். ௪ - பாலாடை அளவுக்கு, ௫ - குன்றிமணி இடை பொரித்த வெங்காரம் சேர்த்து, ௩ - ௪ - மணிக்கொருதரம் கொடுத்துகொண்டுவந்தால், நீர் அதிகமாய் இறங்கும்.

**சலுப்புக்கு கஷாயம்.**—௨ - படி வெந்நீரில், சுக்கு, சன்னராஷ்டகம், அதிமதுரம், வகை ௧ - க்கு பலம்- ௧, போட்டு, ௩ - மணி நேரம் ஊறவைத்து, வடிகட்டிக்கொள்ளவும். ௨ - பாலாடை வீதம் தினத்துக்கு, ௩ - ௪ - தடவை கொடுக்கவும்.

**கட்டுவாதி கஷாயம்.**—௨ - படி வெந்நீரில், சிறுநாவல்பூ, போஸ்தகாய், அதிவிடையம், கடுக்காய்ப்பூ, மரமஞ்சள், வகை ௧ - க்கு பலம் - ௧. சடாமாஞ்சி, பலம் - ௨, போட்டு, ௩ - மணி நேரம் ஊறவைத்து வடிகட்டிக்கொள்ளவும். ௨ - பாலாடை வீதம் தினத்துக்கு ௫ - ௬ - தடவை கொடுத்தால், பேதி நிற்கும்.

## சூரணங்கள்.

**வால்மிளகு சூரணம்.**—வால்மிளகு தூள் பலம் - ௨, சீரகத்தூள், கொத்துமல்லித்தூள், கற்கண்டுபொடி, வகைக்கு பலம்- ௧, சேர்த்து, ௧ - விராகனிடை வீதம் தினத்துக்கு ௨ - ௩ - தடவை கொடுக்கவும். வெள்ளைவிழுதல் நிற்கும்.

**மாதுளம் பழத்தோல் சூரணம்.**—மாதுளம்பழத்தோல், உப்புபோடாத மாங்கொட்டை, நெல்லிமுள்ளிக்காய், கறியபிலை, உப்புபோடாத சுண்டக்காய் வத்தல், வெந்தியம், இவைகளை வெவ்வேறாய்ச் சூரணித்து, வியாதிக்குத் தக்கபடி, ஷை ஔஷதங்களைச் சேர்த்து, ஜலம் வடியவைத்த தயிரில் கலந்து தினத்துக்கு, ௩ - ௪ - தடவை கொடுக்கவும் அதிசாரம், சீதபேதி இவைகள் நிற்கும்.

**அமுதாதி சூரணம்.**—தூள்செய்த சுக்கு, மிளகு, திப்பிலி, லவங்கப்பட்டை, ஏலரிசி, லவங்கம், சித்தரத்தை, அதிமதுரம், அதிவிடையம், அக்கராகாரம், வகைக்கு விராகனிடை - ௧. தேன்விட்டுக்கலந்து கொஞ்சம் நாக்கில் தடவிக்கொண்டு இருந்தால், நாக்கில் ஜலம் ஊறும். இதனோடு பேதி மருந்துகளைச் சேர்த்துக் கொடுத்தால் மலம் உதையும்; வெங்காரம் சேர்த்தால் மூத்திரம் இறங்கும். குங்குமப்பூ, கஸ்தூரி, கர்ப்பூரம், ரஸபஸ்மம், இவைகளையும் சேர்த்துக் கொடுக்கலாம். மைலிரகுசுட்ட சாம்பல், மான்கொம்பு, ருத்திராக்ஷம், பவழம், முத்து, பொன், வெள்ளி இவைகளையும் சேர்த்து கொடுப்பது வழக்கம், ஆனால் பிறயோஜனமில்லை. இதை கண்டா ஔஷதமென்று சொல்லுவார்கள்.

**க்ஷயரோக சூரணம்.**—தூள்செய்த சாதிக்காய், பலம் - ௫, அதிமதுரம், வால்மிளகு, மாசக்காய், தும்பராஷ்டகம், லவங்கப்பட்டை, திப்பிலி, சுக்கு, லவங்கம், ஏலரிசி வகைக்கு பலம் - ௪, கஸ்தூரி விராகனிடை - ௧, சேர்த்து, இதில் ௧ - விராகனிடை வீதம், தினத்துக்கு, ௩ - ௪ - தடவை கம்மாருவெற்றிலை ரசத்திலாவது, தேனிலாவது கொடுக்கவும். இருமல்ரோகங்கள் நீங்கும்.

**பலகாரி சூரணம்.**—அயச்சிந்தூரம், கலம்பாவேர் சூரணம், சுக்குத்தூள், வகைக்கு விராகனிடை - ௫, ரேவல்சின்னித்தூள், விராகனிடை - ௰௨, சேர்த்து தினத்துக்கு ௨ - ௩ - ஆவர்த்தி கொடுக்கவும். உடம்பில் ரத்தம் ஊறி பலம்வரும். பாண்டுரோகத்தை ஸொஸ்தப்படுத்தும்.

**இங்குவாதி சூரணம்.**—தூள்செய்த மிளகு, திப்பிலி, சீரகம், இந்துப்பு, வகைக்கு பலம் - ௧, பெருங்காயப்பொடி பலம் - ௫, கறிவேப்பிலைத்தூள் பலம் - ௭, சேர்த்து, ௧ - விராகனிடை வீதம் சாதத்தில் போட்டு நெய் விட்டுக் கலந்து சாப்பிட்டுக்கொண்டுவந்தால், மாந்தம், அஜீரணம், வயிறு கடுப்பு முதலியவைகள் நீங்கும். மலம் உதையும்.

**நாகராதி சூரணம்.**—தூள்செய்த சுக்கு, சீரகம், மிளகு, திப்பிலி, லவங்கம் வகைக்குப் பலம் - ௭, சேர்த்து ௧ - விராகனிடை வீதம், நெய், சருக்கரை இவைகளில் எதிலாவது சாப்பிடவும். அக்கினிமந்தரோகம் நீங்கிவிடும்.

## தைலங்கள்.

**வில்வாதி தைலம்.**—௰ - பலம் வில்வவேர் பட்டையை, இடித்து, ௨ - மரக்கால் ஜலத்தில்போட்டு, ௪ - மரக்காலாய் சுண்டக்காய்ச்சி, வடிகட்டி, இதில் ௧ - படி நல்லெண்ணெய், ௪ - பலம் சந்தனத்தூள், அரைத்த கடுக்காய், கஸ்தூரி மஞ்சள், ஏலம், வகை ௧ - க்கு பலம் - ௧, போட்டு பதமாய்க் காய்ச்சி வடித்துக் கொள்ளவும்.—இதை தலைமுழுகிவந்தால், தேக அனல், மேகம், கண்புகைச்சல், இருமல், இரத்தமூலம், உட்சுரம், வரக்ஷி இவைகள் நீங்கிவிடும். இது சூக்ஷமமுறை. (வைத்தியசார சங்கிரகம்).

**சந்தனாதி தைலம்.**—நல்லெண்ணெய், ஊற்றுஜலம், பசும்பால் வகை ௧ - க்கு படி - ௪, சேர்த்துக் காய்ச்சி, இதில், சந்தனத்தூள், தேவதாரம், பேரீச்சன், திராக்ஷபழம், தவாக்ஷரி, தாமரைப்பூ, ஏலம், லவங்கபத்திரி, கொத்துமல்லி, நெல்லிவிரை, நன்னாரி, அதிமதுரம், வெட்டிவேர், கோரைக்கிழங்கு, வகை ௧ - க்கு பலம் - ௮, இடித்துப்போட்டு, தைலப்பதத்துக்கு காய்ச்சி வடிகட்டிக்கொள்ளவும். இதை தலைமுழுகிவந்தால், சிரோரோகங்கள், நேத்திரரோகங்கள், வாதரோகங்கள் முதலியவைகள் நீங்கிவிடும். இது சூக்ஷமமுறை. (மூலிக சங்கலிதம்).

**அரக்கு சந்தனாதி தைலம்.**—லாக்ஷாதி தைலம். கொம்பருக்கு தைலம்.—௧ - வீசை கொம்பரக்கை பொடிசெய்து, ௮ - படி ஊற்று ஜலத்தில் போட்டு, ௧ - படிக்கு சுண்டவைத்து, வடிகட்டி, இதில், பசும்பால் படி - ௧, நல்லெண்ணெய் படி - ௭, நெய் படி - ௭, சிற்றாமணக்கெண்ணெய் படி - ௭, சேர்த்து, காய்ச்சி இதில், சந்தனம், அகில்கட்டை, வெட்டிவேர், குருவேர், கஸ்தூரிமஞ்சள், மிளகு, ஏலம், சோம்பு, சீரகம், சாதிபத்திரி, பூலாங்கிழங்கு, லவங்கப்பத்திரி, அதிமதுரம் வகை - க்கு பலம் - ௧, பொடித்துப்போட்டு, மெழுகுபதமாகக் காய்ச்சி வடித்துக்கொள்ளவும். இதை ஒன்றைவிட்டொருநாள் தலைமுழுகிவந்தால், அஸ்திசுரம், தலைமயக்கம், சூலை வியாதிகள், காசம், கற்றாழைநாற்றம் முதலியவைகள் நீங்கிவிடும். (மூலிகை சங்கலிதம்).

இம்முறைகளாய் அநேகவித தைலங்களிருக்கின்றன. பிரதான சரக்கோடு, பரிமள சரக்குகளைச் சேர்த்து காய்ச்சிக்கொள்ளப்படுகின்றது. வியாதிகள் கூரறிந்து, தேவையான மருந்துகளைச் சேர்த்து, நாம் அனேகவிதங்களாய்ச் செய்துகொள்ளலாம். புத்தகங்கள் வழியைக் காண்பிக்கும், மற்றதை நாம் புத்தியால் உணரவேண்டியது.

# INDEX.

